


# தீபாவளி மலர் 97



## பொன் விழா ஆண்டு

மேலட்டை வண்ண ஓவியம்: கோபுலு

அமுதசுரபி
50ஆவது
தீபாவளி மலர்
நவம்பர்1997இதழின்
சிறப்பு இணைப்பாக
வெளிவருகிறது.






துண்டி விநாயகர்


அன்னபூரணி







ஆசிரியர்: கலைமாமணி விக்கிரமன்

பதிப்பாளர்: ஏ.வி.எஸ். ராஜா

மலர் ஆப்செட் அமைப்பு: சிவகுமார்

மலரை அலங்கரித்த ஓவியர்கள்: அமரர் சில்பி, அமரர் உமாபதி, கோபுலு, ஸுபா, ஜி.கே.மூர்த்தி, ஜெயராஜ், மாயா, மாருதி, ராமு, மணியம் செல்வன், செல்லம், அரஸ், ஸி.ஏ. ராமச்சந்திரன், கரோ, ஸ்யாம், ரமா, சிவா, வேதா, சசி, பிரபுராம், ஜீவி., முத்துக்குமார், கீதா.

மலரில் வெளிவந்துள்ள கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் கற்பனையே! யாரையும் சுட்டுவன அல்ல!



சித்திரங்கள்: அமரர் சில்பி

# அருள்தா, அன்னபூரணி...

அபிமுக்தஷேத்ரம், மஹாஸ்மசானம், ஆனந்தவனம் என்றெல்லாம் அழைக்கப்படும் இந்நகரின் வடக்கே வருணை நதியும், தெற்கே அசி நதியும் எல்லை வகுக்க, நடுவே வாரணாசி எனும் காசி மாநகரம் – அநாதியான இந்து மதத்தின் ஜீவ ஒட்டமான கங்கைக் கரையிலே – ஞானப் பெட்டகமாய் ஒளி வீசிக் கொண்டிருக்கிறது. கங்கை உத்தரவாஹினியாய்ப் பொங்கிப் பாயும் கரையிலே ஆயிமாயிரம் ஆண்டுகளாய்க் கலாசாரக் கருவூலமாய் ஞான கேந்திரமாய் இலங்கும் திருநகரம் காசி, இந்து மதத்தின் திரு ஆலயமாய் விளங்கிக் கொண்டிருக்கிறது.

'பதேபதே லிங்கம், பதேபதே தீர்த்தம்' என்று இதன் மகத்துவத்தைச் சொல்வார்கள். கால் படும் இடமெல்லாம் மண்ணுக்கடியில் லிங்கம் இருக்கும். புண்ணிய தீர்த்தம் நிலத்தடி நீராய்ப் பாய்ந்து கொண்டிருக்கும் என்று இந்துக்கள் வணங்கி வாழ்த்தும் புண்ணிய பூமி இது.

இந்துக்களின் ஏழு புண்ணிய நகரங்களுள் தலையாயது காசி. காசியிலே மரணமடைந்தால் மோட்சம் என்று ஒவ்வோர் இந்துவும் அதன் திசை நோக்கித் தொழும் மகத்தான தலம் காசி என்னும் வாரணாசி.

பிறைவடிவத்தில் சூழ்ந்திருக்கும் கங்கையால் காசிக்குப் பெருமையா அல்லது காசியால் கங்கைக்குப் பெருமையா என்று பாகுபடுத்திக் கூறமுடியாத அளவுக்கு இரண்டும் இணைந்து இழைந்து நான்காயிரம் ஆண்டுகளுக்கும் மேலாய் இந்து கலாசாரத்தின் நாகரிகத் தொட்டிலாய் விளங்கிக் கொண்டிருக்கும் காசியை நினைக்கிறபோது அத்துடன் தொடர்பு கொண்ட மகான்களின் நினைவு பொங்கிப் பொங்கி எழுகிறது. வேத வியாசரில் தொடங்கி, கௌதம புத்தர், ஆதி சங்கரர், சைதன்ய மகாப்பிரபு, துளசிதாசர், இராமகிருஷ்ண பரமஹம்சர், மகாகவி பாரதியார் வரை எத்தனையோ மகத்தானவர்களின் பாதம் பதிந்த பூமி அது!

இந்த நகரத்தில்தான் எத்தனை கோயில்கள்! சாட்சி விநாயகர், பிந்து மாதவர், அன்னை விசாலாட்சி, உலகெல்லாம் படியளக்கும் அன்னபூரணி, துர்கை, கௌரிபாய், தண்டபாணி, காலபைரவர், விசுவநாதர் என்று ஏராளமான ஆலயங்கள் பக்தர்களை ரட்சிக்கின்றன.

'ஹர ஹர மகாதேவ' என்ற கோஷம் விண்ணைப் பிளக்க, உலகின் நாதராய் விளங்கும் விசுவநாதர் கோயில்தான் எத்தனை தொன்மையானது! ஓங்கார நாதம் எங்கும் சூழ, காசியின் அனைத்துத் தெருக்களும் மணிகர்ணிகாவில் விசுவநாதர் கோயிலையே தொழுகிற அரிய காட்சியைக் காணமுடிகிறது.

ஐந்து மைல் நீளமுள்ள காசிமாநகரில் அசிகட்டத்திலிருந்து வருணை கட்டம்

ஜெயரதன்



வரை, மொத்தம் அறுபத்தி நான்கு கட்டங்கள் இருக்கின்றன. அங்குதான் பக்தர்கள் கூடி, கங்கையில் மூழ்கித் தம் பாபங்களைக் கரைத்துத் தமது மதச் சடங்குகளை நிறைவேற்றுகின்றனர். இவற்றுள் தலையாயது மணிகர்ணிகா தீர்த்தம். இதைக் காசி நகரின் சக்தி பீடம் என்பார்கள். 'மணிகர்ணிகாஷ்டகம்' என்று ஆதி சங்கரர் இந்தத் தலத்தின் மகிமையைப் பாடியிருக்கிறார். "அன்னை மணிகர்ணிகா! இந்த கட்டத்தில் கங்கையில் ஸ்நானம் செய்பவர்கள் ருத்ரனாக, ஹரியாக ஆவார்கள்"என்று புகழ்கிறார். சூர்யவம்சத்தின் மாமன்னனான ஹரிச்சந்திரன் சத்திய தர்மத்தைக் காக்கும் பொருட்டு, வெட்டியானாகப்பணிபுரிந்ததலம் இது! இந்துக்களின் புனித மயான பூமி இங்குதான் இருக்கிறது.

அது மட்டுமன்று. மனீஷாபஞ்சகம், கங்காஷ்டகம், அன்னபூர்ணாஷ்டகம், பஜகோவிந்தம், காசி பஞ்சகம் என்கிற அபூர்வ நூல்களையும் இந்தத் தலத்தில்தான் ஆதிசங்கரர் இயற்றியிருக்கிறார்.

இந்த நகரின் பிரதானமான வடகிழக்கு மூலையில் காசி விசுவநாதரின் கோயில் விளங்குகிறது.

விசுவநாதரைப்புகழ்ந்து ஆதிசங்கரர் இயற்றிய பிரபலமான பிரார்த்தனைப் பாடல் இது.

यात्रा मया सर्वगता हृता ते
घ्यायानेन चेतः परता हृता ते ।
स्तुत्यानया वाक्परता हृता ते
क्षंतव्यमे तत् त्रयमेव शम्भो ॥

ஹே, சம்போ! நான் செய்த மூன்று பாபங்களுக்காக என்னை மன்னித்துவிடு! உன்னைத் தரிசிக்கக் காசி வந்ததன் மூலம் நீ அனைத்து இடங்களிலும் இருப்பவன் என்பதை மறந்தேன். உன்னையே நினைத்துக் கொண்டிருப்பதன் மூலம், நீ சிந்தனைக்கு அப்பாற்பட்டவன் என்பதை மறந்தேன். உன்னைப் பாடியதன் மூலம் நீ வார்த்தைகளுக்கு அப்பாற்பட்டவன் என்பதை மறந்தேன்.

சர்வவ்யாபியான விசுவநாதரின் ஆலயத்தில் மிகப்பிரபலமான பூஜை, சப்தரிஷிகள் பூஜை. நாகாபரணத்தில் சுவாமியை ஏழு ரிஷிகள் பூஜிப்பது, மனிதனாய்ப் பிறந்த ஒவ்வொருவரும் காணவேண்டிய காட்சி. அப்பூஜையின் போது உடுக்கு வாத்தியமும் ஒலிப்பது ஒரு சிறப்பு. லிங்க வடிவில் இருக்கும் விசுவநாதருக்கு, ஐந்து முகங்களால் அலங்காரம் செய்து மகிழ்வார்கள். அது ஆண்டுக்கு இரண்டு முறைதான் செய்யப்படுகிறது.

விசுவநாதருக்கு அடுத்தபடியாக துண்டி விநாயகர் ஆலயமும், காலபைரவர் கோயிலும் மிகவும் பிரசித்தமானவை. காசி நகரின் 'கொத்வால்' என்று அழைக்கப்படும் காலபைரவர் கோயிலின் ஒரு சிறப்பு, இங்கு கோயிலினுள் நாய்கள் சுதந்தரமாய் அனுமதிக்கப்படுகின்றன. பைரவரின் வாகனம் நாயல்லவா? கோயிலின் நுழைவாயிலருகில், நாய்க்குச் சிலை வைத்திருக்கிறார்கள். ஆதி சங்கரரின் 'காலபைரவாஷ்டகம்' இந்த பைரவ மூர்த்தியின் பெருமையை எடுத்துச் சொல்கிறது.

காசி என்று சொல்லிய பின்பு, அன்னை விசாலாட்சியைப் பற்றி எழுதாவிட்டால் பயனில்லை. 'காசி விசாலாட்சி' என்று காசிக்குப் பெருமை சேர்க்கத் தன் பெயரைத்தந்த அன்னையல்லவா, அவள்!

சிவபெருமானின் மூன்று கண்களாக விளங்கும் முத்தலங்களில் மூத்த



காசியின் நாயகி விசாலாட்சி. பார்வதி தேவி, விசாலாட்சி என்ற பெயரில் இங்கே இருந்து உலகை ரட்சித்துக் கொண்டிருக்கிறாள்.

காசியின் கோயில்களையும் பெருமையையும் சொல்வதானால் சொல்லிக் கொண்டே போகலாம். இருந்தாலும் பாரத நாகரிகமும், கலாச்சாரமும், ஆன்மிக ஞானமும் ஒருங்கிணைந்து கங்கையின் வெள்ளத்துடன் இழைந்துகாலமெல்லாம் சூழ்ந்திருக்கும் காசியின் சிறப்பு, அன்னை அன்னபூரணியைப் பற்றிக் கூறாவிட்டால் முழுமையடையாது. காசியென்றதும் கண்ணில் தெரிபவள் அன்னபூரணி! பசி தீர்க்கத் தயாராய்க் கையில் கரண்டியுடன் காட்சியளிக்கும் அன்னபூரணியின் கருணைக்கு நிகரேது? ஆன்மிகப் பசியைத் தணிக்கும் ஞான நாயகியும் அன்னபூரணிதான்!

வளமைக்கும் வளப்பத்திற்கும் அதிபதியாய் விளங்கும் அன்னபூரணியின் பெருமையை ஆதி சங்கரர் அன்னபூர்ணாஷ்டகத்தில் பாடி மகிழ்ந்திருக்கிறார்; வாழ்த்தி வணங்கியிருக்கிறார்.

*அன்னபூர்ணே ஸதாபூர்ணே ஸங்கர ப்ராணவல்லபே*

*க்ஞான வைராக்ய சித்யர்த்தம் பிக்ஷாம் தேஹிச பார்வதி!*

தாயே! அன்னபூரணி! எந்தக் குறையும் இல்லாது எப்போதும் நிறைவாய்க் காட்சியளிப்பவளே!

அம்மா, பார்வதி தேவி! எனக்கு அருட்பிச்சை தா!

ஞானமும் வைராக்யமும் என்னை வந்தடைய அருள்தா தேவி!

என்று ஆதி சங்கரர் வழிபடும் மாதா அன்னபூரணியை இந்தத் தீபாவளித் திருநாளில் நாமும் பிரார்த்திப்போமாக!

துன்பங்கள் விலகி, எங்கும் நலமும், வளமும் சூழ அறியாமை என்னும் பசிதீர, அனைவருக்கும் ஞானப் பிச்சை நல்கியருளுமாறு இந்த நன்னாளில் அன்னை அன்னபூரணியை இறைஞ்சுவோம்!

ஜீ ஜீ

# அபிராமி அந்தாதி

தேவகி முத்தையா



ஆளுகைக்கு உந்தன் அடித்தாமரைகள் உண்டு
அந்தகன்பால்
மீளுகைக்கு உன்றன் விழியின் கடையுண்டு மேல் இவற்றின்
மூளுகைக்கு என்குறை நின்குறையே அன்று முப்புரங்கள்
மாளுகைக்கு அம்பு தொடுத்த வில்லான் பங்கில்
வாள் நுதலே!

அடியனாகிய என்னை ஆட்கொள்ள உனது இரண்டு திருவடிகளும் உள. அந்தகன் என்று அழைக்கப்பெறும் காலனின் பிடியிலிருந்து விடுபட உன் கடைக்கண்களின் அருள் உண்டு. உனது திருவடி அருளும் கடைக்கண் அருளும் இருக்க, அவற்றையும் மீறி தீய விளைவுகள் ஏற்படின், நானே பொறுப்பாவேன்; அது உனது குறைபாடாக இருக் கவே முடியாது. அன்று திரிபுரங்கள் அழியுமாறு மேரு மலையாகிய வில்லில் அம்பினைத் தொடுத்த சிவபெருமானின் இடப்பாகத்தில் வீற்றிருக்கும் ஒளி பொருந்திய நெற்றியினையுடைய அன்னையே, அபிராமி!

பவளக் கொடியிற் பழுத்த செவ்வாயும் பனிமுறுவல்
தவளத் திருநகையும் துணையா எங்கள் சங்கரனைத்
துவளப் பொருது துடியிடை சாய்க்கும் துணைமுலையாள்
அவளைப் பணிமின் கண்டீர்! அமராவதி ஆளுகைக்கே!

பவளக் கொடியையும்விடச் சிவந்த வாயினை (உதடுகளை)க் கொண்ட அபிராமி குளிர்ச்சி பொருந்திய முத்துகளை ஒத்த புன்முறுவலையும் உடையவள். பழுத்த அந்தச் செவ்வாயையும் குளிர்ந்த அந்தப் புன்முறுவலையும் துணையாகக் கொண்டு சிவபெருமானிடம் அன்பும் சிருங்காரமும் கூடிய அற்புதப் போர் செய்து அவனைத் துவளச் செய்பவள். இரு பெருத்த தனங்களின் பாரம் தாங்காது சாய்ந்த இடையினைக் கொண்டவள். அமராவதி எனும் தேவர் தலைநகரில் இருந்து அரசாளும் பதவியினைப் பெறவேண்டுமாயின் நீங்கள் (அடியார்கள்) அபிராமியின் திருவடிகளைப் போற்றிப் பணிந்திடுவீர்களாக!



பரிபுரச் சீறடி பாசாங்குசை, பஞ்சபாணி, இன்சொல்
திரிபுர சுந்தரி சிந்துரமேனியள் தீமை நெஞ்சிற்
புரிபுர வஞ்சரை யஞ்சக் குனிபொருப்புச் சிலைக்கை
எரிபுரை மேனி இறைவர் செம்பாகத்து இருந்தவளே.

மறைகள் (வேதங்கள்) என்ற சிலம்புகளை அணிந்த சிறிய திருவடிகளை உடையவளே! பாசம், அங்குசம் என்ற இரண்டு ஆயுதங் களையும் கைகளில் கொண்டவளே! ஐந்துவித

மான புஷ்ப பாணங்களை (அம்புகளை) கைகளில் உடையவளே! இனிய சொற்களைப் பேசும் திரிபுரசுந்தரியே! சிவந்த மங்கலமான மேனியினை உடையவளே! தீமையும் வஞ்சனையும் மிக்க நெஞ்சத்தினரான அசுரர்கள் அஞ்சும்படி மேருமலையை வில்லாக வளைத்து எய்த, தீயினை ஒத்த நிறத்தை உடைய சிவபெருமானின் உடலில் சரிபாகம் கொண்டு உறையும் சக்தியே!

● கொடியே இளவஞ்சிக் கொம்பே எனக்கு வம்பே பழுத்த
படியே மறையின் பரிமளமே பனிமால் இமயப்
பிடியே பிரமன் முதலாய தேவரைப் பெற்ற அம்மே
அடியேன் இறந்திங்கு இனிப் பிறவாமல் வந்தாண்டு
கொள்ளே.

மென்மையான இளவஞ்சிக்கொடி போன்றவளே, அபிராமி! மென்மைமிகு கொடியாய் இருப்பினும் கொடிக்கு மேன்மையான பற்றுக் கோடாகவுள்ள கொம்பாயும் இருப்பவளே... அடியனாகிய எனக்குப் பக்குவம் இல்லா



விடினும் பழுத்திட அருள் செய்தவளே! வேதங்களின் நறுமணமானவளே! பனிபடர்ந்த குளிர்ச்சி பொருந்திய இமயமலையின் (இமவானின்) மகளாகப் பிறந்து பெண்யானை போல் கம்பீரப் பொலிவு மிக்கவளே! பிரமன் முதலாகிய தேவர்களைப் பெற்றெடுத்த அன்னையே! அடியேன் இப்பிறவி முடித்து, இனி இவ்வுலகில் மீண்டும் பிறவாதவாறு எனை ஆட்கொண்டு அருள்வாயாக.

● தவளே இவள் எங்கள் சங்கரனார் மனைமங்கலமாம்
அவளே அவர்தமக் கன்னையும் ஆயினள்; ஆகையினால்
இவளே கடவுளர் யாவர்க்கும் மேலை இறைவியுமாம்;
துவளேன் இனியொரு தெய்வமுண்டாக மெய்த் தொண்டு
செய்தே.



தவத்தின் உன்னத வடிவாகவும், அந்தத் தலத்தின் தனிப்பெரும் நாயகியாகவும் இருக்கும் அபிராமியே! சிவபெருமானின் மனைக்கு மங்கலமான மனைவியாகத் திகழ்பவளே! அவ்வாறு மனைவியாக இருந்தும் கூடச் சில விசேடமான சந்தர்ப்பங்களில் அவருக்குத் தாய் எனும் ஸ்தானத்திலும் உயர்ந்து இருப்பவளே! ஆகையினால் கடவுளர் யாவரினும் மேலான நிலையில் மாபெரும் தலைவியாகத் திகழ்பவளே! இனி உன்னையும் மீறி வேறு தெய்வம் இருக்கின்றதென எண்ணி வீணாக மெய்வருத்தித் தொண்டுசெய்து துவளமாட்டேன்.



சித்திரங்கள்: கோபுலு

• நாயகி நான்முகி நாராயணி கைநளினபஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை சாதிநச்சு
வாய்அகி மாலினி வாராகி, சூலினி மாதங்கியென்று
ஆயகியாதி யுடையாள் சரணம் அரண் நமக்கே.

அகில உலகத்திற்கும் நாயகியானவளே! நான்கு முகங்களை உடையவளே! நாரத்தில் (தண்ணீரில்) இருப்பிடம் கொண்ட நாராயணனின் சகோதரியாக - விஷ்ணு துர்க்கையாக இருப்பவளே! சம்புவின் சக்தியான சாம்பவியே! எப்பொழுதும் மங்களத்தையே செய்வதால் சங்கரி எனும் பெயரை உடையவளே! கருமை நிறம் பொருந்திய சியாமளா தேவியே! நச்சினை வாயில் கொண்ட நல்ல பாம்பினை மாலையாகக் கொண்டவளே! பன்றி முகத்தைக் கொண்டு வாராகி எனும் சக்தியாய் இருப்பவளே! சூலத்தைக் கரத்தில் கொண்ட சூலியே! யாழ்ப்பாணர்கள் எனும் இசைவாணர்களின் குலத்தில் மதங்க மாமுனிவரின் திருமகளாக உதித்த மாதங்கியே! இவ்வாறு பல்வேறு வடிவங்களில் ஒளி வீசி, ஏகசக்தியாகத் திகழும் அத்தகைய புகழினை உடைய உனது திருவடிகள் எம்போன்ற அடியாருக்கு அரணாக, பாதுகாவல் ஆக அமையும்; எந்நேரமும் காத்து அருள் புரியும்.

•

# கங்கா ஸ்நானம் ஆச்சா?

ஸ்ரீஸ்ரீஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள்

முதற் பகுதி: பாரத நாட்டில் ஏழு மோக்ஷபுரிகள் இருக்கின்றன. அயோத்தி, மதுரா, மாயா (ஹரித்வார்), காசி, காஞ்சி, அவந்திகா (உஜ்ஜயினி), துவாரகா என இவைகளுள் மாயாபுரி என்ற ஹரித்வார் உத்திரபிரதேசத்தில் இருக்கிறது. 'ஹரி துவார்' என்று பெயர் வந்ததன் காரணம், ஸ்ரீஸ்ரீஹரியான பத்ரி நாராயணனைத் தரிசிக்கச் செல்லும் நுழைவாயில். அதேபோல் கங்கை ஹரியின் பாதத்திலிருந்து பூமியில் இறங்கும் வழி. இந்த ஹரித்வார்க்கு க்ஷேத்ர தேவதை மாயாதேவி. ஹரித்வாரில் 5 புரி, 5 பிரதேசங்கள் இருக்கின்றன.



ஹரித்வார் என்ற பகுதியில் தான் கங்கை பூமியைத் தொட்டு வருகிறது. ரிஷிகேசம் வரை மலையிலேயே கங்கை வருகிறாள்.

இரண்டாவது பகுதி: இந்த கங்கையில் ஸ்நானம் செய்யவரும் யாத்ரிகர்களுக்கு புரோகிதர்கள், பண்டாக்கள் இருக்கிறார்கள். அவர்கள் வசிக்கும் பகுதிக்கு 'ஜ்வாலாபுரி' என்று பெயர்.

மூன்றாவது பகுதி: 'கனகல்' - இங்குதான் தக்ஷபிரஜாபதி என்பவர் ஒரு யாகம் செய்தார். அப்போது அவர் பரமேஸ்வரனை நிந்தை செய்தார். அது பொறுக்க மாட்டாத தக்ஷனின் பெண்ணான தாக்ஷாயணி அந்த ஹோமகுண்டத்தில் விழுந்து விட்டாள். அப்போதுதான் அவளுடைய உடம்பிலிருந்து 51 பாகங்கள் பல இடங்களில் விழுந்தன. அப்படி அம்பாளுடைய உடம்பிலிருந்து விழுந்த இடங்கள் தான் 51 சக்தி பீடங்களாக விளங்குகின்றன.

நான்காவது பகுதி: ஜகதீஷ்பூர், ஐந்தாவது விஸ்ரபூர் என இப்படி ஐந்து க்ஷேத்திரங்களாக ஹரித்வார் விளங்கினாலும், ஒரு க்ஷேத்திரம் தான். இதேபோல் பத்ரிநாத் போகும் வழியில் பஞ்ச பிரயாகை என்று 5 பிரயாகைகள் இருக்கின்றன. தேவ பிரயாக், ருத்ர பிரயாக், கர்ண பிரயாக், நந்த பிரயாக், விஷ்ணு பிரயாக் என்று இருக்கின்றன. அதேபோல் 'பஞ்சபத்ரி' என்றும் 5 பத்ரி க்ஷேத்திரங்கள் இருக்கின்றன. தற்போது இருக்கும் பத்ரிநாத் க்ஷேத்திரம் ஒன்று. ஆதி பத்ரி, பவிஷ்யத் பத்ரி, விருத்த பத்ரி, யோத் பத்ரி என்றும் இருக்கின்றன. மேலும் 'பஞ்சகேதார்' என்று 5 கேதார் க்ஷேத்திரங்கள் இருக்கின்றன. கேதார்நாத், கல்பேஷ்வர், ருத்ரநாத், துங்கநாத், மத்மஹேஸ்வர் என்று இருக்கின்றன. 12 ஜோதிர்லிங்கங்களில் ஒன்றான இந்த கேதார்நாத்துக்கும் ஹரித்வாரிலிருந்து தான் செல்ல வேண்டும். இது தவிர, கங்கை உற்பத்தி ஆகும் இடமான கங்கோத்ரியும், யமுனா உற்பத்தி ஆகும் இடமான யமுனோத்ரியும் இந்த மலையில் தான் இருக்கின்றன. அதற்கும் ஹரித்வாரிலிருந்துதான் செல்ல வேண்டும்.

ஆண்டுக்கு ஒருமுறை தீபாவளி அன்று 'கங்கா ஸ்நானம்' ஆகி விட்டதா? என்று கேட்போம். ஆனால் ஹரித்வாருக்கு வரும் ஒவ்வொரு யாத்ரிகரும் கங்கா ஸ்நானம் ஆனதா? கங்கா ஸ்நானம் ஆனதா? எனப் பேசிக் கொள்வார்கள். தீபாவளி புண்ணியத் திருநாள் அன்று எல்லா 'அமுதசுரபி' வாசகர்களுக்கும் ஆசீர்வாதங்கள்!





# அரும்புகழ் அநுமன் வாழி*

பட்டாபிஷேகம் கொண்டு ராஜராமனாகிவிட்ட பெருமான் அநுமானின் அருமை பெருமைகளை அகத்திய மஹாமுனிவரிடம் அடுக்கிக்கொண்டே போகிறான். "சூரத்தனம், புத்தி சதுரம், பலம், தீரம், பாண்டித்தியம், ராஜதந்திரம், விக்கிரமம், பிரபாவம் யாவும் ஓர் ஆலயமாக அவனிடம் குடிகொண்டுள்ளன. இலங்கைப் போரில் அவன் செய்த சாகஸம் யமனோ, இந்திரனோ, குபேரனோ, ஏன் திருமாலுமே கூட ஆற்ற இயலாது! அவனது தோள்வலி ஒன்றாலேயே நான் வெற்றி பெற்றேன்; சீதையையும், இலக்குவனையும், உற்றம்–சுற்றத்தையும் பெற்றேன்! அப்படிப்பட்டவன் ஸுக்கிரீவனுக்கு உயிர்த்துணையாக உடனிருந்த போதிலும் வாலியை ஏன் அடக்கி அடிபணிய வைக்காமல் வாளாவிருந்தான்? அதன் காரணம் என்ன? அதற்கு ஏதோ பூர்வ கதை இருக்கவேண்டும். அதனை அனைத்தும் அறிந்த தாங்கள், விஸ்தாரமாகக் கூறியருள வேண்டும்" எனக் குறுமுனியிடம் கேட்டுக் கொள்கிறான்.

"ரகோத்தம! நீ சத்தியமே சொன்னாய்! இவனுக்கு நிகரொருவன் பலத்திலில்லை; நன்மதி கூறுவதில் இல்லை; கதியாய் நிற்பதிலும் இல்லை. அப்படிப்பட்டவன் அபல ஸுக்ரீவனின் அபல ஸகாவாகவே இருந்த விந்தையும் நிகழத்தான் செய்தது. அதற்குக் காரணமான இவனது பால காண்டமும் உண்டுதான்! ஆனால், ராகவ! விஸ்தாரமாகக் கூறச் சொன்னாயே, அது இயலாத காரியம்! என் அறிவுக்கு என்ன வருமோ, அதையே உள்ளத்தை உள்நிறுத்தி உன்னிடம் கூறுகிறேன்" என்று அதற்குக் கும்பஸம்பவர் மறுமொழி கூறி, அநுமந்தனின் இளமைப் பருவ வரலாற்றை இயம்பத் தொடங்குகிறார்.

'கடலையே அள்ளி ஆசமனம் செய்தவர், தமிழ்க் கடலையும்

* கம்பராமாயண திருமுடிசூட்டு (பட்டாபிஷேகம்) படலத்தின் இறுதியில் கூறப்படும் வாழ்த்துப் பாடலின் இறுதி வாசகம், "அரும் புகழ் அநுமன் வாழி!" என்பதே.

ரா. கணபதி

மறைக்கடலையும் பானம் செய்தவர்! அநுமன் மகிமையைக் கூறுவது தமது ஆற்றலுக்கு அப்பாற்பட்டது என்கிறார்! அதுவும் அவர் சொல்வது அவனது பால காண்டத்தை மாத்திரம் குறித்ததே! ஆண்டுகள் பல ஆனபின் அவன் அவதார ராமனை அடுத்து, அடிமைபூண்டு, அந்த எளிமையின் பயனாகவே தனது உள்ளார்ந்த வலிமையை உணர்ந்து, வீறுபெற்ற வீர மாருதியாகி செய்தனவோ பாலகாண்ட லீலையினும் பலப்பல மடங்கு விஸ்தாரமானவை.

அந்தப் பெருமைகளையும் சேர்த்து அநுமத் பிரபாவத்தைச் சிற்றறிவினன் ஒருவன் தன் சிந்தனைக்குள் கொண்டு வருவதே அசாத்தியம்! கொண்டு வர இயன்றதையும் ஒரு கட்டுரைக்குள் அடக்கப் பார்ப்பது, "கடுகைத் துளைத்து அதனுள் ஏழு கடலைப் புகட்ட" முயல்வது போன்ற பேதைமையே!

ஆயினும் எந்த அளவில் அதனை நினைவுக்குக் கொண்டு வந்து கூறினாலும், அது சொல்வோர்–கேட்போர் இருவரின் இதயத்திற்கும் இனியது, அறிவுக்கு ஔடதம், வாழ்க்கைக்குப் படிப்பினை, அந்தராத்மாவுக்கு அறைகூவல். எனவே கடல் தாண்டிய அக் கிரியாசக்தி சாகரனே கருணைக் கடலுமாதலின் அவனதுதுணைவேண்டி அவனது விதவிதப் பெருமைகளில் சிலவற்றுக்கு இமயத்திலிருந்து சில பருக்கைக் கற்களைப் போல் உதாரணம் பார்க்கலாம்.

விதவிதப் பெருமைகள்தாம்! மனித வாழ்வைப் பூரணமாக்க என்னென்ன உண்டோ அத்தனையும் குடியிருக்கும் கோயிலாயிருந்தவன் அவன். ஒருவரிடமே ஒன்றுகூடிக் காண்பதற்கில்லாத விதவிதச் சக்திகள் அனைத்தும் அவனிடம் இழைய இழையச் சங்கமித்திருந்தன. மகா பலவானாகவும் இருந்தான். மகா புத்திமானாகவும் இருந்தான். இரண்டையுமே அற்புதமாகக் காரிய உருவிலும் வெளிக்காட்டி அரும்பணி புரிந்தான். செயல்வன்மை போலவே வாக்குவன்மையிலும், ஈடின்றித் திகழ்ந்தான். அவன் கர்மயோகக் கொடுமுடி மட்டுந்தானா? பக்தி யோகத்திலும் அவனுக்கு எவர் நிகர்? வஜ்ர சரீரி, 'பஜ்ராங்க்' என்றே பெயர் பெற்றவன் பக்தியில் எப்படி வெண்ணெயாய்க் குழைந்திருந்தான்! அவனே யோகாஞ்ஜநேயனாக உணர்வுகள் யாவும் நசித்த ராஜயோக நிலையில் நிலைகொண்டவனாகவும் இருந்தான்! அனைத்து உணர்வுகளும் பழுத்து ஏகரஸமான சாந்த ஆனந்தமாகும் ஞான யோகத்தின் கரையும் கண்டவன்தான் அவன். பேரதிசயம், அத்தனை பெருமைகளையும் விழுங்குவதான எளிமைக்கும் அவனே மூர்த்தி என்பதுதான்! அரசர்க்கரசனாக அதிகாரம் செலுத்த ஆற்றல் பெற்றவன் லவலேசமும் அகந்தை, தற்பெருமை என்பவற்றின் வாடையும் கலவாது. தனக்கேதும் ஆற்றல் இருந்தால் அது ஸ்ரீராமன் போட்ட பிச்சையே என்ற உணர்வில் ராமதாஸனாக, தாஸானுதாஸனாகவே இருந்தான்; இன்றும் இருக்கிறான்!

காஞ்சி மாமுனிவர் சொல்வார்: "ஞானத்தில் உச்சநிலை, பலத்தில் உச்சநிலை, பக்தியில் உச்சநிலை, வீரத்தில் உச்சநிலை, கீர்த்தியில் உச்சநிலை, வினயத்தில் உச்சநிலை



– இப்படியெல்லாம் ஒன்று சேர்ந்து இருக்கிற ஸ்வரூபம் ஒன்று உண்டு என்றால், அது ஆஞ்ஜநேய ஸ்வாமிதான்" என்று! நானா துறைகளிலும் அவன் பொலிவித்த சிறப்புகளை நுணுக்கமாகக் கண்டு எத்தனை எத்தனையோ கூறி இருக்கிறார், மகத்தான ஆற்றல்களும் அவற்றை விஞ்சும் அடக்கமும் ஒன்று திரண்ட நம்காலத்து அனுமந்தனாக இருந்த அம் மஹா பெரியவாள்! அதன் சுருதியிலேயே அமைந்த கருத்துகள்தாம் இனி நாம் காணவிருப்பதில் பல.

அநுமனது ஸ்மரணையால் நாம் பெறும் நலன்களைக் கூறும் சுலோகம் முதலில் 'புத்தி'யைக்கூறி, அதற்கு அடுத்ததாகவே 'பல'த்தைக் கூறும்.

*புத்திர்–பலம்–யசோ–தைர்யம்–நிர்பயத்வம்–அரோகதா!*
*அஜாட்யம்–வாக்படுத்வம் ச ஹநுமத் ஸ்மரணாத் பவேத்!!*

அறிவு, வலிவு, புகழ், தீரம், அஞ்சாமை (தீரம் என்றபின் மீண்டும் அஞ்சாமை என்பானேன் என்றால் இது பிறர் நம்மிடம் அஞ்சாமல் இருப்பதையே குறிக்கும்; அதாவது அன்பு இதயத்தைக் குறிக்கும் என்பார் காஞ்சி முனிவர்), நோயின்மை ('பலம் வேறு, ஆரோக்கியம் வேறு. நல்ல பலிஷ்டனான ஸான்டோவுக்குக் கூட ஏதாவது வியாதி, திருஷ்டிக் குறைவு, காது மந்தம் இப்படி ஏதாவது இருப்பது உண்டு' – காஞ்சி முனிவர்) ஒருபோதும் சோம்பல் இல்லாத ஊக்க உற்சாக உயிர்த் தளிர்ப்பு, சொற்திறன் ஆகிய யாவும் அவனை ஸ்மரிப்பதால் லபிக்கின்றனவாம். எப்படி? அவனே இவற்றுக்கு ஆதரிசம் படைக்கும் ஜீவிய சக்தியின் அருளால்தான்!

இவற்றில் புத்திக்கே முதல் இடம்! புத்திமான்களில் அதற்கு மேல் சொல்ல முடியாத 'புத்திமதாம் வரிஷ்ட' னாக அவன் இருந்ததாக, இன்னொரு பிரபலமான ச்லோகம் கூறும். அவனது நுட்பமான அறிவுத் திறனுக்கு வால்மீகியும்,



கம்பரும் இதிஹாஸம் முழுவதிலும் எடுத்துக் காட்டுப் படைத்துக் கொண்டே போகிறார்கள்.

நினைவு படரும் போக்கில் சில: அவனது புத்தி என்பது வறட்டு மூளையன்று. இதயத்தையும் மூளையையும் கலவைச் சந்தனமாகப் பிசைந்த ஒன்றே அது! எனவே அவனது *அறிவு* எவரது மன *உணர்வையும்* அறிவதாகவும், அதற்கேற்ப சமயோசிதமாகச் செயற்படுவதாகவும் இருந்தது. விபீஷணனைக் குறித்து, *"அவன் உணர்வைத் தன்னுணர்வினால் உணர்ந்தான்"* எனக் கம்பர் 'ஊர்தேடு படல'த்தில் கூறுவது எல்லாப் பாத்திரங்கள் குறித்துமே உண்மைதான்!

ராமபிரானைக் கண்ட மாத்திரத்தில் அநுமனது உள்ளுணர்வு அவனைத் தெய்வமாகத் தெரிவித்தது, புத்திக்கு மேம்பட்ட அந்தரான்ம அனுபவம். அதைப் பற்றி இங்கு பேச்சில்லை. அதே போதில் அநுமன் அத் தெய்வம் நரவேடம் பூண்டிருந்த நிலையில் அப்போது இருந்த மனோ*பாவ*த்தைத் தனது புத்திமட்டத்தில் வெகு துல்லிய மாகக் கணித்ததையும் கம்பன் கண்டு கூறியிருப்பதே நமக்கு விஷயம்.

ராம—லக்ஷ்மணர்கள் ஏதோ மன உளைச்சலில் இருப்பதைக் கண்டு கொள்கிறான் அவன். 'நரரே ஆயினும் இவர்கள் சராசரி மாந்தருக்கு மேம்பட்ட நரராதலின் எளிதில் மன நோவு உறுபவர் அல்லர். எனினும் அப்படிப்பட்டவர்கள் இப்போது மனத் தளர்ச்சியால் அயர்ந்திருக்கிறார்கள் என்றால்? தருமமும் ஒழுக்கமும் செல்வமாகக் கொண்ட இவர்கள் எதையோ நாடித்தான் மனநோவு கொண் டுள்ளார்கள் என்றால்....? நாடும் பொருள் மிகப் பெரிதாகத் தான் இருக்கவேண்டும்! புதிதாக நாடுவதாக இன்றி இவர்கள் முன்னர் பெற்று, இடையில் இழந்து, இப்போது இவர்கள் தேடும் பொருளாக இருக்கவேண்டும்! அருமருந்தான தேவாமுதம் போன்றதாகவே அது இருக்கவேண்டும்!' என்றெல்லாம் அவனது சிந்தனை படர்கிறது. ('சிந்தையில் சிறிது துயர்', 'தருமமும் தகவும்' என்ற இரு பாடல்கள் — அநுமப்படலம்) தேவாமுதுடனேயே பிறந்த ஸ்ரீதேவியின் அவதாரமாம் சீதா தேவியையே அவர்கள் தேடுவதை எவ்வளவு கூர்த்த அறிவுடன் அநுமன் கண்டு கொண்டிருக்கிறான்?

ராம—ஸுக்ரீவர்கள் ஜன்ம விரதமாகவே பரஸ்பர நட்பு பூண்டாயிற்று. எனினும் உள்ளூர சுக்ரீவனுக்கு ஐயம், வீராதி வீர வாலியை ராமனால் வெல்லமுடியுமா, என்று! தனது அமைச்சர்களைக் கூட்டி வைத்துக்கொண்டு அது பற்றிப் பேச எண்ணுகிறான். அவர்களில் முக்கியமான அமைச்சராக, 'மதியமைச்சு' என்பதற்கு முழு வடிவமாக இருக்கும் மாருதியோ, சுக்ரீவன் பேசத் தொடங்கும் முன்னரே *"உன்னினேன், உன்தன் உள்ளத்தில் உள்ளது"* என்று தன் வாயாலேயே கூறி, அவன் மனத்திலிருப்பதைச் சொல்கிறான்! ராமனால் இயலாத எதுவும் இல்லை; அவன் தெய்வத் திருமால் என்கிறான். சுக்ரீவனுக்கு அதில் உறுதியான நம்பிக்கை ஏற்படும் பொருட்டு வெளிச் சான்றாக ஸ்ரீராமனது தடக்கையிலும், தாளிலும் சங்கு சக்கர முத்திரை உள்ளதைச் சொல்கிறான்.

அதனினும் அருமை, உட்சான்று காட்டியதுதான். அவனது தந்தையான வாயு, உலகீந்த பெருமானுக்கு அடிமை செய்யும்படி அவனுக்கு வாய்க்குமென்றும், அதுவே அவனுக்குத் தவம் என்றும் சொன்னானாம். அப்போது அவன் அந்தப் பெருமானை எப்படிக் கண்டு கொள்வது என்று தந்தையைக் கேட்டானாம். அப்போது அந்தத் தந்தையான வாயு பகவான் (ஸுக்ரீவனைப் போலத் தன் மகன் ஸ்தூலமாகச் சாட்சியம் வேண்டாமல் சூக்ஷ்மமாகவே புரிந்து கொள்ளக்கூடியவன் என்பதால்) *"அன்பு சான்று"* என்று கூறினானாம்! இப்போது ராமனைக் கண்ட மாத்திரத்தில் இவனது உடல், எலும்பு உட்பட அப்படியே உருகிவிட்டது. இதைவிட என்ன சான்று வேண்டும்? என்கிறான். 'நட்புக் கோட் படலம்' அநுமனின் அறிவு இதயத்தோடு இசைந்தது, இதயத்திலேயே நிறைவது என்பதற்கும் சான்று!

அசோக வனத்தில் சீதையை அநுமன் மறைவிடத்தில் மரத்தின் மேலிருந்து கொண்டு கண்டுபிடிக்கிறான். அடுத்து ராவணன் வந்து அவளை வெருட்டி, மருட்டிவிட்டுச் செல்கிறான். அதைத் தொடர்ந்து காவலரக்கியர் உறங்கி விழ, பிராட்டி தன்னுடைய கேச பாசத்தாலேயே மரத்தில் சுருக்கிட்டுத் தன் இன்னுயிரைப் போக்கிக் கொள்ள முயற்சி தொடங்குகிறாள். அப்போதுதான் அநுமன் அவளைச் சந்திக்க சமயமும் வாய்க்கிறது! அதுவோ அரை நொடியும் தாமதிப்பதிற்கில்லாத சமயமாக இருக்கிறது! பேராவலுடன் நெடுநாள் எதிர்பார்த்துப் பாடுபட்டது எதற்கோ அதற்கான

சமயம் பேராபத்து நிலையில் வாய்க்கிறது!

பின்னர் ஸஞ்ஜீவி பர்வதத்தை இருமுறை கொண்டு வந்து ராமலக்ஷ்மணர், வானரப் பெரும்படை ஆகிய அனைவருக்கும் உயிரும் உணர்வும் பெய்த அநுமனை அயனான தருணத்தில் வந்து ஜீவனை ஊட்டும் ஸமய ஸஞ்ஜீவி என்று போற்றுவர். பிற்பாடு பதினாலாண்டு வனவாசம் முடியும் கட்டத்தில் ராமபிரான் காட்டிலிருந்து நாட்டுக்கு மீளாமல் ஓரிரவு தாமதிக்குமாறு பரத்வாஜர் அவனைத் தமது அதிதியாக ஆசிரமத்தில் இருத்திக் கொள்கிறார். அப்போது அக்கால கெடுவுக்கு அதிகமாகக் கணமும் பரதனால் பொறுத்திருக்க முடியாமல் அவன் முன்பே சூளுரைத்திருந்தபடி தீப் புகுந்துவிடுவானென்று அஞ்சிய ஐயன், மனோவேகத்தையும் விஞ்சிய விரைவு கொண்ட அநுமனையே ஆருயிர்த் தம்பிக்கு நற்செய்தி கூறி உயிர்காக்கும் தூதனாக அனுப்புகிறார். அவனும் அவ்வாறே அத்தம்பி அக்கினிப் பிரவேசம் செய்யவிருந்த அயனான தருணத்தில் அங்கு குதித்து, துடிப்புடன் *"வந்தான், வந்தான், வந்தான், பரதா!"* என்ற அமுதச் சொல்லைக் கொட்டி பரதனின் பிராணனை ரக்ஷிக்கிறான். ஸமய ஸஞ்ஜீவியாக அவன் பன்முறை உதவியதில் அது ஒரு சிகர கட்டம்.

இன்னொரு சிகர கட்டம் இப்போது பிரானின் ஆருயிர் நாயகி தன் இன்னுயிரை நீக்கவிருந்த இச்சமயம், ஆயினும் இங்கே அநுமன் துடிப்புடன் தூதுமொழியைக் கொட்டினானா? இல்லை. அந்த ஆபத்து நேரத்திலும் யோசித்து அரை நொடிக்குள்ளே தனது தீக்ஷண்ய புத்தியால் தீர்வும் கண்டு, அதன் பின்பே தூதுப்பணி தொடங்குகிறான். யோசித்துத் தீர்வு காணுமாறு அப்போது ஒரு பிரச்னை ஏற்பட்டிருக்கிறதென அந்த இடுக்கண் நேரத்திலும் அவன் கண்டு கொண்டதுமே அவனது விழிப்பு மிக்க அறிவுக்கு – 'அஜாட்யம்' என்பதற்கு – சான்று.

திடும்பிரவேசமாகத் தான் ஸீதை காண அவள் முன் தோன்றித் தனக்கு இயல்பாக வரும் தேர்ந்த ஸம்ஸ்கிருத மொழியில் பேசினால் அவள் தன்னை நம்பமாட்டாளென்று அவன் கண்டு கொள்கிறான். கபட வேஷத்தில் துறவி போலச் சென்றே ராவணன் அவளைத் தூக்கி வந்திருக்கிறான். எந்த வேஷமும் எடுக்கக்கூடிய காமரூபிகளே ராவணனும் அவனைச் சேர்ந்த அரக்கரும் என அவள் கண்டு கொண்டு அந்த லங்கைச் சூழலில் எந்த வேற்று மனிதரைக் கண்டாலும் வேஷதாரியாகவே எண்ணத் தொடங்கியிருப்பாள். அவ்வாறிருக்க வானர வேஷத்தில் தான் அவள் முன் நின்று தூய வடமொழியில் பேசினால் அது ராவணனின் மொழியாகவே வேறு இருந்ததால் அவள் தன்னையும் அவனது கபட வேஷமாகத்தானே எண்ணுவாள்? (இதெல்லாம் வன்மீகத்தின்படி விரியும் விருத்தாந்தம். அதில் புலத்திய முனிவரின் பேரனும் விசிரவ முனிவரின் புத்திரனுமான ராவணனது மொழி ஸமஸ்கிருதமே எனத் தெளிவாகப் பெறப்படுகிறது) தோற்றத்தை மாற்று வேடத்தில் மறைத்துவிடலாமாயினும் பேச்சுவழக்கத்தை மாற்றிக் கொள்வது அவ்வளவு எளிதல்லதானே? எனவேதான் ராவணனுக்கு வேறான உருவிலே வந்தவனையும் அவனது மொழியினால் அரக்கனின் வேஷமாகவே அன்னை எண்ணக்கூடுமென அநுமன் கருதியது.

ஆகையால், தான் கை தேர்ந்து, தன்னியல்பாக்கிக் கொண்டுவிட்ட வடசொல்லில் அவளிடம் பேசினால் பிரச்னையாகும் என்ற நுட்பமான அம்சத்தை ஆபத்திலும் தவறவிடாமல் அவன் உணர்கிறான். அம்மொழியில் பேசக்கூடாதென முடிவு செய்கிறான். அவனை 'வாக்விதாம் கோவித: – சொல்லின் செல்வன்'– என்று ஐயன் போற்றியதற்கு ஒரு முக்கியமான காரணமே அவனது வடசொல்லாட்சித் திறன்தான். தருணம் நேர்கையில் தனது திறன்களைத் திருணமாகத் தள்ளிவிடும் உயர்பண்பாளன் அநுமன். எனவே இப்போதும் அவ்வாறே தள்ள முடிவு செய்கிறான்.

சரி, வானர உருவில் தோன்றி நரரின் வேற்று மொழியொன்றில் பேசினால் மாத்திரம் அவளுக்கு நம்பிக்கை ஏற்பட்டுவிடுமா? கபட வேஷத்திற்கு ஏமாந்து பேதுற்ற பேதை எதையும் சந்தேகக் கண்ணுடன் பார்ப்பவளாகத்தானே இருப்பாள்? நரனாக முதலில் தோன்றி அப்புறம் மெய்யான வானரமாக ஆனாலும், வேஷம் மாறுகிறது என்பதாலேயே அவள் நிச்சயம் ஐயுறத்தான் செய்வாள். எனவே அவள் கண்படத் தோன்றவே வேண்டாம். காதுபடவே பேசுவோம்! என்ன பேசினால் கேட்ட மாத்திரத்தில் அவளுக்கு அமுதமாக இனித்து, ஆர்வமாகக் கேட்பாளோ, ஐயத்தையும் அச்சத்தையும் அமுக்கிக் கொண்டு எது அவளுக்கு இன்பம் சொரியுமோ அதைப் பேசுவோம். அதாவது இந்தச் சூழலில் அவள் பத்து மாதங்களாகக் கேட்டேயில்லாத ஸ்ரீராம சரிதையை, ராம குணங்களை, ராம நாமத்தை அவளுக்குக் கண் மறைவாக இப்போதுள்ள இடத்திலிருந்தே கூறுவோம். அதனால் அவள் மனம் நிரம்பி அக் குரலுக்குரியவரிடம் நன்றியும் நட்புப் பாங்கும் தோன்றும். அப்போது அவள் முன் தோன்றினால், ஐயமே எழுந்தாலும்கூட அது ஆழமானதாக இருக்காது. அதை எளிதில் சரி செய்து விடலாம்.

இத்தனை விஷயங்களையும் அநுமன் அரை நொடியில் அலசி, தீர்வும் கண்டு, ராம காதையைக் கூறத் தொடங்கிவிட்டான். அதனாலேயே அவன் எண்ணியபடி அன்னையின் இன்னுயிரையும் காத்துக் கொடுத்தான். ஸாக்ஷாத் எம்பிராட்டிக்கு ராம காதையால் உயிரூட்டிய அந்த மகத்துவத்தால்தான் போலும், ராமாயணம் ஓதப்படும் இடங்களிலெல்லாம் இன்றும் அவன் பிரஸன்னமாக இருப்பது!

சீதைக்குப் பாறாங்கல் போல் நம்பிக்கையுறுதி பிறப்பிக்க வேண்டும் என்பதற்காகவே ஐயன் தன்னுடைய முத்திரை மோதிரத்தை அநுமனிடம் கொடுத்தனுப்பினான். (நாலு திசையினும் தூதுவரை அனுப்பிவைத்தாலும், தென் திசைக்கும் ஏராளமான வானரரை அனுப்பியபோதிலும், அநுமனிடமே

ஐயன் அடையாளக் கணையாழியைக் கொடுத்தானென்பது அவனே காரியத்தைச் சாதித்து வருவானென்பதில் ஸ்வாமிக்கிருந்த நம்பிக்கை யுறுதியைக் காட்டுவதுதானே?) 'அக்கணையாழியை அவன் தேவியிடம் காட்டியிருக்க வேண்டியதுதானே முதற்காரியம்?' என்று நமக்குத் தோன்றலாம். ஆனால் அந்த புத்திமதாம் ச்ரேஷ்டனோ, ஏமாந்து போய்ப் பேரிடரில் சிக்கிக்கொண்ட அவளுக்கு எதுவுமே பொய் வேஷமாகத்தான் தோன்றும். எடுத்த எடுப்பில் ஸ்ரீராம நாமாங்கிதமான அங்குலியத்தைக் கண்டால் அதுவும் மாய சிருஷ்டியாகவே தெரியும் என்று கண்டு கொண்டான். அதனால்தான் அவளுக்குத் தன்னிடம் பூர்ணமான நம்பிக்கை விசுவாசம் ஏற்பட்ட பின்பே கடைசியாக, அவநம்பிக்கைக்கு உகாத அந்த அரிய பண்டத்தை அவளுக்குக் கொடுத்தான்.

'சமயோசிதம்' என்று ஒரு வார்த்தை சொல்கிறோம். சமயத்திற்கேற்ப நடப்பது என்று அதற்குப் பொருள். நம்முடைய சமயசஞ்சீவி அச்சமயோசிதத்தில் அதிசமர்த்தன் என்பதற்கு இன்னும் ஒரே ஓர் எடுத்துக்காட்டு:

'கண்டேன் சீதையை!' – 'த்ரு ஷ்டா ஸீதா' – என்று அநுமன் 'கண்டதை' முதலில் ஐயனுக்கு உறுதிப்படுத்திவிட்டு அப்புறமே காணப்பட்டவளின் பெயரைச் சொன்னான் என்று பிரசித்தமாகப் பேச்சு இருக்கிறது.

ஆயினும், கம்பர், வால்மீகி இருவருமே அப்படிச் சொல்லவில்லை. ஏன்? ஏனெனில் ராமனின் இதயம் அநுமனுக்குத் தெரியும் என்று அவ்விரு கவி சிரேஷ்டர்களுக்கும் தெரியுமே, அதனால்தான்!

சீதை *உயிருடன்* இருப்பதுடன் *கற்புடன்* இருப்பதுதான் ராமனுக்கு முக்கியம் என்று அறிந்தவன், அவரது உணர்வை உள்ளவாறு அறிந்த அநுமன். அந்த மாதரசி கனவிலும் தன்னளவில் கற்பு நெறியிலிருந்து இம்மியும் விலக மாட்டாளென்பதில் பிரானுக்கு ஐயமில்லைதான். ஆயினும் காமுகனான ராவணன் பலாத்காரம் செய்திருப்பின்?

அப்படி நிகழவொட்டாமலும் அவளது கற்புத் தீயே வேலியிட்டுக் காக்கும். அதோடு அவன் முன்னர் பலாத்காரம் செய்திருந்த ரம்பை, புஞ்ஜிகஸ்தலை போன்றோரிடம் அவன் பெற்றிருந்த சாபத்தினாலும் சுயவிருப்பமில்லாத பெண்டிரை அவன் தீண்டுவதற்கில்லாமல் ஆயிற்று. இருந்தாலும்கூட நமது நர உலகப் பொது நியதிப்படி வெளிப்பட எதுவும் நிரூபணமானாலே ஏற்கவேண்டும் என்ற ராஜநீதியையே மதித்த ராமபிரான் சீதையை நேரில் கண்ட சத்தியவான்களின் சாக்ஷிப் பிரமாணத்தையே வேண்டினான். *'பொய் இலாதவன்', 'பொய் இல் மாருதி'* என்று கம்பன் கூறும் தூதனிடமிருந்து சீதை உயிர் வாழ்கிறாள் என்பதைவிட, சீதையின் கற்பு உயிர் வாழ்கிறது என்ற செய்தி கேட்கவே ஐயன் துடித்துக் கொண்டிருந்தான்.

அதனால்தான் வால்மீகி 'த்ருஷ்டா ஸீதா' என்று அநுமன் கூறாது, *'நியதாம் அக்ஷதாம் தேவீம் ராகவாய ந்யவேதயேத்'* என்றே கூறுகிறார். தனது கட்டுப்பாடு குலையாமல் அவள் இருந்ததே 'நியதாம்'. பிறனாலும் அக்கட்டுப்பாட்டுக்கு ஊறு உண்டாகாமல் அதன் முழுமையுடன் அவள் இருந்ததே 'அக்ஷதாம்'. எத்தனை ரத்தின கர்ப்பமான பதப் பிரயோகம்!

கம்பனோ இங்கு விந்தையே புரிந்துவிடுகிறான், வாக்கு விசேஷத்தால்! அவனுடைய அநுமன் 'கண்டேன் சீதையை' சொல்லாதது மட்டுமில்லை, 'காணவில்லை' என்றே சொல்கிறான்! ஆம், *'நங்கையைக் கண்டேன் அல்லேன்'* என்றே கூறுகிறான்! ஆனால் இது அவனுடைய தொடக்க மொழியன்று. எடுத்தவுடன் அப்படிச் சொன்னால் ஐயன் அவதார வாழ்வையே முடித்திருப்பானே! ஆகையால் அவன் எந்தச் செய்திக்காகத் தவித்துக் கொண்டிருந்தானோ அதையே 'குறிப்பினால் உணரும் கொள்கையன்' அழுத்தமாக எடுத்த எடுப்பில் கூறினான். *'கண்டனென் கற்பினுக்(கு) அணியைக் கண்களால்!'*

சீதையின் கற்பு காக்கப்படுவதைச் சொன்ன பிறகே அவள் பிரேமப் பொக்கிஷமாகக் கொடுத்தனுப்பிய சூடாமணியை அவன் ஐயனுக்கு அளிப்பது சூட்சும விசேஷம் வாய்ந்தது!

ஒரே வாக்கியத்தை ஒருவருக்கு ஆறுதலாகவும், இன்னொருவருக்கு அச்சுறுத்தலாகவும் மொழிந்த அறிவுச் செல்வனான சொல்லின் செல்வன் அவன்!

'மாருதி மஹாவீரன். வாரிதியைக் கடந்து வந்துவிட்டான். மற்ற குரக்கரும் அவ்விதம் வந்து அரக்கரை வதைப்பது எப்படி இயலும்?'– என்று பிராட்டி கலங்கி மலங்குகிறாள். அவளுக்கு ஆறுதலாக அவன் ஒன்று கூறி அவளைத் தேற்றுகிறான்.

அநுமன் தனியொருவனாகவே அசோகவனத்தை அழித்து, தனது அருமையான ஜ்யேஷ்ட குமாரன் அக்ஷகுமாரன் உள்பட அரக்கர் பலரைத் துவம்சம் செய்ததில் ராவணன் சற்றே கலங்கி விடுகிறான். ஆயினும், வானரப்படையுடன் ராமன் அவன் மீது படையெடுத்து வரவிருக்கிறான் என்று அநுமன் கூறியபோது அது அவனைக் கலக்கிவிடவில்லை. 'அதனாலென்ன, எல்லாரும் இந்த அநுமனின் பலபராக்கிரமம் பெற்றிருப்பரா என்ன? வானரப்படையை ராக்ஷஸப்படை எளிதே வெல்ல முடியும்' என்றே தேறியிருக்கிறான்.

அதைப் போக்கி அவனை அச்சுறுத்துவதாக அநுமன் ஒன்று கூறுகிறான்.

சீதையிடம் புகன்ற இத மொழி, ராவணனிடம் விடுத்த எச்சரிக்கை மொழி இரண்டும் ஒரே வாசகந்தான்!

"எனக்குச் சமமானவரும், என்னில் மேலானவருமான பலசாலிகளைக் கொண்டதே வானரப்படை. என்னிலும் தாழ்ந்தோர் எவரும் அதில் இல்லை. வேற்றான் ஊருக்குச் செய்தி அனுப்பவும் பெறவும் மேல் மட்டத்தில் உள்ளவர்களையா அனுப்பி வைப்பார்கள்?" என்பதே அவ்வாசகம்!

பொய்யிலாதான் இங்கே கூறுவது மெய்யல்லவே என்று கேட்கலாம். எனினும் பிராட்டி இருந்த நிலையில் அவளை ஆற்றித் தெளிவிப்பதையே நோக்கமாகக் கொண்டு – தன்னலம் கருதாது. அதோடு தன்னை மிகவும் குறைத்துக் கொண்டு – அவன் அப்படிச் சொன்ன *'பொய்ம்மையும் வாய்மை இடத்து'* என்பதே தமிழ்மறையின் தீர்ப்பு. ராவணன் விஷயத்திலோ அதுவே ராஜதந்திரத்துக்கேற்ற சாணக்கியம்!

இன்னொரு கேள்வி, 'மெய்யாலுமே மேல் மட்டத்தில் உள்ளவரை ஆபத்துக்கு ஏதுவுள்ள வேற்றான் ஊருக்கு அனுப்பத்தான் மாட்டார்கள். அப்படியிருக்க ஒருகாலும் இழக்கத் தகாத மாருதியை எவ்வாறு சுக்கிரீவனும் ராமனும் அனுப்பினர்?' என்று.

எந்த ஆபத்துமே அந்த மஹாவீரனுக்கு ஆபத்தாக இருக்காது என அவ்விருவரும் திடமாக, தெளிவாக உணர்ந்திருந்ததால்தான் அனுப்பினார்கள்.

'ஆபத்தையும் நல்வாய்ப்பாக்கிக் கொள்வது' என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். அப்படிச் செய்தவன் அவன்.

அசோகவனத்தில் அவன் ஹதாஹதம் செய்தபோது இந்திரஜித் அவனைப் பிரம்மாஸ்திரத்தால் பிணிக்கிறான்.

எந்த அஸ்திரமும் அவனைத் தொடாத வண்ணம் அந்த அஸ்திரங்களுக்குரிய தேவர்கள் வரம் கொடுக்கு மாறு பிரம்மா செய்திருந்தார். அவருக்கே உரிய பிரம்மாஸ்திரமும் அவனை முகூர்த்த காலத்திற்கு அதிகமாகப் பாதிக்காது. அது போதாதென்று, இந்திரஜித்தின் பிரம்மாஸ்திரத்தால் பிணிப்புண்ட அநுமனைச் செடி, கொடிகளாலும் இதர அரக்கர் கட்ட, 'தேவாஸ்திரமான நானே கட்டுப்போட்ட பிற்பாடு இந்த அற்பச் செடி, கொடிகளையா தேவையற்றதொரு பக்கபலமாகச் சேர்ப்பது?' என்று சினம் கொண்ட பிரம்மாஸ்திரம் முகூர்த்த காலத்திற்கும் முன்பாகவே அவனிடமிருந்து விடை கொண்டுவிட்டது!

ஆயினும் அவனோ கட்டுப்பட்டாற்போலவே இருக்க மனம் கொள்கிறான்! ஏன்? அவனைக் கட்டியிழுத்துப் போய் ராவணன் முன் நிறுத்தி தண்டனை வாங்கித் தருவதே அரக்கரின் உத்தேசம். 'பேஷ்! ராவணனை நேருக்கு நேர் காணவும், அதனாலேயே தன் இயல்புப்படி அவனைப் புரிந்து கொள்ளவும், ஸீதா பிராட்டியை அவன் ராமனிடம் ஒப்புவிக்காவிடில் முன்னொரு காலத்தில் அவனைத் தோல்வியுறச் செய்த வாலியையே ஸம்ஹரித்த அவர் படையெடுத்து வருவாரென்று தெரிவிக்கவும் நல்வாய்ப்புக் கிடைத்தது' என்றே அப்படிச் செய்தான்!

பிறகு அவனுடைய வாலில் தீயிட்டு லங்காபுரி முழுதும் அவனை இழுத்துச் சென்று அந்த அவகதியில் அவனை அனைவருக்கும் காட்டி அவமானப்படுத்தவேண்டும் என ராவணன் தண்டனை பிறப்பிக்கிறான்.

அதுவும் அவனுக்கு 'பேஷ்'தான்! 'முதல் நாள் இரவில் நம்மால் லங்கையைச் சரியாகப் பார்க்க இயலவில்லை. மாற்றான் ராஜதானியின் அமைப்பை அறிவது சத்துரு பட்சத்தினருக்கு மிக நல்லதல்லவா? தற்போது பகல் வெளிச்சத்தில் கொளுத்தப்படும் வாலின் வெளிச்சமும் சேர்ந்து நன்றாகப் பார்த்துக் கொள்ளலாம்!'

அப்படியானால் ஆபத்துக்கும் பேஷ் போடத்தானே வேண்டும்?

கூர்த்த அந்த அறிவும்கூட கலங்கிய சந்தர்ப்பங்களும் ஒருசில உண்டுதான். ஆயினும் விரைவிலேயே அவனாகத் தெளிவித்துக்கொண்டும் விடுவான்.

அவனுடைய வாலைப் பொசுக்கவே அரக்கர் தீயிட்டனர். ஆனால் அது அவ்வாலைப் பொசுக்கவில்லை. அதைக்கொண்டு, அரக்கரிட்ட தீயால் அவர்களுடைய ஊரையே அவன் பொசுக்கினான்! அப்போதுதான் திடுமென அவன் கலங்கியதும். அசோகவனமும் இப்போது பற்றி எரிந்து. அன்னைக்கும்...?

அந்த எண்ணம் அவனைத் தாக்கி ஓர் ஆட்டு ஆட்டி விட்டது. ஆயின் உடனேயே, நெருப்பு மூட்டப்பட்ட நம் வால் பற்றியெரிந்து கருகி விழவில்லை. வால் முனையில் பந்தமாகவே எரிகிறது. எரிகிறதா? இல்லை! எரிச்சல் என்பதும் அடியொடு இல்லை! குளிர்ச்சியாகவே உள்ளது. எப்படி இந்த அதிசயம்? அன்னையின் அருட்காப்புதான் இதற்குக் காரணம். (எவ்வளவு திட்டவட்டமாக உண்மையை உய்த்துணர்கிறான் பாருங்கள்! மெய்யாலுமே விஷயம் கேள்வியுற்ற பிராட்டி தீயின் பாதிப்பின்றி அது அவனுக்குக் குளிர்ந்திருக்க வேண்டுமென்று தன்னுடைய கற்பின் பேரில் அக்கினி பகவானிடம் விண்ணப்பித்ததுதான் அவ்விந்தையைச் சாதித்திருந்தது.) தன்னையே அவளது காப்பினால் தீண்டாத அக்கினி அவளை எப்படித் தீண்டும்? தன் பாதிவ்ரத்திய அக்னியின் சிறப்பால் அக்னி என்று சொல்லப்படுவதாலும் எரிக்க முடியாதவள் அல்லவா அவள்?' என்ற சர்வ நிச்சயமான தெளிவைப் பெற்றுவிடுகிறான்.

இங்கே பின்னர் நடக்கவிருந்ததையும் முன்கூட்டியே உய்த்துணர்ந்துவிடுகிறான். ராவணனை வதைத்து, அவளைச் சிறை மீட்டவுடன் ராஜகுல தர்மத்தை முன்னிட்டு அவளுடைய கற்பைச் சந்தேகிப்பதே போல் ஐயன் தீச் சொற்களை வீசியபோது அவள் தன் கற்பின் மீது ஆணையிட்டு தீப்புகத்தானே செய்தாள்? அப்போது தீயும் அவளை எரிக்கவொண்ணாமல், தீக்கடவுள் அவளது கற்புக்குச் சாக்ஷி பகருவதாய்த்தானே ஆயிற்று?

பிறரது மன உணர்வை நேராக உணர்ந்து அறிவது இருக்கட்டும். ஒருவரது முகக்குறி முதலியவற்றின் சிறிய வெளிப்பாடுகளைக் கொண்டும், மறைமுகமான பேச்சைக் கொண்டும் அவரது உள்ளத்தில் உள்ளதை உள்ளபடி அறிய ஓர் அலாதி ஸூக்ஷ்மம் இருக்கவேண்டும். அதையும் குறைவறப் பெற்று 'இங்கிதக்ஞன்' என்று பெயரெடுத்தவன்

ஆஞ்ஜநேயன். பரத்வாஜாசிரமத்தில் சிரமபரிஹாரம் செய்து கொள்ள நேர்ந்த ராமபிரான் பரதனிடம் அநுமனை அனுப்பியதற்கு அதுவும் ஒரு காரணம்.

பரதனுக்குத் தன்னிடம் நெஞ்சின் அடி ஆழம் வரை வேரூன்றியிருந்த அன்பு ஐயனுக்குத் தெரியாததில்லை. என்றாலும் பதவி என்பது மனிதனை எப்படிக் கெடுக்கும் என்பதையும் அவர் அறிவார். 'ஒருவேளை, ஒருவேளை? பதிநாலாண்டுகள் அநுபோகம் செய்துவிட்ட மஹா ஸாம்ராஜ்ய சக்கராதிபத்தியம் பரதனையும் அவ்வாறு ஆக்கியிருந்தால்? அதை நாம் முன்கூட்டி இப்போதே அறிந்தால் நல்லதுதானே? அவனது உத்தமமான ஆட்சியே அயோத்திப் பேரரசில் தொடர்ந்து நீடிப்பதற்கு விட்டுவிட்டு, இங்கிருந்தே சுவடு படாமல் ஆரண்யத்தின் உட்பகுதிக்கு மீண்டும் போய் விடலாமல்லவா?' என்று ஐயனுக்குத் தோன்றுகிறது. பதவி மோஹம்—மோஹினிப் பைசாசம்—புனித பரதனையும் தீண்டியிருக்குமாயின் அதை நுட்பமாகக் கண்டு வரக்கூடியது இங்கிதக்ஞனான அநுமனன்றி எவருண்டு என்று கருதியும்தான் அவனை அப்போது ஐயன் அனுப்பியது.

பவனாத்மஜனின் பலபடித்தான மாண்புகளில் மற்றுமொன்று கருமமே கண்ணாயினான் என்று அவன் இருந்ததுதான். விழுமியெழும் உணர்ச்சியையும் விழுங்கிக் கொண்டு செய்யவேண்டிய செயலிலேயே குறியாக இருந்தவன் அவன். இருமுறை அவன் ஸஞ்சீவி பர்வதத்தைக் கொண்டுவந்த போதும், அதனால் உணர்வு பெற்று எழுந்தவர்கள் அவனுடைய உயிருக்கு உயிரானவராகவே இருந்தாலும் அவர்களைக் கட்டிக்கொண்டு கூத்தாடாமல், முதற்காரியமாக, அம்மலையை இமய வரிசையில் எவ்விடத்திலிருந்து கொய்து வந்தானோ அங்கேயே மறுபடியும் கொண்டுபோய் நாட்டுவதையே அவன் முதற் காரியமாகச் செய்தான். அம்மலையில் தனக்கு வேண்டிய மூலிகைகளைத் தேடிக் கண்டுபிடித்துப் பறித்து வர நேரமாகும் என்பதாலேயே பிராணாபத்தான சந்தர்ப்பத்தில் காலதாமதம் உதவாது என்று மலையையே பூப்பறிப்பது போல் கொய்து வந்தான். அக்காரியம் முடிந்தவுடன் — உடன் என்றால் உடனேயே — அதை அதற்குரிய இடத்தில் கொண்டுபோய் வைப்பதுதானே அடுத்த காரியம்?

இங்கு அவனது தர்ம உள்ளமும் தெரிகிறது.

ஸத்ய—தர்மங்களின் உருவான ராமபிரானின் அடியார்களுள் முடிமணியாக விளங்குபவன் அம்மாண்புகளுக்குத் தானும் விளக்கமாக இருந்தவன்தான்.

'பொய்யில்லாமை'க்கு ஒரே ஒரு 'மாதிரி'. ராவணனுக்கும் அநுமனுக்குமிடையே கடும்போர் நடக்கிறது. அதிலே தன் ஆவியைத் திரட்டி ராவணனை ஒரு குத்துக் குத்த அநுமன் எண்ணுகிறான். இதை முன்கூட்டியே அவனுக்குச் சொல்லி, "நீ மாத்திரம் இதைத் தாங்கிக்கொண்டு விட்டாயாகில் அதன்பின் இப்போது நடக்கும் இக் கைகலப்பில் நான் மேற்கொண்டு தாக்கமாட்டேன். அது மட்டுமின்றி பதிலுக்கு உன்னிடம் குத்துப்பட்டுக் கொள்வேன்" என்கிறான். சொன்னபடியே ஓர் அம்... மாக்குத்து, திம்...மாக் குத்து விடவும் செய்கிறான்! அந்த அதிர்ச்சியில் ஈரேழுலகங்களும் உலைந்த உலைப்பை கம்பரின் கவிமொழியில் 'முதற் போர் புரிபடல'த்தில் காணவேண்டும்.

ராவணன் அதனால் தடுமாறித்தான் போகிறான். எனினும் ஒரே வீழ்ச்சியாக அவன் விழுந்துவிடாமல் சமாளித்துக் கொண்டும் விடுகிறான்.

அந்நிலையில் அநுமன் அவனை மீண்டும் தாக்காமல் தன் வாக்குச் சத்தியத்தைக் காக்கிறான். *'கடன் கொள்க!'* என்ற ரத்தினச் சுருக்கமான மொழியால், தான் அவனுக்குக் கடனாகப் பட்டுள்ள பதில் குத்தை அவன் தன் மீது விடுமாறு கோரி, உடம்பை அவனுக்குக் காட்டிக் கொண்டு நிற்கிறான்!

எப்பேர்ப்பட்ட சத்திய—தர்ம நேர்மை!

சோம்பியிராமல் சுறுசுறுப்பாக உயிர்த் தளிர்ப்புடன் இருக்கும் 'அஜாட்யம்' போலவே, இன்னொன்று. எந்த மாறுபாடான சூழ்நிலையிலும் மனம் தளராது — இந்நாளில் வியாபகமாகிவிட்ட 'டிப்ரஷன்' இல்லாது இருப்பதை 'அநிர்வேதம்' என்பர். அதற்கும் இலக்கியமாயிருந்தவன் ஆஞ்ஜநேயப்பிரபு. அதர்ம சக்திகள் சோம்பலும் தளர்ச்சியுமின்றிக் கைவரிசையைக் காட்டி வரும் நிகழ்காலத்தில் தர்ம நாட்டமுள்ளவர்களோ செயலில் இறங்காமல் சோம்பியும், செயற்பட்டாலும் எதிர்ப்புக் கண்டால் தளர்ந்து விடுவதையும் வேதனையுடன் குறிப்பிடும் காஞ்சி முனிவர், இவர்களுக்கு அநுமன் அளிக்கும் படிப்பினை (Message) அவன் அனவரதமும் உருவகித்த அஜாட்யமும் அநிர்வேதமுமேயாகும் என்பார்.

நிர்வேதம் எனும் மனத்தளர்ச்சி உதவாது என்பதற்கு அவன் கூறும் மொழிகள் வேத மந்திரமாகவே மதிக்கத் தக்கவை. லங்கையில் அசோகவனம் ஒன்று தவிர, மீதம் எல்லாப் பகுதிகளிலும் சல்லடை போட்டுச் சலித்து அன்னையைத் தேடியும் காணாத நிலையில், அந்த உத்ஸாஹ புருஷனையும் நிர்வேதம் பற்றிக்கொள்கிறது.

பாரதப் போர்த் தொடக்கத்தில் குருமாரையும், தாயாதி இத்யாதியரையும் எதிர்க்க நேர்ந்ததே என்று அர்ஜுனன் நிர்வேதம் உற்றான். அதைத் தெளிவிக்குமுகமாகவே கண்ணன் கீதோபதேசம் அருளத் தொடங்கியது. அநுமனோ குழம்பிய சமயங்களில் தானே தனக்குக் குருவாயிருந்து அதனைத் தெளிவித்துக் கொள்ளவும் செய்வான்! தளர்ந்தபோது தன்னைத்தானே இறுக்கி முன்னிலும் துல்லியமாகச் சுருதியை இழைத்துவிடுவான்!

இப்போது அவன் அப்படித் தனக்குத்தானே செய்துகொண்ட உபதேசத்தைத்தான் மஹாபெரியவாள் நமக்கெல்லாம் 'மெஸ்ஸே'ஜாகச் சொன்னது.

'அநிர்வேதமே (தளர்ச்சியடையா உற்சாகமே) சிரேயஸுக்கு மூலம் (வேர்). அநிர்வேதமே பரம சுகம். எவ்விதத்திலும் எக்காலமும் பயிலவேண்டியது அநிர்வேதந்தான். எக்காரியம் செய்தாலும் அதைப் பழுக்கச் செய்வது அநிர்வேதமே யாகையால், எல்லாப் பிரயத்தனத்தினாலும் அதை காத்துக் கொள்ளவேண்டும்' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டு மீண்டும் தேட்டத்தில் முனைந்து அசோகவனமாம் தோட்டத்தில் 'பழ'த்தை அறுவடை செய்தும் கொள்கிறான். (வால்மீகி, ஸுந்தர காண்டம் 12.10–11)

அவனது மாண்புகளில் மற்றொன்று புலனடக்கம். அவனைப் போன்ற பரமபாவன பிரம்மச்சாரி எவருண்டு? 'காமமகற்றிய தூயன்' என்பது மட்டுமில்லை. மனத்தையே அடக்கியவன் அவன். அலைபாயும் மனத்துக்குக் குரங்கைத்தான் முன்மாதிரி காட்டுவது. 'குரங்குப்புத்தி' என்றே சபலபுத்தியைச் சொல்கிறோம். இவன் அவ்வினத்தைச் சேர்ந்தவன்தான். அதோடு சதாவும் சலித்துக் கொண்டேயிருப்பதற்கு இன்னொரு முன்மாதிரியான வாயுவின் குமாரன் வேறு!

ஆனாலும் 'வாயு வேகம்' என்பதான தடைபடாத விரைவுகதியில் தந்தைக்கு நிகரான 'மாருத துல்ய வேக'க்காரன் என்று போற்றப்படும் அவன், அப்படிக் கூறும் ச்லோகத்தின் அடுத்த சொற்றொடரிலேயே சபலமறியாப் புலனடக்கத்திற்காக 'ஜிதேந்திரியன்' என்றும் புகழப்படுகிறான். ('மனோஜவம் மாருத துல்ய வேகம்' எனும் ச்லோகம்)

அவனை முதன்முறை கண்ட மாத்திரத்தில் ஸீதா தேவி "*நெறி நின்று பொறிகள் ஐந்தும் வென்றவன்*" எனக் கண்டு கொண்டதாகக் கம்பநாடர் பாடுகிறாரே, அதற்கு மேல் என்ன வேண்டும்?

அதனால்தான் அவனுக்குச் சுயவாழ்க்கை, சுயமையம் கொண்ட வாழ்க்கை என்று ஒன்று அணுவளவும் இல்லாமல் ராமசேவைக்கேயான வாழ்க்கையாக வாழ முடிந்தது.

*"சுக்கிரீவனுக்கும் விபீஷணனுக்கும் தங்கள்*
*துரைத்தனம் மேல் ஆசை எந்தாயே!*
*எக்காலமும் உன்றன் ஆசை என் காரியத்தில்!"*

என்று பிரான் அவனிடமே கூறியதாக அருணாசலக் கவிராயர் கூறுவதில் முன்னிருவர் பற்றி அவர் கூறுவது மிகையேயோயினும், அதிலும் உண்மை இல்லாமலில்லை தான்.

ராமனுக்கே ராமன் என்று அவனிடம் முற்ற முற்றவும் ப்ரேமனாக இருந்தவன் அநுமன் என்பதில் ஆட்சேபம் என்ன?

அநுமனின் கர்மயோகமும், பக்தி யோகமும் உலகம் அறிந்ததுதான். ஞானயோக ஸித்தனாக அவனைக் கொஞ்சமேனும் காணாமல் விடலாமா? 'வைதேஹி ஸஹிதம்'; 'காலாம்போதர காந்தி' என்ற பிரசித்தி பெற்ற, ஸ்ரீராமன் கொலுவீற்றிருக்கும் கோலத்தை வருணிக்கும் ச்லோகங்கள் இரண்டிலும் ராஜாராமன் ஞானாசாரியனாக சின்முத்ரை தரித்து மஹான்களுக்கு உபதேசிக்கிறான். இரண்டிலுமே அநுமனை முன்னிட்டுக் கொண்டே அவன் ஏனையோருக்கும் உபதேசிப்பதாகத்தான் உள்ளது.

நூற்றியெட்டு உபநிஷதங்களையும் அநுமனுக்குப் பெருமான் உபதேசிப்பதே அவற்றில் இறுதியான முக்திகோபநிஷதமாக உருவாகியுள்ளது.

பொதுவாக பாரதத்தின் பிரதேச மொழிகளில் ஞான வேதாந்த நூல்களாக இருப்பவை ஸம்ஸ்கிருத மூலத்தின் மொழிபெயர்ப்பாகவே இருக்கும். அவ்வாறில்லாமல் மூலமே தெலுங்கு மொழியாக உள்ள வேதாந்த நூல் 'ஸீதாராம ஆஞ்ஜநேய ஸம்வாதமு' என்பதாகும். அதில் ராமன் பணித்தபடி ஸீதையே பவஸாகரம் கடக்க உதவும் அவனது பதாரக நாமத்தைச் சமுத்திர தாரணம் செய்த அநுமனுக்கு உபதேசிக்கிறாள். என்ன பாக்கியம்! அதன் தொடர் பாக்கியமாக ஐயனே தாரகத்தின் தத்வார்த்தத்தை விரிவாகப் புகல்கிறார். ஞானமார்க்கப் பேராசானான சங்கர பகவத்பாதரும் தமது 'ராமபுஜங்க'த்தில் அநுமனை முன் வைத்தே ஐயன் ஞானோபதேசம் செய்வதாகச் சொல்லி யிருக்கிறார்.

பாமர மக்களின் பேச்சு மொழியாக 'பைசாசீ' என்று ஒரு பிராகிருத மொழி இருந்ததாம். அப்பாமரரும் ஆன்ம நலன் பெறுவதற்காக அம்மொழியில் அநுமன் பகவத்கீதைக்கு பாஷ்யம் எழுதியருளியுள்ளானாம்.

சொல்லி மாளாத குணமாண்புகள் பெற்ற அநுமனது முடிவான, முடிமணியான சிறப்பு அத்தனை மாண்புகளையும் அவன் அடக்கி வைத்துக் கொண்டிருந்த விநயம்தான். அவன் 'வீர்ய–விஜயன்' மட்டுமல்லன்; 'வீர்ய விநய'னுந்தான்!

ஆற்றல், அடக்கம் ஆகிய இரு துருவங்களையும் அவன் இணைத்தது இணையற்ற அதிசயம்! ஆனால் அவனோ அதை அநாயாஸமாகவே, புத்திப் பூர்வமாக இல்லாமல் இயற்கையாக ஆற்றிவிட்டான்!

அது ராம பக்தி என்ற அமிழ்தம், ராமநாமம் என்ற ரஸாயனம் விளைவித்த விந்தையே!

ஆதியில் அவனது அதி சூரத்தனத்தில் அவன் செய்த குழந்தைக் குறும்புகளைத் தாங்க மாட்டாமல் ரிஷிகள் அவன் தன்னுடைய வீர்ய விக்கிரமங்களை மறந்தவனாகி விடவேண்டுமெனச் சபித்தனர். அதனாலேயே அவன் வாலியுடன் போரிட்டு வென்று தனது பிரபுவான ஸுக்ரீவனுக்கு அரசு கிடைக்கச் செய்யாமல் அவனுக்குத் துணையாகவும், மதியமைச்சாகவும் மாத்திரம் இருந்தது.

சாபமிட்ட ரிஷிகள் தங்கள் தீர்க்க திருஷ்டியில் இன்னொன்றும் கண்டு சாப விமோசனமும் கூறியிருந்தார்கள்.




 ஸ்ரீ நாமக்கல் ஆஞ்சநேயர் வண்ண ஓவியம் – அமரர் சில்பி 






ஸ்ரீ யோக ஆஞ்சநேயர் – சோளிங்கர்
வண்ண ஓவியம் – அமரர் சில்பி

அவதார ராமனை அவன் ஒருநாள் காண்பான். கண்ட மாத்திரத்தில் அவனும் கனிவான். அப்படிக் கனிவு பெற்ற பின்னரே அவன் இடையில் மறந்திருந்த தன் மஹாபலத்தை நினைவு கொண்டு அதனால் அவதார காரியம் நிறைவேற அபாரத் தொண்டு புரியவேண்டும். இவ்வாறு எதிர்காலம் கண்ட அவர்கள், எப்போது அவனது பலத்தை ஒருவர் எடுத்துக்கூறி ஞாபகமூட்டுவாரோ அப்போது அக்கணமே அதை மீளப் பெறுவான் என விமோசனமும் கூறினர்.

அதன்படியே சீதையைத் தேடப் புறப்பட்ட வானரர்கள் தென் சமுத்திரக் கரைக்கு வந்து தங்களில் எவர் அக்கடலைக் கடந்து லங்காபுரி செல்வதென்று ஆலோசனை செய்தபோது ஜாம்பவான் அநுமனின் பலத்தை நினைவூட்ட அவனும் உடனே விசுவரூபம் கொண்டு கடலைத் தாவியே கடந்தான்!

ஆயினும் ராமனுடன் அன்பில் கனிந்து சங்கமித்ததால் அந்த விச்வமளாவும் விக்கிரம வித்தகத்தை அடக்கப் பெட்டகத்திலேயே வைத்துக் காத்தான்! அந்த அடக்கத்திற்குள்ள எடுத்துக்காட்டுகள் கணக்கில் அடங்கா.

ராவண சம்ஹாரம் செய்து ஸ்ரீராமன் வீர ராகவனாக, விஜயராகவனாகப் பரிணமித்ததை அசோக வனத்திலுள்ள பிராட்டிக்குத் தெரிவிக்கவும் அநுமனையே தூதனுப்பினான் அந்த ஜயராமன்.

அப்போது பரம சுபச் செய்தி கொண்டு வந்த வாயு குமாரனின் குணமாண்புகளையெல்லாம் பிற்பாடு அகத்தியரிடம் ராமன் அடுக்கிக்கொண்டே போனதுபோல் சீதாதேவி அவனிடமே அடுக்குகிறாள். முதற்கண் சொல்லின் செல்வனாகவே அவனைக்கூறி, தொடர்ந்து வலிமை, வீரம், கல்வி, சக்தி, வெற்றி விக்கிரமம், நுண்ணிய செயலாற்றல், தோற்றப்பொலிவு, பொறுமை, தளராமை, நிலைத்த உறுதிப்பாடு என்றெல்லாம் சொல்லிக்கொண்டே போய் 'விநீதத்வம்' என்றே முடிப்பதாக வால்மீகி முனிவர் பாடுகிறார். 'விநீதத்வம்' என்பது பணிந்து கிடந்து பணிவிடை புரியும் விநயம்தான்.

ராவணன் முதலானோரிடம் தன் மகிமைகளைச் சொல்லி அறிமுகம் செய்து கொள்ளாமல், *'ராமதூதன்'* என்று கூடக் கூறிக்கொள்ளாமல் *'ராமதாஸன்'* என்றே தன்னைத் தெரிவித்துக் கொண்ட அடக்கப் பொக்கிஷம் அவன்!

கடலைத்தாவிக் கடந்து சென்று, தேவியைக் கண்டு தூது மொழிந்து, அரக்கரை அழித்து, லங்கையை எரித்து – இப்படிப் பல அரும் சாதனைகளைப் புரிந்த அவன் ராமனிடம் திரும்பி வருகையில் தான் முந்தி நிற்கும் 'முந்திரி'யாக இல்லாமல் வானர இளவரசனான அங்கதனுக்கே முன்னிடம் கொடுத்துத்தான் அவன் பின் நின்றதாக வால்மீகி காட்டுகிறாரே, இதைவிட அடக்கத்திற்கோர் எடுத்துக்காட்டு எங்கு காணமுடியும்?

மஹாபலசாலியும் தன்னைப் போலவே வாயுகுமாரனும் ஆகிய பீமனுக்கு அவன் புகட்டிய பாடம் இந்த அடக்கமே என்று பாரதம் காட்டும். பாஞ்சாலி விரும்பிய ஸௌகந்திக மலரைத் தேடி இமயம் செல்கிறான் பீமன். அங்கு வழியில் சிரஞ்ஜீவியான ஆஞ்ஜநேயர் படுத்திருக்கக் காண்கிறான். அவன் அவசரம் அவனுக்கு! அதோடு தன் பலத்தினால் ராஜஸச் செருக்கு வேறு! 'கிழக்குரங்கே! விடு வழியை!' என்று வெருட்டுகிறான்.

"ஆமப்பனே, கிழம்தான், படுகிழம்! எழுந்திருக்கவும் அசக்தம்! நீயேதான் என்னைத் தூக்கி அப்பாலே போட்டுவிட்டுப் போயேன்!" என்று சாந்தமாக கூறுகிறான் அநுமந்தன்.

ஆத்திரத்துடன் அவனது வாலைக் கரகரவென்று இழுத்து அவனைத் தூர வீசவேண்டுமென்று எண்ணிய பீமன். வாலைத் தூக்க முயல்கிறான்.

முயற்சியே தேவையிராது என்று அவன் எண்ணிய அக்காரியமோ அவன் எத்தனை முயற்சி செய்தும் முடியவில்லை! வாலை அவனால் அங்குலங்கூட அசைக்க முடியவில்லை! அயர்ச்சி அடைந்து, ஆச்சரியமும் கொள்கிறான். அடக்கத்துடன் அநுமனின் அடிபணிந்து அவர் யாரெனக் கூறுமாறு வேண்டிக் கேட்கிறான். வாயு மைந்தனேயான தன்னுடைய பூஜிதத் தமையன் அநுமந்தன்தான் அவன் என அறிந்து அடக்கப் பாடம் பெறுகிறான்.

ஸௌகந்திகம் கிடைக்குமிடத்திற்கு வழிகூறி ஆசிர் வதித்து பீமனை அனுப்புகிறான், அடக்கத்தின் சுகந்தத்தைப் பரப்பும் அந்த கந்த வாஹன குமாரன்! (மலரின் மணத்தை ஏந்திச் சென்று பரப்புவது வாயுவே ஆகையால் வாயுவுக்கு கந்தவாஹனன் எனப்பெயர்)

வீர்ய விஜயனும், விஜயன் என்றே பெயர் பெற்றவனுமான தனஞ்ஜயனுக்கும் அடக்கம் என்ற அரிய தனத்தை ஈந்தவன் அநுமன்தான்! அந்தக் கதை ஸத்யஸாயி*ராமன்* சொல்லி நாம் கேட்க வேண்டும்! இங்கு நமக்குத் தொடர்புள்ள அதன் முதற்பகுதியை மட்டும் காண்போம்.

வடகோடி இமயத்தில் பீமனுக்குப்பாடம். அர்ஜுனனுக்குத் தென்கோடி சேதுக்கரையில்.

அங்கே அவனைக் கண்ட அர்ஜுனன் தனது வில்லாண்மையில் செருக்கடைந்து ராமனையே ஏளனம் செய்து பேசினான். "இங்கிருந்து ராமர் எதற்காக அத்தனை வானரரையும் வேலை வாங்கிப் பாலம் கட்டினார்? நானாயிருந்தால் என் அம்புகளைத் தனியொருவனாக விருவிருவெனப் பின்னியே பாலம் எழுப்பியிருப்பேன்" என்றான்.

"ஓ அப்படியா? ஒரு சைனியமே அதன் மீது சென்றால்கூடத் தாங்கும்படியா உன்னால் அம்புப் பாலம் அமைக்க முடியும்? அவ்வாறாயின் ஒன்று செய்யேன். எனக்குக்கூட அக்கரைக்குப் போய் அங்கு சிரஞ்ஜீவியாக உள்ள விபீஷணரைப் பார்க்க ஆசையாயிருக்கிறது. எப்படிப் போவதென்று தெரியாமலே குழம்பிக் கொண்டிருக்கிறேன். நீதான் அன்பு கூர்ந்து அம்புப்பாலம் அமைத்துக் கொடேன்" என்றான் மாருதி.

அதிசடுதியில் அர்ஜுனனும் அவ்வாறே அமைத்துக் கொடுத்துவிட்டான். தன் சதுரத்தைக் கண் தெரியக் காட்டும் ஆர்வத்தில்!

அநுமன் அதைக் கடக்கத் தொடங்குமுன், "நான் பயமில்லாமல் இதில் போகலாமல்லவா? அம்பு நொறுங்கி நான் கடலில் விழாமலிருக்க வேண்டுமே, அதனால் கேட்கிறேன்" என்றான்.

பார்த்தன் பரிஹாஸமாகச் சிரித்தான். "நீர் ஒருவர் என்ன? உம்மைப் போல கோடிப்பேர் கொண்ட படையே நிச்சயமாகப் போகலாம்" என்றான்.

ஆயினும் அநுமன் பயந்ததுபோல் நடித்து, பதம் பார்ப்பது போல் பாதவிரலில் நுனியை மட்டும் பாலத்தின் மீது வைத்தான்.

நொறுங்கி விழுந்தது நெடிய பாலம்!

நொறுங்கி விழுந்தது அர்ஜுனனின் அஹம்பாவமும்!

மௌனமாகவே பாடம் போதித்துவிட்ட மாருதியின் வடிவத்தையே தன் தலைக்கு மேலே தேர்க்கொடியில் பொறித்து அவன் தாளின் கீழிருந்தே அர்ஜுனன் ஞான கீதை பெற்றதும், கர்ம வீரனாகக் கௌரவரை வென்றதும்!

அநுமன் அந்த கீதைக்கும் பாமரர் மொழியில் விரிவுரை செய்ததை முன்பே கண்டோம். என்றாலும் இறுதி இலக்காகவே சாமானிய மாந்தர் ஞானவழியைக் கொள்ள இயலுமேயன்றி, அவர்களது நடைமுறையில் நடத்திக் காட்டக்கூடியது கர்மயோகமே! அதை அடக்கத்துடன் ஆண்டவனின் அடிமையாக ஆற்றுவதற்கு ஆதரிசம் படைப்பவன் அஞ்ஜனைச் செல்வன்! உலக மாந்தருக்கு அப்பாடத்தை தனது வாழ்க்கை உதாரணத்தாலேயே காட்ட வேண்டுமென்றுதான் 'ஸோஹம்' என்று பரமாத்மாவுடனேயே அத்வைதமாக ஒன்றியிருக்கக் கூடியவன் 'தாஸோஹம்' என்று ராமனின் அடிமையாகவே பணிபுரிந்தது!

வீமனும் விஜயனும் மட்டுந்தானா? வீணா கான நாதரஸத்தால் நாரணனைத் தம்மிலேயே கரைத்துக்கொண்ட நாதப் பிரம்ம நாரதருங்கூட அஹந்தை வாய்ப்பட்டபோது அநுமனிடமே அடக்கப் பாடம் பெற்றார்.

இங்கே விதவித வித்தகனாயிருந்த ஆஞ்சநேயஸ்வாமி கலையுலகிலும் தலைமை கொண்டதைக் காண்கிறோம்.

வீணையுடன் இழைந்து கானம் செய்தே அவன் தன்னை ராமனில்.ராமனைத் தன்னில் இழைத்துக் கொண்டவன். தோடி ராகம் அவனது 'ஃபேவரிட்'! 'ஹநும தோடி' என்றே அதற்கு மேளகர்த்தா வரிசையில் பெயர்.

அவனுக்கே இசைக் கலைத் தலைமையை உலகம் அளித்ததைக் கேட்ட நாரத ஸ்வாமிக்குப் பொறுக்கவில்லை. அவனைத் தம்முடன் இசைப் போட்டிக்கு அழைத்தார். கல்லும் கனியப் பாடுவது என்கிறோமே, அதைத் தம் இருவரில் எவர் மெய்யாலுமே நிரூபித்துக் காட்டுகிறாரோ அவரே வெற்றியாளர் என்றார். தம்மாலேயே அது சாத்தியமென அவருக்கு உறுதிப்பாடு!

போட்டியில் பெயரெடுக்கவா அநுமன் பாடியது? எனினும் நாத மஹா குரு, பாகவத சிரேஷ்டர் வலிந்து அறைகூவி அழைக்க வேறு வழியில்லாது ஒப்புக்கொண்டான்.

மலைப்பாங்கான திறந்த வெளியில் போட்டி நடந்தது. அநுமனிடம் தேவரிஷி, "உன் இசையில் குற்றங்கள் இருக்கும். அப்படிப்பட்ட இசையோடு போட்டியை முடித்தால் நாத தேவதைக்கு அபசாரம் இழைத்ததாகும். எனவே, நீ முதலில் பாடிவிடு. பிறகு நான் பாடி தோஷங்களுக்குப் பரிஹாரம் செய்துவிடுகிறேன்" என்றார்.

"தேவரீர் உத்தரவு!" என்று பவனசுதன் பவ்வியமாகக் கூறினான்.

கானம் தொடங்கினான். ஸ்ரீராமனுக்கு ரஸபானமாக நிவேதிக்கும் கானம்! தோடி ராகத்தில் புனித புனிதமான *'ஸ்ரீராம ஜயராம ஜயராம ஜய ஜய ராம'* என்ற மந்திர வாசகத்தை வித வித பக்தி பாவ நயங்களும் ராக பாவ நயங்களும் லயஜாதி நயங்களும் பிரிவற ஒன்றிய தேவகானமாக இசைத்தான். வீணை நாதத்துடன் இதயத் தந்தி மீட்டிப் பிறந்த குரலிசையைக் குழைத்துப் பாடினான், பாடினான் அப்படிப் பாடினான்! தான் பாடுவதாகவோ, வாத்தியம் வாசிப்பதாகவோ எள்ளளவும் எண்ணாது, அந்த ராமனே, *தன்னையே* வீணையாக மடியில் வளர்த்துக் கொண்டு 'அமுதகானம்' உளர்த்துகிறான் என்ற அநுபூதி நிலையில் 'நானை' உருக்கி நாதத்தைப் பெருக்கினான்.

அநுமன் மாத்திரமா உருகினான்? நாரதருமே உருகாதிருக்க முடியவில்லை!

அவரது 'நெஞ்சக் கனகல்' உருகியது மாத்திரமன்று. அவர்களைச் சுற்றியிருந்த மலைப் பாறைக்கற்களும் உருகலாயின!

அப்பாறைகளில் ஒன்றின் மீதுதான் நாரதர், மகத்துவம் மிக்கதால் 'மஹதீ' என்ற பெயர் பெற்ற தமது வீணையை வைத்திருந்தார்.

பாறை உருக உருக வீணை அதன் மேல் மட்டத்திற்கு இறங்கலாயிற்று.

கானம் நின்றது.

அதன் நிறைவான நிசப்தம் சூழலில் நிலவியது.

அநும–நாரதர்களின் மனமும் மவுனமாயிருந்த நிலை!

சிறிது போதுக்குப் பின் அந்நிலை கலைந்தது.

'அநுமன் பந்தய நிபந்தனையை நிறைவேற்றிவிட்டான்! ஆயினும் தானும் அவ்வாறே கல்லுருக கானம் செய்வோம்; வெற்றி–தோல்வியற்றதாகப் போட்டியை முடிப்போம்' என நாரத ரிஷி எண்ணினார். வேறே வழி?

தமது கானத்துக்கும், தமக்குமே உயிர்த்துணையாக இருந்த வீணையைப் பார்த்தார்.

அடடா! கானம் நின்றபின், முன்பு உருகிய பாறைகள் மீண்டும் இறுகி விட்டிருந்தன. மஹதீ வீணை அந்த இறுகலினால் கல்லில் புதைபட்டிருந்தது!

'அதனாலென்ன? நாம் குரலிசையாலேயே பாறையை உருக்கி அதை எடுத்துக் கொள்வோம்' என எண்ணினார் நாரதர்.

பாடினார், பாடினார், பாடிக்கொண்டேயிருந்தார்.

ஊ..ஹும்! பாறை கடும் பாறையாகவேதான் இருந்தது! கொஞ்ச நஞ்சம் அது இளகுவதாகக்கூட அறிகுறி காணவில்லை!

நாரதரின் நா, நா என்ன? மூலாதாரம் வரையில் நாதப் பாதை முழுதுமே, வறண்டது.

தோல்வியை ஒப்புக்கொள்ளும் பரிதாபக் கண்களால் அநுமனை நோக்கினார். மிகவும் பெரியவராதலால் வாய்விட்டும் அத்தோல்வியை ஒப்புக்கொண்டார்.

அஞ்ஜலியஸ்தராக அஞ்ஜனைபுத்ரனைப் பார்த்து, "தலை கனக்குமிடத்தில் கலைக்கு இடமில்லை என்று எனக்குக் கற்பித்த குரு ராய! இவ் வீணைதான் எனக்கு உயிர்த்துணை. அதை இப்போது நீயே மீண்டும் பாடிப் பாறையை உருக்கி அதிலிருந்து மீட்டு, உன் திருவிரலால் மீட்டி எனக்கு அளித்து நான் வீணனாகாதபடி ஆசீர்வதிப்பாய்!" என்று வேண்டினார்.

பதைபதைத்த அநுமன், "தாங்களே நாதயோக மூலகுரு. அதோடு வால்மீகி பகவானுக்கு ராமபிரானின் மகிமையைக் கூறி அவரை ராமாயணம் பாடச் செய்து அடியாருலகுக்கே முதற் குருவாக இருப்பவர். எளியேனுக்குப் பெருமை சேர்க்கவே தேவரீர் தங்களைச் சிறுமைப்படுத்திக் கொண்டதாகவே உணர்கிறேன்" என்று மனப்பூர்வமாகக் கூறி, மீண்டும் கானம் செய்தான். தர்ம நியாயமாக, வீணையின் துணையின்றிக் குரலிசையாக மட்டுமே பாடினான்.

கல்லும் உருகிற்று.

மாருதியின் திருக்கரம் பட்ட மஹதீ மஹரிஷியின் கரத்திற்குப் போயிற்று.

கும்பகோணம் ராமஸ்வாமி கோயிலில் கொலு வீற்றிருக்கும் மூலவரின் திருச் சந்நிதியில் அநுமன் ஐயனை வீணாகானத்தால் மகிழ்விக்கும் அரிய கோலத்தைக் காண்கிறோம்.

ஸங்கீதத்தில் நான்கு மரபுகள். அவற்றிலொன்று நாரத மதம் என்பது; இன்னொரு ஹநுமான் மதம்.

'அநுமான் கடகம்' என்று ஓர் இசையகராதியும், தாண்டவ மாருதியாகி 'ஹநுமத் பரதம்' என ஒரு நாட்டிய – நாடக நூலும் எழுதியதாகச் சொல்வர்.

உலக மாந்தரிடம்தான் அவனுக்கு எப்பேர்ப்பட்ட உபகார சிந்தை! உலகில் தர்மம் தழைக்கப் பாடுபடுவதற்கு அவனே உதாரண புருஷன் என்பார் காஞ்சி முனிவர். அவனது பேருதவியாலேயே ஏற்பட்ட ராமராஜ்யம்தானே தர்மராஜ்யத்திற்கே மறுபெயராக உள்ளது?

தர்ம(புத்திர)ரின் தர்ம ஆட்சி ஏற்பட அர்ஜுனனின் வீரமே பேருதவி புரிந்ததெனில், அவ்வீரத்திற்கு உரமூட்டியது அவனது வெற்றித்துவஜத்தில் விளங்கிய மாருதியே!

பிற்காலத்தில் சரித்திரத்திற்குள் நன்றாகவே அகப்படும் சிவாஜியின் ஆட்சி தர்மராஜ்யமாகப் புகழ் கொண்டிருக்கிறது.



அந்தப் பெருமகனை அடி அடியும் வழி நடத்தியவர் அவனது குருவாக விளங்கிய சமர்த்த ராமதாஸர். அவர் நமது 'ஒரிஜினல்' ராமதாஸரின் அவதாரமே!

அநுமனின் உயிருக்குயிரான மந்திரமான *'ஸ்ரீராம ஜயராம ஜயஜயராம'* என்ற த்ரயோதசாக்ஷரீயை நாடெங்கும் பரப்பியே அவர் தர்ம மின்சாரம் பாய்ச்சினார். ராமன் எந்த தர்மத்திற்கு விக்ரஹமோ அதற்கு ஜயம் பெற்றுக் கொடுத்தார்.

'த்ரயோதசாக்ஷரி' என்றால் பதின்மூன்று எழுத்துகளைக் கொண்ட மந்திரம். "பதின்மூன்று கெட்ட எண் என்பது மேலைநாட்டினர் கருத்து. நமக்கு அது நன்மையானதே. சிவபெருமானின் மந்திரம் பஞ்சாக்ஷரீ, திருமாலின் மந்திரம் அஷ்டாக்ஷரீ. இரண்டு எண்ணிக்கையையும் கூட்டினால் பதின்மூன்றுதானே? அப்போது அது அதிர்ஷ்டமானதுதானே?" என்பார் மஹா பெரியவாள்.

த்ரயோதசாக்ஷரீயால் நாட்டுக்குப் பெருநலம் புரிந்த பெருந்தகையர் பலருண்டு.

உதாரணமாக, சமீப காலத்தில் கஞ்சங்காட்டில் (பப்பா) *ராமதாஸ்* என்றே பெயர் பெற்ற மஹான் இருந்தார். மூலவன் போலவே சக்தி யாவற்றையும் அடக்கி எளிமையாக இருந்தார்.

இன்றும் இருக்கிறார், அந்தப் பப்பாவின் பாப்பாவான, 'தெய்வக் குழந்தை' எனப்படும் அருமந்தச்சீடர்! பப்பாவிடமிருந்து பெற்ற த்ரயோதசீ ஜபமே தவமாக இயற்றிப் பரம்பொருள் அன்றி ஒன்றில்லை என்ற பரம அநுபூதி பெற்றவர்!

ஆயினும் மூலவன் போலவே தாழ்மட்டத்திற்கு எளிமையுடன் இறங்கி வந்து மக்களின் விதவிதத் துன்பங்களைத் துடைக்கும் பெரும்பணியைப் பணிவுடன் ஆற்றிவருகிறார். முக்கியமாக த்ரயோதசீயை எல்லாவிடத்தும் எல்லாரிடத்தும் பரப்பியே இதனை முடிக்கிறார்.

அநுமனின் அமுதான உயிரின் வேரிலேயே ஸாரமாகப் பாயும் அப்பேரமுத மந்திரத்தை பேதம் பாராமல் யாவருக்கும் பிக்ஷையிடும் வள்ளல் எளிமையின் எல்லையில் நின்று தம்மைப் பிச்சைக்காரன் என்றே சொல்லிக் கொள்கிறார்!

காற்றின் குமாரனான மாருதியை நினைவூட்டி, நம் கர்வத்தை எல்லாம் புயற்காற்றாக வீசி விசிறித் தள்ளுவதற்காகவோ என்னவோ, ஒட்டிக்கு இரட்டியாக விசிறிகளை வைத்திருக்கும் அண்ணாமலையின் அன்புமலை யோகி ராம் ஸுரத் குமார்தான்!

வாழைத் தோட்டங்களில் தனிப்பிரியம் கொண்டு வாழும் வாதாத்மஜன் வாழையடி வாழையாக இது போலத் தன் பிரதிநிதிகளை அனுப்பி உலகுள்ளவும் தர்மம் அடியோடு அழிவுறாமல் ராம நாமத்தால் ரட்சித்துக் கொடுப்பான்! சற்றும் சந்தேகமில்லை.

*ஸ்ரீராம ஜயராம ஜய ஜய ராம!* ●



# அய்யர் அவர்கள் ஆற்றிய அரும்பணி



டாக்டர் உ.வே. சாமிநாதய்யர் மேற்கொண்ட பணிகள் இன்றும் நிறைவு பெறவில்லை. தன்னுடைய பதிப்பில் விளங்காத பகுதி என்று விட்டுச் சென்றதை யாரும் விளக்கவில்லை. கிடைக்காத பாட்டுகள் என்று விட்ட குறையை நிரப்பியவரும் இல்லை. புலனாகவில்லை என்று விட்ட வரிகள் புலப்படுத்தப்படவில்லை. அப்பெரியார்விட்டுச் சென்ற பணியை நிறைவேற்றுவதே நாம் அய்யர் அவர்களுக்குச் செலுத்தும் நன்றியாகும்.

தமிழ்த்தாத்தா என்றழைக்கப்படும் டாக்டர் உ.வே.சாமிநாதய்யர் அவர்கள் ஆற்றிய அரும்பணியைப் பகவான் ரமண மகரிஷி அவர்களே பாராட்டியுள்ளார். ஒருமுறை அய்யர் அவர்கள் திருவண்ணாமலை சென்று ரமண மகரிஷியைக் கண்டு பின்வருமாறு விண்ணப்பித்துக் கொண்டார். "நான் ஏட்டுச் சுவடிகளோடும் தமிழ் மொழியோடும் தான் தொடர்பு கொண்டவன். எனக்குப் போதிய மனச்சாந்தி இல்லை. எனக்கு அருள் வழங்க வேண்டும்" என்று கூறினார். அதற்கு ரமண மகரிஷி "நீங்கள் செய்வது உலகுக்கு உபகாரமான காரியம். நீங்கள் சொந்தத்துக்கு எதுவும் தேடிக்கொள்ளவில்லை. பிறருக்குப் பயன்படும் காரியங்களைச் செய்வதில் தவறில்லை. அதுவே சிறந்த யோகம். உங்களுடைய அரிய தொண்டினால் எத்தனையோ பேர் தமிழ் அறிவு பெறுவார்கள். இதுவும் ஒரு துறவுதான்" என்று ஆசி மொழிந்தார்கள். ஐயர் அவர்களின் தொண்டை, பகவான் "ஒரு துறவு" என்று கணித்த பின் மற்றவர்கள் மேலும் கூறுவதற்கு இடமில்லை.

தமிழ் மொழிக்காக அய்யர் அவர்கள் தன்னை அர்ப்பணித்துக் கொண்டதற்கு ஓர் உதாரணம் கூறலாம். ஐயர் அவர்கள் ஆசிரியர் பதவியிலிருந்து ஒய்வு பெற்றவுடன் அவரது நண்பர் ஒருவர் "இதுவரை தாங்கள் தமிழுக்காகப் பாடுபட்டது போதும். இனித் தாங்கள் ஈஸ்வர பக்தியில் ஈடுபடவேண்டும்" எனக் கோரியிருந்தார். அதற்கு அய்யர் அவர்கள் "எனது வாழ்நாள் முடியும் வரை – எனது

முன்னாள்
குடியரசுத்தலைவர்
திரு.ஆர். வெங்கட்ராமன்.

உடலில் சிறிதேனும் பலம் உள்ளவரை நான் தமிழ் ஆராய்ச்சி ஒன்றில்தான் ஈடுபடமுடியும். எனக்கு அதுவே இன்பம். தமிழ் ஆராய்ச்சிப் பணியே எனக்கு உயர்ந்த மோட்ச சாதனம்" என்று பதில் எழுதி விட்டார்.

அய்யர் அவர்களின் தமிழ் ஆர்வத்தை இன்று நினைத்தாலும் மலைப்பாக இருக்கிறது. இதை அவர்கள் எழுதிய 'என் சரித்திரம்' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

'ஒரு நல்ல காரியத்திற்கு எத்தனை தடைகள் உண்டாகின்றன? நான் தமிழ் படிக்க வேண்டுமென்று தொடங்கிய முயற்சி வறுமையாலும், வேறு காரணங்களாலும் தடைப்பட்டு தடைப்பட்டு, சோர்வு அடைந்தது. ஆனாலும் அப்படியே நின்று விடவில்லை. பந்துக்களில் பலர் நான் சம்ஸ்கிருதம் படிக்க வேண்டுமென்று விரும்பினார்கள். இராமாயண, மகாபாரத, பாகவத காலக்ஷேபம் செய்து சம்ஸ்கிருத வித்வானாக வேண்டுமென்பது அவர்கள் கருத்து. வேறு சில கனவான்களோ நான் இங்கிலீஷ் படித்து விருத்திக்கு வரவேண்டும் என்று எண்ணினார்கள். உதவி செய்வதாகவும் முன் வந்தார்கள். நான் உத்தியோகம் பார்த்துப் பொருள் ஈட்ட வேண்டுமென்பது அவர்கள் நினைவு. என் தந்தையார் சங்கீதத்தில் நான் வல்லவனாக வேண்டுமென்று விரும்பினார். அவர் விருப்பம் முற்றும் நிறைவேறவில்லை. எல்லாருடைய விருப்பத்துக்கும் மாறாக என் உள்ளம் இளமையிலிருந்தே தமிழ்த் தெய்வத்தின் அழகிலே பதிந்துவிட்டது. மேலும் மேலும் தமிழ்த்தாயின் திருவருளைப் பெறவேண்டுமென்று அவாவி நின்றது. சம்ஸ்கிருதம், தெலுங்கு, இங்கிலீஷ் ஆகியவற்றுள் ஒன்றேனும் என் மனத்தைக் கவரவில்லை. சில சமயங்களில் அவற்றில் வெறுப்பைக் கூட அடைந்தேன்.

திருமணம் ஆன பின்பு கூட, பொருள் ஈட்டும் மனம் ஏற்படவில்லை. கல்யாணத்திலும் பொருள் வருவாயிலும், ஊர்ப் பிரயாணத்திலும் எனக்கு லாபம் இருந்ததாகத் தோன்றவில்லை. எனக்குத் தமிழ் ஒன்றுதான் நாட்டம். தமிழ்தான் எனக்குச் செல்வம். அதுதான் என் அறிவுப் பசிக்கு உணவு. இந்த நிலைமை மாறவே இல்லை' என்று கூறுகின்றார்.

அய்யர் அவர்களின் குரு பக்தி, அன்னாரின் மொழிப் பற்றிற்குச் சற்றும் குறைந்ததன்று. மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையிடம் பாடம் கேட்க வேண்டுமென்ற ஆர்வம், அய்யர் அவர்களின் மனத்தில் பலமாக ஊன்றிவிட்டது. பிள்ளை அவர்களும் ஏற்றுக்கொண்டவுடன் "என் தவம் பலித்தது. இதனால், நான் குதூகலித்தேன்" என்றும் 'என் சரித்திர'த்தில் கூறியுள்ளார். இதனால் ஆசிரியர், மாணாக்கர் இடையே ஆழ்ந்த அன்பு மலர்ந்து விரிந்தது. அத்துடன் தனது ஆசிரியர் ஆழம் காண முடியாத ஒரு கல்விக்கடல் என்பதையும் உணர்ந்தார். மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களை நாலரைக் கம்பன் என்று அக்காலத்தில் கூறுவதுண்டு. கம்பனை விட நாலரை மடங்கு அதிகம் கவிதைகளைப் பிள்ளை அவர்கள் பாடியுள்ளார் என்பது பொருள். பாடம் கேட்டது மட்டுமின்றி அம்மகாகவி பாடல்களைச் சொல்லச் சொல்ல ஓலையும் எழுத்தாணியும் கொண்டு அய்யர் அவற்றைப் பிழையற எழுதி வந்தார். இதனை, மகாபாரதத்தைக் கூறிய வியாச பகவானுக்கும், அதை எழுதிய விநாயகருக்கும் ஒப்பிடலாம். அய்யர் அவர்களின் மேன்மைக்கு ஆதார சுருதியாக விளங்குவது அவரது குருபக்தியே.

அய்யர் அவர்களின் புலமையை அறிந்து அவரைக் கும்பகோணம் அரசினர் கல்லூரியில் பேராசிரியராக நியமித்தனர். இது அய்யர் அவர்களின் வாழ்க்கையில் ஒரு முக்கிய கட்டமாகும். புதை பொருள் ஆராய்ச்சியாளர்கள் கடலாலும், பூகம்பத்தாலும், போர்களாலும் அழிந்து மண்மேடிட்ட பகுதிகளைத் தோண்டி நம்முடைய பழங்கால வரலாறுகளையும், கலை, கலாசாரங்களையும் வெளிப்படுத்துவது போல அய்யர் அவர்கள் நம்முடைய பழங்காலச் சுவடிகளையும், இலக்கியங்களையும் தேடித் தேடி அலைந்து சேகரித்து இத் தலைமுறைக்குச் சேர்ப்பித்தது தமிழ் மொழிக்கு அவர்கள் செய்த செயற்கரிய சேவையாகும். தமிழர்களின் இலக்கியச் செல்வம் எவ்வளவு தொன்மையானது – உயர்வானது என்பதை எடுத்துக்காட்டிய பெருமை சாமிநாதய்யர் அவர்களுக்கே உரித்தாகும்.

நமது மக்களின் அறியாமையால், சுவடிகளை ஆற்றில் விட்டவர்களும் தீயிலிட்டவர்களும் பலர். அய்யர் அவர்களோ சுவடிகளைத் தேடித் தேடி ஊர் ஊராக அலைந்தார். அப்பொழுது உதவியவர்கள் சிலர்; உதாசீனப்படுத்தியவர்கள் பலர். பணம் பெற்றுச் சுவடிகளை வழங்கியவர் பலர். ஏமாற்றியவர் சிலர்.

ஆனால், அய்யர் அவர்கள்,

*மெய் வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்*
*எவ்வவர் தீமையும் மேற்கொள்ளார்.*
*செவ்வி அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்*
*கருமமே கண்ணா யினார்.*

என்ற பாடலின் இலக்கணத்துக்கு ஓர் இலக்கியமாக விளங்கினார்.

பழஞ்சுவடிகளைப் படிப்பது எளிதன்று. பாட பேதக் கடலுக்குக் கரை காண இயலாது. எழுத்துக் கோணங்களால் ஏற்பட்ட விபரீதங்கள் எண்ணற்றன.

இது கொம்பு, இது சுழி என்று பிரித்தறிந்திட முடியாத நிலை. மெய் எழுத்துகளுக்குப் புள்ளிகள் இரா. நகரத்துக்கும், காலுக்கும் (ந,ா) வேற்றுமை தெரியாது.

'சாபம் சரபமாகத் தோன்றும் – சரபம் சாபமாகத் தோன்றும்' என்று அய்யர் அவர்களே எழுதியுள்ளார்கள். இதுபோன்ற இன்னும் பல இடர்ப்பாடுகளைப் பற்றியும் கூறியுள்ளார்கள். இவ்வளவு இடர்களைத் தாண்டிப் பதிப்புகள் வெளிவந்தன என்றால் அய்யர் அவர்களைப்

பகீரதனுக்குத்தான் ஒப்பிடவேண்டும்.

ஆழ்கடலில் மூழ்கி முத்தெடுப்பது போல, தமிழ்ச்சுவடிகளின் ஆழ்கடலில் மூழ்கி அவர் எடுத்த முத்துகள் தான் –

சீவக சிந்தாமணி, எட்டுத் தொகை, பத்துப்பாட்டு – முதலிய அழகுமணி முத்துகள்; சிலப்பதிகாரம் – மணிமேகலை போன்ற எழில்மிக்க மணியாரங்கள்.

சீவக சிந்தாமணி ஒரு சமண நூல். பழுத்த சைவராகிய அய்யர் அவர்களுக்குச் சீவக சிந்தாமணியில் பல பகுதிகள் விளங்கவில்லை. எனவே, தக்க சமண வல்லுநர்களை அணுகி, அவர்கள் வாயிலாகப் பல விளக்கங்களைத் தெரிந்துகொண்டார். அவ்வாறு கேட்கும் கேள்விகளைக் கண்டு, ஒரு ஜைன சமயப் புலமை பெற்ற பெண்மணி, அய்யர் அவர்களை ஜைனர் என்றெண்ணி 'ஒரு பவ்ய ஜீவன் போல் இருக்கிறதே' என்று கூறினார்களாம். பக்குவமடைந்த ஆன்மாக்கள் ஜைன மக்களால் 'பவ்யஜீவன்' என்று அழைக்கப்படுவர்.

சாமிநாதய்யர் காலத்தில் தமிழ்ப்புலமை எல்லாச் சமயத்தாரிடமும் மேலோங்கியிருந்தது என்பதை அய்யர் அவர்களே விவரிக்கின்றார். "காத்தூர் முகம்மதியர் என்ற தலைப்பில் அவர்களோடு பேசுகையில் அவர்களுக்கு இருந்த தமிழ் அபிமானத்தின் மிகுதியை உணர்ந்து வியந்தேன். கம்ப ராமாயணம், அரிச்சந்திர புராணம் முதலிய நூல்களில் பல அரிய பாடங்களை அவர்கள் தங்கு தடையின்றிச் சொல்லி மகிழ்ந்தார்கள். தமிழ்ச்சுவையை நுகர்வதில் அவர்கள் உள்ளம் என் உள்ளத்தைக் காட்டிலும் அதிக முதிர்ச்சி பெற்றிருந்தது" என்று கூறுகிறார்.

பழுத்த பருவத்திலும் தனது தமிழ்த் தொண்டை இடைவிடாது நிறைவேற்றி வந்த பெருமை அய்யர் அவர்களைச் சாரும்.

அய்யர் அவர்கள் உயர்ந்த அறிவாளி மட்டுமல்லர்; சிறந்த பண்பாளர்.

தேவாரம், திருவாசகம் போன்ற பக்திப் பாடல்களில் மிகுந்த ஈடுபாடுள்ளவர் – நன்றி மறவாதவர். அன்பே உருவெடுத்து வந்த மகான். தனக்கென்று வாழாத பெருந்தகை.

இவ்வளவு சிறப்புகள் படைத்த டாக்டர் உ.வே. சாமிநாதய்யர் அவர்களுக்கு உருவச்சிலை இந்த நூலகத்தில் அமைந்திருப்பது சாலப் பொருந்தும்.

டாக்டர் உ.வே. சாமிநாதய்யர் மேற்கொண்ட பணிகள் இன்றும் நிறைவு பெறவில்லை. தன்னுடைய பதிப்பில் விளங்காத பகுதி என்று விட்டுச் சென்றதை யாரும் விளக்கவில்லை. கிடைக்காத பாட்டுகள் என்று விட்ட குறையை நிரப்பியவரும் இல்லை. புலனாகவில்லை என்று விட்ட வரிகள் புலப்படுத்தப்படவில்லை. அப்பெரியார் விட்டுச் சென்ற பணியை நிறைவேற்றுவதே நாம் அய்யர் அவர்களுக்குச் செலுத்தும் நன்றியாகும்.

*(தமிழ்த்தாத்தா டாக்டர் உ.வே.சாமிநாதய்யர் சிலை திறப்பு விழா நிகழ்ச்சியில் ஆற்றிய உரையிலிருந்து)*

## அடையாளம்

பி.வி. கிரி



கல்லுக்கு அடையாளம் உறுதி - நல்ல
கவிதைக்கு அடையாளம் இனிமை
வில்லுக்கு அடையாளம் வளைதல் - நல்ல
வேலுக்கு அடையாளம் கூர்மை!

காட்டுக்கு அடையாளம் மரங்கள் - நல்ல
காற்றுக்கு அடையாளம் தவழ்தல்
வீட்டுக்கு அடையாளம் வாசல் - நல்ல
வீதிக்கு அடையாளம் தூய்மை!

நிழலுக்கு அடையாளம் தொடர்தல் - நல்ல
நிலத்துக்கு அடையாளம் பசுமை
உழவுக்கு அடையாளம் விளைச்சல் - நல்ல
ஊருக்கு அடையாளம் ஒழுங்கு!

கோவிலுக்கு அடையாளம் சிற்பம் - நல்ல
கோட்டைக்கு அடையாளம் அகழி
சேவலுக்கு அடையாளம் கொண்டை - நல்ல
சேனைக்கு அடையாளம் வீரம்!

மயிலுக்கு அடையாளம் தோகை - நல்ல
மானுக்கு அடையாளம் பாய்ச்சல்
வெயிலுக்கு அடையாளம் காய்தல் - நல்ல
வேங்கைக்கு அடையாளம் சீற்றம்!

நிலவுக்கு அடையாளம் குளுமை - நல்ல
நீருக்கு அடையாளம் தெளிவு
மலருக்கு அடையாளம் மணமாம் - நல்ல
மனிதருக்கு அடையாளம் நேயம்!





ஸ்ரீ ராமானுஜர் (ஸ்ரீபெரும்புத்தூர்)
போட்டோ – டி.ஆர். சீனிவாசன்

# ஸ்ரீ இராமானுஜரை நேரில் காண்கிறோம்

படவிளக்கம்: ஸ்ரீவே

புகழ்பெற்ற வைணவ ஆசாரியார் இராமானுஜர் 120 ஆண்டுகள் வாழ்ந்தவர். இதனால் அவர் வாழ்ந்த காலத்தில் (கி.பி. 1017–1138) மூன்று தலைமுறைகளாவது தோன்றி மறைந்திருப்பார்கள்.

தமது பக்தியாலும், சொல்வன்மையாலும் ஈடிணையற்ற மகானாகத் திகழ்ந்தவர் இவர்.

இவரது காலத்திலேயே இவர் தெய்வமாகக் கொண்டாடப் பெற்று விட்டார்.

இவர் நீண்டகாலம் வாழ்ந்திருந்த ஊர்களான திருநாராயணபுரத்திலும், ஸ்ரீ பெரும்பூதூரிலும் பக்தர்கள் இவரது பிரிவை விரும்பாமல் இவரது சிலை செய்து வணங்க விரும்பினார்கள்.

இந்த விருப்பத்திற்கு எதிராகப் போக முடியாது என்பதை இராமானுஜர் உணர்ந்தார்.

எனவே திருநாராயணபுரத்தில் தம்மையே ஒரு விக்கிரக மாக அவதரிப்பித்துக் கொண்டார்.

இதன் மூலம் திருநாராயணபுரம் மக்களோடு தாம் எப்போதும் வாழ்வதாகக் கூறினார்.

அவர் பிறந்த ஸ்ரீ பெரும்பூதூரிலும் விக்கிரகம் வேண்டும் என பக்தர்கள் விரும்பினார்கள்.

கந்தாடையாண்டான் என்னும் பக்தர் இது குறித்து திருவரங்கத்தில் உள்ள இராமானுஜரை அணுகினார்.

"சுவாமியின் திருமேனி சிலை ஒன்றை ஸ்ரீ பெரும்பூதூரில் பிரதிஷ்டிக்க வேண்டும்" என்று விண்ணப்பித்தார்.

அதற்கு இராமானுஜர் அனுமதித்தார். உடனே கந்தாடையாண்டான் வல்லவனான ஒரு சிற்பியை அழைத்து வந்தார்.

அந்தச் சிற்பி இராமானுஜரைச் சேவித்து அவரது மேனி வடிவைத் தமது மனகள் ஏற்றுக் கொண்டார்.

இராமானுஜர் போலவே ஒரு சிலையைச் செய்து அந்தப் பெரியவர் முன் கொணர்ந்தார். இராமானுஜர் அந்த விக்கிரகத்தை தமது திருக் கண்களால் பார்த்தார். தமது சக்தி எல்லாம் அந்த விக்கிரகத்துள் புகும்படி, அதை நெருக்கமாக ஆலிங்கனமும் செய்து கொண்டார்.

அந்த விக்கிரகத்தை, தை மாதம் பூச நட்சத்திரத்தில் பிரதிஷ்டை செய்யும்படி ஒலையில் எழுதிக் கொடுத்தார்.

கந்தாடையாண்டானும் அந்த விக்கிரகத்தை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு ஸ்ரீ பெரும்பூதூருக்குக் (இராமானுஜர் அவதரித்த தலம்) கொண்டு வந்தார்.

இராமானுஜர் நியமித்த அதே நாளில் அந்த விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்தார்.

அந்த விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்யும் -அன்று திருவரங்கத்தில் இருந்த இராமானுஜருக்கு திருமேனி (உடல்) தளர்ந்து விட்டது. பலமும் குறைந்தது.

இது என்ன காரணம்? என்று இராமானுஜர் யோசித்துப் பார்த்தார்.

'ஓகோ! இது நமது விக்கிரகம் பிரதிஷ்டை செய்யப்படும் நாள். அன்றோ!' என்று உணர்ந்து அதிர்ச்சி அடைந்தார்.

ஸ்ரீ பெரும்பூதூரில் இருந்த இராமானுஜரது பக்தர் முதலியாண்டான் என்பருக்குச் செய்தி போயிற்று. திருவரங்கத்துக்கு விரைந்து வந்து இராமானுஜருக்கு சேவை செய்யத் தொடங்கினார்.

தூரமே ஆலிங்கனம் செய்த அந்த அந்த இராமானுஜரது விக்கிரகச் சிலையே இங்கே காணப் பெறுகிறது.

சரித்திரமும், சமயமும் ஒன்று கலந்த மகத்தான சம்பவம் இது.

ஸ்ரீ பெரும்பூதூரில் சென்று இந்த விக்கிரகச் சிலையைத் தரிசிக்கும்போது, 800 ஆண்டுகளுக்கு முன் அந்த விக்கிரகத்தை ஆலிங்கனம் செய்த மகான் இராமானுஜரையே தரிசித்தவர்கள் ஆவோம்.

# வாழும் வழிகாட்டும் பழங்குடி மக்கள்

## எம்.எஸ். உதயமூர்த்தி



அமெரிக்க நாட்டில் 'பியூப்லோ இந்தியர்கள்' எனபபடும் பழங்குடி மக்கள் இருக்கிறார்கள். இன்னமும் அவர்கள் அமெரிக்க நாகரிகத்திலிருந்து தனித்தே வாழ்ந்து வருகிறார்கள். அவர்களுடைய பண்பாடும், பழக்க வழக்கங்களும், அமெரிக்க வாழ்க்கை முறையிலிருந்து, முற்றிலும் வேறுபட்டவை.

சமீபகாலத்தில் அவர்களுக்குக் கல்வி தரவும் அவர்களது பொருளாதாரத்தை உயர்த்தவும் முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. அவர்கள் குழந்தைகளுக்கு அமெரிக்கக் கல்வி தரப்பட்டது. 'வாலி பால்', கூடைப்பந்து, கால்பந்து விளையாட்டுகள் எல்லாம் கற்றுக் கொடுக்கப்பட்டன. இந்த விளையாட்டுப் போட்டிகளில் ஒரு முக்கிய விஷயம் தெரிய வந்தது. அதாவது இந்த 'பியூப்லோ' இளைஞர்கள் நன்றாகப் பந்து விளையாடினார்கள். ஆனால் வெற்றி பெறுவதில் – எதிர் அணியினரைத் தோல்வி பெறச் செய்வதில் – நாட்டம் காட்டவில்லை. விளையாட்டை அவர்கள் போட்டியாக கருதவில்லை. தானோ, தன் அணியோ ஜெயிக்க வேண்டும் என்ற எண்ணம் இல்லாமல் விளையாட்டை விளையாட்டாகவே கருதி விளையாடினார்கள்.

'இவர்களிடம் போட்டி மனப்பான்மை இல்லை, இவர்கள் எப்படி வாழ்வில் முன்னேறப் போகிறார்கள்?' என்கிற கவலை ஏற்பட்டது அமெரிக்க ஆசிரியர்களுக்கு.

அமெரிக்க முறையோ, போட்டியை வளர்க்கிறது. ஒருவரை ஒருவர் மிஞ்ச வேண்டும் என்ற வேகத்தை மனத்தில் ஏற்படுத்துகிறது. உள்ளே இருக்கும் மனிதனைத் தட்டி எழுப்பி 'நான் வெற்றிபெற வேண்டும். அவனை விட நான் பெரிய ஆள் என்பதை நிரூபிக்க வேண்டும்' என்ற மனப்போக்கின் அடிப்படை விதைகள் இங்கே ஊன்றப்படுகின்றன.

மாறாக, 'விளையாட்டு ஓர் ஆனந்தம் தரும் கூட்டு அனுபவம்' என்ற மனோபாவத்துடன் பியூப்லோ இந்தியக் குழந்தைகளை வளர்த்திருக்கிறார்கள்.

'பியூப்லோக்கள் தனக்கென்றே வாழ்வதில்லையா?' என்ற கேள்வி எழக் கூடும். அவர்கள் தனக்கெனவும் வாழ்கிறார்கள். தங்கள் குடும்பத்திற்காக வேட்டையாடச் செல்கின்றனர். எனினும் பொதுவான விஷயங்களில், பலரும் சம்பந்தப்படும் கூட்டு விஷயங்களில் – ஒருவனுக்கு வேட்டையில் ஒன்றும் கிடைக்கவில்லை எனில் – பகிர்ந்து கொள்கிறார்கள். விளையாட்டை எல்லாருடைய ஆனந்தத்திற்காகவும் விளையாடுகிறார்கள்.

காலத்தால் முற்பட்ட சீன வாழ்க்கை முறையை லாட்சு என்ற சீன ஞானியின் கவிதைகள் காட்டுகின்றன.

ஞானி லாட்சு சொல்கிறார்:

'ஆசையும் அதிருப்தியும், பேராசைக்கும், போட்டிக்கும் வழிவகுக்கின்றன. எனவே நல்ல வாழ்க்கை நெறிகள் கடைப்பிடிக்கப்படும் நாட்டில் பந்தயக் குதிரைகள், பந்தய மைதானத்தில் ஓடிப் போட்டியிடுவதில்லை. உரமாக உபயோகப்படும் சாணத்திற்காக மேயவிடப் படுகின்றன. போட்டி மனப்பான்மையில் குதிரைகள் மைதானத்தில் ஓடி வெற்றியடைவதைவிட, அவற்றின் சாணம் நிலத்திற்கு உரமாகப் பயன்படுவது நல்லது. பிறர் விரும்புவதை தனக்குச் சொந்தமாக்கிக் கொள்ளும் பெருமைக் குணத்தை மிஞ்சியது எதுவுமில்லை.'

லாட்சூ சொல்வதைக் கவனியுங்கள்,

பியூப்லோ மக்களின் மற்றுமொரு குணம்: 'இயற்கையோடு ஒன்றி வாழ என்பது – பொதுவாக உணவுக்காக வேட்டையாடுவார்களே தவிர, மிருகங்களைக் கொல்வதை, ஒரு வீரச் செயலாகக் கருத மாட்டார்கள், மலையையும், நதியையும், மண்ணையும், மரத்தையும் தெய்வமாகக் கொண்டாடுபவர்கள் அவர்கள்.

இன்றைய நாகரிக உலகமானது விஞ்ஞான வசதிகளால் நிறைந்திருக்கிறது. நன்மைகள் பல; நாம் அறியாமலே தீமைகளையும் அது குவிக்கிறது. இதன் விளைவாக, பூச்சி மருந்துகளால் காடுகளில் வசந்த காலம் இன்று பூப்பதில்லை, ரீங்காரமிடும் வண்டுகள், பட்டாம்பூச்சிகள் செத்துவிட்டன.

அதிக பால் பெறும் முயற்சியால், மாட்டுத் தீவனத்தில் கலக்கும் பல்வேறு ரசாயனப் பொருள்களின் விளைவாக, அந்த மாட்டு மாமிசத்தை உண்ணும் மனிதன் புற்றுநோய்க்கு ஆளாகிறான். எரிபொருளை நாம் அதிகம் உபயோகிப்பதால் பூமியின் வெப்பம் அதிகமாகிறது; மூச்சுவிடும் காற்று நச்சாகிறது. வான மண்டலத்தில் ஓஸோன் படலத்தில் ஓட்டை ஏற்பட்டு மனித வாழ்வைப் பாதிக்கும் நிலை ஏற்பட்டிருக்கிறது.

பைபிளிலே ஒரு வாசகம் வருகிறது: "உலகின் மீது ஆதிக்கம் செலுத்து." (Dominate the Earth).

இன்றைய மனிதன் இயற்கையுடன் ஒத்து வாழ்வதற்குப் பதிலாக இயற்கையை வெல்ல முயல்கிறான். இயற்கையைத் தன் இஷ்டப்படி ஆளலாம் என எண்ணுகிறான். இது அவனுக்கே தீமையாக முடிகிறது.

இந்த உலகமும் பிரபஞ்சமும் மனிதனுக்காகவே ஏற்படுத்தப்பட்டவையல்ல; மனிதனும் வாழ்வதற்காகப் படைக்கப்பட்டதே தவிர, மனிதனுடையது மட்டுமே, என்பது உண்மையன்று. இப்பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் ஒன்றுக்கொன்று உதவியாக, ஒன்றை ஒன்று சார்ந்து வாழவே படைக்கப்பட்டிருக்கின்றன.

சீன ஞானி லாட்சூ சொல்கிறார்:

*இயற்கையை மாற்ற விரும்பினால்*
*வெற்றியடைய மாட்டோம் நாம்.*
*உலகம் ஒரு புனிதமான பாத்திரம்*
*அது பரீட்சிக்கப்படுகின்ற விஷயமன்று.*
*மாற்ற முயல்பவன் மாள்கிறான்.*
*ஆட்கொள்ள விரும்புபவன் அழிகிறான்.*
*உலகில் எல்லாம் – சமநிலையில் – இயங்குகின்றன.*

பெரியோர்கள் இயற்கையைப் போற்றுகிறார்கள்; இதமாக.

பியூப்லோ மக்களின் ஒரு சிறந்த குணம், வாழ்வில் எளிமை; பழகுவதில் ஆணவமின்மை. வீடு கட்டி வாழ்ந்த இனம் தான், எனினும் தேவையை அனுசரிக்கிறார்களே யன்றி ஆசையை முன் வைத்து தேவைக்கு மேற்பட்டதை நாடுவதில்லை. இதை ஒரு குணமாகவே எண்ணி வாழ்ந்து வருகிற மக்கள் அவர்கள்.

மகாத்மா காந்தி, குஜராத்தியர்களுக்கே உரித்தான பஞ்சகச்ச வேஷ்டியும், மேலே போர்வையும் தொப்பியும் அணியும் பழக்கமுள்ளவர். ஆனால் மதுரையில் வயலில் வேலை செய்யும் ஏழைகளைப் பார்த்த போது மனம் மாறி, இடுப்பை மறைக்க ஒரு துண்டு போதும் என்று அரை வேட்டி கட்டத் தொடங்கியவர். "இப்படிப்பட்ட அரைநிர்வாணப் பக்கிரி சென்று இங்கிலாந்து நாட்டின் அரசரைப் பார்ப்பதா?" என்ற பேச்சு வந்த போது காந்தி சொன்னார்: " எனக்கு அரைமுழ வேட்டி போதும். ஏனெனில் அரசர் எனக்கும் சேர்த்து உடை உடுத்தி இருக்கிறார்" என்று.

'எளிமை' என்பது பிறரிடம் கண்டு போற்றப்பட வேண்டிய ஒரு விஷயமாகக் கருதி பொது வாழ்க்கை நகர்கிறதே தவிர, எளிமை இந்திய சமுதாயத்தின் இயல்பான குணமாக மாறவில்லை.

அதே போல இத்தாலியில் செயிண்ட் பிரான்சிஸ் ஆஃப் அசிசி போன்ற மகான்கள் எளிமையாக இருந்தார்களே



தவிர போப்போ, மடாதிபதிகளோ தலைவர்களோ இல்லை. அமெரிக்காவும் மற்ற ஐரோப்பிய நாடுகளும் படாடோபத்திலும், தேவைக்கு மேற்பட்ட ஆசைகளிலும் தான் உழன்று கொண்டிருக்கின்றன.

எளிமை என்பது ஓர் இனிமையான குணம், சமத்துவத்தின் செயல் விளக்கம். இயற்கையை, தேவைக்கு மட்டுமே உபயோகிக்கும் உயர் பண்பு. தற்பெருமையையும் படாடோபத்தையும் வெறுப்பது, பணிவின் அடையாளம். மனிதனை மனிதனிடமிருந்து அந்நியப்படுத்தும் படாடோபப் பண்புக்கு எதிரானது.

ஆனால் இன்றைய உலகம் எப்படிப் போய்க் கொண்டிருக்கிறது? அமெரிக்க நாடு உலகின் எரிபொருளில் சரிபாதியைத் தனக்கு உபயோகித்துக் கொள்கிறது. விஞ்ஞானத் தொழில் நுட்பத்தாலும் வணிகத்தாலும் பணம் குவிந்த நாடாக, இயற்கைச் செல்வங்களை அதிகம் உபயோகப்படுத்தும் நாடாக இருக்கிறது.

சீன ஞானி லாட்சூ சொல்கிறார் – கன்னத்தில் அறைவது போல.

'தர்க்கவாதத்தையும் தந்திரங்களையும் கைவிடுங்கள். மக்கள் இதனால் நூறு பங்கு பயனடைவார்கள். சாமர்த்தியத்தையும் லாப நோக்கையும் விடுங்கள். உலகில் திருடர்களும் கொள்ளைக்காரர்களும் குறைவார்கள்

திறந்த புத்தகமாக வாழுங்கள், எளிமையாக இருங்கள். சுயநலம் குறைத்து, ஆசைகளுக்கு எல்லை வகுத்து. படித்தவராக நடித்தது போதும், துன்பங்களுக்கு முடிவு காண்போம்.'

இன்றைய கல்வி, மனிதனை என்ன செய்திருக்கிறது? ஆணவக்காரனை, வாய் ஜாலத்தால் நியாயத்தை மறைப்பவனை அல்லவா உருவாக்கி இருக்கிறது? தேவைகளை மீறி ஆசையின் பின்னால் ஓடுகிறானே அவன் எங்கே போய் நிற்பான்? ஆசைகளுக்கு எல்லை ஏது? இதைத்தான் நாம் இன்று சிந்திக்க வேண்டும்.

இன்றைய மனிதனின் வாழ்க்கை நெறிகளைக் கவனித்தால் மனித சமுதாயம் பாதை தவறிப் போய்க்கொண்டிருப்பது தெரிய வரும். இன்றைய வாழ்க்கை நெறிகளை மறுபரிசீலனை செய்ய வேண்டிய காலகட்டத்தில் மனிதன் நிற்கிறான். பழங்குடி மக்களிடமிருந்து பாடம் கற்றுக் கொள்வது தவறன்று; இழிவன்று. நமக்கு வேண்டியது திறந்த மனமும் உண்மை காணும் பேரவாவும் தான்.

☆☆

## முள்ளொன்று தைக்கிறது!

தங்க சிவராசன்



முள்ளொன்று தைக்கும் போதில்
முத்தமிடும் சுகம் உணர்ந்தேன்!
வண்டொன்று கொட்டும் போதில்
தண்ணென்று மனம் குளிர்ந்தேன்!

(முள்)

பூநாகம் தீண்டும் போதில்
பூவாக நான் மலர்ந்தேன்!
வாள்ால் அறுக்கும் போதில்
தாளாத போதையில் தளர்ந்தேன்!

(முள்)

சாட்டையடி விழும் போதில்
சரச போகத்தில் மிதக்கிறேன்!
தோட்டா நெஞ்சைத் துளைக்கையில்
துள்ளி இன்பத்தில் குதிக்கிறேன்!

(முள்)

இத்தனையும் நானோர் சித்தனாய்
இங்கே எப்போது உணர்கிறேன்?
பித்தனையும் கவிஞன் ஆக்கும் – உன்
சித்திர விழிகளைத் தொடும்போதே!

(முள்)

புரட்சிகள் என்பவை, எப்போதும் பொறுமையின் எல்லையைக் கடந்த மனிதனின் கோபாவேசத்திலோ, போர்க் குணத்திலோதான் விளையும் என்பது சரியன்று.

வாடுகிற பயிரைக் கண்ட போதெல்லாம் மனம் மிக வாடும் ஆன்ம நேயம் மிகுந்த ஓர் உள்ளத்திலும், சில நேரங்களில் புரட்சியின் பூபாளமும், போர் முழக்கமும் ஒலிக்கக் கூடும். ஆனால் அந்தப் புரட்சி அறப்புரட்சியாக இருக்கும். அந்தப் போர் அறப் போராக விளங்கும்.

அதற்கொரு சரித்திர சாட்சியாகத் திகழ்பவர் வடலூர் அருட் பிரகாச வள்ளலார் அவர்கள் ஆவார்கள்.

கடந்த 19ஆம் நூற்றாண்டில் தமிழகத்தின் பல துறைகளில் அவரது தாக்கம் மிக அழுத்தமாகப் பதிந்தது. ஆவேசம் அருளாகச் செயல்பட்டிருக்கிறது. ஆக்கம் இனிய தமிழ்ப் பாடலாக எட்டுத் திசைகளிலும் முழங்கியிருக்கின்றது.

கண் மூடிப் பழக்கமெல்லாம் மண் மூடிப் போவ தற்கு வாதிட்டுப் போரிட்டவர் வள்ளலார். ஆயினும் அவர் ஓர் அப்பழுக்கற்ற இறைத் தொண்டராக இயங்கினார். சத்திய

# வள்ளலார் செய்த அறப்புரட்சி



## இராம வீரப்பன்

வேட்கை மிகுந்த சன்மார்க்கவாதியாக – சைவ சித்தாந்த விற்பன்னராக – விளங்கினார்.

அவரது காலத்தில் அதுவே ஒரு புரட்சிதான். ஏனெனில் அறநெறியும், ஆன்மிகமும், பிரிவினை பேசும் மதமும், மடமை மிகுந்த நம்பிக்கைகளும், கோட்பாடுகளும் இரண்டறப் பிரிக்க முடியாமல் பின்னிப் பிணைக்கப்பட்டிருந்த காலம் அது.

'ஆயிரம் மலர்கள் மலரட்டும்' என்று நம் சமகாலத்தில் ஒரு புரட்சியாளர் கூறினார். மதங்களும் ஒரு வகையில் மலர்கள்தான். ஆனால் முட்செடியில் பூத்த மலர்கள். ஆம் ரோஜா மலர். எனவே இயல்பாக அவற்றுக்கே உரிய முட்கள் அவற்றினிடம் உண்டுதான்.

ஆனால் எல்லா மதங்களிலுமுள்ள வியாபார உணர்வுள்ள மதவாதிகள் என்ன செய்தார்கள் என்றால், அதிலுள்ள இதமான இதழ்களையெல்லாம் பிய்த்தெறிந்துவிட்டு, மணமளிக்கும் மகரந்தங்களை உதிர்த்துவிட்டு, மிச்சமுள்ள வெறும் 'மூட நம்பிக்கைகள்' எனும் முட்களால் சமுதாயத்தைக் குத்தி ரத்தம் வடியச் செய்து கொண்டிருந்தார்கள். மக்களை பயமுறுத்திச் சூறையாடிக் கொண்டிருந்தார்கள்.

இந்த சரித்திர விளைவாகத்தான் வள்ளலாரைப் போன்ற அறப் புரட்சியாளர்கள், போர்க் குணம் கொண்ட மனித நேயமிக்கவர்கள், வெடித்து வீறு கொண்டெழ நேரிட்டது. இந்தத் துடிப்பும், வெறுப்பும், வெளிப்பாடும், விசுவரூபமும் மதங்களுக்கு உள்ளேயும் நிகழ்ந்தன; மதங்களுக்கு வெளியேயும் நிகழ்ந்தன.

தமிழகத்தில் மதங்களுக்கு உள்ளே நிகழ்ந்ததற்கு உதாரணம்தான் திருமூலர், திருநாவுக்கரசர், திருஞான சம்பந்தர், இராமானுஜர் மற்றும் சில சித்தர்கள். சென்ற நூற்றாண்டில் வடலூர் வள்ளலார், இந்த நூற்றாண்டில் மகாகவி பாரதியார் போன்றவர்கள்.

மதங்களுக்கு வெளியே நிகழ்ந்ததற்கு முன் உதாரண மாகத் திகழ்ந்தவர்கள்தான் தந்தை பெரியார், பாவேந்தர் பாரதிதாசன், பேரறிஞர் அண்ணா ஆகியோர்.

ஆனால் புரட்சிமிகு சிந்தனையாளர்களாகத் திகழ்ந்த வள்ளலாரைப் போன்றவர்களைக் கூட, ஆசாரம் மிகுந்த மதவாதிகள் வெறும் சாமியார்களாகத் தான் பார்த்தார்கள். அவர்களைத் தங்கள் குறுகிய மதச் சிமிழுக்குள்தான் சிறை வைத்தார்கள். புலமை மிகுந்த, பக்திச்சுவைசொட்டப் பாடிய கவிஞர்களாகத்தான் மக்களுக்கு அறிமுகப் படுத்தினார்கள்.

வள்ளலார் விஷயத்தைப் பொறுத்தவரையில், இந்த மரபுச் சிறையை முதலில் உடைத்து, அவரை மக்கள் மன்றத்தில் கொண்டு வந்து ஒரு சீர்திருத்தவாதியாக, மதப் புரட்சியாளராக அறிமுகப்படுத்தியவர் தந்தை பெரியார்.

அவரது புரட்சிக் கண்ணோட்டத்தைப் பற்றி அக்காலத்தில் பெரியார் பல மேடைகளில் உரையாற்றியிருக்கிறார். அவரைப் பின்பற்றித்தான் பின்னாளில் சாமி சிதம்பரனார், திருக்குறள் முனுசாமி போன்றவர்கள் புதிய கோணத்தில் வள்ளலாரை உணர்ந்து "வடலூராரும் ஈரோட்டாரும்" போன்ற நூல்களை எழுதினார்கள். ஆனால் இந்தப் பணி தொடராமல் நின்றுவிட்டது.

உண்மையில் வள்ளலார் யார்?

"வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபில் நானொருவன்" என்று அவர் அவையடக்கமாகத் தன்னைக் கூறிக் கொண்டாலும், பல வகையில் ஒரு புதிய தத்துவத்தை– ஒரு புதிய உலகத்தை – உருவாக்குவதற்கு அவர் ஓயாமல் உழைத்தவராவார்.

அவர் கண்ட சமரச சன்மார்க்கமே அவர் இலட்சியத்தை நமக்கு அடையாளம் காட்டும். அப்பெயரின் பொருள் கூட அவரது மனத்தைப் படம் பிடித்துக் காட்டுகிறது.

| | | |
|---|---|---|
| சமரசம் | = | சன் + மார்க்கம் |
| சமரசம் | = | சமத்துவம், பொதுவுடைமை |
| சன் | = | சத்தியம் என்ற சொல்லின் திரிபு |
| மார்க்கம் | = | வழி |

'எங்கும், எதிலும், எப்போதும் பொது நோக்கம் நிலவிட வேண்டும். சத்தியம் எனும் வாய்மை வழியில் மக்கள் நடந்திட வேண்டும்' – இது அவரது இலட்சியத்தின் அடிப்படையாக விளங்கியது.

தொடக்கத்தில், *"எல்லா மனிதர்களும் சமம்"* என்று தொடங்கி, இறுதி நிலையில் எல்லா *உயிர்களும்* சமம் என்ற கொள்கையாக அவரது தத்துவம் பரிணமித்தது. அதுதான் அவர் கண்ட *'ஆன்ம நேய ஒருமைப்பாடு'.* அதை நிலை நிறுத்தவே 'ஜீவகாருண்ய ஒழுக்கத்தை' அவர் வகுத்தார்; வற்புறுத்தினார். அந்தத் தத்துவமாகவே வாழ்ந்தார்.

அவர் வகுத்த ஆன்மிகப் பாதையின் தனித்தன்மையை, அவரது வார்த்தைகளிலேயே சித்திரிப்பது சிறப்பாக இருக்கும்.

திருவருட் பிரகாச வள்ளலார் என்னும் சிதம்பரம் இராமலிங்கம், 'எல்லாமுடையாருக்கு' விடுத்த விண்ணப்பம் ஒன்று. அதில் அவர் வேண்டுவது என்னவென்றால்...

*"எல்லாமுடைய அருட் பெருஞ்சோதி அற்புதக் கடவுளே!"*

"இது தொடங்கி எக்காலத்தும் சுத்த சன்மார்க்கத்தின் முக்கியத் தடைகளாகிய *சமயங்கள், மதங்கள், மார்க்கங்கள்* என்பவற்றின் ஆசார, சங்கற்ப, விகற்பங்களும் – *வருணம், ஆசிரமம்* முதலிய உலகாசார சங்கற்ப விகற்பங்களும் எங்கள் மனத்தில் பற்றாவண்ணம் அருள் செய்தல் வேண்டும்..."

விண்ணப்பத்தின் தொடக்கத்திலேயே தான் வழக்கமான மதவாதியல்லன்; தான் 'மதமெனும் பேய் பிடியாதிருக்கும்' ஒரு மனிதாபிமானி; இன்னும் கூறினால் உயிரபிமானி என்று பிரகடனப்படுத்தி விடுகிறார். பின்தான் இலட்சியம் பற்றிப் பேசுகிறார்...

*"...சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய இலட்சியமாகிய ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை எங்களுக்குள் எக்காலத்தும், எவ்விடத்தும், எவ்விதத்தும், எள்ளளவும் விலகாமல் நிறைந்து விளங்கச் செய்வித்தருளல் வேண்டும்..."*

இவ்விதம் தம் உயிர் இலட்சியமாக அவர் கருதிய இந்த 'ஆன்மநேய ஒருமைப்பாடு' என்ற கொள்கை எத்தன்மைத்தது என்றும், அதன் பயனென்ன என்பதையும் விளக்கி ஒரு பாடலில் கூறுகிறார்.

*'எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்*
*தம்முயிர் போல் எண்ணி உள்ளே*
*ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்*
*யாவர் அவர் உளந்தான் சுத்த*
*சித்துருவாய் எம் பெருமான் நடம் புரியும்*
*இடம் என நான் தெரிந்தேன்...'*

எல்லா உயிர்களையும் தம் உயிர் போல் நினைத்து சம உரிமை வழங்குபவரின் மனத்தில்தான் இறைவன் வாழ்கிறார் என்பது, அவர் தேர்ந்து, ஆய்ந்து பெற்ற தெளிவு.

இதுதான் அவரது ஆன்ம நேயக் கொள்கைக்கு அவரே அளிக்கும் சிறப்பான விளக்கம்; அடிப்படை.

அந்தக் கொள்கை வழி நிற்பவரின் உள்ளம்தான் இறைவன் வாழும் இல்லம் என்று அவர் வரையறுத்துக் கூறுகிறார்.

'ஜீவகாருண்ய ஒழுக்கம்' என்ற தம் உரைநடை நூலில் மேலும் இதை வலியுறுத்தி விளக்கம் தருகிறார்...

"ஜீவகாருண்யம் ஆன்மாக்களின் இயற்கை விளக்கமாதலால், அந்த இயற்கை விளக்கமில்லாத ஜீவர்களுக்குக் கடவுள் விளக்கம் அகத்திலும், புறத்திலும் வெளிப்படவே மாட்டாது." இது அவரது திட்டவட்டமான கொள்கை.

ஆதியில் திருவொற்றியூரிலே தொடங்கி, முடிவில் வடலூர் சித்தி வளாகத்தில் முழுமை பெற்ற அவரது படிப்படியான பரிணாமத்தின் உச்ச கட்டமிது! அதி உன்னத நிலையிது!

உலகில் எந்தத் தத்துவ ஞானியும் இதற்கு மேல் செல்ல முடியாது; சென்றதுமில்லை!

இத்தகைய ஓர் அருட் பெரும் நிலையை மனத்தினால் அடைந்தவருக்கு – வாழ்க்கை நெறியாகக் கொண்டவருக்கு – இன்றைய நிலையில் நாம் நடைமுறைப்படுத்தும் சாதி, மத பேதங்களோ, அவற்றால் விளையும் சண்டை சழக்குகளோ வேதனையளிக்காதா?

அவர் 'சாகா நிலை' பெற்ற ஓர் அமரர் என்பதால், உண்மையாகவே அதைப் பற்றிக் கவலைப்படுகிறார். என்ன பயன்? இன்றும் ஒயவில்லையே.... நெருப்பாக அல்லவா கொடுமைகள் பரவிக் கொண்டிருக்கின்றன?

அற்புதமான தத்துவங்கள் மலர்ந்த உத்தம பூமியில், இன்றைய அவலச் சூழ்நிலை எப்படி ஏற்பட்டது? ஏன் ஏற்பட்டது? இன்னும் ஏன் தொடருகிறது?

கொஞ்சமும் பாரபட்சமற்ற நிலையில் யோசித்தால் கூட, இந்தப் பாதகம் நாத்திகத்தால்தான் விளைந்ததெனக் கூற முடியாது. ஏனெனில் வள்ளலாரை ஒரு வித்தியாசமான – புதிய கோணத்தில் பார்க்கவும், ஆராயவும் கற்றுக் கொடுத்தவரே தந்தை பெரியார்தான்! ஆனால் அவரும் பின்னாளில் வள்ளலாரைக் கைவிட்டுவிட்டார்.

ஆனால் பரம ஆத்திகர்கள், வள்ளலாரின் பக்தர்கள் என்று தங்களை ஒவ்வொரு தலைமுறையிலும் விளம்பரப்படுத்திக் கொண்டவர்களால்தான் அவர்களையும் அறியாமல் இந்த வினை விதைக்கப்பட்டது. அதனால் விபரீதம் விளைந்தது.

வள்ளலாரின் சீடர்கள், அவர் 'தண்ணீரில் விளக்கெரித்த' கதையைப் பறைசாற்றிய அளவுக்கு, தமிழ்ச் சமுதாயத்துக்கு அவராற்றிய சீர்திருத்தத் தொண்டைப் பற்றிக் கூறவில்லை. வள்ளலார் ஓர் அறையில் நுழைந்து சித்தியடைந்தார் என்பதைப் பேசிப் பேசி வியந்தார்கள். ஆனால் அவர் உயிரோடு வாழ்ந்தபோது செய்த வரலாற்றுச் சாதனைகளை அடியோடு மறந்துவிட்டு, எல்லாரும் பக்தி வெள்ளத்தில் மூழ்கிப் போய்விட்டார்கள்.

வந்த விபத்து அதனால்தான்! அவரது பாடல்களிலேயே அவர்கள் பாகுபாடு செய்தார்கள்.

"வருவார் அழைத்து வாடி வடலூர் வட திசைக்கே..." போன்ற பக்திச் சுவை ததும்பும் பாடல்களைப் பாமரரையும் அறிய வைத்தார்கள். நல்லதுதான், ஆனால்...

*நால்வருணம் ஆசிரமம் ஆசாரம் முதலா*

*நவின்ற கலைச் சரிதமெலாம் பிள்ளை விளையாட்டே...*

*இருட்சாதி தத்துவ சாத்திரக் குப்பை*

*இரு வாய்ப் புன்செயில் எருவாக்கிப் போட்டு*

*மருட்சாதி சமயங்கள் மதங்களாச் சிரம*

*வழக்கெலாம் குழி கொட்டி மண் மூடிப் போட்டு...*

என்பது போன்ற பல சமுதாய சீர்திருத்தப் பாடல்களை ஏறத்தாழ இருட்டடிப்பே செய்து விட்டார்கள். அழிவே அங்குதான் தொடங்கிற்று.

தமிழ்நாட்டில் முதன் முதலில் – தமிழ், சம்ஸ்கிருதம், ஆங்கிலம் என்று மும்மொழிப் பாடத் திட்டத்திற்கு வித்திட்டவர் வள்ளலார்தாம்.

பொதுமக்களுக்கு திருக்குறள் வகுப்பை நடத்தியவர் வள்ளலார்தாம். தமிழ் நாட்டின் முதல் கல்வெட்டு ஆராய்ச்சியாளர் வள்ளலார்தாம்.

தமிழகத்தில் முதன் முதலாக சாதி, சமயம், மதம் போன்ற வேற்றுமைகளைக் கடந்து நின்று 'சுத்தசமரச சன்மார்க்க சங்கம்' என்று ஓர் அமைப்பையே உருவாக்கியவர் வள்ளலார்தாம்!

இதுபோல் 'முதன்மை' பெற்ற பல பரிமாணங்கள் அவருக்குண்டு. அவற்றில் சிலவற்றைப் பற்றிய செய்திகள் கூட, முறையாக மக்களிடம் போய்ச் சேராமல் செய்து விட்டார்கள்.

இது யாருடைய தவறு? இவ்விதம் பல துறைகளிலும் அவர் பதித்த அறப் புரட்சியின் சுவடுகளைத் தடமற்று அழித்தவர் யார்? ஏன்? ஆன்மிகவாதிகள் மட்டுமன்றி, சமுதாய சீர்திருத்தவாதிகளும் இதற்குப் பதில் கூறக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

அந்தத் தவறுகளின் விளைவுகளாகத்தான் இன்றைய சமுதாயம் கொடுமைகளை அனுபவித்துக் கொண்டிருக்கிறது.

# நீ இருக்கையிலே...



சுபத்ரா கோவிந்தராஜன்

கலங்கி மனம் நோவதுண்டோ நீயிருக்கையிலே, கண்ணா
நீயிருக்கையிலே,
கண்ணனெனும் பெயருடைய தாயிருக்கையிலே,
கருணையுடன் காத்திடுவாய் கார்முகில் வண்ணா,
கழலிணையைச் சரணடைந்தேன் எந்தனண்ணலே!

சேயழுதால் தாயின் மனம் பொறுப்பதில்லையே கண்ணா,
பொறுப்பதில்லையே,
மாயவனே, வெந்துயரைத் துடைப்பதில்லையோ?
தாயெனவே சேவடியில் தஞ்சமடைந்தேன்
தயையுடனே தமியவளைத் தாங்கிடுவாயா?

ஆக்குவதும் ஆட்டுவதும் நீயேயல்லவா, கண்ணா,
நீயேயல்லவா?
தீய்க்குவினை போக்குவதுன் திருவருள்தானே!
அடியவளின் பிறவிப்பிணி நீக்குமருந்தே,
அகமகிழ்ந்து மனமிரங்கி ஆதரிப்பாயோ?

கோதையவள் கேட்டவரம் கொடுக்கவில்லையா,
கண்ணா, கொடுக்கவில்லையா?
பேதையெந்தன் குரலுனக்குக் கேட்கவில்லையா?
அமுதமான திருவடியின் பெருமையினாலே
ஆட்கொண்டால் நின் தகைமை குறைந்து போகுமோ?

தயவுடனே துரோபதிக்கு வரமளித்தாயே,
கண்ணா, வரமளித்தாயே!
மயங்குமிந்த மனத்திற்குமே அமைதி தாராயோ!
அன்புடனே அரக்கனுக்கும் அபயமளித்தாய்,
அன்பதனை நம்பிவிட்டேன் அருள் பொழிவாயே!
மலையதனைத் தூக்கி நின்று மன்பதை காத்தாய், கண்ணா,
மன்பதை காத்தாய்.
மதியிலாத மங்கையொரு பெரியபாரமா?
ஆதியில்லா அந்தமில்லா வேதமுட்பொருளே!
ஏதுமில்லா ஏழைதனைக் காத்தருள்வாயே!

வஞ்சமிலா விஜயனுக்குத் தஞ்சமளித்தாய் கண்ணா,
தஞ்சமளித்தாய்;
பஞ்சையெந்தன் வாழ்வினிலே பற்றுமாவேயோ!
நெஞ்செலாம் நெக்குருகி உன்னை நினைத்தேன்,
பஞ்சமிலாப் பரிவுகாட்டி பதமளிப்பாயா?

"ஆதிமூலம்" என்றழைத்த ஆனையைக் காத்தாய் கண்ணா,
ஆனையைக் காத்தாய்;
நாதியில்லா நங்கைதனை ஏற்றுக் கொள்வாயா?
சினமெதுவும் கொள்ளாதுன் சிறிய குழந்தையை
மனமுடனே அணைப்பதுவுன் மகிமையல்லவா?

அன்னையுநீ, அத்தனுநீ, அகிலமும் நீயே, கண்ணா,
அகிலமும் நீயே;
உன்னையலால் வேறுகதி எங்கெனக்குளது?
ஆயர்குலமா மணியே, ஆருயிர் அமுதே,
ஆதரிப்பாய், அரவணைப்பாய், அடியவளெனையே.

மனிதநேயம் வளர்க்க, மக்களிடையே பாசத்தையும், நேசத்தையும் நிலை நிறுத்த வள்ளலார் விதைத்து வளர்த்த செழுமையான ஆன்மிக அறப் பயிர்களை நாம் நிரந்தரமாக இருட்டில் வைத்தே அறியாமையால் அழித்து விட்டோம். அதனால் சாதிக் கொடுமை, மதப் பகைமை போன்ற உயிர் கொல்லும் 'பார்த்தீனியச் செடிகள்' நம் பாதைகளிலெல்லாம் சுற்றிச் சூழ்ந்துவிட்டன.

எங்கும், எப்போதும் அறம் அழிந்தால் மறம் பெருகும். நன்மைகள் நலிவுற்றால் தீமைகள் தீயாகச் சூழும். வாழ்வில் அன்பு வழிகளுக்கு மதிப்பில்லையானால் வன்முறைகள்தாம் வரவேற்புப் பெறும்; வாகை சூடும்.

அதுதானே இயற்கை விதி, அந்த 'விதியைத்' தான் வேறு வழியில்லாமல் 'விதியே' என்று இன்று இந்த நாடும், சமுதாயமும் சுமந்து கொண்டிருக்கின்றன.

ஒளிமயமான இத் 'தீபாவளித் திருநாளி'லாவது, இந்த இருண்ட நிலையிலிருந்து நாம் விழிப்புப் பெற்று பிரகாசமான வெளிச்சத்தைக் காணவேண்டும்.

'அருட்சோதி' வள்ளலாரின் முழு ஒளியையும், தத்துவ முடிவுகளையும் உலகத்தின் முன் ஒளிவு மறைவற்று நாம் அறிமுகப்படுத்த வேண்டும். அவரது அற நெறிகளில் நம் சமுதாயம் வேரூன்றித் தழைத்துச் செழிக்கச் செய்ய வேண்டும்.

இது எனது பணிவான விருப்பம்! வேண்டுகோள்! நம்முடைய தலையாய கடமையும் கூட!

**

# மார்க போலோ பார்த்த பாண்டியன்!

அலெக்ஸாண்டருக்குப்பின் நம் நாட்டோடு மேனாட்டின் தொடர்பு வளர்ந்தது. ரோமப் பேரரசு விழ்ந்ததும் மேனாட்டில் இருள் மூடியது.

இந்தியாவின் மீது அந்தக் கொலம்பசும் வாஸ்கோட காமாவும் புறப்படுவதற்கு முன்பே, கீழை நாடுகளைப் பற்றி அறியும் அறிக்கையை மேனாட்டில் தூண்டியவர் மார்க்கோ போலோ!

இவர் இத்தாலியின் வெனிஸ் மாநகரத்தில் 1254 ஆம் ஆண்டில் பிறந்தார். இவருடைய தந்தையும் சிறிய தந்தையும் உயர் குடியிற் பிறந்த வணிகர்கள். 1260 ஆம் ஆண்டில் இவ்விருவரும் சீனாவுக்குப் புறப்பட்டுச் சென்றார்கள்.

இருபத்தி ஐந்து ஆண்டுகள் சுற்றிய பின் 1293 ஆம் ஆண்டில் தங்கள் ஊருக்குத் திரும்பினார்கள். ஆனால் ஜெனோவாவுக்கும் வெனிசுக்கும் நடந்த போரில், மார்க்கபோலோ சிறைப்பட்டார். வெற்றி வெறியில் மயங்கி மார்க்கபோலோவைத் தலைவாங்காமல் இவரைக் கொண்டு ஒரு நல்ல காரியம் செய்தார்கள்.

மார்க்கபோலோ சொன்ன கதைகளை எல்லாம் 'ருஸ்தி செவ்லோ' என்பவரைக் கொண்டு எழுத வைத்தார்கள்.

இன்று அது அரிய வரலாற்றுப் பொக்கிஷமாக விளங்குகிறது. நோபல் பரிசு பெற்ற 'பெர்ல்பர்க்' அம்மையார் இவரை 'முதன் முதல் தோன்றிய உலகக் குடிமகன்' என்கிறார்.

மேனாட்டிலிருந்து புறப்பட்டுக் கீழை நாடெல்லாம் சுற்றி வந்த ஒரு பரந்த உள்ளம், எதிர்ப்பட்டவற்றை எல்லாம் குழந்தை மனத்தோடு கண்டு களித்த ஊக்கம், அதனை எல்லாருக்கும் சொல்ல வேண்டும் எனப் பொங்கி எழுந்த ஆர்வம் ஆகியவையே இவருடைய நூலை இன்னும் வாழவைத்துக் கொண்டிருக்கிறது.

நா. மகாலிங்கம்

சீனப் பேரரசர் குப்லாகானைப் பற்றி இவர் எழுதியது இன்று ஒரு புராணம் போலவே ஆகிவிட்டது.

இவர், நம் தமிழ் நாட்டிற்கும் வந்திருக்கிறார். இங்கே தாம் கண்டவற்றை எழுதி வைத்திருக்கிறார். அதில் பல அரிய செய்திகளை எழுதியிருக்கிறார்.

சோழப் பேரரசு வீழத் தொடங்கிய போது கட்டற்றுக் கிடந்த தமிழ்நாட்டையே இவர் கண்டார்.

தமிழ்நாட்டை 'மாபர்' என்று அன்றைய அரேபியக் கப்பலோட்டிகள் வழங்கி வந்தார்கள். சுந்தரபாண்டியன் சீரும் சிறப்பும் பெற்றிருந்த காலம் அது.

தமிழ் நாட்டினைப் பற்றி மார்க்கோபோலோ எழுதியுள்ளது இது:

"இலங்கைத் தீவினை விட்டு மேற்காக 60 மைல் கப்பலில் போனதும் மாபர் என்ற பெரிய நாட்டினை அடைவீர்கள். ஒரு தீவன்று! பெரிய இந்தியக் கண்டத்தின் ஒரு பகுதியே ஆகும். உலகில் செல்வத்திலும் மாட்சிமையிலும் இது மிகச் சிறந்த நாடாகும். இதனை நான்கு அரசர்கள் ஆண்டு வருகிறார்கள்.

இவர்களில் தலையானவன் பெயர், "செந்தர் பண்டிய" (சுந்தர பாண்டியன்) என்பதாகும். இவனுடைய நாட்டில், மாபர்க்கும் ஜைலன் (சிலோன்–இலங்கை) தீவுக்கும் இடையே உள்ள வளைகுடாவிலேதான் முத்துக் குளிக்கும் துறை இருக்கிறது. அங்கே தண்ணீர் 12–15 ஆள் ஆழத்திற்கு மேல் இராது. சில இடங்களில் இரண்டு ஆள் ஆழத்திற்கு மேல் இல்லை. முத்துக் குளிக்கும் தொழில் கீக்காணும் முறையில் நடைபெறுகிறது.

சில வணிகர்கள் கூடி தனித்தனிக் கூட்டாக வர்த்தகக் குழுக்களாகச் சேர்வார்கள். இவர்கள் பல அளவில் ஏராளமான கப்பல்களையும் படகுகளையும் வேலைக்கு வைத்துக் கொள்வார்கள். இவற்றில் தரைப்பாரஞ் சாம்பிக் கயிறுகளும் உண்டு. இவற்றால் நங்கூரம் பாய்ச்சிவிட்டுக் கப்பலில் எளிதில் ஏறிக் கடலில் போகலாம்.

இந்தக் கப்பல்கள், கடலில் குளித்து முத்துள்ள சங்குகளை எடுக்கும் கலையில் வல்லவர்களை வலைப்பை வழியாகக் கடலுக்கு மேலே கொண்டுவரும்.

இந்தப் பைகள் முத்துக்குளிப்போர் உடம்பில் கட்டப்பட் டிருக்கும். இவர்கள் தண்ணீருக்குள் மூச்சுவிட முடியாதபோது நீர் மட்டத்தின் மேலே வருவர்; சில நேரம் கழித்து மறுபடியும் குளிப்பர். இப்படிப் பலமுறை நிகழும்.

இவர்கள் இந்த வேலையில் நாள் முழுதும் விடாப்பிடியாக ஈடுபடுகிறார்கள். எல்லா நாடுகளுக்கும் வேண்டும் அளவு சங்குகளை இவர்கள் ஒரு பருவத்திற்குள்ளேயே தங்கள் முயற்சியால் சேர்த்து விடுவார்கள்.

இந்த வளைகுடாவில் உள்ள முத்துத் துறையில் கிடைக்கும் முத்துகள் பெரும்பான்மையும் உருண்டையாகவும் நல்ல ஒளியுடையனவாகவும் இருக்கின்றன.

பெருவாரியாகச் சங்கெடுக்கும் இடம் தமிழ் நாட்டிலேயே இருக்கிறது. இதற்குப் 'பெதேலா' என்று பெயர். இங்கிருந்து இந்தத் துறை தெற்கே 60 மைல் வரை நீண்டு செல்கிறது.

இந்த வளைகுடாவில் ஒரு வகைப் பெரிய மீன்கள் நிறைந்து கிடக்கின்றன. இவை குளிக்கிறவர்களை அடிக்கடி கொன்று விடுகின்றன. இதற்காகச் சில மந்திரவாதிகளை இந்த வணிகர்கள் தங்களோடு அழைத்துச் செல்கிறார்கள்.

இவர்கள் பிராமண வகுப்பைச் சேர்ந்தவர்கள். தங்களுடைய மந்த்ர வித்தையால் இந்த மீன்களை வசியம் செய்து தங்கள் விருப்பப்படி நடக்கச் செய்து ஒரு கேடும் விளையாதபடி இவர்கள் தடுக்கிறார்கள்.

முத்துக் குளிப்பது பகலில்தான் நடக்கும். ஆகையால், இவர்கள் மாலையில் மந்திர சக்தியைச் செலுத்தாமல் விட்டு விடுவார்கள். இராக் காலத்தைப் பயன்படுத்திக் கொண்டு முத்துச் சங்குகளைத் திருட வந்து குளிக்கும் வஞ்சகர்கள், மந்திரக் கட்டில்லாத இந்த மீன்களிடையே நடமாட அஞ்சி, அவ்வாறு செய்யத் துணிய மாட்டார்கள் என்பது இவர்களுடைய எண்ணம். இந்த மந்திரக்காரர்கள் இதைப் போல எல்லா வகையான பறவைகளையும், விலங்குகளையும் வசியம் செய்யும் கலையிலும் கை தேர்ந்தவர்கள்.

முத்துக் குளிப்பது ஏப்ரல் மாதத்தில் தொடங்கும்; மே மாதம் மத்தியில் வரை நடைபெறும். இந்தத் தொழிலில் ஈடுபடும் உரிமையை அரசனிடமிருந்து விலைக்கு வாங்கிக் கொள்ள வேண்டும்.

இந்தத் தொழிலில், வருவாயில் பத்தில் ஒரு பங்கு அரசனுக்குத் தரும் விலையாகும். மீன்களை வசியம் செய்யும் மந்திரக்காரனுக்கு இருபதில் ஒரு பங்கு சேரும்.

எனவே, முத்து வணிகர்களுக்கு இதனால் பெரும் ஊதியம் உண்டு.

மேலே சொல்லிய பருவ காலம் முடிவதற்குள் சங்குகளை எல்லாம் அந்த இடத்தில் குளித்தாய்விடும். பின்னர் கப்பல்களை அவர்கள் வேறிடத்திற்குக் கொண்டு செல்வர். இந்த வளைகுடாவிலிருந்து 300 மைல் தூரம் போவார்கள். அங்கே செப்டம்பர் மாதத்தில் தங்கத் தொடங்கி அக்டோபர் மாதம் பதினைந்தாம் தேதி வரை இருப்பார்கள்.

அரசன் மேற்கண்டவாறு பத்தில் ஒரு பங்கு முத்துகளைப் பெறுவதோடு நல்ல வடிவில் உள்ள பெரிய முத்துகளையும் தமக்கென்று பொறுக்கி எடுத்துக் கொள்ளலாம்.

அவற்றிற்கு அவன் நிறையப் பணம் தருவதால், அவற்றை அவனிடம் கொண்டு போய்க் காட்டுவதில் முத்து வியாபாரிகள் தயக்கம் ஒன்றும் கொள்வதில்லை.

நாட்டின் இந்தப் பகுதியில் உள்ளவர்கள், மானத்திற்காகக் காக்க வேண்டிய உறுப்புகளை மட்டும் சிறு துணியால்

மறைத்துக் கொண்டு மற்றபடி ஏறக்குறைய நிருவாணமாகவே போகின்றார்கள்.

அரசன் விலை மதிப்பு மிக்க துணிகளை உடுத்திக் கொண்டிருக்கிறான் என்பது தவிர, அவன் ஒன்றும் பிறரைவிட மிகுதிப்படியாக உடுத்தி இருப்பதில்லை.

ஆனால், பலவகை அணிகலன்களைப் பூண்டு பிறரினும் பெருந் தன்மையாகச் சிறந்து விளங்குகிறான். விலையேறிய நீலம், பச்சை, கெம்பு முதலிய ரத்தினங்கள் நிறைந்த கழுத்துப் பட்டை (கண்டசரம்). பட்டு நூலில் முத்தும் கெம்பும் சேர்த்துக் கழுத்திலிருந்து மார்பு வரை தொங்கும் மாலை (ஹாரம்; இரட்டை மணிமாலை) ஆகியவற்றை அணிந்திருக்கிறான்.

இந்த மாலையில் மணிகள் 104. (108 என்பதனை மறந்து 104 என எழுதுகிறார் மார்கோ போலோ) 104 என்ற எண்ணுக்குக் காரணம் உண்டு. அரசனுடைய சமய முறைப்படி ஒவ்வொரு நாளும் தன்கடவுளை நோக்கி அத்தனை முறை மந்திரம் செபம் செய்ய வேண்டும்.

அவனுடைய முன்னோர் என்றும் இதிலிருந்து தவறியதே இல்லை.

இந்த மந்திரம் 'பகஉதா' என்ற சொல் ஆகும். பகவுதா என்பது பகவத் என்பதனைக் குறிக்கலாம்; 'பகவான்' எனத் தமிழில் வழங்கியே இந்தச் சொல்லை மார்க்கபோலோ கேட்டிருக்கலாம் (பாண்டியர்கள் சைவர்கள். ஆதலின் 'நமச்சிவாய' என்ற மந்திரத்தினையே செபித்திருப்பர்) இந்த மந்திரத்தினை இவர்கள் 104 (10) முறை செபிக் கின்றனர்.

பொன்னால் செய்து முத்தும் மணியும் கொண்டு பிணைத்த தோள் வளைகள் மூன்றினைத் தோளில் அரசன் அணிந்திருக்கிறான்; அவ்வாறே புனைந்துள்ள மூன்று பொன் பட்டைகளை (கழல், சிலம்பு முதலியவற்றைத்) தன் காலில் மூன்று இடங்களில் பூண்கின்றான்.

கால் விரல்களிலும் கை விரல்களிலும் மதிப்பிட முடியாத மோதிரங்களை அணிந்து கொண்டிருக்கிறான். இந்த ரத்தினங்களும் முத்துகளும் இவனுடைய நாட்டுப் பொருள்கள் ஆதலின், இவ்வளவு பெருமிதமான அரசச் சின்னங்களை அழகாக வெளிக்காட்டிக் கொள்வது இந்த அரசனுக்கு மிகமிக எளிதாகும்.

இவனுக்கு மனைவியரும், காதற் கிழத்தியருமாகக் குறைந்த அளவு ஆயிரம் பேர் இருப்பர். தனக்கு மகிழ்ச்சி தரும் பேரழகியைக் கண்டதும் உடனே அவன் தன் ஆசையைத் தெரிவித்து விடுவான்.

தன்னோடு உடன் பிறந்தவனுடைய காதலியை ஒருமுறை தன் காதலியாகக் கொண்டு வந்து விட்டானாம். உடன் பிறந்தவன் இடம் பொருள் ஏவலுணர்ந்த அறிவாளி; படை தொடுப்பதற்கு அடிக்கடி எண்ணியிருந்தும் இதனைப் போருக்குக் காரணமாக்க வேண்டா எனப் பலர் கேட்டுக் கொண்டதற்கு அவன் இணங்கிப் போய்விட்டான். (இந்தப் பாண்டிய மன்னன் யார் என்று தெரியவில்லை)

அரசன் தன்னைச் சுற்றிப் பல வீரர்களை வைத்திருக் கிறான். 'இம்மைக்கும் மறுமைக்கும் அரசனுக்கு வேலைக்காரர்' என்ற சிறப்புப் பெயர் அவர்களுக்கு உண்டு.

அவர் மெய் காப்பாளராக அரண்மனையில் அரசனது திருமேனியைக் காக்கின்றனர். உலாப் போகும்போது பக்கத்தில் குதிரையேறிக் காக்கின்றனர். எப்பொழுதும் அரசனுடனேயே செல்லுகின்ற உடனுறை சுற்றம் அவர்களே ஆவர்.

அவர்கள் அரசாங்கத்தில் எல்லாத் துறைகளிலும் மிக்க அதிகாரம் செலுத்தி வருகிறார்கள். அரசன் இறந்ததும் அவனுடலைக் கொளுத்தும் சடங்கு நடைபெறும்போது, அந்த உண்மைச்சேவகர்கள் அந்தத் தீயில் குதித்து அரசனது உடலோடு எரிந்து சாம்பலாவார்களாம்; மறுபிறப்பிலும் அவனுடைய உடனுறை சுற்றமாகத் தொண்டாற்ற வேண்டும் என்று இவ்வாறு செய்வார்களாம்.

கீழே காணும் வழக்கமும் இதேபோல் வழங்கி வருகிறது; அரசன் இறந்தால் அவனுக்குப் பின் அரசனாகும் அவனுடைய மைந்தன், முன்னவன் விட்டுப் போன பண்டாரத்தைத் (பொக்கிஷத்தை) தொடுவதே இல்லை. நாடு முழுவதும் தனக்கு முழு உரிமையோடுவந்த பின்னர், தன் தந்தைபோலத் தானும் பெரிய பண்டாரத்தை நிரப்ப ஆற்றலுடன் இருக்க வேண்டும் என்பதற்காகவே, இவ்வாறு மைந்தன் நடந்து வருகின்றானாம். இந்த மனப்போக்கின் காரணமாகத் தலைமுறை தலைமுறையாகச் செல்வம் சேர்ந்து வருகிறது என்று மக்கள் கருதுகிறார்கள்.

இந்த நாட்டில் குதிரைகள் பிறந்து வளர்ந்து பல்கிப் பெருகுவதில்லை. அரசனும் அவனுடைய மூன்று தம்பிமாரும் ஆர்மஸ், தியூவார், பேசாரி; ஆதென் என்ற இடங்களிலுள்ள வணிகர்களிடமிருந்து குதிரைகள் வாங்கப் பெரும் பணத்தொகையைச் செலவிடுகின்றார்கள்.

இந்த வியாபாரிகள் 5000 வரை குதிரைகளை இறக்குமதி செய்து ஒவ்வொரு குதிரையையும் 500 பொன்னுக்கு விற்பதால் இந்த நாட்டிற்குக் குதிரைகளைக் கொண்டு வரும் வியாபாரத்தில் பெரிய செல்வம் ஈட்டுகின்றார்கள்.

அந்தக் குதிரைகளைச் சரிவரப் பாதுகாக்கவோ, மருந்துகளைத் தரவோ தக்கவர்கள் இல்லாமையால், இது காரணமாகவே ஆண்டின் முடிவில் அவற்றில் 300 கூட உயிருடன் இருப்பதில்லை.

அதனால், அவற்றுக்குப் பதிலாக ஆண்டுதோறும் குதிரைகளைப் புதியதாக வாங்கக் கட்டாயம் ஏற்படுகிறது.

இந்தக் குதிரைகளுக்குத் தீனியாகச் சோறு தீற்றிய இறைச்சியையும் வேறு வகையாகச் சமைத்த உணவுகளையும் கொடுத்து வருகிறார்கள்.

கீழே காணும் வியப்பான வழக்கம் இந்த நாட்டில் வழங்கி வருகிறது; குற்றவாளி வழக்கு முடித்ததும் கொலைத் தண்டனையை ஏற்றுக் கொலைக் களத்துக்குப் பலி இட விரும்பினால் அதனைத் தெரிவித்து விடுவான். உடனே அவனுடைய உறவினரும் நண்பரும் ஒருவகை நாற்காலியில் அவனை அமர்த்தி அவன் கையில் நன்றாகக் கூர்தீட்டி உறுதியாக இருக்கும் பன்னிரண்டு கத்திகளைக் கொடுத்துவிடுவார்கள்.

நகரத்தைச் சுற்றி இவ்வாறு அவனைத் தூக்கிச் செல்வார்கள்; உரத்த குரலில் 'இந்த வீரப் பெருமகன் கடவுள் மேலுள்ள அன்பின் மேலிட்டால் தானே தன்னைப் பலி கொடுக்கப்போகிறான்' என்று பறையறைவார்கள்.

தண்டனை நிறைவேற்றும் களத்திற்கு வந்ததும் அவன் இரண்டு கத்திகளை விரைந்து எடுத்து 'இந்தத் தெய்வத்திற்கு என்னைப் பலி கொடுக்கப் போகிறேன்' என உரத்துக் கூவி, ஒவ்வொன்றையும் ஒவ்வொரு தொடையிலும் குத்திக் கொள்வான்; இரண்டை வயிற்றிலும் இரண்டை மார்பிலும் குத்திக் கொள்வான்.

ஒவ்வொரு முறை குத்திக் கொள்ளும்போதும், முன் சொல்லிய சொற்களைச் சொல்லிக் கொண்டே ஒரு கத்தி தவிர மிகுதியை எல்லாம் இவ்வாறு தன் உடலின் பல உறுப்புகளிலும் குத்திக் கொள்வான். பிறகு கடைசிக் கத்தியை நெஞ்சில் குத்திக்கொண்டு உடனே மாய்ந்து விடுவான்.

இக் காட்சி நடந்து முடிந்ததும், அவனுடைய சுற்றத்தார் பெரிய வீறாப்போடும் களிப்போடும் சென்று அவனுடைய உடலை நெருப்பிற்கு இரையாக்குவர்.

அவனுடைய மனைவி, தன் கணவன் மேலுள்ள அன்பின் காரணமாக அந்தத் தீயில் விழுந்து அவனோடு சாம்பலாவாள்.

இத்தகைய உறுதிப்பாட்டினைக் காட்டும் பெண்களைச் சமுதாயம் மிகவும் பாராட்டுகிறது. அவ்வாறு செய்ய அஞ்சும் பெண்களையோ மிகவும் பழிக்கிறது. ○

*நீலக்கடல் நிறமும்*
*கோலக்கவின் உருவும்*
*பீலித்தலையணியும் – எழிலாலே*
*வானைக் குமரியரின்*
*கோவங் குலைந்து மன*
*சீலங் கவர்ந்த முழு - எழிலோனே*
*ஊதுங்குழல் ஒலியின்*
*நாதம் படர்ந்து மனம்*
*மோதத் தவிக்கும் இன்பம் - ஆயவனே*
*தீதில் பசுக்கணங்கள்*
*காதல் கண்ணீர் உகுக்க*
*வேதக் குழல் இசைக்கும் - மாயவனே.*
*கண்ணில் குறும்புருள*
*வெண்ணெய் இதழ் ஒழுக*
*விண்ணை நிலம் அழைக்கும் - மலைதூக்க*
*வண்ணக் கலாப மயில்*
*பெண்கள் உளம் அடைந்தென்*
*கண்ணன் எனும் அழகும் அலை தூக்க*
*கண்ணீர் பெருக்கி மனக்*
*கண்ணால் பருகி உளம்*
*புண்ணாய் உருகி யழும் - நிலைகண்டே*
*கண்ணால் உளம் புகுந்து*
*கண்ணால் அனைத்துயிருள்*
*கண்டே உனையுணரும் - நிலை கொண்டோம்*







போட்டோ: டி.ஆர். கணேசன்

## மயில் ஆடுது

நித்தியா

மயில்ஆடுது குமரன் முன்னே!
மனம்மகிழுது முருகன் முன்னே!
குயில்பாடுது சிவகுகன் முன்னே!
குறைதீருது வேலவன் முன்னே!

திருத்தணி வாசல் முன்னே
திருவருள் தானாய் சுரக்குது!
அருமை செந்தூர் முன்னே
அன்பு வெள்ளம் ஓடுது!

திருப்பரங் குன்றம் முன்னே
தீவினை யாவும் பறக்குது!
பெருமை பழனி முன்னே
பேரும் புகழும் வருகுது!

சுவாமி மலையழகு முன்னே
சர்வ மங்களம் தோன்றுது!
தவமிகு சோலையின் முன்னே
தவஞானி கூட்டம் சேருது!!

□□□

## ஒளியாகும் பரிசு!

"மதி ஒளி"

கதறுகிற இதயத்தைக் கரைகட்டி உருகும்
கண்ணீரின் விழியருவி கடலாகப் பெருகும்
உதிருகிற உண்மைகள் ஒவ்வொன்றும் புரியும்
உணர்வுக்குள் அடங்காமல் ஓடிவரும் நெறியும்
சிதறுகிற தெங்கைப்போல் சில்லாக வேண்டாம்
தெய்வமெனும் அன்னையவர் தெரசாவும் பூண்ட
முதிர்வின்வரி எழுதிவைத்த முகம்நெஞ்சில் வைப்போம்
முழுமையெனும் அன்புக்குள் மூழ்கியும் நிலைப்போம்!

ஒளிவீசும் சுடரென்றும் ஓடியாமல் திளைக்க
உதவியெனும் நற்கரமும் உளமார அளிப்போம்
வெளிவேஷம் விற்பனைக்கு வேண்டுவதா யிருக்கும்
வீணாகும் பொருள்சேர்க்க மேற்பூச்சாய்ச் சிரிக்கும்
அலைபேசும் கடல்மொழியே அன்பாகும் ஒலியே!
ஆரத்தி எடுக்கின்றோம் அருள்பொங்கும் மலையே!
நிலைபாசம் நெகிழ்கின்ற நெஞ்சத்தின் வடிவே!
நிறைமதியின் நேர்அன்னை தெரசாஎம் படையே!

முதுமைக்குள் நுழையாமல் மூச்சுமடங் காது
முகவரியின் புகைமறையும்; மோகனத்தின் தேதி
புதுமைக்குப் புகழாரம் பூண்டதெல்லாம் தாண்டி
பூரணத்தின் வாசலுக்குப் போகும்நிலை வேண்டி
எதுமெய்க்கும் பொய்க்குமிடை இருப்பதெனக் காண
எல்லாமே இழந்தநிலை ஏற்பதுதான் தானும்
சிதைமொய்க்கும் தீநாக்கால் தேய்ந்துவிட வேண்டாம்.
தெய்வநிலை அருட்தொண்டே தெரசா வா மீண்டும்!

கல்லுக்குள் ஈரத்தைப் படைத்தவனே கடவுள்!
கனிவுக்குள் சுவையெல்லாம் கட்டியவன் கடவுள்!
உள்ளுக்குள் உரமாகி உறைபவனே கடவுள்!
உதவிக்கு நதியாக உழைப்பவனே கடவுள்!
புல்லுக்கும் உணவாகப் புகுந்தவனே கடவுள்!
பொறுமைக்கும் உரிமைக்கும் புகலாவான் கடவுள்!
எல்லைக்குள் தெரிந்தஇந்த தெரிசனமே தெரசா!
என்றென்றும் இவர்வாழ்வே ஒளியாகும் பரிசாய்!

# தொலை நோக்கோடு.. தொலைத் தொடர்பு

பத்மினி பட்டாபிராமன்

இந்த சுதந்தரப் பொன்விழா ஆண்டில், இந்தியா பெருமைப்பட்டுக் கொள்ள வேண்டிய பல விஷயங்களில் ஒன்று, நமது தொலைத் தொடர்புத் துறை (Tele communications) வளர்ந்துவரும் இன்றைய உலகில் வீட்டுக்கொருவர் அமெரிக்கா போன்ற வெளிநாடுகளுக்குச் செல்லும் நேரத்தில், ஈமெயில் என்ன, இன்டர்நெட் என்ன...

அடுத்த தெருவில் இருப்பவருக்கு ஒரு செய்தி தெரியுமுன், அமெரிக்காவிலிருந்து பதிலே வந்து விடுகிறது..

நம் அடிப்படைக் கலாசாரமான சில வைபவங்களை விடாமல் நாம் சம்பிரதாயப்படி செய்யும் நேரம் – அவற்றை நிகழ்த்தி வைக்கும் புரோகிதரை பேஜரிலோ, அல்லது செல்லுலாரிலோ தான் அழைத்துப் பேசி ஆளைப் பிடிக்க வேண்டியிருக்கிறது..

தொழில் நுட்பத் திறமைகளோடு, அண்டவெளித் தொடர்பு புரட்சியில் இந்தியா ஈடுபட்டு, பெரும் வெற்றிப் பாதையில் சென்று கொண்டிருக்கிறது.

செயற்கைக் கோள் தொலைத் தொடர்பு, நுண்ணலைத் தொடர்பு, இன்டர்நெட் ஆகியனவெல்லாம் நவீன தொடர்பு முன்னேற்றங்கள்.

இதன் பின்னணியில் என்ன தொழில் நுட்பம் என்பதைத் தெரிந்து கொள்ளும் ஆர்வம் ஏற்பட்டது. சென்னை கமாண்டர் இன் சீஃப் சாலையில் உள்ள தொலைத்தொடர்பு அலுவலகத்தைத் தொடர்பு கொண்டபோது தலைமைப் பொது மேலாளர் திரு மு. இராமா அவர்கள்... பெருமளவில் உதவி செய்து, தொலைத் தொடர்பு பற்றிய முழு விவரங்களையும் அளித்தார்.

திரு இராமா. அவர்களைப் பற்றிக் குறிப்பாக ஒன்று சொல்ல வேண்டும்...

இந்தியாவிலேயே தொலைத்தொடர்பு வசதிகளில் தென்பகுதிதான் முதலிடம் பெற்றுள்ளது என்றால், அதற்கு முழுக்காரணமாக திரு இராமா அவர்களையும், அவர் தலைமையில் இயங்கும் குழுவினரையும் தான் சொல்ல வேண்டும்... திரு இராமா அவர்கள் கேரளம், ஆந்திரம், தமிழ்நாடு, கர்நாடகம் ஆகிய நான்கு மாநிலங்களுடைய தொலைத்தொடர்பு வசதிகளுக்கு, தலைமைப் பொது மேலாளராகச் சிறந்த பணியாற்றி வருகிறார்.

STD - அதாவது Subscription Trunk Dialling



என்கிறோமே, இதில் இருவிதமான தொடர்புகள் கொடுக்கிறார்கள், தரை வழி, வான் வழி என்று.

வான் வழித்தொடர்புக்கு மைக்ரோ வேவ் டவர் (Microwave Tower) நிர்மாணிக்கப்படுகிறது. மலைப்பிரதேசம் போன்ற இடங்களில், தரையைத் தோண்டிக் கேபிள் அமைக்க முடியாததால் இந்த டவர்கள் கட்டப்படுகின்றன... இதில் உள்ள ஆன்ட்டெனாவே செய்தி கொண்டுவரும் அலைகளை வாங்கி, அனுப்ப வேண்டிய இடத்துக்கு அனுப்பும் பணியைச் செய்து விடுகிறது..

மலைப்பிரதேசம் அல்லாத இடங்களிலும் இந்த டவர்களின் உபயோகம் உண்டு.

எப்படி ?

தாம்பரத்திலிருந்து குரோம்பேட்டைக்குப் பேசுகிறீர்கள்.. நல்ல மழை.. தரை வழி கேபிள் பழுதாகி விட்டதா ? பிரச்னையே இல்லை. இந்த மைக்ரோவேவ் டவர்கள் உதவிக்கு வருகின்றன.

இந்த நுண்ணலைத் தொடர்பு (Micro wave) இந்தியாவில் முதலில் 1965இல் கல்கத்தாவுக்கும் அசன்ஸாலுக்கும்



கே.ராமா, தென்மண்டல தலைமைப் பொது மேலாளர்


செயற்கைக்கோள் தரைத்தொடர்பு நிலையம்

இடையே தொடங்கப்பட்டது. 1200 சானல்கள் ஆற்றலுடன் தொடங்கின. இன்று நாடெங்கும் ஆயிரக்கணக்கான கிலோ மீட்டர் தொலைவுக்கு நுண்ணலைத் தொடர்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது. இன்னும் மிகப் பெரிய அளவில் விரிவு படுத்தப்படவுள்ளது.

"என்ன செய்துதான் என்ன..? ஒரு சிறுமழைத் தூறல் விழுந்தால் கூட எங்க ஏரியால ஃபோன் வேலை செய்றதில்லை" என்கிறீர்களா..? கூடிய விரைவில் இந்தக் குறைபாடுகளுக்கு இடமே இருக்காது..

1960 – 70ஆம் ஆண்டுகள் வாக்கில் மிகப் பரவலாக இருந்த கோ–ஆக்ஸியல் கேபிள் முறையிலிருந்து கண்ணாடி இழை முறைக்கு ( Fibre-Optic Communication) வேகமாக மாறிவருகிறார்கள்..

## கோ-ஆக்ஸியல் கேபிள் பற்றி:

இதில் நன்மைகள் என்று பார்த்தால்... தாமிரத் தகட்டால் சுற்றிப் பாதுகாக்கப்பட்ட உள்மின் கடத்தியும் (inner conductor) அதைச்சுற்றி பாலிதீன் (PVC) பாதுகாப்பு கொண்ட வெளி மின் கடத்தியும் (outer conductor) கொண்ட கேபிள் இது.

சாதாரணமாக நாம் தொலைபேசியில் பேசும்போது ஏற்படும் அதிர்வுகள், டயாஃப்ரம் (Diaphram) உதவியால் மின் அலைகளாகி, பிறகு, மின்காந்த அலைகளாகக் கேட்பவரை அடைகின்றன என்று நமக்குத் தெரியும்..

இந்த கோ–ஆக்ஸியல் கேபிளின் உள்புறக் குழாயிலேயே இருவிதமான அலைகளும் ஏற்பட்டு விடுவதால், வெளிப்புறக்குழாய் அதிர்வுகளிலிருந்து பாதுகாப்பளிக்கிறது. வெப்பக் கதிர்வீச்சு, வெளிப்புறத் தடங்கல்கள் என்பனவெல்லாம் ஏற்படுவதில்லை... எதிரொலி கேட்கிற பிரச்சினையும் இல்லை.. ஏனெனில் Propagation time எனப்படும் ஒலிபரப்புக்கு ஆகும் நேரம் இதில் மிகக்குறைவு...

இதிலேயே 4 குழாய்கள் (4 Core Cables) உபயோகிக்கும் வசதியும் உண்டு. அவை தொலைக்காட்சி சானல்கள் தொடர்புக்குப் பயன்படுகின்றன.

ஆனால் இந்த வகைக் கேபிள்களில் சில பிரச்னைகளும் உண்டு. தாமிரம் மிகுந்த விலை உள்ள உலோகமாதலால் அடிக்கடி திருட்டுப் போகிறது. வெப்பம் கடத்தும் உலோகம் என்பதால் மின்னல், தண்ணீர் ஆகியவற்றால் பாதிப்புகள் உண்டு.

ஆப்டிகல் ஃபைபர் எனப்படும் கண்ணாடி இழை நமது ஒரு தலைமுடி அளவு மெல்லியது. ஒரே நேரத்தில் 2,000 பேர் பேசினாலும். இந்தக் கேபிள் தாங்கும்.

மின்னல், வெள்ளம் ஆகியவற்றால் பாதிக்கப்படாது. பழுதே ஏற்படாது. ஆற்றல் அதிகம். பராமரிப்புச் செலவும் குறைவு. தற்சமயம் ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குப் பேசும் STD தொடர்புக்கு மட்டுமே பயன்படுத்தப்பட்டு வருகின்றன. கூடிய விரைவில் உள்ளூர்த் தொலைபேசிகளுக்கும் இந்தக் கண்ணாடி இழை முறை பயன்படுத்தப்பட இருக்கிறது.

தாமிரக் குழாய்களை விட பல்லாயிரம் மடங்கு அதிகமான செய்தி சுமக்கும் ஆற்றல் இந்தக் கண்ணாடி இழைக்கு

உண்டு. தொலைக்காட்சி, தொலைபேசி, டேடா, எந்த சமிக்ஞை (Signal) யையும் ஒலிபரப்பும் ஆற்றல் இந்த இழைக்கு உண்டு..

எந்த ஒரு தொலைத்தொடர்பு முறையிலும் உள்ளதைப் போலவே இதிலும் டிரான்ஸ்மிட்டர், இன்ஃபர்மேஷன் சேனல், ரிஸீவர் என்று மூன்று பகுதிகள் இருக்கின்றன..




டிரான்ஸ்மிட்டருக்குள் வரும் மின் அலைகளை இங்கே உள்ள லேசர் டயோட் (Laser Diode - LD) என்னும் சாதனம், இன்ஃப்ராரெட் (Infra-red) சமிக்ஞைகளாக மாற்றுகிறது..

பின்னர் அது ஆப்டிக் ஃபைபர் எனப்படும் கண்ணாடி இழைக்குள் செலுத்தப்படுகிறது. இழை அடுத்த ரிஸீவரில் இருக்கும் ஒளி டிடெக்டருக்குள் அனுப்புகிறது. அங்கே இருக்கும் அவலான்ச் போட்டோ டயோட் (Avalanche Photo Diode) இந்த இன்ஃப்ரா சிவப்பு சமிக்ஞைகளை மின் சமிக்ஞைகளாக மாற்றி, தொலைபேசியிலோ, தொலைக்காட்சியிலோ கம்ப்யூட்டரிலோ (Data Signal) செய்தியாக்கித் தருகிறது.

குறைந்த சக்தி டிரான்ஸ் மிட்டர் (Low Power Transmitter) என்பது இந்த நுண்ணலைத் தொடர்பு சாதனம் தானா? என்ற நம் வினாவுக்கு, திரு இராமா அவர்கள் அருமையான விளக்கம் தருகிறார்.

“தொலைபேசி, தொலைக்காட்சி, கம்ப்யூட்டரின் டேடா போன்ற சமிக்ஞைகளை எடுத்துச் செல்லும் சக்தி வாய்ந்த இந்த நுண்ணலைகள், ஒளி அலைகளைப் போல பார்வைப் பாதையிலேயே (Sight Paths) செல்லக் கூடியவை.

சாதாரணமாக இந்தப் பார்வைப் பாதை முறை 40 முதல் 50 கி.மீ. தாண்டும் தூரம் கொண்டது. அதாவது நடுவில் தடைப் பொருள் ஏதும் இல்லாதபோது... மலை உச்சிகளில் இந்த நுண்ணலைக் கோபுரங்கள் (Microwave towers) அமைக்கப்படும்போது. பார்வைப் பாதையின் தொலை நோக்கு அதிகமாகிறது. இதனால்தான் இந்த LPT எனப்படும் குறைந்த சக்தி ஒளிபரப்பு கோபுரங்கள் மலை உச்சிகளில் பெரும்பாலும் அமைக்கப்படுகின்றன. இவற்றை ஹாப்பிங் ஸ்டேஷன்ஸ் (hopping stations) என்கிறார்கள்.

பேஸ் பேண்ட் சர்க்யூட் (Base Band Circuit) மோடம் எனப்படும் Modulator and De-modulator, கிளை சாதனம் (Branching equipment), பாதுகாப்பு சாதனம், கோ–ஆக்ஸியல் ஃபீடர்ஸ் (Co-axial feeders) ஆன்ட்டெனா பவர் ப்ளான்ட், (Power Plant) கோபுரங்கள் இப்படிப் பல பகுதிகளை தொழில் நுட்ப ரீதியில் இணைத்து நுண்ணலைத் தொடர்பு

(earth stations) அனைத்தும் வானில் செலுத்தப்பட்டுள்ள ஒரு செயற்கைக் கோள் மூலம் இணைக்கப்பட்டுள்ளன. அந்தச் செயற்கைக் கோள் ஒரு 'நுண்ணலை திருப்பி' (microwave repeater) ஆக எல்லா நிலையங்களுக்கும் செயல்படுகிறது.

"இந்தச் செயற்கைக் கோள் தொடர்பின் பிளஸ் பாயிண்ட்கள்.. என்ன ?".

"உயர் தொழில் நுட்பம், மிகப் பெரிய பரப்பளவை இணைக்கும் ஆற்றல், அதிவேகம் அதிக ஆற்றல்... அடுக்கிக் கொண்டே போகலாம். உலகம் முழுமையையும் இணைக்க மூன்றே மூன்று செயற்கைக்கோள்கள் போதும்" என்கிறார் திரு.இராமா..

"உதாரணமாக, இந்தியத் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் இன்சாட் செயற்கைக் கோள் மூலம் லட்சத்தீவு, அந்தமான், இமயத்தின் சிகரங்கள், மட்டுமின்றி பல உலக நாடுகளிலும் உள்ள மக்களால் பார்க்கப் படுகின்றன.. பருவ நிலை, புயல், வெள்ளம், பூகம்பம் போன்ற இயற்கைச் சீற்றங்களைப் பற்றிய தகவல்களைப் பரிமாறிக் கொள்வதில் செயற்கைக் கோள் அவசியமாகிறது. பார்த்திருப்பீர்களே – இன்சாட் செயற்கைக் கோள் மூலம் எடுக்கப்பட்ட புகைப்படம் என்று இன்றைய பருவ நிலையில் தொலைக்காட்சியில் காட்டுவார்களே.

நடுக்கடலில் கப்பலுக்குக் கப்பல் தொடர்பு கொள்ளவும் முடிகிறது. ONGC, NTPC, GAIL போன்ற நிறுவனங்களிலும் பல இடங்களிலும் வியாபாரத் தொடர்புக்குச் செயற்கைக்கோள் அவசியமாகிறது.

ஒலி, ஒளிபரப்பு நிலையங்களில் (Transmitting Station) வரும் சமிக்ஞைகள், 70MHZ சக்தியுள்ள ஒரு IF- அதாவது Intermediate Frequency சாதனத்தில் செலுத்தப்படுகின்றன. பின்னர் இவை ரேடியோ சமிக்ஞைகள் (RF - Radio Frequency) ஆக்கப்பட்டு, பின் வீரியமுள்ள சமிக்ஞைகளாக ஹைபவர் ஆம்ப்ளிபயரில் மாற்றப்படுகின்றன. இந்த அதிக சக்தி உள்ள சமிக்ஞைகள் செயற்கைக் கோளுக்கு ஆன்டெனா மூலம் அனுப்பப்படுகின்றன..

ரேடியோ தொடர்போ, நுண்ணலைத் தொடர்போ இந்தியாவுக்குள் செய்யலாம்.. சரி, சர்வதேசத் தொடர்புக்கு.. ?

"செயற்கைக் கோள்கள் மூலம்தான் தொடர்பு ஏற்படுத்தப்படுகிறது" என்ற திரு. இராமா அவர்கள் ஸாடிலைட் கம்யூனிகேஷன் – செயற்கைக் கோள் தொடர்பு (Satellite Communication) என்கிற நவீன தொழில் நுட்பம் பற்றி விளக்கம் தந்தார்.

"இன்று எங்கோ ஒரு மூலையில் உள்ள குக்கிராமத்தில் கூட STD இருக்கிறது.. தொலைக்காட்சியில் பல சானல்கள் கிடைக்கின்றன.. எப்படி ?

இங்கே தான் செயற்கைக் கோள் தொடர்பு உபயோகத்துக்கு வருகிறது.. தரையில் உள்ள கணக்கற்ற தொடர்பு நிலையங்கள் சமிக்ஞைகள், செயற்கைக் கோளில் உள்ள சாதனங்களால் (Satellite Repeater) இன்னும் அதிக சக்தியுடன் கீழே உள்ள நிலையங்களுக்கு அனுப்பப்படுகின்றன..




ES1, ES2 தரைத் தொடர்பு நிலையம்

உலகம் முழுவதையும் இன்று கம்ப்யூட்டர் இணைக்கும் இன்டர்நெட் :

"71 நாடுகளில் 30,000 இணைப்புகளைக் கொண்டது.. முதலில் அமெரிக்காவில் பாதுகாப்புத் துறையினரால் தொடங்கப்பட்டது.. உலகின் பல்வேறு வணிகத் தொடர்புகளுக்கோ பல்கலைக் கழகங்களுடன் கல்வி விஷயமாகத் தொடர்பு கொள்ளவோ, இருந்த இடத்திலிருந்தே செய்ய இன்டர்நெட் கை கொடுக்கிறது.. செய்தி அனுப்ப எலக்ட்ரானிக் மெயில் (E-mail), எந்த விஷயம் நமக்குத் தேவையானாலும் அதை உடனே அறிய உதவும் Information retrieval இதெல்லாம் உதாரணங்கள்.

FTP எனப்படும் File Transfer Protocol, WWW எனப்படும் World Wide Web ஆகியன எல்லாம் கம்ப்யூட்டர் செய்தி சேகரிப்பின் சில அங்கங்கள். ரயில்வே, விமானநிலையங்களில், கம்ப்யூட்டர் நெட்வொர்க் உபயோகம் நமக்கே தெரியுமே!

நாம் எங்கேயிருந்தாலும் கையடக்கமாக நம்முடன் இருந்து, கூப்பிடுபவரின் எண் மட்டும் காட்டும் நியூமரிக் பேஜர், அல்லது கூப்பிடுபவரின் செய்தியோடு வரும் ஆல்ஃபா நியூமரிக் பேஜர் அல்லது, பேசவும் வைக்கிற செல்லுலார் எல்லாமே இன்றைய அத்தியாவசியமான, தொலைத் தொடர்புத் துறையின் பிரம்மாண்ட வளர்ச்சி காட்டும் சாதனங்கள் தாம்.

சுமார் 43,000 கி.மீ வரை இன்று இணைத்திருக்கும் தொலைத்தொடர்புத் துறையில், முன்பே குறிப்பிட்டபடி தென்னகம்தான் முதலிடம் வகிக்கிறது என்றால் நிச்சயமாக அந்தப் பெருமை நான்கு மாநிலங்களுக்கும் தலைமைப் பொது மேலாளராக இருக்கும் திரு கே. இராமா அவர்களையே சாரும்..

# “மகரிஷிகளில் நான் ‘ப்ருகு’ ஆவேன்!”

## - பகவத் கீதையில் கண்ணபெருமான்!



ஜீவாத்மா என்பவன் அறிவுள்ளவன்; அருபி. தலை, கை, கால்கள் போன்ற எந்த உறுப்பும் இல்லாதவன்.

இப்படிப்பட்ட கோடானுகோடி ஜீவாத்மாக்களுக்கு அந்தந்த ஆத்மாக்கள் செய்த புண்ணிய பாபங்களுக்கேற்பச் சரீரத்தை வழங்குகிறான் பரமாத்மா.

இந்தச் சரீரத்தினால் எல்லாக் காரியங்களையும் செய்ய ஜீவாத்மாவுக்குச் சக்தி இருக்கிறது. ஆனால் அந்தச் சக்திக்கு எல்லைக்கோட்டை நியமித்திருப்பவன் பரமாத்மா என்பதனால் மிகவும் பலமான சரீரம் வாய்த்தும் கூட, ஜீவாத்மாவினால் பரமாத்மாவின் அனுமதி இல்லாமல் எண்ணம்போல் இயங்க முடியாமல் போய்விடுகிறது.

இந்தத் தத்துவத்தை முதலில் நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

உண்மையில் பரமாத்மாவுக்கு அழிவில்லாதபோது, ஜீவாத்மாவுக்கும் அழிவு கிடையாது. ஆனால் கர்ம வினையால் இயங்குகிறவன் ஜீவாத்மா. அத்றகேற்ப அவனை இயக்குபவன் பரமாத்மா.

இயங்குகிறவனுக்கு ஒரு கருவி வேண்டுமல்லவா? அல்லது ஓர் இருப்பிடம் வேண்டுமல்லவா? அதுதான் சரீரம்.

பொதுவாக எந்தப் பேதமும் ஜீவாத்மாவுக்குக் கிடையாது. ஆனால் கர்ம வினையினால் அது ஒரு சரீரத்தில் புகும்போது, அந்தச் சரீரத்தின் மூலம் பேதப்படுகிறது. அந்தச் சரீரங்களில் மனித சரீரம் மகத்தானது. இந்த மனிதனுக்கு மட்டுமே ஆறு அறிவுகள் உள்ளன.

பரமாத்மாவை நோக்கி இந்தச் சரீரத்தில் உள்ள உறுப்புகளைக் கொண்டு எந்த அளவுக்கு ஜீவாத்மா வழிபாடுகளைச் செய்யுமோ, அந்த அளவுக்குப் பரமாத்மாவுடன் கலந்து, சாட்சாத்காரத்தைப் பெறுகிற சக்தி ஜீவாத்மாவுக்கு ஏற்பட்டுவிடும். இந்தத் தத்துவத்தையும் புரிந்து கொள்ள வேண்டும்.

'பகவான்' என்பவன் சகல சக்திகளும் நிறையப் பெற்றவர்; கர்ம வினைகளுக்கு அப்பாற்பட்டவர்.

ஐசுவரியம், வீரியம், புகழ், திருஞானம், இப்படிச் சக்திகள் அனைத்துக்கும் மூலப் பொருளாக விளங்குபவர் பகவான்.

அனைத்தையும் இயக்குபவர் அவர்; நிரந்தர மானவர்; தன்னை வழிபடுகின்றவர்களுக்குச் ‘சரணாகதி’ என்கிற அடைக்கலத்தைத் தந்து, தன்னோடு இணைத்துக் கொள்பவர்; தன்னிலே அணைத்துக் கொள்பவர்.

இத்தகு சிறப்பைப் பெறக்கூடியவன் பாகவதன் ஆவான். அதாவது பகவானின் அம்சம், பகவானின் ஆற்றல், பகவானுடன் ஐக்கியம் ஆகியவை கொண்டவன் 'பாகவதன்' ஆவான் என்று சொன்னால் பொருந்தும்.

இந்தப் பாகவதனுடைய பல உயர்நிலைகளின் பரிணாமம் அவனை இறைச் சக்தியாக்கிவிட முடியும்.

இன்னொரு வகையிலும் இறைவனோடு இரண்டற இணையக்கூடிய தகுதி பெற்றவர்களைக் கணிக்க முடியும். அவர்களே முனிபுங்கவர்கள். பற்றைத் துறந்து, ஞானத்தவத்தில் ஆழ்ந்து, ‘இறை வரம்’ என்கின்ற மாபெரும் சக்தியைப் பெற்று, இறைவனோடு இணையவும் உரிமை கொண்டாடவும் இறைவன் மட்டுமே செய்யக்கூடியதைத் தாமும் செய்யக்கூடிய வல்லமையைப் பெறவும் வல்லவர்கள் அவர்கள்.

அதிக அளவுக்கு நான் பாகவதர்களையும், முனிபுங்கவர்களையும் இறைச்சக்திக்கு நிகராக உயர்த்திக் கூறுகிறேன் என்று கருதவேண்டாம். இறைவனே கூறுகின்றார்; அதாவது பகவானே கூறுகின்றார்.

கீதாசாரியனாகிய பகவான் பகவத் கீதையிலே சொல்லுகிறார். பத்தாவது அத்தியாயத்தைப் படித்தால் விசேடமான சில குறிப்புக்கள் தெரியவரும்!

**வித்வான் வே. லட்சுமணன்**

"ஆத்மாக்களின் ஆத்மாவாக நான் இருக்கிறேன். உயிர்க் குலத்தின் ஆதி-அந்தமாக நான் இருக்கிறேன். ஒளிர்பவைகளில் சூரியன் நான். நட்சத்திர மண்டலங்களின் தலைவனான சந்திரன் நான், வேதங்களில் சாமவேதம் நான், தேவர்களில் இந்திரன் நான், உயிர் வகைகளின் ஞான சக்தி நான், பதினோரு ருத்திரர்களில் நான் பரமசிவன், யக்ஷர்களில் குபேரன் நான், அஷ்ட வசுக்களில் அக்கினி நான், மலைகளில் மேரு என்றெல்லாம் சொல்லிக் கொண்டே வருகின்ற அந்த வரிசையிலே, தன்னைப் பிரஹஸ்பதி என்றும், ஸ்கந்தன் என்றும், மஹா சமுத்திரம் என்றும் குறிப்பிட்டு, அதன்பிறகு மிகத் துல்லியமாக நான் இங்கே தலைப்பிலே குறிப்பிட்டுள்ள மகரிஷியைப் பற்றிய மகத்தான சிறப்பைத் தன்னில் இணைத்துக் குறிப்பிடுகிறார். "மஹரிஷீணாம் பிருகு"-"மகரிஷிகளில் நான் பிருகு ஆவேன்" என்கிறார்.

ஆகா! நம் பிருகு முனிவரின் சிறப்புதான் என்னே!

இந்தப் பிருகு முனிவர் பிரம்மாவின் மானஸ புத்திரர்களில் முக்கியமானவர். பல மன்வந்திரங்களில் சப்த ரிஷிகளில் ஒருவராக இருந்தவர்.

இவருடைய வம்சத்தில் தோன்றிய பலர் ரிஷிகளாகவும், மந்த்ர கர்த்தாக்களாகவும், கோத்திர மூலவர்களாகவும் உள்ளனர்.

இன்னும் சொல்லப்போனால் சப்த ரிஷிகளில் அதி முக்கியத்துவம் பெற்றவர் இவர் ஆவார்.

அத்ரி, ப்ருகு, குத்ஸ, வசிட்ட, கௌதம, காச்யப, அங்கிரஸ என்கிற சப்த ரிஷிகளில் இடம் பெற்றவர்.

புராணங்கள் கூறும் சில விஷயங்களை இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்.

தட்சனின் பெண் க்யாதியை மணந்தவர் இவர். தாதா, விதாதா என்ற இரண்டு பிள்ளைகள். 'ஸ்ரீ' என்கிற ஒரு பெண் ஆகியோர் க்யாதியின் மூலம் ப்ருகுவினால் பெறப்பட்டவர்கள்.

இந்த ஸ்ரீயே பகவான் நாராயணனை மணந்தாள்.

ச்யவன ரிஷியும் இவரது புத்திரர்தான்.

மன்வந்தரங்கள் பல. ஒவ்வொரு மன்வந்தரத்திலும் சப்த ரிஷிகள் உண்டு. வேறு சில மன்வந்தரங்களிலும் இவர் சப்த ரிஷிகளில் முக்கியத்துவம் வகித்திருக்கிறார்.

இவர் வழி வந்தவர்களும் மந்த்ரங்களை இயற்றியவர்கள்.

மேலே சொல்லப்பட்ட குறிப்புகள் மிகவும் சிலவாகும். ப்ருகு சரிதம் ஹரிவம்சத்தில் விரிவாக உள்ளது. இன்னும் மத்ஸ்ய, சிவ, பிரும்மாண்ட, தேவி பாகவத, மார்க்கண்டேய, பத்ம, வாயு புராணங்களிலும் மகாபாரதத்திலும், ஸ்ரீமத் பாகவதத்திலும் இந்த மாமுனிபுங்கவரான ப்ருகுவின் விசேடமான செய்திகள் வருகின்றன.

கீதாசாரியனான பகவான் கண்ணன், (கிருஷ்ண பகவான், எம்பெருமான், வைகுண்டவாசன்) "முனிவர்களில் நான் பிருகுவாக இருக்கிறேன்" என்று சொன்னார் என்றால் இதனுடைய சிறப்பை எப்படிச் சாதாரணமான சொற்களால் வருணிக்க முடியும்!

பகவானுடைய நாமத்தைச் சொல்லிச் சொல்லி, பகவதம்சம் பெற்ற பாகவதர் என்று இவரைச் சொல்வதா, ஞானத்தவம் புரிந்த தபோதனர் என்று சொல்வதா, தேஜஸ் மிகுந்த தெய்வ ஸ்வரூபம் என்று சொல்வதா?

இன்னும் புத்தி சக்திகளையெல்லாம் கடந்த மகான் என்று சொல்வதா?

பொதுவாக அளவிட்டுச் சொல்லமுடியாததும் பெருமையின் எல்லையைக் கடந்ததும் எங்கும் நிறைந்திருப்பதும் 'மகத்' என்கிற சிறப்புப் பெயரைப் பெறும்.

இப்படியெல்லாம் சிறப்புக்குரியவரே 'மகான்' எனப்படுவார்.

சாதாரணமாக 'மகான்' என்று சொல்லப்படுகிற அந்த விசேடமான சிறப்புப் பெயர் 'பரமேசுவரனை'க் குறிக்கும் என்பார்கள்.

பரமேசுவரன் என்பதைக் காரணப் பெயராகக் கொண்டால், ஹரியும், ஹரனும் இருவருமே பரமேசுவரர்கள் ஆகிறார்கள். இவ்விருவரையும் எல்லா வகைகளிலும் ஆச்ரயிக்கின்ற மகரிஷிகள் தாங்களும் தங்களின் தவவலிமையால் அந்த 'மகான்' என்ற பதத்திற்குத் தங்களை உரிமைப் படுத்திக் கொள்பவர்களாகி விடுகிறார்கள் என்கிற உட்பொருளை நாம் உணர வேண்டும்.

மேலே நான் 'சப்த ரிஷிகள்' என்று சொன்னேன். 'பத்து ரிஷிகள்' என்ற ஒரு கணக்கும் உண்டு. ஒவ்வொரு மன்வந்தரத்திலும் சப்தரிஷிகள் உண்டு. மற்றும் பல ரிஷிகளும் உண்டு. அதை நினைவில் கொள்ளுங்கள். இப்படிப் பார்க்கையில் ஒரு மன்வந்தரத்தில் 'பத்து ரிஷிகளாக' விளங்கியவர்கள் பிருகு, மரீசி, அத்ரி, அங்கிரஸ், புலகர், ரது, மது, தட்சர், வசிட்டர், புலஸ்தியர் என்கிற பதின்மர் ஆவார்கள். இவர்கள் எல்லாருமே பிரம்மாவின் மனத்தில் உதித்தவர்கள் (மானஸ புத்திரர்கள்) என்று புராணம் சொல்லுகிறது.

ஏனென்றால் பிரம்மாவே ரிஷிகளுக்கெல்லாம் மகரிஷி ஆவார்.

மகரிஷியான பிரம்மாவிடமிருந்து ரிஷிகளின் உருவத்தில் பகவத் அம்சமான மகான்கள் வெளிப்பட்டார்கள் என்பது அடிப்படை. "அவர்களில் ப்ருகு என்கிற மகரிஷி நான்" என்கின்றார் கண்ண பெருமான் கீதையில்!

இந்தப் பிருகு முனிவரைப் பற்றி பல விசேடங்களும் உண்டு; வருணனைகளும் உண்டு; சரித்திரமும் உண்டு. பலவிதமான பக்திச் சுலோகங்களும் உண்டு.

அந்தச் சுலோகங்களில் ஒரு சுலோகத்தின் பொருளைச் சொல்ல விரும்புகிறேன். அதிலிருந்து இக்கட்டுரையின் தனித்தன்மை வாய்ந்த சிறப்புகளைத் தொடங்கவும் விரும்புகிறேன்.

**"ஜ்வாலையுடன் பிறந்து, ஒளியை உடன்பிறப்பாய்க் கொண்டவரே! காலத்தைக் கணித்துரைத்து, வாழ்விலே வளம் சேர வழிகாட்டும் வள்ளலே! வற்றாத ஊற்றுப் போல் வருவோர்க்கெல்லாம் தெளிவூட்டும் தேவரே! பிருகு மாமுனிவரே! தங்களின் திருவடிகளைப் பணிகிறேன்!"**

மீண்டும், 'பணிகிறேன்' என்று உளமாரச் சொல்லிக் கொண்டு சில விளக்கங்களைச் சொல்லத் தொடங்குகிறேன்.

அபூர்வமான சிலரைப் பற்றிச் சொல்லும்போது, "அவர் எப்போதோ வாழ்ந்தார்; இப்போதும் வாழ்கிறார்" என்று சொல்வதுண்டு.

அந்த அபூர்வமானவர்களில் சிரேஷ்டமானவர் ப்ருகு முனிவர்.

பாரத தேசத்திற்குச் சுதந்தரம் அஹிம்சைத் தத்துவத்தின் அதீதமான பலத்தால் ஏற்படுமென்றும் முந்நூறு ஆண்டுகள் வேரூன்றி ஆண்ட பிரிட்டிஷார் அடியோடு பாரதத்தை விட்டுவிட்டு ஓடுவார்கள் என்றும் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தம்முடைய ஒப்புயர்வற்ற ஞானத்தால் கணித்து, பொன்னெழுத்தில் பொறித்தவர் அவர்;

பிரும்ம வித்தை கண்ட தீர்க்க தரிசி.

தெய்வக்ஞர்களுக்கெல்லாம் வழிபாட்டுக்குரியவர். ப்ருகு சம்ஹிதையின் மூலகர்த்தா. 'ப்ருகு சூத்திரம்' என்கிற நூலின் கிரந்த கர்த்தா.

இன்னும் பலப்பல நூல்கள். அந்த நூல்களில் எல்லாம் பலப்பல விதிமுறைகள்; கணிப்புகள் அதிசயமான விளக்கங்கள். இவற்றிற் கெல்லாம் அப்பாற்பட்டு 'பிருகு சாஸ்திரம்' என்பதோ மிக விசேடமானது. தனிப்பட்டோரின் வாழ்வுக்குத் தெய்வீகக் கண்ணாடியாக விளங்குவது இந்தப் பிருகு சாஸ்திரம். கையெழுத்துப் பிரதிகளில் பாலி மொழி எழுத்துகளிலும் வடமொழியிலும் அந்தப் பிருகு சாத்திரத்தில் இவருடைய கணக்கற்ற பிரச்னத் தாள்கள் அடங்கியிருக்கின்றன.

நான் சொல்லும் இந்தச் சாத்திரம் குறிப்பாகப் பஞ்சாப் மாநிலத்தில் உள்ள ஹோஷியார்ப்பூரில் 'பண்டிட்' எனப்படுகின்ற சிலர் அடங்கிய ஒரு குடும்பத்தில் உள்ளது. இந்த ஹோஷியார்ப்பூருக்கு நான் இருபத்தெட்டு முறை சென்றிருக்கிறேன். 28 கட்டுரைகள் 'பாலஜோதிடம்' ஏட்டில் எழுதியிருக்கிறேன்.

ப்ருகு சாத்திரத்தின் மூலம் எனக்கு அருள்வாக்குகள் பத்துத் தடவைகள் வந்திருக்கின்றன.

இன்று நான் ஜோதிடக் கலைத்துறையில் ஒரு தனித்துவம் பெற்றிருப்பதற்கு அந்த மாமுனிவரின் அருள்வாக்கே மூல பலமாகும்.

என்னை ஒரு தெய்வக்ஞன் என்றும் அவருடைய தலைசிறந்த பக்தனே நான் என்றும் 'என்னுடைய தொண்டுகள் பலருக்கும் பயன்தரும்' என்றும் அந்த ஞானத்தவ முனிவர் கூறிய வாசகங்கள் என்னை ஊக்குவித்திருக்கின்றன; உருவாக்கியிருக்கின்றன.

ஏறத்தாழ இருபது ஆண்டுகளுக்கு முன்பு விதி விளையாடிய நேரத்தில், கிரகங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து சோதித்த நேரத்தில், இறைவன் மௌனமாக இருந்த நேரத்தில், புயல் வீசும் ஆழ்கடலில் சுழன்றாடும் மரக்கலத்தின் தடுமாற்றத்தோடு முதன்முறையாக இந்த மாமுனிவரின் அருட்சக்தி வாய்ந்த ஞான பீடத்திற்குச் சென்றேன்.

கையகலத் தாளிலே அபயக்குரல் கொடுத்தார் இந்த அருளாளர். காது குளிர்ந்தது. நெஞ்சம் நெகிழ்ந்தது.

வீசிய புயல் அடங்கிற்று; ஆடிய மரக்கலம் கரை சேர்ந்தது.

ஆம். இப்படி ஒன்றா, இரண்டா?

என் ஒருவனுக்கு மட்டும் தானா?

எத்தனை அன்பர்களுக்குத் துயர் துடைத்து, அருள் பாலித்திருக்கிறார்; அருள்பாலித்து வருகிறார்!!

ஒருமுறை என் பிரச்னத்திற்கு வந்த விளக்கத்தில், "தட்சிண பாரதத்தில் என்னுடைய நாமத்தைச் சொல்லிக் கொண்டு என்னைச் சரணடைந்திருக்கும் தெய்வக்ஞனே! நீ என் தலைசிறந்த பக்தன் என்று நான்

உன்னை ஏற்றுக் கொண்டுவிட்டேன். கிரகங்களை ஆராயும் சக்தி உனக்கு இருக்கிறது. பாத்திரம் அறிந்து பலனைச் சொல்லு; அதைப் பலிக்க வைப்பது என் பொறுப்பு!" என்று பொறிக்கப்பட்டிருந்தது.

"கலைத்துறைகளை எல்லாம் கடந்து, எழுத்துத் துறைகளை எல்லாம் தாண்டிச் சென்று, இந்தத் தெய்விக, ஜோதிட, விஞ்ஞானக்கலையில் நீ முற்றிலுமாக ஈடுபடுவாய். எல்லா நிலையினரும் உன்னிடம் வருவார்கள். உன் நாவில் நானிருப்பேன். உன் வாழ்வில் சுபிட்சம் நிறைந்திருக்கும். அஞ்சாதே! உன்னை அணுகி வருவோர் என் அருளால் உயர்வாழ்வு பெறுவார்கள். பலருடைய விதியைத் தீர்மானித்து, நல்வழி காட்டும் உன்னுடைய புனிதத் தொண்டுக்கு நான் மூல பலமாய் இருக்கிறேன். துணிந்து பணிசெய்"——

மேலும் சொல்லிக் கொண்டே போகலாம். அத்தனையும் நிதர்சனமாக நான் கண்டவை.

எனக்கென்று தனி மந்திரங்கள் சொல்லித் தந்திருக்கின்றார் தம்முடைய சாத்திரத்திலே! மறைநூல்களில் காணாத மந்திரங்கள் அவை. என் ஒருவனுக்கென்றே அந்த இறைச் சக்தியால் வழங்கப்பட்டவை. அவற்றை நான் தாரகமாகக் கொண்டிருக்கிறேன்.

ஆரம்பத்தில் நான் ஜீவாத்மா சரீரத்தில் புகுந்து, பரமாத்மாவின் ஆணைப்படி சரீரத்தை இயங்க வைக்கிறது என்று குறிப்பிட்டேன் அல்லவா? அந்தச் சரீரத்தில் உள்ள உறுப்புகளில்-பொறிகளில், புலன்களில் இப்படி ஒவ்வொன்றிலும் பரமாத்மாவின் மூல தத்துவம் ஆழப் பதிவதற்கு ஜீவாத்மா தூண்ட வேண்டும். விதி குறுக்கிட்டாலும் கூட, மதியின் மூலம் ஒரு நிறைத்தன்மையை வருவித்துக் கொண்டு, தன்னைச் சத்ரு ஜித்தனாக உயர்த்துகின்ற பயிற்சியை: வளர்க்க வேண்டும்.

நாம் விதியினால் எந்த அளவுக்குச் சங்கடப் பட்டாலும் மனம், புத்தி ஆகியவற்றால், "இறைவா, உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே" என்கிறபடி மூலப் பொருளாம் பகவானுடைய காலைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்ள முயலவேண்டும்.

கர்மவினையால் பாதிக்கப்படுகிற சரீரத்தில் உழலுகின்ற நம்முடைய ஜீவாத்மா, பிரார்த்தனையின் அடிப்படையில் வைகுண்டவாசனின் திருவருளைப் பெற்று, பாகவதோத்தமனாக நம்மை ஆக்கிவிடும் என்பது மறுக்க முடியாத உண்மை.

கண்களால், அவனைக் காணவேண்டும். காதுகளால் அவன் நாமத்தைக் கேட்க வேண்டும். நாவினால் அவன் திருநாமத்தை உச்சரிக்க வேண்டும். கரங்களால் கும்பிட வேண்டும். நாவினுள்ளே இடையறாது ஜபிக்க வேண்டும். மலர்களால் அர்ச்சிக்க வேண்டும். எல்லாவற்றிற்கும் மேம்பட்ட நிலையில் அவனிடம் நிலையாக நம் உள்ளத்தை ஆழவைக்க வேண்டும். அதாவது நம் சிந்தனையில் அந்த இறைச் சக்தி நிறைந்து, படர்ந்து ஒளிரும்படி நம்மை உருவாக்கிக் கொள்ள வேண்டும்.

இப்படிச் செய்து கொள்வதனால்தான் விதியின் விளையாட்டுகளிலிருந்து, இந்தச் சரீர அவஸ்தையிலிருந்து ஜீவாத்மா தன்னை மீட்டுக் கொள்ள முடியும்.

இது பெரிய தத்துவம்தான். ஆனால் தீவிர முயற்சியால் எளிய முறையில் பெறக்கூடியது.

இது 'கடினம்' என்று நினைத்தால் கடினம்; 'எளிது' என்று நினைத்தால் எளிது. எண்ணத்தின் ஆழத்தைப் பொருத்தது இதுவென்று சொல்வேன்.

துறவிகளுக்கு மட்டும் பகவான் சொந்தமுள்ளவராகமாட்டார்; இல்லறத்தில் உள்ளவருக்கும் பகவானுடைய பரிபூரண ஐக்கியம் ஏற்பட்டுவிடுமென்பதற்கு எத்தனையோ ஆதாரங்கள் உண்டு.

ப்ருகு முனிவர் உள்ளத்தால் எல்லாவற்றையும் துறந்தவர். ஆனால் உலக க்ஷேமத்திற்காகத் தம்முடைய சக்திகளையெல்லாம் பிரயோகம் செய்தார். 'பற்றும் பற்றற்று இரு' என்கிற பொன்மொழிக்கேற்ப உலக நலம் என்கிற **பற்றுற்று,** தன்னலம் என்கிற **பற்றற்று** விளங்கியவர் அவர்.

இவரின் மனைவியர் இருவர் என்றும், அவர்களின் பெயர் புலோமசை, க்யாதி என்றும் சொல்வார்கள்.

சுக்கிரனை இவரது புத்திரன் என்றும், பௌத்திரன் என்றும் இருவிதமாகச் சொல்கிறார்கள்.

தேவ குருவாகிய பிருஹஸ்பதியும், அசுர குருவான சுக்கிராச்சாரியாரும் எவ்வளவு பிரசித்தி பெற்றவர்கள் என்பதும், ஜோதிட சாத்திரத்தில் இந்த இருவரும் எப்பேர்ப்பட்ட சுபக்கிரகங்கள் என்பதும் குறிப்பிடத் தக்கவை.

பிருகு முனிவரின் வம்சத்தில் வந்தவர்கள் பலர். நாமறிந்த மார்க்கண்டேயன், அவரது தந்தை மிருகண்டு இவர்கள் எல்லாரும் பிருகு வம்சத்தைச் சேர்ந்தவர்கள்தான்.

இன்னும் ஜமதக்னி என்று ஒரு மாமுனிவரின் பெயரைக் கேட்டிருப்போம். அவரும் இவருடைய வம்சத்தில் வந்தவர்தான்.

ஒரு விசேடமான தத்துவம் நிறைந்த, மனத்தைக் கவர்கின்ற, சிந்தையைக் கிளறுகின்ற ஓர் அற்புதக் கதை இவரின் வாழ்க்கையில் உண்டு.

அது இவரது பெரிய வரலாற்றில் ஓர் அத்தியாயம் என்று சொல்லலாம். அந்தச் சிறப்புமிகு கதைக் குறிப்பை, தத்துவத்தின் பூரணத்துவம் நிறைந்த அறிவுத் துளியைச் சொல்லி, அத்துடன் இக்கட்டுரையை நிறைவு செய்ய விரும்புகிறேன். (ப்ருகு சரித்திரம் முழுவதையும் சொல்ல வேண்டுமென்றால் வற்றாத அமுதசுரபியின் ஏடுகள் நீண்டு கொண்டே போகும். ரத்தினச் சுருக்கம் என்பார்களே, அதைத் தருவதுதான் என்னுடைய அடிப்படை நோக்கம். சுருக்கமே பெருக்கமாக இருக்குமானால் வேறு வழியில்லை. இதனிலும் சுருக்கமாக எழுத எனக்குச் சக்தியில்லை என்றே சொல்ல வேண்டும்.)

மகாபாகவதம் என்கிற இலக்கியத்தை இயற்றியுள்ளார் அருளாள தாசர் என்னும் மாகவி.

மேலும் எத்தனையோ நூல்கள் அற்புதமாகப் பிருகு முனிவரைப் பற்றிப் பல விஷயங்களைச் சொல்லியிருக்கின்றன என்றாலும், 'ப்ருகுப் படலம்' என்கிற ஒரு பகுதியில் பரீட்சித்து மன்னன் சுகப்பிரம்மத்துடன் உரையாடும்போது, ஒரு பிரச்சினை எழ, அந்தப் பிரச்சினைக்கு விளக்கம் தருகிறார். சுகப்பிரம்மம் என்ற முறையில் ஓர் இனிய சம்பவம் அருளாளதாசரின் பாகவதத்தில் விசேடமாகத் தெரியவருகிறது.

"மும்மூர்த்திகள் என்று சொல்லுகிறீர்களே, மும்மூர்த்திகளின் தன்மைகள் என்ன? இவர்களில் முதல்நிலை வகிப்பவர் யார்?" என்று பரீட்சித்து சுகரைக் கேட்கிறான்.

அதற்குச் சுகர் சொல்கிறார், "திருமாலுக்குத் தனிச் சிறப்பு உண்டு என்றாலும் அவர் காக்கும் கடவுள்தானே தவிர, படைப்பதற்குப் பிரும்மாவும், பிறவித்துன்பத்தை

முடிப்பதற்குச் சிவனும் இல்லையென்றால் ஜீவாத்மா வுக்கு மோட்சம் என்பது இருக்காது!" என்று, இப்படியொரு மூன்று சக்திகளின் பிணைப்பை மூன்று வடிவங்களில் பரம்பொருளாம் இறைவன் மூன்று கோணங்களில் அமைத்துக் கொண்டிருக்கிறார் என்று சொல்கிறார் சுகர்.

ஏகப் பரம்பொருளான ஒன்று மூன்றாக விரிந் திருப்பதாக ஒரு மாயையை உருவாக்கி, அந்த மாயை யில் மனித ஆத்மாவை இயக்குகின்ற பொறுப்பை ஏற்றிருக்கிறார் பரம்பொருள்! என்கிற முன்னுரையுடன் ஒரு கதையைச் சொல்லுகிறார் சுகர்.

சாத்விகம், ராஜஸம், தாமஸம் என்ற மூன்று குணங்கள் உண்டு. சரஸ்வதி நதிக்கரையில் பிருகு முதலிய முனிவர்கள் ஒன்று கூடுகிறார்கள். அயன், அரன், அரி இம்மூவரில் யார் சாத்விக குணமும், யார் ராஜஸ குணமும், யார் தாமஸ குணமும் உள்ளவர்கள் என்று விவாதிக்கிறார்கள் அவர்கள்.

நான் ஆராய்ந்து முடிவு சொல்லுகிறேன் என்று புறப்படுகிறார் பிருகு முனிவர். தன் மானஸப் பிதாவான பிரும்மாவிடம் செல்கிறார். தந்தையைத் தனயன் வணங்க வேண்டுமல்லவா? வணங்கவில்லை. பிரும்மன் சீற்றம் கொள்கிறார். உடனே பிருகு முனிவர், 'இவர்தான் ராஜஸ குணம் உடையவர்' என முடிவு செய்கிறார். ஆகவே ராஜஸ குணம் உடையவர் பிரம்மாவே என்கிற தீர்ப்பு வந்துவிடுகிறது.

பின்னர் கயிலைக்குச் செல்கிறார் பிருகு முனிவர். பார்வதியுடன் இருக்கும் சிவனைக் கண்டதும் முதலில் வணங்கவேண்டுமல்லவா? வணங்காமல் இறைவன் பக்கத்தில் சென்று அவரை ஆரத் தழுவுகிறார் பிருகு முனிவர். சினம் கொள்ளும் சிவன், "காலனுக்குக் காலனாகிய என்னை வணங்காமல் என் மெய்யைத் தழுவிக் கொண்டாயா?" என்று சூலத்தை ஏந்திக் கொண்டு புறப்படுகிறார். ஆனால் பார்வதி சிவனின் கோபத்தை மாற்ற, சிவன் தன்னுடைய சீற்றம் தணிகிறார். அப்போது பிருகு முனிவர், "இந்தச் சிவன் தமோ (தாமஸ) குணத்தைக் கொண்டவர்" எனத் தீர்மானிக்கிறார்.

பின்னர் நேராகத் திருப்பாற்கடல் சென்று, பாம் பணையில் பள்ளி கொண்டிருக்கும் பரந்தாமனைப் பார்க்கின்றார். அவரையும் இவர் வணங்கவில்லை. சிவனைத் தழுவியதுபோல் அவரைத் தழுவவும் இல்லை. அருகில் சென்று திருமாலின் மார்பைத் தன் காலால் எட்டி உதைக்கின்றார். அப்போது என்ன நடந்தது என்பது ஒரு மகத்தான அதிசயம்! உதைத்த பிருகுவின் பாதத்தை நீரால் கழுவி, அதைப் புனித நீராக மதித்துத் தன் சிரத்தில் தெளித்துக் கொள்கிறார் விஷ்ணு. புன்னகையுடன் மலர்ந்து நோக்குகிறார் ப்ருகு முனிவரை. 'சத்வ குணம் நிறைந்த முனிவரே!' என்று அழைக்கிறார். மேலும் திருமால் கூறுகிறார், 'தங்கள் பாதம் என்மீது பட நான் என்ன புண்ணியம் செய்தேன்!" என்று. அதுகேட்டு, உடலும், உள்ளமும் சிலிர்த்துப்போகும் பிருகு முனிவர் திருமாலை வணங்கி, நீண்ட நேரம் துதிசெய்து, "பரந்தாமா! நீயே சத்வ குணச் சொரூபன்" என்கிறார்.



பின்பு தம்முடைய முடிவை இதர முனிவர்களிடம் வந்து பிருகு முனிவர் கூற, முனிவர்கள் எல்லாரும் திருமாலையே முழுமையாகத் தொழவேண்டும் என்கிற சித்தாந்தத்தை உருவாக்குகிறார்கள்.

**இதனால் எல்லாரும் மோட்சம் சென்று விடுகின்ற னர். அதாவது எல்லா ஜீவாத்மாக்களும் மோட்சம் செல்கிறார்கள்.**

இதனால் யமனின் உலகம் சூனியமாக, யமதர்மன் உடனே முறையிட, பிரம்மனும் சிவனும் திருமாலிடம் இதை உரைக்க, அடிப்படைத் தத்துவத்தை நிலை நாட்ட விரும்பிய திருமால் சிவபெருமானை நோக்கி, "நீங்கள் மோகன நூல் மொழிவீராக" என்கிறார்.

அந்த மோகன நூலிலே மயங்கிய ஜீவாத்மாக்கள் உலக போக மயக்குகளில் உழன்று, பல தெய்வங்களையும் பின்பற்றத் தொடங்குகிறார்கள்.

இவ்வாறு சுகர் பரீட்சித்திடம் கூறியதாக ஓர் அரிய கதை கூறப்படுகிறது.

இந்தக் கதை வேறு பல வகையிலும் சொல்லப் படுவதுண்டு. இது ஒரு வகை. எல்லா வகைகளிலும் தனித்தத்துவம் உண்டு. இதிலும் தனித்தன்மை வாய்ந்த சில தத்துவங்கள் தெரிய வருகின்றன. உலகியல் வாழ்வில் உள்ள ஜீவாத்மாக்கள் இறைச்சக்தியை உள்ளபடி உணர்ந்து, எந்தப் பேதமும் கருதாமல் மனத்தை ஈடுபடுத்த வேண்டும் என்பது ஒரு தத்துவம்.

'மூன்று குணங்கள்' என்று சொல்லப்பட்டாலும் பரம்பொருள் அம்முக்குணங்களையும் ஒரு காரணத்திற் காகத் தன்னுடைய மூன்று பகுதிகளாக உருவாக்கி இயக்குகின்றது என்பது மற்றொரு தத்துவம்.

சத்துவம் (சாத்வீகம்) என்பதுதான் மிக உயர்ந்தது என்பது வெளிப்படவேண்டுமானால் அவற்றுக்கு மாறுபட்ட தாமஸம், ராஜஸம் ஆகிய குணங்களும் இருக்கத்தான் வேண்டும் என்பது மற்றொரு தத்துவம்.

இந்தப் பின்னிரண்டு குணங்களையும் வென்று, முன்னதாகச் சொல்லப்பட்ட சத்துவத்தை அடைவது தான் ஜீவாத்மா மோட்சத்தை அடைவதற்குரிய சாதனமாகும் என்பது இறுதியான தத்துவம்.

இன்றைய தினம், ப்ருகு முனிவர் அவர்களுடைய வரலாறு ஆனாலும் சரி, அவரால் படைக்கப்பட்டுள்ள நூல்களின் வரலாறு ஆனாலும் சரி, எத்தனையோ தத்துவங்களைச் சொல்லிக் கொண்டே போகலாம்.

அவற்றையெல்லாம் முறையாக உள்ளது உள்ளபடி அறிந்து, 'புராணக் கதைதானே' என்று எண்ணாமல் 'அவற்றின் உட்பொருள் என்ன' என்பதை ஊன்றிக் கவனித்து, வாழ்க்கையைச் செம்மைப்படுத்திக் கொண்டால் இவ்வுலகில் வாழ்வாங்கு வாழ்வதுடன், பிறகு பேரின்பத்தை அடைந்து, இறைச் சக்தியில் இரண்டற இணையமுடியும். **இந்த அறிவுதான் அறிவுகளில் தலைசிறந்த அறிவாகும்** என்ற கருத்தை நான் வழிபடும் பிருகு முனிவரின் திருவாய் மொழிப்படி, இந்தத் தீபாவளித் திருநாளில் வாசகர் களுக்குச் சமர்ப்பணம் செய்கின்றேன்.

ஃ

## இன்றே நீ

கலைப்பொழிலன்

ஆட்டுத் தோலின் மயிரினால்
அழகாய்க் கம்பளி நெய்யலாம்;
மாட்டுத் தோலால் கால்களிலே
மாட்டும் காலணி செய்யலாம்

பெரிய யானைக் கொம்பினால்
பொம்மை பலவும் பண்ணலாம்;
எருமைக் கொம்பைச் சீவினால்
ஏற்ற சீப்பும் செய்யலாம்.

பாம்புத் தோலால் அழகான
பைகள் பலவும் பண்ணலாம்;
வீம்பு மனிதன் தோலாலே
வினையாய் என்ன செய்யலாம்?

அறிவு கொண்ட மனிதனின்
ஆவி போன உடம்பினால்
பெறுவதில்லை ஒன்றுமே
பிறர்க்கு உதவு இன்றே நீ!

## நமக்குத் தேவை

கவிஞர் நெய்தற்கிழான்

உள்ளத்தில் அன்பு சுரக்கணும் - அது
ஊற்றாய்ப் பெருகி வழியணும்.
உள்ளத்தில் கயமை ஒடுங்கணும் - அது
ஓங்காமல் தேய்ந்து மறையணும்.

எண்ணத்தில் உயர்வு தேங்கணும் - அது
எப்போதும் குவையா திருக்கணும்.
எண்ணத்தில் இழிவு நீங்கணும் - அது
என்றுமே வாரா தொழியணும்.

மனத்தில் செம்மை மலரணும் - அது
மடியாது நாளும் சிறக்கணும்.
மனத்தில் ஆசை அகலணும் - அது
மாயமாய்ப் பறந்தே ஓடணும்.

வாக்கினில் வாய்மை வளரணும் - அது
வளமாகி மேலும் துலங்கணும்
வாக்கினில் பொய்ம்மை அழியணும் - அது
வாழ்வில் பொய்யாய்ப் போகணும்.




## செந்தமிழ்ப் பெண்ணே!... கனிமொழியே!

கவிஞர் எஸ். சங்கரநாராயணன்.

செந்தமிழ்ப் பெண்ணே! கனிமொழியே! - உந்தன்
சேல்விழி வீச்சால் நிலைகுலைந்தேன்!
மந்திரம் போட்டெனை மயக்கிவிட்டாய்! - காதல்
மயக்கம் தீர வழியுரைப்பாய்!

காலைப் பொழுதில் வாசலிலே - நீயும்
காலணிச் சிலம்பு ஒலித்திடவே,
கோலமிடுமெழில் நான்கண்டு - உள்ளம்
கொள்ளை போனதை நீயறிவாய்!

மாலைப் பொழுதில் குடமெடுத்து - நீயும்
மாமரச் சோலை தனில் நடக்க
வேலை முடித்து நான் வரும்போது - மலர்க்கணை
வீசியே என்னுளம் வீழ்த்திவிட்டாய்!

இரவெலாம் உனையே எண்ணியெண்ணி - நானும்
இன்பக் கோட்டை கட்டிவிட்டேன்!
கரம்பற் றிடவழி தெரியாமல் - தமிழில்
காதல் கீதம் இசைக்கின்றேன்!

ஏங்கித் தினமும் தவிப்பதற்கு - கண்ணே
என்னிட மில்லை திடமனது!
தாங்கித் தழுவிட நீயிசைந்தால் - தங்கத்
தாலியுன் கழுத்தில் அணிந்திடுவேன்!

# கால பாசம்

## மீ.ப.சோமு

வசந்தப் பறவை பனி முகட்டிலிருந்து சிறகடித்து உதயசூரியனை நோக்கிப் பறந்தது. வேனிற்காலத்தின் ஒளி–மெருகு இயற்கையின் மேனியிலே புதிய சோபையைத் தந்தது. சோலைகளில் மலர்கள் சிரித்தன. மாமரங்கள் எல்லாம் தளிர்விட்டுப் புதுப் பெண்ணைப் போலக் குலுங்கி நின்றன.

மதுரைமா நகரில் பாண்டிய மன்னனுடைய பூங்காவில் அரசகுமாரி தன்னுடைய சேடியருடன் அழகிய மான் குட்டி ஒன்றைக் கயிற்றிலே கட்டிப் பிடித்துத் துள்ளவிட்டு விளையாடிக் கொண்டிருந்தாள். அந்தக் காட்சி வசந்த காலத்தின் எழிலுக்கு ஒப்பற்ற அணியாக விளங்கியது.

ஆவி உலகிலே யமனும் அவனுடைய தங்கை யமியும் வசந்த காலத்தின் இந்த இனிமையை நுகர்ந்தவர்களாய்க் காற்று வெளியில் இன்பத்தோடு நடந்தார்கள். அப்பொழுது யமி கேட்டாள்: "அண்ணா! எனக்கு அந்த மான் குட்டி வேண்டும்!"

யமி சுட்டிக் காண்பித்த திசையை ஆவலோடு நோக்கினான் காலதேவன். மதுரைமா நகரத்து அரச வனத்தில் பாண்டிய குமாரியும் அவளுடைய சேடியரும் உல்லாச மிகுந்தவராய் மெல்ல மெல்லத் துள்ளிக் குதிக்கும் அந்த வண்ண மான் குட்டியோடு விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

"அந்தப் பொன் மானா வேண்டும் உனக்கு?" என்று கேட்டான் யமன். அவனுடைய குரலில் ஒலித்த உணர்ச்சி, வியப்பை மட்டும் காட்டவில்லை. இரக்கமும் இருந்தது அதில்!

உயிர்களை அவற்றின் உறைவிடமான உடலினின்று பிரித்தெடுத்துச் செல்லும் யமதேவனுக்கு இரக்கமா? ஆமாம்; அவனுக்கும் இதயம் என்ற ஒன்று இருந்துதானே ஆகவேண்டும்?



"அண்ணா! அது துள்ளுவதும், ஓடுவதும், அங்கங்கே குதித்து நின்று புல்லைக் கொறிப்பதும் எவ்வளவு அழகாயிருக்கிறது! அது வேண்டும் எனக்கு" என்றாள் யமி.

இருண்ட அமாவாசை வானத்தில் நட்சத்திரங்கள் மின்னுவதுபோல், காலனுடைய இதயத்தில் உணர்ச்சிகள் மின்னுவதற்குக் காரணமாக விளங்கியவள் யமி. அவனுடைய ஒரே தங்கை. இதய தத்துவத்தின் ஜீவனாக யமனுடைய உள்ளத்திலே துடித்து நிற்கும் அந்தச் சகோதர பாசத்தினால் அவன் செய்யாத காரியம் ஒன்றுமே இல்லை.

பாண்டியனுடைய மகள் பொன்மேனி, வண்ண மானுடைய விளையாட்டில் சொக்கியவாறு, தன் சேடிகளுடன் கைதட்டிக் குலுங்கிக் கொண்டிருந்தாள். வேனில்–நங்கை கொலுவிருந்த அந்தச் சோலையிலே இளம் பெண்களுடைய சிலம்பு – நகையும், மானின் துள்ளலும் யமனுடைய உள்ளத்தில் எல்லையற்ற எழிலுணர்ச்சியை ஊட்டின.

"கண்ணே! இருந்திருந்து உன்னுடைய கண் அந்த வண்ண மானிடமா விழுந்தது? இந்த ஆவி உலகத்தில் உன்னோடு விளையாடத் துடிக்கும் அழகழகான மயில்களும், கிளிகளும், அன்னப் பறவைகளும் எத்தனை! அவையெல்லாம் சலித்துவிட்டனவா உனக்கு?" என்று கேட்டான் யமன்.

"அண்ணா, திரும்பத் திரும்ப இதென்ன கேள்வி! அந்தப் பொன் மான் எனக்கு வேண்டும். என்னுடைய உயிரே அதில் லயித்துவிட்டது. அதைக் கொண்டு வா. இல்லையென்றால் என் உயிரை எடுத்து விடு!"

காலனுடைய மனத்தில் தங்கையின் அந்த வார்த்தை அம்புபோல் தைத்தது. தன்னுடைய உயிர், தன் தங்கையின் உயிர் என்ற பேதம், அவனுக்கு எப்பொழுதுமே இருந்ததில்லை.

"யமி! சலித்துக் கொள்ளாதே, உன்னுடைய விருப்பத்தை நிறைவேற்றுகிறேன்" என்று சொன்னான் யமன்.

அடுத்த வினாடி, அவனுடைய கையிலிருந்த பாசக் கயிறு பாண்டிய குமாரியினுடைய வண்ண மானின் கழுத்தைச் சுற்றி வளைத்தது.

மதுரை மாநகரில், பாண்டியனுடைய எழிற் பூங்காவில், பொன்மேனி தன் பூங்கரத்திலே பிடித்து விளையாடிக் கொண்டிருந்த அந்த வண்ண மானுக்குக் கழுத்திலே கட்டியிருந்த சலங்கைக் கயிறு இறுகியது போன்று ஒரு



திகை முட்டல். மூச்சுத் திணறியது. மருண்ட விழிகள் மயங்கி மயங்கிச் செருகின. இரண்டு துளிக் கண்ணீருடன் அந்தப் பொன் மான் குட்டி தரையிலே சுருண்டு விழுந்தது.

2

யமியும் பொன் மானும் ஆவி உலகச் சோலையிலே விளையாடத் தொடங்கினார்கள். சற்று நேரம் யமனுடைய உலகத்தின் புதுமைக் காட்சிகளிலே திகைத்துத் துள்ளித் துள்ளி ஓடிய பொன் மான், நேரம் ஆக ஆக மருளத் தொடங்கிற்று. யமியினுடைய தோற்றத்தில் பாண்டிய குமாரியை எண்ணிச் சற்று நேரம் ஏமாந்த அந்த விழிகள், இப்பொழுது திகைப்பும் அச்சமும் மருட்ட, ஒன்றும் புரியாமல் மறுகின. இதைக் கண்ட யமி மான் குட்டியின் வாயிலே ஒரு கொத்துப் புல்லைக் கொண்டு கொடுத்தாள். மானோ நாக்கையே நீட்ட மறுத்தது.

காலதேவனுடைய மனத்தில் கலக்கம் ஏற்பட்டது.

மதுரையிலே தன்னோடு விளையாடிய தன் உயிர்த் துணையான அந்த வண்ணமானை எண்ணிப் பாண்டிய குமாரி கண்ணீர் வடித்தாள். இங்கேயோ, அவளை எண்ணி அந்தப் பொன் மான் மருண்டு அசைவற்று நின்று கண்ணீர் வடித்தது. யமியோ என்றால், மான் தன்னோடு விளையாடாமல் ஒதுங்கி நிற்பது கண்டு மனம் வருந்தினாள். என்ன செய்வான் காலதேவன்?

"அண்ணா! இந்த மான் அங்கேயெல்லாம் எத்தனை களிப்போடு விளையாடிக் கொண்டிருந்தது? இப்பொழுது மட்டும் ஏன் இப்படி ஏங்கி நிற்கிறது? புல்லைக்கூடத் தொடவில்லையே! சொல்லேன், என்ன காரணம்?" என்று கேட்டாள் யமி. அவளுடைய குரலில் திகைப்பும் வேதனையும் தொனித்தன.

"கண்ணே! இதய பாசம் என்பது வலிமையானது. கால பாசத்தைவிடக் கடுமையாக இருக்கிறது. உயிரைப் பிரித்தேன். உள்ளத்தைப் பிரிக்க முடியவில்லையே!" என்றான் யமன். அந்த வார்த்தைகளை யமியினால் சரியாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. அந்த இளம் உள்ளத்துக்கு மான் தன்னோடு விளையாடாத ஏக்கம் தாங்க முடியாத ஏக்கமாக இருந்தது. இது கண்டு யமனுடைய கலக்கம் இன்னும் அதிகமாயிற்று.

யமன் யோசித்தான். யமியின் துயரம் தீரவேண்டும் என்றால், மானின் துயரம் தீரவேண்டும். மானின் துயரம் தீரவேண்டும் என்றாலோ, பாண்டிய குமாரியிடம் அதைச் சேர்ப்பிக்க வேண்டும். பாண்டிய குமாரியிடம் அதைச் சேர்ப்பிக்க வேண்டும் என்றால், உலகில் அது மீண்டும் பிறப்பெடுக்க வேண்டும். தானோ மரணத்திற்குத்தான் அதிகாரி. உயிர்களை உலகிலே படைத்து விளையாட விடுவது தனக்கு அப்பாற்பட்ட செயல். அப்படியானால் என்னதான் செய்வது?

பாண்டிய குமாரியின் அழுகுரல் காற்றிலே மிதந்து வந்து கொண்டிருந்தது.

காலதேவனுடைய மனத்தில் இரக்கம் உதித்தது. யமி, மான், பாண்டிய குமாரி–இந்த மூன்று இதயங்களின் துக்கத்தையும் நீக்குவதற்கு இப்பொழுது ஒரு வழிதான் தோன்றியது அவனுக்கு. உயிரை உலகிலே அனுப்ப முடியாது; ஆனால், உலகிலிருந்து பிரிக்க முடியுமல்லவா தன்னால்? அதைச் செய்து விட்டால்....?

யமன் நினைத்தான்: பாண்டிய குமாரியை மானிடம் கொண்டு சேர்த்துவிட்டால் என்ன? மூன்று இதயங்களின் துயரமும் தீருமல்லவா?

காலதேவனுடைய மனத்தில் இவ்வாறு ஏற்பட்ட உண்மையான இரக்கம், பாண்டிய குமாரியின் மரணத்துக்குக் காரணமாயிற்று.

உலகமோ மானைத் தொடர்ந்து தானும் மடிந்து விட்ட அரசகுமாரியை எண்ணி வருந்தியது. வருந்தியதோடு இல்லை. யமனுடைய இரக்கத்தைப் புரிந்து கொள்ளாமல் அவனுக்குக் கல்மனம் என்று திட்டியது. யமன் திகைத்தான்.

மூன்று உயிர்களிடம் தனக்கு ஏற்பட்ட அன்பு காரணமாக, தான் செய்த ஒரு காரியம் எவ்வளவு பெரிய பழியைத் தனக்குக் கொடுத்துவிட்டது என்று வருந்தினான் யமன். உண்மையில், உணர்ச்சியின் வசப்பட்டு நின்ற காலதேவன், மானுக்காகவும் பாண்டிய குமாரிக்காகவும் உலகில் வடிக்கும் கண்ணீரைக் கண்டு கலங்கினான்.

'என்ன தவறு செய்துவிட்டோம்! தங்கையிடம் உள்ள பாசம் எத்தகைய காரியத்திற்கு நம்மை ஆளாக்கி விட்டது?'

என்றெண்ணியதும் காலனின் கண்களில் நீர் அரும்பிற்று. அந்த நேரம் கையிலே தாங்கிய நாட்குறிப்புடன் அங்கு தோன்றினான் சித்திரபுத்திரன்.

"யாரது, ராயசமா?" என்று அவனை வரவேற்றான் யமன்.

சித்திரபுத்திரன் தன்னுடைய கையிலே சுருட்டி வைத்திருந்த ஓலையைப் பிரித்தான்.

"என்ன, இன்று கொண்டு வரவேண்டிய உயிர்கள் எவை?" என்று கேட்டான் யமன்.

பட்டியலை வரிசையாக வாசித்து வந்த சித்திரபுத்திரன், "மதுரைமா நகரில் பாண்டியனுடைய குமாரி பொன் மேனியும், அவளுடைய பொன்மானும்" என்று முடித்தான்.

"எது முதலில்? மானா அல்லது மகளா?" என்று கேட்டான் காலன்.

"மான் குட்டி முதலில். அதையடுத்து அதனுடைய உயிர்த் துணைவி அரசகுமாரி. உயர் திணை என்பதனால் மகளை முதலிலே குறிப்பிட்டேன்" என்றான் சித்திரபுத்திரன்.

"உயர் திணையாவது, அஃறிணையாவது! பாசம் என்ற ஒன்றை எண்ணும்போது மகளும் மானும் இருவருமே உயர்திணைதான்! அந்த உயர்வு காரணமாகத்தானோ என்னவோ, என்னையும் அறியாமல் நானே நேரில் போய் இரண்டு உயிர்களையும் கொண்டுவந்துவிட்டேன்" என்றான் யமன்.

"அப்படியானால் தூதுவர்களை அனுப்ப வேண்டாமா?" என்று கேட்டான் சித்திரபுத்திரன்.

"ராயசம்! நான் என்னவோ என்னுடைய கையிலே தான் மரணம் நின்று ஜீவிக்கிறது என்று நினைத்தேன்.





நீ பட்டியலைப் படித்த பிறகுதான் எனக்கே கண் திறந்தது!" என்றான் யமன்.

"நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லையே!" என்றான் சித்திரபுத்திரன்.

"உன்னுடைய பட்டியலின் விவரம் தெரியும் முன்பே, என்னையும் அறியாமல் அதே காரியத்தைச் செய்திருக்கிறேன். என்ன ஆச்சரியம்! எனக்கு இதயம் என்று ஒன்று இருப்பதாகவும், பாசத்தினால் ஏதேதோ செய்து விட்டதாகவும் நினைத்தேன். அது தவறு. என்னுடைய கையிலே பாசக் கயிறு எப்படி ஒரு கருவியாக இயங்குகிறதோ அப்படியேதான் காலம் என்ற ஒரு பெரும் நியதியின் கையிலே நான் பாசக் கயிறாக இயங்குகிறேன். அவ்வளவுதான்! என்னுடைய உணர்ச்சிகள் என்பவையெல்லாம் அந்த நியதியின் இயக்கங்கள்; என்னுடைய செயல்கள் எல்லாம் அந்த நியதியின் பிரதிபலிப்புத்தான்!"

யமனும் சித்திரபுத்திரனும் ஏதேதோ தத்துவங்கள் பேசினார்கள். யமியின் காதில் எதுவுமே விழவில்லை. அசைவற்று நின்ற மானுக்கு அருகிலே கவலையோடு உட்கார்ந்திருந்த யமியின் காதில் நூதனமான இளஞ்சிரிப்பொலி கேட்டது. திரும்பிப் பார்த்தாள். பாண்டிய குமாரி ஆவி உலகச்சோலையிலே நுழைந்து கொண்டிருந்தாள். மானைக் கண்டு அவள் சிரித்தாள். அவளைக் கண்டு மான் துள்ளியது. மான் துள்ளியதைக் கண்டு களிப்போடு குதித்தாள் யமி!

---

## வரம் தருவாயே

க. இராமச்சந்திரன்



*வரம் தருவாயே - இறைவா*
*வரம் தருவாயே*
*வையத் துக்கே வளம் கொடுக்கும்*
*வல்லமையை நாங்கள் பெற*
*வரம் தருவாயே.*

*உள்ளம் உள்ள மனிதர் எல்லாம்*
*நல்ல நல்ல செயல்கள் செய்து*
*இல்லா மையை ஒழித்து விட*
*எல்லா முமே பெற்றுவிட - வரம் தருவாயே*

*இனம் மொழி மதங்கள் எனும்*
*எல்லை களைக் கடந்து நின்று*
*எல்லா ருமே ஓரினமாய்*
*இன்றும் என்றும் வாழ்ந் திருக்க - வரம் தருவாயே*

*உலக வளம் பெருக்கு கின்ற*
*உயர்ந்த தொழில் அனைத் தினிலும்*
*உண்மை யிலே இந்தியர்கள்*
*ஓங்கு திறம் பெற்றொளிர - வரம் தருவாயே*

*வாழ வைத்து வாழு கின்ற*
*வாழ்க்கை முறை கடைப் பிடித்தே*
*வையத் துக்கே புத்தம்புது*
*வசந்த சுகம் நாங்கள் பெற - வரம் தருவாயே*

# மனங்கவர்ந்த மக்கள் தலைவரும் நானும்..

**கவிஞர் இரவிபாரதி**

1969ஆம் ஆண்டு நவம்பர் திங்களில் ஒரு நாள். தேதி சரியாக நினைவில்லை. அன்று மாயவரம் என அழைக்கப்பட்ட இன்றைய மயிலாடுதுறையில் சிதம்பரம் பூங்காவில் நடிகர் திலகம் சிவாஜி கணேசன் கலந்து கொள்ளும் ஒரு சிறப்புக் கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. கூட்டத்திற்குத் தலைமை தாங்கியவர் நமது மரியாதைக்குரிய மக்கள் தலைவர் மூப்பனார் அவர்கள். ஆமாம் அன்றைய தினம் மூப்பனார் அவர்கள் தான் தஞ்சை மாவட்டக் காங்கிரஸ் கமிட்டித் தலைவராக இருந்தார்கள்.

பெருந்தலைவர் காமராஜ் அவர்களின் அன்பிற்கும், நம்பிக்கைக்கும் பாத்திரமானவர்களில் முதல்வரிசையில் முதல் மனிதராகத் திகழ்ந்தவர் நமது அன்புத் தலைவர் மூப்பனார் அவர்கள் தான். கூட்டம் நிரம்பி வழிந்தது. வரலாறு காணாத கூட்டம்.

மூப்பனார் அவர்கள் தலைமை ஏற்க, நடிகர்திலகம் சிவாஜி, அன்றைய நாடாளுமன்ற உறுப்பினர் சாம்பசிவம், தியாகி நாராயணசாமி நாயுடு, திருவையாறு சட்டமன்ற உறுப்பினர் கா.பா. பழநி, சின்ன அண்ணாமலை, நான், (அப்போது எனக்கு வயது 22) மற்றும் பல தலைவர்கள் மேடையிலே வீற்றிருந்தோம்.

'சவாலே சமாளி' என்ற திரைப்படத்தின் படப்பிடிப்பு மயிலாடுதுறையை அடுத்துள்ள மல்லியம் கிராமத்தில் அப்போது நடைபெற்று வந்ததால், படத்தின் இயக்குநர் அமரர் மல்லியம் ராஜகோபாலும், மற்றும் சில திரைப் படத்துறையினரும் அந்தக் கூட்டத்திற்கு வருகை தந்திருந்தனர். அன்றைய தினம் இளைஞர் காங்கிரஸின் முன்னணிப் பேச்சாளர்களில் ஒருவனாக இருந்த காரணத்தாலும் 'சவாலே சமாளி' திரைப்படத்தின் உதவி இயக்குனராகப் பணியாற்றிய காரணத்தாலும் அந்த மேடையில் பேசுவதற்கு நான் அழைக்கப் பட்டிருந்தேன். தென் சென்னை இளைஞர் காங்கிரஸ் தளபதிகளில் ஒருவனாக முன் நின்று முனைப்போடு செயல்பட்ட காரணத்தால் பெருந்தலைவர் காமராஜ் அவர்களின் பாராட்டையும், அப்போது தஞ்சை மாவட்டத் தலைவராக இருந்த மூப்பனாரின் அன்பையும் அதிகமாகப் பெற்றிருந்தேன்.

மாவட்டக் காங்கிரஸ் தலைவர்களின் கூட்டம் அலலது மாநிலக் காரியக் கமிட்டிக் கூட்டம் சத்தியமூர்த்தி பவனில் கூட்டப்படுகின்ற போதெல்லாம், அந்தத் தலைவர்களை எல்லாம் வரவேற்று மகிழ்கின்ற வாய்ப்பு எனக்கு அதிகமாகக் கிடைத்தது.

அந்தச் சந்தர்ப்பங்களில் சென்னைக்கு வருகின்ற மாவட்டத் தலைவர்களில் மூப்பனாரைச் சுற்றி பலாப்பழத்தில் ஈக்கள் மொய்ப்பதுபோல இளைஞர்கள் பலரும் மொய்த்துக் கொண்டிருப்பார்கள். அந்த இளைஞர் கூட்டத்தில் நானும் ஒருவனாக இருப்பேன். அவரோடு பேசுவதையும், பழகுவதையும் பெரும் பேறாக எண்ணுவேன்.

நான் பெரிதும் நேசித்த சொல்லின் செல்வர் சம்பத் அவர்களின் உற்ற நண்பராக மூப்பனார் அவர்கள் இருந்ததால் மக்கள் தலைவர் மேல் வைத்திருந்த பாசமும் பற்றும் எனக்கு இரட்டிப்பாகியது.

பொதுக் கூட்டங்களில் நான் கவிதை நடையில் பேசுவ தைக் கேட்டிருந்த மக்கள் தலைவர் மூப்பனார் அவர்கள், தஞ்சை மாவட்டத்தில் பேசுவதற்காக என்னை அழைத்து என்னோடு அப்போது செயலாளராக இருந்த சீர்காழி பெ. எத்திராஜ் அவர்களை அனுப்பி வைத்த காலங்களையெல்லாம் எண்ணிப் பார்த்து மகிழ்ந்த நேரத்தில்தான் மாயவரத்தில் அந்தக் கூட்டம் நடைபெற்றது. மக்கள் தலைவர் தலைமை ஏற்க, நடிகர் திலகம் சிவாஜி கணேசன் கலந்து கொள்ள, நானும் பங்கேற்கும் வாய்ப்பினைப் பெற்றேன்.

கூட்டத்தில் ஒவ்வொருவராகப் பேசிக் கொண்டே வந்தார்கள். தலைமையேற்றிருந்த மக்கள் தலைவர் மூப்பனார் அவர்கள் "இப்போது கவிஞர் 'பொன்னருவி' அவர்கள் பேசுவார்கள்" என்று அறிவித்தார்கள். ஆமாம்; அப்போது நான் 'பொன்எருவி' என்ற பெயரில்தான் அழைக்கப்பட்டேன். எந்தக் கூட்டத்தில் பேசினாலும் கவிதை நடையில் பேசுவதையே வாடிக்கையாகக் கொண்டிருந்த நான் கூட்டத்தின் தலைவருக்கு வணக்கம் சொல்லும் முகத்தான் என்னுடைய கவிதையை, தலைவர் வணக்கம் என்று சொல்லி விட்டுத் தொடங்கினேன். கவியரங்கங்களில் கவியரங்கத் தலைவருக்கு வணக்கம் சொல்லி விட்டுத்தான் கவிஞர்கள் தங்களது கவிதைகளைத் தொடங்குவார்கள்.. அந்த வகையில் நானும் எனது முதல் வணக்கத்தை அன்றையக் கூட்டத் தலைவரான மக்கள் தலைவர் பற்றி கீழ்க்காணுமாறு தொடங்கினேன்.

*தொண்டர்கள் நெஞ்சில் எல்லாம்*
*தூயோனாய் இருக்கும் ஐயா*
*இன்முகம் தன்னைக் காட்டி*
*என்றுமே சிரிக்கும் ஐயா*

*பொன்முகப் பொலிவைக் காட்டி – நெஞ்சப்*
*பூக்களைப் பறிக்கும் ஐயா*
*காங்கிரசுக் கட்சிப் பணிகள்*
*கழனிமிகு தஞ்சை நாட்டில்*
*ஓங்கி நின்று பெருமை கொள்ள*
*இவர்தான் பொறுப்பையா...*
*பெயரோ "கருப்பையா"*

என்று என் கவிதையைப் படித்தேன்...

கூட்டத்தில் எழுந்த கரவொலி அடங்குவதற்கு வெகு நேரமாயிற்று..

'ஒன்ஸ்மோர்' கேட்டவர்களுக்காக அந்தக் கவிதையினை மீண்டும் படித்தேன்.. மீண்டும்.. மீண்டும் கரவொலி.

அன்று நான் எழுதிய அந்தக் 'கவிதை நாயகன்', இன்றும் அதே குணங்களைக் கொண்ட நாயகனாய்த் திகழுவதை எண்ணி எண்ணி இறும்பூதெய்துகிறேன்.

1969இல் பார்த்த அதே புன்னகை, அதே எளிமை, அதே அடக்கம், தொண்டர்களை அரவணைக்கின்ற பாங்கு, பண்பு எல்லாம் அப்படியே படிந்திருப்பதைப் பார்த்து, பூரித்துப் போகிறேன்.

அன்று தஞ்சை மாவட்டத் தலைவராக இருந்த மக்கள் தலைவர் அவர்கள், இன்று பிரதமர் பதவிக்கு பெயர் அடிபடுகிற காலம் வரையில், எத்தனையோ மடங்கு வளர்ந்து விட்ட போதிலும், எள்ளளவும் மாறாமல் மனத்தாலும் குணத்தாலும் புடம் போட்ட தங்கமாக ஒளிர்வதை எண்ணுகிறபொழுது எத்தனை பெருமையாக இருக்கிறது.



இன்றைய அரசியல் சூழலில் இப்படியும் ஒரு தலைவரா? என்றெண்ணிப் பார்த்து விழிகள் வியப்பெய்துகின்றன.

நெருக்கடி ஏற்படுகிற பொழுது நிதானமிழந்த தலைவர்களைத் தமிழகம் பலமுறை சந்தித்திருக்கிறது. ஆனால் நெருக்கடியிலும் நிமிர்ந்து நின்ற நேர்மைத் தலைவனாக, மூப்பனாரை மட்டுமே தமிழகம் பார்த்திருக்கிறது.

அவர் எழுப்பியுள்ள 'வளமான தமிழகம், வலிமையான பாரதம்' என்ற முழக்கம், இன்றைய நிலையில் மிகப் பொருள் பொதிந்த வாசகமாக தமிழ் மக்களின் நெஞ்சங்களை ஈர்க்கிறது.

தனது நலன்களையே பார்த்துக் கொண்டிருக்கிற தலைவர்கள் மத்தியில், தமிழர்களின் மானம் காத்த தலைவர், மக்கள் தலைவர் மூப்பனார் ஒருவராகத்தான் இருக்க முடியும்...

*"இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண*
*நன்னயம் செய்து விடல்"*
*என்று வள்ளுவன் குறளுக்கு வடிவமாகவும்,*

'பகைவனுக் கருள்வாய் நன்நெஞ்சே' என்ற பாரதியின் பாட்டு நாயகனாகவும் திகழ்பவர் மூப்பனார் என்பதைத் தமிழகம் மட்டுமன்றி இந்தியத் திருநாடே இன்று உணர்ந்திருக்கிறது.

"கவிஞன் வாக்குப் பலிக்கும்" என்பது ஆன்றோர் வாக்கு...

என் கவிதை வரிகள் அப்படியே அச்சடித்தாற்போல தலைவருக்குப் பொருந்தியிருப்பதை எண்ணிப் பார்த்து எனது உள்ளம் துள்ளுவதை என்னால் வார்த்தைகளில் வடிக்க முடியவில்லை. சொல்மீன்களைப்பிடிக்க முடியவில்லை.

அன்று நான் எழுதிய அந்தக் கவிதை அர்த்தமுள்ள கவிதையாக எப்படி இன்றும் ஒலித்துக் கொண்டிருக்கிறதோ, அதைப் போலவே... மக்கள் தலைவரைப்பற்றி இன்னொரு கவிதையினை இன்று எழுதியிருக்கிறேன். இந்தக் கவிதையும் ஒரு ஜீவனுள்ள கவிதையாகத் திகழும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. இதோ அந்தக் கவிதை..

*அரசியல் வானில் இன்று*
*அதிசயமாய்த் திகழு கின்ற*
*தரமான தலைவர் நல்ல*
*தகுதிமிகு மூப்பனார் அவர்கள்*
*விருப்பமிக இல்லா விடினும்*
*விரும்புகின்ற மக்களுக் காக*
*அரியணையில் அமரும் நாளை*
*ஆவலுடன் எதிர்பார்க் கின்றோம்..*

ஒரு..
கவிஞனின் வாக்கு பலிக்கட்டும் – அது
மணி..
ஓசையாய் என்றும் ஒலிக்கட்டும்.ஜெய்ஹிந்த்.

# ஸ்ரீ அரவிந்தம்



கர்மயோகி

மகான்கள் பிரபலமாகி பலர் அவரை நாடும் பொழுது, மற்றவர்கள் இயல்பாக எழுப்பும் கேள்வி ஒன்றுண்டு. அதே கேள்வி நமக்கும் முதலில் பகவானைப் பற்றிக் கேள்விப்பட்ட பொழுது எழுந்ததுண்டு.

ஸ்ரீ அரவிந்தர் என்ன சொல்கிறார் ? என்பதே அக்கேள்வி. இக் கேள்விக்குரிய பதிலை இரு வகையாய்க் கூறலாம். தத்துவமான பதில் ஒன்று, நடைமுறைக்குரிய பதில் அடுத்தது. இரண்டும் ஒன்றே.

நடைமுறைக்குரிய பதில், இதுவரை பலிக்காத பிரார்த்தனை பலிக்கும் என்பது. இதை ஒருவர் ஏற்றால் பகவான் சக்திவாய்ந்த தெய்வம் என அறிகிறார். வேதம் பிறந்த நாடு இது. உபநிஷதமும், கீதையும் உற்பத்தியான தேசம் இந்தியா. வசிட்டரும், வியாசரும், பரமஹம்சரும், இராமலிங்க சுவாமிகளும் பிறந்த நாட்டில் இனி புதியதாக அறிய என்ன இருக்கிறது என்ற ஐயம் பலரூபங்களில் வெளிப்படும். அவர்கட்குரியது தத்துவார்த்தமான பதில். அது –

● பகவானுடைய பூரண யோகம், வேதம், உபநிஷதம், கீதையை அடிப்படையாகக் கொண்டது.

● ஆனால் அவர்கள் தேடிய மோட்சத்தை பகவான் நாடவில்லை.

● பூரண யோகம் மோட்சத்தில் தொடங்கி பூரணத்தைத் தேடுகிறது.

● பூரணம் என்பது பூரணன் நாடுவது.

● சொர்க்கம் மேலுலகிலுள்ளது என்பதை மாற்றி பூரண யோகம் வாழ்வை ஏற்று, வாழ்வை சொர்க்கமாக மாற்ற முயல்கிறது.

● மற்ற யோகங்கள் வாழ்வையும், உடலையும் மறுக்கின்றன, பூரண யோகம் அவற்றை ஏற்று திருவுரு மாற்ற முயல்கிறது.

மேற்சொன்ன தத்துவங்களை நடைமுறையில் எப்படி சொல்லலாம் ?

– சுய நலமாக தனக்கு மட்டும் ஆன்மிகப்பலன் தேடக்கூடாது.

– எதையும் பூரணமாகச் செய்ய வேண்டும். தோல்வியற்ற வாழ்வை அமைப்பது பூரணம்.

– பகுதியான பலனை நாடாமல் முழுமையான பலனை இலட்சியமாகக் கொள்ள வேண்டும்.

– பூலோகம் சுவர்க்கமாகும்.

– கசப்பான கடமைகளை, கசப்பு கருதி விலக்கக்கூடாது.

வாழ்வில் இவற்றை எப்படிப் பூர்த்தி செய்வது என்பதை விளக்குமுன் பூரணயோகத்தின் ஆன்மிக அடிப்படைகளைக் கருதுவோம்.

● ஜீவாத்மாவும், பரமாத்மாவும் வேறு வேறல்ல; ஒன்றே.

● ஆத்மா வளர்வதற்காக மறுபிறவி ஏற்பட்டது.

● உலகத்தைச் சிருட்டித்தது மனமில்லை, சத்திய ஜீவியம்.

● மனிதப் பிறவியே முடிவன்று, அடுத்து சத்திய ஜீவன் பிறப்பான்.

● ஞானம் வளர்ந்து அஞ்ஞானமாயிற்று.

● அஞ்ஞானத்தில் ஒளிந்துள்ள இறைவன் தன்னைக் கண்டு பிடிப்பதே லீலை.

● ஆத்மா வளரும். ஆத்மா வளர்வதே யோகம்.

● எல்லாப் புதிய சக்திகளும் அறியாமையில் உற்பத்தியாகின்றன,

● காயம் பொய்யன்று; இறைவன் உறைவதற்குரிய உடலின் பீடம்.

● பரமாத்மா, ஜீவாத்மா ஆனதை விளக்கும் யோகம் இது.

● இயற்கையோடு ஒன்றி வாழ்ந்த வேத காலத்து இலட்சியம் உயர்ந்தது. அதன் அடுத்த கட்டம் பூரண யோகம்.

● சிருஷ்டியை அறிந்தது போல் நாம் பரிணாமத்தை அறிய வேண்டும்.

● வாழ்வில் இறைவனை ஏற்பதே உண்மையான அத்வைதம்.

● விஞ்ஞானம் தேடுவது சிறிய லட்சியம்.

● ஆத்மாவின் பிறப்பை விளக்க வேண்டும். அதற்கு ஆதியில்லை என்று சொல்லக்கூடாது.

● சிருஷ்டியின் ரகசியத்தை பகவான் நமக்களிக்கிறார்.

● அசித், நிர்வாணம் என்பது அறிவைக் கடந்ததில்லை. அறிவால் எட்டக்கூடியது.

● ஜடம் ஆன்மாவுக்குக் கட்டுப்படும்.

● நம் மனத்தை மாற்றிக் கொண்டால் பூலோகம் சுவர்க்கமாகும்.

● சரணாகதியே மார்க்கம்

● அகந்தை அழிவதே அடிப்படை

● தீமை என்பதில்லை. அது இடைப்பட்ட நிலை.

● பரோபகாரம் அகந்தையை வளர்க்கும்.

தத்துவ ஞானிக்கும், சாதனையை மேற்கொண்டவர்க்கும் உரியவை மேற் சொன்னவை என்பதால், அவற்றை விளக்கும் முயற்சியில் ஈடுபடாமல் சாதாரண மனிதன் இக்கருத்துகளை, அவனளவில் வாழ்வில் நடைமுறையில் பின்பற்றுவது எப்படி ? அப்படிப் பின்பற்றினால் அவன் பெறும் வாழ்வுப் பலன் என்ன ? அதன் முதல் நிலை அன்னையைத் தெய்வமாக ஏற்பது. முடிந்தவரை அடுத்த நிலைகளை எட்ட முயல்வது.

○ முதல் நிலையில் வாழ்வின் சிரமம் நீங்கி, வாழ வழியேற்படும்.

○ அடுத்த நிலையில் பிரார்த்தனையால் பிரச்னைகள் விலகும்.

○ அன்னை நினைவு அடுத்தது. அது ஒரு பெரிய வசதியைத்தரும்.

○ அழைப்பு அடுத்து அப்பெரிய வசதியை நிரந்தரமாகத் தரும்.

○ ஆழ்ந்து அன்னையை நினைத்து அழைத்தால் சந்தோஷம் எழும்.

○ நெஞ்சம் தானே அன்னையை அழைத்தால் கிடைத்தற்கரிய மன நிம்மதி கிடைக்கும்.

○ இதுவரை பெற்றதற்கு, தவறாமல் நன்றி கூறினால், அதிர்ஷ்டம் வரும்.

○ உழைப்பை மேற்கொண்டால் அதிர்ஷ்டம் சித்திக்கும்.

○ உழைப்பும் உஷாரும் அழைப்பு நினைவுடன் சேர்ந்தால் யோகப் பாதையில் முதல் அடி எடுத்து வைக்கலாம்.

## அன்னையை வணங்குவதும், ஏற்பதும்.

இதுவரை தெய்வத்தை வணங்குவது போல், அவ்விடத்தில் அன்னையை வைத்து வணங்குவது, அன்னையை தெய்வமாக ஏற்று வழிபடுவது எனப்படும்.

அன்னையை ஏற்பது என்பது வேறு, இன்று நாம் ஒன்றை ஏற்றுக் கொண்டிருக்கிறோம். அதன் பகுதிகள் பல. அவை சேர்ந்து 'நான்' எனப்படுகிறது. ஜாதியை முக்கியமாகக் கருதுவது, குடும்பத்தை முக்கியமாக நினைப்பது, ஊரின் பெருமையைப் பாராட்டுவது, நம் சுபாவத்தை உயர்ந்ததாகக் கருதுவது மனித இயல்பு. நம் எல்லா சக்தியும் இன்று இவற்றை ஏற்பதில் அடங்கியுள்ளது. மனிதன் இவற்றிற்காகவே வாழ்கிறான் எனில் மிகையாகாது. இவற்றிற்காக எப்படி மனிதன் இன்று வாழ்கிறானோ, அதுபோல் அன்னைக்காக வாழ மாறுவது, அன்னையை ஏற்பதாகும். அவனுக்கு ஜாதி, ஊர், குடும்பம், தன் சுபாவத்தை விட அன்னை முக்கியமானால், அவன் அன்னையை ஏற்றுக் கொண்டான் எனப்படும். அப்படி ஏற்றுக் கொண்டதற்கு அடையாளம், ஏராளமான பலம் திடீரென எழுவதாகும்.

அன்னையை ஏற்றுக் கொண்டால் யானை பலம் வரும்.

சக்திவாய்ந்த பலம் உற்பத்தியானால் அதிர்ஷ்டம் வரும்.

அது ஏற்பட்டவுடன் சூழ்நிலை சாதகமாக மாறி அடுத்தடுத்து அதிர்ஷ்டம் ஏற்படும்.

ஓர் இளைஞர் பி.இ. முடித்து வேலை கிடைக்காமலிருக்கும் பொழுது உறவினர் கம்பெனி யில் ரூ. 2500 சம்பளத்திற்கு வேலை கிடைத்தது. அவருக்கு அன்னையைப் பற்றி அதிகம் தெரியாது. அவரை அக்கம்பெனியில் அமர்த்தியவர் அன்னை பக்தர். இப்பக்தருடைய தொடர்பில் அதிர்ஷ்டம் உண்டு என்றும் தெரியாது. தொடர்பு சில சமயம் குறைவாகவும், சிலசமயம் நெருக்கமாகவும் இருக்கும். அப்படி நெருங்கி வந்த சமயம் அவருக்கு மாதம் ஒன்றரை லட்ச ரூபாய் சம்பளத்தில் அமெரிக்காவில் வேலை கிடைத்தது. அன்னையின் சூழல் அத்தகையது. அன்னையைத் தெய்வமாக வணங்கும் நிலையிலிருந்து உயர்ந்து அன்னையை நம் ஜீவனின் முக்கிய இடத்தில் ஏற்பின், பெருவாரியான பலம் ஏற்பட்டு, சூழல் அதிர்ஷ்டமாக மாறி, இதுபோன்ற நிகழ்ச்சிகள் வாழ்வை நிரப்பும்.

இன்று மனை விலை ஏறியபடியிருக்கிறது. 5000 ரூபாய்க்கு வாங்கிய மனை ரூ. 5 ல்ட்சத்துக்கு விற்பதும், முக்கிய இடங்களில் ரூ. 15 லட்சத்துக்கு ஏற்பதையும் நாம் காண்கிறோம்.

மனம் அன்னைக்கு இடம் அளித்தால்
மனை விலையேறுவது போல் வாழ்வு உயரும்.

தகப்பனார் அரிசிக் கடை மாறி மகனுக்குத் தொழில் (Industry) ஏற்படுவதும், மகன் ஐ.ஏ.எஸ். ஆவதும் இன்றைய சமூக நிலை. சமூகத்தில் அன்னை சக்தி செயல்படுகிறது என்கிறார் பகவான். 1967 முதல் சர்க்காரில் செயல்படுகிறது என்கிறார், மனித மனத்தில் அதைச் செயல்பட அனுமதித்தால் மனித வாழ்வு போக வாழ்வாக மாறும்.



# இளைய தலைமுறையின் இன்றையப் பணி



## தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

நமது நாடு விடுதலை பெற்று அரை நூற்றாண்டு காலம் உருண்டோடி இருக்கின்றது. நாட்டின் சுதந்தரப் பொன்விழாவினை நாடு எங்கும் கோலாகலமாகக் கொண்டாடி வருகின்றோம். இதில் வேதனைக்குரிய செய்தி, இன்னுமே நம் தேசத்தில் விடுதலை விழா, சட்டமன்ற வளாகத்தில், பாராளுமன்ற வளாகத்தில், மாவட்ட ஆட்சியர் அலுவலக வளாகத்தில், கல்வி நிறுவனங்களில் – அரசுப் பணிமனைக்குரிய விழாவாகவே முடிந்து போய்விடுகின்றது என்பதுதான்! மகாகவி பாரதி, அடிமை இந்தியாவில் இருந்து கொண்டு ஆனந்தக் கூத்தாடினான். ஆனந்த சுதந்தரம் அடைந்துவிட்டோம் என்று ஆனந்தக் கூத்தாடினான்! அந்த ஆனந்த சுதந்தர விழாவை, சுதந்தரப் பொன் விழா நாட்டில் அரசு விழாவாகக் கொண்டாடுகின்றோம். மக்கள் விழாவாக என்றைக்குக் கொண்டாடுகின்றோமோ அன்றைக்குத்தான் உண்மையான விடுதலை பெற்றதாகப் பொருள்.

சுதந்தரப் பொன்விழாக் கொண்டாடுகின்ற இந்த தேசத்தில் வறுமையும் ஏழைமையும் நீங்காத இடத்தைப் பிடித்து அழுத்துகின்றன. அண்மையில் பிரிட்டனின் காலனி ஆதிக்கத்திலிருந்து ஒரு நாடு விடுவிக்கப்பெற்றது. ஹாங்காங் என்ற நாடு சீனாவிடம் ஒப்படைக்கப்பட்டது. அந்த நாடு ஒப்படைக்கப்பட்ட பொழுது அதன் பொருளாதார வளர்ச்சி, தொழில் முன்னேற்றம் ஆகியவற்றைப் பார்த்தோம். சரியாக 50 ஆண்டுகளுக்கு முன் நம் தேசம் எப்படி நம்மிடம் ஒப்படைக்கப்பட்டது ? எண்ணற்ற குட்டி ராஜ்யங்கள், ஜமீன்கள் என்று, ஊருக்கு ஒரு ராஜா ஆண்ட நிலை! காலரா என்ற நோய் வந்தால்கூட ஊர்கள் கூண்டோடு காலியாகும் நிலை! பொதுச் சுகாதாரம் மிகப் பின்தங்கிய நிலை! அடிமை இந்தியாவில் இந்தியனின் சராசரி வயது 27. சுதந்தர இந்தியாவில் இந்தியனின் சராசரி வயது 47 என்பதில் பெருமை கொள்கின்றோம்.

*கஞ்சி குடிப்பதற்கிலார் – அதன்*
*காரணங்கள் இவைஎனும் அறிவுமிலார்*
*பஞ்சமோ பஞ்சம் என்றே – நிதம்*
*பரிதவித்தே உயிர் துடிதுடித்துத்*
*துஞ்சி மடிகின்றாரே – இவர்*
*துயர்களைத் தீர்க்கவோர் வழியில்லையே!*

என்று பாரதி புலம்பித் தவித்த நிலையில்தான் பாரதம் நம்மிடம் ஒப்படைக்கப்பட்டது.

சுதந்தர இந்தியாவின் வளர்ச்சியில் மாற்றங்கள் இல்லாமல் இல்லை. ஆனால் வளர்ச்சியின் வேகம் மெதுவாகவே நடைபெற்று வருகின்றது என்பதையும் நாம் உணர்கின்றோம்.

இந்தியா இயற்கை அமைப்பில் மட்டும் மேடு பள்ளங்களையுடைய நாடன்று! இந்திய சமுதாயத்தில் எண்ணத் தொலையாத மேடு பள்ளங்கள்! வடக்கே இமயமும் தெற்கே குமரிக் கடலும் எல்லையாக கேரளத்து மேற்குத் தொடர்ச்சி மலைகள், ராஜஸ்தான் பாலைகள், வற்றாத வளங்கொழிக்கும் காவிரி தந்த வளம் சூழ்ந்த நன்செய்கள், இப்படி இயற்கைச் சூழல் நிறைந்த நாடுதான் பாரதத் திருநாடு! மாறுபட்ட இயற்கைச் சூழல் நிறைந்த நாடுதான் பாரதத் திருநாடு! மாறுபட்ட இயற்கையமைப்புகள், மேடு பள்ளங்கள் மக்கள் மனத்துக்கு மகிழ்வைத் தருகின்றன. ஆனால் சமூகத்தின் மேடு பள்ளங்கள் கலகத்தையும் குழப்பத்தையும் தருகின்றன. இந்திய சமுதாயம் சாதி முறைகளாலான அமைப்பினையுடையது; தீண்டாமை என்ற பெரிய படுகுழியும் உடையது. பார்வைக்கு சமுதாயத்தைத் தரவாரியாக அடுக்கி வைத்திருப்பது போலத்தான். இஃது உண்மையான தோற்றமன்று. உள்ளே ஆழமான வேற்றுமைகள், பகை உணர்ச்சிகள் வளர வழி வகுக்கப்பெற்றுத் தொடர்ச்சியாக இந்திய சமுதாயத்தை உருக்குலையச் செய்துவிட்டது. கடைகோடி மக்கள் சிந்திப்பதும் கூடப் பாவம் என்று ஒதுக்கப்பட்டனர். விலங்கிலும் கடையராய் ஒதுக்கி வைக்கப்பட்ட பிரிவினைகள், பிறப்பின் பாற்பட்டவை; ஒழுக்கத்தின் பாற்பட்டவையல்ல.

ஏழாம் நூற்றாண்டில் சாதிப் பிரிவினைகளை எதிர்த்து மிகப்பெரிய கிளர்ச்சியை அப்பரடிகள் தோற்றுவிக்கின்றார்.

*ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்*
*கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில்*
*அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே!*

என்று கடைகோடி மனிதனையும் – உரிமை மறுக்கப்பட்ட மனிதனையும் – கடவுளாகப் பார்க்கின்றார் அப்பரடிகள். தொடர்ந்து அந்தப் பெருமான்,

*சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்*
*கோத்திரமும் குலமும் கொண் டென்செய்வீர்*

என்று கேட்கின்றார். சமூகப் புரட்சி தொடர்ந்து நடைபெறுகின்றது. திருநீலகண்ட யாழ்ப்பாணர் என்ற உரிமை மறுக்கப்பட்ட சமூகத்தைச் சேர்ந்தவரை உடனழைத்துச் சென்று நாளெல்லாம் தமிழிசை பரப்புகின்றார் திருஞானசம்பந்தப் பெருமான்.

இந்தச் சாதிய முடைநாற்றம் எப்பொழுது வீசத் தொடங்குகின்றது? உலகம் முழுதும் உள்ள மனிதகுல வரலாறு ஆய்வுக்குரியது. கிரேக்கப் பேரறிஞர் பிளேட்டோ ஆதிக்க வர்க்கத்தைப் பாதுகாக்க மிகச் சிறந்த கட்டுக்கதைகளை அவிழ்த்து விடுகின்றார். ஆளும் வர்க்கத்தை ஆண்டவன் படைக்கையில் சிறிது தங்கத்தையும் சேர்த்துப் பிசைந்து படைத்தான் என்றும், துணைப் படையாளர்களைப் படைக்கையில் சிறிது வெள்ளியையும், உழவர்களையும் பிற கைவினைஞர்களையும் படைக்கையில் இரும்பையும் வெண்கலத்தையும் கலந்து பிசைந்து படைத்தான் என்றும் கட்டுக்கதைகளைக் கூறினார்கள். அரிஸ்டாட்டில் உழைப்பாளரின் மூளை அடிமை மூளை என்று கூறுகின்றார். ஆதிக்க வாழ்க்கைக்கு ஏற்றதன்று என்று கூறுவதன்மூலம் பெரும்பான்மையான மக்களை, சமூகத்தைவிட்டு ஒதுக்கி, மனித உரிமையை மறுக்கும் கொடுமை உலகம் எங்கும் நிகழ்ந்திருக்கின்றது. இங்கேயும் இதுபோன்ற கொடுமை நிகழ்ந்துள்ளது. சாதிப் பிரிவினைகள், சமய நம்பிக்கையின் பெயரால் அரங்கேற்றப்பட்டன.

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்று ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழ் மாமுனிவர் சிந்திக்கின்றார். புரட்சி பூத்த சிவகங்கை மாவட்டத்திலுள்ள திருக்கோட்டியூர்த் திருத்தலத்தின் திருமதில்மேல் ஏறி நின்று ஒரு பெருந்தகையாளர் எல்லா மக்களுக்கும் மந்திரத்தை வாரி வழங்கினார். 'இந்த மந்திரத்தை மற்றவர்களுக்குச் சொன்னால் நரகத்திற்குப் போவாய்' என்று அவருடைய ஆச்சாரியார் சொன்னார். "இந்த மந்திரத்தைக் கேட்கின்ற கோடானு கோடி மக்கள் வைகுண்டத்திற்குப் போகும் பொழுது நான் ஒருவன் மட்டும் நரகத்திற்குப் போனால் பரவாயில்லை" என்றார் புரட்சிபூத்த இராமானுஜர். அப்பெருமானார் உலாவந்த மண்ணில்தான் சாதிக் கொடுமைகள் நிகழ்கின்றன. 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற சிந்தனை திருமூலரின் திருமந்திரச் சிந்தனை. 'யாதும் ஊரே! யாவரும் கேளிர்' என்றார் கணியன் பூங்குன்றனார். அண்டங்களும் கண்டங்களும் விரிந்து பரந்த காலத்தில் எழுப்பப்பட்டது இந்தக் குரல்! இன்றைய அறிவியல் உலகம் அண்டங்களையும் கண்டங்களையும் சுருக்கிவிட்டது. சேர்ந்து மனித இதயங்களும் சுருங்கிப் போனது போலும்! முடைநாற்றம் வீசுகின்ற சாதியக் கொடுமைகளை அப்பர் பெருமான் முதல் வள்ளற்பெருமான் வரை, எதிர்த்துப் போராடியும் வெற்றிபெற முடியவில்லை. சாதிக்கு எதிராகப் புகைவண்டியும் பேருந்தும் பெற்ற வெற்றியைக் கூட நமது சமயத் தலைவர்கள் பெற முடியவில்லை.

சாதியக் கொடுமைகளுக்கு எதிரான போராட்டத்தை இறைவனே தொடங்கியிருக்கின்றான். ஆதிசைவ குலத்தில் அவதரித்த நற்றமிழ்ச் சுந்தரருக்கு, கணிகையர் குலத்தில் பிறந்த பரவையாரையும், வேளாளர் குலத்தில் தோன்றிய சங்கிலியாரையும் திருமணம் செய்து வைக்கின்றான். கலப்பு மணம் சாதியக் கொடுமைக்கு முடிவுகட்டும் என்பது இறைவனின் திருவுள்ளம் போலும்!

சுதந்தரப் பொன்விழாக் கொண்டாடுகின்ற தேசத்தில் வெட்கித் தலைகுனியும் செய்தி இன்னும் நாம் சமபந்தி விருந்து நடத்திக் கொண்டிருக்கிறோம் என்பது. சமூக மாற்றத்தை உருவாக்கத் தவறிவிட்டோம். தீண்டாமை தீர்ந்த பாடில்லை. வறுமையும் ஏழைமையும் தேசத்தின் பொருளாதாரத் திட்டத்தில் அங்கீகாரம் பெற்றுவிட்டன. வறுமைக்கோடு என்று ஒரு கோடு வெட்கமின்றி வெளியே காணத் தொடங்கிவிட்டது.

சட்டமும் சலுகைகளும் சாதியக் கொடுமைகளை அகற்றிவிட முடியாது. அவை புண்ணுக்குப் புனுகு தடவும் வேலையைப் போன்றது. மனமாற்றத்தை உருவாக்க வேண்டும். அனைவரையும் உடன்பிறப்புகளாகக் கருதிப் பழகுகின்ற மனிதநேயத்தை விதைக்க வேண்டும். மனித உரிமைகளைத் தர மறுக்கின்ற மனோபாவத்தை அன்பு எனும் அற்புத சக்தியால் மாற்றவேண்டும். உரிமை மறுக்கப்பட்டவர்கள் தங்களுடைய தாழ்வு மனப்பான்மை காரணமாகவோ உயர்வு மனப்பான்மை காரணமாகவோ சமுதாயத்தில் எந்த ஒரு பகுதியிலிருந்தும் ஒதுங்கி விடக்கூடாது. மற்றவர்களுடன் உரிமைகளும் உறவுகளும் கொண்டாடி மேவிப் பழகவேண்டும். அது போலவே மற்றவர்களும் உரிமை மறுக்கப்பட்டோரின் உயிரில், உணர்வில் கலந்து அவர்களுடன் பழகி உறவுகளைக் கண்டு வளர்த்துக் கொள்ள வேண்டும். உரிமை மறுக்கப்பட்டவர்களுக்கு ஊரில் ஒதுக்குப் புறத்தில் வீடு கட்டுவது கூடாது; நடுவூரில் வீடுகள் கட்டித்தர வேண்டும். வீதிகளில் காலியாக இருக்கும் இடங்களில் வீடுகள் கட்டவேண்டும். உரிமை மறுக்கப்பட்ட மாணவர்களுக்குத் தனிப் பள்ளிகள், தனி விடுதிகள் கூடாது. எல்லாரும் கூடிக் கலந்து பழகும் பொதுப் பள்ளிகளிலும் விடுதிகளிலும் இருந்து கற்க வேண்டும். கலப்பு மணங்களை அரசு தீவிரமாக ஆதரிக்கலாம். பாடப் புத்தகங்களில் சாதிப் பெயர்கள் வராமல் பார்த்துக் கொள்ளவேண்டும். சமய நிறுவனங்கள் சமய அமைப்புகளாகவே செயற்பட வேண்டும். சமய நிறுவனங்கள் சாதிய அமைப்புகளாகச் செயல்படும் போக்கினை மாற்றிக் கொள்ள வேண்டும்.

எங்கும் குறைகள் இருக்கலாம். குறைகளை நீக்குவதற்குரிய பாதையில்தான் தடுமாறுகின்றோம். தடம் மாறிவிடுகின்றோம். உலகின் எந்தப் பிரச்னையும்

கருமலைத்தமிழாழன்

# மெய்ப்பொருளே அழகாகும்



கெடுகின்ற காலத்தில்
கேடுதனை எடுத்துரைத்துத்
தடுத்துப் பின் நல்வழியைத்
தருபவனே நண்பனாவான்

கடுகளவும் சினமின்றிக்
கருணையின் வடிவமாக
அடுத்தவர்க்கே துணை நிற்போன்
அவனியிலே தலைவனாவான்!

அலங்கார அணிகலன்கள்
ஆயிரந்தான் அணிந்தாலும்
நலந்தரும்நல் ஒழுக்கந்தான்
நமக்குதவும் அணியாகும்!

அடுக்குமொழி பேசுவதும்
அனைவரையும் ஈர்ப்பதுவும்
மிடுக்கன்று; சொல்லிற்கு
மெய்ப்பொருளே அழகாகும்!

அன்பகமும் பணிகின்ற
அடக்கமுடன் நடக்கின்ற
இன்முகமும் பெற்றிருந்தால்
இவ்வுலகில் புகழடைவான்.

நற்செயல்கள் குவிந்திருக்க
நலிவுதரும் தீச்செயல்கள்
பற்றுபவன் கண்ணிருந்தும்
பார்வையற்ற குருடனாவான்!

தேன்சொற்கள் பலவிருந்தும்
தேவையற்ற தீச்சொற்கள்
கேட்பவனோ காதிருந்தும்
கேளாத செவிடனாவான்!

அரியதோர் அவையினிலே
அழகாகக் கருத்துரைக்க
அறியாதான் வாயிருந்தும்
அவனுமோர் ஊமையாவான்!

வன்முறையால் வெற்றிபெற்றதில்லை. வன்முறை எந்த நல்லவற்றையும் சாதித்ததில்லை. இரண்டாம் உலகப் போரில் ஏற்பட்ட அழிவுகளைத் தடுத்து நிறுத்தியிருந்தால் இந்த உலகத்தில் வாழ்கின்ற ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஐந்து அறைகள் கொண்ட வீடுகளையும், ஐயாயிரம் மக்கள் வசிக்கின்ற ஒவ்வொரு கிராமத்திற்கும் பொது சுகாதார மருத்துவமனையும் கட்டித் தரலாம் என்றும் அறிவியல் ஆய்வு தெரிவிக்கின்றது. இந்தியத் திருநாட்டின் வரலாற்றைத் திரும்பிப் பார்க்கின்றோம். மனிதாத்மாக்களின் நடுவே ஒரு மகாத்மாவைப் பலிகொண்டது மதவெறித் தீ! அன்னை இந்திரா காந்தியைப் பலிகொண்டது மதவெறித் தீ! அருமைக்குரிய ராஜீவ் காந்தியைப்பலிகொண்டதுஇனவெறித் தீ! வன்முறை என்றுமே நல்லவற்றைச் சாதித்ததில்லை என்று வரலாறு காட்டுகின்றது. எந்தப் பிரச்னைக்கும் உரிய தீர்வு அறவழியிலான போராட்டம்தான். தீண்டாமைக் கொடுமை தீர, இல்லாமை–ஏழைமை அகல அறவழிப் போரே சரியான வழியாகும். கடந்த காலத் தலைமுறை இந்தத் தலைமுறைக்கு விடுதலையைப் பெற்றுத் தந்தது. இன்றையத் தலைமுறை வருங்கால சமுதாயத்திற்கு என்ன தரப்போகின்றது?

தீண்டாமையையும் வறுமையையும் விரட்ட இளைய தலைமுறை பாடுபட வேண்டும். உலகம் உண்ண, உலகம் உடுத்த, பொதுநலம் பேணுகின்ற பெருவாழ்வு நோக்கி இன்றையத் தலைமுறை பயணம் செய்யட்டும். ஏழைமையும் தீண்டாமையும் இல்லாத தேசத்தை உருவாக்குவோம்.

# பாரதியின் விடுதலை வேட்கை

நீதியரசர் ச. மோகன்




தமிழ் இலக்கிய வானில், என்றும் சுடர் விட்டு ஒளிரும் விண்மீன் பாரதி. இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞர்கள் வரிசையில் ஒப்பற்றவர் அவர்.

காலம்தான் கவிஞனை உருவாக்குகிறது என்பது அனைவரும் ஏற்றுக்கொண்ட ஓர் உண்மை. அவ்வாறு பார்க்கப்போனால் பாரதி வாழ்ந்த காலம், நம்நாடு அடிமைத்தளையில் அல்லலுற்றுக் கொண்டிருந்த காலம். மக்கள் ஊமைகளாய், குருடர்களாய், செவிடர்களாய் இருந்த காலம். பெண் அடிமை நிலவி வந்த காலம். மேலைநாட்டு நாகரிகத்தில் மூழ்கி இருந்த காலம். ஆங்கில மொழி மீது அளவுகடந்த ஆசை கொண்டிருந்த காலம். இவற்றை எல்லாம் தகர்த்துப் பொடிப் பொடியாக்க உறுதி பூண்டான் பாரதி. உணர்ச்சி கொப்பளிக்கப் பாடினான். பாடினான் என்று சொல்வதைவிட உணர்ச்சிப் பிழம்பாகவே மாறினான் எனலாம்.

அன்னை விலங்கிடப்பட்டு, அடிமைப்பட்டுக் கிடப்பதைக் கண்டு ஆத்திரம் கொண்டு,

*அன்னியர் தமக்கடிமை யல்லவே — நான்*
*அன்னியர் தமக்கடிமை யல்லவே*

என்று அறைகூவினான். நாட்டிலெங்கும் சுதந்தர வாஞ்சையை நாட்டினான். விடுதலைக்கனலை மூட்டினான். தொண்டொன்றே தொழிலாகக் கொண்டிருந்தோரைத் தூண்டி விட்டான். ஆங்கிலேய அரசு அவரைச் சுட்டு வீழ்த்துவதாக மிரட்டியது. சிறைக்குள் தள்ளுவதாகவும் அச்சுறுத்தியது. அந்த மிரட்டல்களுக்கும், அச்சுறுத்தல் களுக்கும் அவன் சற்றும் அஞ்சவில்லை.

*அச்சமில்லை, அச்சமில்லை, அச்சம் என்பதில்லையே*
*உச்சிமீது வான்இடிந்து வீழுகின்ற போதிலும்*
*அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே*

என்று வீர முழக்கமிட்டான்.

விடுதலை வேட்கை கொந்தளிக்கப் பாடினான்:

*என்று தணியும் இந்த சுதந்தர தாகம்*
*என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம்*
*என்றெம தன்னைகை விலங்குகள் போகும்?*
*என்றெம தின்னல்கள் தீர்ந்து பொய்யாகும்?*

இந்த வேட்கை என்றும் தணியாது. இந்த விடுதலை பெறுவதில் எத்தனை இடர்கள் வந்தாலும் தளரேன். எத்தனை இன்னல்கள் விளைந்தாலும் எதிர்ப்பேன். சிறைக்கு அஞ்சேன் எனச் சூளுரைத்தான்.

இருதயத்தில் விடுதலையை இசைத்தான். அந்த இசையில்:

*சுதந்தர தேவி! நின்னைத்*
*தொழுதிடல் மறக்கிலேனே*

என்று சுருதி கூட்டுகிறான். ஏனென்றால் விடுதலை இல்லாத வாழ்வு வீண்வாழ்வு. கல்வி, செல்வம், வேறு எத்தனை உயர்வுகள் பெற்றிருந்தாலும், சுதந்தரம் இல்லாத வாழ்வு பாழான வாழ்வு. பிணத்திற்கு அணிகளைப் போட்டு யாரே அழகு செய்வர்! அதன் பயன்தான் என்ன என்பதுதான் அவனது தீர்ந்த முடிவு.

கவிஞனின் உள்ளம் கடல் போன்றதல்லவா? கற்பனை அலைகள் மோதுகின்றன. நாடு விடுதலை அடைந்து விட்டதாக எண்ணிக் கூத்தாடுகிறான். பள்ளுப் பாடுகிறான்.

*ஆடுவோமே, பள்ளுப் பாடுவோமே,*
*ஆனந்த சுதந்தரம் அடைந்து விட்டோம்*

என்று பல்லவி பாடி,

விடுதலை அடைந்தது எங்கள் வீரத்திருநாடு. அதில் நாம் வாழ்கின்றோம் என்று பெருமை கொள்கிறான். இங்கிலாந்து நாட்டின் மங்காத புகழ்பெற்ற கவிஞன் மில்டன்கூட இதைத்தான் சொல்கிறான்.

விடுதலை என்றால், எப்பேர்ப்பட்ட விடுதலை?
*பறையருக்கும், இங்கு தீயர்,*
*புலையருக்கும் விடுதலை.*
*பரவரோடு குறவருக்கும்*
*மறவருக்கும் விடுதலை*

என்று பண் பாடி உலகுக்கு அறிவிக்கின்றான்.

*இழிவு கொண்ட மனிதர் என்பது*
*இந்தியாவில் இல்லையே*

அந்த அறிவிப்பு அவர் அழியாத ஆசை! உயர்ந்த லட்சியக் கனவு! பாழ்பட்டு நின்ற பாரததேசம் தன்னை விடுவித்த மகாத்மா காந்தியும் இதே கனவு கண்டார். அந்தக் குறிக்கோளுக்காகவே, குருதி சிந்தி உயிர் நீத்தார்.

தேசியக்கவி பாடி, விடுதலைக்கு வித்திட்ட பாரதியின் கனவை இன்ப நினைவாக்குவதையும் காந்திஜியின் சீரிய குறிக்கோளை நிலைபெறச் செய்வதையும் விட, நமக்குச் சிறந்த பணி வேறென்ன இருக்கமுடியும்? எளிய தமிழில் பாடி, படித்தவரும், பாமரரும் விடுதலை உணர்வு, வீர உணர்வு பெறப் பெரிதும் காரணமாக இருந்தவன் பாரதி. அவனை வானளாவப் புகழ்வதோடு நின்றுவிடக் கூடாது. ஏனென்றால் நாம் வெறும் வாய்ச்சொல் வீரர்களாக மட்டும் இருப்போம். அதுவன்று, பாரதிக்கு நாம் செய்யும் நன்றிக் கடன். சாதிகள் இல்லாத, ஒப்பற்ற ஒரு சமுதாயத்தை எல்லாரும் ஓர் குலம்; எல்லாரும் ஓர் இனம் என்ற நிலையை – உருவாக்குவதே நம் தலையாய கடன். பாருக்குள்ளே நல்ல நாடாக பாரத நாட்டை ஆக்குவதே நம் தூய தொண்டு. நாட்டு விடுதலைக்காக மட்டும் வீரமுழக்கம் செய்யவில்லை பாரதி. இந்த நாட்டில் ஆண்டான், அடிமை என்று இருக்கக்கூடாது, ஏழைமை ஒழியவேண்டும், இல்லாமை நீங்க வேண்டும், இவ்வுலகில் ஒவ்வொரு மனிதனும் வாழவேண்டும். தனிப்பட்ட ஒரு மனிதனுக்கு உணவில்லை என்ற நிலை ஏற்படுமானால், அதைப் பார்த்துக் கொண்டு நாம் சும்மா இருக்கமாட்டோம். இவ்வுலகத்தையே அழிக்க வேண்டும் என்று நெஞ்சம் குமுறிப் பாடுகிறான்.

*இனி ஒரு விதி செய்வோம் – அதை*
*எந்தநாளும் காப்போம்*
*தனி யொருவனுக்கு உணவிலை யெனில்*
*ஜகத்தினை அழித்திடுவோம்....*

எல்லா உயிர்களும் இன்பமாய் இருக்கவேண்டுமென்பதே இந்தப் பாடலின் அடிப்படை. இதே கருத்தை, திருக்குறள் இன்னும் ஆழமாகச் சொல்கிறது:

*இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து*
*கெடுக உலகுஇயற்றி யான்*

ஒருவன் பிச்சை எடுத்துத்தான் வாழ வேண்டுமென்றால் இந்த உலகைப் படைத்தவன் அழிந்து போகட்டும் என்கிறார், வள்ளுவர். இல்லாமை இல்லாத நாடாகத் திகழவேண்டும் என்பதுதான் இந்தக் குறளின் உட்கருத்து.

ஆண், பெண் இருவரும் இந்நாட்டின் இரு கண்கள். அவற்றுள் ஒரு கண்ணைக் குத்தி எவ்வாறு காட்சியை ரசிக்க முடியம்? ரசிக்க முடியாதல்லவா? எனவே பெண்களின் அறிவை வளர்த்தால்தான் இந்த உலகில் பேதைமை நீங்கும். அறிவில் ஓங்கி இந்த வையகம் தழைக்கும் என்கிறான். அதற்கு மாறாக பெண்கள் முன்னேற்றத்திற்கு ஏதாவது தடைகள் இருந்தால், அதை உடைத்தெறிய வேண்டும். முட்டுக்கட்டைகள் இருந்தால் தகர்த் தெறியவேண்டும் என்று சொல்லும் பொழுது,

*மாதர் தம்மை இழிவு செய்யும்*
*மடமையைக் கொளுத்துவோம்.*

என வீர முரசு கொட்டுகிறான். பாரதி, மாதரை எவ்வளவு உயர்ந்த மதிப்போடு போற்றினான் என்பதற்கு பாஞ்சாலி சபதம் ஓர் அருமையான எடுத்துக்காட்டு. சூதாட்டத்தில் தருமன், புவி இழந்தான், பூமி இழந்தான், நாட்டை இழந்தான், நலத்தை இழந்தான். இதையெல்லாம் பொறுத்துக் கொண்டான் பாரதி. ஆனால் திரௌபதியைப் பணயமாக வைத்தபொழுது வீமன் வாயிலாக தருமனைக் கேட்கிறான்:

*ஏது கருதி வைத்தாய்? அண்ணே*
*யாரைப் பணயம் வைத்தாய்?*
*மாதர்குல விளக்கை, அன்பே*
*வாய்ந்த வடிவழகை*

நீ பந்தயம் வைத்தாயே, இது நியாயமா, தர்மமா நீதியா? என்று சினம் பொங்கக் கேட்கிறான். நீ இதுவரை இழந்ததை எல்லாம் பொறுத்துக் கொள்கிறோம். ஆனால் இந்தச் சுடர் மகளைச் சூதாடி இழந்துவிட்டாயே, இதை எங்களால் பொறுக்க முடியாது. அந்தச் சூதாடிய கையை தீயாலே எரிப்பது தான் நெறி என்று கோபக்கனலாய்க் கொந்தளிக்கிறான்:

*நாட்டை எல்லாம் தொலைத்தாய், அண்ணே*
*நாங்கள் பொறுத்திருந்தோம்*
*மீட்டும் எமை அடிமை செய்தாய்*
*மேலும் பொறுத்திருந்தோம்*
*துருபதன் மகளை – திட்டத்*
*துய்ந னுடற்பிறப்பை*

*இருபகடை என்றாய் – ஐயோ*
*இவர்க் கடிமை என்றாய்!*
*இது பொறுப்பதில்லை – தம்பி!*
*எரிதழல் கொண்டு வா!*
*கதிரை வைத்திழந்தான் – அண்ணன்*
*கையை எரித்திடுவோம்.*

கோபத்தின் கொந்தளிப்பில், அண்ணனையே 'அவன்' என்று ஒருமையிலே கூறுகின்ற அளவிற்குச் செல்கின்றான் வீமன். பாரதி அந்த அளவிற்குப் பெரிதாகப் போற்றினான் பெண்மையை!

ஆண், பெண் சரி நிகர் சமானம் என்ற பாரதி, எல்லாரும் இந்நாட்டு மன்னர்கள் என்ற சமத்துவ உணர்ச்சியைப் பறை சாற்றினான். அதுமட்டுமல்லாமல், சமத்துவத்தின் உச்சிக்கே சென்றுவிட்டான். எப்படி என்றால் மகளிடத்தில் மட்டும் சமத்துவ உணர்ச்சியைக் காணவில்லை. பறவைகளும் மற்ற உயிரினங்களும், மலையும், கடலும்கூட எங்கள் கூட்டம் என்று கூறுகிறான்.

*காக்கை குருவி எங்கள் ஜாதி – நீள்*
*கடலும், மலையும் எங்கள் கூட்டம்*

என்று பாடுகிறான். எவ்வளவு உயர்ந்த உள்ளம்! எவ்வளவு உன்னதக் கருத்து! இந்தச் சீரிய பண்பை என்று நாம் அடைவோம்? உயர்ந்த உள்ளத்தை என்று நாம் பெறுவோம்?

**

## எண்ணுகிறேன் காரணத்தை!

*சின்னஞ்சிறு செடியினிலே சித்திரம்போல் வண்ணமலர்,*
*என்னருகே வந்தவுடன் ஏகாந்தம் நறுமணமே!*
*என்னயிது இந்த மணம் எப்படியேன் இம்மலரில்?*
*எண்ணுகிறேன் வந்தவிதம் ஏதும் விடை தெரியவில்லை!*

*கண்கவரும் வண்ணமலர்க் கலவைமிகு அற்புதமே!*
*பண்புறவாய் படர்ந்தயிதழ் பாவிசைக்கும் வண்டதற்கு,*
*உண்பதற்கே தேனீந்தும் உறவுசொல்லிப் பாய்விரிக்க,*
*அன்பதற்கே சொன்னதுயார்? அறிந்துணர மனம் துடிக்கும்!*

*தூரிகையால் குழைத்தாலும் துல்லியமாய் வாராத,*
*பேரியக்க வண்ணமெலாம் பெறுவதென்ன மலர்களெலாம்*
*யாரியக்கித் தந்திடுவார்? யாரளிப்பார் வண்ணமதை?*
*பார் வியக்கும் செயலிதனைப் பார்த்திடவே இயலவில்லை!*

*பச்சைநிறம் செடியனைத்தும்; பாங்கின் மலர் வண்ணம்பல;*
*இச்சைதரு இம்மலரை, ஈந்தளிப்ப தெப்படியோ?*
*பிச்சிப்பூ சூட்டிமகிழ் பெண்மலர்கள்; பரமனது*
*உச்சியிற்சேர் உயர்மலர்கள் உலகோர்க்கே வியப்பளிக்கும்!*

*சின்னஞ்சிறு எறும்பதனின் சுறுசுறுப்பைப் பாருங்கள்,*
*என்னவுரு அதனிதயம்? இயக்கமதோ படுவேகம்!*
*மண்ணிலொரு மாளிகையை மாண்புடனே அமைக்கிறதே*
*என்னயிது? பொறியியலை யாரளித்தார் அற்புதமாய்?*
*வண்ணமிகு ஊர்க்குருவி வான்மரத்து ஓலையிலே,*
*விண்ணகத்தைப் பின்னிவிடும், விளிகாகம் குச்சியினால்,*
*தன்னகத்தைச் சீரமைக்கத் தந்தது யார்? சிற்பிகளா?*
*என்னயிது? விந்தைபல! எண்ணுகிறேன் காரணத்தை!*



இரா. பாண்டுரங்கன்

அட்டைப்பட விளக்கம்

# இவள் கண்ணழகு யாருக்கும் கிடையாது சுவாமி!

ஸ்ரீ வேணுகோபாலன்

பிள்ளை உறங்கா வில்லிதாசர் என்பவர் உறையூர் அரசரிடம் மெய்க்காப்பாளராக வேலை ,பார்த்தார்.

அவர் அழகியான ஒரு பெண்ணை மணந்திருந்தார். அவள் பெயர் பொன்னாச்சி.

பொன்னாச்சிக்குக் கண்கள் பெரும் அழகு!

அதன் வசீகரத்தைச் சொல்ல முடியாது.

அதன் அழகில் எப்போதுமே ஆழ்ந்து போவார் பிள்ளை உறங்கா வில்லிதாசர்.

இதனால் அவளைச் சிறிது நேரம் கூடப் பிரியக்கூடாது என்று நினைத்தார்.

தினந்தோறும் தாம் வேலை செய்வதற்குப் போகும்போது அவர் தமது மனைவியையும் அழைத்துக் கொண்டு போவார்.

அவர் தமது மனைவியின் அழகை எப்போதும் பருகிக் கொண்டிருக்க எண்ணினார்.

ஒருநாள் வெயில் கொளுத்தும் வேளையில் இராமானுஜர் (புகழ்பெற்ற வைணவ ஆசாரியார்) தமது சீடர்களுடன் காவேரி நதி தீரத்தில் இருந்தார்.

அப்போது பிள்ளை உறங்கா வில்லிதாசர் தம் மனைவியுடன் ஆற்றைக் கடந்து கொண்டிருந்தார்.

கொடும் வெயிலால் மணல் சூடேறி இருந்ததால், எங்கும் ஆவி பறந்தது. தமது மனைவி வெயிலால் வருந்தக் கூடாதென்று எண்ணினார்.

அவள் நடப்பதற்காக மணலில் துணி விரித்தார். அதன் மேல் அவளை நடக்க வைத்தார்.

அவள் நடக்க நடக்க ஒரு துணியை அவள் முன்னால் விரித்தும், நடந்தபின் அந்தத் துணியை எடுத்து மீண்டும் முன்னால் கொண்டு போய் விரித்தும், ஒரு நடை பாவாடை ஏற்படுத்திக் கொண்டே சென்றார்.

அதே நேரத்தில் பொன்னாச்சிக்கு வெயில் அடிக்காமல் இருக்க ஒரு குடையையும் பிடித்து வந்தார்.

இந்தக் காட்சியை இராமானுஜர் தூரத்திலிருந்தே கவனித்தார். அந்த வில்லிதாசர் செய்வது அவருக்கு ஆச்சரியத்தை விளைவித்தது.

தமது சீடர் ஒருவரை அழைத்து, தாசரைக் கூட்டி வரும்படி கூறினார்.

தாசரும் வந்தார்.

"அப்பா! இதென்ன? மனைவிக்கு நடை பாவாடை இடுகிறாய்! குடை பிடிக்கிறாய்!" என்று கேட்டார்.

அதற்கு தாசர், "சுவாமி! என் மனைவியின் கண் அழகுக்கு யாரும் ஈடு கிடையாது. அதில் எப்போதும் ஈடுபடுகிறவன் நான். அவள் அழகு குலையாவண்ணமிருக்க இப்படிச் செய்கிறேன்!" என்றார்.

"அப்படியா! உம் மனைவியை விடக் கண்ணழகு மிக்குள்ளவரை உனக்குக் காண்பிக்கட்டுமா?" என்றார் இராமானுஜர்.

தாசர் பிரமித்தார். "சரி, காட்டுங்கள்!" என்றார்.

இராமானுஜர் அவரைத் திருவரங்கக் கோயிலுக்கு அழைத்துப் போனார்.

சந்நிதிக்குச் சென்று பெரிய பெருமாளான அரங்கநாதரைக் காண்பித்தார்.

தாசர் பார்த்தார்.



அந்தக் கணத்தில் அரங்கநாதரின் கண்கள் செவ்வரியோடிய, ஒளி மிளிர்ந்த, வசீகரம் கலந்த, மயக்கும் மாயம் கொண்ட கண்களாக அவருக்குத் தெரிந்தன.

அதிசயத்தில் பிரமை பிடித்தாற்போல் நின்றார்.

"இப்படி ஓர் அழகா!" என்று எண்ணினார். உடம்பெங்கும் சிலிர்த்தது.

அரங்கன் கண் அழகில் அந்த விநாடியே ஆழ்ந்துவிட்டார் பிள்ளை உறங்கா வில்லிதாசர்.

அரங்கனை விட்டுக் கண்களை எடுக்க முடியவில்லை.

இராமானுஜர் முறுவல் செய்ய, தாசர் அவரது திருவடிகளைப் பற்றிக் கொண்டார். இராமானுஜர் அவரைச் சீடராக ஏற்றுக் கொண்டார்.

அவரது அன்பிற்கினிய மனைவி பொன்னாச்சியும் இராமானுஜருக்குப் பக்தை ஆனாள்.

பிள்ளை உறங்கா வில்லிதாசர் தன் மனைவி வெயிலால் வருந்தக் கூடாதென எண்ணி, பொன்னாச்சிக்கு வெய்யில் அடிக்காமல் இருக்க குடை ஒன்றைப் பிடித்து வரும் காட்சியை ஓவியர் கோபுலு அழகிய வண்ண ஓவியமாக மேலட்டையை அழகு படுத்தியுள்ளார். பொன்னாச்சியின் அழகிய விழிகளைக் காணுங்கள்; களி கொள்ளுங்கள்.



# ஔவையார் பலர்; அறவுரைகள் பல

முனைவர் சி.பாலசுப்பிரமணியன்

'அம்மை' என்ற சொல்லின் திரிபாகிய 'ஔவை' என்ற சொல்லுடன் சிறப்புணர்த்தும் விகுதியாகிய 'ஆர்' சேர்ந்து ஔவையார் என்ற சொல் வந்தது. இச் சொல் பெண்களில் உயர்ந்தவர்களைக் குறிக்க வழங்கியது. சங்க காலத்தில் பெண்பாற் புலவர்கள் பலர் இருந்தனர். அவர்களில் சிறப்பிடமும் தலைமையிடமும் பெறத்தக்கவர் ஔவையாரே ஆவர். பிற்காலத்தில், அதாவது கவிச்சக்கரவர்த்தி கம்பர், ஒட்டக்கூத்தர் வாழ்ந்த பிற்காலச் சோழர் காலத்தில், ஒர் ஔவையார் வாழ்ந்திருந்ததாகவும் தெரிய வருகிறோம். ஔவையார் என்பது சிறப்புப் பெயர் எனக் கொண்டால் இவர்தம் இயற்பெயர் இன்னவென்று துணியக்கூடவில்லை.

சங்ககாலத்து ஔவையார் அக்காலத்தே வாழ்ந்த ஏறத்தாழ முப்பது பெண்பாற் புலவர்களுள் அறிவும், ஆற்றலும் புலமையும் பண்பும், பேரும் புகழும் மிகுந்தவர் எனலாம். இவர் பாடியனவாக நற்றிணையில் 7 பாடல்கள், குறுந்தொகையில் 15 பாடல்கள், அகநானூற்றில் 4 பாடல்கள், புறநானூற்றில் 33 பாடல்கள் ஆக 59 பாடல்கள் காணக்கிடக்கின்றன.

இவர் பரணர் என்னும் பெருஞ்சிறப்புடைய புலவர் காலத்தில் வாழ்ந்தவர் என்பது புறநானூறு 99ஆம் பாடலால் விளங்குகிறது. முடியுடை வேந்தராலும் ஒருங்கே பாராட்டப்பட்டு சிறப்புச் செய்யப்பட்ட பெரும் புலவர் இவர். சேரமான் மாரிவெண்கோ, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப்பெருவழுதி ஆகிய மூவேந்தரும் ஒருங்கிருந்த காட்சியை ஒருமுறை கண்ட ஔவையார் அவர்களை அன்றே போல என்றும் வாழச் சொல்லி வற்புறுத்தினார் (புறம்.367) இவர் முடியுடை வேந்தரையேயன்றிக் குறுநில மன்னரையும் கொடை பொருட்டு வாழ்த்திப் பாடியவர் என்பது, நாஞ்சில் வள்ளுவன் என்பான் பரிசிலாகத் தந்த பெருங்களிற்றைப் பெற்று அவனை வாழ்த்திப் பாடியிருப்பதால் அறியலாம். (புறம்.140)

ஔவையாரால் பெரிதும் புகழ்ந்து பாடப்பெற்ற குறுநில மன்னன் அதியமான் நெடுமான் அஞ்சி என்பவனாவான். இவர்கள் அறிமுகம் முதற்கண் மகிழ்ச்சி தருவதாக இல்லை. அதியமான் நெடுமான் அஞ்சியை இவர் புகழ்ந்து பாடியும் அவன் பரிசில் தராமல் காலந்தாழ்த்தி வந்தான். அதனால் வெறுப்பும் சினமும் கொண்ட ஔவையார், உலகில் அறிவும் புகழுங் கொண்டவர் மாய்ந்து வறுமை சூழ்ந்துவிட வில்லையென்றும், பாடிப் பரிசில் பெறும் புலவர்களாகிய கலைஞர்கள் எத்திசைச் சென்றாலும் அத்திசையில் சோறு உண்டென்றும் ('எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே' புறம்:206) அவர் பாடிய பாடல் இலக்கிய வானில் என்றும் நிலைத்து நிற்கத்தக்கது. தன் தவற்றை உணர்ந்த அதியமான் நிறையப் பரிசில் நல்கினான். அன்றுதொட்டு அவர்கள் நட்பு வளர்ந்தது. ஒருமுறை அதியமானோடு தொண்டைமான் பகை கொண்டான். தொண்டைமானிடம் தூது செல்லுமாறு ஔவையாரையே அதியமான் அனுப்பி வைத்தான். தொண்டைமான் ஔவையாரை வரவேற்றுத் தன் படைக்கலக் கொட்டிலைக் காட்டினார். ஆனால் ஔவையாரோ அவன் படைக்கலங்கள் போரில் இதுகாறும் பயன்படுத்தப்படாமல் எண்ணெய் தடவப்பெற்று, மயிற்பீலி அணிவிக்கப் பெற்று, அழகுற அமைந்திருப்பனவாகவும், ஆனால் அதியமானுடைய படைக்கலன்களோவெனில் போர்க்களத்தில் அடிக்கடி பயன்படுத்தப் பெற்றுக் கொல்லன் உலைக்களத்திற்குத் திருத்தஞ் செய்யப்படுவதற்காக அனுப்பி வைக்கப் பட்டிருக்கின்றன என்றும், நயமாகக் குறிப்பிட்டு அதன்வழி அதியமானின் போர்ப் பயிற்சியை நுட்பமாக வெளியிட்டுப் போரைத் தவிர்த்தார்.

ஒருமுறை அதியமானுக்கு மலை நெல்லிக்கனி ஒன்று அரிதாகக் கிடைத்தது. அது நெடுநாள் ஒருவரை வாழ

வைக்கும் தகுதி படைத்ததாகும். அதனைத் தானே உண்ணாமல், அதன் சிறப்பினையும் முன்கூட்டியே தெரிவிக்காமல் ஔவையாரிடம் கொடுத்து உண்ணச் செய்தான் அதியமான். தான் நெடுங்காலம் வாழவேண்டும் என்ற உயரிய நோக்கில் அதியமான் கொடுத்த கொடை யைப் பலபடப் பாராட்டி, நீலம் பாய்ந்த கழுத்தையுடைய சிவபெருமானைப் போலப் பல காலம் வாழவேண்டும் என்று அதியமானை ஔவையார் வாழ்த்தினார் (புறம்:91). இந்த அரிய கொடை நிகழ்ச்சி சிறுபாணாற்றுப் படையில் நல்லூர் நத்தத்தனாரால் நயம்படப் பாராட்டப்பட்டுள்ளது. (சிறுபாண்:99–103).

ஔவையார் கொடையைப் பெருமிதம் தோன்றப் பாடுவதில் மட்டுமின்றிச் சாவை அவலந் தோன்றப் பாடுவதிலும் வல்லவர் என்பதனை அதியமான் போரில் இறந்தபோது கையறுநிலைத் துறையமைத்து அவர் பாடியுள்ள பாடல்கள் கல்நெஞ்சையும் கரைவிப்பனவாகும். அதியமானுடைய மார்பில் பட்ட வேல், பாணர்களின் பிச்சைப் பாத்திரமாம் மண்டையில் துளைபோட்டு உருவி, இரவலர்களின் கையுள் புகுந்து சென்று, அவனால் புரக்கப்படுவோரின் கண்களின் பாவை சோரப் பாய்ந்து, பாடும் புலவர்களின் நாவில் தைத்து நின்றது என்றும், இனிமேல் பாடுவோரும், அப்படி ஒருவேளை பாடினாலும் அப்படிப் பாடுவோருக்கு ஈவோரும் இல்லையென்றும் மனமுருகிப் பாடியுள்ள பாடல் புறம் 235 ஆம் பாடலாகும்.

அதியமானது உடல் கொளுத்தப்பட்டபோதும் அதன் பின்னர் நிகழ்ந்த இறுதிச் சடங்கையும் இவர் பாடியுள்ள பாடல்கள் (புறம்: 231,232) அவலச்சுவையின் ஆழத்திற்கு எல்லைகோலுவனவாகும். அவலமேயன்றி இவர் பெண்பாற் புலவராயினும் வீரச் சுவையினை விளங்கப்பாடுபவர் என்பது, அதியமான் போர்க்களத்தில் போர் செய்து புண்பட்டு நின்ற காட்சியை வீரச் சுவை கொப்பளிக்கப் பாடியுள்ள பாடலால் அறியலாம். (புறம்:93). அதியமான் மகன் பொகுட்டெழினியும் தன் தந்தையைப் போலவே பெரு வீரனாயும் பெருங்கொடையாளியாயும் விளங்கிய திறனை ஔவையார் புறநானூற்றில் விளங்கப் பாடியுள்ளார். (புறம்:96, 102,392). புறநானூற்றுப் பாடல்கள் சிலவற்றில் இவர் தம்மை ஒரு விறலியாகக் குறிப்பிட்டுக் கொள்கிறார். இதனால் இவர் பாணர் குடியைச் சேர்ந்தவர் என்பர் திறனாய்வாளர் சிலர். ஆனால் ஔவையார் தம்மைக் கற்பனையாக இவ்வாறு அமைத்துப் பாடிக்கொண்டார் என்றும் சிலர் அமைதி கூறுவர்.

"இது நாட்டு நிலம்; இது காட்டு நிலம்; இது பள்ளப் பாங்கான பூமி; இது மேட்டு மண் என்பதால் ஒரு நிலம் உயர்ச்சி தாழ்ச்சி பெறுவதில்லை. அந்நிலத்தில் வாழும் மக்களுடைய பண்பாட்டாலேயே அந்நிலம் சிறக்கிறது" என்று இவர் பாடியுள்ள புறப்பாடல் (187) கருத்தமைந்த சிறந்த பாடலாகும். இவர் பண்பாடும் விரிந்த நோக்கமும் வாய்ந்த புலவராகத் துலங்குகிறார். வானத்துக் காட்சி களைத் தம் பாடல்களில் வடித்துத் தந்துள்ளார். காதலரின் பிரிவாற்றாமைத் துன்பத்தைத் திறம்படப் பாடுகின்றார். சொற்கள் சிலவற்றைத் திரும்பத் திரும்ப ஓர் அடியில் வரும்படி அமைத்து; அதன் வாயிலாக ஓர் அவல உணர்ச்சியினைப் புலப்படுத்தி விடுவதில் இவர் வல்லவ ராகத் திகழ்கிறார். கள்ளங்கபடமற்ற குழந்தைகளும் இவர் பாடல்களில் இடம்பெறுகிறார்கள். குழந்தைகளின் மழலைச் சொற்கள் ஈடிணையற்ற இன்பம் பயக்கத் தக்கவை என்கிறார். நீர்த்துறையில் யானையின் கொம்புகளைச் சின்னஞ்சிறார் கழுவித் தூய்மை செய்து விளையாடுதலைக் குறிக்கிறார். இவர் இரக்க உள்ளங் கொண்டவர் என்பதும், தச்சுத் தொழிலை நன்கு அறிந்திருந்தவர் என்பதும் இவர் பாடல்கள் வழிப் புலனாகின்றன.

இவர் திருவள்ளுவரோடு உடன் பிறந்தவர் என்று வழங்கும் கதைக்கு ஆதாரமில்லை.

பிற்கால ஔவையாரைப் பற்றியும் பல கதைகள் வழங்கி வருகின்றன. இவர் பெயரால் வழங்கும் தனிப்பாடல்களில் சில கதைக் குறிப்புகள் உள்ளன. இப்பாடல்கள் எப்போது பாடப்பெற்றன, எவரால் தொகுக்கப்பட்டன என்று கூற முடியாததனால் இப்பாடல்கள் வழி அறியலாகும் வரலாற்றினை உண்மையெனக் கொள்வதற்கில்லை.

இவர் பாடியனவாகத் தனிப்பாடல் திரட்டிலுள்ள பாடல்களைத் தவிர ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை (வாக்குண்டாம்), நல்வழி ஆகிய நீதி நூல்கள் காணப்படுகின்றன. இந்நீதி நூல்கள் எல்லா வயதினரும் கற்று வாழ்க்கையில் கட்டாயம் பின்பற்ற வேண்டிய சிறந்த கருத்துகளைத் தெளிவுறத் திட்பமுற விளக்கி நிற்கின்றன. எளிமையாக அரிய கருத்துகளை உயர்த்துவதில் இவை தனியிடம் பெறுகின்றன.

பெற்றோரைத் தெய்வமாகப் போற்றவேண்டும். தாயிற் சிறந்த கோயிலுமில்லை என்றும், தந்தையின் அறிவுரையே மந்திரங்களைவிட மேலானது என்றும் இவர் வற்புறுத்துகின்றார். பொருளைத் தீமையற்ற நல்லவழியில் ஈட்ட வேண்டும்; அப்பணத்தைப் பிறருக்குப் பயன்பட வைக்காமல் புதைத்து வைத்து வாழக்கூடாது. வருவாய் சிறிய அளவினதாயிருப்பினும் சிக்கன வாழ்க்கையினை மேற்கொண்டு மனநிறைவு கொள்ளவேண்டும் என்பதும் ஔவையாரின் பொருள் குறித்த அறிவுரைகளாகும்.

கணவனும், மனைவியும் கருத்தொருமித்து ஒன்றுபட்ட உள்ளத்தினராக அன்பால் பிணைக்கப்பட்டு வாழவேண்டும் என்பதும், ஏறுமாறான இல்வாழ்க்கையினும் துறவே மேலானது என்றும், அன்பில்லாத பெண்ணால் படைக்கப்படும் சோறு கொடுமை மிகுந்தது என்றும் பொருந்தாதார் வாழ்க்கையைக் குறிப்பிட்டுள்ளார்.

மானத்தோடு வாழ்க்கையை நடத்தவேண்டும். மதியாதார் தலைவாசலை மிதிக்கக்கூடாது, அன்போடு நம்மை நோக்காதவரிடமிருந்து எந்த உதவியையும் பெறக்கூடாது,

## கவிஞர் வீ.செ. கந்தசாமி



### உயர்வது ஊக்கத்திலே

இன்பமி ருப்பது மனத் தினுள்ளே - என்ற
இயல்பறிந் தோருக்குத் துன்பமில்லை;
இன்பமுந் துன்பமும் இயற்கை என்றே - அதை
ஏற்றுக்கொள் வோருக்குத் தோல்வியில்லை.

இளமையும் முதுமையும் எண்ணத்திலே - என்று
எண்ணிடு வோருக்கு ஏக்கமில்லை;
வளர்வதுங் குறைவதும் உள்ளத்திலே - நாம்
வாழ்க்கையில் உயர்வது ஊக்கத்திலே.

பாவியும் யோகியும் ஒருவருள்ளே - நெஞ்சில்
பதிந்துகி டப்பதைக் கண்டுகொண்டால்;
மேவிடும் இல்லறந் துறவறமே - வெறும்
வேடம்பு னைவதால் அமைவதில்லை.

நண்பரும் பகைவரும் வெளியில்லிலை - நம்மை
நன்றா யறிந்திடில் நமக்கு உள்ளே;
மண்ணிலே விண்ணகம் கண்டிடலாம் - நாம்
மாசிலா மனமதைக் கொண்டிடவே.

உலகினில் நீ இரு தவறு இல்லை - உன்னுள்
உலகம் புகுவது நல்லதில்லை;
பலவகை மனிதர்கள் உலகத்திலே - என்றும்
பார்த்து நடந்துகொள் துயரமில்லை

## என்னைப் போல..

செ. ஞானன்

மென்சிறு காம்பில்
சிலிர்த்து நிற்கும் பூவே:
ஏ பூவே, நீ,
வண்ணம் பலபெற்று
கண்ணைப் பறிக்கிறாய்
கருத்தைக் கவர்கிறாய்
ஒரு குழவியைப் போல!
மிகுமணம் பெற்று
அண்மையோரை மட்டுமின்றி
சேய்மையோரையும் ஈர்க்கிறாய்
மென்மைத் தகவால்
மேன்மை வடிவால்
கர்வங் கொள்கிறாய் - ஒரு
கன்னியைப் போல.
இதுவெல்லாம் நியாயந்தான்.
ஆனால் -
ஒன்று தெரியுமா பூவே உனக்கு?
நேற்று உன் தந்தைப்பூ
முந்தினநாள் உன் பாட்டன்பூ
அதற்குமுன்.... அதற்குமுன்
உன்பரம்பரையே..
அவையெல்லாம் எங்கே?..
மக்கி, மடிந்து, உரமாய் நின்றன்
மூட்டினுள்..தண்டினுள்..கொடிகளுள்..
அவற்றின் வாரிசே நீ!
அவற்றின் பிம்பமே நீ!
என்னைப் போல...

மானம் இழந்து வாழ்வதைவிட உயிரை இழந்துவிடுவது மேல் என்றெல்லாம் வாழ்க்கையைப் பற்றிப் புலப்படுத்தியுள்ளார்.

சான்றோர்களுடன் பழகு; உயிர்க்கொலை தவிர்; புலால் உணவைக் கைவிடு; அறிவு பெரிது; கல்வி எல்லையற்றது; ஒருவர் தம் வாழ்நாளில் கற்பது மிகச்சிறிதே; எனவே கல்விச் செருக்கு கூடாது; கல்வியினும் மேம்பட்டது ஒழுக்கமே என்றெல்லாம் ஔவையார் அறிவுறுத்துகின்றார்.

உள்ளதைக் கொண்டு உளம் மகிழ வேண்டும்; கிடைக்காத பொருளுக்கு ஏங்கக்கூடாது; ஊழ்வினைப்படி யாவும் நடக்கும். அதை எவராலும் மாற்ற முடியாது. மக்கள் வாழ்நாள் வரையறுக்கப்பட்டது. மாண்டவர் மீளார். எல்லாம் ஈசன் செயல். செல்வ நிலையாமை, யாக்கை நிலையாமையினை இவ்வுலகில் கண்டு உடனே இவ்வுலகைத் துறவாமல் தாமரையிலை நீர் போல் ஒட்டியும் ஒட்டாமலும் இவ்வுலக வாழ்க்கையை நடத்தவேண்டும் என்பதே ஔவையாரின் பொருள் பொதிந்த அறவுரையாகும்.

ஆடம்பரம் என்ற சொல்லுக்குச் சிறிதும் இடம் தராத, கிருஷ்ணசாமி பாரதி வாழும் வீடு.

கே.சி. லட்சுமிநாராயணன்

# வரலாறு படைத்த ஒரு வீர புருஷர்

தமிழ்நாட்டைச் சேர்ந்த இந்திய சுதந்தரப் போராட்ட வீரர்களில், அதிர்ஷ்டவசமாக இன்று வரை நம்மிடையே வாழும் நல்வாய்ப்புப் பெற்ற மரபினருள், மிகவும் மூத்தவரான எல். கிருஷ்ணசாமி பாரதி அவர்கள்.

அவருக்கு வயது 95. சிவந்த மேனி; உடல் வெகுவாகத் தளர்ந்து போயிருக்கிறது; படுக்கையில் மல்லாந்து படுத்திருக்கிறார்; ஓர் இளைஞரின் துணையுடன் இடுப்பில் வேட்டியைச் சீர்செய்து கொள்கிறார்; மேலே சட்டை எதுவும் இல்லை.

நான் சிறிது தயக்கத்துடன் எனது வருகையின் நோக்கத்தை விவரிக்கிறேன். அவர் உடனடியாக இசைவு தெரிவிக்கிறார்.

படுக்கையில் படுத்தவண்ணமே பேட்டி தருகிறார்; கேள்விகளுக்குப் பதில்களைத் தயக்கம் இல்லாமல் அளிக்கிறார்.

சமீபத்தில் கிருஷ்ணசாமி பாரதிக்கு மீண்டும் மாரடைப்பு ஏற்பட்டது. இப்போது ஓரளவு உடல்நலம் பெற்று வருகிறார்.

அவரது குரலில் நிச்சயமாக நடுக்கம் தென்படுகிறது. ஆனால் பேச்சில் தடுமாற்றம் இல்லை; தெளிவு மிளிருகிறது; கம்பீரம் விளங்குகிறது.

4.9.1997 அன்று இந்தச் சந்திப்பு நிகழ்ந்தது.

## சாதனை:

“முதலில் எங்களது குடும்பத்தின் ஈடிணையில்லாத ஒரு முக்கிய சாதனையைச் சொல்லி விடுகிறேன். அந்தச் சாதனையால் தமிழ்நாட்டுக்குப் பெருமை; அகில இந்தியாவுக்கும் பெருமை” என்று, பேட்டியின் தொடக்கத்தில் கிருஷ்ணசாமி பாரதி கூறினார்.

“இந்திய சுதந்தரப் போராட்டத்தில் ஒரே குடும்பத்தைச் சேர்ந்த ஆறுபேர் சிறை சென்றார்கள் என்பதும், அவர்களில் மூவர் பெண்கள் என்பதும் எங்களது குடும்பத்தில் மட்டும் நிகழ்ந்த வரலாறு. இவ்வாறு, தமிழ்நாட்டில் வேறு எந்தக் குடும்பமும் சாதனை படைத்தது கிடையாது” என்று அவர் நிதானமாக, ஆனால் உறுதியான குரலில் விவரிக்கிறார்.

*கேள்வி: அந்த ஆறு பேர் யார்?*

“நான், எனது மனைவி லட்சுமி பாரதி, எனது மகள் மகாலட்சுமி பாரதி, எனது மகன் லட்சுமிகாந்தன் பாரதி, எனது தமையன் மனைவி ராஜம் பாரதி, என் மைத்துனர் லட்சுமிரதன் பாரதி ஆகிய அறுவரும் விடுதலைப் போராட்டங்களில் சிறைவாசம் செய்தோம்” என்று கிருஷ்ணசாமி பாரதி பட்டியல் தருகிறார்.

“இதில் ஒரு விசேஷம். நானும் எனது மனைவியும் இருமுறை ஒரே சமயத்தில் சிறை சென்றோம். அப்போது எங்கள் இரண்டு குழந்தைகளையும் உதவியாளரிடமும், வீட்டில் வேலை செய்பவரிடமும் ஒப்படைத்துவிட்டுப் போனோம்!” என்றும் அவர் சொல்கிறார்.

தியாகம் என்ற சொல்லுக்கும், தேசபக்தி என்ற வார்த்தைக்கும் அங்கே பொருளைக்காண முடிகிறது.

நான் வியப்பில் மூழ்கிப் போகிறேன். ஒரு நிமிடம் அமைதியாக அந்தத் தியாகசீலரைப் பார்த்தேன். பிறகு சில கேள்விகளை எழுப்பினேன்.

## அதிசயம்:

கேள்வி: “பாரதி” என்ற சொல் உங்களது குடும்பப் பெயர்களில் சேர்ந்துள்ளதற்குக் காரணம் என்ன?

பதில்: எனது மாமனார் சோமசுந்தர பாரதியார், அவர் கவியரசர் சுப்பிரமணிய பாரதியாருடன் நெருங்கிப் பழகியதால் இந்தப் பெயர் எங்கள் குடும்பத்திற்கு வந்தது.

*கேள்வி: நீங்கள் எவ்வளவு முறை சிறை சென்றீர்கள்?*

பதில்: 1932ஆம் வருடப் போராட்டத்தின் போதும், 1940ஆம் ஆண்டில் தனி நபர் சத்தியாக்கிரகத்தின் போதும் மொத்தம் மூன்றாண்டுகள் சிறைத் தண்டனை அநுபவித்தேன்.

*கேள்வி: சுதந்தரப் போராட்டக் காலத்தையொட்டிய மறக்க முடியாத நிகழ்ச்சி ஏதேனும்.....?*

பதில்: நிச்சயமாக ஒரு நிகழ்ச்சி உண்டு.... 1942ஆம் வருடம் ஆகஸ்ட் புரட்சி நாடு முழுவதும் வெடித்தது. அப்போது எனது மகன் லட்சுமிகாந்தன் பாரதி எஃப்.ஏ. வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான்; அவன் ஆகஸ்ட் புரட்சியின்போது கைது செய்யப் பட்டான். அவனைக் கோர்ட்டுக்குக் கொண்டு சென்றார்கள். அங்கே அவனது கைகளில் விலங்கு

“மகாத்மா காந்தியை அறவே மறந்ததுதான் இன்றைய நிலவரத்திற்குக் காரணம்...
காந்தியை மறப்பது மாபெரும் பாபம்; மறந்தால் கிடைக்கும் ஆண்டவன் சாபம்!”



கணவருடன் ஒரே சமயத்தில் சிறை சென்று, கணவருடன் ஒரே சமயத்தில் சட்டமன்ற உறுப்பினராக இருந்து சரித்திரம் படைத்த லட்சுமி பாரதி.

பூட்டப்பட்டிருந்ததை நானும் எனது மனைவியும் கண்டு துடித்துப்போனோம்.

கேள்வி: *விலங்கு போடப் பட்டிருந்ததா?*

பதில்: ஆமாம். அந்த அவலக்காட்சியைக் கண்டதும் எனது மனைவி 'ஓ' என்று அலறினாள். "நீ படித்துப் பெரிய வேலைக்கு வருவாய் என்று எதிர்பார்த்தேனே; கைகளில் விலங்குடன் பார்ப்பதற்கா உன்னை நான் பெற்றேன்?" என்று சொல்லி என் மனைவி அழுதாள். அதற்கு என் மகன், "அம்மா! இந்த விலங்கு எனக்கு மாட்டப்பட்டதில்லை. இது பாரத மாதாவுக்குப் பூட்டப்பட்டிருக்கிறது. இந்த விலங்கை உடைத்தெறியத் தான் நான் சிறைக்குச் செல்கிறேன். நான் திரும்பிவந்து படித்துப் பெரிய வேலை பார்ப்பேன். இது உறுதி" என்று பதில் கூறினான்.

கேள்வி: *அவரது உறுதிமொழி நிறைவேறியதல்லவா?*

பதில்: அதுதான் அதிசயம். மதுரை மீனாட்சி அம்மன் கிருபைதான் அதற்குக் காரணம், என் மகன் லட்சுமிகாந்தன் பாரதி இந்தியா விடுதலை பெற்றதும், நன்றாகப் படித்துப் பல உயர் பொறுப்புகளை வகித்தான்... எந்த மதுரை மாவட்டத்தில் அவன் கைவிலங்குகள் பூட்டப்பட்டுச் சிறைக்குக் கொண்டு செல்லப்பட்டானோ, அதே மதுரை மாவட்டத்தில் கலெக்டராக அவன் பிற்காலத்தில் பதவி வகித்தான்... இது மீனாட்சி அம்மன் கிருபை (இரண்டாது முறையாகச் சொல்கிறார்.)

கேள்வி: *மாவட்டக் கலெக்டர் பதவியா?*

பதில்: ஆமாம். லட்சுமிகாந்தன் பாரதி ஐ.ஏ.எஸ். வரை படித்தான். மதுரை மட்டுமின்றி, செங்கல்பட்டு, கோவை, இராமநாதபுரம் ஆகிய மாவட்டங்களிலும் அவன் கலெக்டராக இருந்திருக்கிறான்.

## மொழி பெயர்ப்பு:

திருநெல்வேலி மாவட்டம் நயினாரகரம் என்ற ஊரில் 10.7.1903 அன்று ஒரு விவசாயக் குடும்பத்தில் பிறந்தவர் கிருஷ்ணசாமி பாரதி. அவர் கல்லூரிப் படிப்புக்குப் பிறகு சட்டப்படிப்பிலும் தேறி 1928ஆம் ஆண்டில் வழக்குரைஞர் தொழிலைத் தொடங்கி நடத்தினார்.

எனினும், காந்தியடிகளின் அழைப்பை ஏற்று அவர் தமது குடும்பத்தினருடன் விடுதலை இயக்கத்தில் ஈடுபட்டார்.

1937ஆம் வருடத்தில் நடந்த அன்றைய சென்னை மாகாணச் சட்டமன்றத் தேர்தலில் கிருஷ்ணசாமி பாரதியும், அவரது மனைவி லட்சுமி பாரதியும் இரு தொகுதிகளில் போட்டியிட்டு, வென்று, சட்டமன்ற உறுப்பினர்களாகச் செயல்பட்டார்கள்.

கணவன், மனைவி இருவரும் ஒரே சமயத்தில் எம்.எல்.ஏ.க்களாக இருந்தார்கள் என்பதும் இந்தக் குடும்பத்தின் ஒரு சாதனை.

விடுதலை இயக்கக் காலத்தில் காந்தியடிகள், இராஜாஜி, இராஜேந்திர பிரசாத், சத்தியமூர்த்தி முதலிய தலைவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தவர் கிருஷ்ணசாமி பாரதி.

நேரு, இராஜன் பாபு, சரோஜினி தேவி, பட்டாபி சீதாராமையா, வி.வி. கிரி, புலாபாய் தேசாய் முதலியவர்களின் தமிழகச் சுற்றுப் பயணங்களின் போது அவர்களது ஆங்கில உரைகளைக் கிருஷ்ணசாமி பாரதி தமிழில் மொழி பெயர்த்து வழங்கினார்.



வயது தொண்ணூற்றி ஐந்து என்றாலும் முகத்தில் கம்பீரமான புன்னகை மிளிருகிறது.

காந்தியடிகளின் தென்னாப் பிரிக்கச் சத்தியாக்கிரக இயக்க நூலைத் தமிழில் மொழிபெயர்த்தவர் கிருஷ்ணசாமி பாரதி, இராஜாஜி அந்த மொழி பெயர்ப்பைப் பெரிதும் பாராட்டினார்.

1940ஆம் வருட தனிநபர் சத்தியாக்கிரகத்தின் போது திருச்சி சிறையில் சுமார் பத்து மாதங்கள் இராஜாஜியுடன் கிருஷ்ணசாமி பாரதியும் இருந்தார். அது "ஓர் அரும் பேறு" என்று இவர் குறிப்பிடுகிறார்.

## கவிஞர்

இந்திய விடுதலைக்குப் பிறகு நமது நாட்டின் அரசியல் சாசனத்தைத் தயாரித்த அரசியல் நிர்ணய சபையின் உறுப்பினராகவும் கிருஷ்ணசாமி பாரதி இருந்தார்.

அதன் விவாதங்களிலும், முடிவுகளிலும் குறிப்பிடத்தக்க வகையில் கிருஷ்ணசாமி பாரதி பங்கு வகித்தவர் என்பது இன்றைய சந்ததியினர் அறியாத ஒரு செய்தி.

கிருஷ்ணசாமி பாரதி சிறந்த தமிழ்க் கவிஞர். இராஜாஜி வாழ்ந்த காலத்தில் அவருடன் இவர் கவிதைகள் மூலம் கடிதப்போக்குவரத்து வைத்துக் கொண்டதுண்டு.

*திருமாலின் பெயர்கொண்டோன்*
*திருவடிக்குத் தெண்டனிட்டுக்*

*கிருட்டின சாமித் தாசன்*
*கிழமையோடு எழுதும் ஒலை*
*அருமை உன்திருமுகம்*
*அடையப்பெற்றேன்,*
*அளப்பரும் மகிழ்ச்சி உற்றேன்;*
*பெருமையோடு அடியேன்*
*பெற்றதெல்லாம் பேசலாமோ?*

– இது இராஜாஜிக்குக் கிருஷ்ண சாமி பாரதி எழுதிய ஒரு பாடல்.

"தமிழ்ப் பேராசிரியராக இருப்பதற்கு உரிய தகுதி இவரிடம் அமைந்துள்ளது" என்று ஒருமுறை இராஜாஜி வியந்து பாராட்டினார்.

## சிறப்பு

கிருஷ்ணசாமி பாரதிக்கு இரண்டு புதல்வர்கள். லட்சுமிகாந்தன் பாரதி, காந்தி மோகன் பாரதி. லட்சுமிகாந்தன் பாரதி ஐ.ஏ.எஸ். அதிகாரியாகவும், ஒரு கட்டத்தில் முதலமைச்சரின் செயலாளராகவும் பணி புரிந்து பின்னர் ஓய்வு பெற்றார். அண்மையில் தென் மாவட்டங்களில் நடந்த சாதிக் கலவரங்கள் சம்பந்தமான தமிழ்நாடு அரசின் ஓர் ஆய்வுக்குழுவில் அவர் இப்போது ஓர் உறுப்பினராகச் செயல்படுகிறார்.

காந்தி மோகன் பாரதி முன்னாள் படை வீரர் நல இயக்கத்தில் கூடுதல் இயக்குநராக இப்போது பணியில் இருந்து வருகிறார்.

கிருஷ்ணசாமி பாரதியின் ஒரே புதல்வி – மகாலட்சுமி பாரதி.

சுதந்தரப் போராட்ட வீரர் என்ற வகையில் கிருஷ்ணசாமி பாரதி பலமுறை கௌரவிக்கப்பட்டிருக்கிறார்.

தமிழ்நாடு சட்டமன்றப் பொன்விழாவிலும், சில மாதங்களுக்கு முன்பு நடந்த பவள விழாவிலும் சட்டமன்றத்தின் பழைய மூத்த உறுப்பினர் என்ற வகையில் கிருஷ்ணசாமி பாரதிக்குச் சிறப்பு செய்யப்பட்டது.

பொன் விழா, பவள விழா ஆகிய இரு நிகழ்ச்சிகளின் போதும் கிருஷ்ணசாமி பாரதிக்குப் பொன்னாடை போர்த்திப்பாராட்டியவர் முதலமைச்சர் கருணாநிதி.



வீட்டின் வெளியே காம்பவுண்டுக்கு அழகிய பிள்ளையார். காந்தி மோகன் பாரதி தினசரி இங்கே பூஜை செய்கிறார்.

## காந்தியடிகள்

"தங்களை மிகவும் ஈர்த்த தலைவர் யார்? - இது எனது கேள்வி.

"என்னைக் கவர்ந்த நேர்மையான மாபெரும் தலைவர் சக்கரவர்த்தி இராஜகோபாலாசாரியார் அவர்கள்" என்று கிருஷ்ணசாமி பாரதி 'பளிச்'சென்று பதில் தருகிறார்.

கேள்வி: இன்று லஞ்சமும், ஊழலும் நாடெங்கிலும் எல்லாத் துறைகளிலும் நிலவுகின்றன. வன்முறைப் போக்கு தலைவிரித் தாடுகிறது. இந்த நிலவரத்திற்கு என்ன காரணம் என்று கருதுகிறீர்கள்?

பதில்: மகாத்மா காந்தியை அறவே மறந்ததுதான் இன்றைய நிலவரத்திற்குக் காரணம்... காந்திஜியை மறப்பது மாபெரும் பாபம்; மறந்தால் கிடைக்கும் ஆண்டவன் சாபம்!!

கேள்வி: இன்றைய இந்தியாவைப் பார்க்கின்றபோது, உங்களுக்கு ஏதேனும் வருத்தம் ஏற்படுகிறதா?

பதில்: எனக்கு நிச்சயமாக வருத்தம் உண்டு. இந்த அவலநிலையில் இந்த நாடு இருப்பதைக் காணவா அப்படி போராடினோம் என்ற வருத்தம் உண்டு.

கேள்வி: இந்தியா இந்த வருத்தத்தக்க நிலவரத்திலிருந்து மீளவும், மறுபடியும் நல்ல உயிர்த்துடிப்புடன் நிமிர்ந்து நிற்கவும் ஏதாவது வழி உண்டா?

பதில்: மற்றொரு காந்திஜி தோன்ற வேண்டும்.. அது ஒன்றுதான் வழி.

கிருஷ்ணசாமி பாரதியின் இந்தப்பதில் என்னைச் சிலிர்க்கவும் சிந்திக்கவும் வைக்கிறது. இரு கைகளையும் கூப்பி அவரை வணங்கி விட்டு எழுகிறேன்.

சுதந்தரப்பொன் விழா ஆண்டில், ஆரவாரத்திற்கும், ஆடம்பரத்திற்கும் சிறிதும் தொடர்பு இல்லாத சூழ்நிலையில், விடுதலை இயக்கத்தின் மிக மூத்த பிரதிநிதி என்ற கம்பீரத்துடன், கொள்கை பிறழாத கோமானாக, கிருஷ்ணசாமி பாரதி என்ற மாமனிதர் அமைதியாக வாழ்ந்து வருகிறார், என்பதே நமது நற்பேறு.

# தொழுத கையுள்ளும்.....

## கலைஞர் மு. கருணாநிதி

சந்தனமெடுத்துச்செய்த உருவமொன்றுநடந்து வருகிறது. கையில் ஓர் ஊன்றுகோல். அதுவும், தரைக்கு வலிக்குமேயென்று அஞ்சியோ என்னவோ மெதுவாக ஊன்றப்படுகிறது. அருள் பொழியும் முகம். கனிவு ததும்பும் விழிகள். புன்னகையைத் தேக்கியிருக்கும் பொக்கை வாய்ப் பூவிதழ்கள். அவரைச் சுற்றி நூற்றுக்கணக்கானவர் இருக்கின்றனர் என்றாலும், அவர்கள் எல்லாம் பகல் நேரத்து விண்மீன்களாகவும், அவர் மட்டுமே கதிரவனாகவும் நம் கண்களுக்குக் காட்சி தருகிறார். அவர் வாய்மையின் வடிவம். அன்பின் திருவுருவம். அவர்தான் கருணைக் கடல் காந்தியடிகள்.

அறவழியே அவர் வழி. அநியாயத்தை எதிர்க்கும்போது அவர் தன்னைத்தானே பலி கொடுத்துக் கொள்ளவும் தயாராகக் களம் நோக்கிச் செல்வார். இந்திய மண்ணின் சுதந்தரத்தைப் பெற்றிட அவர் தியாக நெருப்பில் குளித்தார். அந்த நெருப்பிலிருந்து அவர் புடம்போட்ட தங்கமாக வெளி வந்தார். அடிமைத்தனம் எங்கிருந்தாலும் அவர் அதனைக் களைந்திடவே விரைந்தோடுவார். மனிதனை மனிதன் தீண்டக்கூடாது எனும் சாதிக்கொடுமையை வேரோடு வீழ்த்தக் கொடி தூக்கினார். சமுதாயத்தைச் சாய்க்கும் தீமைகளாம் குடியாட்டம், குதிரை ஒட்ட்ம் முதலியவற்றை அறவே ஒழிக்க வேண்டுமென நாளெல்லாம் பாடுபட்டார். அமளிகள், கலகங்கள், குழப்பங்கள் எங்கு நடந்தாலும் அவை ஒயும் வரை உண்ணமாட்டார், உறங்கமாட்டார், மகாவீரரைப் போல், புத்தரைப்போல்,

*என்பி லதனை வெயில்போலக் காயுமே*
*அன்பி லதனை அறம்*

என்றுரைத்த வள்ளுவரைப்போல் வாழ்ந்து காட்டியவர் அவர். அந்த உலக உத்தமர்தான் அதோ வருகிறார்.

மேற்றிசையில் கதிர் மறையும் நேரம். இளங்காற்று மென்மையாக வீசி, அவரை வலம் வருகிறது. அவர் அந்த மேடையில் அமர்ந்து இறைவணக்கம் தொடங்கப் போகிறார். அவரோடும் அவர் இதய உணர்வுகளோடும் இணைந்து அங்குள்ள நல்லோர் அந்த வணக்கப்பாடலை இசைக்கப் போகின்றனர். எப்பொழுது வருவார் என்று எதிர்பார்த்து ஏங்கிய விழிகளுக்கு விருந்தாக, எப்பிணியையும் நெஞ்சிலிருந்து நீக்கும் மருந்தாக, அவர் வந்துவிட்டார்.

அங்குள்ளோர் கரங்கள் அனைத்தும் மலர்ந்த பூக்கள் மீண்டும் மொட்டானதுபோல் விளங்குகின்றன. ஆம், அனைவரும் அவரை வணங்குகின்றனர். அவரும் அவ்வாறே வணங்குகிறார். அந்த வணக்கத்தைச் சூழ்ந்திருந்தோர் வாழ்த்தாக எண்ணிக் கொள்கின்றனர். காலமுணர்த்தும் கருவி அவரது இடுப்பிலே ஆடிக் கொண்டிருக்கிறது. கூப்பியிருந்த கரங்களில் ஒரு கரம் அவரை நோக்கி நகருகிறது. கூட்டத்திலிருந்தவர்களைப் பின்னுக்குத் தள்ளி விட்டு, அந்த மனிதன் மட்டும் அவரருகே செல்கிறான். ஏன் அருகே செல்கிறான்? என்று நினைப்பதற்குள்ளாக, அவன் அவரைத் தாழ்ந்து வணங்குகிறான். அந்தத் தும்பை மலர் உள்ளம் அவன்மீது அன்பை அள்ளி வீசுகிறது. அம்மவோ! அந்தக் கொடியவனின் கும்பிட்ட கைக்குள்ளே கொலைக்கருவி பதுங்கியிருக்கிறது. அந்தக் கைத்துப்பாக்கி, திடீரென அந்த இடத்தின் அமைதியைக் கெடுக்கிறது. அசை போட்டவாறு கண்மூடியிருக்கும் பசுவின்மீது புலியொன்று பாய்ந்தது போல் அந்த அமைதியான சூழ்நிலையின்மீது வேட்டுச் சத்தம் தாக்கியது.



அமைதி அழிந்தது! இருள் மூடிக்கொண்டது. இதயப் பகுதியிலிருந்து குருதி வெள்ளம் பெருக்கெடுக்க, அந்த எளிய உருவம், ஏழைகளின் நம்பிக்கை விளக்கு, பூமியில் சாய்ந்துவிட்டது. தொழுத கைக்குள்ளிருந்த படை, நாட்டுத் தந்தையின் உயிரைக் குடித்துவிட்டது. இது போலவும் நடக்கக்கூடும் என்பதை வள்ளுவரின் நுண்ணறிவு எப்படித்தான் முன்கூட்டி உணர்ந்திருந்ததோ!

*தொழுத கையுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்*
*அழுத கண்ணீரும் அனைத்து.*

பகைவர்கள் வணங்குகின்றபோது அவர்களின் கைக்குள்ளே கொலைக்கருவி மறைந்திருக்கும்; அவர்கள் கண்ணீர் கொட்டி அழுவதும் அப்படிப்பட்டதே என்று அடையாளங் காட்டுகிறார் அவர்! அண்ணல் காந்தியடிகளின் முடிவு, இந்தக் குறளை மெய்ப்பிக்கும் எடுத்துக் காட்டல்லவா?

நன்றி: கலைஞர் மு.கருணாநிதி எழுதிய 'குறளோவியம்' நூலிலிருந்து வெளியீடு: பாரதி பதிப்பகம்

# சுவையான தின்பண்டங்களுக்கு 'சுஸ்வாத்'

வளர்ந்து வரும் பொருளாதாரத் தேவைக்கேற்ப கணவன், மனைவி இருவரும் வேலைக்குச் செல்ல வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கும் இன்றைய காலகட்டத்தில் மரபு வழியில் செய்யும் இனிய சுவைமிக்க தின்பண்டங்கள் வீட்டில் செய்ய முடிவதே இல்லை. தெருவிற்கு ஒரு மிட்டாய்க் கடை இருந்தாலும் அதன் தரத்தைக் குறித்த கேள்விக்குறி பெரியதாகவே உள்ளது. நல்லதரமான தின்பண்டங்களைத் தயாரித்து சென்னை வாசிகளுக்கு அளிக்க தியாகராய நகரில் வாழ்பவர் களுக்காகவே சிறப்பான முறையில் முறுக்கு, சீடை, அதிரசம், மனோகரம், பொரி விளங்காய் உருண்டை போன்ற மரபு வழி தின்பண்டங்களைத் தயாரித்து விற்பனை செய்யத் தொடங்கினர் சுஸ்வாத் நிறுவனத்தினர்.

அவர்கள் செய்யும் இனிப்பு மற்றும் கார வகைகளுக்காக இப்போது தியாகராய நகர் வாசிகள் மட்டுமின்றி, சென்னையின் பல்வேறு பகுதியிலிருந்தும், வெளியூர் மற்றும் வெளிநாட்டு வாடிக்கையாளர்கள் கூட வந்து வாங்கி மகிழத் தொடங்கிவிட்டனர்.

ஆரம்ப காலத்தில் இந்த வகைத் தின் பண்டங்கள் செய்யும் வல்லுனர்களைக் கொண்டே செய்து வந்தனர். சுஸ்வாத் நிர்வாக இயக்குநர் திரு கிருஷ்ணமூர்த்தியின் தீவிர முயற்சியினால் இப்போது முறுக்கு, சீடை போன்ற தின்பண்டங்கள் இயந்திரத்தி னால் செய்யப்படுகின்றன. கைதேர்ந்தவர்களின் கவனிப்பில் தயாரிக்கப் பட்ட கலவையை இந்த இயந்திரங்களில் இட்டு இயக்குவதனால் முறுக்கு, சீடை போன்றவை ஒரே சீராகவும், தேவைக் கேற்ப எவ்வளவு வேண்டுமானாலும் தயாரிக்கக் கூடிய திறமையும் அடைந்திருக்கிறது சுஸ்வாத். இப்படி இயந்திரத்தினால் தயாரிக்கப்பட்ட முறுக்கு சீடை மற்றும் ஏனைய கார பட்சண வகைகளைச் சிறந்த தாவர



திரு. கிருஷ்ணமூர்த்தி

எண்ணெயில் தயாரிக்கிறார்கள். இவர்கள் உபயோகிக்கும் எண்ணெய் 'கொலஸ்டரால்' இல்லாத தாவர எண்ணெய். அதேபோல் இவர்கள் செய்யும் இனிப்பு வகைகளும் தரம் மிகுந்த வெண்ணெயிலிருந்து எடுத்த நெய்யினாலேயே செய்யப்படுகின்றன.

கார வகைகள் அனைத்தும் சென்ட்ரிபியூகல் முறையில் சுழற்சி செய்யப்பட்டு எண்ணெய்யை முழுவது மாக எடுத்துவிடுகிறார்கள். இதனால் கார வகைகளின் கரகரப்பு நாள்பட இருக்கிறது. எண்ணெய் வாசனை இல்லாமல் பலநாள் கெடாமலும் இருக்கின்றன. இதனாலேயே இவர்கள் செய்யும் கார வகைகளை வாடிக்கை யாளர் பலரும் மிகவும் விரும்பி வாங்கிச் செல்கின்றனர்.

திருமணத்திற்குத் தேவையான சீர்முறுக்கு, பல வகை பருப்புத் தேங்காய், அதிரசம், லட்டு, மைசூர்ப்பாகு போன்றவை அவரவர்கள் தேவைக் கேற்ப பல அளவுகளில் தயார் செய்து தனித்தனியாக 'பாலிதீன்' பைகளில் இட்டுத்தருகிறார்கள்.

இவைதவிர எல்லாவித 'வடகம்' அப்பளவகைகள், பலதரப்பட்ட பொடி வகைகள், அந்தந்தக் காலத்திற்கேற்ற ஊறுகாய் வகைகள், நல்லதரமான முறையில் தயார் செய்து விற்பனை செய்து வருகின்றனர். ஆசாரம் பார்க்கும் வீட்டுப் பெரியவர்கள் கூட இந்நிறுவனத்திலிருந்து வாங்கும் பொருள்களை மறுப்பின்றி மனமுவந்து ஏற்றுக் கொள்கிறார்கள் என்று பெருமையுடன் கூறுகிறார் நிர்வாக இயக்குநர்.

சுமார் முப்பது வகை இனிப்பு வகைகள், இருபத்தெட்டு வகைக் காரவகைகள் தீபாவளிக்காகத் தயாரித்து இருக்கிறார்கள். திருநெல்வேலி 'ஓக்காரை' என்கிற இனிப்பு வகை இவ்வருடச் சிறப்பாக இருக்கும். தீபாவளி மருந்து பலவகை மூலிகைகளினால் தயாரிக்கப்படும் ஒன்றாகும். இதைச் சிறிதளவு உண்பதால் இதைப்போன்ற பண்டிகைக் காலங்களில் ஆசைப்பட்டு அதிகப் படி உட்கொள்ளும் பட்சண வகையினால் உடலுக்கு எந்தவிதப் பாதிப்பு ஏற்படாமல் பாதுகாக்கிறது. சுவாத் என்றால் சுவை, சுஸ்வாத் என்றால் இனிய சுவை. இத்தீபாவளித் திருநாளில் 'சுஸ்வாத்' இன்சுவை விருந்தை உண்டுகளிப்போம்

இப்போதுசாம்பார், ரசம், கறி அல்லது கூட்டு தனித் தனிப் பாக்கெட்களில் முன்பதிவு செய்வோருக்காகத்



சுவைமிகு இனிப்பு வகைகள்

தயாரித்துத் தருகிறார்கள். விடுமுறை நாள்களிலும் அவசர அவசரமாக சமையல் வேலை செய்ய வேண்டிய நிர்ப்பந்தத்திலிருந்து வீட்டுப் பெண்மணிகளை காக்கிறது. ஒரு செட் ரூ.20 சுமார் மூன்று நபர்களுக்குத் தேவையான அளவு கொடுக்கப்படுகிறது.

இந்த வருடம் விநாயக சதுர்த்தியின்போது பல வாடிக்கையாளர்களின் வேண்டுகோளுக் கிணங்கி, வெல்ல , உப்பு கொழுக் கட்டைகள் முதன் முறையாகத் தயாரித்தார்கள். இவர்கள் தயாரித்த இருவகைக் கொழுக்கட்டைகளுமே முழுவதுமாகத் தீர்ந்து போய் இரண்டு முறை மீண்டும் செய்யுமாறு ஆர்டர் கொடுத்து வாங்கிச் சென்றுள்ளனர். விநாயகர் சதுர்த்தியன்று மட்டு மல்லாமல் எப்போதுமே கொழுக் கட்டை விற்பனைக்குக் கொண்டு வரலாமா என்கிற யோசனையும் நிர்வாகத்தினருக்கு இருக்கிறது.



தயாரிப்பு மேற்பார்வை செய்யும் செல்வி வள்ளி

கட்டுரை, வண்ணப் போட்டோ - டி.ஆர்.ஜி.

# திருமலை வையாவூரில் திருப்பணிகள் புரியும் தெய்விகத் தம்பதி

இந்தியப் புண்ணியத் தாயின் மடியில் எண்ணற்ற ஞானிகள் அவதாரம் செய்து மக்களுக்கு அருள்பாலித் திருக்கிறார்கள். குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால் தமிழகத்தில் நாயன்மார்களும், ஆழ்வார்களும் தோன்றி எண்ணிலடங்கா அருட்பாடல்களை அருளிச் செய்து அதன் மூலம் பக்தி மார்க்கத்தைப் பரப்பியும், ஆலயங்களை நிர்மாணம் செய்தும் வருகிறார்கள். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றிய இராமலிங்க சுவாமிகளும், 'வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபில் யான் ஒருவன்' என்று தன்னை அடையாளம் காட்டிக்கொண்டார். அந்த மரபின் வழிவந்தவர்தான் கோவிந்த உபாஸகர் தவத்திரு சீதாராம சுவாமிகள்.



தவத்திரு சீதாராம சுவாமிகள் நுங்கம்பாக்கம். புஷ்பா நகரில் ஸ்ரீ ஸ்ரீநிவாச நிகேதனம் என்ற அமைப்பை நிறுவி, அதன் மூலம் தம்மைத் தேடிவரும் பக்தர்களின் குறைகளை தாயுள்ளம் கொண்டு கேட்டு, பரிகாரம் கண்டு வருகிறார்.

காஞ்சி பரமாச்சாரிய சுவாமிகளால் 'பகவான்' என்ற அருளாசி செய்த ஸ்ரீமத் சீதாராம சுவாமிகள் பழம் பெருமை வாய்ந்த, தமிழகத்தின் தென் திருப்பதி என்று அழைக்கப்படும், செங்கை மாவட்டம் வேடந்தாங்கலுக்கருகிலுள்ள திருமலை வையாவூரில் எழுந்தருளியிருக்கும் அருள்மிகு பிரசன்ன வேங்கடேசப் பெருமாள் சந்நிதியில் எண்ணிலடங்காத திருப்பணிகளைச் செய்திருக்கிறார்.

கடந்த 20 வருடங்களுக்கு முன் புதர் மண்டி, வழிபாடற்றுக் கிடந்த இந்த ஆலயத்தை பகவான் ஸ்ரீமத் சீதாராம சுவாமிகள் பெருமாளின் வழிகாட்டுதலின் பேரில் புனருத்தாரணம் செய்தார். சுமார் 12 லட்சம் ரூபாய் செலவில் மலையின் அடிவாரத்தில் எழுந்தருளியிருக்கும் அருள்மிகு வீர ஆஞ்சநேயர் சந்நிதியை சீரமைத்திருக்கிறார். அதேபோல அருள்மிகு சுதர்சன ஆழ்வார் சன்னிதியை 40 லட்சம் ரூபாய் செலவில் கருங்கற்களைக் கொண்டு கட்டிக்கொண்டு வருகிறார். இந்த ஆலயத்தின் திருப்பணி நிறைவு பெற்று இன்னும் ஓரிரு மாதங்களில் கும்பாபிஷேகம் நடைபெற உள்ளது. மலைமேல் வாகனங்கள் செல்ல சாலை அமைத்திருக்கிறார். தடைபட்ட உற்சவங்களை தொடர்ந்து தொய்வின்றி நடத்தி வருகிறார். இதன் காரணமாக இந்த ஆலயம் கடந்த 15 வருடங்களாக மக்களிடையே பிரபலம் அடைந்து வருகிறது.

அருள்மிகு பிரசன்ன வேங்கடேசப் பெருமாள் சந்நிதி, மற்றும் இதனைச் சுற்றியுள்ள பகுதிகளில் ஒரு கோடி ரூபாய்க்கான திட்டங்களை வகுத்துச் செயல்பட இருக்கிறார். இதன் காரணமாக பள்ளிக்கூடங்களை நிறுவுதல், இலவச மருத்துவமனை அமைத்தல் போன்ற சமூக நலப் பணிகளை பகவான் ஸ்ரீமத் சீதாராம சுவாமிகள் மேற்கொண்டு செயாற்றத் திட்டங்களை வகுத்திருக்கிரார்.

பகவான் ஸ்ரீமத் சீதாராம சுவாமிகள் கடந்த 18 ஆண்டுகளாக 2 குடைகளுடன் திருமலை வையாவூர் திருத்தலத்திற்குப் பாத யாத்திரை மேற்கொண்டு குடைகளைப் பெருமான் சந்நிதியில் சமர்ப்பித்து வருகிறார். கடந்த ஆண்டும் சுவாமிகள் சுமார் 8 லட்சம் ரூபாய் செலவில் திருத்தேர் செய்து இரண்டு குடைகளுடன் திருமலை வையாவூர் சந்நிதிக்கு வழங்கியிருக்கிறார்.

ஸ்ரீமத் சுவாமிகளையும், அவர் திருப்பத்தினியையும் தரிசித்த மக்கள் திருமலை வையாவூரிலே பெருமாளும் தாயாருமாகவே இவர்கள் எழுந்தருளியிருக்கின்றனர் என்றெண்ணி ஆனந்தப் பரவசம் கொண்டு களிக்கின்றனர்.

'அமுதசுரபி' தீபாவளி மலரில் தெய்விகத் தம்பதியரின் வண்ணப் படத்தை வெளியிடுவதில் பெருமையடைகிறோம்.



## சுவாமி சாந்தானந்த சரஸ்வதி

நண்பனுக்கு நண்பனாக; தொழிலாளர்களுக்கு முதலாளியாக; மாணவர்களுக்கு ஆசிரியராக; குடும்பத்திற்குத் தலைவராக ஒரு மனிதர். அவர் சுவாமி சாந்தானந்த சரஸ்வதி.

ஆன்மிகவாதியாக அவரை அணுகினால் ஒரு தெளிவு. ஒரு பூரணத்துவம்.

தோழமை உணர்வுடன் சாந்தம், அன்பு, பரிவு, பாசம் கலந்த ஒரு முழுமையே சுவாமி சாந்தானந்த சரஸ்வதி.

"என்னை யார் எப்படியாக நினைக்கிறார்களோ – அதன்படியே அவர்கள் என்னை ஏற்றுக் கொள்ளட்டும். ஒரு சிலையைக் கல்லாகப் பார்த்தால் அது கல்; கடவுளாகப் பார்த்தால் கடவுள். கடமையைச் செய்வோம், பலனை எதிர்பார்க்காமல்!"

தொண்டுள்ளம் படைத்த அனைவரும் சுவாமிஜியின் பக்தர்கள். இவர்களைத் தம் குடும்பத்தினரில் ஒருவராகவே பாவிக்கிறார். இதுவே 'சிவக்குடும்பம்'. சுவாமிகளைப் பின்பற்றுகிற அனைவரும் சிவக்குடும்பத்தின் அங்கத்தினர்கள். இவர்களுக்குச் சுவாமிகளே குடும்பத் தலைவர்.

சிறுவயதில் குடும்பத்துடன் ஒட்டுதல் இல்லாமல் ஞானாந்தகிரி சுவாமிகளின் அருள்மொழிகளால் ஈர்க்கப்பட்ட சுவாமி சாந்தானந்த சரஸ்வதியின் பூர்வீகம் திருக்கோவிலூர். அங்கிருந்து வடக்கே நகர்ந்தவர் சுவாமி சிவானந்தரைச் சரண் அடைந்தார். அவருடைய தீட்சையைப் பெற்றார்.

''தொடகத்தில் நான் ஆன்மிக உரைகளும், சொற்பொழிவுகளும் பல இடங்களில் நிகழ்த்தியதுண்டு. பல ஊர்களில் தமிழ் மொழியோ, சம்ஸ்கிருதமோ ஒட்டு மொத்தமாக தெரியாதவர்களைச் சந்திக்க நேர்ந்தது. பகவத் கீதை போன்ற கடுமையான ஆன்மிக விஷயங்களை எல்லாருக்கும் புரிய வைப்பது கடுமையாக இருந்தது.

ஆன்மிக விஷயத்தைக் கலையின் மூலமாக மிக எளிமையாகப் புரிய வைக்க முடியும் என்பதை உணர்ந்தேன். அதுவே கலைக்கோயில்! (Temple of Fine Arts)".

சாந்தானந்த சரஸ்வதி சுவாமிகளின் நேரடி மேற்பார்வையில் இந்தக் கலைக்கோயில், இதுவரை இராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்களை மக்களுக்குப் புரியும்படி வெற்றிகரமாக நடத்தியுள்ளது. விரைவில் புத்தரின் கதையை அரங்கேற்றப் போகிறது.

குரு சிவானந்த சுவாமிகளின் அடியொற்றி மருத்துவச் சேவைகளையும் ஏழை, எளியவர்களுக்கு அளிக்கிறார் சுவாமி சாந்தானந்த சரஸ்வதி.

கலையை அரங்கேற்றுவதற்கும், மருத்துவ நலன்கள் அனைவருக்கும் தங்கு தடையின்றிக் கிடைப்பதற்கும் தொடங்கப்பட்டதே. கோலாலம்பூரைத் தலைமையகமாகக் கொண்டு இயங்கிவரும் 'அன்னலட்சுமி' உணவகம்.

இதை உணவகம் என்று சொல்வதை விட, 'அன்பின் உறைவிடம்' என்றுதான் சொல்லவேண்டும். நாம் விரும்பும் உணவை மிக அருமையாகச் சமைத்து ஒரு சிநேகபாவத்துடன் அன்பாய், பரிவாய், இதமான சூழ்நிலையில் பரிமாறுகிறார்கள்.

இதன் மூலம் கிடைக்கும் வருமானம் கலைச் சேவைக்கும், மருத்துவச் சேவைக்கும் செல்கிறது.

"நன்கொடையைத் திருப்தியாக – மன நிறைவோடு தரவேண்டும். நீங்கள் அன்புடன் அளியுங்கள்; நாங்கள் பரிவுடன் பெற்றுக் கொள்கிறோம்" – இதுவே சுவாமி சாந்தானந்தா சரஸ்வதியின் விருப்பம்.

அகங்காரம் – இது அறவே கூடாது. இதற்கு முன்மாதிரியாகத் திகழ்கிறார் சுவாமிஜி. உடை, நடை, பாவனைகளில் ஆரவாரமில்லாத – எளிய மனிதர். அன்பு மட்டுமே அடிப்படை உண்மை.

அன்னலட்சுமி உணவுகத்துடன், அன்னலட்சுமி டிராவல்ஸ் (கலைக் குடும்பத்தினர் பயணத்திற்காக), சங்கியர் சிஸ்டம்ஸ் என்கிற கம்ப்யூட்டர் நிறுவனம், அன்னலட்சுமி கிரியேஷன்ஸ் என்கிற கலைப் பொருள்களின் தயாரிப்புக் கூடமும், சுவாமி சாந்தானந்தா சரஸ்வதியின் 'சிவக் குடும்பத்தினரால்' சிறப்பாக நிர்வகிக்கப்படுகின்றன.

நந்தகுமார்

# உலகத் தமிழா! உலகத்தமிழா!



கவிக்கொண்டல்
மா. செங்குட்டுவன்

உலகத் தமிழா! உலகத் தமிழா!
உனக்கொன் றுரைப்பேன்;
உணர்வாய் தமிழா!
உலகின் முதன்மொழி
உன்றன் தாய்மொழி!
உலகின் மூத்த குடியுன் இனமே!
தாயகம் விடுத்தே அயலகம் வாழினும்
தாய்வழி வந்த தமிழ்மொழி இருக்க
இ(ற)டவழி வந்த
இன்னொரு மொழியை
நடைமுறை வாழ்வில் நம்மவர் ஏற்றல்
தமிழின் அழிவைத் தான்உரு வாக்கும்.
தமிழே யறியான் "தமிழன்" என்று
தலைநிமிர்ந் துரைக்கத் தான்வழி உண்டோ?
வாழும் நாட்டில் வழங்கும் மொழியைச்
சூழ்நிலை கருதித் தொடர்புக் கேற்கலாம்;
ஏட்டுக் கல்விக்கும் அதனையே கொள்ளலாம்;
வீட்டு மொழியாய் வரவிட லாமோ?
தமிழகம் வாழும் பிறஇனத் தவரெலாம்
தமிழையா வீட்டு மொழியாய்க் கொண்டுளார்?
கன்னடர், தெலுங்கர், மராத்திய ரெல்லாம்
இன்னமும் தாய்மொழி இழந்திட வில்லையே!
தென்னாப் பிரிக்கா, பீஜி, மோரீஸ்
இன்ன பிறநா டெல்லாம் வாழும்
தமிழர் மட்டும் தமிழை மறந்த
"தமிழராய்" வாழ்வது ஒருபுற மிருக்க
அமெரிக் காவிலும் கான டாவிலும்
நம்மவர் இன்று எப்படி வாழ்கிறார்?
பெற்றோர் தங்கள் பிள்ளைக ளோடு
நற்றமிழ் விடுத்தே ஆங்கிலம் பேசி
ஆங்கிலக் குடும்பம் ஆகி வருகிறார்!
ஆங்கில நடையுடை அனைத்தும் ஏற்றுளார்!
தாய்மொழி தன்னை வாய்மொழி யாகவும்
சேய்கள் அறிந்திடச் செய்கிறார் இல்லையே!
அடியோடு நமது அருந்தமிழ்ப் பண்பை
மடியச் செய்தலே முற்போக் கென்னும்
அடிமைப் புத்தி அகலும் நாளே
விடியலைக் காணும் வெற்றி நாளாம்!
உலகத் தமிழா! உலகத் தமிழா!
உனது நிலையை உணர்ந்துகொள் வாயே!

ஜாதி-மத பேதமில்லை. டாக்டர்களும், பிரபல தொழில் வல்லுநர்களும், என்ஜினியர்களும், அறிஞர் பெருமக்கள் பலரும் சிவக்குடும்பத்தினரின் அங்கத்தினர்கள். உயர்ந்த - தாழ்ந்த என்ற பேச்சுக்கே இடமில்லை.

அன்னலட்சுமி கிரியேஷன்ஸ் கலைக் கூடத்தில் தயாராகும் கலைப் பொருள்கள் அவ்வப்போது பொருட்காட்சிகளின் மூலம் பொது மக்களின் பார்வைக்குக் கொண்டு வரப்பட்டு இந்தியப் பண்பாடு கலை நுணுக்கங்களை உலகம் முழுதும் பரப்பப் பாடுபடுகிறது.

"சுவாமிஜி உலகின் எந்தப் பகுதியில் இருந்தாலும் இந்தியக் கலாசாரத்தையும், பண்பாட்டையும், ஆன்மிகச் சிந்தனைகளையும் பரப்பிக் கொண்டேயிருப்பார்" என்கிறார் சுவாமிகளின் தொண்டர் ஒருவர்.

தூய்மையும் அழகும் அன்பும் ஒருங்கே அமைந்த தோழமையை சுவாமி சாந்தானந்தா சரஸ்வதியின் அன்பர்களிடமும் காண முடிகிறது. இப்படி அனைவரிடமும்-

தோழமைக்கு ஓர் எடுத்துக் காட்டாய் விளங்குகிறார் தவத்திரு சுவாமி சாந்தானந்த சரஸ்வதி. ●




# ஸ்ரீபுவனேஸ்வரி ஸ்வாமிகளும், ஸ்ரீபரத்வாஜ ஸ்வாமிகளும்

-குன்னியூர் சேதுராமசர்மா

இந்தப் பாரத பூமியில் தொடக்கம் முதல் இன்று வரை பல குருமார்கள் தோன்றிப் பலவித சாதனைகளைப் புரிந்துள்ளனர். எந்த மகானைப் பார்த்தவுடன் நம் மனது இயற்கையாகவே அவர் பால் செல்லுகிறதோ, அவரே குருவாக இருப்பதற்குத் தகுதியுள்ளவர் என்பதை நாம் தீர்மானிக்க வேண்டும். அவர்தான் ஸத்குரு. சாட்சாத் ஸ்ரீ இராமபிரான் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் அவதாரமாயிருந்தாலும் அவர் குருவை அடைந்து அவர் அனுக்கிரகத்தினாலேயே சகல வித்தைகளையும் அடைந்தார் என்பது புராண வரலாறு.

எந்த குருவின் அனுக்கிரகத்தால் அவர் சீடன் மேம்பட்டு விளங்குகிறானோ, அதிலிருந்து அவர் ஒரு 'ஸத்குரு' என்பதைத் தீர்மானிக்கலாம்.

ஸ்ரீ புவனேஸ்வரி ஸ்வாமிகள் ஒரு சிறந்த மகான் என்பதற்கும் அவர் ஒரு ஸத்குரு என்பதற்கும் நானே ஓர் உதாரணமாக இருக்கிறேன். நான் ரிக்வேதம் முழுவதும் அத்யயனம் செய்தவன்தான். ஆனால் மந்திரங்களின் மகிமைகளை ஸ்ரீ புவனேஸ்வரி ஸ்வாமிகள் அவர்கள் மூலமே அறிந்தேன்.

அவரைப் பார்த்துத் தரிசனம் செய்து வரலாம் என்ற எண்ணத்தில் திருவல்லிக்கேணியில் அவர் இல்லத்திற்குச் சென்றேன்.

அவரைத் தரிசனம் செய்த அந்த நிமிஷமே என் மனத்துக்குள் அவரை எனது மந்திர குருவாக அடைய வேண்டும் என்று தீர்மானித்து விட்டேன். அவருடன் பல விஷயங்கள் பற்றிப் பேசினேன். தேவீஸூக்தம், ஸ்ரீ ஸூக்தம் முதலியவற்றைச் சொல்லும்படி கூறினார். எனது வேத உச்சாரணம் அவர் மனத்திற்கு மிகவும் பிடித்திருந்தது. "அடிக்கடி இங்கு வந்து ஸ்ரீ புவனேஸ்வரியைத் தரிசனம் செய்து கொள்ளுங்கள்" என்று சொன்னார். நானும் எனது கஷ்டங்களிலிருந்து விடுபட்டேன். அவரிடம் எவ்வளவோ மந்திரங்கள் இருக்கின்றன. எந்தவிதமான கஷ்டம் மனிதர்களுக்கு ஏற்பட்டாலும் அதை நிவர்த்தி செய்வதற்கு ஒரு மந்திரத்தைக் கூறி அதை ஜபம் செய்ய வேண்டிய முறையையும் கூறிவிடுவார். மந்திரங்களைத் தெரிந்து கொள்வது ஆச்சரியமில்லை. அதன் பலன்கள் மிகவும் அத்யாச்சர்யமாக ஏற்படும் போதுதான் அவரது அருளும் மகிமையும் நன்கு அறியப்பட்டன. அவர் எவ்வளவு பெரிய மகான் என்பதையும், அவர் ஒரு ஸத்குரு என்பதையும் அறிய முடிந்தது.

அவரது உபாஸானா தெய்வம் ஸ்ரீ புவனேஸ்வரி தேவி. தினமும் அவர் இல்லத்தில் தேவதா ஆராதனைகள் நடந்து வருவது மிக ஆச்சர்யமாக இருக்கும். குறைந்தது ஏழு ஸஹஸ்ர நாமார்ச்சனைகள் ஏராளமான புஷ்பங்களால் நடைபெறும். அவர் இருக்கும் இடத்தைத் தேடி வரும் பக்தர்கள் அநேகர். வந்தவர்கள் அனைவருக்கும் நல்ல பலன்கள் ஏற்பட்டுள்ளன என்பது நிதர்சனமானது. ஹோமங்களுக்காக அவர் உபயோகப்படுத்தும் ஹோமத்ரவியங்கள் மிகவும் ஆச்சர்யமானவை. தீராத வியாதிகள் தீருவதற்கு மூலிகைகளைக் கொண்டு ஹோமங்களைச் செய்யச் சொல்வார். சில கஷ்டங்கள் தீருவதற்கு விசேஷ பூஜைகளை நடத்துவார். அவர் ஒரு 'மந்திர ஸாம்ராட்' என்று சொன்னால் மிகையாகாது.

ஸ்ரீமத் பரமஹம்ஸ புவனேஸ்வரி சுவாமிகளிடம், இவ்வளவு மந்திரங்களும் எப்படி இருக்கின்றன என்னும் விஷயத்தில் எனக்கே ஆச்சரியம் உண்டு. பிறகு ஒரு முடிவுக்கு வந்தேன். அவருக்கு அவர் அடைந்த ஸத்குருவின் அனுக்ரகமே இதற்குக் காரணம் என்பதைத் தீர்மானித்துக் கொண்டேன். பால்ய வயதில் இவர் தமது குருநாதர் குற்றாலம் ஸ்ரீ மௌன ஸ்வாமிகளுக்குப் பணிவிடை செய்வதிலேயே பெரும்பாலான நேரத்தைச் செலவிட்டுள்ளார். வேதம் சாஸ்திரம் படிப்பதற்கு நேரமே இருந்திருக்காது. குருநாதரின்



அனுக்ரகத்தாலேயே இவ்வளவு வித்தைகளையும் அறிந்துள்ளார் என்பது நிதர்சனம். எளிய சுபாவம் கொண்ட ஸ்வாமிகளின் அனுக்ரகத்தால் பலர் பயன் அடைந்துள்ளனர்.

அவரது புதல்வர் ஸ்ரீ இராம கிருஷ்ணனுக்கு 'பரத்வாஜ்' என்ற தீட்சா நாமம் சூட்டி அவருக்குச் சில மந்திரங்களை உபதேசம் செய்துள்ளார். ஆனால் அவர் அறிந்து கொண்ட மந்திரங்கள் பல. ஸ்ரீ பரத்வாஜ் ஸ்வாமிகள் அவர்கள் தினமும் பாலாமந்திரத்தைப் பல்லாயிரக்கணக்கில் ஜபம் செய்து சாதனை செய்துள்ளார். பாலா ஸஹஸ்ர நாமங்களால் தினமும் புஷ்பார்ச்சனையை இன்றும் செய்து வருகிறார். ஸ்ரீ பாலாதிரிபுர சுந்தரியின் பரிபூர்ண அனுக்ரஹத்தை அடைந்துள்ளார். அவருக்குப் பல சித்திகள் ஏற்பட்டுள்ளன.

இவர் தனது வாழ்நாளை இதுவரை ஸ்ரீ பாலாம்பிகையின் உபாஸனைக்காகவே அர்ப்பணம் செய்து கொண்டுள்ளார்.

இக்கலியுகத்தில் இப்படிப்பட்ட மகான்கள் மெய்த்தவ வேந்தர்களாக விளங்கி வருவதால் பல குடும்பங்களுக்கு க்ஷேமம் உண்டாகும் என்பதில் சந்தேகம் இல்லை. நாட்டிற்கும் க்ஷேமம். ●

# அவர்களோடு.. நானும்!

## கவிஞர் கார்முகில்



பூமியில் இருந்து என் கரங்களை நீட்டி
ஆகாயத்தின் அழுக்கைத் துடைக்கிறேன்!
அந்தப் பரந்த ஆகாயம்,
என் கைக்குள் -
படுத்துக் கொள்கிறது!

மினுக்கும் நட்சத்திர அகல் விளக்குகளை
எண்ணி எடுத்து
என் - பைகளில் நிரப்பிக் கொண்டேன்,
ஆகாயம் இருண்டு விட்டது!
என் பயணப் பாதை தெரியாததால் -
நிலாவிளக்கைக் கையில் பிடித்தபடி
நெடுந்தூரம் நடந்தேன்!
என் கால்களில்
சிலீரென சீதளம் அப்பிக் கொண்டது!
ஓ! அந்த நீலக் கடல்..
தன் அலைக்கரங்களை நீட்டி
அழகிய மாலைகளால்
என்னை அலங்கரித்தது!
என் மாளிகை அதன் முதுகின் மீது.
நீரால் சுவரை எழுப்பி,
கூரையும் பின்னி விட்டேன்!
கையில் இருந்த நிலாவிளக்கை
மாளிகையின் உட்புறத்தில்
அணையா விளக்காக அமர்த்திவைத்தேன்!
என் அடுப்புக்குள் சூரியன்.
விறகாக எரிவதால் -
அரைநொடியில் என் உணவு தயார்!
உண்பதற்கு ஆளில்லை!
நான் ஒருவன் மட்டுமே!
ஓங்காரக் கூச்சல்
கண்விழித்தேன்
சத்திரத்துச் சோற்றுக்கு -
ஜனங்கள் ஓடிக்கொண்டிருக்கிறார்கள்!



# ஸ்ரீ சிவசங்கர் பாபா



தமது அன்பர்களால் 'சித்தர்', 'பாபா', 'சார்', 'சங்கர் ஐயா' 'யோகி', ஸ்வாமி' என்று அவரவர் விருப்பப்படும் எந்தப் பெயராலும் அழைக்கப்படும் ஸ்ரீ சிவசங்கர் பாபா 1949ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 28ஆம் நாள் நாராயண சர்மா விஜயலட்சுமி தம்பதியின் மகனாக வடஆர்க்காடு மாவட்டத்தில் பிறந்தவர்.

1968ஆம் ஆண்டு பி.எஸ்.ஸி முடித்து குடும்பச் சூழ்நிலையால் வேலை தேடிச் சென்னை வந்து மாதம் ரூ 250 சம்பளத்தில் வேலையில் சேர்ந்து தனது உழைப்பாலும், திறமையாலும் வேகமாக முன்னேறி ஒரு பெரிய நிறுவனத்தில் பிராந்திய மேலாளராயிருந்து 1978 ஆம் ஆண்டிற்குப் பிறகு 1984 வரை சொந்தமாகத் தொழில் நடத்தியவர்.

## நரேந்திரகுமார்

1968 ஆம் ஆண்டு முதலே இரத்தினகிரி சாமியாரிடம் தொடர்பு ஏற்பட்டு நட்பாயும், நெருக்கமாயும் அது வளர்ந்திருந்தது. இறைவனிடம் ஈடுபாடுண்டு.

"ஜனவரி 26, 1984 அன்று இரத்தினகிரியில் இருந்து வந்த நான் வீட்டில் உறங்கிக் கொண்டிருந்தேன். அதிகாலை 3.30 மணி இருக்கும். மந்திராலய மகான் ஸ்ரீ இராகவேந்திர சுவாமிகள் வந்தார். என்னைத் தட்டி எழுப்பி தோள் மேல் கைபோட்டுக் கொண்டு ஓரிடத்திற்கு அழைத்துப் போனார். 'சிவசங்கர், இதோ உனது பிணத்தைப் பார்' என்று காட்டினார். நான் பேரானந்தத்தில் ஆழ்ந்தேன். இந்த மரண அனுபவத்தால் என் வாழ்வும் அதன் போக்கும் முற்றிலும் மாறிவிட்டது!" என்கிறார் சிவசங்கர் பாபா.

முருகனின் வேலும், இராமரின் வில்–அம்பும், சிவனின் மான் மழுவும், அம்பிகையின் சூலமும், திருவேங்கடவனின் சங்கு–சக்கரமும், தசாவதாரத்துள்ள அத்தனை ரேகைகளும் தமது திருக்கரத்தில் இடம் பெற்றிருப்பதையும் தமது பாதங்களில் மயிலும், சங்கு சக்கரங்களும் உள்ளதையும் காட்டிய சிவசங்கர் பாபா – "ம்க்களிடம் நான் எதையும் கேட்பதில்லை. நான் சம்பாதித்த சொத்தை அவர்களுக்குச் செலவிடுகிறேன். அவர்களிடம் என்னுடைய அன்பைச் செலுத்துகிறேன். அவர்களின் அன்பு எனக்குக் கிடைக்கிறது. இது இறைவனுக்குக் கிடைக்கும் அன்பு. என் மூலம் அவர்கள் பயனடைகிறார்கள். அவர்கள் அடைந்த பலனுக்குப் பிரதிபலனாக நான் எதையும் எதிர்பார்ப்பதில்லை" என்கிறார்.

காஞ்சி ஸ்ரீ பரமாச்சாரியாரால் 'மஹா ஜோதி' எனவும், புரவிபாளையம் ஸ்ரீ கோடி சுவாமிகளால், 'இவர்தான் கைலாசம், இவர்தான் வைகுண்டம்' எனவும், திருவண்ணா மலை யோகி ராம் சுரத் குமாரால் "நீ சைதன்யரையும், அரவிந்தரையும் விட உயர்ந்த ஆன்மிக நிலைக்கு உயர்ந்து விட்டாய். நீ கடவுளின் பிரதம மந்திரி. புட்டபர்த்தி பாபா அமைத்துள்ள ஆன்மிக அடித்தளத்தின் மீது உனது வானளாவிய தெய்விகத் திருப்பணி தொடரும்; உலகை ஒன்றாக்கி அன்பு மயமாக்கி விடுவாய்" எனவும் மகான்களால் வாழ்த்தப்பட்டுள்ளார் சிவசங்கர் பாபா.

சென்னை–மாமல்லபுரம் கடற்கரைச் சாலையில் நீலாங்கரையில் அமைந்துள்ளது, சிவசங்கர் பாபாவின் இருப்பிடம். 'சம்ரட்சணா' எனப்படும் இவ்விடத்தில் ஏராளமான பக்தர்கள். அன்று சத்திய நாராயணா பூஜை. பக்த தம்பதியர் நீண்ட வரிசையில் அமர்ந்திருக்க, பக்தர்களுடன் பக்தராய் இருந்தார் பாபா.

தமிழின் மீது ஆழ்ந்த ஈடுபாடுள்ள சிவசங்கர் பாபாவின் பேச்சுகளினூடே பாயிரங்களின், பாசுரங்களின், குறள்களின் வரிகள் தங்கு தடையில்லாமல் வருகின்றன.

'சரணம்–அபயம்–ஐஸ்வர்யம்' சித்தயோகி சிவசங்கர் பாபாவின் மூலவரிகள்; முத்தான வரிகள்.



# ஓம்சக்தி கீர்த்திமதி

காஞ்சியின் எல்லையை ஒட்டி சுமார் 20 கி.மீ. தொலைவில் உத்திரமேரூர் செல்லும் வழியில் அமைந்துள்ளது கருவேப்பம்பூண்டி என்னும் சிற்றூர்.

இவ்வூர் கடந்த 12 ஆண்டுகளாக அன்னை கீர்த்திமதியின் அருளால் பிரசித்தி பெற்று வருகின்றது. இதற்குக் காரணம் இவ்வூரில் 'சாவித்திரி' என்னும் மணமான மங்கை பேரில் ஆதிசக்தியான பராசக்தி அமர்ந்து மங்கையை ஆட்கொண்டு 'கீர்த்திமதி' என்னும் புதிய திருநாமத்துடன் அருள்வாக்கு அளித்து வருகிறார். அன்னை ஆதிசக்தி எப்படி இப்பூவுலகில் இங்கே 'கீர்த்திமதி' என்ற பெயரில் அவதரித்து அருள் வாக்களித்து வருகிறார் என்பதை விவரிக்க வேண்டியது அவசியமாகிறது.

சக்தியின் சொரூபமான பார்வதிதேவி, கயிலையங்கிரியில் தனிமையில் வீற்றிருக்க, அப்பொழுது சிவன் சம்ஹார சூரனை வதம் செய்துவிட்டு அபரிமிதமான வெற்றிக் களிப்பில் கயிலையங்கிரிக்குச் சென்று அன்னை பார்வதி தேவியிடம் தன் வெற்றியின் பெருமையைச் சொல்கிறார். சிவனின் வெற்றிக் களிப்பைக் கண்ட பார்வதி தேவி "என் 'சக்தி'யில்லாமல் உங்களால் என்ன செய்ய முடியும் ?" என்று தனக்கே உரிய பாணியில் சொல்ல – சிவனுக்குக் கோபம் வந்து விடுகிறது. அம்மையும் கோபம் கொள்கிறார்.

"என்னிடம் நீ கோபம் கொண்டதால் பூவுலகில் சிங்கமாகத் திரியக் கடவாய்" என பார்வதி தேவிக்குச் சாபமிடுகிறார் சிவன். பார்வதி சிங்கமாக மாறி, கோபத்துடன் காட்டில் திரிய பதிவிரதை அனுசுயாவின் கணவரான அத்திரி மகரிஷியைப் பார்த்து அவரை நோக்கி பார்வதியின் பார்வை பாய்கிறது. சிவனை நோக்கித் தவம் செய்து கொண்டிருந்த மகரிஷி, ஈஸ்வரனை ஒரு கணம் தியானித்து யோக தண்டத்தால் சிங்கத்தைத் தடுக்கிறார்.

யோக தண்டம் பட்டவுடன் சிங்கம் சாப விமோசனம் பெற்று 7 வயதுச் சிறுமியாகக் காட்சியளிக்கிறாள். அப்பொழுது சிவபெருமான் வானில் ஒளியாகத் தோன்றி "சிறு பெண்ணாக மாறியவள் சக்தியின் அம்சமே. அவளுக்கு ஆத்ம ஞானத்தைக் குருவாக இருந்து மந்திர உபதேசம் செய்து சக்தியை உலகம் உணரும்படி செய்க" என்று அசரீரியாக ஒலிக்கிறார்.

அதன்படி அச்சிறுமி முனிவரிடம் ஆத்ம ஞானம், மந்திர உபதேசங்கள் பெற்று – பின்னர் இமயமலையை யடைந்து சிவபெருமானை அடையக் கடுந்தவம் புரியலானாள். சக்தியின் கடுந்தவத்தை மெச்சிய சிவனும் மகிழ்ந்து சக்திக்குக் காட்சி கொடுத்து, 'சிவசக்தி லீலை'யில் இதுவும் ஒன்று என்கிறார். இத்தருணத்தில் நாரத மாமுனிவர், சிவனையும் சக்தியையும் பூவுலகில் பார்க்க விருப்பப்படுகிறார்.

நாரத மாமுனிவரின் வேண்டுதலுக்கிணங்கி பூவுலகை நோக்கி அப்பனும் அம்மையும் வருகின்றனர். பூவுலகத்திற்கு முதலில் வரும் நாரதர், சிவ – சக்திக்குப் பாத பூஜை செய்ய நீருக்காகத் தவிக்கிறார். இதை அறிந்த சக்தியும் சிவனும் பூவுலகம் நோக்கி வரும் வழியில் நடுவில் இருந்த ஆவிமண்டலத்தில் இளைப்பாறுகின்றார். இங்கே சக்திக்கு ஒரு பெண் குழந்தை பிறக்கிறது.

சக்தியின் அண்ணனான கிருஷ்ண பரமாத்மா சக்திக்குப் பெண் குழந்தை பிறந்துள்ளதை அறிகிறார். மகிழ்கிறார். அவர் யோசனைப்படி சர்ப்ப வாகனத்தில் அமர்ந்து சக்தியும் சிவனும் பூவுலகை வலம் வருகின்றனர்.

வரும் வழியில் சிவன், அன்னை சக்தியிடம் "நாம் இருவர் மட்டுமே அமரக்கூடிய இந்த வாகனத்தில் மேலும் இரண்டு பாதங்கள் தெரிகின்றனவே" என்று ஒன்றும் அறியாதவர் போல் கேட்க, சக்திக்கு மீண்டும் கோபம் வந்து விடுகிறது. குழந்தையைப் பூவுலகில் வீசி விடுகிறார். ஆனாலும் தாயுள்ளம் பதறுகிறது.

தன் அண்ணன் கிருஷ்ண பரமாத்மாவை நினைக்கிறாள். அவரும், "தங்கையே கலங்க வேண்டாம்! உன் குழந்தை

என்னுடைய ஆயர் குலத்தில் பெண்ணாகப் பிறப்பாள். அவளுடைய உள்ளத்தையே இல்லமாகக் கொண்டிருந்து வாக்களிப்பாயாக!" என்று சக்தியைத் தேற்றுகிறார்.

அதன்படி – வீசப்பட்ட குழந்தை சாவித்திரி என்ற மகவாகப் பிறந்து 'நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து – கருவேப்பம் பூண்டியில் இன்று அருள்வாக்கு அளித்து வருகிறார் என்கிறது – 'கீர்த்திமதி வரலாறு' நூல்.

அருள் வாக்கு மட்டுமின்றி, தனது தனித்திறமை வாய்ந்த தெய்விக ஆற்றல் மூலம், இப்பகுதி ஏழை, எளிய மக்களின் பல துயர்களையும் இன்னல்களையும் போக்கி மறுவாழ்வு தந்து அருள்பாவித்து வருகிறார். பேய், பில்லி, சூன்யம், ஏவல் இன்னும் பிற துன்பங்கலால் அவதியுறும் பல ஆயிரக்கணக்கான குடும்பங்கள் செய்வதறியாது திக்கித் தவித்துப் புகலிடம் தேடி இங்கே வருகின்றனர்.

ஓம்சக்தி கீர்த்திமதி, இவர்களது வினைதீர்த்து, நிவாரணம் அளித்துப் புதுவாழ்வு ஏற்படுத்தித் தருகிறார்.

நித்தம் சிவனைப் பூசிக்கும் கீர்த்திமதி அன்னை நீரோடைக் கரையில் வேப்ப மரத்தின் கீழ் நின்று வாக்களிக்க – அதனால் பலனடைந்த மக்கள் ஏராளம்; ஏராளம்!

– மாலதி

# கலவைத் தவமணி

கலவை.

ஆன்மிக நாதம் அன்றாடம் ஒலித்துக் கொண்டேயிருக்கும் அரிய ஊர். சிறிய ஊர். ஆர்க்காட்டிலிருந்து செய்யாறு செல்லும் சாலையில் 25 கி.மீ. தொலைவிலுள்ள இறையருளுக்குரிய ஊர்.

இங்கே–

ஸ்ரீசங்கரமடத்தின் கிளை இயங்குகிறது. காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் அதிட்டானங்கள் கொண்ட பிருந்தாவனம் இருக்கிறது. கற்பக விநாயகர் கவர்ச்சிக்கிறார். காரீச நாதர் கவனமாய்ப் பேரருள் வழங்குகிறார். காவாத்தம்மன் கருணை பொழிகிறாள். கரிவரதப் பெருமாள் உரிய வரம் உதிர்க்கிறார்.

கமலக்கண்ணியின் மேன்மையைப் புவியெங்கும் புலப்படுத்தும் உத்தமர் சச்சிதானந்தா சுவாமிகள், இந்த ஆலயத்தின் பின்னால் ஆசிரமத்தில் எப்பொழுதும் தங்கியிருந்து, தப்பாது தனித்துவ நாயகியாய்த் தரணியில் தரிசிக்கும் பக்தர்களை அரவணைக்கும் கமலக்கண்ணியை மனிதநேய ஒருமைக்காக அர்ச்சித்து வருகிறார்.

அருட்பிரகாசவள்ளலாரின் முதன்மைச்சீடரான தொழுவூர் வேலாயுதனாரின் திருமகனார் செங்கல்வராயரிடம் கல்வி பயின்ற சச்சிதானந்தா, காட்பாடி குடியாத்தம் சாலையில் வடுகந்தாங்கலுக்கருகில் பாலாற்றின் வடபாகக் கிராமமான அங்கராங்குப்பத்தில் வசித்த சீனிவாசனுக்கும், பாப்பாத்தி அம்மையாருக்கும் ஆறாவது புதல்வராய் அவதரித்தவர்.

சுவாமிகள் முதலில்–

அருட்பிரகாசரைப் படித்தார்.

மேலோட்டமாக இல்லாமல் ஆழமாக, அகலமாகப் படித்தார்.

பள்ளிப் பருவத்திலே இயற்கையின் எழில் கொஞ்சிய அங்கராங்குப்பத்துத் தோப்பில், பாலாற்றுப் படுகையில், ஏரிக்கரையில், மதகடியில் சமய, சங்க, நவீன, அன்னிய, ஆன்மிக, இலக்கிய நூல்கள் பலவற்றைத் தன்னந்தனியராய் நடந்து, உட்கார்ந்து படித்தார்.

1970இல் இருபதாவது வயது தொடங்கியது.

பெற்றோரை, மற்றோரை, ஊரை, உறவைத் துறந்தார் சச்சிதானந்தா.

புனிதப் பயணியாய் வடதிசை நோக்கிப் பயணத்தை மேற்கொண்டார்.

ஒரு காலணாக் காசுமின்றி உடுத்திய உடையோடு ஒருமித்த சிந்தனையோடு வெறுங்கால்களால் நடந்தார். நகரங்கள், கிராமங்களைக் கடந்தார். அடர்காடுகளை அடைந்தார்.

அங்கே–



மோனத்தவம் மேற்கொண்டார்.

உணவை, உறைவிடப் பாதுகாப்பை உதறினார்.

தவம்... தவம்...தவம்...

ஒருநாள் தவத்திலிருந்தபோது–

அறிமுகமற்ற ஓர் அற்புதமான சுவாமி, சச்சிதானந்தாவை மிகவும் பேரருள் கூடிய பெருந்தன்மையோடு தம் மிருதுக் கரங்களால் தொட்டார். அக்கணம், சச்சிதானந்தாவின் மன, மெய்யெங்கும் ஆன்மிக மின்னணுக்கள் வியாபித்து தெய்வசக்தி நிரம்பிய புத்துணர்வு பிறந்தது.

அப்போதுதான்–

தெய்விக ஒளி பாதாதிகேசம் பாய்ந்தவராய், ஒரு வித்தியாசமான ஞான வடிவினராய்த் தான் மாறியதை உணர்ந்தார்.

காவிநிற வேட்டியும், காவிநிறப் போர்வையும் சுவாமிகளை இமாச்சலப் பிரதேசத்திற்கும் இட்டுச் சென்றது. எண்ணிறந்த ஞானிகளோடு, மகான்களோடு, பைராகிகளோடு, பிட்சுகளோடு ஆத்ம விசாரணைகளில் ஈடுபாடுறச் செய்தது.

மூணாறு காட்டில்–

27 நாள்கள் உணவும், உறக்கமுமின்றி, 'நிர்விகற்ப சமாதி' நிலையில் இருந்து 'தன் அதீத சக்தியை வெளிப்படுத்தினார்.

தென்னகம் மீண்ட சச்சிதானந்தா சுவாமிகள், சிக்மகளூரில் தங்கியிருந்தபோது அன்னை இந்திரா அவரைக்கண்டு ஆன்மிக, லோகாயதச் செய்திகள் குறித்து விவாதித்து அருளாசிகளைப் பெற்றார். அந்தத் தேர்தலில் இந்திரா வெற்றி பெற்றார்.

1978 ஆம் ஆண்டில் இமயமலைக் காடுகளில் ஞானிகளோடும், பைராகிகளோடும் அலைந்த சுவாமிகள் அருள் ஒளி பெற்ற சித்தரானார்.

பிறந்த பூமியான அங்கராங்குப்பத்தில் சில மாதங்கள் தங்கிய பின் கலவைக்கு வந்தார் சச்சிதானந்தா சுவாமிகள். அருள்மிகு கமலக்கண்ணிதான் அதற்குக் காரணம்.

வடக்கில் சுற்றித் திரிந்தபோது பதினெட்டாண்டுகளுக்கு முன்னால் ஓர் இரவில் சுவாமிகளின் கண்முன்னே சக்தி சொரூபிணியாய் வந்து நின்றாள் கமலக்கண்ணி. கமலக்கண்ணி அம்மையை செஞ்சிக் கோட்டையிலிருந்து கொண்டு வந்து கலவையில் ஓர் ஆலயம் எழுப்பினார். எப்போதும் மௌனத்தையே தன் மறைபாஷையாக்கிக் கொண்டு, மன்பதையில் எவ்வாறெல்லாம் மனிதன் வாழ வேண்டுமென்பதைத் தன் தவக் கொள்கைகளிலிருந்து வெளிப்படுத்தி நாளும் எழுத்தில் உரைத்துக் கொண்டிருக் கிறார் உயரிய மகானான சச்சிதானந்தா.

தன்னை நாடிவரும் பக்தர்கள் குறை தீர்த்துவரும் சித்தபுருஷரான சுவாமிகள், காலமெல்லாம் தனக்கடிமை ஆக்கிக் கொண்ட கமலக்கண்ணியின் காலடியில், நெற்றியில் நீறு மணக்க, தோள்களில் தவழும் தலைமுடியை, மார்பில் புரளும் கருமையும் வெண்மையுமான தாடியைச் சற்றைக்கொருதரம் மாறி மாறி கைவிரல்கள் அளைய, பக்கத்தில் லெட்டர் பேடும் பேனாவுமாய், புலித்தோலின் மீது உட்கார்ந்து, புவியோர்க்கு ஆன்ம நேய ஒருமைச் சிந்தனைகளைத் தம் பசிப்பிணி, உடற்பிணி, மனப்பிணி, ஏற்றத்தாழ்வுப் பிணியகற்றும் அற்புதச் செயல்கள் வழியே இனம் காட்டிக் கொண்டிருக்கிறார் கலவைத் தவமணி சச்சிதானந்தா சுவாமிகள்.

**— நாராயணி**

# வீரசுதந்தரம்




டாக்டர்.ச. சவகர்லால்

*வீர சுதந்தரம் விளம்பிய வீரரின்*
*வாய்கள் கிழிந்ததடி! - அந்த*
*வீர சுதந்தரம் இன்றுள தோற்றம்*
*மிகவும் இழிந்ததடி!*

*சுதந்தர மென்ன சந்தையி லேபோய்ச்*
*சுகமுடன் வாங்கியதா? - இங்கே*
*இதந்தருங் காற்று நம்மிடம் வந்த*
*இலவச இணைப்பதுவா?*

*எவரின் சுதந்தரம் எவர்பறிப் பாரென*
*எவர்க்கும் தெரியலடி! - இங்கே*
*எவரின் உரிமையை எவருடைப் பாரென*
*யாரும் அறியலடி!*

*நாயடி பேயடி நலியும் இடுப்படி*
*எத்தனை அடிகளடி! - நல்லோர்*
*போயடி தாங்கிய பலனடி இன்றுநாம்*
*பார்க்கிற படிகளடி!*

*வீர சுதந்தர மென்பதெலா மிங்கே*
*வாய்ச்சொல் வீரமடி! - நெஞ்சில்*
*ஈர மிலாதவர் வீர சுதந்தரம்*
*எண்ணுதல் கோரமடி!*

# அரியூர் நாராயணி சித்தர்



அண்மைக் காலத்தில் வேலூர் அருகிலுள்ள அரியூர் நாராயணி சித்தர் பீடம் பிரசித்தமாகி வருகிறது.

பீடத்தின் தலைமையாகவுள்ள நாராயணி சித்தர் ஓர் இளைஞர்.

வயது இருபதுதான்.

ஆனால் அவர் செய்யும் செயல்கள்கள் 80 வயது மகானின் செயல்களையொத்ததாக இருக்கின்றன.

தான் வணங்கும் நாராயணிக்கு பூஜை செய்கிறார் பாருங்கள்! கண்கொள்ளாக் காட்சி! ஒரு மணி நேரம் இரண்டு மணி நேரம் என்று அது நீள்கிறது.

எத்தனை தீபங்கள்! எத்தனை தீபக் கொத்துகள். அவற்றைக் கொண்டு அவர் ஆராதனை செய்யும் அழகே அழகு! அது ஒரு பரதக் கலை போலத் திகழ்கிறது.

சாமரம் வீசுவதும், விசிறி வீசுவதும் ஒரு தெய்வக் கலையாக இவரிடம் வருகின்றன.

தினம் இரு வேளை பூஜை!

கோசாலை வைத்து பசுக்களை குழந்தை போல வளர்த்து வரும் இவர், கோ பூஜை செய்வார். அந்தப் பசு ஏதோ ஸ்திதப் பிரக்ஞன் போல் ஆடாமல் அசையாமல் நிற்கிறது.

இவரது கோசாலையைத் திறந்து வைத்தவர் காஞ்சி காமகோடி பீடாதிபதியான ஜெயேந்திர சரஸ்வதி அவர்கள்.

பரமாச்சாரியார் இருந்த போது அவரைப் பல முறை தரிசித்தவர் இந்த இளம் சித்தர். இன்று சின்னப் பெரியவரிடமும் பாசத்தோடும் நேசத்தோடும் இருக்கிறார்.

வேலூர் அருகில் அரியூரில் ஆசிரமம் வைத்துள்ள இவர், அங்கே ஒரு பள்ளியும் நிறுவிப் பரிபாலிக்கிறார்.

கோசாலைப் பசுக்களின் பால் எல்லாம் எளிய குடும்பங்களுக்கு விநியோகம்! தேவைப்படுகிற ஏழைகளுக்கு பசுவையும் கூடத் தானமாகக் கொடுத்து வருகிறார். இந்தச் சித்தர் சித்துகள் செய்வது மற்றுமோர் அதிசயக் காட்சி. மணத்தை அள்ளி வீசும் விபூதி கையிலிருந்து கொப்புளித்து வருகிறது. தெய்வங்களின் சிலைகளும் இவரது திருக்கரங்களிலிருந்து வெளி வருகின்றன. 'எல்லாம் ஏமாற்று, கண்கட்டு வித்தை, வெறும் தந்திரம்' என்று சொல்பவர்கள், இவரது சித்துகளை அருகில், மிக அருகில் இருந்து பார்க்கும் போது பிரமித்து நிற்பார்கள்.

தன்னிடம் நரராயணீ ஆவிர்ப்பவித்துள்ளாள் என்று கூறும் இவர் எப்படி இந்த ஆன்ம வழிக்கு வந்தார்?

1976இல் ஓர் எளிய குடும்பத்தில் (தாயார் – ஜோதி, தந்தை நந்தகோபால்) பிறந்தவர் இவர். (சதிஷ் இவரது இயற்பெயர்.)

பாட்டியிடமிருந்து பக்திக் கதைகளைப் பரவசத்துடன் கேட்ட இவருக்கு, சந்நியாசிகள், சாதுக்களைக் கண்டாலே பெரும் ஆனந்தம். அவர்களை அழைத்து வந்து தன்னால் இயன்றதை அவர்களுக்குக் கொடுப்பார்.

சிறுவயதிலிருந்து தியானம் தொடங்கினார். தினமும் விடாது தனியறையில் தியானம் செய்வார்.

வேதாந்தம், இசை, இலக்கியம் ஆகியவற்றின் மேலெல்லாம் இவருக்குப் பற்று.

ஒரு சமயம் ஒரு கோயிலுக்குப் போய்க் கொண்டிருக்கும் போது தியானத்தில் ஏற்படும் பெரும் பரவசநிலை இவருக்கு ஏற்பட்டது. (வயது பதினொன்று)

அன்றிலிருந்து தூங்கும் போதெல்லாம் அற்புதக் காட்சிகள் இவருக்குத் தோன்றலாயின. புருவ நடுவில் ஜோதி தோன்றி உடல் முழுதிலும் பரவியது.

16ஆவது வயதில் தாம் முன்பு வசித்த வீட்டின் (1992,

மே 8) பூஜை அறைக்குப் போய், தம் மீது மஞ்சள் நீரை விடுமாறு வீட்டு அம்மாளிடம் கூறினார்.

திகைத்துப்போன அம்மாவைக் கண்களை மூடித்திறக்கச் சொன்னார். திறந்த போது அந்த அம்மா தனது இஷ்ட தெய்வத்தை நேரில் பார்த்தார். 'நானே தான் அந்த நாராயணி' என்றார் இளைஞர் சதிஷ். அன்றிலிருந்து நாராயணி சித்தராக மாறினார். சித்துகள் அவருக்குக் கை வந்த கலையாக மாறியது.

ஒரு பெண்மணியிடம் வேப்பிலைகளைக் கொடுக்க அதுவே மாங்கல்யமாக மாறிற்று. தெருவே ஆச்சரியத்தில் மூழ்க, ஓம்சக்தி, ஓம்சக்தி என்ற கோஷமும் எழத் தொடங்கியது.

எல்லா மதமும் சம்மதம் என்கிற இந்த நாராயணி சித்தருக்கு எல்லாச் சந்நியாசிகளும், யோகிகளும் பழக்கம்.

அதுபோல நீதிபதிகள், டாக்டர்கள், கலைஞர்கள், பேராசிரியர்கள் எல்லாரும் இவரது அபிமான பக்தர்கள்.

1993இல் ஒருமுறை கூடியிருந்த பொது மக்கள் மத்தியில் (அரசாங்க அதிகாரிகள், நீதிபதிகள், வழக்கறிஞர்கள் யாவரும் இருந்தார்கள்) மண் வெளியிலிருந்து சுயம்புவாக நாராயணி விக்கிரகம் தோன்றியது.

அந்த விக்கிரகத்தையும், ஒரு நண்பர் வீட்டில் அவரே உண்டாக்கிய மற்றொரு சுயம்பு விக்கிரகத்தையும் ஆசிரமத்தில் பூஜித்து வருகிறார் இவர்.

இருமுறை பக்தர்கள் இவரை கனடாவுக்கு அழைத்துச் சென்று நகரங்களை 'ஓம்சக்தி' கோஷமாக மாற்றினார்கள்.

அதே போல இருமுறை சிங்கப்பூருக்கு சென்ற இவருக்கு ஏராளமான சீனர்கள் சீடர்கள் ஆனார்கள்.

இந்தச் சீனர்கள் அரியூர் ஆசிரமத்து அருகே ஓர் ஆஸ்பத்திரியை நிறுவ இருக்கிறார்கள்.

சிங்கப்பூர் இந்தியர் ஒரு தொழிற்சாலையை அங்கே உருவாக்க இருக்கிறார். தெய்வ வழிபாட்டின் மூலமும், சேவைகள் மூலமும், சமுதாயத்தை உயர்ந்த லட்சியத்துக்கு அழைத்துச் செல்கிறார் இவர்.

— ஸ்ரீவே

அருள்மிகு சிவசைலநாதர் கோயில் திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திரம் வட்டத்தில், ஆழ்வார் குறிச்சியிலிருந்து மூன்று மைல் தொலைவில் சிவசைலம் என்னும் ஊரில் அமைந்துள்ளது. இங்கு சிவசைலநாதர் அம்பாள் பரமகல்யாணியுடன் காட்சி தருகிறார்.

வெள்ளிமலை, மேற்குத் தொடர்ச்சி மலை, முள்ளி மலை என்ற மூன்று மலைகளால் சூழப்பெற்றது சிவசைலம். அருள் சுரக்கும் சிவசைலத்தில் கோடையிலும் வற்றாத கருணையாறும், மரமடர்ந்த சோலைகளும், சித்திரை இருபது முதல் புரட்டாசி பத்து வரை விடாமல் கணவாய் வழியாக வீசும் காற்றும், சாரலும் உடலையும் உள்ளத்தையும் குளிரச் செய்து பூரிக்கச் செய்கின்றன.

### சிவசைலநாதர் கோயிலின் அமைப்பு

சிற்பச் சிறப்புகளோடு உயர்ந்து நின்று காட்சி தரும் கோபுரம் காண்போர் கண்ணைக் கவரக்கூடியது. கோயிலின் நுழைவு வாயில் வழியாக உள்ளே சென்றால், கோயிலின் தென்புறம் கிழக்கே பார்த்த விநாயகப் பெருமானும், கோயிலின் உள்ளே வடபுறம் தமிழ்க்கடவுளான முருகப் பெருமானும், கோயிலின் தென்புறம் அறுபத்து மூன்று நாயன்மார்களும், மற்றும் சந்திர சூரியர்கள் தெற்கே பார்த்த தட்சணாமூர்த்தி போன்ற தெய்வங்களைத் தரிசித்துவிட்டுத் திரும்பி வந்தால், பலி பீடத்தையும் நந்தியையும் கொடி மரத்தையும் காணலாம். நந்தியின் அழகு பெருமையுடையது. தத்ரூபமாக ஒரு காளை வாலைச் சுருட்டிக் கொண்டு அமர்ந்திருப்பதைப் போலக் காட்சி தருகிறார் நந்திகேஸ்வரர். நந்திக்கு அடிக்கடி திருமுழுக்கு நடைபெறுவது உண்டு. ஆடி மாதக்கடைசி வெள்ளிக்கிழமையில் சிறப்பாகச் சந்தனக் களபம் நடைபெறுகிறது.

நர்த்த மண்டபம், அர்த்த மண்டபம், மா மண்டபம், மணி மண்டபம் ஆகியவற்றைக் கொண்ட கோயிலில் கருப்பக் கிருகத்தில் சடைமுடியோடு கூடிய சைலப்பரைக் கண்குளிரக் காணலாம். ஐயன் சந்நிதியிலிருந்து பதினைந்து அடி தள்ளி அம்பாள் பரமகல்யாணிக்குத் தனிச் சந்நிதி உள்ளது. மரகதப் பச்சை சன்னத்தைக் கொண்ட அம்மன் துன்பப்படுவோரின் துயர் துடைக்கும் வரப்பிரசாதி. அம்மன் – ஐயன் சந்நிதிகளுக்கு இடைப்பட்ட இடத்தில் உற்சவர்கள் சிவசைலநாதர் பிரியாதவிடை அம்பாள் பரமகல்யாணி ஆகியோர் இருக்கின்றனர். சிவசைலநாதர் சந்நிதியில் மணி மண்டபத்தில் தெற்கு முகமாகப் பார்த்துத் தாண்டவம் ஆடும் நடராசப் பெருமானும் அன்பர்களுக்குக் காட்சி தருகிறார்.

அத்திரி முனிவரால் உண்டாக்கப்பட்ட கங்கை சிவசைல மலையில் சுமார் 1500 அடி உயரத்தில் அத்திரி தீர்த்தம் என்று அழைக்கப்படுகிறது. அத்திரி தீர்த்தத்தின் அருகில் அழகன் முருகனுக்கு ஒரு கோயில் இருக்கிறது. இவ்வாறு அத்திரி முனிவரால் தோற்றுவிக்கப்பட்ட கங்கை கருணையாற்றுடன் கலந்து சிவசைலம் கோயிலுக்கு வடபுறத்தில் ஓடி, திருப்புடைமருதூரில் பொருநை மாநதியுடன் கலக்கிறது.

சிவந்தியப்பர் திருக்கோயில் ஆழ்வார்குறிச்சியிலிருந்து சிவசைலம் வரும் வழியில் மேற்கே அரைக்கல்லில் இருக்கிறது. இக்கோயிலும் மேற்கே பார்த்ததுதான். சிவந்தியப்பர் கோயிலில் கருப்பக் கிருகமும் அர்த்த மண்டபமும் மாமண்டபமும் இருக்கின்றன. தென்கிழக்கில் மடைப்பள்ளியும் மேற்கே முன் மண்டபமும் குடை வருவாசலும் உள்ளன. அவற்றுக்கு முன்னால் திருவிழாப் பந்தலும் நடுவே அனுப்பு மண்டபமும் காணப்பெறுகின்றன. அவற்றுக்கு முன்னால் சிறிது மேற்கே தள்ளித் தேரோடும் தெரு இருக்கிறது. வடமேற்குப் பக்கத்தில் குளத்தூர் ஐயனார் கோயிலும் அதையொட்டித் தெருவடியிற் பெருமான் திருத்தேரும் உள்ளன. சிறிது தெற்கே தள்ளி அம்மை திருத்தேர் நிற்கிறது. வடகிழக்கில் இருப்பது ஈசான பலிபீடம்.

இங்கேதான் சிவசைலநாதர் ஆண்டுதோறும் பங்குனி மாதக் கடைசியிலே தொடங்கும் திருவிழாவில் எழுந்தருளி வந்திருந்து திருவீதி உலா வந்து திருத்தேர்க்காட்சி தந்தருளுகின்றார்.

### சிற்பச் சிறப்புகள்:

மண்டபங் களிலுள்ள தூண்களிலெல்லாம் சிங்கங்கள் அமைந்து முகட்டைத் தாங்குகின்றன. மண்டபங்களின் கட்டுமான வேலைப்பாடு குறிப்பாக



ரிஷப வாகன சேவை

# ஸ்ரீ சிவசைலநாதர் ஆலயம்



சிவசைலநாதர் ஆலய கோபுரம்

எடுத்துக்காட்டும் அளவுக்குப் பேரழகு மிக்கதாகும். பந்தல் மண்டபத்தின் முகட்டில் உட்பக்கம் பலநிறப் பூக்கள் வண்ணத்தில் ஓவியமாகத் தீட்டப்பெற்றுள்ளன.

இரண்டுமரத்தேர்கள் இருக்கின்றன. பெரியது பெருமானுடையது. சிறியது அம்மையினுடையது. பெருமான், பெருமாட்டி கருப்பக் கிருகங்களின் மேலே நல்ல வேலைப்பாடுள்ள விமானங்கள் உயரத் தங்கமுலாம் பூசப்பெற்றுக் கண்கவர் வனப்புடையன. அரச கோபுரம் ஐந்து தட்டுகள் உடைத்தாகிப் பல சித்திரப் பதுமைகளோடு காணப்படுகிறது.

## சிவசைலநாதர்

கீழாம்பூருக்கு மேற்கே ஐந்து மைல் தொலைவில் அமைந்த எழில்மிகு சிற்றூர் சிவசைலம். இவ்வூரில் கடனா நதியின் தென்கரையில் மேற்கே பார்த்து அமைந்திருக்கிறது சிவசைல நாதரின் திருக்கோயில். சிவசைலநாதரின் மேனி உளிபடாத மேனி. தானாகவே முளைத்த சுயம்புலிங்கம்.

## அன்னை கல்யாணி

பார்வதி தேவிதான் பரம கல்யாணி என்னும் திருப்பெயரில் சிவசைல நாதருடன் சிவசைலத்தில் அருட்காட்சி தருகிறாள். கீழாம்பூரிலுள்ள ஒரு கிணற்றிலிருந்து அம்பாள் விக்கிரகம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. அப்போது வானிலிருந்து எழுந்தது ஓர் ஒலி. "பக்தர்களே எனக்குப் பரம கல்யாணி எனும் திருப்பெயர் சூட்டி, என்னை சிவசைலத்தில் சிவசைல நாதருடன் பிரதிஷ்டை செய்யுங்கள்" என்று ஒலித்தது அந்த ஒலி. அதன்படி பரம கல்யாணி அம்பாளை சிவசைலத்தில் பிரதிஷ்டை செய்து வணங்கி வருகின்றனர் கீழாம்பூர் மக்கள். எனவே அன்னை கல்யாணியை இவ்வூரார் மகளாகப் பாவித்து மூன்று நாள் விழாக்கள் எடுத்து மகிழ்கின்றனர்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த இத்திருக்கோயிலுக்கு 1975 ஆம் ஆண்டு நடந்த கும்பாபிஷேகத்துக்குப் பிறகு 22 ஆண்டுகள் கழித்து சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீ பாரதீ தீர்த்த மஹாஸ்வாமிகளின் அனுக்ரஹத் துடனும் தருமபுரம் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ ஷண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசார்ய ஸ்வாமிகளின் ஆசியுடனும் பிள்ளையார்பட்டி சிவாச்சாரியார் பிச்சை குருக்கள் தலைமையில் இவ்வாண்டு (1997) ஜூலை 6–ஆம் தேதி சீரும் சிறப்புமாக கும்பாபிஷேகம் நடைபெற்றது. இதற்கான திருப்பணிகளை முக்கியமாகவும், முழுமையாகவும் சிம்சன் அதிபர்கள் திரு.ஏ. சிவசைலம் அவர்களும், திரு.ஏ. கிருஷ்ணமூர்த்தி அவர்களும் செய்திருந்தார்கள். மேலும் இக்கோயிலின் கும்பாபிஷேகத் திருப்பணிகள் பல உபயதாரர்களின் ஆதரவோடும், தேவகோட்டை ஷண்முகஸ்தபதி மற்றும் வைத்யநாதஸ்தபதி ஆகியோரால் திருப்பணிகள் ஊர் மக்களின் துணையுடனும் கோயில் நிர்வாக அதிகாரிகளின் கண்காணிப்புடனும் நடைபெற்றது.

'நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்' 'நன்றே செய்தல் வேண்டும்; நன்றும் இன்றே செய்தல் வேண்டும்; இன்றும் இன்னே செய்தல் வேண்டும்!' என்ற அகவலின்படி வாழ்ந்து மறைந்த தொழிலதிபர் அண்ணல் அனந்தராம கிருஷ்ணன் அவர்கள் ஸ்ரீ சிவசைலநாதர் – ஸ்ரீ பரமகல்யாணி அம்மன் மீது பக்தி மிகக் கொண்டு இந்தத் திருக்கோயிலுக்குப் பயன் கருதா அருந்தொண்டுகள் பலவற்றைச் செய்துள்ளார்கள்.

அம்பாளின் திருப்பெயரால் ஆழ்வார்குறிச்சியில் பரம கல்யாணி மேல்நிலைப் பள்ளி, பரம கல்யாணி கலைக்கல்லூரி ஆகிய கல்விக் கூடங்களும், பரம கல்யாணி மருத்துவமனையும் நிறுவி, மக்கள் தொண்டே மகேசனுக்குச் செய்யும் மிகப்பெரிய தொண்டாகும் என்பதை நிரூபித்துள்ளார்கள். அவர்களின் வழித்தோன்றல்களாகிய திரு.ஏ. சிவசைலம் அவர்களும், திரு.ஏ. கிருஷ்ணமூர்த்தி அவர்களும் தந்தையின் நல்வழியில் நின்று அன்னையின் திருப்பெயரில் பரமகல்யாணி திருமண மண்டபம் நிறுவி ஏழை எளிய மக்கள் பயனடையுமாறு நானிலம் போற்ற நற்றொண்டுகள் பல ஆற்றி வருகிறார்கள். ●

# சரண் உமக்கு

கவ்வும் கொடு முதலை
காலன்கைப் பாசமன்றோ!
கதறியழும் கஜராஜன்
வெவ்வினையை வேரறுப்போன்
விரிமார்பில் செல்வமகள்
வீற்றிருக்கும் நாரணனை

அரற்றி அழைத்தவுடன்
அபயகரம் உயர்த்தியமால்
அறத்திகிரி மறுகையால்
கரந்தெறிந்து வேழத்தைக்
காத்ததுபோல் இன்றெம்மை
கலிமுதலை தீஉமிழும்

பற்கள் பதித்துயிரைப்
படிப்படியாய் விழுங்குகையில்
பரந்தாமன் மீட்சிதர
முற்பிறப்பின் நற்பயனாய்
முன்வந்த தவவடிவே!
முனிச்ரேஷ்டா! சரண்உமக்கு

வடவரையை மத்தாக்கி
வாசுகியை நாணாக்கி
வானவர்தாம் வாழ்வுபெற
கடல்கடையும் போதெழுந்த
கருநீலத் தீ நஞ்சை
கற்றைமுடி நிலாச்சடையோன்
குடித்த அருள்; ஈரேழு
குவலயமும் அவன்உந்திக்
குகைக்குள் துயில்வனவால்
மிடற்றில் விஷம் நிறுத்தி
மீட்டஅன்னை பார்வதியின்
மிஞ்சும் பெருங்கருணை

இவையிரண்டும் விழுப்புரத்தில்
இணைந்து பிறப்பெடுத்து
இருட்காட்டுள் வழிதவறித்
தவிக்கும் மன்பதைக்குத்
தஞ்சம் வழங்குகின்ற
தவஒளியே! சரண்உமக்கு.



(பூதஉடல் போந்து கலியுகத்தில் நம் ஊனக்கண்களுக்கு தரிசனம் அருளிய அவதார புருஷன் ஸ்ரீ பெரியவாள் (தன் அவதார நோக்கம் பூர்த்தியானதாய் சங்கற்பித்துப் போலும்!) சதம் நிறைவுறும் முன்பே 1994 ஜனவரி 8ஆம் தேதி விதேஹமுக்தி எய்தி ஸ்தூல சரீரம் நீத்து ஸூக்ஷ்ம சரீரத்தில் புகுந்து விட்டார். அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்து.. அருட்பேரொளியின் அமுதக் கலையாய் எல்லாரும் தனக்குள்ளாக எல்லாருள்ளும் தானாக.. ஏகன் அநேகனாக சகல புவன பந்து சச்சிதானந்த சிந்துவாய் கரையறியாக் கருணைபொழியும் காமதேனுவாய்க் கோயில் கொண்டுள்ள யுகபுருஷனின் புனிதத் திருவடிகளில் சமர்ப்பிக்கும் எளிய கவிதாஞ்சலி.)

டி.வி. சுவாமிநாதன்

அவன் ஒரு யோகி. மற்றவர்கள் கணிப்பில்.

காலில்லாதவன் யோகி. உலகத்தின் பார்வை இது.

காலை இழந்தவன் ஆசாபாசங் களையும் இழந்துவிட வேண்டும். அவன் மரக்கட்டை. சாத்வீகன், காஷாயம் கட்டாத துறவி.

"ரவியா? அய்யோ பாவம்! மூணாவது வயசில் இளம்பிள்ளை வாதம் வந்து சக்கர நாற்காலியில் முடங்கிட்டான். ஆனா என்ன? 'இராமலிங்கம் ஓதாதுணர்வான்' அப்படின்னு வள்ளலார் பத்தி ஈச்வரன் சொன்னாப்பல, இவனும் பிறவி ஜீனியஸ். வீட்டிலிருந்தபடியே அவன் படிக்காத புத்தகம் கிடையாது. இந்தப் பேட்டையிலேயே எல்லாருக்கும் அவன்கிட்ட மதிப்பு. பெரிய பெரிய தத்துவ விஷயங்களைப் பிட்டுப் பிட்டு வைக்கிறான். ஞானி அய்யா அவன்! முப்பது வயசிலேயே அறுபது எழுபது வயசுக்காரர்களைவிடப் பெரிய ஞானி."

ஞானி என்றபிறகு அவன் உணர்ச்சிகளைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. ஞானிக்கு உணர்ச்சிகள் ஏது? அப்படி இருந்தாலும் இன்பத்தையும் துன்பத்தையும் ஒரே மாதிரி பார்க்கும் ஞானிக்கு அவை ஒரு பொருட்டா என்ன?

மன்றாடுகிற அம்மாவை அதட்டி அடக்கிவிட்டு, வாயில் வெற்றிலைச் சிவப்பும் கண்களில் கிறக்கமுமாக "இஞ்சி இ...டுப்...பழகி" என்று மெல்லப் பாடிக் கொண்டே மயில்கண் வேட்டியின் நுனியைத் தூக்கிப் பிடித்தவாறு வெளியே செல்லும் அப்பாவைப் பார்க்கையில் அவனுள் ஆத்திரம் கனலுமென்று யார் நினைப்பார்கள்?

'அந்த நாளில்' புருஷன் தன்னிடம் எத்தனை அந்நியோந்நியமாய் இருந்தார்' என்பதை அம்மா அவனிடம் விவரிப்பாள். "ஒரு காலத்தில் என்னை உங்கப்பா வாய்க்கு வாய் 'என் பச்சைக்கிளி' ன்னுதாண்டா கூப்பிடுவார்! மாமியார் சொல்ற வேலையெல்லாம் முடிச்சுண்டு இராத்திரி ரூமுக்கு வர கால் மணி நேரம் தாமதமாய்ட்டா 'ஏன் லேட்?'னு குதியாக் குதிப்பார். இப்ப இந்த வயசில்... அலையறார் இப்படி..." என்று தன் துக்கத்தைச் சொல்லிக் கொள்ளும்போது ஒரு வளர்ந்த மகனிடம் பேசுகிறோம் என்ற நினைவே இருக்காது. ஏனெனில் அவன் யோகி. ஒரு சந்நியாசி. அவனிடம் எதுவும் பேசலாம். அவன் ஒரு வடிகால் மட்டுமே.

அநேகம் பேருக்கு அவன், தம் உணர்ச்சிகளை வெளியிட்டுக் கொள்ள ஒரு வடிகால்தான். உலகம் ஒரு பிரம்மாண்டமான வாய். அதற்கு அவன் ஒருநிரந்தரச் செவி. 'காப்டிங் ஆடியன்ஸ். நாற்காலியை விட்டு எழுந்து ஓட முடியாதல்லவா?' என்று நினைத்துக் கொள்வான்.

"என்னடா ரவி! என்ன பண்ணிண் டிருக்கே? வழக்கம்போல புத்தகம் படிச்சாகறதோ? மேதாவிப்பா நீ!"

அப்பாவின் ஆருயிர் நண்பர். வழுக்கைத் தலையும் ஒடிசலான உடம்பும் கொண்ட இவரும், ஆறடி உயரத்தில் இன்னும் இளமைப் பொலிவு மாறாதிருக்கும் அப்பாவும் நெருக்கமான வர்கள் என்றால் நம்புவது கஷ்டம்தான். ஆனால் நட்புக்கு உருவ ஒற்றுமை எதற்கு? ஜிம்கானா கிளப்பும் பில்லியர்ட்ஸ் ஆட்டத்தில் விருப்பமும் ஒத்திருந்தால் போதும்.

"வாங்கோ மாமா! மேதாவியுமில்லை. ஒண்ணுமில்லை. பொழுது போக்கப் படிக்கறேன். உட்காருங்கோ" என்றான் ரவி. மரியாதைக்கு ஒரு புன்னகை.

"நீ சிரிக்கறபோது அச்சு அசல் உங்கப்பா தான். உடம்பு வாகும் அப்படியே. இந்த போலியோ மட்டும் வந்திருக்காட்டா அப்படியே அவரோட ஜெராக்ஸ் காப்பி." செயலிழந்த கால்களை மூடியிருந்த சால்வையைப் பார்த்தவாறு சொன்னார்.

"வேறேதானும் பேசலாமே மாமா! என்ன விஷயமா வந்தேள்? அப்பா வீட்ல இல்லை."

"உங்கப்பா என்னிக்குச் சாயந்தரம் ஆறு மணிக்கு வீட்ல இருந்தார்? 'அங்கே'ருந்து கிளம்பவே இராத்திரி பதினோரு மணி ஆயிடுமே!" குரலை இறக்கினார். "அவளப் பார்த்திருக்கியோ நீ? சும்மா லட்டு மாதிரி தளதளன்னு இருப்பா."

"இந்தப் புத்தகத்துல புதுமைப் பித்தன்..."

"மனசு ரொம்ப கனமாயிருக்குப்பா - ரவி. அதான் உன்கிட்ட ஒரு குரல் சொல்லி அழுதுட்டுப் போகலாம்னு வந்தேன். என்



# வடிகாலன்

ஆர். சூடாமணி

பிஸினஸ் பார்ட்னர் இருக்கானே - அதாம்ப்பா. நரஹரி நரஹரின்னு பெரிய ஃபிலிம் கிரிட்டிக்னு கூட பேரு (அவட்டல்) - என்ன செய்தான் தெரியுமா? வியாபார லாபத்துல பாதிக்கு மேல் முடக்கித் தன் மச்சினன் பேர்ல வீடுகளும் ஷேர்களுமா வாங்கிப் போட்டுட்டு எனக்குக் கை விரிச்சட்டாம்ப்பா. பச்சை நம்பிக்கைத் துரோகம். ஏற்கெனவே - உன்கிட்ட சொல்றதுக்கென்ன - முன்னே நடந்த பாங்க் ஸ்காம்ல எனக்கு ஏகப்பட்ட நஷ்டம். இப்போ இந்த இரண்டாவது இடி. எப்படித் தாங்கப் போறேனோ என்ன செய்யப் போறேனோ...?"

தாம் சொல்வது அவனுக்கு சுவாரஸ்யமாய் இருக்குமென்பதில் அவருக்குச் சந்தேகமில்லை. அவனோடு பேசும் யாருக்குமே அந்தச் சந்தேகம் வருவதில்லை.

"உன் மாதிரி இருந்துட்டா பரவாயில்லப்பா. நீ யோகி. இதெல்லாம் உனக்குத் தூசுக்குச் சமானம். அந்தப் படுபாவி இருக்கானே..."

★ ★ ★

தன் அறையை ஒட்டியிருந்த பால்கனியில் உட்கார்ந்து எதிரே பார்த்தால் எதிர்வீட்டுக் காம்பவுண்டில் உயரமான பெரிய நாகலிங்கமரம். வீட்டை ஒரு திரைபோல் மூடியிருக்கும் அதன் அடர்ந்த இலைகள்.

ஒரு சமயம் அந்த மரம் காற்றில் சருகுகள் அனைத்தையும் உதிர்த்துவிட்டு வெறும் கிளைக் கோடுகளுடன் நின்றபோது அவற்றின் இடைவெளியில் பளிச்சென்று ஒரு பெண் முகம் எதிர் வீட்டு ஜன்னலில் தெரிந்தது.

முதல் முறை முகங்கள் திடுக்கிட்டு விலகின. சில முறைகளுக்குப் பின் பார்வைகள் நிலைத்தன. இன்னும் சிறிது காலத்தில் காற்றசைவில் இலைகள் விலகி முகங்கள் தெரிந்தபோது பரிச்சயப் புன்னகைகள் தோன்றத் தயாராயிருந்தன. 'உள்ளேயிருந்து யாரோ "சாந்தா!" என்று அழைத்ததற்கு "இதோ வரேம்மா!" என்ற பதிலுடன் அந்த முகம் ஜன்னலிலிருந்து மறைந்த தினம் சாந்தா என்ற பெயர் மிகவும் அழகானதாய் இவனுக்குத் தோன்றியது.

★ ★ ★

பால்கனியில் அமர்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்த ஒரு வேளையில் நண்பன் கோபாலன் வந்தான். இவன் வயதுதான் இருக்கும். அந்த வட்டாரத்தில் இவனைத் தம் நண்பனென்று சொல்லிக்கொண்டு பேச வருகிறவர்களில் கோபாலன் ஒருவன். அவர்களுக் கெல்லாம் ரவி ஒரு பெரிய வசதி. மனசில் தோன்றுவதை அப்படியே இறக்கி வைக்கலாம்.

"என்னடா ரவி, புத்தகம் படிச்சிண்டிருக்கியா?" சக்கர நாற்காலி பக்கத்தில் தரையில் அமர்ந்தான்.

"புத்தகத்தைக் கையில் வச்சுண்டிருக்கிறவங்க சாதாரணமா செய்யறது அதைத்தான்" ரவி ஆத்திரத்தைப் புன்னகையில் மூடினான்.

"நல்லாப் பேசறேப்பா நீ! புத்திசாலி. அதனாலதான் உன்கிட்டப் பேசினா மனசு லேசாகுது. எங்க வீட்ல என்ன நடக்குது தெரியுமா? பொழுது விடிஞ்சா பொழுது போனா என் அம்மாவுக்கும் மனைவிக்கும் சண்டை. வரவர சகிக்க முடியலை. மனைவி சொல்றா ஒருநாள் -உன்கிட்ட சொல்றதுக்கென்ன 'நீ சரியான ஆம்புளையாயிருந்தா, ஒண்ணு என்னை அழைச்சிட்டுப் போய்த் தனிக் குடித்தனம் வை. இல்லாட்டி டைவர்ஸ் கொடு எனக்கு.' அப்படிங்கறா ரவி! எப்படியிருக்கு பார்த்தியா? நானுந்தான் கேக்கறேன். கல்யாணமாகி அஞ்சு வருஷத்துக்குப் பிறகுதான் நான் சரியான ஆம்புளையா இல்லையான்னு உனக்குச் சந்தேகம் வருதா? எங்கம்மாவை விட்டுடச் சொல்றியே. உங்கம்மாவை நீ விடுவியா?..."

அத்தை பிள்ளை சுந்தரம் ஒருநாள் வந்திருந்தான். சொன்னான்:

"ரவி! எனக்கு இங்க எதுவுமே பிடிக்கலைடா. எந்தப் பக்கம் திரும்பினாலும் ஊழல், வறுமை, சாதிப் பாகுபாடு. திறமைக்கு ஸ்கோப் இல்லை. நான் எம்.பி.ஏ. முடிச்ச கையோடு சில அமெரிக்கன் யூனிவர்சிடிகளில் மானேஜ்மென்ட் மேல்படிப்புக்கு அப்ளை பண்ணியிருக்கேன். எங்க அப்பா அம்மாவுக்குக் கூடத் தெரியாது. ஆனா உன்கிட்ட சொல்றதுக்கென்ன - அங்கே எங்கேயானும் இடம் கிடைச்சட்டா படிப்பு, உத்தியோகம்னு மெல்லக் காலூன்றிண்டு கடைசில குடியுரிமை வாங்கிண்டு அங்கேயே செட்டில் ஆயிடலாம்னு இருக்கேன். இதை உன் மனசோடு வச்சுக்கோ. ஆனா நீ யார்கிட்ட சொல்லப்போறே? பாவம்! சந்நியாசியாட்டம் வம்புதும்புக்குப் போகாதவன்."

★ ★ ★

சாந்தா அவன் தாயோடு பரிச்சயமாகி அந்த வீட்டுக்கு வந்துபோகத் தொடங்கிய பின் அவன் உடம்பில் புதுத்தெம்பு வந்ததுபோல் இருந்தது.

அவள் அவனோடு சகஜமாய்ப் பேசிப் பழகினாள். அவனிடமிருந்து புத்தகங்களை இரவல் வாங்கிச் சென்றாள். சக்கர நாற்காலியை பால்கனிக்கு அவளே செலுத்திச் சென்று நிறுத்திக் கீழே அமர்ந்து கொண்டு, படித்த புத்தகங்களை அவனுடன் விவாதித்தாள். மலர்ந்த, களையான முகம். கச்சிதமான உடலமைப்பு. பேச்சிலும் நடப்பிலும் கனிவு.

அவள் வரும் நேரங்களைத் தான் ஆவலாக எதிர்பார்ப்பதை ரவி உணர்ந்தான். அடிக்கடி ஸ்டாண்ட் கண்ணாடியை எடுத்து முகம் பார்த்துக் கொண்டான். "ராஜா மாதிரி" சிவப்பு. சுருள்முடி, பரந்த நெற்றி. (அறிவாளி முத்திரை?) பெரிய கண்கள். உதடுகள்தான் சற்று அதிகப் பருமன். ஆனால் சிரிக்கும்போது பற்களின் நேர்த்தியால் அந்தக் குறை மறைந்து விடுகிறது. தன்னிடமும் ஏதோ ஒரு பொலிவு. ஒரு கம்பீரம்...

சால்வை மறைக்கும் சூம்பிய கால்களைத் தாண்டி தன்னையும் எவ ளாவது - விரும்பக்கூடும் ஒருவேளை...

க்ரீம் போட்டுத் தலை சீவிக் கொள்வதிலும் பளிச்சென்ற வர்ணங்களில் சட்டை அணிவதிலும் அக்கறை பிறந்தது.

★ ★ ★

பூங்காவில் அமர்ந்திருந்தான். அவன் தாய் மாமன் ஒருவர் அவனையும் அவன் நாற்காலியையும் காரில் ஏற்றி அழைத்து வந்திருந்தார். ஒரு சிமெண்ட் பெஞ்ச் அருகில் நாற்காலியோடு அவனை இருத்திவிட்டு "கொஞ்சம் நடந்துட்டு வரேன் ரவி" என்று கூறிச் சென்றார்.

ஒரு பெரியவர் பெஞ்ச் மீது வந்து அமர்ந்தார். அவனைப் பார்த்த பார்வையில் சுவாரஸ்யம், ஆராய்ச்சி.

"பாவம்! உடம்புக்கு என்னப்பா?"

அவன் பேசவில்லை.

"போலியோவா? அல்லது. ஏதானும் விபத்தா? வைத்தியம் பார்க்கலையா?"

மௌனம்.

"தனியாவா வந்தீங்க? யார் அழைச்சிட்டு வந்தாங்க? வீடு பக்கமா?"

"எதிரிலே அந்தப் பூக்கள் அழகா இருக்கு. இல்லையா சார்?"

"ஆமாமாம். சாமந்தி."

"டேலியா."

"உங்களுக்கு எல்லாம் தெரியறதே! கடவுள் ஒண்ணை எடுத்தால் இன்னொன்று குடுக்கறார். ஹ்ம். எனக்கும் அப்படி ஏதானும் ஒரு நல்லதைக் குடுக்கக் கூடாதா? குடும்பக் கஷ்டங்கள் ரொம்ப ஜாஸ்திப்பா. படிச்சுட்டு வேல கிடைக்காம



அலையறபையன். கால்விளங்காத பெண் உங்க மாதிரி ஆம்புளையாயிருந்துட்டா கவலையில்ல. பெண்ணாச்சே! எவன் கையிலானும் பிடிச்சுத்தர வேணாமா? அவளுக்கு வைத்தியம் பார்க்கக் கடன் வாங்கி வாங்கி இப்போ விழி பிதுங்கறது. பெண்டாட்டி கழுத்தில் மஞ்சக்கயிறு ஒண்ணுதான் மிச்சம்." மேல்துண்டால் கண்களை லேசாய்த் துடைத்துக் கொண்டார். "வேலை பார்க்கற இடத்திலாலும் நிம்மதி உண்டா? நான் பதினஞ்சு வருஷமா எங்க ஆபீசில் க்ளார்க்காயிருக்கேம்ப்பா. என் வயசில் பாதி இருக்கும். நேத்து வந்த பயல் மேலதிகாரியாய் ஏஸி ரூம்ல உக்கார்ந்து துரை மாதிரி தர்பார் பண்றான். வயசுக்கு ஒரு மரியாதை தரவேணாமா? உங் கிட்ட சொல்றதுக்கென்ன? சில சமயம் தற்கொலை பண்ணிக்கலாமான்னு கூடத் தோன்றது..."

முன்பின் தெரியாதவர்களுக்குக் கூட நான் வடிகாலா? என் முகத்திலேயே 'இது குப்பைத்தொட்டி. உங்கள் கவலைகளை இங்கே கொட்டுங்கள்' என்று எழுதியிருக்கிறதா?

* * *

"வா. சாந்தா! என்ன ஒரு வாரமா ஆளையே காணோம்?"

அம்மா ஹாலில் கேட்டது தன் அறையில் அவன் காதில் விழுந்தது. ரவி நாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்தான். தலைமுடியை இரண்டு கை விரல்களாலும் கோதிக் கொண்டான். வரவேற்புக்கு ஆயத்தமாய் இதழோரத்தில் புன்னகை அரும்பியது.

"கொஞ்சம் வேலை இருந்தது மாமி. அதான்" என்றது சாந்தாவின் குரல்.

என்ன வேலை என்பது பால்கனியில் இருவரும் அமர்ந்து பேசிக் கொண்டிருந்த போது அவனுக்குத் தெரிந்தது.

மாலை வானத்துச் சிவப்பொளியின் மெத்தென்ற வெம்மையினூடே காற்று படர்ந்தது. ரவியின் மனத்தில் உற்சாகம்.

"கடவுளின் பாத நிழலுக்கு 'வீசு தென்றலை'யும் ஓர் உவமையாய்ச் சொன்ன நாவுக்கரசரை எவ்வளவு பாராட்டினாலும் தகும். இல்லையா சாந்தா?" என்றான். இருவரும் பழைய - புதிய - தமிழ்ப்பாடல்கள் பற்றிப் பேசி அப்போதுதான் நிறுத்தியிருந்தார்கள். கவிதையின்பம் மனத்தில் இன்னும் ததும்பிக் கொண்டிருந்தது. அதன் தொடர்ச்சியாகவே அவன் பேசினான். மாலைப் பொன்னொளியும் கவிதைச் சுவையும் அவள் நெருக்கமும் இனிமையை எளிதாக்கின.

"ரொம்ப சரி மிஸ்டர் ரவி.... இன்னிக்கு என்னால முன்னே மாதிரியே கவிதையை ரசிக்கவும் விவாதிக்கவும் முடியுது. ஏன் தெரியுமா?"

"ஏன்?"

"ஏன்னா இன்னிக்கு நான் ரொம்ப சந்தோஷமாயிருக்கேன்."

"கேட்கவே நிறைவாயிருக்கு"

"ஒரு வாரமாய் ஒரே கவலை, சர்ச்சைகள், ஆட்சேப சமாதானங்கள்..." அவள் அவனை நோக்கிப் புன்னகை செய்தாள்.

"உங்க கிட்ட சொல்றதுக்கென்ன? நான் ஒருவரை விரும்பறேன். எங்க காலேஜ் அஸிஸ்டென்ட் லெக்சரர். பழனிவேல்னு பேரு. அவருக்கும் இஷ்டம். ஆனா எங்க இரண்டுபேர் வீட்லயும் எதிர்ப்பு. ஜாதிப் பிரச்னைதான். வேறென்ன? அவர் ரொம்ப நல்லவர் மிஸ்டர் ரவி! நான் பொதுவா யார் கிட்டயும் சகஜமாய்ப் பழகமாட்டேன். உங்க கிட்ட பயமில்லாம பழகறாப்போல எல்லா ஆம்பிளைகள் கிட்டயும் பழகமுடியுமா என்ன?"



ரவியின் முகம் சுருக்கென்று கூசியது.

"ஆனா பழனி விஷயம் வேறு. பார்த்ததுமே உத்தமர்னு பட்டுது. பழகினோம். கல்யாணம் செய்துக்க ஆசைப்படறோம். பெற்றோர் சம்மதிக்காததால் மேலே என்ன செய்யறதுன்னு இந்த ஒரு வாரமாய் அடிக்கடி ரகசியமாய் சந்திச்சு விஷயத்தைப் பல கோணங்களிலேர்ந்து அலசினோம். கடைசில, பெற்றோர் சம்மதம் கிடைக்காட்டா ஒண்ணாய் ஓடிப்போயாவது கல்யாணத்தைச் செய்துக்கறதுன்னு தீர்மானிச்சிருக்கோம். இன்னும் ஒரு வாரம். பத்து நாள் வீட்ல கெஞ்சி வாதாடிப் பார்க்கப் போறோம். பிரயோஜனம் இல்லாமப் போய்ட்டா திருட்டுக் கல்யாணம்தான்."

அவன் புன்னகையுடன் பெருமூச்சு விட்டான்.

"உங்க கிட்ட சொன்னாலே மனசு லேசாயிடுது மிஸ்டர் ரவி. நீங்க அறிவாளி. எதையும் சரியாப் புரிஞ்சுக்கிறவர்..."

"எழுந்து போ வெளியே!"

சிவந்து கோணலாகி ஆக்ரோஷம் பொங்கும் அவன் முகத்தை சாந்தா திடுக்கிட்டு ஏறிட்டாள் ரவிக்கு மூச்சு இரைத்துக் கொண்டிருந்தது. துடிக்கும் உதடுகளிடையேயிருந்து ஆத்திரச் சொற்களோடு எச்சில் தெறித்தது.

"இதையெல்லாம் என்கிட்ட ஏன் வந்து சொல்றே? நான்தான் எல்லாருக்கும் ஃபாதர் கன்ஃபெஸரா? நீ யாரையானும் காதலிச்சுக்கோ. கல்யாணம் செஞ்சுக்கோ. எனக்கென்ன? ஊரிலிருக்கறவாளின் அந்தரங்கத்தையெல்லாம் சுமக்க ணும்னு எனக்குத் தலையெழுத்தா? என்கிட்ட யாரும் எதுவும் சொல்லாதீங்க. நான் மரக்கட்டை இல்லை. எழுந்து போ முதல்ல!"

"மிஸ்டர் ரவி..."

"போ. போ. போய்த் தொலை! மிஸ்டர் ரவியாம். மிஸ்டர்..."

அச்சமும் குழப்பமுமாய் சாந்தா திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே தன் வீட்டை அடைந்த பிறகு கூட எதிர் வீட்டிலிருந்து "போ! போ!" என்ற ஆவேசக் குரலின் சப்தம் ஓர் அழுகை ஓலம்போல் வந்து கொண்டிருந்தது.

❀●❀



# கதாபாத்திரம்

**வல்லிக்கண்ணன்**

காவிய கர்த்தர்களும், கதாசிரியர்களும் விதம்விதமான கதாபாத்திரங்களை உருவாக்குகிறார்கள். அவர்களை வகைவகையான அனுபவங்களிலும், சிக்கல்களிலும், உணர்ச்சிக் குழப்பங்களிலும் உழல விடுகிறார்கள்.

அத்தகைய கதை மாந்தரும் அவர்களது அனுபவங்களும் வாசகரசிகர்களிடையே வெவ்வேறு ரகமான தாக்கங்களை ஏற்படுத்துகின்றன. சில கதாபாத்திரங்களின் உணர்வுகளும் செயல்களும் மூலக்கதையில் இருப்பதைவிட மாறுபட்ட விதத்தில் அமைந்திருந்தால் பொருத்தமாகவும் சிறப்பாகவும் இருக்குமே என்ற நினைப்பு கற்பனை வளம் பெற்ற சிலருக்கு உண்டாகிறது. உடனே அவர்கள் தங்கள் மனதுக் கேற்றபடி ஒரு புதுக் கதையை உண்டாக்கி விடுகிறார்கள்.

காலகாலமாக, கதை, கவிதை எழுதுகிற படைப்பாளிகள் கையில் 'படாதபாடு படும்' கதாபாத்திரங்களில் முக்கியமானது அகலிகை. வெவ்வேறு காலகட்டங்களில் கவிஞர், கதாசிரியர், நாடகாசிரியர் அநேகர் அவரவர் கற்பனைக்கும் மனோதர்மத்துக்கும் கண்ணோட்டத்துக்கும் தகுந்த படி அகலிகை கதைக்குப் புதுமெருகுதீட்டி மகிழ்ந்திருக்கிறார்கள். வெவ்வேறு இந்திய மொழிகளிலும்....

சுதேஷ்ணா சக்ரவர்த்தி எனும் வங்கமொழிப் படைப்பாளி எழுதிய 'அகலிகை' கதையின் தமிழாக்கத்தை அண்மையில் படித்தேன். முற்றிலும் வித்தியாசமான, புதுமையான, அந்தக் கற்பனை தமிழில் வந்துள்ள பல்வேறு அகலிகை கதைகளையும் என் நினைவில் ஓடச் செய்தது.

வால்மீகி படைத்து விட்ட அகலிகையின் கதை நேயர்களுக்குத் தெரிந்திருக்கும். அழகுமிகுந்த பெண்ணான அகலிகைக்குத் திருமணம் செய்ய நிச்சயித்த பிரம்மா – அவளைப் படைத்தவர் – ஒரு நிபந்தனை விதித்தார். "இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் யார் முதலில் வலம் வருகிறானோ அவனுக்கே அவள் உரிமையாவாள்" என்றார். அனைவரும் பயந்து விலகினர். இந்திரன் துணிந்து முன் வந்தான். ஐராவதம் என்ற யானையின் மீதேறி வலம்வரத் தொடங்கினான். ஆனால் கௌதமன் (கோதமன்) என்கிற முனிவன், அருகில் நின்ற காமதேனு எனும் பசுவை வலம் வந்து, "இக்கோமாதாவிடம் அகில பிரபஞ்சங்களும் அடக்கம்; இவளை வலம் வந்ததன் மூலம் நான் பிரபஞ்சத்தை வலம் வந்தவனாகிறேன்" என்றான். அவனது தர்க்க நியாயத்தை அங்கீகரித்த பிரம்மா அகலிகையை முனிவனுக்கே மணம்முடித்து வைத்தான்.

வேகம் வேகமாய்ச் சுற்றி விட்டு வந்த இந்திரன், பேரழகி அகலிகை வறட்டு தாடி முனி ஒருவனோடு குடில் ஒன்றில் ஒடுங்கிவிட்டதை அறிந்து உளம் கொதித்தான். எப்படியும் அவளுடன் இன்பம் நுகரத் தவித்தான். தவிப்பு அதிகமான ஓர் இரவில், தனது சக்திகளால் வஞ்சனைகள் புரிந்து, கோதமனை ஏமாற்றி வெளியேற்றினான். விடியும் வேளை வந்து விட்டது என மயங்கிய முனிவன் நீராட நதிக்கரை சென்றான். அவ்வேளையில் இந்திரன் கௌதமனின் உருவில் வந்து, அகலிகையோடு இன்பம் நுகர்கிறான். இன்னும் பொழுது புலர நேரம் கிடக்கிறது என்று கண்டு கொண்ட முனிவன் வீடு திரும்பியதும் உண்மையை உணர்ந்து, வெகுண்டு, இந்திரனைச் சபிக்கிறான். அகலிகையையும் கல்லாகும் படி சாபம் கொடுக்கிறான்.

இந்தக் கதையைப் படித்தவர்கள் அகலிகை தவறு செய்யவில்லை என்று எண்ணுவோரும், அவளுக்கு அளிக்கப்பட்ட தண்டனை நியாயமானதில்லை என்போரும் அவரவர் கற்பனைத்திறனைக் காட்ட விரும்பினார்கள்.

அகலிகை கதையைப் பாட வந்த கம்பன், அவள் உடலினால் பிழை செய்ய நேரிட்ட போதிலும், உள்ளத்தால் பிழை இலாதவள்; அவள் அந்நியன் ஆன இந்திரனைக் கூடியிருந்த வேளையிலும் தன் கணவனான கௌதமனே தன்னைத் தழுவியிருக்கிறான் என்றே நம்பி இன்புற்றாள் என்று கூறிவைத்தான்.

கம்ப இராமாயணத்தைத் தழுவி 'அகலிகை வெண்பா' இயற்றிய வெ.ப. சுப்பிரமணிய முதலியார், கம்பனைப் போலவே அகலிகை உள்ளத்தால் பிழை இல்லாதவள் என்றே முடிவு கட்டினார். அவள் உள்ளத்து உளைச்சலிலிருந்து விடுபடும் வகையில் கல்லாகி, பாறைப் படுக்கையில் துயிலும்படி வெ.ப.சு. உதவி புரிந்திருக்கிறார் என்று ரசிகமணி டி.கே.சி. எழுதியுள்ளார்.

தமிழில் மறுமலர்ச்சி சிந்தனைகள் எழத்தொடங்கிய பின்னர், படைப்பாளிகள் அகலிகை கதைக்குத் தீவிரமான மெருகுகள் தீட்ட முனைந்தார்கள். உள்ளம், உணர்வு, உடல் என்ற கோணங்களில் கவனிப்பு செலுத்தினார்கள்.

ச.து. சுப்பிரமணிய யோகியார் பாடியுள்ள 'அகலிகை' விசேஷமான படைப்பு. மேகமலர் காவனத்தே பூக் கொய்து விளையாடும் அகலிகையைக் கண்டு மோகம் கொள்கிறான் இந்திரன். வானவில்லின் வீதியிலே அவள் துள்ளித் திரிவதைப் பார்த்துப் பித்தேறிப் போனான். அவளை அடையத் தவிக்கிறான். வஞ்சனைகள் செய்து, தாடி முனியை வெளியேற்றிவிட்டு, கௌதமன் போல் வந்து அவளைத் தழுவுகிறான். 'என்றுமிலா ஆசை என் கணவர் கொண்டாரே' என உளம் மகிழ்ந்து, அவள் அவனோடு இன்பமொக்க உடன் உண்டு இருந்தாள்' என்று விவரிக்கிறார் கவிஞர். பின்னர் வழக்கமான கதை தான்.

உள்ளத்தால் ஏங்கிய அகலிகை உடலின்பம் பெறத் தயாராக இருந்தாள், காமுகன் ஆன இந்திரன் பயன்படுத்திக் கொண்டான் என்ற ரீதியில் கு.ப. ராஜகோபாலன் அகலிகை நாடகம் எழுதினார்.

ந. பிச்சமூர்த்தி அகலிகை கதையில் புதிய பொருள் புகுத்தினார். 'உயிர் மகள்' என்பது அவர் எழுதிய கவிதைக் கதை ஆகும். அதற்கு முன்னதாக புதுமைப்பித்தன் எழுதிய 'அகலிகை' கதை முக்கியமாகக் குறிப்பிடத்தக்கது.

நிகழ்ச்சிகளை உரிய முறையில் அழகான நடையில் விவரித்து விட்டு, இறுதிக்கட்டத்தில் புதுமை சேர்த்தார் புதுமைப்பித்தன். கோதமனை உன்னத மனிதனாக மாற்றிவிட்டார் கதையில். தான் வஞ்சிக்கப்பட்டதைப் புரிந்து கொண்ட முனிவர் கொதிக்கவில்லை, கோபம் கொண்டு சாபமிடவில்லை. தன் உணர்ச்சிகளை வென்று விட்ட சான்றோனாகத் திகழ்கிறார். "அப்பா இந்திரா! உலகத்துப் பெண்களை எல்லாம் உன் சகோதரிகளாக மதித்து நடக்கக் கூடாதா?" என்று இந்திரனிடம் கேட்ட முனிவர், அகலிகையிடம் "உன் உணர்வுகள் அந்நேரத்தில் உண்மையை அறிந்து கொள்ள முடியாத அளவுக்கு நீ கல்லாகி விட்டாயா?" என்று வினவுகிறார். இப்படி ஒரு மாமனிதனாக முனிவர் நடந்து கொள்வதோடு கதை முடிந்து விடுகிறது.

பல வருடங்களுக்குப் பிறகு புதுமைப்பித்தன் அகலிகை கதையை மீண்டும் எழுதினார் 'சாப விமோசனம்' என்று. இராமனின் பாதம் பட்டு கல்லிலிருந்து உயிர்த்தெழுந்த அகலிகையின் உணர்வுகளையும் அனுபவங்களையும் நுண்மையாகச் சித்திரிக்கிறது இந்தக் கதை. ஒரு சமயம் சீதை தன் அனுபவங்களை, இராமன் கூறி அவள் தீக்குளிக்க நேர்ந்ததை, அவளிடம் சொல்கிறாள். அதைக் கேட்கவும் அகலிகை கொதிப்படைகிறாள். ஆண்களின் அநீதி அவள் உள்ளத்தைத் துன்புறுத்துகிறது. அமைதியிழந்த அகலிகை, மீண்டும் தீர்த்தயாத்திரை போகலாம் எனும் கணவனின் யோசனையை ஏற்கிறாள். அப்படி கிளம்புவதற்கு முன்னர் அவள் கல்லாகிப் போகிறாள்.

அகலிகை 'மீண்டும் கல்லாகிவிட்டாள்' என்பது இந்த இடத்தில் அவள் உயிர் பிரிந்து அவள் உடல் இயக்கமற்று கல்போல் கனத்து விட்டதையே குறிக்கும் என்று சி.சு. செல்லப்பா விளக்கம் கூறுகிறார்.

ந. பிச்சமூர்த்தியின் 'உயிர்மகள்' அகலிகையை உயிர் என்றும், 'புலன்களின் கதவம் தட்டி, உயிரிலே உணர்ச்சி கூட்டும், இன்பமே வடிவம் கொண்டவன்' இந்திரன் என்றும், 'உண்மையிலே மனமே ஆனோன்' கோதமன் எனவும் உருவகப்படுத்துகிறது. அகலிகை கதையை நயமாக விவரிக்கும் இந் நெடுங்கவிதை, இராமனின் கூற்றாகச் சில விளக்கங்களைத் தருகிறது.

'சிருஷ்டியின் நுண்மை அறியா மனமுனியான நீ புலனைப் பகைவனாய்ப் பார்த்திட்டாய். கற்பென்றும் கடமையென்றும், கனவுகள் கண்டு உயிரை கானல்நீர் சுவைக்க கட்டளை மனத்தாலிட்டாய். உயிரற்ற மனம் ஒன்றுண்டோ? உடலற்ற நிழலொன்றுண்டோ? பெண் இனம் நெஞ்சை இன்றும் மானிடர் அறியவில்லை. பாசம் ஒன்றே கொள்ளும் பெண்ணைப் பாரிலே காணலரிது. கள்ளப் புருஷனென்றோ, மின்னிடும் அணிகள் என்றோ, மயக்கிடும் துணிகளென்றோ, மணத்திடும் மலர்களென்றோ, பெண்மனம் கொள்ளை கொள்ளும்' என்று இராமன் முனிவனுக்கு விளக்குவதாகக் கவிதை வளர்ந்துள்ளது.

"ஞானம் பெற்று வளர்ச்சி பெற்ற முனிவனே! இந்திரனின் வஞ்சகப் போக்கை உணரும் திறன் உனக்கே இல்லை என்றான போது, அப்பாவி அகலிகை ஏமாற்றப்பட்டதற்கு அவளைக் குறை கூறுவானேன்? அவளை நீ தண்டித்தது எப்படி நியாயமாகும்?" என்று ஒருவர் எழுத்தில் சாடியுள்ளார்.

அகலிகை – முனிவன் – இந்திரன் விவகாரத்தை கோவை ஞானி மார்க்சியப் பார்வையில் நோக்கி 'கல்லிகை' என்றொரு குறுங்காவியம் படைத்திருக்கிறார். முற்றிலும் வித்தியாசமான பார்வை அது.

உழைக்காமலே உல்லாசமாகவும் சோம்பேறித் தனமாகவும் பொழுதுபோக்கி வாழ்கிறவர்களின் பிரதிநிதி தான் கௌதமன். உழைப்பவர்களது – உழைப்பு மூலம் சூழ்நிலையில் புதுமைகள் புகுத்துவோரின் – உருவகம் இந்திரன். படைப்புக் காலம் தொட்டு இன்று வரை அடக்கி ஒடுக்கி வைக்கப்பட்டு, உரியமுறையில் கவுரவிக்கப்படாமலும் திருப்தி செய்யப்படாமலும் குமைந்து கொதிக்கிற பெண் இனத்தின் எடுத்துக்காட்டு அகலிகை.

அவள் கணவன் 'உடல்க் கூட்டை உயிர்க்கயிற்றில் கட்டி இழுத்துத் திரியும் எந்திரம்'. அவனோடு அவள் நடத்திய தாம்பத்திய வாழ்க்கை, அவள் போன்ற பத்தினிகள் அனைவரும் அனுபவிக்கும் அவல வாழ்வு. இந்நிலையில் 'ஆசைப் புயல் அடித்தடித்து நிமிர்ந்து கிடந்த தசைத்தீயை, எந்த நாய்க்கு முன்னரும் எடுத்தெறியத் தயாரானாள்' அகலிகை.

'காட்டுச் சிந்தனைப் புதர்களை வெட்டி, வாழ்வின் நேர் பாதையை வகுப்பதற்கே வச்சிரம் எடுத்ததாகச் சொன்ன இந்திரன்' அகலிகை மனசைக் கவர்ந்து, அவள் உடலுக்கும் மிகுந்த சுகானுபவம் தருகிறான்.

இந்திரனை வெற்றி கொள்ள முனிவர் இறைவன் ஒருவனைக்கற்பனையாய் உருவாக்கினார்.அகலிகை மூலம் இதைக் கேட்டறிந்த இந்திரன் ' ஞானத்தாடியை அசிங்கமாய் வளர்த்த முனிவனைக் கண்டவன்' அவளை விட்டு ஓடினான். ஆத்திரப்புயல் கிளப்பிய சொற்புழுதியை சாபம் என்று வீசினான் முனிவன். அவனை அவள் வெறுத்தாள். அவளிடம் இன்பம் அனுபவித்தும், அவளது இதயத்தை உணரத் தவறிவிட்ட 'சுரண்டல் மன்னன்' இந்திரனையும் கரித்துக் கொட்டினாள். இது பன்னெடுங்காலமாக நடந்து வருகிறது.

உலகம் எனதே என உரத்து முழங்கும் ஒருவன். நீயே இறைவன் என்னும் இன்னொருவன். இருவரின் காலடியில் ஓர் அநாதை மனிதன். நெறிபடும் அவன் கண்களில் அகலிகை முகம் தெரிகிறது. உள்ளத்தை உயர்த்த விரும்பியவர் உடலை மதிக்கவில்லை. உடலை மதிக்க வந்தவர் உள்ளத்தைக் கவுரவிக்கவில்லை. இந்த உண்மைகளை வலியுறுத்துகிறது ஞானியின் 'கல்லிகை'.

சுதேஷ்ணா சக்ரவர்த்தியின் வங்கமொழிச் சிறுகதை 'அகலிகை'யும் இந்த உள்ளம் – உடல் விவகாரத்தைத் தான் உட்பொருளாகக் கொண்டுள்ளது. சற்றே வித்தியாசமான கற்பனை.

மகரிஷி கௌதமரின் ஆசிரமத்துக் கருகில் ஓர் ஓரத்தில் கிடக்கிறது ஒரு பாறை. அது தான் சாபம் பெற்ற அகலிகை. அவள் சாப விடுதலை பெறும் நேரம் நெருங்கி விட்டதை அறிந்த இந்திரன் ஒரு மேகமாக வந்து அந்தப் பாறையுடன் பேசுகிறான். கல்லுக்கும் பேசும் சக்தி அளிக்கிறான். இருவரது உரையாடலும், அகலிகை உள்நினைப்பும் சுவாரசியமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன.

"மகரிஷி எப்போதோ உன்னை மன்னித்து விட்டார். நீ ஏமாற்றப்பட்டவள், குற்றவாளி இல்லை என்பதை அவர் உணர்ந்து விட்டார். இராமன் வருகிறான். அவனது பாததூளி பட்டு நீ உன் சுய உருவை அடைவாய். அசாதாரண அழகு மீண்டும் உனதாகும். அகலிகே! சாப விடுதலை பெற்ற பின் நீ எங்கே போவாய்? என்ன செய்வாய்?" – என்று கேட்கிறான் இந்திரன்.

"நான் மகரிஷியின் ஆசிரமத்துக்கே திரும்புவேன்" என்று அகலிகை கூறவும், இனி அவள் சுதந்தரமானவள் என்றும் அவன் தன்னுடன் வரலாம்; அவளுக்காக மற்றொரு மேலான சுவர்க்கத்தையே படைக்க முடியும் என்றும் அவன் ஆசை காட்டுகிறான். இப்படி பேச்சு வளர்கிறது.

"அன்று கௌதமரின் ஆசிரமத்தில் என் தோல்வியை எதிர்கொண்டேன். இந்திரனாக உன் உள்ளத்தை ஈர்க்க இயலவில்லை என்னால். உன்னை அடைய நான் கௌதமராக



வேடம் புனைய நேர்ந்தது. கணவனை நினைத்து நீ எனக்கு உன்னையளித்தாய். இந்தத் தோல்வி என்னை உறுத்திக் கொண்டேயிருக்கிறது. நீ என்னை – எனக்காக விரும்பும்போது அது என் வேதனையைப் போக்கிவிடும். நான் வேண்டுவது உன் உடலழகை மட்டுமில்லை; உன் உள்ளத்தையுந்தான்'' என்கிறான். மறுப்புகள் கூறும் அகலிகைக்கு அவன் பசப்பு மொழிகள் சொல்லி, அவள் மனத்தை மாற்ற முயலுகிறான். நீண்ட பேச்சு அது.

"அகலிகே! இந்திரனின் ஸ்பரிசத்தை ஒருமுறை அனுபவித்தவள், அதைப் பின்னர் ஒருபோதும் மறக்க மாட்டாள். கௌதமர் உருவில் வந்த இந்திரனை நீ தினம் நினைத்துக் கொள்வாய். கணவருடன் உறவில் என்றாவது ஓர் அமைதியான – வழக்கத்துக்கு மாறுபட்ட இன்பம் உனக்குக் கிடைத்தால், உடனே உனக்கு ஐயமெழும், உன்னோடு உறவு கொண்டிருப்பவர் உண்மையில் கௌதமர் தானா அல்லது நானா என்று.."

"இல்லையில்லை. நான் உன்னை முற்றிலும் மறந்து விடுவேன். நீ தான் என் துன்பத்துக்குக் காரணம். என்னுள்ளத்தில் உனக்கு இடமில்லை" என்று அகலிகை உறுதியாகத் தெரிவித்தாள்.

தொலைவில் விசுவாமித்தரர் இராம, லட்சுமணரோடு வருவது தெரிந்ததும் இந்திரன் மறைந்து விட்டான்.

கௌதமர் திரும்பியதும், ஆசிரமத்தில் இருந்த அகலிகையைப் பார்த்துத் திகைத்தார். மகிழ்ந்தார். அவளது அழகு முன்னைவிடக் கூடியிருப்பதாகத் தோன்றியது. அவருடைய மனக்குழப்பத்தை, கதை வெளிப்படுத்துகிறது. தம் உணர்ச்சிகளை வெளியிட, கவர்ச்சி மொழியில் தம் காதலைத் தெரிவிக்க அவருக்குத் தெரியவில்லை. அவர் வேறு விதமாக அவளிடம் தம் அன்பைக் காட்ட முனைந்தார். "அகலிகே! உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள். நீ என்ன கேட்டாலும் தருகிறேன்" என்கிறார்.

அகலிகை அவரை நிமிர்ந்து பார்த்தாள். பிறகு சொன்னாள்: "இந்திரனாக என்னிடம் வாருங்கள்.."

கதை முடிந்தது.

அகலிகையின் கதை இன்னும் பல விதங்களில் பலரால் கற்பனை நயத்தோடு சித்திரிக்கப் பட்டிருக்கலாம். நான் அறிந்தது இவ்வளவு தான். ❍

# தவ்வை தேவி

அமுதம் வேண்டித் தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைந்த பொழுது, முதன் முதலில் காலகூட நஞ்சு வெளிப்பட்டது. அதனைத் தொடர்ந்து பெண்கள் இருவர் வெளிப்பட்டனர். முன் பிறந்தவள் மூத்தவள்; பின் பிறந்தவள் இளையவள் என்பதால் மூதேவி – சீதேவி என அழைக்கப்பட்டனர். இதன் காரணமாக மூத்தவளை 'சேட்டை' என்றும் இளையவளை 'திருமகள்' என்றும் புராணங்கள் கூறுகின்றன.

திருமகளுக்கு முன்பு வெளிப்பட்டதால் சேட்டை எனப்பட்ட தவ்வையை மணந்து கொள்ள எவரும் முன்வரவில்லை என்பர். ஒரு சமயம் துஸாஹா என்ற முனிவர் சேட்டையை மணந்து தன் குடிலுக்கு அழைத்துச் சென்றார். அவளிடமிருந்த ஒருவிதமான தனிச்சாயலையும், பழக்கவழக்கங்களி லிருந்த வித்தியாசத்தையும் முனிவர் உணர்ந்தார். நல்லனவற்றைப் பேசும் போதெல்லாம் அவள் காதுகளைப் பொத்திக் கொள்வாளாம்.

இவளின் குணாதிசயங்களை அறிந்த துஸாஹா சேட்டையான தவ்வையைக் கைவிட எண்ணி மார்க்கண்டேயர் என்ற முனிவரிடம் சென்று யோசனை கேட்டார். சேட்டையைப் புரிந்து கொண்ட மார்க்கண்டேயர், "எங்கெங்கு அமங்கலச் செயல்கள் நடைபெறுகின்றனவோ, எங்கெல்லாம் அமங்கலச் சொற்கள் பேசப்படுகின்றனவோ, அங்கெல்லாம் இவளை அழைத்துப் போகலாம்" என்றார்.

சேட்டையிடம் வந்து துஸாஹா, "கீழுலகமான ரசாதல உலகத்திற்குச் சென்றால் நாம் நிம்மதியாக வாழலாம்; அங்கு சென்று ஏதேனும் ஓர் இடத்தைப் பார்த்து வருகிறேன். அதுவரையில் 'நீ இந்தக் குளத்தருகே காத்திரு' என்று கூறிச்சென்றார்.

சேட்டையும் காத்திருந்தாள். சென்ற கணவன் இனி திரும்பப் போவதில்லை என்று முடிவு செய்தாள். பிறகு திருமாலிடம் சென்று, தான் கணவனால் கைவிடப்பட்ட அபலையென்றும், தனக்குப் பாதுகாப்பான இடமொன்று வேண்டுமென்றும் வேண்டினாள். சேட்டையான தவ்வையின் பிறப்பின் ரகசியத்தை அறிந்த திருமால், "நான் இருக்கும் இடமெல்லாம் நீயும் இருக்கலாம்" என்று கூறினார். இருப்பினும் அலட்சுமியாகிய இவளின் சேர்க்கையிலிருந்து தன்னைக் காத்துக்கொள்ள ருத்ர மந்திரத்தை ஓதினார். அன்று முதல் திருமால் பக்தர்களும், பெண்களும் தவ்வைக்கு வழிபாடு நடத்தத் தொடங்கினர் என்று இலிங்கபுராணம் கூறுகிறது.



தவ்வை (தெள்ளாறு)

சேட்டை, ஆக்கத்திற்கும் அழிவிற்கும் இடைப்பட்ட – செயலற்ற தன்மையைப் பெற்றிருப்பவள். எனவே பாழ்வெளியாள், சூன்யக்காரி என்று சித்திரிக்கப்படுகிறாள். பத்து சக்தியருள் தூமவதி (புகைச்சக்தி)யாகப் போற்றப் பெறுபவள் இவள்; திருமாலின் யோக நித்திரையும் இவளே என்பர். போதாயன க்ருஹ்ய சூத்ரம் இத்தேவியின் வழிபாடு குறித்து விரிவாகக் கூறுகிறது.

தவ்வை முதன் முதலில் ஆதிசக்தியிடந் தோன்றி, இரண்டாம் முறை திருப்பாற்கடலில் பிறந்தவள். முதலில் ஆதிசக்தியிடம் தோன்றிய புராணத்தின்படி இவள் வருணனின் தேவியாக வருணிக்கப்படுகிறாள்.

காளாஞ்சன நிறமும் (கறுப்பு நிறம்) சர்ப்ப ஆபரணமும், கழுதை வாகனமும் உடையவள். கணவன் துப்பிரதன் என்னும் பாதா புத்திருப்பன் என்று அபிதான சிந்தாமணி கூறுகிறது.

அரச மரத்து நிழல், விளாமரத்தடி, விளக்கின் நிழல், ஆசாரமில்லாத வேதியன் நிழல், உண்ட நீர்ச்சடம், (உண்டபின்பு உணவு சிந்திய இடம்) ஆடை தோய்த்த நீர், விளக்குமாற்றின் புழுதி, வெந்த சாம்பல், வேகாக்கரிப் புழுதி, ஆட்டுத்தூசு போன்றவை மூதேவி வாழும் இடங்களாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன.

லட்சுமணன் வனவாசம் மேற்கொண்டிருந்தபோது கங்கை நதியின் கரையில் இருந்த இவள் லட்சுமணனுக்கு உறக்கம் உண்டாக்க முயன்றபோது, லட்சுமணன் இவளை நோக்கி 'வனவாசத்திற்குப் பிறகு வருக' என்று கட்டளையிட்டான். பிறகு அவ்வாறே பதினான்கு ஆண்டுகள் கழித்து இவள் லட்சுமணனிடம் சென்றதாக இராமாயணம் கூறுகிறது.

திருக்குறள் அறத்துப்பாலில் இல்லறவியலைப் பற்றித் திருவள்ளுவர் குறிப்பிடும்போது –

*'அவ்வித்து அழுக்காறு*
*உடையானைச் செய்யவள்*
*தவ்வையைக் காட்டி விடும்'.*

என்கிறார்.

பண்ணுருட்டி தமிழரசன்

பொறாமையைக் குணமாகக் கொண்டவனைத் திருமகள் (செய்யவள்) பொறுத்துக் கொள்ள மனமின்றி, தம் தமக்கையான தவ்வையிடம் அவனைக் காட்டிவிட்டு நீங்கி விடுவாள் என்பது இக்குறளின் கருத்தாகும்.

பொருட்பாலில் அரசியலைப்பற்றிக் கூறும்போது,

*"மடிஉளான் மாமுகடி*
*என்ப மடிஇலான்*
*தாளுளாள் தாமரையி னாள்"*

என்கிறார் வள்ளுவர்.

கரிய மூதேவியானவள் ஒருவனது சோம்பலில் தங்குவாள்; திருமகள் சோம்பலில்லாதவனுடைய முயற்சியில் தங்குவாள் என்ற கருத்தை இக்குறள் வெளிப்படுத்துகிறது.

இன்பத்துப் பாலில் உறுப்பியலைக் கூறுகையில்

*"அகடு ஆரார் அல்லல்*
*உழப்பர் சூதென்னும்*
*முகடியான் மூடப்பட் டார்.'*

சூதாட்ட மென்னும் மூதேவியால் ஆட்கொள்ளப் பட்டவர் வயிறார உண்ணமாட்டார். அதனால் துன்பம் மேலிட்டு வருந்துவர் என்கிற பொருள் புதைந்த குறள் இது. இதைப் போன்றே *"மற்றோரம் சொன்னார் மனையில் மூதேவி சென்றிருந்து வாழ்வாள்"* என்கிறார் ஔவையார்.

சோர மங்கையரிடத்தில், பொய் சொல்பவர் வாயினில், சூதகப் பெண்கள் நிழலில், சூளையில், சூழ்தலுறு புகையில், நீசர் நிழலில், காமுகரின் உறக்கத்தில், உறக்கமில்லாதவர்களின் முகத்தில், சினம் கொண்டோர் அவையினில், ஈரமில்லாத களர் நிலத்தில், இரவுப் பொழுதின் தயிரில், இழிந்த மதுவான கள்ளில், தினம் அழுக்கடையும் மனையில், வாரிய முறத்தூளில், துடைப்பத்தால் பெருக்கிய தூளில் மூதேவியானவள் மாறாதிருப்பாள் என்று குருபாத தாசர், குமரேச சதகத்தில் கூறியுள்ளார்.

சேட்டா தேவியின் உருவ அமைப்பு சம்ஸ்கிருத நூல்களில் கீழ்க்காணுமாறு வர்ணனை செய்யப்பட்டுள்ளது.

இரண்டுகைகள், சதைப்பற்றான பெரிய கன்னங்கள், மார்பகங்கள், பருத்த வயிறு, தடித்த தொடை, இரண்டு கால்கள், (தொங்கிய நிலையில் காட்டப்பட்டிருக்கும்) முதலியன கொண்டு கரியநிறமாக விளங்குபவள் இவள். தலையில் கொண்டையிட்டு, நெற்றியில் திலகம் காணப்படும். வலக்கரத்தில் நீலோற்பல மலரேந்தி இருக்க, இடக்கரம் தொடைமீது காணப்படும். தேவியின் வலப்புறத்தில் உள்ள 'நந்திமுகன்' என்னும் மாந்தன், வலக்கரத்தில் தண்டம் ஏந்தியும், இடக்கரத்தில் கயிற்றினைப் பற்றியும் காணப்படுவான். (இவ்வுருவத்தைக் கழுதைத் தலையுடையவன் என்றும், வலக்கரத்தில் உள்ள ஆயுதம் துடைப்பம் என்றும் சில ஆய்வாளர்கள் கூறுவர்) சேட்டை இடப்புறம் உள்ள 'மாந்தி' சிறிய உருவினளாகவும், இளமை ததும்புபவளாகவும், சிவந்த ஆடையினையும் அழகிய அணிகலன்களையும் அணிந்து, தலையில் கரண்ட மகுடம் கொண்டு, இடக்காலைத் தொங்கவிட்டு, வலக்காலை மடித்து அமர்ந்திருப்பாள். இவளைச் சேட்டா தேவியின் மகள் என்று ஆகமநூல்கள் கூறுகின்றன. (இவளைச் சேட்டாதேவியின் தங்கையான திருமகள் (இலட்சுமி) என்றும் சில ஆய்வாளர்கள் கூறுவர்.)

இலக்கியங்களின் அடிப்படையிலும், புராணக் கூற்றுகளுக்கும் ஒப்பவே தவ்வை எனும் சேட்டாதேவியின் உருவம் படைக்கப்பட்டுள்ளதைக் கோயில் களிலும், நீர்நிலைகளின் அருகிலும் காண்கிறோம். சேட்டாதேவி என்கிற தமிழ்ப்பெயரே சம்ஸ்கிருதத்தின் வாயிலாக 'ஜேஷ்டா தேவி' என்று வழங்கலாயிற்று. சிவன் கோயில்களில் (பல்லவர் காலம் முதல் பெரும்பாலும் சோழர் காலக் கோயில் வரை) பரிவாரத் தெய்வமாக விளங்கும் இவளின் புடைப்புச் சிற்பங்களில் கழுதை – வாகனமாகவும், காக்கை கொடியாகவும் (வேலைப்பாடமைந்த தண்டின் மீது காக்கை அமர்ந்திருப்பது போலவும்) காட்டப்பட்டுள்ளன. துடைப்பமும், முறமும் இவளின் ஆயுதங்களாகப் படைக்கப்பட்டுள்ளன.

புராணங்கள் – இலக்கியங்கள் வாயிலாகப் பார்ப்போமானால் சில வேறுபாடுகள் இருப்பினும் 'தவ்வை' என்பவள்தான் சேட்டாதேவி, சேட்டை, ஜேஷ்டா, மாமுகடி, மேடி, மேடா, மூத்தவள், மூதேவி என்பதில் ஐயமில்லை.

எனவே – முகத்தில் அழகு மிளிர அழகான ஆடை அணிகலன்களைக் கொண்டு, கைகளில் கவர்ச்சியான போர்க் கருவிகளைத் தாங்கி, மக்களுக்கு அருள் செய்வது போலவும், அருவருப்பில்லாத உயிரினங்களை வாகனங்களாக்கி, கம்பீரமான – கருணை வடிவான தோற்றங்களுடன் விளங்கும் வகையில் படைக்கப்பட்டுள்ள பெண் தெய்வங்களின் வரிசையில்... முற்றிலும் மாறுபட்ட கோலத்தில் அமைந்துள்ள சேட்டை தெய்வமானவள் தற்போது வணக்கத்திற்குரிய பெண் தெய்வமாக இல்லாமல் போனது ஆச்சரியமில்லைதான். என்றாலும் மனித வாழ்வியல் அடிப்படையில் ஆய்வோமானால் நீதிக் கருத்துகளைக்கூறி, மனித குலத்தை வாழ்விக்கும் ஓர் உன்னதத் தாய்த்தெய்வமாகத் தவ்வை தென்படுவதைக் காணலாம்.

ஆதி சக்தியிடம் தோன்றிய புராணத்தின் படி வருணனின் (மழைக்கடவுள்) தேவியாக இவள் கூறப்படுவதால், நீர்நிலைக்குத் தெய்வமாகப் போற்றப் பெறுகிறாள். எனவே வறட்சி ஏற்படாதிருக்க நீர்நிலைகள் உள்ள இடங்களில் இவளின் உருவச்சிலையை வைத்து, மக்கள் வணங்கலாயினர்.

நீர் நிலைகள் உள்ள இடங்களில் செய்யும் விவசாயத்திற்குக் 'களத்து மேடு' என்ற ஓர் இடம் இருக்கும். அக்களத்து மேட்டில் தானியங்களைப் பயன்படுத்திய மக்கள் நாளடைவில் அவற்றையே தவ்வையின் ஆயுதங்களாக்கினர். கதிரறுத்துப் பொங்கலிடும் தைமாதப் பொங்கல் திருநாளில் புதிய முறத்தை வாங்கிப்

பூசி மெழுகிப் படையலிடுவது, இன்றும் மரபாக இருப்பதே இதற்குச் சான்றாகும்.

காகம் கரையும் முன்னர் உறக்கம் தவிர்த்து உழைப்பதற்குச் செல்ல வேண்டும் என்கிற சிந்தனையில் காக்கையைத் தவ்வைக்குக் கொடி யாக்கினர். சுமைகளைத் தாங்கும் உயிரினம் கழுதை என்பதால், அதனைக் குறிப்பீடு செய்வதற்காக.. இவள் சுமைகளையெல்லாம் தாங்குபவள் – மனித ஒழுங்கீனத்தையெல்லாம் தான் பெற்றுக்கொண்டு சுமப்பவள், என்கிற நம்பிக்கையின் அடிப்படையில் கழுதையை வாகனமாக்கினர்.

பிரபஞ்ச உற்பவத்தையும், வாழ்க்கை முறைகளையும் கருவகப்படுத்தும் – உருவகப்படுத்தும் – தாயாக இவளைப் போற்றுவதால் இவளுடைய உருவத்தில் வயிற்றைப் புடைக்கச் செய்தனர். கடின உழைப்பைக் கொண்டவர் உருவம் கறுத்திருக்கும் என்பதற்குச் சான்றாக,


ஜேஷ்டாதேவி (உறையூர்)

இவள் மேனிக்குக் கரிய நிறத்தைக் கொடுத்தனர். மொத்தத்தில் மக்கள், வாழ்க்கையில் கடைப்பிடிக்கவேண்டிய ஒழுக்கங்களின் கட்டாயத்திற்காக இவளைப் படைத்தனர்.

இப்படியெல்லாம் சிறப்புப் பெற்று சிறந்த வழிபாட்டிற்குரிய தெய்வமாகப் பல்லவர் காலம் முதல் போற்றப்பட்டு வந்தாலும் – தவ்வை தேவியின் வழிபாடு குன்றிய இந்த நாளிலும் பல கோயில்களில் இந்தப் பெண் தெய்வம் இணைந்து நிலைத்து நிற்பது சிந்திக்கத்தக்கதாகும். ○

# முன்பு கேட்ட குரல்!

– கவிஞர் மரு.பரமகுரு



*அன்பு வாசலைத் திறந்துவிடு,*
*ஆண்டவன் வாசல் திறந்துவிடும்;*
*இன்பக் கேணி சுரந்துவிடும்;*
*யாவருக் கும்நலம் நிறைந்து விடும்!*

*மனித குலத்தின் வரலாற்றை*
*மண்ணில் தொடர்ந்தே எழுதிவரும்*
*புனித எழுது கோல்-அன்பு!*
*புரிந்தால் வருமோ வீண்வம்பு?*

*சாதி மதஇன பேதங்கள்*
*சரித்திரம் தந்த தொழுநோய்கள்!*
*நீதி அன்பினைச் சாராமல்*
*நேர்ந்து விட்ட பெரும்பிழைகள்!*

*காந்தி புத்தன் இயேசு நபி*
*காட்டிச் சென்ற அன்புநெறி*
*மாந்த ருலகம் மறந்ததனால்*
*மண்ணில் கலகம் நிறைந்ததையா!*

*அன்பே உலகினுக் காதாரம்;*
*அஃதிலை யெனிலோ சேதாரம்!*
*என்பும் பிறருக் குரியவரால்*
*இருக்கிற தின்னும் இவ்வுலகம்!*

*காலம் தோறும் மனிதகுலம்*
*காட்சி மாறி வளர்கிறது;*
*கோலம் புறத்தே கொள்கிறது;*
*குறிக்கோள் இன்றித் தளர்கிறது!*

*அன்பைக் குறிக்கோ ளாக்கிவிடு;*
*அத்தனை பேதமும் போக்கிவிடும்!*
*முன்புநாம் கேட்டதும் இக்குரல்தான்!*
*முளைவத் தெழுதிய தென்விரல்தான்!*

# ஸ்ரீ ராதாகிருஷ்ண
# சந்திர ஆலய



ஸ்ரீல பிரபுபாதா



ஸ்ரீ ராமகிருஷ்ண சந்திர ஆலய நுழைவாயில்



ஸ்ரீராம் மது பண்டிட் தாஸா

1988 பெங்களூர். விஸ்தாரமாக விரிந்துள்ள இராஜாஜி நகர். வேகமாக
வளர்ந்து வரும் இந்நகரில் ஏழு ஏக்கர் இடம் மட்டும் மொட்டையாக
நிற்கிறது. அதற்குக் காரணம் அந்த இடம் முழுதும் பாறை
சுற்றிலும் குடியிருப்புகள் அதிகமாகிக் கொண்டேயிருந்தாலும்
இந்த இடம் மட்டும் வெறுமையாகக் காட்சியளிக்கிறது

1997. அதே வெற்றுப் பாறை, காண்பவர் வியக்கி
அளவிற்கு கவின் மிகு காட்சி தருகிறது. இதற்குக்
காரணம் அந்தப் பாறைப் பரப்பில் எழுந்துள்ள
ஸ்ரீராதாகிருஷ்ண சந்திர ஆலயம்.

நாள்தோறும் 7,000 முதல் 8,000 ஆயிரம் பேர் வரை
இந்த ஆலயத்திற்கு இன்று வருகை புரிகின்றனர். விடுமுறை
நாள்களில் இங்கே வருகை புரிபவர் களின் எண்ணிக்கை பத்தாயிரத்தைத்
தாண்டுகிறது. சென்ற கிருஷ்ண ஜெயந்தி நாளன்று ஒரு லட்சத்திற்
கும் மேற்பட்டவர்கள் இந்த ஆலயத்திற்கு வந்து தரிசித்திருக்கிறார்கள்

பொட்டல் காடு—பொக்கிஷமாக மாறிய கதைக்கு மூலாதாரம் – அகில உலக
கிருஷ்ண பக்தி இயக்கம் (International Society of Krishna Consciousness
சுருக்கமாக 'இஸ்கான்' (ISKCON) என்பதை மறுக்க முடியாது



மண்டபத்தின் மேற்புறத்தில் உள்ள 1008 பல்புகள்
கொண்ட, தங்க முலாமிட்ட சர விளக்குக் கொத்து

ஸ்ரீ ராதா கிருஷ்ண சந்திர ஆலயத்தின் முழு தோற்றம்

ஸ்ரீ ராதா கிருஷ்ண சந்திரா

கிருஷ்ணா இயக்கம்', 'ஹரே ஹரே கிருஷ்ணா கோஷ்டியினர் ...ன போன்ற பல்வேறு செல்லப் ...ர்களால் அறியப்படும் இந்த ...பெரும் பக்தி இயக்கக் கழகம், ...று உலகெங்கும் பல கோடி ...களைக் கிருஷ்ண பக்தர்களாய் ...க்கியிருக்கிறதென்றால், அதன் ...டித்தளம் ஸ்ரீல பிரபுபாதா.

... சைதன்ய மகாப் பிரபுவினின்று தொடங்கிய தூய பக்தி நெறி, ...ம்பிரதாயமான கௌடிய ...ம்பிரதாயத்தின் சீடப் பரம்பரையில் தோன்றிய ஆசாரியரான ஸ்ரீல பிரபுபாதா 1896ஆம் ஆண்டு இந்தியாவில் கல்கத்தா நகரில் பிறந்தவர்.

1922இல் தமது குருவான ஸ்ரீல பக்தி சித்தாந்த' சரஸ்வதி கோஸ்வாமியைக் கல்கத்தா நகரில் சந்தித்தார்.

பிரபலமத ஞானியும், 64 (கௌடிய மடம் என்றறியப்படும்) வைதிக நிறுவனங்களை நிறுவியவருமான பக்தி சித்தாந்த சரஸ்வதிக்கு, கற்றறிந்த இளைஞர் ஸ்ரீல பிரபபுபாதா மிகவும் பிரியமானவரானார்.

1933இல் (பதினொரு ஆண்டுகளுக்குப் பிறகு) அலகாபாத் நகரில் குருவின் தீட்சை பெற்ற சீடரானார் ஸ்ரீல பிரபுபாதா.

1959ஆம் வருடம் துறவு நிலையை (சந்நியாசம்) ஏற்ற ஸ்ரீல பிரபுபாதா, ராதா தாமோதர் ஆலயத்தில்தான் தமது வாழ்வின் பிரம்மாண்ட சாதனையான ஸ்ரீமத் பாகவதத்தின் கருத்துரை நூலை எழுதத்தொடங்கினார். 18,000 பதங்கள் கொண்ட சம்ஸ்கிருத நூல் மொழி பெயர்ப்பும், பொருளுரைகளும் அடங்கியதாக பல பாகங்களாக அந்நூல் எழுதப்பட்டது. ஸ்ரீமத் பாகவதத்தின் முதல் மூன்று பாகங்களை வெளியிட்ட பிறகு, தமது குருநாதரின் நோக்கத்தைப் பூர்த்தி செய்வதற்காக அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு சென்றார், ஸ்ரீல பிரபுபாதா.



ஸ்ரீல பிரபு பாதாவின் சிலை வடிவம்

1965இல் சரக்குக் கப்பல் ஒன்றில் இலவசப் பிரயாணம் செய்து ஸ்ரீல பிரபுபாதா நியூயார்க் நகரை அடைந்தபோது, தன்னந்தனியாகவும், வெறும் நாற்பது ரூபாய் மட்டுமே செலவுக்காய் உடையவராகவும் இருந்தார்.

1966 ஜுலையில் அகில உலக கிருஷ்ணபக்திக் கழகத்தை (ISKCON) நிறுவும் வரை அவர் பட்ட சிரமங்கள் சொல்லில் அடங்கா.

'ஜாதி, மத, இன பேதமின்றி இவ்வுலகின் மனிதர்கள் எல்லாரையும் கிருஷ்ண பக்தி எனும் ஒரு குடைக்கீழ் கொணர்வதில் வெற்றி கொண்டு மகத்தான சாதனை புரிந்து 1977ஆம் ஆண்டு நவம்பர் 14ஆம் நாள் பிருந்தாவனத்தில் (மதுரா) மகாசமாதி அடைந்த இந்தத்தூய கிருஷ்ண பக்தரின் விருப்பத்திற்கேற்ப "இஸ்கான்' வளர்ந்து கொண்டே வருகிறது.

"எமது கிருஷ்ண பக்தி இயக்கம் நியாயமானதும், சரித்திரப் பூர்வமாக அதிகாரப்படுத்தப்பட்டதும், இயற்கை யானதும், உன்னதமானதுமாகும். கொஞ்சங் கொஞ்சமாக அகில உலகிலும் மிகவும் பிரசித்தமாக ஆகிக் கொண்டு வருகிறது. இந்த இயக்கம் — முக்கியமாக இளைய தலைமுறையிடையே — பழைய தலைமுறையினரும் கூட — மேன்மேலும் இதில் கருத்துடையவர்களாக ஆகிக் கொண்டு வருகின்றனர். வயதான பெரியோரும் இவ்வியக்கத்தினால் மிகவும் கவரப்பட்டு வருகின்றனர். எனது சீடர்களின் தந்தையரும், பிதாமகரும் என எண்ணற்றோர் எமது அகில உலக கிருஷ்ண பக்திக் கழகத்தின் ஆயுள் உறுப்பினராக இணைவதன் மூலம் தங்கள் நல்லெண்ணத்தையும், ஆதரவையும் இந்தப் பெரும் இயக்கத்திற்கு அளித்து வருகின்றனர்" என்றார் ஸ்ரீல பிரபுபாதா.

உண்மை. இன்று பெங்களூரின் பாறை மீது விஸ்வரூபமெடுத்துள்ள ஸ்ரீ ராதா கிருஷ்ண சந்திர ஆலயம் நகரின் 24,000 ஆயுள் உறுப்பினர்களின் பொருளுதவியுடன் வளர்ந்து கொண்டே வருகிறது.

1988ஆம் ஆண்டு இந்த இடத்தைக் கொடுத்து உதவியவர் அப்போதைய கர்நாடக முதல்வர் திரு. ராமகிருஷ்ண ஹெக்டே.

1990ஆம் ஆண்டு கட்டடக் கலை வல்லுநர்களால் வடிவமைக்கப்பட்டு ஆலயக் கட்டுமானப் பணி தொடங்கியது.

இன்று — ஆலயத்தின் மேற் புறத்திற்குச் செல்ல சீரான சாலை. திரும்பி வர தனிப்பாதை. கிரானைட் கற்கள் பளபளக்க படிகளைத் தாண்டினால் ராஜ கோபுரம். கோபுரத்தைக் கடந்ததும் 65 அடி உயர துவஜஸ்தம்பம். துவஜஸ்தம்பம் தங்க முலாமிட்டு (24 காரட்) முழுவதுமாக ஜவலிக்கிறது. பகவான் பெயரை 108 முறை ஜபித்தால் நேரே வைகுண்டம் செல்லலாம் என்பது நடைமுறை ரகசியம் என்பதால் 108 கற்களை வடிவமைத்து வைகுண்ட வாசலுக்கு வழி அமைத்திருக்கிறார்கள்.

அதை அடுத்து பிரஹலாத நரசிம்மர். அமெரிக்க, ஐரோப்பிய, இத்தாலிய நாட்டு கிரானைட்கள் சுத்தத்தைப் பிரதிபலிக் கின்றன. பூஜைக்கான நேரம் நேர்த்தி யாக எழுதப்பட்டிருக்கிறது. தமிழகச் சிற்பிகளின் கை வண்ணத்தில் அடுத்துக் காட்சி தருபவர் ஸ்ரீனிவாசா கோவிந்தன். மூலவர் சந்நிதிக்குள் ஒலிக்கும் அர்ச்சகரின் குரல் ஹால் முழுக்கப் பிரதிபலிக்கும் ஸ்பீக்கர் வசதி. சுப நிகழ்ச்சிகள் நடத்த இரு பெரிய அறைகள். கோயில் முழுக்க ஸ்ரீல பிரபுபாதா வின் —'ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே ஹரே ராம ஹரே ராம ஹரே ஹரே' கீதம் முழங்குகிறது.





அடுத்தது மகா மண்டபம், 10,000 சதுர அடி பரப்பளவில். இடமிருந்து வலமாக ஸ்ரீசைதன்ய மகாபிரபு, ஸ்ரீராதா கிருஷ்ண சந்திரர், ஸ்ரீ கிருஷ்ண பலராமர் மூலவர்களாக வீற்றிருக்கின்றனர். ஒரே நேரத்தில் நடக்கும் இவர்களின் ஆராதனையை இந்த மகா மண்டபத்தில் 2250 பேர் பார்க்கலாம். மகா மண்டபத்தில் மேற்புறத்தில் உள்ளே 1008 பல்புகள் கொண்ட தங்க முலாம் பூசப்பட்ட சர விளக்குக் கொத்து. கீழே கூட்டம் அதிகமானால் மேலிருந்து பார்க்க இரண்டு பால்கனி அமைப்புகள். மூல விக்கிரங்களுக்கு சற்றே தள்ளி ஸ்ரீல பிரபுபாதாவின் சிலை உருவம்.


ஸ்ரீனிவாச கோவிந்தன

மதங்கள் இங்கே பொலிவுபெற்று நல்ல மனிதர்களை உருவாக்கும் இடமாக 31.5.1997 அன்று முன்னாள் குடியரசுத் தலைவர் திரு.எஸ்.டி. சர்மா அவர்களால் திறந்து வைக்கப்பட்டுள்ளது இவ்வாலயம். பகவத் கீதை, பாகவதம், உபநிஷத்களைப் போதிக்கிற இடமாக மலர்ந்துள்ளது.

இவற்றுக்கெல்லாம் சிகரம் வைத்தாற் போல் அமைந்துள்ள இடம், 'மல்டி மீடியா அனிமோட்ரானிக்ஸ்' திரையரங்கம். முழுக்க முழுக்க அமெரிக்கத் தொழில் நுட்பத்துடன் 18 புரொஜக்டர்கள் டால்பி சிஸ்டத்தில் ஓர் அமைப்பு. 2 கோடி ரூபாய் செலவிடப்பட்டு புராணத்தை மக்கள் மனத்தில் பதிய வைக்க 40 நிமிட திரைப்படம் ஒன்று தயாரிக்கப்பட்டுள்ளது. வெள்ளித் திரையில் திரைப்படம் பிரதிபலிக்க – புகை மூட்ட அமைப்புகளுக்கிடையே பொம்மை உருவமும் கம்ப்யூட்டர் ஆணைகளுக்குட்பட்டு காட்சியளிக்கிறது. பிரமிப்பூட்டுகிறது. குளுகுளு வசதி கொண்ட இந்தத் திரையரங்கத்தில் 418 பேர் ஒரே நேரத்தில் அமர்ந்து படம் பாக்கலாம். பள்ளி மாணவர்களை இங்கே அழைத்து வந்து படம் காட்டி, பாடம் புகட்ட ஏற்பாடுகள் நடக்கின்றன.

ஆலயத்திற்கு வருகிற அத்தனை அன்பர்களுக்கும் பிரசாதங்கள்.



இஸ்கான் அமைப்பின் 60 அன்பர்கள் முழு நேரமாக இங்கே தங்களை அர்ப்பணித்துக் கொண்டு சேவைபுரிகின்றனர். ஆலயத்தின் வெளியே இருந்து தொண்டாற்றுபவர்கள் 1000க்கும் மேற்பட்டவர்களாவர்.

"இதுவரை 27 கோடி ரூபாய் இந்த ஆலயத்திற்காகச் செலவிடப்பட்டுள்ளது. இன்னும் 4 கோடி ரூபாய் தேவை. விரைவில் அதுவும் பூர்த்தியாகி விடும். பொலிவு மேலும் கூடும்." என்கிறார் பெங்களூரின் பெருமைக்கும், இந்த ஆலயப் பொலிவிற்கும் காரணமாக விளங்கும் தனி மனிதர், ஸ்ரீராம் மது பண்டிட் தாஸா. பெங்களூர் சிட்டி சென்டர் ரோட்டரி கிளப்பின் மூலம் '1997ஆம் ஆண்டின் சிறந்த மனிதர்' என்று கௌரவிக்கப்பட்டவர்.

நாகர் கோவில் – தக்கலைக்கு அருகில் பிறந்தவர். பம்பாயில் ஐ.ஐ.டி. படிப்பை முடித்து – கட்டடக் கலை நிபுணராகத் தன்னை வளர்த்துக் கொண்ட போது ஸ்ரீல பிரபுபாதாவின் நூல்களைப் படித்து – இந்து மதத்தின் அறிவியல் நுணுக்கங்களை உணர்ந்து – ஆத்மாவின் அமைதிக்கு அகில உலக கிருஷ்ண பக்தி இயக்கத்தில் தன்னை ஆட்படுத்திக் கொண்டவர். சுறுசுறுப்பான இளைஞர்.

இந்தத் தனி மனிதரின் தன்னிகரில்லாத முயற்சி பெங்களூரின் அழகுக்கு மேலும் புகழ் சேர்க்கிறது. ஸ்ரீராதாகிருஷ்ண சந்திர ஆலயம் 'ஸர்வ லோக மகேஸ்வரம்' உலகிற்கு இவ்வாலயத்தின் மூலம் விரிந்து கொண்டே செல்கிறது.


ஆலயத்திற்கு வருகிற அத்தனை அன்பர்களுக்கும் பிரசாதம்

– நாகராஜகுமார்

லே-அவுட்: ஜீ.கே.மூர்த்தி

போட்டோ : யோகா



கணபதிராமன்

(கட்டுரை 147ஆம் பக்கத்தில்)

வண்ண ஓவியம் – ஸூபா



கோபியரின் மாதுர்ய பக்தி ஓவியர் : ஸி.ஏ. இராமச்சந்திரன்

# "கோபியரின் மாதுர்ய பக்தி"

மது என்பது போஷணையாயும், மருந்தாகவுமுள்ள இனிய தேனாகும். தேனைப்போல் மதுரமான உருவ மாயிருக்கலாம். மதுரமான பேச்சாகவு மிருக்கலாம். மனம் மகிழ வைக்கும் மதுரமான உயர்குணமாயுமிருக்கலாம். எல்லா மதுரங்களும் நிறைந்தவனே பகவான் கோவிந்தன். அவன் கமலக்கண்கள் அதிமதுரமாய்க் கனிவுடன் கடாட்சிக்க வல்லவை என்பதால்' மதுரம் நயனம் என்பர். அவன் திருமுக தரிசனமே மதுரமாய்த் தெவிட்டா ஆனந்தமளிக்க வல்லதால் 'மதுரம் வதனம்' என்பர். அவனது திருவடிகளோ மதுரத்திலும் மதுர மானவையாதலின் பக்த கோபியர் கண்ணனின் திருவடிகளைப் பற்றிப் பேரின்பத்தில் ஆழ்ந்து விடுகின்றனர். மதுர பாவனையே மாதுர்யம் எனப் படுவது.

மாதுர்யம் முகுந்தனிடம் மட்டும் இருப்பதன்று. கோபியரிடமும் அது புனிதமான மாதுர்ய பக்தியா யமைந்துள்ளது. மாதுர்யமே உருவான ஆனந்த சொருபியான கோபாலனுக்குக் கோபியரின் உயர்ந்த மாதுர்ய பக்தி, அவன் திருமேனிக்கு மேலும் சோபையூட்டி நம்மைப் பரவசப்படுத்துகிறது.

யசோதை மைந்தனான நந்தனன், பசுக்களை மேய்க்கப் போய்க் கொண்டிருக்கும்போது, மரங்களின் மறைவிலிருந்து வெளிப்பட்டு, கண்ணனின் கரம் பற்றி இழுத்து அவனை ஒரு பாறையில் அமர்த்தி, இருவர் அவன் பாதகமலங்களைப் பற்றிக் கொண்டனர். அதனால் அவன் ஒய்யாரமாக அமரவில்லை. கேசவனின் திருவடிகள் அவனிடமில்லை. அவனடியார்கள் வசத்திலல்லவா அவை உள்ளன!

'ஹிதப்ரியா' என்பவள் மாதவனின் தோளில் கை வைத்து இடக்கரம் நீட்டிச் சொல்கிறாள்:

"தாமோதரா! அங்கே பார். ஆயர்பாடிச் சிறுவர்கள் உன் வரவுக்காகக் காத்திருக்கிறார்கள். பசுக்களும் உன்னையே பார்க்கின்றன. கன்று உன்னை நோக்கி ஓடி வருகிறது. எல்லா உயிர்களும் உன்னை நேசிக்கின்றன. நாங்களும் உன்னை எங்கள் உயிருக்கும் மேலாக நேசிக்கின்றோம்".

"கோபாலா! கோபர்களுடன் போகாதே. அவர்கள் உன்னை வெயிலில் கால்கட , கல்லிலும், முள்ளிலும், மேட்டிலும் அலைக்கழித்து விடுவர். இங்கு பார், உனக்காகவே, உன் திருவுள்ளத்திற்கேற்ப இதமான இனிய சூழ்நிலையுள்ளது. கோபியர் உன்னிடம் அத்யந்த பக்தி, பிரேமை கொண்டு, உன் பிரீதிக்காகவே தங்களது தூய இதயங்களை உனக்கே அர்ப்பணிக்க, இல்லத்து வேலைகளையும் விட்டு, விரைந்து உன்னைக் கண்டு ஆனந்திக்க யமுனைக் கரையில் வந்து கூடியுள்ளனர். பார்' என்றாள்.

தனக்கு முன்பே தன் கரத்திலுள்ள கனியைப் 'பலப்ரதா' தந்துவிடுவாளோ என்று எண்ணியவாறே, 'கமலப்ரியா' மலர்ந்த அழகான கமலத்தைக் கரத்திலேந்தி மூச்சிரைக்க ஓடிவந்து, கண்ணனிடம் மலரைநீட்டுகிறாள். "கமலக் கண்ணா! என்னுயிர்த் துடிப்புள்ள மென்மையான இதயத்தையே உனக்கு என் அன்பின் காணிக்கையாகச் சமர்ப்பிக்கின்றேன். மணிவண்ணா! இதைத் தவிர உயர்ந்ததொரு பொருள் வேறுண்டோ?" என்று சொல்கிறாள் கமலப்ரியை. பத்மநாபனுக்கு கமலப்ரியை ஆத்ம நிக்ஷேபணத்தையே செய்து காட்டி விடுகின்றாளன்றோ?

பலப்ரதா "கிருஷ்ணா! நீயே மார்க்கமாயும், நேயனாகவும், பசுக்களைப் புல்வெளிக்கு நயமாக அழைத்துச் செல்வதால், உன்னைவிட மேலான உயர்நலமுடைய அநயன் வேறுண்டோ? அதனால்தான் நாங்கள் எங்கள் கண்களைப் போல உன்னைக் கவனிக்கின்றோம்" என்று சொல்லி, கனிந்த கனியொன்றை, அதாவது, பக்குவ நிலையுடைய தன் கனிந்த பக்தி உள்ளத்தைப் பேரன்போடு நவநீத கிருஷ்ணனுக்குச் சமர்ப்பிக்கின்றாள்.

அப்படி அர்ப்பணிக்கும்போது "பூரணா! நிறைந்த சுவையுடைய, ஆனந்த ரஸமுடைய இக்கனியை பக்தியுடன் தருகிறேன். ஏற்றுச் சுவைத்து மகிழ்வாய்" என்றாள். பகவானும் தன்னுடைய கீதாவாக்கியத்தில்,

பத்ரம், புஷ்பம், பலம், தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி|
ததஹம் பக்தியுபஹ்ருதமச்னாமி ப்ரியாதாத்மனஹ||

"யார் எனக்கு பக்தி சிரத்தையுடன் ஓர் இலையோ, பூவோ, கனியோ, நீரோ தந்துபசரிக்கிறாரோ, பக்தியோடு அர்ப்பணிக்கும் அதனை, அது எதுவாயினும் ப்ரீதியோடு ஏற்கிறேன்" என்கிறானல்லவா?

'பாதபங்கஜா' வாசுதேவனின் வலத் திருவடியைப் பற்றி, "கண்ணா! உலகை அளக்க உன் கால் நீண்டது பெரிய விஷயமன்று. உன் அடியாரின் அன்பிற்காக நீளுவதுதான் அதிசயம். உன் பாதபங்கஜத்தைப் பற்றி அதைத் தொட்டு என் கண்களில் ஒற்றிக் கொள்ள ஆசைப்பட்டு, உன் எதிரில் அமர்ந்த அக்கணமே எனக்கருள உன் கால் நீண்டு என் பக்கம் வந்துவிட்டதே!" என்று சொல்லி அதிசயானந்தமடைகிறாள். பாத பங்கஜை, தேவர்களுக்கெல்லாம் அரிதான பகவானின் பாதார விந்தத்தைத்



தொட்டுவிட்டாளல்லவா? அதன் சௌசில்யாநுக்கிரகத்தையும், சுலபமாக அடையும்படியாகத் தன்பாலவன் திருவடி நீண்ட சௌலப்யாதிசயத்தையும் கண்டு வியந்து, கிருஷ்ண பரமாத்மாவின் பாதகமலத்தை இதமாகத் தொடுகிறாள். உன்னதமான பாதங்கள் கல்லிலும் முள்ளிலும் நடந்து புண்ணாகி விட்டதே என வருந்தித் தன் மென்விரல்களால் அப்புண்ணிற்கு மருந்து எனத் திருவடியை வருடுகிறாள்.

'பாதோபாஸ்யா' கல் குத்திக் கன்றிப்போன பகவான் கண்ணனின் பாதாரவிந்தத்தை' பாதபங்கஜா பற்றித் தன் மென்விரல்களால் தடவிக் கொடுப்பதைப் பார்த்ததும், கண்ணனின் இடப்பாதத்தைப் பற்றித் தன் மார்பில் பதிக்கிறாள்.

இராமாவதாரத்தில் கானகத்தில் சக்கரவர்த்தித் திருமகனான ஸ்ரீராமன் பாதுகைகளின்றி நடந்தமையால் பாதங்கள் கன்றிப் போனதையும் இவள் சூக்குமமாக உணர்ந்தாளோ?

பாதோபாஸ்யா சொல்கிறாள், "சகடமுதைத்துச் சகடாசுரனை வதைத்த திருவடி நொந்திருக்குமோ? கண்ணா! இதைவிட மென்மையான இடம் உன் திருவடிக்கு வேறு உளதோ!" எனச்சொல்லி மெய் மறக்கிறாள். திருவடியை மார்பில் அணைத்துக் கொள்கிறாள். இந்தக் கருத்தை ஸ்ரீமத் பாகவத சுலோகம் 10-31-19 விவரிக்கிறது.

"யத்தே ஸுஜாத சரணம் புருஹம் ஸ்தனேஷு
பீதா: சனை: ப்ரிய ததீமஹி கர்கசேஷு
தேனாடவீ, மடஸி ததவ்யத்தே ந கிம்ஸ்வித்
கூர்பாதி பிர் ப்ரமதி தீர் பவ வதாயுஷாம் ந:

*(நாங்கள் நீ வெறுங்காலுடன் கல், முள் பாதைகளில் வனத்தில் போகும்போது உனது திருவடி வலிப்பதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. உன் பாத கமலத்தை மென்மையாகப் பற்றி உனக்கு வலிதெரியாத இடமான எங்கள் நெஞ்சில் ஒற்றிக் கொள்கிறோம்).*

கண்ணன், எல்லா உயிர்களின் இதயத்தில் அந்தர்யாமியாயுள்ள கண்ணபரமாத்மா, அவனே இறைவன் என்பதை மனத்தில் கொண்டு, பகவானைப் பேரன்பால் சிரத்தையோடு எந்தெந்த விதமாக கோபி பக்தைகள் உபாசித்தனர் என்பதை நாம் அவசியம் அறிய

வேண்டும். பரமனிடமுள்ள அளவற்ற ஈடுபாட்டில் தான் "நான்" "எனது" என்ற அகங்கார, மமகாரங்களைத் துறந்தனர் என்பதனைத் தம் கரத்திலுள்ள குடங்களைத் தவறவிடுவதிலிருந்து தெரிகிறதல்லவா?

குடந்தைக் கீழே நழுவவிடுதல் வைராக்கியத்தைக் காட்டுகிறது. பானைக்குள் உள்ள ஆகாசம் கடாகாசம். பானை எங்கு உள்ளது? மகாகாசத்தில் பானை உள்ளது. இவ்வுள் வெளி என்பதெல்லாம் பானையான உடலால் உண்டாகின்றவை. பானை உடைந்தால் கடாகாசமும், மகாகாசமும் ஒன்றாகி விடுகின்றன. உடலுக் குள்ளுள்ள உயிர் பிறவி எடுத்து உடலெடுக்காதபோது, ஜீவப்ரஹ்ம ஐக்கியம் ஏற்படுகிறது. ஜீவன் கண்ணபரமாத்மாவான பரம புருஷனிடம் சேருகிறது.

மகரிஷிகளே கோபியராக அவதரித்துப் பரம புருஷனும் பிரம்மானந்த சொருபமுமான ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவை ஆனந்தமயமாக, பரிபூரணமாக அனுபவிக்கின்றனராம்.

**ஒரு கோபிகை**, கண்ணனை நோக்கி வேகமாக ஒடிவருகிறாள். இந்த வேகம்தான் 'ஸர்வதுக்க நிவர்த்தியும், பரமப்ராப்தியு' மான முக்திக்கு விரும்பும் தன்மையாகும். ஆர்வமே விஷயத்தை விளங்க வைக்கக்கூடியது. கண்ணனிடம் சேர்ந்ததுமே எல்லாத் துன்பங்கள், பயங்கள், பிரச்னைகள் தீர்ந்து பந்தமில்லாத ஆனந்தமயமாகி விடுகிறது.

நிலமேக சியாமளன் தன்னிடம் பேரன்பு கொண்டு, தன்னைச் சூழ்ந்து பரமானந்தத்தில் திளைக்கும் கோபியரின் மாதுர்ய பக்தியை ஏற்றுப் பேரருள் புரிகிறான்.

பிரம்மாதி தேவர்களும், முனிவர்களும் கோபியரின் மாதுர்ய பக்தியை விடச் சிறப்பானதும் உயர்வானதும் வேறெதுவுமில்லை என்று வியந்து போற்றுகின்றனர் எனில் ராதே சியாமின் திருவருளைப் பெற நாமும் அவனது திருநாமத்தை ஸ்மரித்தும், அவன் பேரழகை ரசித்தும், அவன் திருவடிகளை நம் இதயங்களில் ஏற்றுப் போற்றி வணங்கினால், நம் வாழ்வு உய்வு பெறும். எல்லாக் கடமைகளையும் அவனுக்கே அர்ப்பணமாகச் செய்வதையே ஒரு வேள்வியாகவும், பூஜையாகவும் கருதி அவன் பிரீதியைச் சம்பாதிப்போமாக.

தன் பக்தைக்காகக் கால் நீட்டும்போது நீளமாவது போல், மாதவனை அடைய பக்தையும் தன் கரம் நீட்டும்போது அவள் கரமும் நீளுகிறது. ஓவியத்தில் நீளமான கால், நீளமான கரம் போன்ற வேறுபாடுகள் காட்டப்படுவதெல்லாம் அதிலுள்ள உயர்வானதும், நிறைவானதும், அழகானதொரு ரஸமான கருத்தைக் காட்டவே.

புதிய ஓவியப் பாணியில், நெஞ்சில் கண்ணும், சிரசில் கரமும் காட்டப்பட்டால், 'தலையிலா கை உள்ளது? மார்பிலா கண்ணிருக்கும்?' என்றா கேட்கிறோம்? கருணையோடு பார்த்து, மூளையோடு செயல் படவேண்டும் என்றதொரு கருத்து தெரியவில்லையா?

குறைபாடுகள் போல் தோன்றும் இவ்வோவியத்திலும் உயர்ந்த, அழகான, நிறைவான கருத்துகளை ரசிக்கலாம். எல்லாவற்றையும் எடுத்துச் சொல்லி விளக்கினால் கட்டுரை நீளும்.

கவிதையில் 'கமலக்கண்' என்றதொரு வருணனையைப் படித்து ரசிப்பதுபோல், அந்த ரசனையை ஓவியத்திலும் கண்ணனைக் கமலம் போல் காட்டினால், கவிதாரஸானு பவத்துடன், ஓவியத்தில் தரிசனானு பவத்துடன் நேரடியாக எளிதில் கண்டு மகிழலாம். கவிதையில் உருவகப் படுத்துவதை ஓவியத்தில் நேரில் கண்டால் பெருமகிழ்ச்சியளிக்கு மன்றோ?

உலகில் மாறக்கூடியவை எல்லா வற்றிலும் மாறாத நித்யவஸ்துவான பரம்பொருள் ஒன்றுண்டு. அதை உணர்வதே ஞானம். 'நிலையில்லாதவற்றினுள் நிலையா யுள்ள பரமவஸ்துவைப் பார்' என்கிறது வேதம். 'குறைகளுடையவற்றில் எல்லாம் குறையிலா நிறைவான பரிபூரணன் மறைந்துள்ளதைப் பார் என்கிறது மறை.

பரமனை ஏற்பவர் எங்கும், எதிலும் தெய்வத்தையே பார்ப்பர்.

1974 அமுதசுரபி தீபாவளி மலரில் "கோபியரின் நவ வித பக்திகள்" பிரசுரமாயின. 23 ஆண்டுகளுக்குப் பின்னால் மகோன்னதமான 'கோபியரின் மாதுர்ய பக்தி விவரிக்கப்படுகிறது. பகவதார்ப்பணத்தால் ஸ்ரீ கிருஷ்ண ப்ரீதிரஸ்து.

கட்டுரையும், ஓவியமும்:

**ஸி.ஏ. இராமச்சந்திரன்**

---

**கவிமாமணி மதிவண்ணன்**

## முடியாத பயணம்

காலநதியின் மூலத்தில் – நான்
கவிதைக் காகத் தவமிருந்தேன்!
ஓலக் கடலில் சங்கமித்தும் – அது
ஊமைக் கனவாய்க் கலைந்ததம்மா!

கருப்பை இருட்டின் உள்ளிருந்து – உயிர்க்
கருவை நானும் சுமந்து வந்தேன்!
நெருப்பில் எரியும் நேரத்தில் – என்
நேசக் கருவும் புகைந்ததம்மா!

ஆற்றங்கரையில் மணலெடுத்து – நான்
அற்புத மாளிகை அமைத்துவைத்தேன்!
காற்றும் அலையும் கைசேர்க்க – என்
கட்டடம் வெற்றிடம் ஆனதம்மா!

துள்ளித் திரிந்த நாள் முதலாய் – ஜீவ
சுருதியில் ஒன்றிட நினைத்திருந்தேன்!
தள்ளா வயதைக் கண்ட பின்னும் – அந்த
தாகம் நிரந்தரம் ஆனதம்மா!

+0+

# சாந்தினி

கணபதிராமன், கணபதி சுப்ரமண்யன் என்ற பெயர்களைக் கொண்ட நபர்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம்.

தந்தையின் பெயரோ, தாத்தா மற்றும் நெருங்கிய உறவினர்களின் பெயர்களோ கணபதி அல்லது இராமன் என்று இருந்திருக்கலாம். தன் பெயர்களுடன் அவர்களுடைய பெயர்களையும் சேர்த்து வைத்துக் கொள்வோரும் உண்டு. இந்தப் பெயர்ச் சேர்க்கை உறவு முறையைச் சார்ந்திருக்கும்.

ஆனால் இங்கு கட்டுரையின் தலைப்பில் உள்ள 'கணபதிராமன்' ஒரு கவிஞரின் கற்பனையில் உதித்தது. தஞ்சையில் வசிக்கும் இக்கவிஞர் சிறந்த எழுத்தாளரும் கூட. ஆன்மிகவாதி — தமிழ், சம்ஸ்கிருதம் போன்ற மொழிகளில் புலமை பெற்றவர். சிறந்த மொழி பெயர்ப்பாளரும், சங்கீத ஞானமும் உள்ள இவர் எனது நீண்ட நாள் நண்பர்.

ஸ்ரீதுளஸி இராமாயணத்தைத் தமிழாக்கம் செய்தவர். அந்தக் காப்பியத்திற்கு காப்புச் செய்யுளாக கணபதியையும், ஸ்ரீ இராமனையும் சேர்த்து ஒரு சொல் ஓவியமாகக்



# கணபதிராமன்

கவிதையில் வடித்துள்ளார். அற்புதக் கற்பனை. அண்மையில் அப்புலவரைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது. அப்போதுதான் அவருடைய காப்புச் செய்யுளைப்பற்றிக் கூறினார். விளக்கமாகச் சொன்னார். அச்செய்யுளின் விரிவாக்கமே இங்கு கட்டுரையாக விரிகிறது. அவர் பெயர் சொல்லவில்லையே! அவர்தான் பன்மொழிப் புலவர் திரு சுவாமிநாத ஆத்ரேயன் என்ற பெயருடையவர்.

கணபதி ராமனைப் பற்றி எழுதுவதற்கு முன் விநாயகப் பெருமானைப் பற்றி ஒரு சிறு முன்னுரை.

*முனிவர் கண்ட விநாயக தரிசனம்*

முத்கலர் என்ற மஹாமுனிவர் கால வரையின்றித் தவம் செய்து வந்தார். எதற்கு? பிரபஞ்சத்தில் ஊடுருவி, தனித்தும், ஒட்டாமலும் இருந்த ஆனந்தமயமான பிரம்மத்துடன் ஒன்றிட வேண்டும் என்ற நோக்கத்துடன் தவம் செய்தார்.

பல் காலம் தவம் செய்த முத்கலருக்குப் பரம்பொருளிடம் ஒட்ட முடியவில்லை.

இப்படியிருக்க – ஞானப்பிழம்பாக இருந்த முத்கல முனிவர் அபூர்வமான காட்சியை – யாருமே காணமுடியாத அருங்காட்சி ஒன்றை – தேவலோகத்தில் கண்டார். தேவலோகத்திற்கு 'ஆனந்த புவனம்' என்ற பெயர் உண்டு.

கயிலையில் பரமேஸ்வரன் மோன நிலையில் அமர்ந்திருக்கிறார். அன்னை பராசக்தி, தாயின் பரிவுடன் பிரபஞ்சக் குழந்தைகளைப் பரிவுடனும், கண்டிப்புடனும் அருள் பாலித்து வருகிறார். பிரம்மன் அவருடைய தொழிலான படைப்புத் தொழிலில் ஈடுபட்டுள்ளார். திருமாலோ அலைமோதாத பாற்கடலில் தேவியுடன் ஞானநித்திரையில் ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டிருக்கிறார்.

முனிவர் முத்கலர் இம்மூவரையும் கண்டார். பிரம்மத்துடன் ஒன்றிவிடத் தகுதி பெற்றும் கூட ஒட்ட முடியவில்லையே என்ற ஏக்கம் ஒரு பக்கம் இருக்க, இம்மூன்று மஹா தெய்வங்களையும் ஒரே நேரத்தில் கண்ட மகிழ்ச்சி அவரை மெய் சிலிர்க்க வைத்தது.

இந்த ஆனந்த புவனத்தில் முத்கல முனிவர் யானைக் கூட்டம் ஒன்றைக் கண்டார். யானைக் கூட்டத்திலே மகிழ்ச்சி பொங்க ஒன்றுக்கொன்று மோதி விளையாடும் யானைகளைக் கண்டார் முத்கலர். அவருக்கு ஒரே வியப்பு!

யானைக் கூட்டத்தில் உள்ள பெண் யானை ஒன்று ஆண்யானையை வளைத்துப் பிடிக்கிறது. அங்கு பார்வதி பரமேஸ்வரர் தோன்றி முத்கலரைப் பார்த்துப் புன்னகை பூக்கிறார்கள். பிறகு யானை ஜோடியில் மறைகிறார்கள்.

முத்கலர் இந்த அரிய காட்சியைக் கண்டு வியந்திருக்கும்போது, அந்த யானை ஜோடியினின்று ஒரு குட்டி யானை முத்கலரை நோக்கி ஓடிவருகிறது.

குட்டி யானைக்கு இரண்டு கால்கள் – நான்கு கைகள் – பெரும் தொந்தி – முகம் மட்டும் யானை முகம். முத்கலரை நோக்கி விரைந்து வந்து ஆனந்த நர்த்தனம் ஆடுகிறது.

தன்னை அறியாமல் முத்கலர் கரம் கூப்பினார். அவருக்கு விநாயக தரிசனம் கிடைத்துவிட்டது. முத்கலர் விநாயகப் பெருமானைப் பார்த்து மகிழ்கிறார். பாசம், அங்குசம், அபயம் – துதிக்கையில் ஒரு மோதகம் – வரத ஹஸ்தம்; தலையில் பொற்கிரீடம் – உடம்பெங்கும் ஆபரணங்களுடன் ஜோதிமயமான தோற்றத்தில் முத்கலர் பார்க்கிறார்.

விநாயகப் பெருமானோடு சிறு உரையாடல் நடக்கிறது.

வி: முத்கலரே! என்ன பார்க்கிறீர்?

மு: தங்களைத்தான் பிரபோ!

வி: பிரபஞ்சத்தைப் பார்ப்பது போல என்னை உதாஸீனமாகப் பார்க்கிறீரே?

மு: அப்படியில்லை. என் உள்ளத்தில் எல்லாம் வியாபித்து விட்டீரே! எப்படி உதாஸீனமாகும்?

வி: இப்போது கூறும்! பரம்பொருளுடன் ஐக்கியமாகி விடுகிறீரா?

மு: எல்லாம் தங்கள் தயவுதான்.

வி: பரம்பொருளுடன் ஒன்றிட வேண்டும் என்று தவம் செய்தது உண்மைதான்?

மு: ஆமாம்.

வி: அதற்குத் தடை ஏற்பட்டதன்றோ?

மு: ஆமாம்! பிரபோ!

வி: தடை போட்டதும், விக்னம் செய்ததும் நான்தான்.

மு: விநாயகப் பெருமானே! உம் திருவருளா இது?

வி: நான் செய்த விக்னத்தை நீர் திருவருள் என்கிறீரே!

மு: ஐயனே! நீர் தடை போடாமல் நான் பிரம்மத்துடன் ஐக்கியமாகிவிட்டிருந்தால் இப்படி ஒரு புதுமையான ஆனந்தத்தை அளிக்கும் காட்சியைக் காண முடியுமா?

வி: நான் செய்தது நல்லதுதான் என்று நினைக்கிறீரா?

மு: விநாயகப்பெருமானே! பிரபஞ்சம் ஒரு பெரிய ரதம் அல்லது தேர். அதிலே எல்லா ஜீவராசிகளும் புடைசூழ – எல்லாத் தெய்வங்களும் அமர்ந்து பவனி வருகிறார்கள். தேருக்குக் காலம் தான் அச்சு. வருடம் மாதம், நாள் எல்லாம் சக்கரங்கள். அந்தத் தேரை பிரம்மதேவன் இழுக்கிறார். தேர் அசைந்து ஆடிக்குலுங்கி நகருகிறது. அந்த நேரத்திலே தேரின் சக்கரங்கள் பள்ளத்தில் வழுக்கிச் சறுக்கும் நேரத்தில் – ஒரு முட்டுக் கட்டை போடப்படுகிறது. யார் முட்டுக்கட்டையைப் போட்டது என்று நான் கவனித்தபோது ஐயனே! தாங்கள்தான் முட்டுக்கட்டை போட்டுக் கொண்டிருக்கிறீர்!

வி: அந்தச் செயலைப் பார்த்து விட்டீரா முனிவரே?

மு: நான் எங்கே கண்டேன்? தாங்கள் அன்றோ எனக்குக் காண்பித்து விட்டீர்கள். இப்படி அருள்பாலிக்கும் ஒரு தெய்வம் பிரபஞ்சத்திற்குத் தேவைதான். பிரபஞ்ச இயக்கத்தில் அவ்வப்போது தடை போட்டுச் சிந்திக்க வைத்து நேர்வழியைக் காட்டும் தங்களை இந்த ரூபத்தில் தரிசிப்பது ஆனந்தம் தானே பெருமானே?

வி: முத்கலரே! இப்படிப்பட்ட ஸ்வரூபத்தைத்தானே நீர் தவத்தால் தியானம் செய்தீர்?

மு: (சிந்திக்கலானார்) தியானம் செய்தேனா? (சிறிது நேரங்கழித்து) விநாயகப் பெருமானே! பரமானந்த நிலையில், தியானம் செய்யும் நான் – தியானிக்கப்படும் பகவான், தியானம் என்ற மூன்றும் மூழ்கி விட்டபோது – எழுந்த பரப்பிரம்மம் தாங்கள்தானே விக்னேஸ்வரா! இப்படி ஒரு பெருமையும் இந்த ஆத்மாவுக்குக் கிடைத்திருக்கிறதே! அனைத்து ஜீவராசிகளும்கூட வாழ்வில் இடையூறின்றி – முன்னேற தாங்கள் கருணை கூர்ந்து அவர் தம் விக்கினங்களைக் களைந்து நல்வழி காட்ட வேண்டும். பாமர மக்கள் அறிவில்லாதவர்கள். அவர்கள் முறையாக உபாஸனைசெய்ய இயலாத நிலை உள்ளவர்கள். திருவுருவத்தைப்பார்த்து ஆச்சரியத்திலும், பக்தியாலும் கரம் கூப்பி வணங்குவார்கள். இந்த யானை ஸ்வரூபம் உலகெங்கும், பார்க்கும் இடமெல்லாம் அமர்ந்து அருள் பாலிக்க வேண்டும் விநாயகப்பெருமானே!" என்று முத்கலர் வேண்டினார்.

பரம்பொருள் கொள்கைக்கேற்ப, பரம்பொருளாக விநாயகப்பெருமான் முத்கல முனிவர்க்கு அருள் புரிந்தார். இந்த உரையாடல் பல தத்துவங்களை விளக்குவனவாக அமைந்திருக்கிறது.

இனி கணபதிராமனைத் தரிசிப்போம்.

'டோலாயாம்....' என்ற சம்ஸ்கிருத காப்புச் செய்யுளுடன் தொடங்குகிறது ஸ்ரீதுளஸி ராமாயணம். கவிஞரின் கற்பனை எனினும், கணபதி ராமன் சுவைமிக்க விருந்தாக உள்ளது.

தசரதருக்கு வெகுநாள்களாகப் பிள்ளைப் பேறு ஏதும் இல்லை. வயதோ முதுமையை அடைந்து விட்டது. யாகம் செய்தார். அதன் பலனாக நான்கு புத்திரர்களைப் பெற்றார். அவர்களுள் ஸ்ரீராமனை மிகவும் செல்லமாக அன்பைச் சொரிந்து வளர்த்தார்.

ஒருசமயம் ஸ்ரீராமன் மாணிக்கத் தொட்டிலில் படுத்து உறங்குகிறான். வாயில் வலக்கைக் கட்டை விரல் – இடக் கையில் வலக் கால் கட்டை விரலை இழுத்துப் பிடித்துக் கொண்டுள்ளான். பல் முளைக்காத பவளச் செவ்வாய் சற்றே திறந்திருக்கிறது. அமுத ஊறலாக கடை வாயில் நீர் வழிகிறது.

பெரிய மணி மண்டபம் – மண்டபத்தின் நடுவே தொட்டில் தொங்குகிறது. ஸ்ரீ மஹாகணபதி தொட்டிலை நோக்கி மெதுவாக அடிமேல் அடிவைத்து வருகிறார். சத்தம் கேட்டால் குழந்தை ஸ்ரீராமன் உறக்கத்தினின்று எழுந்து விடுவான் இல்லையா? ஸ்ரீகணபதி தொட்டிலின் சங்கிலிகளைப் பிடித்துக் கொண்டு, சற்றே குனிந்து ஸ்ரீராமன் உறங்குவதைப் பார்க்கிறார். அவருக்கு ஒரே மகிழ்ச்சி, பிறகு தன் இரு செவிகளையும் அசைத்து காற்று வீசுகிறார். (யானைகளுக்கு மகிழ்ச்சி வந்தால் காதுகளை இப்படியும் அப்படியுமாக வீசும்.) மெல்லிய காற்று ஸ்ரீராமன் மீது பரவுகிறது. ஸ்ரீராமனுக்கு மெய் சிலிர்க்கிறது. தூக்கத்தில் மார்பு விம்மி இறங்குகிறது. மஹாகணபதி முகத்தில் புன்னகை மலர்கிறது. கண்களும் சற்றே திறந்து மலர்கின்றன. இந்த நிலையைக் கண்ட மஹாகணபதிக்கு ஆனந்தக் கண்ணீர் பெருகுகிறது. இந்த அற்புதமான காட்சியை ஸ்ரீராமனின் தாய் கௌசல்யை மணி மண்டபத்தின் ஓரமாக நின்று பார்த்து மகிழ்கிறாள். குழந்தை ஸ்ரீராமனின் மகிழ்ச்சி, ஸ்ரீகணபதியிடம் பரவுகிறது. இப்படிப்பட்ட ஸ்ரீகணபதி நம்மையும் காப்பாற்றி அருளட்டும் – என்று கவிஞர் இக்காட்சியை செய்யுள் மூலமாக விநாயகப் பெருமானை வணங்குகிறார். இம்மாதிரி நான்கு பாடல்களுக்குப் பிறகு ஸ்ரீ துளஸி இராமாயணம் தொடங்குகிறது.

## முகவை முத்து

பனிக்கட்டிப் பிஞ்சு!
பாலகரின் சிநேகிதி!
தித்திக்கும் தண்ணீர்!
திகட்டாத குளிர்!
சிறாரின் உல்லாசம்!
சின்னஞ்சிறு சந்தோஷம்!

உதடுகளின் வேடந்தாங்கல்!
ஒற்றைக்கால் பனிக்குருவி!




குச்சிகளில் கூடுகட்டும்
துருவப் பிரதேசம்!
குழந்தைகளின்
வாய்களுக்காகப் பூத்த
தண்ணீர்ப் பூ!

ஓயாமல்
முத்தம் இட்டாலும்
ஓசை இல்லாமல் அழுது
கண்ணீர் சிந்திக்
கரையும் கல்!

சினா—...

# வரம்பத்தில் காதலிக்க...



**லட்சுமி ராஜரத்னம்**

கண்ணாடி முன்பு நின்று டையைக் கட்டிக் கொண்டார் நாகராஜ். ரிட்டையர் ஆகிஆறு மாதங்கள் ஆனாலும் இன்னும் சிக்கென்று இருந்தார். தலை முடியின் நரை கூட இங்கொன்றும், அங்கொன்றுமாகத்தான் ஓடிக் கொண்டிருந்தது. உணவில் கட்டுப்பாடு. காலையில் வாக்கிங். இரவின் முன்னேரத்திலேயே தூங்கப் போவது இப்படிப் பல நல்ல பழக்கங்கள்.

அவருக்குப் பின்னால் மனைவி காவேரி சின்ன சைஸ் யானைக் குட்டியாக நின்று கொண்டிருந்தாள். ஸ்பெஷலாக தறியில் நெசவு செய்த பட்டுப் புடைவையைத்தான் உடுத்துவாள். சாதாரண ஐந்தரை மீட்டர் புடைவை போதாது. ஒரு டஜன் தங்க வளையல்கள், கல் வளையல்கள் - எல்லாமே ஸ்பெஷல் அளவுகள் தான். ரவிக்கை ஒன்றரை மீட்டர்.

காவேரி சமையல் அறைக்குள் நுழைந்தால் வாயில் எதையாவது போட்டு அசைத்துக் கொண்டேதான் வருவாள். ஃபிரிஜ்ஜைத் திறந்தால் ஒரு வாய் ஜூஸ்...இல்லை என்றால் ஒரு வில்லை மில்க் சாக்லெட்... இப்படி சதா வாய்க்கு ஓய்வு தருவதில்லை. எங்கே என்ன கிடைக்கும் என்பது தெரியும்.

பிள்ளைகள் இருவரும் தாய்க்குச் சளைத்தவர்களல்லர். ரிட்டையர் ஆனதும் நாகராஜ் சொந்த பிசினஸ் ஒன்றைத் தொடங்கியவுடன் பிள்ளைகள் அதிலேயே ஒட்டிக் கொண்டார்கள். மூத்தவள் சீதா அமெரிக்காவில் இருக்கிறாள். வருபவர்களிடம் முந்திரி, பாதாம், மில்க் சாக்லெட் என்று கொடுத்து அனுப்புவாள்.

"அம்மா, இந்தா சுடச்சுட வெங்காயப் பக்கோடா" இரண்டாவது பிள்ளை கேசவன் அலுவலகத்திலிருந்து வரும் பொழுது வாங்கி வருவான்.

மூன்றாவது பிள்ளை ரகு. செல்லப் பிள்ளை. "அம்மா, இன்னிக்கு வெளியே சாப்பிடப் போகலாம். பாம்பே மீல்ஸா, குஜராத் டிஷ்ஷா, ஆந்திரா மீல்ஸா....? யுவர் சாய்ஸ் மம்மி"

"என் சாய்ஸ் ஒண்ணும் கிடையாதா?" என்று நாகராஜ் கேட்பதுண்டு.

"எங்கே போனாலும் சுக்கா ரொட்டி, தால், உங்களுக்கு என்ன சாய்ஸ்? அம்மாவைச் சொல்லுங்க... என்னென்ன வேணுமோ வஞ்சனை இல்லாம கேட்டு வாங்கிச் சாப்பிடுவாங்க."



"அதான் வஞ்சனை இல்லாம வளர்ந்திருக்கா."

காவேரி கணவனை முறைத்துப் பார்ப்பாள்.

நாகராஜ்க்குத் தன் தோற்றப் பொலிவில் ஒருவிதப் பெருமை உண்டு.

"போதுமே பார்த்துண்டே நிக்கறது" காவேரி கணவனை அதட்டினாள்.

"காவேரி.! கேசவனுக்குப் பெண் பார்க்கப் போகிறோம். மாப்பிள்ளை கேசவனா, நானானு என்னைப் பார்த்துத் தடுமாறப் போறாங்க" என்று நாகராஜ் கலகலவென்று சிரிக்க...

"வழியாதீங்க" என்று தோளில் முகத்தை இடித்துக் கொண்டே காவேரி. "கேசவன் கூட கிளம்பிட்டான். சீக்கிரமா வாங்க" என்று அவசரப் படுத்தினாள்.

கேசவனின் தோற்றம் கூட கொஞ்சம் ஒல்லியாய் அப்பாவைப் போலத்தான் தேகவாகு.

"அம்மா! ரகு மாதிரி சாப்பிட்டே நீ குண்டடிச்சுடுவே" என்று நாகராஜ் எச்சரிப்பார்.

கேசவனுக்குப் பெண் பார்க்கத் தொடங்கிய பொழுதே தரகர் ஏகப்பட்ட பெண்களின் போட்டோ கொண்டு வந்து கொடுத்தார்.

"எனக்கு இப்ப கல்யாணம் அவசியமில்லை" என்று சொன்னவனை அவர்கள் லட்சியம் பண்ணவில்லை.

குண்டான பெண்களின் போட்டோக் களைத் தனியாக எடுத்து வைத்தாள் காவேரி.

"ஏம்மா. அந்த அண்ணா நகர் பொண்ணு நன்னாத்தானே இருக்கா?"

கணவனை முறைத்துப் பார்த்துத் தலை தாழ்த்தியவள், "என்ன நன்னா இருக்கா?

ஒரே குண்டு. இப்பவே இப்படின்னா நம்ம வீட்டுக்கு வந்து பால், தயிர், ராஜஸ்தான், குஜராத், பெங்கால் சாப்பாடு சாப்பிட்டா உடம்புல ஊத எங்க இடம் இருக்குனு சொல்லுங்க"

குபீரென்று சிரித்தார் நாகராஜ். நல்ல வாஜிக்கல் பாய்ண்ட்.

"இந்தப் பொண்ணு எப்படிம்மா? எம்.பி.ஏ. நம்ம பிஸினஸ்க்கு ஏத்தவ"

"கண்ணுக்கு அழகா இருக்க வேணாமா? அவன் கூட்டிட்டுப் போனா திருஷ்டி படற மாதிரின்னா இருக்கணும்? இப்பவே நெத்தி மேடு தட்டி இருக்கு. தலைமுடி கொட்டினா விக்தான் வைக்கணும்."

"அறந்தாங்கிப் பொண்ணு?"

"குட்டையாத் தெரியறா? வேணாம்"

"திருச்சிப் பொண்?"

"பல் வெளியே வந்திருக்கணும். வாயை மணிபர்ஸ் மூடி மாதிரி இழுத்து மூடிண்டு இருக்கா பாருங்கோ."

இப்படி ஒதுக்கித் தள்ளியபின் ஒரு புகைப்படம் திருப்தி தர...

இதோ பெண் பார்க்கக் கிளம்பி இருக்கிறார்கள்.

"காவேரி! எதுக்கும் அந்தப் பெண் தலைமுடியை இழுத்துப் பார்த்துடு" என்றார் நாகராஜ்.

"நிச்சயம் இழுத்துப் பார்ப்பேன். கண்ணாடியா, லென்ஸானு வேற பார்க்கணும். பெண் பார்க்கறதுன்னா லேசா?"

கேசவனை பலியாடு மாதிரி இழுத்துக் கொண்டு போனார்கள்.

காவேரிக்கு மிகவும் பெருமை - தன் மகன் காதல், ஊதல் என்று விழாமல் கல்யாணத்திலேயே ஆசை இல்லாமல் இருக்கிறானே என்று.

அவன் வயசுப் பையன்கள் எத்தனை விதமான வம்புகளில் மாட்டிக் கொள்கிறார்கள்.!

"எம் பையன்டி... எப்படி வளர்த்திருக்கேன் பார்" என்று மனைவியிடம் மார் தட்டிக் கொண்டார். நாகராஜ்.

"சரி... சரி...அப்புறம் பெருமை பேசலாம். இப்ப வாங்க பெண் பார்க்க"

கப்பல் போன்ற காரில் வந்திறங்கிய நாகராஜ் குடும்பத்தைப் பார்த்து விகிதாவின் அப்பா திருப்திபட்டுக் கொண்டார்.



கேசவனையும், ரகுவையும் பார்த்து யார் இதில் தன் மாப்பிள்ளை என்று குழம்பிக் கொண்டார்.

நாகராஜ் தன் மூத்த, இளைய பிள்ளைகளை அறிமுகப்படுத்திய பொழுது நன்கு அடையாளம் கண்டு கொண்டார்.

"விகி, அந்த பாட்டில் க்ரீன் கலர் பாண்ட் போட்டுண்டு... இதோ தலையைப் படிய வச்சுக்கிறானே அவன்தான் மாப்பிள்ளை கேசவன். அடுத்தவன் ரகுவை மாப்பிள்ளைனு நீ நினைச்சுக்காதே" என்று சொல்லி வைத்தார்.

நெய்யொழுகும் பாதாம் அல்வா, போண்டா, வறுத்த முந்திரி, கிச்சடி என்று வகை வகையான டிபன்கள்...

"விகிதா, வாம்மா,"

அப்பா அழைக்க வந்தாள். புதுமைப் பெண் என்றாலும் தலை நிமிர்ந்து வந்தாலும், கண்களின் தரை நோக்கலில், நாணமான புன்சிரிப்பிலும் பெண்ணின் நால்வகை குணங்கள் உண்டு என்னிடம் என்று நிரூபித்தாள்.

"பெண்ணுக்குப் பாடத் தெரியுமா?"

"வங்கி ஒன்றில் வேலை செய்கிறாள். வீணை வாசிக்கத் தெரியும்."

விகிதா பைரவியில் பாட்டு ஒன்றை வாசித்தாள். காவேரி மயங்கித்தான் போனாள். அதை விகிதாவின் தந்தை கணக்குப் பண்ணிக் கொண்டார். மளமளவென்று சீர்களை ஒப்பித்தார்.

"நீ என்னடா சொல்றே?" காவேரி மகனின் காதைக் கடிக்க "வீட்டுக்குப்



போய்ச் சொல்றேன்" என்ற மகனை அடிக்கலாம் போல ஒரு வேகம். அடக்கிக் கொண்டாள்.

பதிலைக் கேட்டதும் விகிதாவின் தந்தை சிறிது கொதித்துப் போனார். 'பிள்ளையைப் பெற்றவர்கள் என்றால் கொம்பா முளைத்திருக்கிறது. சந்திர மண்டலத்திலிருந்தா குதித்திருக் கிறார்கள்?'

விகிதா நுட்பமானவள். கேசவனின் பார்வை தன்னை அலசவில்லை என்பதைப் புரிந்து கொண்டாள்...

"அப்பா, அவங்க என்ன பேசணுமோ பேசிட்டு போன் பண்ணட்டுமே? ஒருவேளை சீர் அதிகம் எதிர்பார்க் கிறாங்களோ என்னவோ?"

காவேரியும் கேசவனைக் கண்டு கொண்டாள். காரில் மௌனம் சாதித்தவள், "என்னடா, இப்படி பண்ணிட்டே? அங்கேயே பெண் பிடிச்சிருக்குன்னு சொல்ல வேண்டாமா?" என்று வெடுவெடுத்தாள்.

"பிடிக்கலை. அதான் சொல்லலை" என்ற கேசவன் ரிலாக்ஸ்டாய் பதில் சொன்னான்.

டையை அவிழ்த்துக் கொண்டே நின்ற நாகராஜ் திடுக்கிட்டுப் போனார்.

"போட்டோவைப் பார்த்து நீதானேடா நன்னா இருக்குன்னு சொன்னே?" காவேரி குறுக்கு விசாரணை செய்தாள்.

"நான் எங்கே சொன்னேன்?" என்று கேசவன் முனகியது, நாகராஜ் காதுகளில் விழ. "அப்ப நாகளைவிட்டு வேற வரன் பார்க்கச் சொல்லலாமா?" என்று கேட்டபடி சோபாவில் உட்கார்ந்தார்.

பளிச்சென்று நிமிர்ந்த கேசவன் "அப்பா! இப்ப உண்மையைச் சொல்லிடறேன். உங்ககிட்ட சொல்ல பயந்துண்டுதான் பெண் பார்க்க வந்தேன். இனிமேலும் மூடி மறைக்க முடியாது. உங்களுக்கு பயந்துண்டு எத்தனை பெண்களைத் நான் தட்டிக் கழிக்க இயலும்? ஆமாம். நான் ஒரு பெண்ணை லவ் பண்றேன்"

காற்றே இல்லாமல் மரங்கள் அசைவற்று நிற்பது போன்ற அமைதி. காவேரிக்கு அடி வயிறு கலங்கியது. கணவர் என்ன சொல்லப் போகிறாரோ என்ற திகில் கண்களைப் பெரிதாக்கியது.

பின் கழுத்தில் கையைக் கட்டி அண்ணாந்து கிடந்த நாகராஜ் பிள்ளைகளைப் பார்த்தார்.

"தோளுக்கு மேல வளர்ந்துட்டிங்க. என்னத்தைச் சொல்ல முடியும்? நான் தடுத்துடலாம். பெரிய காரியம் இல்ல. நாளைக்கே கோயில்ல மாலை மாத்திக்கிட்டு வந்து நிற்பீங்க. ஒசியில வாசல்ல ஷோ காட்டணும். இதெல்லாம் எனக்குத் தேவையா? ஏண்டா, ரகு. நீ எப்படி?"

"நானும் ஒரு பெண்ணைக் காதலிக்கிறேன் அப்பா!"

"காவேரி.! பையன்கள் கிட்ட இருந்து அட்ரஸ் கலெக்ட் பண்ணிக்க. அப்புறம் போய் பார்க்கலாம்" என்று தன்னறைக்கு எழுந்து போனார் நாகராஜ்.

இதே முப்பத்தைந்தாண்டுகளுக்கு முன்பு - அவருக்கு இருபத்தைந்து வயது இருக்கலாம். அப்பாவுக்கு உடம்பு சரியில்லை. வருடா வருடம் தன் ஒரே சகோதரிக்கு அவர் தீபாவளிச் சீராக புடைவை, வேட்டி கொடுக்காமல் இருந்ததில்லை.

அந்த வருடம் படுத்துக் கொண்டு விட்டார். "நாகு.! நீ கொண்டு கொடுத்துட்டு வாயேன்" என்று அப்பா அனுப்பி வைத்தார்.

தனியார் நிறுவனம் ஒன்றில் அவன் வேலை பார்த்து வந்தான். ஒரு வார விடுப்பில் போனான். கிராமத்து மலைக் கோயிலும், நதியும், அமைதியும், ஏற்றத்தின் சப்தமும் என்றுமே அவனைக் கவர்ந்தவை. தீபாவளிக்கு இருந்து விட்டு வருவதாகச் சொல்லிப் போனான்.

அத்தைக்கு அவனைப் பார்த்து சந்தோஷம். "நாளைக்கு தீபாவளி. அண்ணா இன்னும் புடைவை, வேஷ்டி அனுப்பலையேன்னு எதிர்பார்த்துண்டு இருந்தேன்" என்றபடி வாங்கிக் கொண்டாள்.

தீபாவளி ஸ்நானம் முடிந்து, வாசலில் அத்தையின் குழந்தைகளுடன் பட்டாசு, வெடி கொளுத்திய பின், ஊஞ்சலில் உட்கார்ந்து ஆடிக் கொண்டிருந்தான்.

இப்பொழுதே இத்தனை அழகாய் இருக்கும் நாகராஜ் இளைஞனாக இருந்த பொழுது இன்னும் அழகுதான்.

அந்த அழகைப் பார்த்துதான் சண்பக லட்சுமி கையில் பட்சணத் தட்டுடன் வந்தவள் தடுக்கி நின்று விட்டாள். தீபாவளி மருந்துடன் வந்த அத்தை, "அட வாடின்னா. இவன் வேற யாரும் இல்லை. என் அண்ணா பிள்ளைதான்" என்று அழைக்க...

சண்பக லட்சுமி உள்ளே வந்தாள்.

அனந்த நாராயணப் பெருமாள் கோயில் பட்டாச்சாரியின் மகள். ஆண்டாள் நாச்சியாரைப் போல இருந்தாள். நாகுவால் கண்களைத் திருப்ப முடியவில்லை.

அடுத்த நாளே அவன் மனசைத் தொடும் வண்ணம் பேச்சும் எழ...

ஊருக்குப் போவதற்குள் காதல் என்ற அமுத போதையை இருவருமே நெஞ்சில் நிறைத்துக் கொண்டனர். இதையறியாத பட்டாச்சாரியார் அவனிடம் "நாகு! ஏழைப் பையனாப் பாரேன். இரண்டு வேளைச் சோத்துக்கும் இரண்டு புடைவைக்கும் வழியுள்ளவனாக இருந்தாப் போதும்" என்று கண்களில் வருத்தம் தோயச் சொன்னார்.

"ஊருக்குப் போகப் போறேள்னு அப்பா சொன்னார்" என்று பேச்சைத் தொடங்கினாள், சண்பகா.

"ஏன் உனக்கே தெரியாதா? லீவ் முடிஞ்சு போச்சே. உங்கப்பா வரன் பார்க்கச் சொன்னார்."

"பார்க்கப் போறேளா?" கண்களில் கள்ளத்தனம் நிறைந்து நிற்கப் பார்த்தாள்.

"நீ எனக்காகக் காத்துக் கொண்டிருப்பியா சண்பகம்?" அவள் கையை எடுத்து கன்னத்தில் வைத்துக் கொண்டான்.

"இந்த ஊர் அனந்த நாராயணப் பெருமாள் சாட்சியா நீங்க புடிச்ச இந்தக் கையை வேற யாரையும் தொட விட மாட்டேன்" என்றவள், கண்ணீரைப் பொலபொலவென்று விட்டாள்.

அவனுக்கும் அழுகை தாளவில்லை. கையை அழுந்தப் பிடித்து தன் உறுதியைத் தெரிவித்து விட்டு வந்து விட்டான்.

அப்படி இருக்க அவனால் முடிந்ததா? அப்பாவின் உடல்நலம் குன்ற, கொஞ்சம் வசதி படைத்த காவேரியை அவன் தலையில் கட்டி விட்டார்.

கல்யாணத்திற்கு வந்த அத்தை பேச்சுடன் பேச்சாக "பணம் காசு

நூல் அறிமுகம்

# நாத்திகனின் மறுப்பு

- கர்மயோகி

Life Divine அன்னை பக்தர்களுக்குரிய வேதநூல். வேதம், உபநிஷதம், கீதை பரம்பரையில் வந்தது Life Divine. கீதை குறிப்பாக சொல்லிய ரகஸ்யத்தை விரிவாக உரைக்கும் புத்தகம் இது. 58 அத்தியாயங்கள் கொண்டது. ஸ்ரீ அரவிந்தர் சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்தில் பயின்றதால் அவர் வாக்கியங்கள் மிக நீளமானவை. ஆங்கிலேயர்கள் ''வாக்கியம் மிக நீளமாக இருப்பதால், படிக்க சிரமமாக இருக்கிறது'' என்கிறார்கள்.

அன்பர்கள் மூலநூலைப் பயில ஆவல் உடையவர்களாக இருப்பதால், இந்நூலில் முதல் 4 அத்தியாயங்களை எளிய ஆங்கிலத்தில் எழுதி 'மலர்ந்த ஜீவியத்'தில் வெளியிட்டோம். 'நாத்திகனின் மறுப்பு' என்பது Life Divineல் இரண்டாம் அத்தியாயம். இந்நூல் மூன்று பகுதிகளுடையது. ஒரு பகுதியில் நீண்ட ஆங்கில வாக்கியங்களை சிறிய வாக்கியங்களாகவும், எளிமையாகவும் மாற்றி எழுதி, அவற்றைத் தமிழ்ப்படுத்தியும் கொடுக்கப்பட்டுள்ளது. மற்றொரு பகுதியில் இவ்வத்தியாயத்தை எளிமையான ஆங்கிலக்கட்டுரையாக எழுதப்பட்டுள்ளது. மூன்றாம் பகுதி அவ்வாங்கிலக் கட்டுரையின் மொழி பெயர்ப்பு. (நேரடியாக மொழி பெயர்ப்பன்று)

ஹக்ஸ்லி குடும்பத்தார் இங்கிலாந்தில் பெயர் பெற்ற குடும்பம். இவரது மூன்று மகன்களும் உலகப் பிரசித்தி பெற்றவர். ஒருவர் நோபல் பரிசு பெற்றவர். ஆல்டஸ் ஹக்ஸ்லி Life Divine நூலைப் படித்தபின், இரண்டாம் அத்தியாயத்திலுள்ள ஒரு கருத்தைப் பாராட்டி, தன் கட்டுரையில் மேற்கோளாக எழுதியுள்ளார். அக்கருத்து,

> *இலட்சியம் எவ்வளவு உயர்ந்ததானாலும் அது நடைமுறைக்கும் ஏற்றதானால் மட்டுமே நாம் ஏற்கக்கூடிய இலட்சியமாகும். வானைஎட்டிப் பிடிக்க முயன்றாலும், கால் தரையில் ஊன்றி யிருக்க வேண்டும்.*

ஸ்ரீ அரவிந்தர் வாழ்க்கையை உதறித் தள்ளக் கூடாது என்றும், வாழ்வே யோகம் என்றும் கூறியவர். என்றாலும் நாத்திகவாதத்தை ஏற்கவில்லை. நாத்திகன் ஆஸ்திகத்திற்குச் செய்த சேவை பெரிது என்கிறார். கண்ணில் கடவுளைக் கண்டால் தான் ஏற்பேன் என்ற பரம்பரை நாத்திக வாதத்திற்கு ஆயிரம் பதில்கள் உள. ஸ்ரீ அரவிந்தர் ஒரு புதிய பதிலை வழங்குகிறார், ''அறிவுக்கு கடவுள் புலப்படவில்லை எனில், கடவுள் இல்லை என்பது சரியாகுமா? அறிவைக் கடந்த நிலையில் அவரிருக்கிறார் எனப் பொருள், அறிவின் உற்பத்தி ஸ்தானமான ஜீவியத்தை அடைந்து பதில் தேடினால் கிடைக்கும்'' என்கிறார். இதுவரை எவரும் கூறாத விளக்கம்.

'நாத்திகனின் மறுப்பு' வாசகர்கட்கு எந்த அளவில் பயன்படுகிறது என்பது Life Divineயை முழுவதும் எளிமையான ஆங்கிலத்தில் எழுதுவதை நிர்ணயிக்கும். பாரிச வாய்வு Life Divine படித்ததால் போயிற்று என்று படித்த அன்பர், 'நாத்திகனின் மறுப்பில்' உள்ள தமிழ்ப் பகுதிகளை நோய் வாய்ப்பட்டவருக்கு படித்துக் காட்டினார். நோய் குணமாயிற்று என்று எழுதினார்.

**விலை: ரூ. 20.00**

பதிவுத் தபாலில் பெற புத்தக விலையுடன் விலை ரூ12.00 சேர்த்து M.O. செய்யவும்.

கிடைக்குமிடங்கள்:

*பாண்டியில்*

**மதர்ஸ் ஸர்வீஸ் சொசைட்டி**

பிளாட் 4, வெங்கட நகர் விரிவு

பாண்டிச்சேரி – 605 011.

*சென்னையில்*

**மாம்பலம் தியான மையம்**

28/7 ஸ்ரீனிவாசத் தெரு

சென்னை – 600 017.

இருக்கிறவனுக்கே கல்யாணம் ஆகலை. ஏழைப் பொண்ணு என்ன பண்ணும்? பெருமாள் எப்போ கண்ணைத் திறக்கப் போறாரோ என்னமோ?"

நெஞ்சினுள் ஏதோ ஒன்று குத்தியது. அப்பாவிடம் சொல்லாமல் ஏன் வாயடைத்துப்போயிற்று? தெரியவில்லை.

ஒரு நடை கிராமத்திற்குப் போய் அவளிடம் மன்னிப்புக் கேட்கலாமா?

தயக்கமாக இருந்தது. அத்தையும் மகனுக்கு வடக்கே வேலை என்று குடிபெயர்ந்தாள்.

இதோ போகலாம்.. சண்பகாவிடம் மன்னிப்பு கேட்க வேண்டும்.

ஒன்று.. இரண்டு.. என ஆண்டுகளின் ஓட்டத்தில் தட்டிப் போக..

'சே! அவள் இன்னுமா கல்யாணம் ஆகாமல் இருப்பாள்? திடீரென்று போய் ஏன் குழப்ப வேண்டும்' என்று விட்டுவிட்டார்.

மகன்கள் காதலைப் பளிச்சென்று சொல்லியதும் சண்பகாவின் நினைவு - கங்கையின் புனித நீரோட்டத்தில் விட்டு விடும் தீப ஒளியாக நெஞ்சோட்டத்தில் ஓடியது.

மகன்களின் கல்யாணம் முடிந்து தலை தீபாவளிக்கு மாமனார் ஊருக்கும் போய் விட்டார்கள். காவேரியும் ஒரு மகனுடன் ஒட்டிக் கொண்டு போய் விட்டாள். தீபாவளி அன்று வருவதாக அவர் முன்னால் போகாமல் தங்கிக் கொண்டவரின் கண்களில் அந்தக் கும்பாபிஷேகத் தாள் பட்டது.

அனந்த நாராயணப் பெருமாளுக்குக் கும்பாபிஷேகம்.

போனால் என்ன?

உடனே கிளம்பி விட்டார்.

அம்பாளின் பெயர் சண்பகவட்சுமி. அவளுக்குச் சாத்த புதுப் புடைவை. திருமாங்கல்யம் என்று அமர்க்களமாக வாங்கிக் கொண்டார்.

எங்கே தங்குவது? அத்தை வீடு கூட இல்லை.

மதகடியிலேயே பெருமாள் கோயிலைச் சேர்ந்தவரைச் சிநேகிதம் பிடித்துக் கொண்டார்.

"எங்கேயும் தங்க வேணாம். நம்மாத்திலே தங்குங்கோன்னா"

## நீயும் நானும்!

### டாக்டர் ஆலந்தூர் கோ.மோகனரங்கன்

*ஏர்பிடித்து நான்நடக்க நீர்விரித்த காவிரி!*
*வேர்பிடித்த பூக்களுக்குப் பால்கொடுத்த காவிரி!*
*கார்பிடித்த வானகத்தைக் கைபிடித்த காவிரி!*
*சீர்பிடித்த ஊர்நிலைக்கப் பேர்கொடுத்த காவிரி!*

*அஞ்சுவயதுப் பிஞ்சுகையில் கொஞ்சுகின்ற காவிரி!*
*வஞ்சிவந்து தொட்டவுடன் கெஞ்சுகின்ற காவிரி!*
*வஞ்சமுள்ள நெஞ்சரிடம் மிஞ்சுகின்ற காவிரி!*
*தஞ்சமென்று சொல்பவர்க்குப் பஞ்சுநிகர் காவிரி!*

என்றவர், ஊர் நிலவரங்களைப் பேசிக் கொண்டே போனார்.

"இதுதான்நம்ம வீடு. வாங்கோ" என்று கோயிலைச் சார்ந்தவர் சொல்ல, சற்று தயங்கி நின்றார் நாகராஜ்.

"என்ன நின்னுட்டேள்? வாங்கோ. எல்லா வசதியும் இருக்கு நம்மாத்துல. எம் பையன் துபாய்ல இருந்தான். வீட்டை ஃபைவ் ஸ்டார் ஹோட்டல் மாதிரி வச்சிருக்கேன்."

"இந்த வீடு சண்பகவட்சுமி வீடுதானே! யாரோ உள்ளே போயிண்டுவந்துண்டு இருக்கா.. என்ன ஆச்சு?"

"இப்படி திண்ணையிலே உட்காருங்கோ. யாரோ சின்ன வயசுல கல்யாணம் பண்ணிக்கிறேன். எனக்காக காத்துண்டு இருப்பியானு கேட்டானாம். இதுவும் சத்தியம் பண்ணிடுத்து. ஆனா அவன் ஊருக்குப் போனதும் இதை மறந்துட்டான். இது கல்யாணமே பண்ணிக்காம நின்னுட்டுது."

நாகராஜின் வயிற்றிலிருந்து பந்து ஒன்று எழும்பித் தொண்டையை அடைத்தது.

"அந்தக் குறையோ என்னமோ பத்து நாளா இழுத்துண்டு கிடக்கு. அப்பா போயாச்சு. மத்த மனுஷா கிடையாது"

பெட்டியுடன்சண்பகத்தின் வீட்டினுள் நுழைந்தார் நாகராஜ். அவருடைய சண்பகாவா! ஆண்டாள் மாதிரி நின்றவள்..

ரங்கநாதர் ஏமாற்றி இருந்தால் ஆண்டாளும் இப்படித்தான் இருந்திருப்பாளா?

"எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்"

அந்தி நேரத்தில் ஆண்டாள் பாசுரம் காற்றில் கலந்து வருகிறது.

"சண்பகா! உன் நாகராஜ் வந்திருக்கேன்."

சுற்றி நின்றவர்கள் விலுக்கென்று தூக்கி வாரிப் போட, பார்த்தார்கள்.

"நீ காத்துண்டு இருந்தே. என்னால முடியலை அம்மா" என்றவர், பெட்டியைத் திறந்து புதுப் புடைவையை எடுத்துச் சுற்றி விடுகிறார்.

அவள் கண்கள் மெல்லத் திறந்தன.

"நீங்களா? வந்துட்டேளா?"

"வந்துட்டேன்." என்றவர், தாயாருக்காகத் திருக்கல்யாணத் திருமாங்கல்யம் வாங்கி வந்ததை எடுத்து அவள் கழுத்தில் கட்டுகிறார்.

அவள் கண்கள் சண்பகப் பூவாக மலர.. "எனக்குக் கல்யாணம் ... எனக்குத் தலைதீபாவளி" என்றபடி அவர் நெஞ்சில் சாய்ந்து கொள்ள...

வெடி ஒன்று வெடித்தது.

"அப்பா! கும்பாபிஷேகம் நிற்காது" என்று சூழ்ந்திருந்தவர் நகர்ந்தனர்.

அவர் அவள் கையை இறுகப் பற்றிக் கொண்டிருந்தார்.

ஜீ

# நாணயம்

வெளியில் புறப்பட்டுக் கொண்டிருந்த இராமநாதன் நண்பன் சுப்பிரமணியன் வீட்டு வாசலைக்கடந்து உள்ளே வந்து கொண்டிருப்பதைப் பார்த்தான். காலில் அணியவிருந்த மிதியடியைச் சுவர் ஓரமாகத் தள்ளி விட்டு நண்பனைச் சிரித்த முகத்துடன் வரவேற்றான்.

இராமநாதனுக்கும் சுப்பிரமணியத்துக்கும் இரண்டு மூன்று வயது வித்தியாசமிருக்கலாம். மூன்றாண்டுகளுக்கு முன்பு சுப்பிரமணியன் மின்சார இலாகாவிலிருந்து ஓய்வு பெற்றான். இராமநாதன் ஓய்வு பெற்று ஒரு மாத காலமாகப் போகிறது.

ரொம்ப நெருக்கமான நட்பு என்று சொல்ல முடியாவிட்டாலும் அவர்களிடையே சுமுகமான நெருக்கம் உண்டு. பல நெருக்கடியான நேரங்களில் சுப்பிரமணியன் இராமநாதனுக்கு உதவியிருக்கிறான். பணத் தேவை ஏற்படும் போதெல்லாம் ஆயிரம், இரண்டாயிரம் என்று கொடுத்து உதவியிருக்கிறான். திருப்பிக் கொடுக்கும் போது வாங்கிக் கொள்வான். நடுவில் கேட்டுத் தொந்தரவு செய்ய மாட்டான்.

இரண்டாண்டுகளுக்கு முன்பு கூட மனைவியின் மருத்துவச் செலவுக்கு திடீரென்று பத்தாயிரம் ரூபாய் தேவைப்பட்டுவிட்டது. சொஸைட்டியில் உடனே கடன் வாங்க முடியவில்லை. பணத்தேவையின் அவசரத்தைத் தெரிந்து கொண்ட சுப்பிரமணியன் பத்தாயிரம் ரூபாய் கொடுத்துதவினான். எனவே நட்பு என்பது அதிகமாக விரிவடையாத நிலையிலும் கூட பணம் கொடுக்கல் வாங்கல் விஷயங்களில் நாணயம் பிசகாமல் பார்த்துக் கொண்டார்கள்.

சுப்பிரமணியம் உள்ளே வந்தான். அவனை வரவேற்று, கூடத்தில் அமர போனபோது-



"இராமநாதன்! உன்னிடம் ஒரு முக்கிய உதவி கேட்க வந்திருக்கிறேன். வா. விவரமாகச் சொல்லுகிறேன்."

இருவரும் வீட்டின் தனி அறைக்குள் போய் உட்கார்ந்தார்கள்.

சுப்பிரமணியன், தான் அவசரமாக அவனைத் தேடி வந்ததற்கான காரணத்தைக் கூறினான்.

"மூன்று மாதம், மீறிப் போனால் நான்கு மாதத்தில் உன் பணத்தை நீ கேட்கிற வட்டியுடன் திருப்பித் தந்து விடுகிறேன். ரொம்பவும் தலைபோகிற அவசரம்"

"இரண்டு லட்சம் வேணும்னு கேட்கறயே"

"ஆமாம் இரண்டு லட்சம் தான் வேணும். அதான் உனக்கு ரிடையர்ட்மெண்ட் தொகை வந்திருக்குமே. கிராஜுவிடி... பிராவிடண்ட் பண்ட்..."

"ஆமாம் வந்தது. ஆனா அது எல்லாவற்றையும் என் பெண்ணோட கல்யாணத்தை உத்தேசித்து பேங்க்ல டெபாசிட் பண்ணிட்டேனே."

"நீ எதுக்கும் தயங்காதே. பேங்க் வட்டிக்கு மேலே நான் தரேன். உன் பணம் எங்கேயும் போயிடாது. மூன்று மாத அவகாசத்தில் பணத்தைத் திருப்பித் தந்து விடுகிறேன்."

இராமநாதன் தயங்கினான்.

"நீ எதுக்கும் தயங்க வேண்டாம் இராமநாதன்! போன வருஷம் வீட்டை அடகு வச்சு நான்கு லட்ச ரூபாய் கடன் வாங்கி வேறொரு நண்பனுக்குக் கொடுத்தேன். கெடு தேதி அடுத்த மாசத்தோட முடியப் போறது. 'பணத்தை வட்டியோட உடனே திருப்பிக் கொடு இல்லைன்னா பத்திரம் எழுதிக் கொண்ட பிரகாரம் வீட்டைக் காலிசெஞ்சு பொசிஷனைக் கொடு' என்று கடன் கொடுத்தவன் கேட்கிறான். நண்பனோட

மகரிஷி

வியாபாரம் இப்பத்தான் கொஞ்சம் கொஞ்சமா முன்னேறிக் கொண்டிருக்கிறது. அவன் பணத்தைத் திருப்பிக் கொடுக்க மேலும் ஆறு மாதம் அவகாசம் கேட்டுக் கெஞ்சறான். ஆனால் எனக்கு, என் வீட்டின் மேல் கடன் கொடுத்தவன் 'குறிப்பிட்ட தேதியில் பணத்தைத் திருப்பிக் கொடு. இல்லையென்றால் வீட்டைக் காலி செஞ்சுட்டு சாவியைக் கொடு' என்று நிர்தாட்சண்யமாச் சொல்லிட்டான். உன் பணம் எங்கேயும் போயிடாது. உன் பெண் கல்யாணத்திற்குத் தடை ஏற்படாமல் பணம் திருப்பித் தரும் பொறுப்பை நான் ஏத்துக்கறேன். கல்யாணம் என்று சொன்னவுடன் நினைவுக்கு வருகிறது. போன வருஷம் காரிபட்டி டிவிஷனிலிருந்து ஓய்வு பெற்றாரே அஸிஸ்டெண்ட் டிவிஷனல் இன்ஜினியர் வாசுதேவன். அவருக்கு இரண்டு பசங்க. அதிலே மூத்தவன் டெலிபோன்ஸ்ல இருக்கான். நல்ல குடும்பம். அவரும் நல்லவர். பையனும் நன்னா இருப்பான். ஜாதகங்கள் பொருந்தி இருந்தா அதையே கூட பார்க்கலாம். அவர் எனக்கும் நல்ல நண்பர். இதுபற்றி அவரிடம் நானும் பேசுகிறேன்."

சுப்பிரமணியன் எழுந்தான். "சாயந்தரமா வரேன் நல்ல பதிலாச் சொல்லு"

நண்பன் விடை பெற்றுப் போனபின்பு இராமனாதனின் மனைவி அருகில் வந்து நின்றாள். "பெண் கல்யாணத்திற்கு வரன் தேடிக் கொண்டிருக்கிறோம். நமக்குத் தேவையான நேரத்திலே அவரால தரமுடியாம போய் விட்டால் நாம தான் அவஸ்தைப்படணும். பிறகு சங்கடப்படும் படியா ஆயிடப்போறது"

மனைவி நாசுக்காக எச்சரிக்கை செய்தாள். எனினும் ஒரு நம்பிக்கையின் அடிப்படையில் சுப்பிரமணியன் கேட்ட தொகையைக் கொடுப்பது என்ற முடிவுக்கு வந்தான்.

"பல சந்தர்ப்பங்களில் அவர் நமக்கு உதவியிருக்கிறார். பேச்சு, பழக்கம் எல்லாம் நன்றாகத்தான் இருக்கிறது. உங்களுக்கு அவர் மேல் முழு நம்பிக்கையிருந்தால் பணம் கொடுங்கள்."

மாலை வரை யோசனை செய்தவன் சுப்பிரமணியத்தின் பேரில் உள்ள தனிப்பட்ட நம்பிக்கை அடிப்படையில் அவனை அடுத்த நாள் வந்து பணம் வாங்கிக் கொண்டு போகும் படி நேரில் போய்க் கூறிவிட்டு வந்தான்.

பணம் பெற்றுக் கொண்டு போக அடுத்த நாள் வந்த சுப்பிரமணியன், அவன் கையுடன் எழுதிக்கொண்டு வந்திருந்த புரோநோட்டை நண்பனிடம் கையெழுத்துப் போட்டுக் கொடுத்து விட்டு, பணத்தை வாங்கிக் கொண்டான்.

பணத்தை மூன்று மாதத்தில் வட்டியுடன் சேர்த்துத்தந்து விடுவதாக உறுதி கூறியிருந்தான்.

என்னதான் ஒரு நம்பிக்கையில் பெருந்தொகையைக் கொடுத்து விட்டாலும் கூடவே உள்ளுக்குள் ஒரு பய உணர்வு தலைச்சுமையாய் ஏறி உட்கார்ந்து விட்டதால், அந்தச் சுமையுடனேயே மூன்று மாதங்களைக் கடந்தான் என்பது தான் உண்மை.

நண்பன் சொன்ன மூன்று மாதங்கள் மெதுவாக நகர்ந்து விட்டன. அவன் சொல்லியிருந்த அதே காரிப்பட்டி உதவிப்பொறியாளர் பையன் வரனும் நெருங்கிவருவது போலத் தெரிந்தது. பெண்ணின் ஜாதகத்தை அனுப்பி பையன் ஜாதகத்தை வாங்கிப் பார்த்து கடிதப் போக்குவரத்தில் எல்லாமே சாதகமாக அமைந்து பெண் பார்ப்பது வரையில் வந்து நின்றது.

"அவா பெண் பார்க்க எப்ப வரலாம் என்று கேட்டு அனுப்பியிருக்கா. வந்து பெண்ணைப் பார்த்து விட்டு சரியென்னு சொல்லி விட்டால் உடனே கல்யாணத்தை வச்சுக்கணுமே. மூன்று மாசத்துக்கு மேலே ஆயிடுத்து. சுப்பிரமணியம் பணத்தைப் பற்றி ஒன்றுமே பேசாமல் இருக்கிறாரே" மனைவி கிரிஜா சொன்னபோது அவனுக்கும் அவள் பயம் புரிந்தது.

நண்பனிடம் பணத்தேவையின் அவசியத்தையும் அவசரத்தையும் ஞாபகப்படுத்தியும் கூட அவனிடமிருந்து சாதகமான பதில் ஒன்றும் வரவில்லை. அதுமட்டுமன்றி தேவையின் அவசரத்தைத் தெரிந்து கொண்டதாகத் தெரியவில்லை.

'இவன் என்ன இப்படி இருக்கிறான் சொன்ன கெடுவுக்கு மேல் ஆகிவிட்டது எப்பொழுது கேட்டாலும் இதோ, அதோ என்று கூறுகிறானே தவிர, நிச்சயமாக ஏதும் சொல்லமாட்டேன் என்கிறான். தேடிப் போகின்ற போது சில நாள் வீட்டில் இருப்பதேயில்லை. அவன் மனைவி வாசலில் வந்து பதில் சொல்லி விட்டு உள்ளே போய்விடுகிறாள்.'

இராமனாதன் மனத்தில் கவலையும், பயமும் முழுமையாக ஆக்கிரமித்துக் கொண்டன.

'அவனுடைய சுபாவம், மனோபாவம், பொருளாதார வசதிகள் எதுவும் தெரியாமல் இவ்வளவு பெரிய தொகையைத் தூக்கிக் கொடுத்தது தவறாக இருக்குமோ? இந்தத் தவற்றை நான் செய்திருக்கக்கூடாதோ!'



ஒவ்வொரு நாளும் சுப்பிரமணியத்தைப் பற்றின கற்பனை பயங்களை வளர்த்துக்கொண்டு தவித்தான் இராமனாதன்.

'இன்று அவனை எப்படியாவது நேரில் சந்தித்து' கடுமையாகப் பேசிவிட வேண்டியது தான். பணம் வேண்டும் என்கிற போது எவ்வளவு நயமாகப் பேசினான்? நாணயஸ்தன் போல் குழைந்தான். இனி சாதாரண முறையில் பேசிப் பயன் இல்லை. கொஞ்சம் கண்டிப்பாக இருக்க வேண்டியது தான் என்ற முடிவுடன் மாலையில் அவன் வீட்டிற்குச் சென்ற போது சுப்பிரமணியத்தின் வீடு பூட்டியிருந்ததைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தான்.

"யாரைப் பாக்கிறீங்க நீங்க? சுப்பிரமணியத்தையா?"

"ஆமாம்."

"நானும் ஒருவாரமா பார்க்கணும்னு முயற்சி செய்றேன் எப்ப வந்தாலும் வீடு பூட்டியே கிடக்கு. அக்கம் பக்கத்திலே யாரைக் கேட்டாலும் எதுவுமே தெரியாதுங்கறாங்க"- என்றார் அவர். பூட்டிக்கிடக்கும் சுப்பிரமணியத்தின வீட்டு வாசலில் நின்று கொண்டு. அந்தப் புதிய மனிதர் அத்துடன் நிறுத்திக் கொண்டிருந்தால் பரவாயில்லை.

"ஊர் முழுதும் கடன் வாங்கிட்டார் போல இருக்கு. சில சமயம் வீட்டில் இருந்து கொண்டே மனைவியைவிட்டு வீட்டில் இல்லை என்று சொல்லச் சொல்லிடறதாப் பேசிக்கறாங்க. வீட்டில் இருந்தாத்தானே இந்தத் தொல்லை. எங்காவது தலை மறைவாகிவிட்டால் யார் வந்து தேடப் போறாங்க?" என்று இப்படி மேலும் ஒரு தகவலை ரொம்ப சாதாரணமாகச் சொன்னது இராமனாதனின் உடம்பை வியர்க்க வைத்து விட்டது.

சுப்பிரமணியத்தின் வீட்டு வாசலில் நின்று பேசிக் கொண்டிருக்கும் போதே அடுத்த வீட்டுக்காரர் வெளியே வந்து நின்றார். அவரிடம் இராமனாதன் சுப்பிரமணியத்தைப் பற்றி விசாரித்தான்.

"ஸார்! தயவு செஞ்சு அவரைப் பற்றி ஒன்றும் கேட்காதீர்கள். நாங்க மத்தவங்க விஷயத்திலே தலையிடறதில்லை. தினமும் நாலு பேர் வந்து காலையிலும் சாயங்காலத்திலும் கேட்டு கிட்டேதான் இருக்காங்க. வீடு தான் பூட்டியிருக்குதே. பார்த்துவிட்டுப் போயிண்டே இருக்க வேண்டியது தானே? பக்கத்து வீட்டுக்காரர் எங்கே போறார். எப்போ வரார்ன்னு பாக்கறது தான் எங்க வேலையா?"

பக்கத்து வீட்டுக்காரர் எரிச்சலுடன் கூறிவிட்டு உள்ளே போய்விட்டார்.

'இவர்கள் எல்லாம் சொல்லுவதைப் பார்த்தால் சுப்பிரமணியத்தைப் பற்றி நாம் கொண்டிருந்த நல்ல அபிப்ராயங்கள் எல்லாம் பொய்யாய்ப் போய்விடும் போலிருக்கிறதே! அவனை நம்பி இவ்வளவு பெரிய தொகையைத் தந்தது மிகப் பெரிய தவறாக இருக்குமோ? அந்தப்பணத்தை நம்பி. பல எதிர்காலத் திட்டங்கள் போட்டிருந்தோமே!! கல்யாணம் வாசல் கதவைத் தட்டிக்கொண்டு நிற்கிறதே! மற்றவர்கள் சொல்லுவதுபோல் அவன் எங்காவது தலைமறைவாகப் போய் விட்டானா? அப்படியானால் பணம்? அவன் எழுதிக் கொடுத்த பிராமிஸரி நோட்டை மற்றவர்கள் சொல்லுவது போல நாக்கில் வழித்துக் கொள்ள வேண்டியது தானா? 'வீடு இருக்கிறது. அடமானத்தில் முழுகிப் போய் விடும் போலிருக்கிறது' என்று சொன்னதெல்லாம் வெறும் பொய் தானா? தினம் காலையிலும் மாலையிலும் நாலு பேர் வந்து கேட்கிறார்களாமே! எல்லாரும் கடன்காரர்கள் தானா?'

கிரிஜாவிடம் சொன்னால் ரொம்பவும் அதிர்ச்சி அடைந்து விடுவாளே! இப்பொழுது தான் கொஞ்சம் கொஞ்சமாக உடல் நலம் தேறி வருகிறாள்.

ஏமாற்றம்... குழப்பம்.... அதிர்ச்சி! சுப்பிரமணியத்தை இன்றும் பார்க்க முடியாத கோபம். அவனைப் பற்றிப் பிறர் சொன்ன அபிப்ராயங்களினால் ஏற்பட்ட மனச்சோர்வு ஆகியவற்றால் நெஞ்சு படபடக்க சாலையோர மர நிழலில் சற்று நேரம் நின்றான்.

இதை அடுத்து என்ன செய்வது? ரொம்பவும் தளர்ந்து போய் வீட்டிற்குத் திரும்பினான். தூரத்தில் வரும் போதே மனைவி கிரிஜா வாசலில் வந்து நிற்பது தெரிந்தது.

'எனக்காகத்தான் அவள் காத்துக் கொண்டு நிற்பாள். போனவுடன் சுப்பிரமணியத்தைப் பார்த்தேளா. பணம் எப்போ திரும்பித்தரதா சொன்னார் என்று



ஆர்வத்துடன் கேட்கப் போகிறாள். நான் வழக்கமாகச் சொல்லும் 'அவன் வீட்டில் இல்லை கிரிஜா! இன்றும் அவன் வீடு பூட்டித்தான் கிடந்தது' என்று நான் சொல்லப்போகும் பதிலால் மனம் இடிந்து போகப் போகிறாள். இன்றும் அவள் எதிர் பார்க்கிற நல்ல செய்தி என்னிடம் இல்லை.

தளர்வான நடையுடன் வீட்டை நெருங்கும்போது அவள் முகத்தில் லேசான புன்னகையொன்று நெளிந்தோடிக் கொண்டிருப்பதைப் பார்த்தான் இராமனாதன்.

'என்னிடமிருந்து எதிர்பார்க்கும் ஒரு நல்ல செய்திக்காகவும் அப்புன்னகை முன்கூட்டியே மலர்ந்திருக்கலாம். இல்லையென்றால் கோடிவீட்டு காமாட்சி அவள் முன்பு எப்பொழுதோ வாங்கிக் கொண்டுபோன கைமாத்துக் கடனான ஐந்நூறு ருபாயை அவளே கொண்டு வந்து கொடுத்திருப்பாள். இந்த அற்ப சந்தோஷத்தினால் ஏற்பட்ட மலர்ச்சியாய்க் கூட இருக்கலாம்.

இராமனாதன் வீட்டை நெருங்கி மனைவி கிரிஜாவைத் தாண்டி உள்ளே போகும் போதே "நாம மோசம் போயிட்டோம் கிரிஜா! நான் அவனுக்குப் பணம் தந்திருக்கவே கூடாது. அவனுக்கு ஊர் முழுவதும் கடனாம். நிறையப்பேர் பூட்டிக்கிடக்கிற வீட்டைப் பார்த்துட்டு போயிண்டு இருக்காளாம். எங்கே போனான் என்று தெரியலையாம்."

கணவனைத் தொடர்ந்து கிரிஜா உள்ளே வந்தாள்.

"அப்படியெல்லாம் இருக்காது. ஒரு மனுஷனுக்கு கஷ்டகாலம்னு வந்தா ஆளாளுக்கு ஏதாவது அவதூறு பேசுவாங்க. அவதூறு பேச நம்ம ஜனங்களுக்கு சொல்லியா தரணும்?"

"இல்லை கிரிஜா! சுப்பிரமணியத்தோட பக்கத்து வீட்டுக்காரர் சொல்றார்."

"அந்தப் பக்கத்து வீட்டுக்காரருக்கு உங்க நண்பர் மேலே ஏதோ பொறாமை உண்டாம். அவர்தான் இப்படி கதைகட்டி விடுகிறாராம்."

"கிரிஜா! நீ விஷயம் புரியாமல் பேசாதே. நாம கொடுத்த பணம் இனிமே திரும்பி வரும்ங்கற நம்பிக்கை மெதுவா எனக்குக் குறைஞ்கண்டு வருது."

இப்பொழுது தான் கிரிஜா மீண்டும் ஒரு மாதிரியாக சிரித்தாள்.

"உங்க நண்பரைப் பற்றி முதல்லே நான்கூட அப்படித்தான் நினைத்தேன். ஆனால் அவர் அப்படிப்பட்டவர் இல்லை."

மனைவியின் பேச்சு இராமனாதனுக்கு எரிச்சலூட்டியது. 'இவ்வளவு பூடகமாகக் கூறியும் ஏதோ ஒரு நம்பிக்கையுடன் இருக்கும் இவளிடம் சுப்பிரமணியன் தலைமறைவாகி விட்டான் என்ற செய்தியை எப்படிக் கூறுவது? எப்படி நம்ப வைப்பது?'

சட்டையைக் கழற்றி ஆணியில் மாட்டும் போது, ஸ்வாமி அலமாரியில் பெரிய மஞ்சள் நிறப்பை இருப்பதைப் பார்த்தான். இராமனாதன் பின்னால் வந்து நின்று கிரிஜா அந்த மஞ்சள் நிறப்பையை அவனிடம் சிரித்துக் கொண்டே எடுத்துக் கொடுத்தாள்.

"நீங்க சுப்பிரமணியத்தைத் தேடிக் கொண்டு வெளியே போனவுடன் அவர் இங்கே வந்தார். அவர் நம்மிடம் வாங்கிய பணம், அதற்கு உண்டான வட்டி எல்லாவற்றையுடம் கொடுத்தார். அவர் எழுதிக் கொடுத்த ப்ரோநோட்டைத் தேடினேன். அது இப்போ அவசரமில்லை நீங்களே கிழிச்சுப் போட்டுடுங்கோன்னு சொல்லிட்டுப் போனார்.

"சொன்ன காலக் கெடுவில் பணம் திருப்பித் தர முடியாததற்கு மன்னிப்புக் கேட்டார். அவருக்கு வர வேண்டிய பணம் வரக் கொஞ்சம் தாமதமாகிவிட்டதாம். எல்லாவற்றையும் விவரமா உங்களிடம் சொல்ல சாயந்தரமா வருவதாகக் கூறினார். அவர் மட்டும் வரலையாம். காரிப்பட்டி இன்ஜினியர், அவர் பையன், அவர் மனைவி எல்லாரையும் பெண் பார்க்கக் கையோட அழைச்சிண்டு வராராம். தயாரா இருக்கும்படி சொல்லிட்டுப் போனார்!"

மனைவி கொடுத்த அந்தப் பணப் பையைக் கைகளில் வாங்கும்போது இராமனாதனின் கண்கள் கலங்கிப் போயிருந்தன.

நாணயம் என்பது கண்ணுக்குப் புலப்படாத ஒரு நுட்பமான மன இயக்கம். இது வெறும் கரன்ஸியிலும் சில்லறைக் காசிலுமாகப் போய்ச் சேர்ந்து அளவு கோலாகி விட்டது.

நாணயம்! அது வெறும் வார்த்தையில்லை; செயல்.

★★

ச.சிவஸ்ரீ



## புதிதாய் மனிதம்

பூவாய்ப் பூவாய்
பிறந்திடும் மனிதம்

ஊனாய் உயிராய்
உருவாகி வளர்ந்தபின்,

காயாய்க் காயாய்க்
கசப்புணர்வுக் காயங்கள்,

நோயாய் நோயாய்
நுரைத்த நயவஞ்சகங்கள்,

தீயாய்த் தீயாய்த்
தீவிர வாதங்கள்,



வேராய் வேராய்
விழுதூன்றும்
வன்முறைகள், - இதில்

சருகாய்ச் சருகாய்
சமத்துவ நேசங்கள்!



கனவால் மனிதம்
கலைந்திடும் முன்பு...

புதிதாய் உதயம்
புலருமா இனியும்?!

***

# வண்ண விளக்குகளில் இறை வடிவங்கள்

என்.ஆர்.கே.





வண்ண போட்டோக்கள்: யோகா

விழாக் கொண்டாட்டங்களில் கண்ணைக் கவரும் தொடர் வண்ண விளக்குகள் ஒருபுறம் விழாக்களின் பெருமையைப் பறைசாற்ற - வண்ண விளக்குகளால் வடிவமைக்கப்படும் ஒளி உருவங்கள் விழாவிற்கு மேலும் சிறப்பளிப்பது இன்று வழக்கமாகி விட்டது.

தூரத்திலிருந்து பார்க்கும் போதே - ஏதோ விழா நடப்பதற்கான அறிகுறிகளை இந்த ஒளி உருவங்கள் அறிவித்து விடுகின்றன.

விநாயகர், அம்மன், முருகன், லக்ஷ்மி, பெருமாள், சிவன்-பார்வதி, ஐயப்பன் போன்ற தெய்வ உருவங்கள் மட்டுமன்றி; அரசியல் கூட்டங்களில் பல அரசியல் தலைவர்களின்



ஒளி உருவங்களும் வண்ண விளக்குகளால் உயர்ந்து நிற்கின்றன.

'லைட்டிங் இல்லுமினேஷன்' - சீரியல் செட், கட் அவுட் என்றழைக்கப்படும் இந்த் ஒளி உருவங்கள் எப்படி வடிவமைக்கப்படுகின்றன? - சென்னை, மேற்கு மாம்பலம், கண்ணா சவுண்ட் சர்வீஸ், திரு.எம்.கே.ரமேஷ் விவரித்தார்.

"முதலில் எந்த உருவம் ஒளி உருவங்களாகச் சித்திரிக்கப்பட வேண்டுமோ, அந்த உருவத்தின் போட்டோவை வைத்து எந்த அளவிற்கு ஒளி உருவம் தேவைப்படுகிறதோ அந்த அளவிற்கு உயரத்தையும், அகலத்தையும் கணக்கிட்டுக் கொள்வோம்.

உதாரணமாக, விநாயகரை எடுத்துக் கொள்வோம். குறைந்தபட்சம் 15 அடி உயரத்தில் 8 அடி அகலத்தில் விநாயகரை அமைப்பதாகக் கணக்கிட்டுக் கொள்வோம்.

இதற்கு 15 அடி உயரம், 8 அடி அகலத்தில் மூங்கில் குச்சிகளால் ஓர் அடிப்படை அமைப்பை உருவாக்குவோம். இந்த மூங்கில் குச்சிக்கு 'நரம்பு பத்தை' என்று பெயர். சிறு கம்பிகளாலும், சின்னச் சின்ன ஆணிகளாலும் உருவாகும் அடித்தளத்தைத் தனியே தயாரித்து விடுவோம்.

பிறகு இந்த அளவிற்கேற்ப பெரியதாக, தரையில் விநாயகரை வரைவோம். இதற்கென்றே சில ஓவியர்கள் இருக்கிறார்கள். அவர்கள் வரைந்த ஓவியத்தின் மீது 'நரம்புப் பத்தையால்' செய்யப்பட்ட அடித்தளத்தை வைப்போம்.

நரம்புகள் இல்லாது சீவப்பட்ட மூங்கில் குச்சிகளை நீரில் ஊற வைத்து எடுப்போம். இதற்கு 'நொச்சிப் பத்தை' என்று பெயர். இது தேவையான அளவிற்கு வளையும். இந்தப் பத்தைகளைக் கொண்டு அடித்தள அமைப்பின் மீது வரையப்பட்டுள்ள உருவத்திற்கேற்ப 'நொச்சிப் பத்தை'களைக் கட்டுவோம்.

விநாயகர் உருவத்தை மூங்கில் பத்தைகளால் தயாராக்கி விடுவோம்.

இதன் மீது மின் கம்பி (ஒயர்) இணைப்புகள் அமைக்கப்படும். ஒயரிங் அமைக்கிற போது அரை இன்ச் இடைவெளிக்கு ஒரு பல்பு வருவதுபோல் பார்த்துக் கொள்வோம். ஒளி உருவத்திற்கு பின் **(PIN)** டைப் பல்புகளும், ஸ்குரு டைப் பல்புகளும் தேவைப்படும். பின் டைப் பல்புகளில் 6 வோல்ட், 12 வோல்ட் பல்புகள் - ஸ்குரூ டைப் பல்புகளில் 6 வோல்ட் பல்புகள் அமையும்.

உருவத்தின் நுட்பமான - மிக வளைந்து வரும் பகுதிகளுக்கு ஸ்குரூ டைப் 6 வோல்ட் பல்புகள் அமைத்தால் எவ்வளவு தூரத்திலிருந்து உருவத்தைப் பார்த்தாலும் துல்லியமாக இருக்கும். மற்ற பாகங்களுக்குப் பின் டைப் பல்புகளை அமைப்போம். ஒரு 'கட் அவுட்'டிற்கு கிட்டத்தட்ட 2500 பல்புகள் தேவைப்படும்.

இதில் சில மேஜிக் வேலைகளும் செய்யலாம். அதாவது மகாலக்ஷ்மி உருவத்தின் கையிலிருந்து தங்கக் காசுகள் கொட்டுவதைப் போல் செய்ய வேண்டுமென்றால், எலக்ட்ரானிக் ரிலே சேஸர் உதவியுடன் - பல்புகளை அணைத்து, அணைத்து எரிய வைப்பதன் மூலம் காசுகள் கொட்டச் செய்யலாம்.

அடுத்து உருவத்திற்கேற்ப கலர் பல்புகள். முகத்திற்கு—கை-கால்களுக்கு- ஆடைக்கு- அணிகலன்களுக்கு விதவிதமான கலர் பல்புகள். இப்படித்தான் இந்த ஒளி உருவங்கள்





தயாரிக்கப்படுகின்றன" என்றார் எம்.கே.ரமேஷ்.

இதற்குச் செய்யப்படும் செலவு சற்று அதிகமானதே. மூங்கிலுக்கு, ஓவியருக்கு, மூங்கில் பத்தைகளை வைத்துக் கட்டுபவருக்கு, கம்பி-ஆணிகளுக்கு கிட்டத்தட்ட இரண்டாயிரம் ரூபாய். இப்படிப்பட்ட ஒளி உருவங்களை அமைத்து ஒளிர விட ஒரு நாளைக்கு சுமார் 400 ரூபாய் ஆகிறது.

இது கட்டுப்படியாகாது என்பதால் நிரந்தரமாக - அடிக்கடி தேவைப்படும் சில உருவங்களை அமைத்துக் கொள்கின்றனர். இப்படி பரவலாக ஒளி உருவங்களை அமைப்பதன் மூலம் மூலாதாரப் பணத்தைச் சமன் செய்கிறார்கள். அதற்குப் பிறகுதான் லாபமெல்லாம்.

"வேலை அதிகம்தான். வாடிக்கையாக இந்த மாதிரி ஆர்டர்கள் கிடைத்தால்தான் லாபம் பார்க்க முடியும். புதிய உருவம் செய்ய செலவு கொஞ்சம் அதிகமாவதைத் தவிர்க்க முடியாது" என்றார் புறப்படும்போது.

# ஆரூர் திருக்கோயில் இராசகோபுரங்கள்...

ராஜகுரு

பண்டைய தமிழ் மன்னர்களும், பிற்காலச் சோழ மாமன்னர்களும், நாயக்க மன்னர்களும், மராட்டிய மன்னர்களும் பல குளங்களையும், ஏரிகளையும் வெட்டினார்கள். ஆறுகள் பல வெட்டினார்கள். ஆறுகளுக்கு கரைகளும், அணைகளும் கட்டினார்கள். இவற்றிற்கெல்லாம் மகுடம் வைத்ததுபோல் பல பெரும் திருக்கோயில்களையும் வானளாவிய அழகுமிகு அரசகோபுரங்களையும் எழுப்பி தங்களின் பெயரும் புகழும் காலங்காலத்திற்கு இம்மண்ணில் நிலைத்து நிற்குமாறு செய்திருக்கிறார்கள்.

அரசர்களோடு பல அரச மகளிரும், அதிகாரிகளும் கூட பல ஆலயங்களையும் அறநிலையங்களையும் கட்டிப் பெரும் சேவை புரிந்திருக்கிறார்கள்.

ஒவ்வோர் ஆலயமும் அந்தந்தக் காலங்களின் முகம் காட்டும் கண்ணாடிகளாகத் திகழ்கின்றன. பெரும் வரலாற்றுப் பெட்டகங்களாகவும், ஏராளக் கல்வெட்டுகள், ஓவியங்கள், பட்டயங்கள், படிமங்கள் போன்ற சான்றுகளையும் புராண இதிகாசக் காட்சிகளையும் தன்னகத்தே தாங்கி நின்று நம்மை வியக்க வைக்கின்றன.

பல திருக்கோயில்கள் தமிழ் மன்னர்களின் வீரத்தையும் கலைகள், கல்வி, ஆளுமைத்திறம் போன்றவற்றை இன்றும் பறை சாற்றுவதோடு, சமுகத்திற்கும் கலை, ஆன்மிகம் ரசனை போன்ற உணர்வுகளை ஊட்டுகின்றன.

இதுபோல் தமிழகத் திருக்கோயில்களில் தொன்மைப் பெருமைகளும், தொன்மையான பல வரலாற்றையும் கொண்ட திருவாரூர் தியாகேசப்பெருமான் திருக்கோயிலின் திருக்கோபுரங்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு அரசர்களால் எழுப்பப்பட்டுள்ளன. இத்திருக்கோயில் இறைவனின் பண்டைய திருநாமம் ஸ்ரீ வீதிவிடங்கப்பெருமான். அதுவே இடைக்காலத்தில் ஸ்ரீ தியாகேசப் பெருமான் என மாறியுள்ளது.

மாமன்னன் இராஜராஜசோழன் காலத்திலிருந்து புதிய உத்திகளோடு புத்துயிர் பெற்ற சோழர்காலக் கட்டடக்கலை, கோபுரக்கட்டுமானம், கலைவடிவங்களின் வெளிப்பாடுகள் போன்ற பல அம்சங்கள் திருவாரூர் திருக்கோயிலின் இராசகோபுரங்களில் அழகோச்சுவதைக் காண முடிகிறது.

### கீழ்த்திசை திருக்கோபுரம்

திருவாரூர் திருக்கோயிலின் பிரதான நுழைவாயில் கீழைத் திருக்கோபுரத்தின் பெருவாயிலே. இக்கோயிலின் பெரிய திருக்கோபுரமும் இதுவே. 110x60 அடி அடித்தளமும் 120 அடி உயரமும் கொண்டு நெடிதுயர்ந்து எழில்காட்டும் இக்கோபுரம் தெற்கு வடக்கில் 666 அடி, கிழக்கு மேற்கில் 846 அடிகளும், 30 அடி உயரமும் உடைய திருமதில்களைப் பெற்றுப் பரந்த நிலப்பரப்பைக் கொண்டுள்ளது.

இக்கீழை இராசகோபுரம், சோழ மாமன்னன் கங்கைகொண்டானின் மகள் வயிற்றுப் பேரனான முதலாம் குலோத்துங்களின் பேரனான மூன்றாங் குலோத்துங்கன்



தெற்கு கோபுரம்

என்ற மாவீர மாமன்னனால் எழுப்பப்பட்டுள்ளது. இப்பெருவீரன் கி.பி.1178 முதல் 1218 வரை சோழப்பெருநாட்டை ஆட்சி புரிந்தவன். இவன் காலத்தில் பல முறை பாண்டியர்களோடும் சிங்களப் படைகளோடும், அவர்கட்குத் துணை வந்த சேரர்களோடும் போர்கள் நடந்துள்ளன.

சோழ சாம்ராஜ்யத்திற்குட்பட்ட நாடாகத் திகழ்ந்த பாண்டிய அரசில் அடிக்கடி ஆட்சி மாற்றமும், தாயாதிகளின் பூசல்களும் நடந்து சோழப்பெரும்படையின் உதவியோடு பாண்டிய ஆட்சி நிறுவப்பட்டு வந்துள்ளது. பாண்டிய ஆட்சிக்குப் பாதுகாவலாக சோழப்படையின் ஒரு பிரிவு காவற்படையாக மதுரையில் நிறுத்தப்பட்டுள்ளது.

கி.பி.1180க்கு முன் பாண்டிய மன்னன் வீரபாண்டியனோடும் அவனுக்குத் துணை நின்ற சிங்களப் படைகளோடும் மூன்றாங்குலோத்துங்க சோழ மன்னன் போரிட்டு வென்றான். வென்ற நாட்டைத் தன்னிடம் அடைக்கலம் புகுந்த விக்கிரமபாண்டியன் என்பவனுக்கு வழங்கினான்.

மீண்டும் 1188இல் பாண்டிய நாட்டில் போர் நடந்தது. மதுரைக்குக் கிழக்கேயுள்ள நெட்டூரில் அப்போர் நிகழ்ந்துள்ளது. பாண்டிய நாட்டைக் கைப்பற்றப் போரிட்ட வீரபாண்டியன் போரில் தோற்றான். பின்பு சேரமன்னனின் துணையோடு குலோத்துங்கனிடம் அடைக்கலம் புகுந்தான். அவனுக்குப் பாண்டிய நாட்டின் ஒரு பகுதியை மீண்டும்



வடக்கு கோபுரம்

அளித்தான். மற்றொரு பகுதியை ஆண்டு வந்த பாண்டிய மன்னனான சடையவர்மன் குலசேகரபாண்டியன் என்பான் நன்றி மறந்து குலோத்துங்கனோடு போர் புரிய யத்தனித்தான். இதையறிந்த குலோத்துங்க சோழன் கருவூரில் விஜயபாபிஷேகம் செய்துகொண்டு பாண்டி நாட்டைத் தாக்கினான். இப்போர் கி.பி.1202க்கு முன் திருப்பத்தூர் தாலுக்கா மட்டியூர் கழிக்கோட்டை என்னும் இடங்களில் நிகழ்ந்துள்ளது.

அப்போரில் குலசேகரபாண்டியன் புறமுதுகிட்டுத் தப்பியோடினான். குலோத்துங்கனால் பாண்டிய நாட்டு அரண்மனையும், மாட மாளிகைகளும் தரைமட்டமாக்கப்பட்டு உழுது வரகு விதைக்கப்பட்டதாம். பின்பு சேரநாட்டையும் தாக்கி வென்று மதுரை மாநகரின் அரியாசனத்திலமர்ந்து வீராபிஷேகம், விஜயாபிஷேகம் இரண்டும் செய்து கொண்டு, 'திரிபுவன வீரதேவன்' என்ற பட்டமும் புனைந்துகொண்டான். சேர, சோழ, பாண்டிய நாடுகளுக்குத் தானே தலைவனென இதன் மூலம் அறிவித்தான்.

பின்பு பாண்டியநாட்டுப் பண்டாரத்தில் குவிந்திருந்த பொன்–மணி–முத்துகள் போன்ற செல்வங்களையும், திறைப் பொருள்களாகக் கிடைத்த பெருஞ்செல்வக் குவியலையுப் சோழ நடு நாட்டுக்குள் கொண்டு வருமுன், ஆலவாய்ப் பெருமான் முன் வணங்கி நின்றான். அப்பெருமானை மதுரை மாநகரின் திருவீதிகளில் பவனி வரச்செய்து மனம் உருகி நின்று வழிபட்டான்.

சிவபெருமானோடு தன்னை ஐக்கியப்படுத்திக்கொண்ட திரிபுவன வீரதேவனாகிய மூன்றாங்குலோத்துங்கன், பாண்டிய நாட்டிலும், சேரநாட்டிலும் திரட்டிய செல்வங்களை, திரிபுரம் எரித்த சிவபெருமானுக்கே அளிக்க ஆவல்கொண்டமையின் வெளிப்பாடே திருவாரூர் திருக்கோயிலின் கீழ்த்திசைத் திருக்கோபுரம்.

*'சிறைகொண்ட புனல்வையைச் சேரபாண்டியன் மண்டலத்து*
*இறைகொண்ட பசும்பொன்னும் இறையிலியும் எயிற்புலியூர்*
*ஆடும் அம்பலவாணர்கூடி வாய்ந்த திருநாட் கண்டருளும்*
*பாடகக்காற் பைங்கிளிக்கும் பைம்பொன் மதில் திருவாரூர்*
*வானவற்கும் திரிபுவன வீரிச்சர அருந்தவற்கும்*
*தேன் விரிசடைத் திரு ஆலவாய்ச் செழுஞ்சுடர்க்கும்*
*கொடுத்தருளி*

என இப்பெருமன்னனின் மெய்க்கீர்த்திகள், போரில் வென்று கொண்டுவந்த செல்வங்களை இறைப்பணிக்கே கொடுத்தமையைத் தெரிவிக்கின்றன.

கீழைத் திருக்கோபுரக் கட்டுமானத்தை மூன்றாங் குலோத்துங்க சோழனின் கலைக்கோயில் நிர்மாணப் பாணியாகவே கருத முடிகிறது. இதைப்போன்றே இவனால் எழுப்பப்பெற்ற திருவிடைமருதூருக்கு அருகில் உள்ள திருபுவனத்தின் கம்பகேஸ்வரர் திருக்கோயிலின் திருக்கோபுரமும் விளங்குகிறது.

12, 13ஆம் நூற்றாண்டு சோழர்காலக் கட்டடக்கலை நிர்மாணம், குறிப்பாக குலோத்துங்க சோழனின் தனிவிதமான பாணி என்பதற்கான ஏராளமான அம்சங்கள் கீழைத்திருக்கோபுரத்தில் அமைந்திருக்கின்றன.

இத்திருக்கோபுரத்தின் பெரியவாயில் நெடிதுயர்ந்தும், ஒரே கல்லால் ஆன நிலைக்கால்களைப் பெற்ற இரண்டு நிலை வாயில்களுடனும் திகழ்கிறது. முதல்நிலைக்கு முன்பு பக்கத்திற்கு மூன்றாக ஆறுகால்கள் பீடத்தில் சிம்ம சிற்பத்துடன் அமைக்கப்பட்டுள்ளன. இதே போன்று இரண்டாம் நிலைக்கு அடுத்தும் ஆறுகால்கள் சிம்ம சிற்பத்துடன் வைத்து, முதல்நிலையில் மரக்கதவும் பொருத்தப்பட்டுள்ளது. முதல் நிலைக்கும் இரண்டாம் நிலைக்கும் இடையே உள்ள பகுதியில் இருபுறமும் இரு அடுக்குள்ள மாடமாகத் தடுக்கப்பட்டுள்ளது. இதில் ஒரு பக்கம் கோபுரத்தின் மேல்நிலைக்குச் செல்லும் படிகள் கட்டப்பட்டுள்ளன.

முதல் தளம் வரை முழுதும் கருங்கற் கட்டுமானமாகவும் இதற்கு மேல் 6 பிரஸ்தளங்களும் ஏழு துவாரங்களும் உள்ளன. இவையனைத்தும் சிகரப்பகுதி உட்பட செங்கற் கட்டுமானமாகும்.

உபபீடம், வாயிற்படிகள், யானைச் சிற்பங்கள் வெளிப் புறத்தில் காலப்போக்கில் மண்மேடிட்டு பூமியில் புதைந்தும், கோபுரத்தின் உட்புறம் (கோயில் பிராகாரம்) புதைபடாமலும் காணப்படுகிறது. குமுதவரியில் தொடங்கி, கம்பு, கழுத்து, பாதவர்க்கம் முதலியவை அமைந்துள்ளன. இதில் அடுத்தடுத்து சில கோஷ்டங்களும், கால்களும், பாயும் சிம்மங்கள், புரவிகள், யாளிகள், மற்றும் போர் வீரர்களின் சிற்பங்களும் கட்டப்பட்டுள்ளன. ஆங்காங்கே உள்ள கால்களின் பலகைகளின் மேலும், பொதிகைகளை ஒட்டியும் அழகிய நடன மங்கையர் சிற்பங்களும், மத்தளம் வாசிப்போர் சிற்பங்களும் இருந்து பல சிதைந்து காணப்படுகின்றன. முதல் அடுக்குக் கபோதகத்திற்குக் கீழே உள்ள எழுதகம் என்னும் பந்தி பூதகணங்கள் அமைக்கப்பெற்றுத் திகழ்கிறது.

கபோதகம் கூடுகள் பெற்றும், அதற்கு மேல் யாளவரியும், அதனையொட்டி ஒருவர் நடந்துசெல்லுமளவு தளமும் அமைந்துள்ளது. தளத்தில்மேல் கனதி, கம்பு, ஊர்த்த பத்மம், குமுதம், கழுத்து, பலகை போன்ற வரிசைகள் மிக மிக அழகாகத் திகழ்கின்றன.

முதல் அடுக்குக் கபோதகத்தின் கீழ் உள்ள பகுதியில் வெளிப்புற மதிலை ஒட்டிய தென்திசையிலிருந்து சிம்ம பீடம் உள்ள தூண்களுக்கிடையே சில விலங்குகளும் வீரர்களின் சிற்பங்களும் கொண்ட சிற்பவரிசையை மூன்றாங் குலோத்துங்கனின் பாணி என சிற்பக்கலை வல்லுநர்கள் கூறுகின்றனர். இதில் இரண்டு புரவிகள் முன்கால்களையும், தலையையும் உயர்த்திப் பாயும் நிலையில் காணப்படுகிறது. அதன்மேல் இரண்டு வீரர்கள் வாளும் கேடயமும் ஏந்தி, போர் புரியத் தயார் நிலையில் உள்ளனர். குதிரைகளின் கீழ் இரண்டு வீரர்கள் உள்ளனர். இதனை ஒத்தே பாயும்


மேலைக் கோபுரம்

இரண்டு சிங்கங்கள் மீது இரு போர் வீரர்களும் கீழே இரண்டு வீரர்களும் உள்ளனர். அடுத்து சிங்க உடலும் மனிதத்தலையும் உள்ள விசித்திரமான விலங்கு பாயும் நிலையில் உள்ளது. அதன் முகத்தில் அழகிய மீசைகளும் உள்ளன. கோஷ்டங்களை பஞ்சரங்கள் அணிசெய்கின்றன.

பஞ்சரங்களின் மத்தியில் தயிர்கடையும் பெண் அருகே கண்ணன் குழந்தையாக நிற்கும் சிற்பமும், பறவை ஒன்றின் வாயைப் பிளக்கும் சிற்பமும் அணி செய்கின்றன. பலகைகளின் மேலும், கபோதகத்தின் கீழும் நடனக்கலையின் உயரிய முத்திரைகளைப் பாவையர் அறுவர் ஆறுவிதமாக ஆடிநிற்கும் அரிய சிற்பங்கள், மத்தளம் வாசிப்பவன் சிற்பம் ஆகியன உயரிய சிற்ப அழகுகள் வெளிப்படப் படைக்கப்பட்டுள்ளது. பாவையரின் நடனமிடும் தோற்றம் ஒப்பற்ற கலை இலக்கணங்களுடன் பேசிடும் உயிர் ஓவியங்களாகப் பிரமிக்க வைக்கின்றன.

பூதவரியில் பலவகை பூதங்களின் தாளமிடும் சிற்பங்கள். கபோதகத்திற்கு மேல் தளத்திற்கு இடைப்பகுதியில் ஐந்து தேவ கோஷ்டங்கள் உள்ளன. முதல் கோஷ்டத்தில் சிவபெருமானின் திருவுருவம் நான்கு கரங்களும் கரண்ட மகுடமும் பெற்று மூன்று சிம்மங்கள் உள்ள பீடத்தின் மேல் நின்ற கோலத்தில் வடிக்கப்பட்டும், வலக் கரங்கள் அபயமுத்திரையும் மழுவும், இடக் கரங்கள் வரதமும் பாசமும் கொண்டும் அமைக்கப்பட்டுள்ளன.



இதனை அடுத்த இரண்டாவது கோஷ்டத்தில் நாகராஜன் தலையின் மேல் ஐந்து தலை அரவும் வலக் கரங்கள் அபயமும் நாகமும் கொண்டு சிறு சிதிலத்தோடு, நாகம் ஏந்தி நின்ற கோலத்தில் சிற்பமும், சிவபெருமான் சிம்ம பீடத்தில் மேல் ஜடாமகுட தாரியாக திரிசூலத்துடன் உள்ள சிற்பமும் உள்ளன.

கோபுரத்தின் கீழ்ப்புற வாயிலை ஒட்டிய வலப் புறத்தின் கீழ்ப்பகுதியில் பாயும் சிங்கத்தின் மேல் உள்ள வீரன் சிற்பமும் நான்கு கோஷ்டங்களும் உள்ளன. இதில் ஒரு கோஷ்டத்தில் பிற்காலத்தில் விநாயகர் கோயில் ஒன்று கட்டப்பட்டுள்ளது. சிம்மக் கால்களின் பலகைகளில் இருந்த உயரிய சிற்பங்கள் பல அகற்றப்பட்டுள்ளன. இப்பகுதிக்கு மேலுள்ள கோஷ்டத்தில் தேவியின் நின்றநிலை சிற்பமும் காணப்படுகிறது. இதனை அடுத்த கோஷ்டத்திலும் சிவபெருமானின் சிற்பம் காணப்படுகிறது.

வாயிலை ஒட்டிய கோஷ்டத்தில் எழில் மிகுந்த கறுப்பு வண்ணக்கல்லில் வடிக்கப்பட்ட துவாரபாலகர் சிற்பம் அலங்கரிக்கிறது. இதே போன்று வாயிலை ஒட்டிய இடப்புறத்தின் கீழ்ப்பகுதியில் மூன்று யாளிகளும் போர் வீரர்கள் சிற்பங்களும் கோஷ்டங்களும் உள்ளன. தோரணங்களில் மிக அழகிய காளி, மகிஷாசுரமர்த்தினி சிற்பங்கள் வடிக்கப்பட்டுள்ளன.

பிற்கால இணைப்பாக சுப்ரமணியர் கோயில் ஒன்றும் இணைந்துள்ளது. இதற்கு மேலே அரிய சிற்பமான சூரியதேவன் சிற்பம் நான்கு கரங்களுடன், ஒளிவட்டம் தெரிய சிம்மபீடத்தில் நிற்கும் வண்ணம் சிறந்த சிற்ப நுணுக்கங்களுடன் இடம் பெற்றுள்ளது. இப்படி வெளிப்புறம் போன்றே உட்புறமும் ஏராளமான இறையுருவங்கள் எண்ணி எண்ணி இன்புறவும் பிரமிக்கத்தக்கதாகவும் கட்டப்பட்டுள்ளன. இறைவனின் பல்வேறு உருவ அமைப்புகள், நடனமாதர், போர் வீரர்கள் போன்றே சிற்பத்தொகுதிகள், படிமங்கள் போன்றவை அணி செய்கின்றன.

பெரிய வாயிலின் இடப் பக்க நான்காவது கோஷ்டத்தில் ஒரு பீடத்தின் மேல் தாடியும், மீசையும் உள்ள மன்னன் ஒருவனது உருவச்சிலை இரு கரங்களையும் கூப்பிய நிலையில் உள்ளது. பீடத்தில் கல்வெட்டு எழுத்துகளும் பொறிக்கப்பட்டுள்ளன.

வாயிலை ஒட்டிய வலப்பக்கக் கீழ்ப்பகுதியில் உள்ள கோஷ்டங்களில் ஒன்றில் சடாமுடியும், தாடியும் மீசையும் கொண்டு, இடுப்பில் நீண்ட ஆடை, மார்பில் ருத்திராட்ச மாலையும், பூணூலும் பூண்டு இரு கரங்களும் பிற்காலத்தில் உடைந்த நிலையில் முதியவர் ஒருவரின் படிமம் இடம்பெற்றுள்ளது. அவர் நிற்கும் பீடத்திலும் சில கல்வெட்டுகள் உள்ளன.

மன்னனது சிலையின் கீழ் காணப்படும் கல்வெட்டு 'திரிபுவன வீரதேவன்' என்று குறிப்பிடுவது இக்கோபுரத்தை எழுப்பிய மூன்றாங்குலோத்துங்க சோழனது சிறப்புப்பெயர் ஆகும். அவனது இராசகுருவான ஈஸ்வர சிவனாரின் படிமத்தையும் படைத்து வைத்து சிறப்பு செய்துள்ளான். வேறெந்த மாமன்னரும் இதற்கு முன் செய்யாத இப்பணி எண்ணி எண்ணிப் போற்றத்தக்கதாகவும், எதிர்காலத்தில் மன்னர்கள் பின்பற்றக்கூடிய முன்னுதாரணத்தையும் இம்மன்னன் ஏற்படுத்தியுள்ளான். வரலாற்றாசிரியர்கட்கும் பல செய்திகளை இவன் பொறித்து வைத்த கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. காலகாலத்திற்கு இவன் பெயரையும் புகழையும் பறைசாற்றும் திருவாரூர் கீழைக்கோபுரமான பெரிய கோபுரத்தில் பதினோரு கலசங்கள் அணி செய்து அழகூட்டுகின்றன.

## மேலக்கோபுரம்

இது பெரிய கோபுரமாக இருந்தாலும் காலத்தாலும் கலை வேலைப்பாடுகளிலும் கி.பி.15, 16ஆம் நூற்றாண்டு பாணியைக் கொண்டது. இதில் காணப்படும் சுதைச் சிற்பங்கள் காலத்தால் பிந்தியவை. மாலவன், நான்முகன் மற்ற தேவர்களின் சுதைச் சிற்பங்கள் காணப்படுகின்றன.

## வடதிசைக்கோபுரம்

வடபகுதியின் இத்திருக்கோபுரம் தளத்திற்கு மேல் 7 துவாரங்களைக் கொண்டதாக, கிழக்கு மற்றும் மேற்கு கோபுரங்களை விட உயரத்தில் சற்று குறைந்த அளவில் முதல் தளம் கற்பணியாலும், மேல் கட்டுமானங்கள் சுதை வேலைப்பாடுகளாலும் அமைந்துள்ளது. சிகரத்தை பதினோரு கலசங்கள் அலங்கரிக்கின்றன.

# இன்றைய இளைஞனே!

சந்தக்கவிமாமணி தமிழழகன்




சூரிய தேவன்
 சுடச்சுடத் தூவும்
வீரிய ஞான
விதைகளை ஏந்து.

உடனே செய்கு
 வோம் எனப் புறப்படு.
கடனே எனக்கை
 கட்டி நில்லாதே.

இன்றுதான் உனது
 இருகைக்கும் சொந்தம்
சென்றது செல்லட்டும்.
 செயற்படு முனைந்தும்.

காலைப்பூ பாளம் அக்
 கட்டியம் சொல்லிஉன்
மூளை நரம்பெலாம்
 முறுக்கேற் றட்டும்.

ஊக்க மாய்த் திரை
 ஊடே விழித்தெழு.
தூக்க மாத்திரைத்
 தொய்வுகள் ஏன் இன்னும்?

கி.பி. 15, 16ஆம் நூற்றாண்டுக் கலைப்பாணியைக் கொண்டது. திருவண்ணாமலையில் தமிழகத்திலேயே மிக உயரமான கோபுரத்தை எழுப்பிப் புகழ்பெற்ற தஞ்சை மன்னர் செவ்வப்ப நாயக்கரால் ஆக்கப்பட்டது இந்த இராசகோபுரம்.

கோபுரத்திருவாயிலை ஒட்டி ஒரு பெரிய மாடமும், சிறிய மாடம் ஒன்றும் உள்ளன. அவற்றில் இரு திரு உருவச்சிற்பங்கள் காணப்படுகின்றன. பெரிய பிறை மாடத்தில் இடுப்பில் வேஷ்டி, கச்சையில் குத்துவாள், ஒரு புறம் கொண்டை, நெற்றியில் நாமம், செவிகளில் குண்டலங்கள், வலக்கரத்தையொட்டி நீண்ட வாளுடன் செவ்வப்ப நாயக்க மன்னரின் திருவுருவம்.

அடுத்துள்ள பிறை மாடத்தில் ஒரு சிவனடியாரின் உருவச்சிலை. இடுப்பில் எளிய ஆடை உடுத்தி, தலையிலும் மார்பிலும் உருத்திராக்க மாலையணிந்து காணப்படுகிறார். கரங்கள் இரண்டும் இறைவனை வணங்கும் கோலத்தில் உள்ளன. திருவாரூரில் வாழ்ந்த சைவ சமயப்பணி புரிந்த கமலை ஞான பிரகாசரையும் தன்னுடன் தான் எழுப்பிய திருக்கோபுரத்தில் படைத்துத் தன் பெருமிதத்தை வெளிப்படுத்திய செவ்வப்ப நாயக்க மன்னரின் பணி சீரிய பணி என்பதில் ஐயமில்லை.

இக்கோயிலின் இராசகோபுர அழகு பற்றியும் அவற்றை ஆக்கிய மூன்றாம் குலோத்துங்கன், செவ்வப்ப நாயக்கர் போன்றவர்களின் அருஞ்செயல்கள் கால காலத்திற்கு நாம் கண்டும், எண்ணியும் மகிழ முடிகிற உயரிய சாதனைகள் தான்.

இத்திருக்கோபுரங்களுக்கு நம் காலத்தில் 1988ஆம் ஆண்டு திருப்பணியும் நன்னீராட்டும் சிறப்புற நடந்துள்ளன.

✪✪

# இராமலிங்கசாமி, ஜி.வி.ஐயர் மற்றும் நான்

## பிரபஞ்சன்



அட கடவுளே! என் செருப்பை மட்டும்தான் காணவில்லை. விட்ட இடம் நன்றாக ஞாபகத்தில் இருந்தது. ஆளோடித் திண்ணைத் தூணுக்கு எதிரே. வெள்ளைச் செருப்புக்கு நேர் கீழேதான் விட்டு விட்டு உள்ளே போனேன். கொஞ்சம் நெருங்கின உறவுக்காரர் வீட்டுக் கல்யாணம். அப்பாவுக்கு உடம்பு முடியவில்லை. ஆகவே என்னிடம் 'மொய்'ப் பணத்தைக் கொடுத்து அனுப்பிவைத்திருந்தார். தாலி கட்டுதல் முடிந்து மொய் எழுதும் நேரம் வரை நான் மண்டபத்துக்குள் இருக்க வேண்டியது தவிர்க்க முடியாமல் போய் விட்டது. மொய் நடந்தவுடன் உடனே கிளம்ப முடிகிறதா? சரிகை அங்கவஸ்திரம் போட்டுக் கொண்டு பெரிய மனுஷராகக் கல்யாணத்தில் கார்வார் பண்ணிக்கொண்டிருந்த ஒரு நபர் என்னிடம் வந்தார்.

"சீனுவாசன் பையன் தானே நீ?" என்றார்.

"உம்"

"அதானே பார்த்தேன். அதே ஜாடை. அதே மோவாய். தலை வாருகிற மோஸ்தர் கூட அதேதான். எங்கே உன் தோப்பன் வரலையோடா?"

"இல்லை. அப்பாவுக்கு உடம்பு முடியலை."

"முடியாமே போறதுக்கு என்ன? வயசு இன்னிக்கானா அறுபது கூட ஆகலை. அதுக்குள்ளே என்னடா முடியலை?"

"..."

"உனக்கு என்ன வய்சு?"

"பதினாறு"

"படிக்கிறியாக்கும்."

"உம்."

"எங்கே வாசலைப் பார்த்துட்டு நிக்கிறாய்? சாப்பிடலையா? மேலே போய் சாப்டுட்டுப் போடா. உன் அப்பனும் நானும் இப்படி இப்படி. சீனு மகன் வந்து. என் பிள்ளை கல்யாணத்துல சாப்பிடாமே போயிடறதாவது. உம். மேலே போ..."

சற்றேறக் குறைய ஓர் உத்தரவு மாதிரி. அவர் சொன்னதை என்னால் தட்ட முடியலை. மேலே போய் சாப்பிட்டேன். கீழே வந்து. பாக்குப் பொட்டலத்தை மட்டும் எடுத்துக்கொண்டு. வெளியில வந்தால். எனக்கு இப்படி ஒரு சோதனை.

ஆளோடித் திண்ணைத் தூண் இருந்தது. வெள்ளைச் செருப்பும் மெருகு குலையாமல். குழந்தையின் சிரிப்பு மாதிரி. பளீரென்று. என்னைப் பார்த்துச் சிரிக்காததுதான் குறை. மற்றபடி. சில பத்து நூறு செருப்புகளாவது. என் முன்னே கிடந்தன. செருப்புகள் தான் எத்தனை வண்ணங்கள், தினுசுகள்! மோஸ்தர்கள். கறுப்பு. வெள்ளை. பழுப்பு. சிவப்பு. சரிகை வேலைப்பாடு பண்ணியது என்று.

அந்தக் குவியலுக்குள். எப்படியும் என் செருப்பு கண்டிப்பாய் இருக்கும் என்று எனக்கு நானே என் மனசைத் தேற்றிக்கொண்டேன். செருப்பின் உரிமையாளர்களில் சிலர். அவசரத்தில். செருப்புகளைப் புரட்டிப் போட்டு விட்டுச் சென்றிருந்தார்கள். நண்டுகள் குப்புறப் போடப்பட்டன போல இருந்த அந்தச் செருப்புகளை என் காலால் புரட்டிப் போட்டேன். பின்னால் வந்தவர்கள். முன்னால் வந்தவர்களின் செருப்புகளை. ஏகத்துக்குக் கலைத்திருந்தார்கள். பிறர் பற்றி நமக்கிருக்கும் அலட்சியம். மரியாதை. அநேகமாக. அங்கிருந்த நூற்றுக்கும் மேற்பட்ட ஜோடிகளை. என் கண்களால் மிகவும் ஜாக்கிரதையாகத் தான் துழாவிவிட்டேன். கல்யாண மண்டபத்துக்குள்ளிருந்து வருபவர்கள். சாவகாசமாகத் தங்கள் செருப்புகளை அணிந்து கொண்டு. தாம்பூலம் மணம் கமழத் தெரு இறங்குவதை வேடிக்கை பார்த்துக்கொண்டு நின்றேன். அத் தருணத்தில்தான். பேண்ட் போட்ட நடு வயதுக்காரர். என்னைத் தன் பார்வையால் அளப்பது தெரிந்தது. தம் செருப்புக்குள் காலை நுழைத்துக்கொண்டு அவர் கேட்டார்.

"என்ன பார்க்கிறே?"

"செருப்பைக் காணலை." என்றேன்.

"என்ன.. காணலையா?"

அவர் இதழ்க் கடையோரம். இயல்பாகவே கழிந்தது. ஒரு மாதிரி. குறுக்கு வெட்டாக ஓரக் கண்ணால் என்னை அவர் நோக்கினார். அந்தப் பார்வை. யோக்யனைப் பார்க்கிற யோக்யமான பார்வையாக எனக்குப் படவில்லை. எனக்குச் சற்று வெட்கமாக இருந்தது நான் சந்தேகிக்கப் படுகிறேன் என்பதில். இதயத்தின் கீழிருந்து. கோபம் புறப்பட்டது.

"ஆமாம். காணலை. புதுச் செருப்பு" என்று அழுத்தமாகச் சொன்னேன். குரலின் அடர்த்தி. என் மெய்ம்மைத் தன்மையைப் புலப்படுத்தும் என்று நம்பினேன். என் நம்பிக்கை வீண் போகவில்லை.

"ப்ச்.. ப்ச்.. கல்யாண வீட்டிலே செருப்பு திருடறதுக்குன்னே. பேர்வழிகள் வர்றாங்களே.. என்ன பண்ண? நாமதான் ஜாக்கிரதையாக இருக்கவேணும்."

இதன் அர்த்தம். அவர் என்னை அஜாக்கிரதையான பேர்வழி என்கிறார். அதோடு இலவசமாக போதனை வேறு செய்கிறார். அவர் செருப்பு திருடு போக வில்லை. அவர் ரொம்ப ஜாக்கிரதையான பேர்வழியாக்கும். அவர் தெரு இறங்கி. நடந்தார். சரியாக மூன்றாவது அடி எடுத்து நடக்கையில். ஒரு கூழாங்கல் வழுக்கி விழத் தெரிந்தார். பக்கத்தில் இருந்த கல்யாண முருங்கையைப் பற்றிக் கொண்டு 'பேலன்ஸ்' பண்ணிக்கொண்டு. குப்புற விழுவதிலிருந்து தப்பிவிட்டார்.

ஆனாலும் மனிதர். அந்த அதிர்ச்சியி லிருந்து சில நிமிஷங்கள் மீளவில்லை தான். எனக்கு சந்தோஷமாக இருந்தது.

வெறும் காலுடன் வீட்டுக்குப் புறப்பட்டேன். வெயில் எனக்காகவே உஷ்ணமாகக் காய்வது போலத் தெரிந்தது. வெறும் காலுடன் நடந்து பழக்கம் இல்லாததால். மணலில் நரநரத்த பாதம் கூசியது. சிறு கற்கள். லேசான வலியை ஏற்படுத்தின. புத்தம் புதிய பேண்ட்டும். சட்டையும் அணிந்துகொண்டு. செருப்பு இல்லாமல் நடக்கிற துரதிருஷ்டம். அவமானமாக இருந்தது.

மும்பை மாமா வாங்கித் தந்த 'செட்' அது. சர்ட். பேண்ட். மற்றும் செருப்பு. மாமா. கோடை விடுமுறைக்கு மட்டும் எங்கள் ஊருக்கு வருவார். இரண்டு மாதங்கள் இருப்பார். அந்த இரண்டு மாதங்களும் எங்களுக்குத் திருவிழாதான். வரும் போது அப்பாவுக்கு வேஷ்டி. பாப்ளின் சட்டை. அம்மாவுக்கு மும்பை சாரிஸ். எனக்கு உடை. அப்புறம். தினம் பீச். சுண்டல். மிளகுவடை. சுக்குக் காபி. வாரத்துக்கொரு முறை சினிமா. அப்புறம் பிக்னிக். எல்லாம். மாமாவின் வருகையை முன்னிட்டு. வருஷம் முழுதும் திட்டம் இடப்படும்.

"கன்யாகுமாரிக்குப் போகனும். இந்த வருஷம் தெற்குப் பக்கம்தான் டூர். தம்பி வரட்டும்" என்பாள் அம்மா.

"கண்ணாடி மாற்றனும். போன வருஷமே. திருக்கடையூர் போகனும்னு தோணித்து. முடியலை. பத்து வரட்டும். அம்பாளைத் தரிசிச்சுடனும்." என்பார் அப்பா.

எனக்குப் பத்து மாமாவின் மேல் பிரேமையே இருந்தது. அவரை யாரும். எந்த வகையிலும் 'பீட்' அடித்து விட முடியாது. அவர் அணிகிற சட்டையும். அதன் மோஸ்தரும். நிறமும் பொதுவாக எங்கள் ஊரில் யாரும் அணிந்து நான் பார்த்ததில்லை. அவர் அணியும் மூக்குக் கண்ணாடி வெளிநாட்டது என்றும் அதன் விலை ஆயிரம் ரூபாய்க்கும் மேல் (அந்தக் காலத்திலேயே) என்றும் தெரிந்தபோது. நான் அடைந்த ஆச்சர்யத்துக்கு அளவே இல்லை. சட்டையின் இரண்டு பாக்கெட்டும் இரு வேறு நிறத்திலும். உடம்பை 'சிலுக்கென்று' பற்றி இருக்கும் பந்தாவும். இந்த ஊர் டைலர்களுக்குக் கனவிலும் தோன்றாதே!

அவரிடம் இருந்து 'சென்ட்' வாசனை. ஐம்பது அடி தூரத்துக்குப் பரிமளிக்கும். 'பாப்பையா' சென்ட்' என்று மாமா சொன்னார். பிரான்ஸ் தேசத்திலே இருந்து தருவிக்கப்படும் சென்ட்டாம் அது. அவர் பாக்கெட்டில் கையை விட்டால். கத்தையாக. மடிப்பு. அழுக்குப்பிசிறு இல்லாத நோட்டுகள் வெளியே வந்தன. சில்லறைகளைத் தம் பாக்கெட்டுக்குள் அவர் போட்டுக் கொள்வதில்லை. அவற்றை எனக்குக் கொடுத்து விடுவார். என். பாக்கெட் - கால் சட்டையின் வலப் பை - பெருத்து. உப்பிக்கொண்டு. 'சலங். சலங்' என்று சப்தம் எழுப்பியபடி இருக்கும். இடப் பக்கத்துப் பையையும். வலப் பக்கத்துப் பையையும் நோக்க. வலக்கால் யானைக்கால் வந்த கால் மாதிரி இருக்கும்.

எல்லாவற்றுக்கும் மேலே. மாமா போடுகிற அட்டகாசமான செருப்புகள். ஆளைத் தூக்கி அடிக்கும். குறைந்தது நாலு ஜதை செருப்பு வைத்திருப்பார். பாத்ரூம் செருப்பு என்று ரப்பர் செருப்பு. கறுப்பு. பழுப்பு மற்றும் ஷூக்கள். எல்லாம் புத்தம் புதுசாக மாங்கொழுந்து மாதிரி. மெருகு ஏறி. முகம் பார்த்துத் தலைசீவலாம் போல இருக்கும். அவற்றைப் போட்டுக் கொண்டு. அவர் நடக்கும் தினுசே தனி.

செருப்புக்கு உயிர் இருக்கு. அவற்றை ரொம்ப அழுத்திக் கொண்டு நடக்கக் கூடாது என்பது மாதிரியும். குழந்தையைக் குளிப்பாட்டி. துவைத்து இஸ்திரி போட்ட 'யூனிபார்ம்' போடுவது மாதிரி. செருப்பையும் பேண வேண்டும் என்பது மாதிரியும் இருக்கும். அவர் செருப்புகளை வீட்டுத் தாழ்வாரத்துக்குள் விடலாம். அது அவருக்குக் கொடுக்கப்பட்ட சலுகை. நாங்கள் தெருத் திண்ணையில் விட வேண்டும். அப்பா. அம்மா மற்றும் நான். அதுவும் ஒரு வகையில் எனக்கு நல்லதாகவே இருந்தது. என் செருப்பை. கிழிந்து. சாயம் போனதை. அந்தப் புத்தம் புதுசுகளின் பக்கத்தில் விடுவது செருப்பு இனத்தையே கேவலப்படுத்துவதாகவே இருக்கும். இதை. நான் அனுபவ பூர்வமாகவே உணர்ந்தேன். மாமா. ரெடிமேட் சட்டை வாங்கித்தர என்னைக் கடைக்கு அழைத்துச் சென்றிருந்தார். கண்ணாடி முன் நின்று சட்டையைப் போட்டுப் பார்த்துக்கொண்டேன். நன்றாகத்தான் இருந்தது. அது ஆளுயரக் கண்ணாடி. என் சட்டையை விட என் செருப்பே என் முகத்துக்கு நேராக. வந்து நின்றது. ஓர் அங்குல இடைவெளியில் என் மாமாவின் புத்தம் புதுசான. அழகிய. காலணியும். வெளுத்த. தேய்ந்த. சாயம் போன பழைய பாவாடை மாதிரியான என் செருப்பும் பக்கத்தில் பக்கத்தில். கண்ணாடி எனக்கு அழகு காட்டியது. ஒரு துள்ளும் மான் குட்டியும். அதன் பக்கத்தில் மண்தின்று வயிறு ஊதிய எருமைக் கன்றுக்குட்டியும் போல. மாமாவுக்கே இது உறைத்தது போலும்.

"உனக்கு நல்ல செருப்பா மும்பையிலேந்து வாங்கி அனுப்பறேன்" என்றார். அவருக்கு நல்ல பொருள் என்பதன் கர்ப்பக்கிருகமே மும்பைதான்.

சொன்னபடி அனுப்பவும் செய்தார். அதைத்தான் கல்யாண வீட்டில் தொலைத்துவிட்டு. நடந்து போய்க் கொண்டிருந்தேன். வெறும் காலுடன்.

என் பாதங்களை நானே பார்த்துக்கொண்டேன். சிவந்த மஞ்சளாய். வெள்ளையாகவும் இருந்தது. இப்படி நடக்கையில். என் கால்களே எனக்கு வியப்பாக இருந்தன. வீட்டுக்கு வெளியே. வெறுங்காலுடன். நான் நடந்ததில்லை.

என் கால்களையே பார்த்தபடி நடந்துகொண்டிருந்தேன். எல்லாருமே. செருப்பணிந்து இருக்கிறார்கள். வார் அணிந்த. இரண்டு பட்டைகளும். மோதிர விரலும் கொண்ட. நிறைய சின்னச் சின்ன வார்கள் இருக்கிற மாதிரியான செருப்புகள். செருப்புகளில் இத்தனை வகையை நான் இப்போதுதான் பார்க்கிறேன். அவற்றின் பயன்பாட்டில். அவை இருக்கிறபோது. குரோம். ரப்பர். டயர் என்று பலவகை அடிப்பாகங்கள்.

திடுமென, அவற்றைப் பார்க்கையில் பாவமாக இருந்தது. என்ன கஷ்ட ஜென்மம். மிதிபட்டு மிதிபட்டே வாழ்வதற்கென்றே ஒரு பிறவியா?

அது என்னமோ. வீட்டுக்கு வெளியே. காய்கறிக் காரரிடம் சண்டை போட்டுக்கொண்டு (அம்மா கறிகாய் வாங்குவது. சண்டை போடுவதற்குச் சமம். "இந்த அழுகல். நாற்றம் பிடிச்ச கத்திரிக்காய். இத்தனை விலையா?" "அழுகலை உங்களை யார் வாங்கச் சொன்னா?" போன்ற உரையாடல்கள் சகஜம்) நின்றிருந்தவளுக்கு. என் பாதம்தான் கண்ணில் பட்டது. விதி என்பது இதுதான் போலும்.

"செருப்பு எங்கேடா?"

"தொலைஞ்சுட்டது."

"என்னது!"

"தொலைஞ்சுட்டது. யாரோ. மாத்திப் போட்டுகிட்டுப் போயிட்டாங்க போல'

"அங்கேயே நின்று. மீந்த செருப்பை மாட்டிக்கிட்டு வர்றதுக்கு என்ன..?" என்றவள். 'குடுகுடு' என்று உடம்பு முதுகு குலுங்க அப்பாவிடம் ஓடினாள்.

"உங்க பிள்ளை. அசமந்தம். செருப்பைத் தொலைச்சுட்டு வந்து நிக்கறான். என்ன அருமையான செருப்பு. தேடினாலும் கிடைக்காது. என் தம்பி ஆசையா வாங்கிக் கொடுத்தது. இப்படி 'ஹிஹி'ன்னு என் மூஞ்சைப் பார்த்துட்டு நில்லு. என்ன திறவுசோ. என்ன படிப்போ? என்ன கர்மமோ... ஒரு காசுக்குப் புண்ணியம் இல்லாத புள்ளையைப் பெத்தேனே.."

"சரி. சரி. விடு. காசு பொறாத விஷயம். இதுக்கு ஊரைக் கூட்டாதே.."

"என் தம்பி நூறு ரூபா போட்டு வாங்கி அனுப்பிச்சது. காசு பொறாத விஷயமாக்கும்? இது எங்கே படிச்சு. உத்யோகம் பார்த்து. அம்மாவுக்குக் கஞ்சி ஊத்துமோ? சர்வேசா.. சதா மோட்டு வளையைப் பார்க்கிறது. கிழங்கள் படிக்கிற புஸ்தகங்களைப் படிக்கிறது. தினம் இரண்டு வாட்டி தலையிலே தண்ணி ஊற்றிக். குளிக்கிறது.. எனக்குன்னு வாச்சிங்களே. பிள்ளையும் புருஷனும்."

"நீ போடா, சாயங்காலம் காசு தர்றேன்.. புதுசா வாங்கிக்கோ.. அவன் என்ன பண்ணுவான்? ஊர், திருட்டுப் பசங்கள் கூடாரமா ஆச்சோல்லியோ? சர்வம் களவாணி மயம் ஜகத்."



கனவுகளில் செருப்பு வரத் தொடங்கியது. என்னை விட.வும் பெரிய செருப்புகள். ஆறடி உயரச் செருப்புகள்; நான்கடி அகலத்தில்; ஒவ்வொரு பட்டையும். ஒரு முழம் அகலம். செருப்புகள். அவற்றின் பாதங்களில் என்னைப் போட்டுக் கொள்கின்றன. குரோம் மாதிரியும். ரப்பர் மாதிரியும். டயர் மாதிரியுமாக நானே மாறிக்கொள்கிறேன். அழுத்தி. அழுத்தி அவை நடக்கின்றன. நான் தேய்கிறேன். ஊத்தப்பம் அளவுக்கும். அப்புறம் அப்பளம் அளவுக்கும் நான் தேய்கிறேன்.

வகுப்பறை.

நீலவெளிச்சம். ஆசிரியர் ஊதாக் கலரில் இருந்தார். நான் அவரிடம் கேட்கிறேன்.

"இராமன் செருப்பை. பரதன் வாங்கிக் கொண்டபின். அவர் காட்டில் செருப்பில்லாமல்தான் நடந்தாரா?"

தமிழ் ஆசிரியர். என் இந்தக் கேள்விய்ரசிக்க முடியாமல். நெளிந்தார். அதுவரை. 'இராமர் செருப்பில்லாமலா பதினாறு வருஷங்கள் நடந்தார்' என்பது பற்றி அவர் யோசித்திருக்கவில்லை என்று தெரிந்தது.

இதுபோன்ற கேள்விகளுக்குப் பாடத் திட்டத்தில் இடம் இல்லை என்கிற காரணமாக இருக்கலாம். பரிட்சையில் இம்மாதிரிக் கேள்விகள் வருவதில்லை.

கண்ணப்ப நாயனார். தன் இரண்டாம் கண்ணைத் தோண்டுகையில். அடையாளத்துக்காகத் தன் செருப்புக் காலைத் தானே இறைவன் முகத்தில் வைத்தார்! கண்ணப்ப நாயனார் செருப்பு. எதனால் செய்யப்பட்ட செருப்பாக இருக்கும்..

சாம்பிராணிப் புகை ஊடாக ஒரு செருப்புக் கடை. வில்லும் அம்புறாத்தூணியுமாக ஒருத்தர் - பார்த்த மாத்திரத்தில் வேடர் என்று சொல்லத்தக்கவர். அளவு பார்த்துச் செருப்பு வாங்குகிறார்..

கடற்கரை ஓரம்.. கிளிஞ்சல்கள் மாதிரிச் செருப்புகள் இறைந்து கிடக்கின்றன... காரைக்கால் அம்மையார். மாம்பழங்களை விற்று. பாதுகை வாங்குகிறார்.

மேலோர்கள் அணிவது பாதுகை. என் போன்றவர்கள் அணிவது செருப்பு..

விடியும் நேரத்தில், நான் என் சரித்திர ஆசிரியரிடம் கேட்ட இரண்டு கேள்விகள்.

1. ஆரப்பா, மொகஞ்சோதாரோவில் செருப்பு கண்டுபிடிக்கப்பட்டதா?

2. சீதை செருப்பணிந்த அழகை விவரி.

அப்பாவுக்கு, இரண்டு நாள்களாக, வாய்வுத் தொல்லை. இடுப்பு பிடித்துக் கொண்டது. ரொம்பவும் அவஸ்தைப் பட்டார். ஆகவே, தான் செருப்பு வாங்குவது தள்ளிப் போயிற்று. மூன்றாம் நாள் மாலை, அப்பா என்னிடம் சொன்னார்.

"பையில காசு எடுத்துக்கோ.. பிடிச்ச மாதிரி வாங்கிக்கப்பா.. ஒரு காரியம் பண்ணு.. நேரா, வைத்தியர் கடைக்குப் போ.. வைத்தியர் இருப்பாரு.. அதாம்பா, நம்ம கோழிக்கொண்டை வைத்யர். அவர்ட்டே, அப்பாவுக்கு வாய்வுத் தொல்லைன்னு சொல்லி, மருந்து வாங்கிக்கோ.. நீ சொல்லு கொடுப்பார். பணம் என்னன்டை வாங்கிப்பார்.. வழக்கமா கொடுக்கிற மருந்து.. அப்பறமா, செருப்புக் கடைக்குப் போகலாம்."

"சரிப்பா" என்றுவிட்டு, மகிழ்ச்சியாக நான் கிளம்பினேன்.

வைத்தியர், கடையில் இருந்தார். சௌகர்யத்துக்காகவும், புழுக்கத்துக் காகவும், சட்டையை அவிழ்த்து ஆணியில் தொங்கவிட்டிருந்தார். அவர் தலைக்கு மேலே, சட்டை, உடம்பு இல்லாமல் தொள தொளவென்று தொங்கிக் கொண்டிருந்தது. என்னைக் கண்டதும், "வா...வா" என்றார். எல்லாருக்கும், இல்லாததுதான் முதலில் கண்ணில் படும் போலும்.. என் வெறும் பாதம்தான் அவர் கண்ணில் பட்டது.

"எங்கே செருப்பு?"

"தாரவாந்துடுச்சு.."

"எங்கே?"

"கல்யாண வீட்டுல."

"அப்படிப் போடு. உடனே செருப்பைக் காலிலே பொருத்து. உஷ்ணம், கால் வழியா சிரசுக்கு ஏறிடும்."

வைத்தியர் இதைச் சொல்லிவிட்டு, மேலே இரவாளத்தைப் பார்த்தார். பிறகு சொன்னார்.

"இராமலிங்க சாமி கூட செருப்பு போடறது இல்லை. அவர் சித்தர். நெருப்புக் குண்டத்துக்குப் பக்கத்துல உட்கார்ந்து, தன்னை உஷ்ணம் படுத்திக்கிட்டவரு.. அவருக்குச் செருப்பு தேவையில்லை. நெருப்பு உடம்பு அது. அவர் இரும்பாணியை மிதிச்சாக்க, ஆணி உருகிடும்.. தெரியுமோ?"

எனக்கு, பிரமிப்பாய் இருந்தது.

வாய்வு மருந்தை வாங்கிக்கொண்டு, செருப்புக் கடைக்குப் போனேன். நிதானமாக எனக்குப் பிடித்த - ரொம்ப நாளாக வாங்க வேண்டும் என்று நான் நினைத்திருந்த - பக்கிள்ஸ் போட்ட செருப்பு வாங்கினேன். கறுப்பு நிறம். பளபள வென்று கன்றுக்குட்டியின் கண்களைப் போல. புதுச்செருப்பு போட்டுக்கொண்டு, நடக்கையில், எனக்கே என் தோற்றத்தில் ஒரு பெருமிதமே ஏற்பட்டிருந்தது. நான் நிமிர்ந்து நடந்தேன். என் இரு கால்களிலும், இறக்கை முளைத்தாற் போல எனக்குத் தோன்றியது. பறக்கத் துணை செய்யும் இறக்கை. நான் தரையில் பறந்தேன். என் பாதங்களில் பொருந்தி இருந்த காலணிகள், இரண்டு வவ்வா மீன்களாக மாறின. கட்டையான, படர்ந்த



"அந்தப் பட்டாசுக் கடையை சீல் வெச்சிட்டு கடை ஓனரை அரெஸ்ட் பண்ணிக் கூட்டிட்டுப் போறாங்களே... எதுக்கு?"

"'இங்கே ஒரிஜினல் வெடிகுண்டு கிடைக்கும்'னு விளம்பரம் கொடுத் தாராம்!"

வவ்வா மீன்கள். தரையில் நீந்துகிற மீன்கள். தோல் மீன்கள்.

உற்சாகத்தில் மிதந்துகொண்டு போய்க் கொண்டிருந்த என்னை ஓர் அழைப்புக் குரல், தடுத்து நிறுத்தியது. என் பூகோள ஆசிரியர் ரமணி. என் மேல் அன்பு கொண்டவர்.

"எங்கேடா?"

"செருப்பு வாங்க சார்."

"அடே, நல்லா இருக்கே. என்ன விலை?"

"முப்பது ரூபா சார்."

"முப்பப்பதா? கொஞ்சம் அதிகம்தான். என்ன பண்ண? எருமைச் சாணம் கூட, மார்க்கெட்டுக்கு வர்ற காலம். எதுதான் விலை ஏறலை? எங்கே வீட்டுக்கா?"

"ஆமா சார். சார், எங்கே?"

"ஈஸ்வரன் கோயில்லே, இராமலிங்க சாமிக்கு விழா. நானும் பேசறேன். உனக்குத்தான் தமிழ்லே ருசி ஆச்சே. வாயேன். என் பேச்சைக் கேட்க இல்லைடா. வண்டிப் பாளையம் வேலாயுதம் பிள்ளை பேசறார். மகா வித்வான். வா. பொழுதைப் பிரயோஜனமாப் போக்கேன். என்ன, வர்றியா, வா." எனக்கு அவரைத் தட்ட முடியலை. அவருடன் நடந்தேன்.

"ஜி.வி. ஐயர் தெரியுமோ?"

"தெரியாது சார்.. யார் அவர்?"

"சினிமா டைரக்டர். நம்மூர் குப்பை, மசாலா டைரக்டர் இல்லைடா. ரொம்ப உசத்தியான படம் பண்றவர்."

"ஓ..."

"அவர்கூட செருப்பு போடறது இல்லை."

"ஏன் சார்?"

"இந்த மண், மகான்கள் நடந்த மண். அதைச் செருப்பு போட்டு மிதிக்கக் கூடாதுன்னுதான்."

சார் செருப்பு போட்டிருந்தார். எனக்கு ஆறுதலாக இருந்தது.

"இராமலிங்க சாமி கூட செருப்பு போடறது இல்லையாமே. சார்"

"அடடே. ஆமாம். அவர்கள் மகான்கள்."

கோயில் பிராகாரத்தில் விழா. கூட்டம். கிழடுகள் கும்பலாக இருந்தனர்.

நா.சீ. வரதராஜன்

# வானரங்கிலே..



தீயுருண்டை உயிர்ப்புடன் ஓடி
தேசுமேவி வெயில் எழில் வீசி
மாயமென்ன மாலையில் மாயும்
வானின் காட்சி வாழ்த்தி மகிழ்வேன்.

அந்திமங்கை ஆடி மறைந்தாள்.
அழகு மாலை தொடுத்தது போல
விந்தை வெள்ளை நாரைகள் கூடி
விரையும் இன்பம் கண்கள் நிறைக்கும்.

சிற்பம் என்னச் சித்திரம் என்ன
சில கணத்துள் பலவடி வாகி
கற்பனைகள் நெஞ்சினில் ஓட,
கருமுகில்கள் வானிடை ஓடும்.




அழகு பொங்கக் கண்கள் சிமிட்டும்
ஆயிரம் பல தாரகை மாதர்
பொழியும் இன்பம் போதையொளித்தேன்!
பூரிப்போடு பருகிக் களிப்பேன்.

காதல் வஞ்சியின் இன்முகம் போலும்
கனவின் இன்பக் கவினுருப் போலும்
மோதும் மோகக் கிளர்ச்சிகள் மூட்டும்
முழு நிலாவில் மூழ்கித் திளைப்பேன்!



வானமுட்டும் மகிழ்ச்சிகளெல்லாம்
வாயினிக்கப் பண்கள் இசைப்பேன்
வானரங்கின் மாட்சிகள் காண
வைய மீதில் வாழ்ந்து நிலைப்பேன்.

*O*

---

வாசல் கணபதி மாடத்துக்குக் கீழே. இருட்டு அறை மாதிரி இருந்த. அதிகம் யார் கண்ணிலும் படாத இடத்தில் தன் செருப்பை விட்டார், சார்.

"இங்க விடு.. இங்க ஒரு பயலும் வர முடியாது."

நான் என் செருப்புகளை அரை மனத்தோடு விட்டேன். அந்த இடத்துக்கு. திருடன் வரவே முடியாது என்பது உண்மையான விஷயம் என்று எனக்கும் நம்பிக்கை தோன்றியது.

மகாவித்வான் கொஞ்சம் பேசினார். கொஞ்சம் பாடினார். நிறைய இருமினார். தண்ணீர்குடித்தார். சார். இரண்டே இரண்டு வார்த்தைகள் பேசினார். சோடா குடித்தார். நிறைய. வயசான பெண்கள் கூட்டம். பட்டாணிச் சுண்டல் கொடுத்தார்கள். சாப்பிட்டோம்.

"போலாமா?" என்றார் சார்.

இடுப்பில் பெல்ட் மாதிரி கட்டியிருந்த துண்டை எடுத்துத் தோளில் போட்டுக்கொண்டார். கணபதி மாடத்துக்கு வந்தோம். இருட்டில் என் காலைத் துழாவி. செருப்பை எடுத்தேன்.

சார் செருப்புகள் இரண்டும் வந்தன. என்ன தேடியும் என் செருப்பு மாத்திரம் இல்லை.

முன் இரவு. குளிர்ச்சியாக இருந்தது. என்றாலும் எனக்கு வியர்த்தது. தெருவின் குளிர்ச்சி. என் பாதங்கள் வழியாக. என் நெஞ்சு வரைக்கும் ஏறிக்கொண்டிருந்தது. இருட்டில், யார் காலையும், அவர்களது காலணிகளையும் நான் பார்க்க முடியவில்லைதான்.

விட்டுப் போனது மாதிரி இருந்தது. வருத்தம் இல்லை. என் காலணிகளை எடுத்துச் சென்றவர் என்ன பண்ணுவார்? போட்டுக் களிப்பாரா? அல்லது விற்றுவிடுவாரா? போடுவார் என்றால். நன்றாக இருக்கும் என்று நினைத்துக்கொண்டேன்.

திடுமென. செருப்பில்லாத என் பாதங்கள். இராமலிங்க சாமி மற்றும் ஜி.வி. ஐயருடையதாக மாறும் என்று எனக்குத் தோன்றியது. மாறிக்கொண்டே இருப்பதாகவும் எனக்குத் தோன்றியது.

என்னமோ. எனக்குச் சிரிப்பு வந்தது. மனம் லேசாயிற்று.

☆☆

# கவிஞர் மரபில் ஒரு யோகியார்



இருபதாம் நூற்றாண்டில் கவிதை மறுமலர்ச்சி யுகத்தில் பாரதியார் முன்னோடியாகத் திகழ்கிறார். அவரைத் தொடர்ந்து வந்த கவிஞர்களுள் ச.து.சு.யோகியாருக்குச் சிறப்பான இடம் உண்டு. இவரின் சிறப்புகளையும் தனித்தன்மைகளையும் தமிழுலகம் ஏனோ இனங்காணாமல் இருக்கிற நிலை வருந்துவதற்குரியதேயாகும்.

இவருடைய முழுப்பெயர் பாலபாரதி ச.து.சுப்பிரமணியம் என்பதாகும். ஒரு மணிவிழாக் காலமே வாழ்ந்தாலும் (1904–1963) அரும்பெரும் படைப்புகளை உருவாக்கி இலக்கியச் சாதனை புரிந்தவர். யோகியாரின் கவிதை குரு அவரது சிறிய தந்தையான எஸ்.வேங்கடேச அய்யர் ஆவார். இவர் காளியின் பக்தர். இவரே யோகியாருக்கு 'பாலபாரதி' என்ற பட்டம் சூட்டிப் பாரதி மரபில் நெறிப்படுத்தியிருக்கிறார். தெய்வ பக்தி, தேசபக்தி போன்ற நிலைகளில் பாரதியாருடன் யோகியார் ஒத்துப்போகிறார்.

***சக்திதாசன்:***

யோகியார் அன்னை காளியாகிய சக்தியிடம் பற்று வைத்திருந்தார். "எனது ஒன்பதாவது வயதில் காளிதேவியின் கோயிலுக்கு அழைத்துச் செல்லப்பட்டேன். கம்பனுக்கும், காளிதாசனுக்கும், காளமேகத்துக்கும் கவிதை கொடுத்த தெய்வ அன்னையின் திருவடிகளிலே தான் அடியேனும் அர்ப்பணம் செய்யப்பட்டேன். அன்று முதல் இன்றுவரை, அவளே என் கவிதைக்கு நாயகி. காவியக்கடவுள். என் ஆருயிர்க் கோயிலின் ஆதாரமூர்த்தம்" என்று யோகியாரே குறிப்பிடுகிறார்.

*'பாடும் குரல் நான்; பாடுவாள் காளி,'*

என்றும்

*நீயருள் செய்தாய், நெஞ்சுள் புகுந்தாய்*
*கவிதை மலர்ந்தது, கனவுகள் பூத்தன*

என்றும் தம் கவிதைகளில் குறிப்பிடுகிறார். ஒன்பது வயதில் தொடங்கித் தன் வாழ்நாள் இறுதிவரை காளியின் பக்தராகவே விளங்கினார்.

யோகியார் தமிழ்ப்புலமையுடன் வடமொழி, ஆங்கிலம் போன்ற மொழிகளிலும் புலமை வாய்ந்தவராக இருந்திருக்கிறார். அவரைப்பற்றி எஸ்.டி.சுந்தரம் குறிப்பிடும்போது, "தன்னலமில்லாத தேசபக்தர்களுக்கும், தற்புகழ்ச்சியில்லாத தமிழ்க் கவிஞர்களுக்கும், உண்மை பேசும் உயர்ந்தோர்க்கும், விளம்பரத்தை வேண்டாத கலைஞனுக்கும் இந்த நாட்டில் எவ்வளவு கோரமான தண்டனை கிடைக்குமோ அத்தனை துன்பத்தையும் துயரத்தையும் வறுமையையும் வேதனையையும் புன்சிரிப்போடு அனுபவித்தவர்" என்று கூறுகிறார். சக்தியின் தாசனையும் வறுமை பீடித்தது சோதனையின் வேதனைதான்.

**சோதனையிலும் சாதனை:**

பழைய கதைகளில் புதுமைக் கருத்துகளைச் சேர்த்து அகல்யா என்கிற காவியத்தைப் படைத்துள்ளார். தேசபக்தகீதம் (1924), தமிழ்க்குமரி (1942), கதையைக் கேளடா தமிழா (1952) போன்ற படைப்புகள் கவிதைக்கு வளம் சேர்ப்பன. குறவஞ்சி அமைப்பில் நவபாரதம், பவானி என்ற இரண்டு சிறந்த கவிதை நாடகங்களை இயற்றியுள்ளார். மேனாட்டார் நாடகப்போக்கைத் தழுவி எழுதப் பெற்றதே காமினி என்னும் கவிதை நாடகமாகும். இதனைத் தமிழில் உள்ள இசைகெழு குறு நாடக வகையில் அறிஞர்கள் சேர்ப்பார்கள்.

வால்ட்விட்மனின் 'புல்லின் இதழ்கள்' என்கிற கவிதை நூலில் பல பகுதிகளை 'மனிதனைப் பாடுவேன்' என்கிற தலைப்பில் மொழி பெயர்த்திருக்கிறார். அடியார்க்கு நல்லார் உரையில் காணப்பெறும் கூத்தநூல்கள் குறித்தும் ஆராய்ந்ததாகத் தெரிகிறது.

ஒருதாய் – தாசி, தன் மகளுக்கு ஆண்கள் உலகு பற்றி உபதேசிக்கிற மாதிரி 'நற்றாயிரங்கல்' என்கிற நீண்ட காப்பியம் எழுதியிருக்கிறார் என்று க.நா.சுப்பிரமணியம் குறிப்பிடுகிறார். ஆனால் அந்நூல் கிடைக்கப்பெறவில்லை. திருமூலரின் திருமந்திரத்தில் இவருக்கு மிகுந்த ஈடுபாடு இருந்திருக்கிறது.

பாரசீகக் கவியான உமர்கயாமின் 101 பாடல்களை யோகியார் மொழி பெயர்த்திருக்கிறார். உமர்கயாமின் தத்துவம் தெளிவாகப் புலப்படுகிற மாதிரி மொழிபெயர்ப்பு அமைந்திருக்கிறது. மேரி மக்தலேனோ – 112 பாடல்களாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. உமர்கயாம் எழுதிய ருபாயத்தை எட்வர்டு பிட்ஜெரால்டு ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார் (1809 – 1883). அதனை யோகியார் தமிழில்

டாக்டர் இரா.பாலசுப்பிரமணியன்

மொழிபெயர்த்திருக்கிறார். ஹபீஸ், அத்தர் என்ற பாரசீகப் புலவர்களின் பாடல்களையும் மொழி பெயர்த்துள்ளார்.

அதிர்ஷ்டம் (1937), பக்த அருணகிரி, கிருஷ்ணகுமார் (1947) திருமழிசை ஆழ்வார், ஆண்டாள் போன்ற திரைப்படங்களுக்குக் கதை, வசனம், இயக்கம் என்று பல நிலைகளில் பணிபுரிந்திருக்கிறார். திரைப்படத்துறையில் இவர் வளர்ச்சி பெறவில்லை.

**தேசியப் பார்வை:**

யோகியார் தம் இருபதாவது வயதில் 'சக்திதாசன்' என்னும் புனைபெயரில் 'தேசபக்தகீதம்' என்கிற கவிதை நூலினைப் படைத்துள்ளார்.

*ஒமெனு மெழுத்தே நம்தேசம் – அதில்*
*உத்தமி பாரதசக்தியே வாசம்*
*நாமனு தினமுமே நேசம் – வைத்து*
*நாளும் வணங்கிடப் பாவங்கள் நாசம்*

என்று கூறுகிறார். பராசக்தியைப் பணியும்போது பாவங்கள் அழிந்துவிடும் என்கிறார். காந்தியிடம் இவர் கொண்டுள்ள ஈடுபாட்டினையும் கவிதைவழியே உணரமுடிகிறது. பாரதியின் 'தாயின் மணிக்கொடி பாரீர்' என்னும் பாடலை அடியொற்றி

*வாழ்க மணிக்கொடி பாரதர் மெய்க்கொடி வாழ்கவே*
*– அதை*
*வந்து பணிந்து மகிழ்ந்திட வீரர்கள் சூழ்கவே*

என்று தமிழ்க்குமரியில் கொடிவணக்கப் பாடல் பாடுகிறார். இந்திய தேசியக் காங்கிரசின் பொன்விழாவையொட்டி நடைபெற்ற கவிதைப் போட்டியில் 'கொடி வணக்கம்' என்கிற இக்கவிதைக் காகத் தங்கப் பதக்கம் பெற்றிருக்கிறார்.

தமிழைத் தமிழ்க்குமரியாக்கி மகிழ்பவர் யோகியார். 'எங்கள் குலத்தெய்வம், தாய் – எமக்கு வீடு, இளமை குன்றாக்கன்னி எங்கள் 'தமிழர் நாடு' என்று போற்றுகிறார்

*பாவிரியும் கவிவாணர் புகழ்ந்துபாடும்*
*பசுந்தமிழ்நாடு ஈடில்லை எந்த நாடும்*

என்றும் பெருமைப்படுகிறார். நாட்டுப்புறப்பாடல் சாயலில் 'கதையைக் கேளடா' என்ற நூலை 'காளிதாசன்' என்ற புனைபெயரில் பாடுகிறார். இவர் பாடிய விடுதலைச் சிந்து இதழில் வெளிவந்திருப்பதாக இருக்கிறது. இறைவியையும், தேசியத்தையும் இணைத்துப் பார்ப்பது இவரின் தனித்தன்மை யெனலாம்.

**எல்லாம் யோகமயம்:**

இவரது கவிதைகளில் இயற்கை ஆட்சி நடத்துவதைத் தமிழ்க்குமரித் தொகுப்பில் இடம் பெற்றுள்ள கவிதைகள் புலப்படுத்துகின்றன. கீழ்த்திசையில் வானொளி பாய்ந்த அழகை 'ஜோதி உதயம்' என்ற தலைப்பில் பாடுகிறார். தோப்புகள், சோலைகள், மாமரச்சோலைகள் போன்ற இடங்களிலெல்லாம் இன்பத்து ஜோதி திகழ்வதைக் கண்டு வியக்கிறார்.

*பழைமை கழிந்தது மாய்ந்தன*
*பாரகத் துன்பங்கள் யாவையும்*

என்று ஜோதி உதயத்தின் பயனைக் குறிப்பிடுகிறார். 'மோனக் கருக்கலில் பூத்ததோர் மோகன ஜோதிக் குழந்தை' எனச் சூரியனை வருணிக்கிறார். 'இலகு மாந்தர் கொடுமைக்கு வெட்கி இருளிலே வந்து உலாவுகின்றாயோ?' என்று நிலா இரவில் வருவதற்கான காரணமாகக் கூறுகிறார். நிலாவின் ஒளிக்கள்ளால் உலகம் தூங்கிக்களிக்கிறது என்று பூரிக்கிறார்.

பட்டுப்பூச்சியிடம், "சின்னஞ்சிறு முட்டைப்புழுவாய் இருந்த போது இருந்த ஆசைகள் என்ன? கனவுகள் என்ன? இப்போது இருக்கும் அழகான வண்ணங்களை எங்ஙனம் பெற்றாய்" என்று வியந்து கேட்கிறார்.

*கழித்த உடைக்குள் இந்தக்*
*கவின் உடையை ஈசன்*
*கட்டி வைத்தான் போலும் சிறு*
*பெட்டியிலே முன்னால்*

என்று யோகியார் கேட்கிறார். புறத்தழகை நீக்கினால் பரம ரகசியம் அகத்தில் விரியும். வெளிப்பகைகளை வெட்டி விட்டால் உள் அமுதம் விளங்கும் விச்சை வளர இச்சையைப் போக்கவேண்டும். தேகக்கந் தல்விட்டு நெஞ்சம் ஒளித்து, உணர்வை, உயிரை, ஒடுக்கினால் ஆன்மப்பாங்கு வளரும். யோகத் தூக்கத்தில் தூய பெரும் ஜோதி உள்மாய நடம்பார்ப்பீர் என்று பட்டுப்பூச்சி விரிவாகப் பேசுகிறது. யோகியார் படைக்கும் பட்டுப்பூச்சிகூட யோகம் சம்பந்தமான சிந்தனைகளைப் பேசுகிறது.

சமூகத்தில் சாதி, பழைமை மரபுகள் களையப் படவேண்டுமென்கிற சிந்தனையை இவரது கவிதைகளில் உணரமுடிகிறது. ஆனால், அதைக் கூறுகிற முறையில் தனித்தன்மையைப் பளிச்சிடச் செய்கிறார்.

*சாத்திரமாம், ஏதோ கோத்திரமாம், நெஞ்சில்*
*மாத்திரம் பொய்யை வளர்த்திடுவோர்*
*மாத்திரைப் போதும் மரணம் வராததோர்*
*சூத்திரம் மட்டும் தெரிந்தாரில்லை.*

என்ற வரிகள் தமிழ்க்குமரிக் கவிதைத் தொகுப்பில் காணப்பெறுகின்றன. சமூக விடுதலையுடன் ஆன்மிகத்தை மையமிட்ட தனிமனித விடுதலை அல்லது மரணத்திலிருந்து விடுதலை என்கிற சிந்தனை வித்தியாசமானதாகிறது. பெண்களின் முன்னேற்றம் இவரது கவிதையின் பாடுபொருள்களில் ஒன்றாக உள்ளது. பெண்களை அடிமைத் தளையிலிருந்து நீக்கிக் காதல் செய்யும்படி அறிவுறுத்துகிறார்.

பாலசாண்டில்யன்

## கண் தானம்

வாழும்போது நிதானம்
மாயும்போது கண்தானம்
நமது முடிவிலும் காண்போம்
நல்லதொரு தொடக்கம்.

ஈர விழிகளில் எழில் ரோஜா
பதியம் இட்டுப்போவதால்
நீர்தான் ராஜா!

விழி திறந்தும் காணாத
வியனுலகக் கனவுகட்கு
உயிர் கொடுக்கப் போவதால்
பிரமன் நீங்கள்!

சாக்காட்டை வெல்ல முடியாவிட்டால் என்ன?
சரித்திரமே உங்கள் பெயர் சொல்லுமே!
விழி கொடுப்பீர்! நல்வழி நடப்பீர்!



சோகம் வந்தவர்க்குச்
சொந்தமாகிப் போங்கள் - விழி
தாகம் என்றவர்க்கு கண்ணைத்
தாரை வார்த்துப் போங்கள்!

இருட்டுக்கு எழுந்து வந்து
வெள்ளையடித்ததால் -
நிழலாக இருந்தவற்றை
நிஜமாக்கியதால் நீங்கள்
நேச வரலாற்று நாயகன்!



அமுத விழிகளில்
இன்று முதல் ஆனந்தம்!
காரணம் -
அமுத விழிகளை அர்ப்பணம் செய்த
ஆண்டவன் நீங்கள்!



இறந்த பின்பும்
ஈகை செய்வோமென்ற
வழி வகுப்போம்.
எல்லாம் விதியென்று
இருப்போர்க்கு
விழி கொடுப்போம்.

விழி மறுத்த இறைவன்
உங்கள் மூலம்
வழி சமைத்தான் போலும்!
இறப்பில்லை
உங்கள் கண்களுக்கு!

சிவா-...

---

இந்த உலகையொரு இன்பத்திரு உலகாய்
கந்தர்வர் வாழும் களியாட்ட பூமியதாய்
சாவை நொறுக்கித் தனிக்காதல் செய்திடுவீர்
தேவக் களிப்புத் திகழ்ச்சி யருந்திடுவீர்

என்று கூறுகிறபோது, யோகியார் குறிப்பிடும் காதல் மானிடக் காதலா? அல்லது சாவை நொறுக்கும் தனிக்காதலா? என்கிற சந்தேகம் வந்துவிடுகிறது.

இயற்கை, தேசியம், சமூகம், பெண்மை போன்ற பல நிலைகளிலும் இவரது சிந்தனைப் பார்வை இருந்தாலும் எல்லாவற்றிலும் அடிப்படை இழையாய் ஆன்மிகம் அல்லது யோக சிந்தனைகளை இணைப்பதுதான் தனித்தன்மையாக இருக்கிறது.

பல பாடல்களில் வெளிப்படையாகவும் பாடுகிறார். தமிழ்க்குமரியில் 'பலி' என்ற தலைப்பிலான கவிதையில்

குய்யத்து முக்கோணப் பாம்பதனை நெற்றிக்
கோயிலுக்குள்ளே விரட்டிவிட்டால்
மையத்துக் கோபுர வாயிலிலே அவள்
மன்மத நாடகம் பார்த்திடலாம்

என்று குறிப்பிடுகிறார். இவரிடமும் இவர் படைப்புகளிலும் யோகச் சிந்தனைகள் மிகுந்திருப்பதால் யோகியார் என்ற சிறப்பைப் பெறுகிறார். கவிஞர் மரபில் யோகியார் என்றால் அது ச.து.சுப்பிரமணியத்தைக் குறிப்பதாகவே உள்ளது. இவரது படைப்புகள் பல கிடைக்கவில்லை. அவை புதுப்பதிப்புகளைப் பெற்று தமிழுலகில் தவழத் தமிழ்க்குமரிதான் அருள்பாலிக்க வேண்டும்.

✪✪

# 20 வருடங்களும் 7 நாட்களும்

பத்தாயிரம் - ஏன் பத்தாயிரம் - லட்சமாகத்தான் இருக்கட்டுமே, கூட்டத்தில் பூதலூர் மகாதேவ சர்மா தனியாக, மற்ற எல்லாரையும் தள்ளி விட்டுப் பிரகாசிப்பார். இதற்கு அவருடைய ஆறு அடி உயரம் மட்டும் காரணமில்லை.

கம்பீரமான தோற்றம். அழகான மாநிறம். அகலமான முகத்தில் பரந்த நெற்றி. அடர்ந்த புருவங்கள். ஊடுருவிப் பார்க்கும் கண்கள். அவை சிரிக்கும் சிரிப்பு. நீண்டு இறங்கிய கூர்மையான மூக்கு. வழவழ கன்னங்கள். பாந்தமான உதடுகள்.. இன்னும் என்ன. மொத்தத்தில் சர்மா ஐம்பது வயதிலும் இளமையைக் கொட்டும் ஆணழகர்!

நெற்றியில் மின்னல் கீற்றுகள் போல விபூதி. அதிக ரோமமில்லாத, செதுக்கி விடப்பட்ட புல் தரைபோல அமைந்த மண்டையின் பின்பகுதியில் மோதிரம் போலக் காட்சி தரும் குடுமி. காதுகளில் வைரக்கடுக்கன்கள். சொல்லப் போனால் அவர் ஒரு ஜீவநதி. சம்ஸ்கிருதத்தில் புலமை. இதுவரையில் ஏழு முறை ஜெர்மனிக்கும் நான்கு முறை அமெரிக்காவுக்கும் புலமையை வெளிச்சம் போட்டுக் காட்டப் போயிருக்கிறார். பாரதத்தில் மூன்று பெரிய சர்வகலாசாலைகளில் பேராசிரியர். மாதம் பத்து, பத்து நாள்கள்.

அவருடைய பாண்டித்தியம் வடமொழியுடன் நிற்கவில்லை. சங்க காலத் தமிழிலிருந்து பாரதியார் வரை தலைகீழாகத் தெரியும், மில்டன், கீட்ஸ், ஷெல்லியிலிருந்து ஷேக்ஸ்பியர் மற்றும் பெர்னார்ட்ஷா வரை அவர் எதையும் விட்டு வைக்கவில்லை. தாகூரை மனத்தில் வைத்துக் கொண்டு வங்காளியைப் பயின்றார். இந்தி சரளமாக அவருடைய நாவில் புரண்டது.

இப்படிப்பட்ட சர்மா 1997ஆம் ஆண்டு மே மாதம் ஏழாம் தேதி புதன்கிழமை ஓர் ஆனந்த அதிர்ச்சிக்கு உள்ளானார். அமெரிக்காவிலுள்ள பாஸ்டன் சர்வ கலாசாலையிலிருந்து ஒரு கடிதம் வந்தது. அமெரிக்காவில் உள்ள ஒன்பது சர்வகலாசாலைகள் ஒன்று சேர்ந்து அவரைப் பாராட்டி, கௌரவித்து ஒரு லட்சம் டாலர் பணமுடிப்பும் அளிக்கப் போகிறார்கள். கடிதத்தில் இருந்த சில வரிகள் இன்பமான நிபந்தனைகளாகப்பட்டன. அந்த விழா முடிவுற்ற பிறகு ஒன்பது சர்வகலாசாலைகளிலும் பாரதக் கலாசாரம் பற்றியும், தமிழ் மற்றும் வடமொழி பற்றியும் அவர் பேச வேண்டும்.

கடிதத்தில் ஒரே ஒரு வாக்கியம் மட்டும் அவரை நிலைகுலையச் செய்தது.

'பாஸ்டன் பாராட்டு விழாவில் தங்கள் மனைவியும் உடனிருந்தாக வேண்டும்; அவருக்கும் ஒரு சிறப்புப் பரிசு வழங்கப்பட உள்ளது.'

மகாதேவ சர்மா குழம்பிப் போனார். என்ன செய்ய? மனைவி உடல் நலக்குறைவு காரணமாக வர இயலாது என்று தெரிவிக்கவா? அவள் வர விரும்பவில்லை என்று அறிவிக்கவா? அல்லது வேறு ஏதேனும் காரணம் கூறி மழுப்பவா? என்ன சொன்னாலும் அது ஒரு பொய்யாகத் தான் இருக்க முடியும். ஓர் அறிவு ஜீவியான சர்மா இதுவரை பொய் பேசியதில்லை. ஒரு பாராட்டு விழாவுக்காக, லட்சம் டாலர் பணமுடிப்புக்காக ஒரு பொய்யை உதிர்க்க வேண்டுமா?

கடிதம் மகிழ்ச்சியைவிட அதிகம் விசனத்தையே அளித்தது. சாரதா அவரை விட்டுப் பிரிந்து கிட்டத்தட்ட இருபது வருடங்களாகின்றன. பாலக்காட்டில் ஒரு தனியார் கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியையாகப் பணிபுரிகிறாள் என்று மட்டும்தான் அவருக்குத் தெரியும். அவளாக அவரை விட்டுச் செல்லவில்லை. அவரால் விரட்டியடிக்கப் பட்டவள் சாரதா. இதுவரை இருவருமே விவாகரத்துக் கோரவில்லை. இன்னும் சொல்லப் போனால் இந்த இருபது ஆண்டுகளில் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டது கூடக் கிடையாது. இப்போது என்ன செய்ய? இந்த விழாவுக்காக மட்டும் சில நாள்களுக்கு சாரதாவை மனைவியாக ஏற்றுக் கொள்ளுவதா? இதற்காக அவரல்லவா இப்போது பாலக்காடு செல்லவேண்டும்?

நினைத்த மாத்திரத்தில் மனம் கூசியது. 'என்னை விட்டு ஒரே அடியாய் வெளியே போடீ' என்று விரட்டிய என்னால், 'என்னோடு அமெரிக்காவுக்கு வந்து சில நாள் மனைவியாக இரு!' என்று எப்படிக் கேட்க முடியும்?

திடீரென்று கூடத்துக்கு வந்த அவருடைய தாயார் பாகீரதி, ஊஞ்சலில் கடிதமும் கையுமாக சிலையாக அமர்ந்திருக்கும் பிள்ளையைப் பார்த்து திடுக்கிட்டாள்.

பி.வி.ஆர்.

"தேவா. என்னடா இப்படிக் கண்ணை மூடி அசையாம உட்கார்ந்திருக்கே..! என்னாச்சு..! கையில என்ன லெட்டர்?"

கண்விழித்துப் பார்த்த சர்மாவின் மனத்தில் மின்னலாக எண்ணங்கள் பாய்ந்து வந்தன. அன்றைக்கும் சரி. இன்றைக்கும் சரி. அம்மா சாரதா பக்கம் தான். கோயமுத்தூரோ குருவாயூரோ போகும் பொழுதெல்லாம் ஒரு நடை பாலக்காட்டுக்குப் போய் சாரதாவைப் பார்ப்பாள். சில சமயங்களில் ஓரிரு நாள்கள் அவளுடன் தங்கவும் செய்வாள். இப்போது ஏன் அம்மாவைத் தூது அனுப்பக்கூடாது?

"என்னம்மா கேட்டே?"

"அலமந்து ஊஞ்சல்ல இப்படி உட்கார்ந்திருக்கியே. என்னன்னு கேட்டேண்டா."

"அமெரிக்காவிலே எனக்கு ஜூலை மாதம் பத்தாம் தேதி ஒரு பெரிய பாராட்டு விழா எடுக்கறா. ஒரு லட்சம் டாலர் பணமுடிப்பும் தர்றா.."

"இந்த சந்தோஷமான செய்தியைக் கையில வைச்சுண்டா கதிகலங்கின வனைப் போலக் கிடக்கிறே?"

"ஒரு நிபந்தனையும் போட்டிருக்கா அம்மா."

"என்னடா அது?"

"அவளும் கூட இருக்கணுமாம்."

"அவள்னா யாரு. தேவா?"

"ஏம்மா நீ கூட......?"

"அவள்தான் இருபது வருஷமா இல்லையேடா. வேற ஏதானும் 'அவள்' இருக்குமோன்னு கேட்டேன்."

"இப்ப என்ன செய்யறது. அம்மா?"

"ஏன்டா நீ ஊர் உலகத்துக் கெல்லாம் புரொபசர். சிவன் தலையிலேர்ந்து கங்கை கொட்டின மாதிரி உன் நாக்கிலேர்ந்து வேதமும் இதிகாசமும் அகநானூறும் புறநானூறும் கொட்டறது. நீ போய் எங்கிட்ட வழிகேட்கிறியே? எனக்கு சிரிப்பு வர்றது."

"என்னால இரண்டுல ஒண்ணுதாம்மா செய்ய முடியும்."

"அதென்ன?"

"ஒண்ணு. அவளை அழைச்சண்டு போய் வரணும். இரண்டு. என்னால நிகழ்ச்சியில கலந்து கொள்ள முடியாதுன்னு தெரிவிக்கணும்."

"நீ இப்பப் போகலைன்னா மறுபடியும் ஒரு நாள். அழைப்பு அனுப்புவா. இல்லையா? அதுவும் உன் சௌகரியத்தைக் கேட்டுட்டு?"

"அனுப்பலாம்."

"அப்ப என்ன செய்வே?"

"இதே நிபந்தனை அப்பவும் இருந்தால் இப்ப இருக்கிற குழப்பம் தான்."

"இதில என்னடா தேவா. குழப்பம்?"

"என்னம்மா சொல்றே?"

"கட்டின பெண்டாட்டியையே ஈவிரக்கமில்லாம நடுராத்திரியிலே விரட்டி அடிச்சவனுக்கு எதுக்குடா பாராட்டு விழா. லட்சம் டாலர்? அந்த லெட்டரைக் கிழிச்சுப் போடுடா.."

"அம்மா!"

"பின்ன என்னடா? உன்னால நம்ப பரம்பரையே உன்னோட நின்னு போறது. அமெரிக்காவாம், லட்சமாம். டாலராம்.. நீ ஊர்லேயும் நாட்டிலயும் பிரசித்தனா இருக்கலாம்டா. ஆனா மானம்? குடும்ப மானம்? கௌரவம்..? ஒரு பொண்ணை நீ தள்ளி வைச்சுட்டே.. ஆனா உன்னை நம்ம மனுஷாளே தள்ளி வைச்சிருக்கா. இதைப் புரிஞ்சுக்கோ."

"அம்மா. நீ ஒரு பெரிய விஷயத்தை மறந்துட்டுப் பேசறே"

"என்னடா அது நான் மறந்து போயிட்ட விஷயம்?"

"அவ.. அவ.."

"துரோகம் பண்ணினான்னுதானே சொல்ல வர்றே?"

"ஆமாம்."

"நீ கண்ணால பார்த்தியா?"

"எல்லாக் கண்றாவிகளையும் கண்ணால பார்த்துத் தான் தெரிஞ்சுக்கணுமா..?"

"நீ அன்னிக்கு ஊர்ல இல்லை. உனக்கு உண்மை என்னன்னு தெரியாது.." என்ற அம்மா தொடர்ந்து. "நீ எது உண்மைன்னு அன்னிக்கும் இன்னிக்கும் உறுதி யாயிருக்கியோ? அது பொய்டா. இது சாரதாவுக்குத் தெரியும். எனக்குத் தெரியும் செத்துப் போயிட்ட ரகுவுக்குத் தெரியும். எல்லாருக்கும் மேலா அந்த பகவானுக்குத் தெரியும்." என்றாள்.

"நடந்ததைப் பார்க்காதவ. நீ. உன்னால சாட்சி சொல்ல முடியாது. கூப்பிட்ட குரலுக்கு ஓடி வர்றவன் இல்லை. பகவான்."

"இந்த எண்ணத்தில் நீ இன்னும் உறுதியாயிருக்கியா. தேவா?"

"ஆமாம்மா.."

"அப்ப எதுக்கு பாராட்டுக்கும் டாலருக்கும் ஆசைப்பட்டு அலை யறே..?"

"நான் பணத்துக்காக அலையலை."

"அப்ப பாராட்டுக்காக அலையறியா? நெஞ்சைத் தொட்டுச் சொல்லு. சொந்த வாழ்க்கையில ஈனத்தனமா நடந்த நீ. இப்படிப் பட்ட பாராட்டுக்கு ஏற்றவனா? அருகதை உள்ளவனா?"

"நீ ஏதாவது நல்ல யோசனை சொல்லுவேன்னு நான் எதிர்பார்த்தேன். அம்மா..! ஆனா நீயே....."

"இதுக்குக் காரணம் நான் இல்லை. நீயேதான்."

மேற்கொண்டு மகாதேவ சர்மாவால் எதுவும் பேச முடியவில்லை. குழப்பம் தீராமல் தம் அறைக்குச் சென்றார்.

இரண்டு நாள்களுக்குப் பிறகு. அவருக்கு வழங்கப் போகிற பாராட்டைப் பற்றிப் பத்திரிகைகள் முழங்கின. தொலைக்காட்சிகள். பி.பி.சி. உட்பட கர்ஜித்தன.

❐ ❐ ❐

இரண்டு நாள்கள் தீவிரமாக யோசித்தார். எந்தக் கணவனாலும் மன்னிக்க முடியாத ஒரு பாப காரியத்தை சாரதா செய்திருப்பதாகவே இன்னும் அவருக்குள் தோன்றியது.

இருப்பினும் அம்மா தன் நம்பிக்கையில் உறுதியாக இருப்பது அவரைச் சற்றே அசைய வைத்தது. அவர்தான் தவறான கணக்கு போட்டு விட்டிருக்கக் கூடுமோ?.

அந்த நாள் -

1977ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் -

ஒரு ஞாயிற்றுக்கிழமை. திங்கட் கிழமை ஊர் திரும்பவேண்டியவர். எதிர்பாராத காரணத்தினால் ஞாயிறு அன்றே காலை ஐந்தரை மணிக்கு வீடு திரும்பினார்.

கதவைத்தட்டினார். மின்மணியை அழுத்தினார். ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு சாரதா திரும்பி வந்தாள்.

"எவ்வளவு நேரம் காக்கறது? அம்மா எங்கே?"

"முந்தாநாள் கும்பகோணம் போனாள். நாளை வர்றா.."

"இப்பத்தான் தூங்கி எழுந்தியா?"

கூடத்தினுள் பிரவேசித்தவர் கைப்பெட்டியை ஊஞ்சலின் மீது வைத்தார். மாடியில் தண்ணீர் கொட்டும் ஒலி கேட்டது.

"ஆமாம்" என்றாள் சாரதா, அவர் கேட்ட கேள்விக்கு பதிலாக.

"மாடியில் என்ன சத்தம்?"

"ரகுநாதன் வந்திருக்கான்."

"எந்த ரகுநாதன்? உன் மாமா பிள்ளையா?"

"ஆமாம்."

"அவனைத்தானே உனக்கு முதலில் பார்த்தது?"

"ஏன் திடீர்னு வேற திசையில பேசறேள்?"

"அவனாக வந்தானா, அல்லது நான் இல்லைங்கற தைரியத்தில நீயா வரவழைச்சியா?"

"அவனாக வந்தான். அம்மா ஊருக்குப் போறதுக்கு முன்னாடி."

"மாடியில தூங்கினானா?"

"ஆமாம்."

"எங்கே?"

"உங்க ரூம்ல.."

"என்ன சொன்னே? என்ரூம்லயா? என் கட்டில்லேயா?"

"ஆனா கட்டில்லேர்ந்து படுக்கை, தலைபணைகளைக் கீழே ஓர் ஓரமாப் போட்டுட்டேன்."

"நீ எங்கே தூங்கினே?"

திடீரென்று சாரதா சீறினாள்.

"ஏன் இப்படிச் சுத்தி வளைச்சு விசாரணை நடத்தறீங்க? வெட்டு ஒண்ணு துண்டு இரண்டாக் கேட்டுடுங்களேன்."

"எனக்கு எல்லாம் புரிஞ்சாச்சு.. நீ எனக்கு லாயக்கு இல்லாதவள். என் மானத்தையே தெருவுக்குக் கொண்டு வர்றவள்."



"இதப்பாருங்க.. நானும் படிச்சவ.. உங்க அளவுக்கு இல்லைன்னாலும் ஃபர்ஸ்ட் கிளாஸ்ல எம்.ஏ. டிக்ரி வாங்கினவ."

"நிறுத்து! அவன்படி இறங்கி வர்றான்."

"அவன்ட்ட எதுவும் கேட்காதீங்க.. இந்தப் பிரச்னை நமக்குள்ளே மட்டும் இருக்கட்டும்."

ரகுநாதன் அவர் அருகே வந்தான்.

"குட் மார்னிங், புரொபசர் சார்.. நீங்க நாளைக்குத் தான் ஊர் திரும்பறதா சாரதா சொன்னா... 'இவளுக்கு இரண்டு நாள் துணையா இருப்பா, கும்பகோணம் வரையிலும் போயிட்டு வரேன்னு உங்க அம்மா சொன்னா.. எப்படி இருக்கேள்? நீங்க போன ஸெமினார் அதுக்குள்ளே முடிஞ்சுட்டதா?"

அவன் சரளமாகப் பேசுவதைக் கேட்கக் கேட்க ஆத்திரமேகங்கள் ஒன்று கூடிக் கருமையாகி, மின்னலை வீசியது.. அடுத்து இடி.

"வெளியே போடா..!"

"சார்!"

"கெட் அவுட்.. ஐ வில் கில் யூ!"

ரகுநாதன் சிரித்தான்.

"நான் என்ன தவறு செஞ்சேன், சார்?"

"எதுவும் பேச நான் விரும்பலை.. அஞ்சு நிமிஷம் டயம் தரேன். போ."

திடீரென்று ரகுநாதனுக்கு விஷயம் புரிந்தது.

"வேதம் படிச்ச மனசில இப்படி ஓர் அழுக்கா..? நான் இங்கே வந்ததும் இரண்டு

நாள் தங்கினதும் தவறுன்னா மன்னிப்புக் கேக்கறேன். ஆனா இதே வார்த்தைகளை சாரதா மேல கொட்டாதீங்க. சாரதா! நான் வர்றேன். இரண்டு நாளா நீ செஞ்ச உதவியையும் சிசுருஷையையும் நான் வாழப் போற கொஞ்ச நாள் வரை மறக்க மாட்டேன்.. நான் வரேன்"

"நீ கொண்டு வந்த எல்லா மருந்துகளையும் மறக்காம கொண்டு போ. ரகு"

அவன் வெளியேறிச் சென்ற பிறகு மௌன ஆவேசத்திலிருந்து சர்மா வெளிவந்தார்.

"நீயும் உன்னுடைய எல்லா உடைமைகளையும் மறக்காம எடுத்துண்டு வெளியே போ.."

"எதுக்கு ?"

"நீ இனிமே என்னோட வாழற உரிமையையும் யோக்யதையையும் இழந்துட்டே.."

"இது பரஸ்பரமாகவும் இருக்கலாம் இல்லையா? ஆனா எனக்கு இங்கே வாழ உரிமை இருக்கு."

"கழுத்தைப் பிடிச்சுத் தள்ளுவேன்... இரண்டு பகல் இரண்டு ராத்திரி..."

"மூடுங்க வாயை! ரகு எந்த நிலைமையில் எங்கேயிருந்து வந்தான்னு உங்களுக்குத் தெரியுமா? இப்ப என்ன வார்த்தை சொல்லிட்டுப் போனான்னு தெரியுமில்லையா?"

"அவன் செத்தா என்ன, உசிரோட இருந்தா எனக்கு என்ன? முதல்ல நீ வெளியே போ. இனிமே நான் உன் புருஷன் இல்லை. நீ என் பெண்டாட்டியில்லை."

"சம்ஸ்காரங்களைத் தலைகீழா ஒப்பிப்பீங்களே? சபதபதி மந்திரங் களோட அர்த்தம் மறந்து போச்சா?"

"அதைப்பத்திப் பேச என்ன யோக்கியதை உனக்கு? என்னோட ஏழு அடி நடக்கறப்பவே இந்த ரகுவோட பத்து அடி நடந்தவ நீ. இன்னும் ஒரு மணி நேரம் அவகாசம் தரேன்."

"அம்மா வரட்டும். அவ நியாயம் சொல்லட்டும்."

"தேவையில்லை."

"இன்னிக்கு விரட்டி அனுப்பற நீங்க ஒரு நாள் உங்க தவறை உணருவீங்க.. அப்ப நீங்களா என்னைத் தேடி வருவீங்க.."

"நானா? உன்னைத்தேடியா? எத்தனை ஜன்மங்கள் எடுத்தாலும் நடக்காது."

✪ ✪ ✪

சிந்தனையிலிருந்து விடுபட்ட சர்மா. அவர் கூறிய வார்த்தைகள் இப்போது அவர் மண்டையில் சம்மட்டியால் அடிப்பதை உணர்ந்தார். அந்த வலியிலும் அவர் நிதானத்தை இழக்கவில்லை. யோசித்தார். அவர் அமெரிக்கா போகவேண்டும். பாராட்டைப் பெறவேண்டும். ஒரு வட்சம் டாலர் அவர் மேலும் செய்யப் போகிற ஆராய்ச்சிகளுக்கு உதவியாக இருக்கும். அவர் இப்போது செய்ய வேண்டியது ஒன்றே ஒன்றுதான். பாஸ்டன் சர்வகலாசாலையுடன் தொடர்பு கொள்ள வேண்டும் 'மனைவியும் உடன் வரவேண்டும்,' என்ற நிபந்தனையை அகற்றும்படி கேட்டுக் கொள்ள வேண்டும்.

சுவர்க் கடிகாரத்தைப் பார்த்தார். ஆறுமணி. இப்போது அமெரிக்காவில் விடிந்திருக்கும். புரொபசர் ஜேம்ஸ் டிக்சன் நிச்சயம் வீட்டில் இருப்பார் அவர் இல்லாவிட்டால் புரொபசர் ஜான் பீட்டருடன் பேசிப்பார்க்கலாம். கடிதத்தில் கையெழுத்துப் போட்டிருப்பவர் டிக்சன்தான்.

அவருடைய அதிருஷ்டம் தொலைபேசியில் டிக்சன் கிடைத்தார். சர்மா சொல்ல வேண்டியதைச் சொன்னார்.

"உங்க பயோ டேட்டாவில் திருமணமானவர். மனைவியின் பெயர் சாரதா என்றிருக்கிறதே? சாரதா இன்னும் உயிரோடதானே இருக்கிறாள்?"

"ஆமாம் புரொபசர்."

"அப்ப என்னால் எதுவும் செய்ய முடியாது புரொபசர் சர்மா! ஒன்பது யூனிவர்சிட்டீஸ் கூடி உங்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். இது வருஷா வருஷம் யாரோ ஒருத்தருக்கு அளிக்கிற பாராட்டு இல்லை.. இது அபூர்வமாக் கொடுக்கப்படற பாராட்டு. நீங்க உங்க மனைவியையும் அழைத்துக் கொண்டு. மூன்று நாள் முன்னதாகவே வந்து விடுங்கள்."

டிக்சன் அமெரிக்காவில் டெலி போனை வைத்து விட்டார். ஆனால் சர்மாவின் கையிலிருந்த கருவி கையிலேயே இருந்தது.

அபூர்வமான பாராட்டு! ஒன்பது சர்வகலாசாலைகள் கூடிப் பேசி முடிவு எடுத்து அவரைத் தேர்ந்தெடுத் திருக்கிறார்கள்.

புகழ் ஆசை அவருடைய கண்களை மூட. மறுநாள் காலை விமானத்தில் கோவை சென்றார் அங்கிருந்து ஒரு டாக்சி. பாலக்காட்டை அடையும்போது பன்னிரண்டு மணி. ஒரு பெரிய ஓட்டலில் தங்கின அவர். சாரதா பணி புரியும் மெர்சி கல்லூரிக்கு போன் செய்தார். மூன்று மணிக்குத்தான் அவளால் வீடு திரும்ப முடியும் என்று கல்லூரித் தலைவி பதில் கூறினார்.

சர்மா உதட்டைக் கடித்துக் கொண்டார். தாம் யார் என்று அறிவித்திருந்தால். கல்லூரித் தலைவி ஒரு காரையே அல்லவா அனுப்பியிருப்பாள்? ஓர் உறவினர் என்று மொட்டையாகக் கூறியது எதிர்பார்த்த பலனை அளிக்கவில்லை.

அவர் சாரதாவின் வீட்டைத் தேடிப் பிடித்து அடையும் போது மாலை மணி நாலரை

ஆட்டோவிலிருந்து இறங்கிய அவர் பார்த்தார்.. உள்ளடங்கி நின்ற ஒரு சிறுபங்களா. வாசலில் ஒரு மாருதி நின்று கொண்டிருந்தது.

அவர் கைவிரல் நடுங்காமல் மின்மணி பித்தானை அழுத்தினார்.

கதவு திறந்தது.

"வாங்கோ!" என்றாள் சாரதா. அவளுடைய விழிகளில் ஆச்சரி யத்துக்குப் பதிலாக ஓர் எதிர்பார்ப்பு பிரதிபலிப்பதாகப் பட்டது அவருக்கு.

"ஒரு முக்கிய விஷயமா உன்னைப் பார்க்க வந்திருக்கேன்."

"அம்மா கார்த்தால போன்ல எல்லாம் சொன்னா..."

"அமெரிக்கா விஷயம்."

"எனக்கு எல்லாம் தெரியும். அம்மா எதையும் விட்டு வைக்கவில்லை."

"நான் உடனடியா பாஸ்போர்ட்டுக்கு ஏற்பாடு செய்யறேன்.."

"அவசியம் இல்லை. என்னிடம் பாஸ்போர்ட் இருக்கு."

"ஜூலை பத்து அன்னிக்கு நிகழ்ச்சி.

அதில் நீ இருந்தாகணும். அது முடிஞ்சதும் தனியா திரும்பிடலாம். எனக்கு ஒரு மாச லெக்சர் டூர் இருக்கு...."

"நான் ஏன் வரணும்?"

"மனைவியோட வந்தாகணும்னு சொல்லியிருக்கா.."

"ஒரு கோர்ட்டை விட உங்க மனசில இருபது வருஷம் முன்னாடி உருவான தீர்ப்பு உறுதியில்லையா?"

"நான் விவாதம் செய்ய வரலை.."

"உங்களுக்கு இருபது வருஷமா தேவைப்படாத மனைவி, உங்க சுயநலத்துக்காக ஏழெட்டு நாளுக்குத் தேவைப்படறது இல்லையா?"

"இதுதான் உன் முடிவா?"

"நான் இன்னும் முடிவுக்கே வரலை... பாஸ்டன் யூனிவர்சிட்டி நிபந்தனை போட்டிருக்கிற மாதிரி நானும் ஒரு நிபந்தனை போடறேன். நிகழ்ச்சியில் கலந்து கொண்ட பிறகாவது, நம்ப ஊரும் உலகமும் அறிய என்னை மனசார மனைவியா ஏத்துப்பீங்களா?"

"அது.. அது.."

"இன்னமும் நீங்க உங்க எண்ணத்தில் உறுதியாயிருக்கீங்க. அந்த ரகு என் மாமா பிள்ளை. என்னைக் கலியாணம் செய்து கொள்ளாததன் காரணம் என்ன தெரியுமா? அப்போதே அவனுக்கு பிளட் கான்சர். எல்லா டாக்டர்களும் கைவிட்ட பிறகுதான் ஊருக்குத் திரும்பறதுக்கு முன்னாடி எங்கிட்ட சொல்லிண்டு போக வந்தான். நான் தான் நீங்க வர்ற வரைக்கும் தங்கச் சொன்னேன்.

இருந்த இரண்டு நாளில் மூன்று முறை வாயிலிருந்து ரத்தம் கொட்டியது. இதையெல்லாம் அன்னிக்கு நான் விவரமாச் சொல்லலை.. ஆனா அம்மா அப்புறமா பல தடவை சொன்னதையும் நீங்க நம்பலை.. நான் உங்களோட அமெரிக்கா வர ரெடி. மனைவியா நடிக்கவும் தயார். ஆனா மேடையில நான் பேசுவேன். இந்துமதத் தாம்பத்தியத்தைப் பத்திக் கொஞ்சம் பேசிவிட்டு, நம்ப தாம்பத்தியம் பற்றியும் அமெரிக்காவுக்குச் சொல்லுவேன். இப்ப நீங்க ரெடியா, என்னை அழைச்சுப் போக?"

"என் மானமே போயிடும்."

"இப்படிப்பட்ட ஒரு நிகழ்ச்சி இல்லைன்னா நீங்க என்னைத் தேடி வந்திருக்க மாட்டீங்க. இப்படியே என் வாழ்க்கை இன்னும் இருபது வருஷம் ஓடிடும்.. இதுதான் உண்மை."







மகாதேவ சர்மாவால் பதில் கூறமுடிவில்லை.

அவள் தொடர்ந்தாள்.

"இப்ப உங்க வயசு அம்பது. நான் நாப்பத்தாறு. நான் இழந்ததெல்லாம் இழந்தது தான். இப்ப நமக்குக் கிடைச்சிருக்கிறது அமைதி. நிம்மதி... இருந்தாலும் எனக்கு ஒரு துணை வேண்டும்தான். உங்களுக்கு பாராட்டும் லட்சம் டாலரும் தான் முக்கியம்னா அதுக்குத்தடையா நான் நிக்கலை. வரேன். ஆனா அப்புறமும் தள்ளாதீங்க."

"நான் வரேன்."

"சரி. டிபனும் காபியும் ரெடியாயிருக்கு."

"என் மனசு இன்னும் ரெடியாகலை."

★ ★ ★

மறுநாள் காலை. சர்மா வந்தார்.

"சாரதா. நேத்து தர்றதாச் சொன்ன டிபன் காபியைக் கொடு."

இருபது ஆண்டுகளுக்கு பிறகு, பெயர் சொல்லி அவர் அழைப்பதைக் கேட்டதும் சாரதா சிலிர்த்துப்போனாள்.

"மனசு ரெடியாயிடுத்தா?"

"ராத்திரியெல்லாம் யோசித்தேன்.. கேவலம் ஒரு பாராட்டுக்காக ஒரு வாரகாலம் உன்னை மனைவியா அமெரிக்காவுக்குக் காட்டறது ஈனமான காரியமாப் பட்டது. அதனால.."

"அதனால?"

"நான் அமெரிக்கா போகலை."

சாரதா மௌனமானாள்.

"நான் இந்தியாவில ஒரு விசிட்டிங் புரொபசர். சென்னையில் இருந்து கொண்டுதான் அப்படி இருக்கணும்னு இல்லை. அதனால.."

இப்போது சாரதா கேள்வி கேட்காமல் அவருடைய பேச்சின் தொடர்ச்சிக்குக் காத்திருந்தாள்.

"அதனால நான் இந்த வீட்டுக்கே வந்துடலாம்னு முடிவு செய்துட்டேன். எந்த வீட்டிலிருந்து உன்னைநான் விரட்டி அடிச்சேனோ அந்த வீட்டுக்குள் நீ மறுபடியும் கால் வைக்க வேண்டாம். அதுக்கு பதிலா இந்த வீடு இனிமே நம்ப வீடா ஆயிடட்டும்."

"இந்த முடிவில நீங்க உறுதியாயிருக்கீங்களா?"

"சத்தியமா."

"அப்ப என் முடிவையும் நீங்க ஏத்துக்கணும்.."

"என்ன அது?"

"நீங்க பாராட்டு விழாவுக்குப் போறீங்க. நானும் வரேன். என் வாயிலிருந்து ஒரு வார்த்தை வராது."

மகாதேவ சர்மா பதில் கூற முடியாமல் திணறிப் போனார்.

★★

# தேடித் தேடி...



ஜெ. கமலநாதன்

இருபது ஆண்டுகளுக்குப் பின்
என் கிராமத்துக்குப் போனேன்..
அப்படியே.. அப்படியே... என் ஊர்!
பஸ் ஸ்டாண்டை ஒட்டிய
பெரிய ஆலமரத்தடியில்
அதே தேய்ந்த கருங்கற்கள்மீது
சவரம் நடந்து கொண்டிருந்தது!
அருகே தொங்கும் சிவப்பு தபால்பெட்டி
கொஞ்சம் தள்ளிய குளத்தில்
பாசி படர்ந்த அதே தண்ணீர்!
கொஞ்சம் தள்ளி உள்ளே போனால்
கவனிப்பாரற்ற பெரிய கோயில்
எரியும் குத்துவிளக்கின் ஒளியில்
பெரிய சிவலிங்கம்!
பழைய குருக்களின் மகன்
அவர் பாணியிலேயே
கற்பூரம் காட்டிவிட்டு
தட்டில் விழுந்த எட்டணாவை எடுத்து
முடிந்தபின்
வெளியே வந்து
கொடிமரத்தின் மீது சாய்ந்து கொண்டான்!
வீட்டுத் திண்ணையில்
நிச்சிந்தையாக மெதுவான தொனியில்
கதைபேசிக் கொண்டிருக்கும் மக்கள்!
அருகே அசைபோடும் மாடுகள்!

ஒரு காலத்தில் வெள்ளம்புரண்ட
ஊர்க்கோடி ஆற்றில்
தகிக்கும் வெண்மணற்பரப்பு மட்டுமே!
ஒன்றும் பெரிதாய் மாறி விடவில்லை!
கடிகார முட்களின் வேகத்தால்
பாதிக்கப் படாமல்
மக்கள் அப்படியே.. அப்படியே..!

ஒரேநாளில் மிரண்டுபோய்
நான் நகருக்குத்
திரும்பி விட்டாலும்
ஓர் உறுத்தல்!
மனத்தின் கோடியில் நாம் மட்டும் பெரிதாய்
என்ன சாதித்து விட்டோம்?
காலை முதல் இரவு வரை
நிமிடப் பிரக்ஞையோடு
துரத்து துரத்து என "ஏதோ ஒன்றை"
துரத்திக் கொண்டே இருப்பதைத் தவிர.
வேறென்ன பெரிதாய்..
அப்படி எதைத்தான் துரத்துகிறோம்?
ஓ..
என் கிராமத்தில் அவர்கள்
ஆழ்ந்து அறிந்து அனுபவித்துக் கொண்டிருக்கும்
நிம்மதியையா?

○●○



# சித்திவினாயகர் வழி காட்டுகின்றது

எஸ்.எஸ். நாகராஜன்



ஆழ்துளைக் கிணறுகளிலிருந்து நீர் உறிஞ்சும் குழாய்கள்

### விஸ்தரிப்புப்பணி:

சென்னை சோழவரத்திற்கு அருகில் பண்டிக்காவனூரில் (அழிஞ்சிவாக்கம், பண்டிக்காவனூர், சோழவரம் அஞ்சல், சென்னை 600 067 போன்: 6418317) அமைந்துள்ள விவசாயப் பண்ணை ஸ்ரீ சித்தி வினாயகர் பண்ணையாகும். பண்ணையில் பல பயிர் சாகுபடி வருடம் முழுதும் செய்யப்பட்டு வருகின்றது. பண்ணையின் நுழைவு வாயிலில் அமைந்துள்ள அருள்மிகு சித்தி வினாயகர் ஆலயம் கண்கவரும் வகையில் கட்டப்பட்டுள்ளது. சித்தி வினாயகரின் பெயரில் செயல்பட்டு வரும் இப்பண்ணை விவசாயிகளுக்கு ஒரு சிறந்த வழிகாட்டும் பண்ணையாகத் திகழ்ந்து வருகிறது. உணவுப் பயிரான நெல்லோடு முக்கனிகள், காய்கறிகள், தென்னை போன்றவையும் சாகுபடியில் உள்ளன. இங்கு வரும் விவசாயிகள் திறனுள்ள பொறுக்கு வித்துகளைப் பெற்றுக் கொள்வதோடு சாகுபடி நுட்பங்கள் கொண்ட அச்சிடப்பட்ட தாள்களையும் பெறு கின்றனர். விவசாய இலாக்கா விவசாயி களது நலனுக்காகச் செய்து வரும் விஸ்தரிப்புப்பணி போல், தொண்டு மனப்பான்மையோடு சித்தி வினாயகர் பண்ணை, விவசாய விஸ்தரிப்புப் பணியைச் செய்து வருகிறது. இப் பண்ணையில் உற்பத்தி செய்யப்படும் நெல் விதைகள் விவசாயிகள் மத்தியில் பிரபலமாக இருந்து வருகின்றன.

பசுந்தழைகளை சேற்றில் உழும் பண்ணை டிராக்டர்




### சரித்திரம்:

தற்போது மக்கள் மத்தியில் நல்ல பெயரோடு இருந்து வரும் இப் பண்ணையின் சரித்திரம் விவசாயி களுக்கு ஒரு வழிகாட்டியாக இருக்கும் என்று நம்பப்படுகிறது. இப்பண்ணையை இந்த நிலைக்குக் கொண்டு வந்தவர் இதன் நிர்வாகஸ்தர் திரு ஆர் ஆனந்த கிருஷ்ணன் செட்டியார் ஆவார். சுமார் 30 ஆண்டுகாலம் கடுமையாக உழைத்து பண்ணையை ஒரு சிறந்த நிலைக்குக் கொண்டுவந்துள்ளார். இப்பண்ணையை வாங்கும் போது பண்ணையின் மண்வளம் மிகவும் மோசமான நிலையில் இருந்தது. சிலர் செட்டியார் ஏமாந்து வளமில்லாத மண்ணைக் கொண்ட பண்ணையை வாங்கி விட்டார் என்று விமர்சித்தனர். மன உறுதி கொண்ட செட்டியார் பண்ணையை வாங்கிய பின், முதலில் மண்வளத்தை அதிகமாக்கத் தக்க வழிமுறைகளைக் கையாண்டார்.



சான்றிதழ் பெற்ற விதைகள்



கத்திகரிப்புச் செய்த தரமான விதைகள்

## மண்வள மேம்பாடு:

பண்ணையில் நிலங்களுக்கு வருடா வருடம் தவறாமல் ஆட்டுச்சாணம் இட வழிவகை செய்தார். இதற்கு இப்பகுதியில் கிடைக்கும் ஆடுகளை வைத்துக் கொண்டு பட்டி அடைத்து வரும் பணியை ஒரு நம்பிக்கையோடு செய்து வந்தார். இதோடு கரும்பாலைகளுக்குச் சென்று அங்கு கிடைக்கும் பிரஸ்மட் எனும் உரத்தை 'லாரி லோடு' என்ற அளவில் வாங்கி வந்து நிலத்தில் இட்டார். பண்ணையில் கறவை மாடுகள் உள்ளன. இதன் மூலம் கிடைத்த மக்கிய தொழு உரமும் வஞ்சனையின்றி நிலத்திற்கு வாரி வழங்கப்பட்டது. பண்ணைக்கு அருகில் கோழிப் பண்ணைகள் பல உள்ளன. அங்கு கிடைக்கும் கோழி உரங்களை வாங்கி வந்து நிலத்திற்கு இடப்பட்டது. மிக அதிக அளவில் இயற்கை உரங்களை குறைந்த செலவில் இடவும் செட்டியார் திட்டமிட்டார். இதற்கு, தான் உற்பத்தி செய்த வைக்கோலை விவசாயிகளுக்குக் கொடுத்து அதற்கு பதிலாக தொழுவுரம் பெற்று நிலத்திற்கு இட்டார். தன்னிடம் இருந்த நெல் உமியைக் கோழிப் பண்ணைகளுக்குத் தேவையான அளவு கொடுத்து, அங்கிருந்து அதிக அளவு கோழி உரத்தைக் கொணர்ந்து நிலத்திற்கு இட்டார்.

அடுத்து சாகுபடி நிலங்களில் டெய்ன்ச்சா எனும் தக்கைப்பூண்டு பயிரினை விதைத்து அவை செழிப்பாக வளர்ந்து வந்த போது பூமியில் அப்படியே மடக்கி உழுதார். பண்ணையில் சிறிய கேண்டீன் உள்ளது. இங்கு சமைப்பதற்கு கோபர் காஸ் (சாண எரிவாயு) பயன்படுத்தப்படுகின்றது. இதில் கிடைக்கும் கழிவாகிய ஸ்லர்ரி என்று சொல்லப்படும் சிறந்த இயற்கை உரத்தை நிலத்திற்கு இட்டார். இம்மாதிரியான தீவிர முயற்சிகள் பண்ணையிலுள்ள மண்வளத்தைப் படிப்படியாக மேம்பாடு

முக்கனிகள்



அடையச் செய்தது. இயற்கை உரங்களோடு சாகுபடிக்கு உயிர் உரங்களாகிய அசோஸ்பைரில்லம், பாஸ்போ பேக்டீரியா போன்றவையும் உபயோகப்படுத்தப் பட்டன. இயற்கை உரங்களை வஞ்சனையின்றி வாரி வழங்கி மண்ணைப் பொன்விளையும் பூமியாக மாற்றிய செட்டியாரது திறமையை, சோழவரம் பகுதியில் போற்றாத விவசாயிகளே இல்லை.

### பாசன நீருக்குப் பகீரதப் பிரயத்தனம்:

இப்பண்ணையை வாங்கிய சமயத்தில் பயிர் சாகுபடிக்கு பாசனத்தட்டுப்பாடு கடுமையாக இருந்தது. ஆரம்பத்தில் 5 ஏக்கர்களுக்கு மட்டுமே பாசன நீர் வந்தது. பண்ணையில் தெற்குப் பகுதியில் மட்டும் நிலத்தடி நீர் வசதி இருந்தது. இந்த நீரை நீண்ட தூரம் கொண்டு சென்று பாசனம் செய்ய வேண்டியிருந்தது. அதாவது தரை மட்டக் கால்வாய் மூலம் சுமார் 2 கிலோ மீட்டர் தூரத்திற்கு தண்ணீர் கொண்டு செல்லப்பட வேண்டியிருந்தது. இதனால் சுமார் 5 ஏக்கர் பரப்பிற்குத்தான் பாசனம் செய்ய முடிந்தது. மேல்மட்டக் கால்வாய் மூலம் நீண்ட தூரத்திற்கு நீர் கொண்டு செல்லும் போது ஆவியாதல், கசிவு அடைதல் போன்ற காரணங்களினால் நீர் அதிக அளவில் விரயம் ஆனது. பண்ணை வளத்திற்கு முக்கியமாகத் தேவைப்படும் பாசன வசதியை அதிகமாக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

முதலில் 20 குதிரைச் சக்தி கொண்ட சென்ட்ரிபியூகல் பம்ப் அமைத்து நீர் இறைக்கப்பட்டது. அடுத்து சுமார் 70 முதல் 100 அடி ஆழமுள்ள ஆழ்துளைக் குழாய்க் கிணறுகளை அமைத்து அதில் 10–15 குதிரைச்சக்தி கொண்ட 'சம்மர்சிபிள் பம்புகள்' அமைத்துநீர் இறைக்கப்பட்டது. அடுத்து தரைக்குக் கீழ் சுமார் 4–6 அடி ஆழத்தில் 18 அங்குல விட்டமுள்ள ஆர்.சி.சி பைப்களை இணைத்து அமைத்து 2 கிலோ மீட்டர் தொலைவு வரை தண்ணீரை எந்தவிதச் சேதாரமும் இல்லாமல் கொண்டு சென்று 5 ஏக்கர் பாசனம் செய்த இடத்தில் 50 ஏக்கர்களுக்கும் அதிகமான பரப்பில் பாசனம் செய்ய வசதி செய்து கொள்ளப்பட்டது.

இக்கடினமான பணியை அதிக மூலதனம் இட்டு துணிச்சலாகச் செய்த செட்டியாரைப் பார்த்து விவசாயிகள் வழக்கம் போல் ' செட்டியார் விவசாயத் தில் ஆழம் தெரியாமல் காலை விட்ட


வீரியத் தென்னங்கன்று

மொந்தன் வாழை




பந்தலில் குட்டைப் புடலை

தோடல்லாமல் பணத்தை வாரி இறைக்கிறார்' என்று விமர்சனம் செய்தனர். பணி முடிந்து பண்ணை முழுவதும் பசுமையான பயிர் தலை காட்டியவுடன் விவசாயிகள் தாமாகவே வாயை மூடிக்கொண்டு விட்டனர்.

பண்ணையில் பாசன நீர் ஒரு சொட்டுகூட வீணாகாமல் பயன்படுத்தப் படுகின்றது. பாசனக்குழாயில் 5-6 ஏக்கருக்கு ஓர் இடத்தில் அவுட்லெட் வைத்து பாசனம் நிர்வகிக்கப் படுகின்றது. தோட்டக்கால் பயிராகிய குட மிளகாய் போன்றவற்றுக்குத் தெளிப்பு முறை பாசனம் கொடுத்து நீர் சிக்கனமாகப் பயன்படுத்தப் படுகின்றது. ஸ்ரீ சித்தி விநாயகர் பண்ணை தற்போது பசுஞ்சோலையாகக் காட்சியளிப்பதற்கு பாசன வசதியை அதிகமாக்கி அதைச் சீராக்கியதே முக்கிய காரணமாகும். 5 ஏக்கரிலிருந்து 50 ஏக்கர் வரை பாசனவசதியை அதிகமாக்க எடுத்துக் கொண்ட முயற்சியை பகீரதப்பிரயத்தனம் என்றால் அது மிகையாகாது. பாசனவசதி தாராளமாக உள்ள நிலையில் தற்போது பண்ணையில் பல பயிர் சாகுபடி செய்வது சாத்தியமானது.

**பலபயிர் சாகுபடி:**

*நெல்:*

சித்தி விநாயகர் பண்ணையில் அதிகப் பரப்பளவில் சாகுபடி செய்யப் படுவது நெற் பயிராகும். பண்ணையை வாங்கிய சமயம் ஏக்கர் மகசூல் மிகவும் குறைந்ததாக இருந்தது. நிலத்தின் வளத்தை நிர்வாகி தனது திறமையால் படிப்படியாக அதிகமாக்கினார். இதற்கு அவர் இயற்கை உரங்களைத் தொடர்ந்து இட்டு வந்தார். மண் திருந்த கரும்பு சாகுபடி என்பார்கள். நெல்லைப் பயிர் செய்த இடத்தில் கரும்புப் பயிரினை பயிர்சுழற்சி முறையில் சாகுபடி செய்தார். இதோடு டெய்ன்சா, வேப்பம் இலை ஆகியவற்றை நஞ்சை நிலத்தில் இட்டு அவற்றை டிராக்டர் கொண்டு சேற்றில் மடக்கி உழுதார். இப்பணிகள் நெல் மகசூலினை சராசரி அளவிற்கும் பெருமளவு அதிகமாயிற்று.

காய்களை மரம்
தாங்குகின்றதா அல்லது
சிறு குழந்தை
தன் தலையில் தாங்குகின்றதா?



ஒரு வருடத்தில் 60 – 100 ஏக்கர் அளவு நெல் சாகுபடி செய்யப்படுகின்றது. சாகுபடி செய்த நெல் முதலில் அப்படியே அரிசி ஆலை வைத்துள்ள வியாபாரிகளுக்கு விற்பனை செய்யப் பட்டது. இதில் கிடைத்த ஆதாயம் நிர்வாகிக்கு திருப்தி அளிக்கவில்லை. பிறகு வியாபாரிகள் செய்யும் பணியைத் தாம் ஏன் செய்யக்கூடாது என்று நினைத்து பண்ணையிலேயே நெல் அரவை மிஷின் வைத்து நெல்லை அரிசியாக்கி அரிசி வியாபாரம் செய்தார். இதில் லாபம் சற்று கூடுதலாகக் கிடைத்தது. இருப்பினும் இதில் கிடைத்த லாபத்திலும் நிர்வாகிக்கு மனநிறைவு ஏற்படவில்லை. இதற்கிடையில் சித்தி விநாயகர் பண்ணைக்கு வருகை தந்த பல விவசாயிகள் செழிப்பான நெற் பயிரைப் பார்த்து 'எங்களுக்கு இந்தப் பயிரிலிருந்து விதை எடுத்துக் கொடுத்து உதவுங்களேன்' என்று நிர்வாகியைக் கேட்கத் தொடங்கினர்.

நெல் சாகுபடியில் லாபத்தைப் பெருக்குவதுபற்றி இரவு, பகல் விடாமல் சிந்தித்துக் கொண்டிருந்த செட்டி யாருக்கு விவசாயிகளின் வேண்டு கோள், நெல் விவசாயத்தில் புதியதொரு பணியைச் செய்யத் தூண்டுகோலாக அமைந்தது. நெல்லினை அரிசியாக்கி விற்காமல் நல்ல தரமான விதையாக்கி விற்கலாம் என்ற திட்டத்தை செட்டியார் தீட்டினார். இப்பணியில் கணிசமான அளவு லாபம் எடுக்க முடியும் என்பது தெளிவு. நெல் விதை உற்பத்தியில் மூன்று கட்டங்கள் உள்ளன. ஒன்று பயிர் நிபுணர் விதை உற்பத்தி – இரண்டு ஆதார விதை உற்பத்தி

– மூன்று சான்றிதழ் பெற்ற விதை உற்பத்தி. சான்றிதழ் பெற்ற விதையே விவசாயிகளுக்கு விநியோகிக்கப் படுகின்றது. திரு. செட்டியார் அவர்கள் விவசாய இலாகா, வேளாண்மைப் பல்கலைக் கழகம் ஆகியோரை அணுகி பயிர் நிபுணர் விதை மற்றும் ஆதார விதை ஆகியவற்றைப் பெற்று சான்றிதழ் விதையை உற்பத்தி செய்யத் தொடங்கினார். இப்பணியில் இரண்டு முக்கிய கவனிப்புகள் உள்ளன.

ஒன்று: உற்பத்தி செய்த விதை நல்ல கனமானதாகவும்,பதர் கருக்காய் இல்லாமலும், புல் பூண்டுகளின் விதைகள் இல்லாமலும், கல் மண் தூசி ஆகியன இல்லாமலும் இருக்க வேண்டும்.

இரண்டு: சுத்தம் செய்யப்பட்ட விதையின் ஈரப் பதம் 12 சதவிகிதமாக இருக்க வேண்டும். இக்குறிக்கோள் களை அடைய நிர்வாகி தைரியமாக மூலதனமிட்டு, பண்ணையில் விதை சுத்திகரிப்பு ஆலையை அமைத்தார். இந்த அமைப்பில் கிடைக்கும் விதை மிகச் சுத்தமாக உள்ளதை நாம் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். சேமிக்கும் போது இந்த விதை பழுதடைந்து விடாமல் இருக்க விதை வெயிலில் காய வைக்கப்படுகிறது. விதையின் ஈரத்தன்மை 12 சதவிகிதம் வரும்



பசுவுடன் தம்பதி



குழி போடும் கருவி





நந்தவனத்தில் தம்பதியர்



கூடை கூடையாகக் காய்க்கும் குட மிளகாய்

வரை காய வைக்கப்படுகிறது. பின்பு விதை சேமித்து வைக்கப்படுகின்றது. விதை உற்பத்தியில் விதையின் ஈரத் தன்மையைக் கண்காணித்து வருவது மிகவும் முக்கியமானது. விதையின் ஈரத்தன்மையை அவ்வப்போது பரிசோதிக்க அதிநவீனக் கருவியாகிய டிஜிட்டல் மாய்ச்சர் மீட்டரை செட்டியார் உபயோகிக்கின்றார். நல்ல கண் காணிப்பில் தயாரிக்கப்பட்ட விதைகள் முளைப்பு சதவிகிதம் 90 வரை உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. இந்த விதையை விவசாயிகள் விரும்பி வாங்கிச் சென்று பயன் அடைகின்றனர். தற்போது பண்ணையில் வெள்ளைப் பொன்னி, பொன்மணி, ஆடுதுறை 38, ஆடுதுறை 39, கோ 43, ஐ.ஆர்.50, எடிடி 36 போன்ற ரகங்களின் சான்றிதழ் பெற்ற விதைகள் விற்பனைக்கு வைக்கப் பட்டுள்ளன. விதை உற்பத்தி செய்த பின் அவற்றைச் சேமிக்க பண்ணையில் மிகப் பெரிய கிட்டங்கிகள் (Godowns) கட்டப்பட்டுள்ளன. சித்தி விநாயகர் பண்ணையின் முயற்சியால் விவசாயி களது நிலங்களில் உயர்விளைச்சல் ரகங்களின் சாகுபடி பரப்பு அதிகமாகி வருகின்றது. இதனால் விவசாயிகள் பயனடைந்து வருவதோடு நெல் உற்பத்தியும் அதிகமாகி வருகின்றது.

*தென்னை சாகுபடி:*

பண்ணையில் தீவிர தென்னை சாகுபடியும் உள்ளது. பண்ணையிலுள்ள மரங்களுக்கு எண்கள் கொடுக்கப்பட்டு வருடா வருடம் மரங்கள் கொடுக்கும் மகசூல் கண்காணிக்கப்படுகின்றது. அது சமயம் மரங்களில் மகசூல் குறைவு தென்பட்டால் அதற்கான காரணம் என்னவென்று தெரிந்து கொண்டு ஏற்ற பரிகாரங்கள் செய்யப்படுகின்றன. செட்டியார், தாம் தென்னை சாகுபடியைத் தொடங்கிய போது நடுவதற்குத் தரமான கன்றுகள் கிடைக்காமல் அவதிப்பட்டாராம். இந்தக் குறை தென்னை சாகுபடி செய்ய இருக்கும் விவசாயிகளுக்கு வரக்கூடாது என்பதற் காக சித்தி விநாயகர் பண்ணையில் விஞ்ஞான ரீதியில் தென்னை

நெல் நாற்று நடும் கருவி



நாற்றங்காலை அமைத்துள்ளார். இதில் நெட்டை, குட்டை மற்றும் குட்டை, நெட்டை ரகங்களின் தரமான கன்றுகளை உற்பத்தி செய்து விவசாயி களுக்கு விநியோகித்து வருகிறார். தரமான கன்று பார்ப்பதற்கு எப்படி இருக்கும் என்பதை நர்சரியிலிருந்து ஒரு கன்றினை எடுத்து நமக்குக் காட்டுகிறார்.

*முக்கனிகள்:*

சித்தி விநாயகர் பண்ணையில் மா, பலா, வாழை ஆகிய முக்கனிகளும் சாகுபடியில் உள்ளன. தற்போது மா சாகுபடியில் புதிதாக ஆல்பான்சோ கன்றுகளை அதிக அளவு நட முயற்சி எடுத்து தரமான கன்றுகளை கிருஷ்ணகிரி பகுதியிலிருந்து தருவித்து வைத்துள்ளார். பண்ணையில் பலா மரத்தில் காய்கள் காய்த்துத் தொங்கிக் கொண்டு இருக்கின்றன. பண்ணையில் வாழை சாகுபடியும் வியாபார ரீதியில் செய்யப்படுகின்றது.

வாழை, பழங்களுக்காகவும், காய் களுக்காகவும், இலைகளுக்காகவும் சாகுபடி செய்யப்படுகின்றது. கற்பூர வல்லி வாழை, ஈரோடு மொந்தன் சாகுபடியில் உள்ளன. ஈரோடு மொந்தன் ரகம் காய்க்காகவும், இலைக்காகவும் சாகுபடி செய்யப்பட்டுள்ளது. ஏக்கரில் 850 கன்றுகள் நடப்படுகின்றன. நட்டு 18 மாதங்கள் வரை சாகுபடி தொடருகின்றது. கன்று நட்ட 8ஆம் மாதம் குலை வெளிவரும். தாய்மரம் குலை தள்ளும் வரை அடிக்கன்றுகள் வெட்டப்பட்டு வருகின்றன. தாய் மரம் குலை தள்ளிய பின் அடிக்கன்றுகள் வளர விடப்படுகின்றன. நட்ட 10ஆம் மாதம் தாய்மரம் வெட்டப்படுகின்றது. நிலத்தில் மீதமுள்ள அடிக் கன்றுகள் 8 மாதங்களில் இலைகள் தருகின்றன. இலைகள் வெட்டி விற்பனை செய்யப்படுகின்றன. ஏக்கரில் காய்கள் விற்பனையில் வருமானம் ரூ.15,000, இலைகள் விற்பனையில் ரூ.15,000, ஆக மொத்த வருமானம் ரூ.30,000 கிடைக்கும். சாகுபடி செலவு ரூ.15,000 போக ஏக்கரில் வாழை சாகுபடியில் ரூ.15,000 நிகர லாபம் எடுக்க

முடியுமென்பதை பண்ணை தெளிவு படுத்துகின்றது.

*கொய்யா:*

பண்ணையில் 5 ஏக்கர்களில் கொய்யா சாகுபடியும் செய்யப் பட்டுள்ளது. லக்னோ–49 என்ற ரகம் சாகுபடிக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளது. வருடத்தில் மூன்று பழ அறுவடை அதாவது ஆனி – ஆடி, புரட்டாசி – ஐப்பசி மற்றும் தைப் பட்டங்களில் கிடைக்கின்றது. சித்தி வினாயகர் பண்ணையில் கொய்யா மரங்கள் 15 அடிக்கு 15 அடி என்ற இடைவெளியில் நடப்பட்டுள்ளன. ஏக்கரில் 120 மரங்கள் உள்ளன. வருடத்தில் ஏக்கரில் செலவு போக ரூ.10,000 – வரை லாபம் எடுக்க இயலும் என்பதை பண்ணையின் அனுபவம் நமக்குக் காட்டுகின்றது.

### *பார்க்குமிடமெல்லாம் பப்பாளி:*

சித்தி வினாயகர் பண்ணையில் அலங்கார மரங்கள் போல் ரோடு ஓரங்களிலும், கால்வாய் ஓரங்களிலும் மேலும் பார்க்கும் இடங்களிலெல்லாம் பப்பாளி மரங்கள் தாங்க முடியாத அளவிற்கு காய்களைத் தாங்கிக் கொண்டு நிற்கும் காட்சி நம் கவனத்தைக் கவருகிறது. பப்பாளிப் பழங்களை நன்கு பேக் செய்து ஐந்து நட்சத்திர ஹோட்டல்களுக்கு அனுப்பினால் கிலோவிற்கு விலை ரூ.5 வரை கிடைக்குமென்கிறார் நிர்வாகி. பண்ணையைப் பார்க்க வருபவர்கள் பழங்களை விரும்பி விலை கொடுத்து வாங்கிச் செல்கின்றனர். பப்பாளி மரம் காற்றில் ஒடிந்து விழுந்து விடுமே என்றதற்கு செட்டியார் 'இந்தக் காரணத்தினால் தான் பப்பாளியை ஏக்கர் கணக்கில் நடவில்லை. ஆனால் ரோடு ஓரங்களில் நடலாம். காற்றில் விழுந்தால் கூட உடனே அந்த இடத்தில் இளங்கன்றினை நட்டு விடலாம்' என்றார்.

### *காய்கறி சாகுபடி:*

சித்தி வினாயகர் பண்ணையில் வருடம் முழுவதும் காய்கறி சாகுபடி செய்யப்படுகின்றது. சாம்பல் பூசணி, சுரைக்காய், கீரை வகைகள், மிளகாய், வெண்டைக்காய், கத்தரி போன்றவை தொடர்ந்து சாகுபடியில் உள்ளன. இதோடு பந்தலில் பாகல் மற்றும் புடல் சாகுபடியும் உள்ளது. பாகல் 3 ஏக்கர்களிலும், புடல் 3 ஏக்கர்களிலும் சாகுபடியில் உள்ளன. பாகல் சாகுபடியில் ஏக்கரில் 6 டன் மகசூல் கிட்டுகின்றது. டன் ரூ.5,000 விற்கப்படுகின்றது. புடலை ஏக்கரில் 10 டன் மகசூல் தருகின்றது. டன்னுக்கு விலை ரூ.3,000 முதல் ரூ.5,000 வரை கிடைப்பதுண்டு. சித்தி வினாயகர் பண்ணையில் நீட்டுப் புடலை சாகுபடி செய்யப்படுவதில்லை. தற்போது சாகுபடியில் உள்ளது குட்டைப் புடலைதான். நீட்டுப் புடலை ரகத்தில் நீளமான காய்களைப் பேக்கிங் செய்வதிலும், மார்க்கெட்டிற்கு நெடுந்தூரம் எடுத்துச் செல்வதிலும் பிரச்னைகள் உள்ளன. குட்டைப் புடலை சாகுபடி சுலபமாக இருப்பதோடு பேக்கிங் செய்வது, எடுத்துச் செல்வது போன்ற பணிகள் சுலபமாக உள்ளன. குட்டைப்புடலையில் மகசூலும் கணிசமாக உள்ளது. மேலும் பூச்சி, வியாதித் தொல்லையும் குறைவு.

அடுத்து, பண்ணையில் மிளகாய் வகை சாகுபடியிலும் நல்ல லாபம் கிடைத்து வருகின்றது. ஒட்டு வீரிய மிளகாய் சாகுபடியில் ஏக்கரில் ஒன்றரை டன் வற்றல் மகசூலாகக் கிட்டுகின்றது. பஜ்ஜி மிளகாய் சாகுபடியில் நல்ல லாபம் எடுப்பதுடன் குடமிளகாய் சாகுபடியில் மிக அதிகமான மகசூலையும், லாபத்தினையும் எடுப்பது தெரிய வருகின்றது. குடமிளகாய் சாகுபடியில் ஏக்கரில் 12 டன் மகசூல் கிட்டுகிறது. இதன் மதிப்பு ரூ.60,000. சாகுபடி செலவு ரூ.25,000போக ஏக்கரில் ரூ.35,000 லாபம் கிட்ட வாய்ப்பு உள்ளது.

சித்தி விநாயகர் சந்நிதியில் செட்டியார் தம்பதி




சித்தி வினாயகர் பண்ணையில் வெள்ளரி சாகுபடியும் உள்ளது. இதன் மொத்த வயது 60–65 நாள்களே. ஏக்கரில் 75 கிலோ கொண்ட மூட்டை 100 முதல் 200 வரை மகசூலாக எடுக்கப்படுகின்றது. வெள்ளரி சாகுபடியில் ஏக்கரில் ரூ.18,000 வரை லாபம் கிடைப்பதாகச் சொல்லப் படுகின்றது. பண்ணையில் ஜனவரி மாதம் முதல் டிசம்பர் மாதம் வரை காய்கறி உற்பத்தி செய்யப்பட்டு வருகிறது. நேரிடையாகவே காய்கறி வாங்க நுகர்வோர் பண்ணைக்கு வந்து விடுகின்றனர். சித்தி வினாயகர் பண்ணையில் காய்கறி சாகுபடிக்குத் தேவையான தரமான விதைகளும் கிடைக்கின்றன.

## இயந்திர சாகுபடி:

பண்ணை நிர்வாகியாகிய செட்டியாரிடம், "தற்போது விவசாயப் பணிகளுக்கு வேலையாட்கள் கிடைக்காதது பிரச்னையாக இல்லையா?" என்று கேட்டதற்கு "வாழ்க்கையே பிரச்னை மிகுந்ததுதான். வாழ்க்கைப் பாதையில் ஒரு கதவு மூடப்பட்டு விட்டால் இறைவன் இன்னொரு கதவைத் திறந்து விடுகிறான். அதுபோல் தற்போது ஆட்கள் கிடைக்காத பிரச்னையை இயந்திர சாகுபடி தீர்த்து வைக்கிறது" என்கிறார். தனது பண்ணையில் நெல் நாற்றினை, குறித்த நேரத்தில் நடுவதற்கு ஆட்கள் கிடைக்காத பிரச்னையை நாற்று நடும் கருவி உபயோகித்து தீர்த்துக் கொண்டுள்ளதாகச் சொல்லி, கருவி மூலம் நடப்பட்டுள்ள 2 ஏக்கர் செழிப்பான பயிரை நமக்குக் காட்டுகிறார். மேலும் தற்போது டிராக்டர், பவர் டில்லர் ஆகியவை இல்லாமல் சாகுபடி செய்ய இயலாது என்பதைச் சூசகமாகத் தெரிவிக்கிறார். பண்ணையில் நூற்றுக் கணக்கில் மரங்கள் நடுவதற்கு உபயோகிக்கும் குழி போடும் கருவியைக் காட்டி,

*அருவினை என்ப உளவோ கருவியான்*

*கால மறிந்து செயின்*

என்ற குறளை மேற்கோளாகக் காட்டிக் கூறுகிறார்.

## உழைப்பின் உயர்வு:

இன்று நாட்டில் விஞ்ஞானம், விஞ்ஞானத் தொழில் நுட்பம் துரிதமாக வளர்ச்சி அடைந்து வருகின்றன. இந்த வளர்ச்சியோடு இணைந்து செயல்பட்டால்தான் பண்ணைத் தொழிலில் வெற்றி காண முடியும். எக்ஸ்பிரஸ் வண்டியைப் பிடித்துச் செல்பவன் துரிதமாக செயலைச் செய்து முடிக்கும் வாய்ப்பினைப் பெறுகின்றான். இதைத் தவற விட்டவன் தேங்கிய நிலையில் இருந்த இடத்திலேயே இருக்க வேண்டியுள்ளது. திரு செட்டியார் பண்ணைத் தொழில் வளர்ச்சிக்குத் தேவைப்படும் நவீன தொழில் நுட்பங்கள் அனைத்தையும் துரிதமாகக் கை யாண்டதோடு, தொழிலைச் சீரிய முறையில் நிர்வாகம் செய்து கடும் உழைப்பால் பண்ணைத் தொழிலில் பலன் பல அடைந்து வருகிறார். செட்டியார் பண்ணைக்கு வருகை தந்தவர்களில் ஒருவர் இப்பண்ணையில் வைக்கப்பட்டுள்ள 'பார்வையாளர்கள் புத்தகத்தில் கீழ்க்காணும் வரிகளை எழுதியுள்ளார்.

*வியர்வையின் வெற்றியை நேர்மையே*

*கோர்வையாகச் சொன்னது – இனிக்கும்*

*கனிகள் இதைச் சொன்னது.*

*எங்கள் இதயத்தில் உழைப்பு, அயராத உழைப்பு.*

*அதன் வெளிப்பாடு கண்டோம்*

*வாழ்க. வளர்க!*

இந்த வரிகள் நம்மை மெய்சிலிர்க்க வைக்கின்றன. செய்யும் தொழில் எதுவாயினும் அதில் கடும் உழைப்புதான் வெற்றிக்கு அடித்தளம் என்பது உண்மை. ஸ்ரீ செட்டியார் அவர்களது 30 வருட கடின உழைப்பில் உருவாக்கப் பட்டுள்ள ஸ்ரீ சித்தி விநாயகர் பண்ணை விவசாயிகளுக்கு ஒரு 'மெக்கா'வாக அமைந்து விட்டது.

பண்ணைக்கு வருபவர்களில் செட்டியாரது துணைவியார் திருமதி பத்மாவதி அம்மையார் அவர்களும் அடங்குவார்.

ஒவ்வொரு சாதனையாளர் பின்னாலும் ஒரு பெண்மணி இருப்பார் என்பார்கள். அதற்கொப்ப செட்டியாரது வெற்றிக்கு அவரது துணைவியார் திருமதி பத்மாவதி அம்மாளும் காரணம் எனில் அது மிகையாகாது. அம்மையார் அடிக்கடி செட்டியாரது உழைப்பைப் பற்றி நம்மிடம் எடுத்துக் கூறி, அவரது உடல் நலனைப் பேணிக் காப்பது தனது கடமையென்று பாச உணர்வோடு கூறுகிறார். ஆழ்ந்த தெய்வ பக்தி கொண்ட அம்மையார் பண்ணையில் விநாயகர் கோயில் கட்டுவதற்கு முக்கிய காரணமாக இருந்திருக்கிறார். இவரது முயற்சியில் கோயிலில் ஸ்ரீ ராமர் சந்நிதி, சிங்கார வேலன் சந்நிதி, ஸ்ரீ கன்னிகா பரமேஸ்வரி சந்நிதி, ஸ்ரீ ராமபக்த ஹனுமார் சந்நிதி, நவக்கிரஹ சந்நிதி போன்றவையும் அமைக்கப்பட்டுள்ளன. பசுக்களைத் தெய்வமாக மதிக்கும் பத்மாவதி அம்மையார், வெள்ளிக்கிழமை தோறும் கோ பூஜை செய்கிறார். கோயிலில் நித்ய பூஜைக்குத் தேவைப்படும் மலர்ச் செடிகளை, கோயில் நந்தவனத்தில் அம்மையார் வளர்த்து வருகின்றார். அம்மையாரிடம் "பண்ணையின் வளர்ச்சிக்கு நீங்களும் காரணம்" என்று சொன்னபோது அவர் அதை ஏற்க மறுத்து, "பண்ணை வளர்ச்சிக்கு இறைவன்தான் காரணம்" என்கிறார்.

"விவசாயத்தில் மண், எரு, விதை, பாசனம் ஆகியன அனைத்தும் இருந்து விட்டால் மட்டும் போதா. இயற்கைச் சீற்றங்களாகிய கடும் மழை, புயல், வெள்ளம், வறட்சி ஆகியவை இல்லாமல் இருக்க வேண்டும். இதற்கு இறைவன் கிருபை இல்லாவிடில் ஒன்றும் செய்ய இயலாது. ஆதலின் விவசாயம் செய்பவர்கள் ஆழ்ந்த தெய்வபக்தியும் கொண்டிருக்க வேண்டும். எனது கணவரது வெற்றிக்குக் காரணம் இறைவனிடம் அவர் கொண்டுள்ள ஆழ்ந்த பக்தியேயாகும். மேலும் செய்யும் தொழிலைத் தெய்வமாகக் கருதும் கர்மவீரரும் ஆவார்" என்று ஒரு சிறு பிரசங்கமே செய்து விடுகிறார்.

விஞ்ஞானத் தொழில் நுட்பம், சீரிய நிர்வாகம், கடும் உழைப்பு, ஆழ்ந்த தெய்வபக்தி ஆகியவற்றைத் தன்னகத்தே கொண்ட திரு. செட்டியார் அவர்களின் பராமரிப்பில், ஸ்ரீ சித்தி விநாயகர் பண்ணை இன்று விவசாயிகளுக்கு ஒரு கலங்கரை விளக்கமாகத் திகழ்ந்து வருகின்றது.

★★



## டாக்டர் கி. வேங்கடசுப்பிரமணியன்

பல வளரும் (வளரா) நாடுகளிலெல்லாம் இன்று பள்ளிகள், கல்லூரிகளில் இரும்புப் பூக்கள்தான் உருவாக்கப்படுகின்றன. மனமற்ற மரமனிதர்களை அரசுக் கல்வி உருவாக்குகிறது. பாடத்திட்டம் வகுப்பது, அரசு தேர்வு நடத்துவது, அரசு தேர்வு முடிவுகள் கூறுவது, அரசு புத்தகங்களை அச்சிடுவது, அரசு நம் கல்வி முறையின் மேல் (Made by the Government) என்ற அக்மார்க் குத்தப்படுகிறது, ஆவின் நெய் பாட்டிலில் உள்ளது போல.

கம்யூனிஸ்ட் தத்துவங்களின்படி நாடே முதலில்:– 'தனிமனிதன்' என்ற ஒருவன் எங்குமே இல்லை என்ற தத்துவத்தின் படி பல நாடுகளை உருவாக்கினர். எந்த நாளும் கூட தனிமனிதன் அவனுக்கு வேண்டியவற்றைக் கேட்கமுடியாது. தொலைக்காட்சி, வானொலியில் அரசு சொல்வது மட்டுமே வரும். அரசு எதை நினைக்கிறதோ, அதையேதான் தனிமனிதனும் நினைக்கவேண்டும். அரசு எதை இவன் கேட்கவேண்டுமென நினைக்கிறதோ, அதைத்தான் இவன் கேட்கவேண்டும். பல நூறாயிரவர் கொல்லப்படுவார்கள் – நாட்டின் நன்மைக்காக. எவரும் எதுவும் பேசமுடியாது. தனி மனித உரிமை என்று ஒன்றும் கிடையாது. இதுபற்றிப் பேராசிரியர் ஜோட் என்பவர் மிகவும் வேடிக்கையாக ஓர் உவமை சொன்னார். 'மீன்குழம்பு என்பது ஒரு பொதுத் தத்துவம். குழம்பில் உள்ள மீன்கள், செத்து மடிந்து குழம்பாவதே அவர்கள் பிறப்புரிமை. குழம்புதான் முக்கியம். மீன்களன்று.' இதுதான் இன்றைய Supreme State–ன் தத்துவம். புரிகிறதா?



பல கம்யூனிஸ்ட் நாடுகள் இந்தக் கொள்கையின் பாரம் தாங்க முடியாமல் வெளியேறி சுத்தக்காற்றைச் சுவாசிக்கத் தொடங்கியுள்ளன. கல்வி நிலையில் கூடப் பார்த்தால், அரசு எதை மாணவன் கற்கவேண்டுமென விரும்புகிறதோ, அதைத்தான் அவன் கற்கவேண்டும். ஒருசமயம் ஒரு கம்யூனிச நாட்டில் 2 + 2 = 5 என்று தவறாக அச்சிடப்பட்டு விட்டதாம். ஆனால் அரசு சொல்லிவிட்டதால் அது ஐந்துதான் என்று சாதிக்கப்பட்டதாகக் கூறுவர்.

ஆனால் ஆதர்ச நிலை என்ன? நம் நாட்டில் உண்மைக்காக உழைத்த உத்தமர் காந்தியடிகள். 'நயிதலீம்' என்ற புதிய முறைக் கல்வியை அளித்த மகாத்மா சொன்னது, 'கல்வி என்பது உண்மை என்னும் அஸ்திவாரத்தின் பேரில் கட்டப்பட்டிருக்கவேண்டும்' Search for Truth – தான் உண்மைக் கல்வி. இன்று யாராவது இதுபற்றிப் பேசுகிறார்களா பாருங்கள்!

எது எது, எந்த எந்தச் சந்தர்ப்பத்தில் சரி எனத் தோன்றுகிறதோ அதை அதைச் செய்வார்கள்.

எனக்குத் தெரிந்த ஓர் அரசியல்வாதி – பிரமுகர் – பெரிய பதவிகள் வகித்தவர். பேச்சில் இடத்துக்குத் தகுந்த வகையில் ஓர் உத்தியைக்கையாள்வார். உதாரணமாக, கிறிஸ்தவப் பெருமக்கள் நிறைந்த ஒரு கிராமத்தில் இவர் பேசினால் கூறுவார், 'என்னை இந்த நிலைக்கு ஆளாக்கியவர் யார் தெரியுமா? – எனது தொடக்க கால ஆசிரியர் திருவாளர் தேவசகாயம்' என்பார். கிறிஸ்தவ மக்கள் பூரித்துப் போவார்கள். அதேபோல் பிராமணர்கள் நிறைய உள்ள இடத்தில் தேவசகாயத்திற்குப் பதில் இராமசாமி ஐயர் என்ற ஆசிரியர் முளைப்பார். முஸ்லிம் பெருமக்கள் நிறைய உள்ள இடத்தில் தேவசகாயமும், ஐயரும் காணாமல்போய் முகம்மது நூருதீன் தோன்றுவார். ஆங்கிலோ – இந்தியர் பகுதியில் இந்த மும்மூர்த்திகளும் மறைந்து ஆசிரியர் வில்சன் உருவெடுப்பார். இப்படி ஜகஜ்ஜாலப் புரட்டு செய்த இவ்வன்பர் உண்மையிலேயே பள்ளி சென்றாரா என்பது கூடத் தெரியவில்லை. ஆனால் மக்களைக் கவர இப்படி யான கட்டுக்கதைகளை அள்ளி வீசுவார்.

ஆனால் நாடு இவரை மதித்தது. அந்த அந்த இனங்கள் இவரைப் போற்றின. கணிசமாக அவர்கள் வோட்டுகளும் இவருக்குக் கிடைத்தன. எங்குமே இல்லாத இவரது ஆசிரியர்கள் இவருக்கு ஆசிகளை வாரி வழங்கினர். என்ன விந்தை பார்த்தீர்களா? சொல்லும் வகையில் பொய் சொன்னால் பெரும் பொய் சொன்னாலும் மெய் போலுமே, மெய்போலுமே!

# அரசின் பிடியில் கல்வி

இதை எதற்குச் சொல்லுகிறேனென்றால், இம்மாதிரியான புரட்டர்கள் பல இடங்களில் பாடத் திட்டங்களை அமைக்கும் பணியிலும் ஈடுபடுகிறார்கள். தென் அமெரிக்க நாடு ஒன்றில் ஆளும் கட்சிக்குச் சாதகமாக நாட்டு வரலாற்றையே மாற்றிய செய்திகளை நாமறிவோம்.

நாம் நமக்கு எப்படிப்பட்ட கல்விமுறை வேண்டும் எனத் தீர்மானிக்க வேண்டும். முழுதும் அரசால் ஆணையிடப்பட்ட கல்வி முறையா? (Completely State Ordered Education) – இப்படி நாம் ஏற்றுக்கொண்டால் இந்தியாவுக்குச் சுதந்தரம் வாங்கியது மகாத்மா அல்லர்; ஆனால் தற்போது ஆளும் பிரமுகரே என்று கூட அவர்கள் கூறிவிடலாம். கம்யூனிஸ நாடுகள் இம்முறையைக் கையாளுகின்றன. டாக்டர்கள் நோயாளிகட்கு எப்படி மருந்து எழுதிக் கொடுக்கிறார்களோ, அப்படித்தான் இவர்கள் குழந்தைகட்குப் பாடத் திட்டங்களைக் கொடுப்பார்கள். இப்பாடத் திட்டங்கள் முழு அரசியல் கலப்புக் கொண்டதாக இருக்கும். Brain Washing என்று சொல்லப்படும் மூளைச்சலவை வேலை தீவிரமாக நடைபெறும். இன்னொரு கல்விமுறை, அரசின் தலையீடே இல்லாமல் கல்வியாளர்களும், பிரமுகர்களும் இருந்து கல்வியை நிர்ணயிப்பது. இது அமெரிக்க முறை. அரசின் தலையீடே இருக்காது. கல்விக்கு அரசு மானியமும் கிட்டாது.

இவை இரண்டுக்கும் மத்தியில் உள்ள முறை, அரசின் அதிகாரிகள் நடத்தும் கல்விமுறை. இது நம்நாட்டு முறையைப் போன்றது. அதிகாரிகளே எதையும் முடிவு செய்யவேண்டும். ஆசிரியருக்கு எந்தப் பங்குமே இராது. ஒருசிறு மாற்றம் கூடச் செய்ய முடியாது. எதற்கும் அதிகார வர்க்கத்தின் முன் அனுமதி தேவை.

இப்படி மூன்று மார்க்கங்கள் உண்டு. இவற்றிலெல்லாம் சிறந்த மார்க்கம் காந்தியடிகள் கண்ட உண்மைக் கல்வி மார்க்கம்.

இந்தியாவின் அறிவு மேதை, சட்ட வல்லுநர், பாரத ரத்னா டாக்டர் அம்பேத்கர் ஒருமுறை கல்வியின் குறிக்கோள் பற்றிக் கூறினார்: இன்றையக் கல்விமுறை நம்மை அழிவுப் பாதையை நோக்கி இட்டுச் செல்லுகிறது. ஆண்டான், அடிமை என்ற முறையை நீடிக்கச் செய்யும் கல்வி முறையே ஆங்கிலேயர்கள் கண்ட முறை. ஆனால் அதை நாம் விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டிருக்கிறோம். அல்லது அது நம்மை விடாப்பிடியாக பிடித்துக்கொண்டிருக்கிறது. இதை உதறினாலன்றி நாம் முன்னேற மார்க்கமில்லை.

இதை எப்படி உதறுவது? பேய் பிடித்தவரை உலுக்குவதுபோல் நாம் கல்வி முறையை உலுக்கவேண்டும். குலுக்க வேண்டும். ஆசிரியர்கள் மட்டுமே பெற்றோருடன் அமர்ந்து பாடத்திட்டங்களைத் தயாரிக்கவேண்டும்.

இன்று எல்லாவற்றையும் மறந்தமந்த நிலையில் உள்ளவர், ஓய்வு பெற்றவர்தான்.பாடத்திட்டங்கள் தயாரிக்க வழக்கமாக அழைக்கப் படுகிறார்கள். ஏன்! அரசின் சொல்படி இவர் நடனமாடுவார்.

இன்று நம் தஞ்சைத் தரணியை எடுத்துக் கொள்ளுங்கள். எங்கு நோக்கினாலும் வயல்வெளிகள், பச்சைப் பசேலென்று அருமையான தோற்றம். தென்னகத்தின் உயிர்நாடி தஞ்சை. இது ஓர் இன்பக் கருவூலம். ஆனால் நம் பாடத்திட்டத்தில் (தஞ்சையிலுள்ளோர் படிக்கும் புத்தகங்களில் கூட) இந்தத் தஞ்சையைப் பற்றி ஒரு வரி இருக்காது. எஸ்கிமோக்கள் எப்படி 'ஈக்லூவில்' வாழுகிறார்கள் என நாம் படித்தோம். இங்கிலாந்து அரசர் எட்டாம் ஹென்றிக்கு எத்தனை மனைவிமார்கள் என்பது நான் படித்த காலத்தில் ஒரு பிரபலமான கேள்வி. நம் ஊரைப் பற்றியோ, நம்மவரைப் பற்றியோ அன்று பாடம் இருந்ததில்லை.

நம் குடியரசுச் சட்டத்தை ஆக்கிய மாமேதை பாரதரத்னா அம்பேத்கர் அவர்கள் பற்றி எவ்வளவு பேர் அறிவர்? ஜனாதிபதி வேலை முடித்து பாட்னா நகர் திரும்பியபோது, சொந்தக் கார் இல்லாது, வாடகை வண்டியில் சென்ற நம் முதல் ஜனாதிபதி பாபு இராஜேந்திர பிரசாத் பற்றி எவ்வளவு பேர் அறிவார்கள்? சொத்து சுதந்தரம், தானிருந்த வீடு எல்லாவற்றையும் நாட்டுக்குத் தானமாக ஈந்து, பன்னிரண்டு ஆண்டுகள் சிறையில் வாடிய நேரு பெருமான் பற்றி எல்லாரும் முழுமையாய் அறிவோமா? இந்தத் தலைமுறையினருக்கு நாம் செய்த தியாக வேள்வி பற்றி, விடுதலைப் போர் பற்றித் தெரியுமா? தெரிய நாம் வழிவகை செய்திருக்கிறோமா?

ஆங்கில ஆட்டன்பரோ அவர்கள் மகாத்மா காந்தி பற்றி எடுத்த படத்தைப் பார்த்தபின்தான் பல இந்தியர்கள் மகாத்மாவையே அறிந்தனர். இது Re-Discovery of the Mahatma' என்று சொல்லப்படுகிறதே? இதற்கெல்லாம் யார் காரணம்?

அரசுக் கல்வியாளர்கள் தாம்! – சந்தேகமேயில்லை. சரி, இவர்கள் பிடியிலிருந்து கல்வியை எப்படி விடுவிப்பது?

அதுதான் இன்றையப் பிரச்னை.பல கல்விக்குழுக்கள் அமைக்கப்பட்டு, அறிஞர். டாக்டர் இராதாகிருஷ்ணன், டாக்டர் ஏ.எல். முதலியார், பேராசிரியர் கோத்தாரி, தத்துவ மேதை டாக்டர். சட்டோபாத்தியாயா, அரியநாயகம், அழகப்பச் செட்டியார், ஜி. ராமச்சந்திரன் போன்றோர் சொன்ன அறிவுரைகளும், அறவுரைகளும் பின்பற்றப்படவேயில்லை. நான் முன்பே சொல்லியபடி இந்து ஏழுகுழு அறிக்கைகளும் கிடப்பில் போடப்பட்டன.

என்ன காரணம்? டாக்டர் இராதாகிருஷ்ணன் அவர்களே சொன்னார்கள், So long as Education remains a Department of Government, we cannot expect remarkable progress – கல்வி என்பது அரசின் ஒரு துறையாக இருக்கும்வரை நாம் எப்படி சீரிய முன்னேற்றங்களை எதிர்பார்க்கமுடியும்? ஆம், இதற்கு என்ன மாற்று? என்ன மருந்து தேவை? அரசின் பிடி தளர வேண்டும் என





யார் சொன்னால் என்ன? டாக்டர் ராதாகிருஷ்ணனாகவே இருக்கட்டுமே தள்ளுங்கள் என்றனர் அரசியலார்.

வேறுவழி என்ன? ஆம். இனி பெற்றோர்களும், ஆசிரியர்களும் சேர்ந்து கல்வியை உருவாக்கவேண்டும். அரசின் உதவி இதற்கு நிச்சயம் தேவை. ஆனால் 'அரசு பிராண்டு' கல்வி தேவையில்லை எனப் பல மேலைநாட்டார் முடிவெடுத்து மிகப்பல ஆண்டுகள் ஆகிவிட்டன.

'அரசு பிராண்ட்' கல்விக்கு ஓர் உதாரணம்: சிலி என்ற நாட்டில் இருந்த ஒரு கொடுங்கோலன் (Dictator) இந்தச் சிலி நாட்டையே தான்தான் உருவாக்கியதாக ஒரு கற்பனையைப் பாட புத்தகங்களில் ஓர் உண்மை வரலாறாகவே புகுத்தியதாகச் செய்தி. பின்னர் இந்தக் கொடுங்கோலன் மறைந்தபின் வந்த மற்றொரு கொடுங்கோலன் சிலி நாட்டைத் தான்தான் உருவாக்கியதாகப் பாட புத்தகங்களில் பரப்பிய போது, ஆசிரியர்கள் கண்பொத்தி, வாய்ப்பொத்தி மௌனிகளாக இப்பாடத்தையும் நடத்தினராம்.

பாருங்கள், உலகெங்கும் ஆசிரியர்கள் படும் அவலத்தை; அறப்பணி செய்யும் இவர்களை ஆட்டிப்படைக்கும் அரசுகள் எங்குமே இருக்கின்றன.

ஆனால் ஒரு மாணவன் எழுந்திருந்து, 'என்ன ஐயா, முன்பு ஒருவர் சிலி நாட்டை உருவாக்கினார் என்றீர்கள். இப்போது வேறொருவர் என்கிறீர்கள்' என்று கேட்டபோது ஆசிரியர் உடனே கூறினார், 'முன்பு அவர் உருவாக்கினார், பின்பு இவர் உருவாக்கினார்' என்றார். அந்த மாணவன் விடாக்கண்டன். 'சார், நம் நாட்டைக் கடவுள் உருவாக்கினதாக அம்மா சொல்லுகிறாளே' என்று அவன் கேட்டபோது, ஆசிரியர், 'உட்கார், கடவுளையும் இவர்கள் இருவர்தான் உண்டாக்கினார்கள்' எனப் பாடத்தை முடித்தார். நாட்டு வரலாறு படும் பாட்டையும். 'ஆண்டவன்' ஆண்டவர்களின் கையில் படும் அவலத்தையும் நோக்குங்கள்.

இங்கிலாந்தும், அமெரிக்காவும் கல்வி உலகின் முன்னணி நாடுகள். இங்கு அரசின் கவனம் கல்வியின்பால் உண்டு. ஆனால் அரசின் கல்வி இல்லை. அரசுப்பிடி இல்லை. நாம் இம்மாதிரி செய்யமுடியாதா? முடியும்.

இன்று சினிமாவையும், டி.வியையும் மாறிமாறிப் பார்த்துப் புளகாங்கிதமடையும் பெற்றோர்கள் அணிதிரண்டால் முடியும், வறட்டுக் காதல் கதைகளையும், வக்கிரங்களையும் அள்ளித் தெளித்துக் காசு பெருக்கும் பத்திரிகைகள் கடுமையாக இந்நிலையைச் சாடினால் முடியும்.

மால்கம் ஆதிசேஷையா என்ற உலகக் கல்வியாளர் அன்றே கூறினார். ' அரசின் பிடியில் கல்வி இருக்கும்வரை வளர்ச்சி இருக்க முடியாது'. இது எல்லாருக்கும் தெரியும். யாராவது ஏதாவது செய்வார்களா? எனக்கு நம்பிக்கையில்லை.



ஆர்.பி. சாரதி

## ஊடலுக்கு நேரமில்லை!



*ஊடலுக்கு நேரமில்லை,*
*ஓடிவாடி என்னுயிரே!*
*நொடியில் ஓடிவிடும்*
*நூறாண்டு வாழ்க்கையெலாம்;*
*யுக வாழ்வே தந்தாலும்*
*முகம் காணப் போதாதே,*
*'அகம்' காண யார்தருவார்,*
*ஆயிரம் யுக வாழ்வு?*
*காந்தவிழிக் கடலில்*
*காலமெலாங் கிடந்தாலும்*
*கண்ணெழிற் திவலையுமே*
*காணவுமே கூடாதே!*

*அருவியில் நீ ஆடிவர*
*கருமேகக் குழலிழையில்*
*சொரியும் நீர் முத்தம்*
*சேர்த்துவைக்க மாளாதே!*
*காலோடு கால்பின்னி,*
*கை நான்கை இரண்டாக்கி*
*இதழோடு இதழ் சேர்த்து,*
*இதயங்கள் ஒன்றாக்கும்*
*கருப்பஞ் சாற்றினிலே*
*கரிக்கும் உப்பெதற்கு?*
*கூடல் கனியிருக்க*
*ஊடல் காயெதற்கு?*
ஊடலுக்கு நேரமில்லை
ஓடிவாடி என்னுயிரே!

# ஒரு சனிக்கிழமை பிற்பகலில்...

ராஜம் கிருஷ்ணன்

சனிக்கிழமை காலையில் அலுவலகம் செல்வதும், மத்தியானம் அரைநாள் என்று திரும்புவதும் முழுநாள் வேலை செய்து பஸ்ஸில் திரும்புவதை விடச் சோர்வும் அலுப்பும் கூடியதாக இருக்கிறது சசிரேகாவுக்கு. மற்ற நாள்களில் ஏதோ சாவி கொடுக்கப்பட்ட பொம்மை போல் காலை எழுந்ததி லிருந்தே வேகம் கூடி வரும். சனியன்றோ, அரைநாள் தானே என்ற நினைப்பில், ஏதோ சாவி ஓய்ந்து போகும் நிலையில் மந்தமாகவே இருக்கும். காலையில் அரை குறையாக எதையோ சமைத்து, இரண்டு கவளம் போட்டுக் கொண்டு அவள் அலுவலகம் கிளம்புவாள்.

பகல் ஒருமணிக்கு அரைநாள் வேலை முடிந்து, ரயிலைப்பிடித்து ஊமை வெயிலில் வீட்டுக்குத் திரும்பி நடந்து வருகையில் வயிறு கூவிக் கொண்டிருக்கும். அநேகமாக மோகன் நகரின் தெருவில் அந்த நேரத்தில் நடமாட்டமே இருக்காது. இவள் குடியிருப்பது ஆசிரியர் காலனி. கணபதிக்கு, சனி, ஞாயிறு இரண்டு நாள்களிலும் ஓய்வுநாள். அவன் வித்தியாசமானவன். சராசரியான ஆண் மேலாதிக்கப் பண்புகளை அவனிடம் பார்க்க முடியாது. அதனால்தான், சனிக்கிழமையில் அவள் அரைகுறையாக விட்ட சமையலை நன்றாக முடித்து, சாம்பாரோ, கூட்டுக்கறியோ செய்து வைத்து இரண்டு மணிக்கு இவள் வரும்போது தான் காத்திருந்து சாப்பிட உட்காருவான்.

பெரியவள் வினிதா பத்தாம் வகுப்பில் படிக்கிறாள். மாநில செகன்டரிபோர்டு அல்லாத பள்ளி. கணபதியின் பள்ளி. மாநிலம் சார்ந்தது. சனிக்கிழமை பத்துமணிக்குமேல் ட்யூஷன் பிள்ளைகள் மாடியைக் கலகலப்பாக்குவார்கள். ஒரு மணி வரையிலும் வகுப்பு நடக்கும். கணக்கும் அறிவியலும் அவன் பாடங்களாதலால், இந்த வருமானம் கணிசமானது. இப்படிச் சம்பாதிப்பதைக் கணபதி உள்ளூர விரும்பத்தானில்லை. என்றாலும், இரண்டு பெண் குழந்தைகள், அவர்கள் மேற்படிப்பு, திருமணம் என்ற தேவைகள் மேலே மேலே பயங்கரமாக வாயைப் பிளந்து கொண்டிருப்பதான உணர்வில் இவளும் தான் இந்த உதவியாளர் பணியில் ஓடி ஓடிச் சம்பாதிக்க வேண்டியிருக்கிறது.

மூத்தவள் வினிதாவைப் போல் படிப்பில் பொறுப்பும் தீவிரமும் இளையவள் ரம்யாவுக்கு இல்லை. கணபதியின் பள்ளியிலேயே எட்டாம் வகுப்பில் படிக்கிறாள். வினிதா வீடு திரும்பப் பிற்பகல் மூன்று மணியாகும். ரம்யா டி.வி. பார்த்துக் கொண்டோ காமிக்ஸ் படித்துக் கொண்டோ இருப்பாள். இது தான் நெருக்கடியில்லாத பருவம். அவள் விளையாட்டாக இருப்பதைக் கண்டிக்க வேண்டாம் என்பது கணபதியின் எண்ணம். "நீங்கள் செல்லம் கொடுத்து அவளைக் கெடுக்கிறீர்கள்" என்பாள் அவள்...

வேக நடைபோட்டு வருபவள் கண்களில் சட்டென்று துரும்பு குத்திவிட்டாற் போன்று ஓர் இடையீடு கண்களைக் கசக்கிக் கொள்கிறாள்.

அதே குட்டையான வடிவம். அந்த நடை, சாடை எல்லாம் ஏதோ காரமான கடைப்பண்டத்தில் ஊடாடி வரும் காய வாசனை போல் பழக்கமானதாக, ஆனாலும் அபூர்வமானதாக மனசில் பரவுகிறது. அருகில் வந்து விட்டாள். மார்புகள் தளர்ந்து மாராப்பின் மேல் படிந்து தெரிகின்றன. சாயம்போன ஒரு ரவிக்கை. கழுத்தில் தாலிச்சரடு. பழைய ஓரம்பிரிந்த மலிவான கைப்பை தோளில் தொங்க.. முகத்தில் எண்ணெய் பளபளக்கும் கறுப்பு நிறம் உதிர்ந்து, தேமல் திட்டுகள் போல் வெளிறிப் பொலிவிழந்த கோலம். இவள் திகைக்கையில் அவள் நிற்கிறாள். முன்பக்கப் பல்வரிசையில் இரண்டு பற்கள் மட்டும் பிரதானமாகத் தெரிய, அக்கம் பக்கம் இல்லாத அநாதைகளானாலும் சிநேகமுண்டு என்று புன்னகை சிந்துகின்றன. அந்தச் சிரிப்பில் தான் பளீரென்று சாயல் விளங்குகிறது. "நீங்க.. தேன்மொழி 'டீச்சர் தானே?.. ஐயோ, எப்படிப் போயிட்டீங்க? எனக்கு இத்தனை நேரம் அடையாளமே தெரியலை" அவள் ஏதோ இறுக்கம் நெகிழ்ந்து, பொலிவிழந்த பூக்கள் உதிருவது போன்று சிரிப்பைச் சிந்துகிறாள்.

"நானே தான்.. நீங்க எப்படி இருக்கிறீங்க? ஸார் எப்படி இருக்காங்க?.. நான் ரிட்டயர் ஆயி மூணு மாசமாச்சு. பார்க்கச் சந்தர்ப்பமே இல்ல.."

"ஆமா, நீங்க ரிட்டயராயிட்டீங்கன்னு சொன்னாங்க. அப்புறம் விசாரிக்கலை. ஆனா நெனச்சுப்பேன். எப்படி..! உங்க வீட்டிலேதானே நாங்க இருக்கிறோம்? மது எப்படி இருக்கிறான்! ஜிப்மர்ல இடம் கிடைச்சு, படிக்கிறான்னு சொன்னாங்க. ஒருநாள், காமினி என்ன படிக்கிறா?"

"டென்த்துக்குமேல படிக்க மாட்டேன்னுட்டா. மார்க் ரொம்பக் குறைச்சல். போனவருசம் இன்னொரு முறை பரிட்சை எழுதுன்னேன். சும்மா தான் இருக்கா. ஐ.டி.ஐ. மாதிரி ஏதோ கோர்ஸில் சேர்க்கலாம். பாலிடெக்னிக்ல டிரை பண்ணணும்னு இருக்கிறேன்.."

"ஆமா, இந்த நேரத்தில, எங்கங்க இப்படி? நீங்க முன்ன குடிபோன அதே சரஸ்வதிபுரம் வீட்டில தான இருக்கிறீங்க?"

"இல்லம்மா, அதைக்காலி செஞ்சுட்டு, தியேட்டர்பக்கம் ஒருவீட்டில போர்ஷன். வசதியாயிருக்கு.."

மேலே எதுவும் கேட்காதே என்ற மாதிரியில் நிறுத்தி, .."நான் வரேங்க. ஸார்கிட்டே விசாரிச்சேன்னு

சொல்லுங்க..'' என்று கிளம்ப அடி வைக்கிறாள்.

"ஏங்க. இங்க இந்தப்பக்கம். வந்திருக்கிறீங்க. வீட்டுக்கு வாங்க டீச்சர். அவங்களும் இருப்பாங்க. வாங்க..''

"இல்லம்மா. இங்க ஜீவா நகரில் ட்யூஷன் எடுக்கறேங்க. நாலு பிள்ளைங்களுக்கு. நேரமாயிட்டது. ஒன்னரைன்னா. ஒன்னரைக்கு இருக்கனும். இல்லைன்னா. இன்னிக்கு கிளாஸ் வேணாம்னு சொல்லிடுங்க. என்.ஆர்ஐ வீட்டுப்பிள்ளைங்க. வசதி ரொம்ப. நாமதான் ஒடுங்கிப் போகனும். நாலு பிள்ளைங்களுக்கும் அறுநூறு ரூபாய் வருது..''

சசிரேகா. விக்கித்தாற் போல் நிற்கிறாள். தந்தைக்கு ஒரே வாரிசு. வீட்டு முகப்பில் தேன்மொழி. எம்.ஏ. எம்.எட் என்று சலவைக்கல் பதித்து. இரண்டு கிரவுண்டில் பார்த்துப் பார்த்துக்கட்டிய வீடு. இன்ஜினியர் மாப்பிள்ளை என்றுதான் கொடுத்தாராம்.

ஆனால். தியேட்டருக்கு அப்பாலிருந்து வந்து சாலை கடந்து இன்னும் ஒரு கிலோ மீட்டர் நடந்து. இவள் பாடம் எடுக்கிறாளா? பதினொன்று பன்னிரண்டு பிள்ளைகள் இவளைத் தேடி வரவில்லையா?..

"ஏன்டீச்சர்? ஆச்சரியமாக இருக்கு நீங்க வீடுதேடி ட்யூஷனுக்கு வரீங்க. அதுவும் இந்த ஃபீஸ்க்கு?...''

அவள் புன்னகை விரிக்கிறாள். பரிதாபமாக இருக்கிறது

"அந்த ட்யூஷன் நான் எடுக்கிற தில்லைங்க. இது மியூசிக் ட்யூஷன்...''

"என்னது? நீங்க பாட்டும் சொல்லிக் கொடுப்பீங்களா டீச்சர்? நீங்க மியூசிக் தெரிஞ்சவங்கன்னு எனக்கு இத்தனை நாளாத் தெரியாதே?''

"ஏழெட்டு வருஷம் கத்துக்கிட்டேன். கல்யாணத்துக்கு முன்னே ஹையர் பாஸ் பண்ணினேங்க..'' அவள் விசுக்கென்று திரும்புகிறாள்.

"டீச்சர்.. நீங்க வீட்டுக்கு வராம போகக்கூடாது. வாங்க..''

அவள் அழைப்பைப் பொருட் படுத்தாமலேயே விடுவிடுவென்று திரும்பி நடக்கிறாள்.. ஜீவா காலனியை நோக்கி.

சசி வீட்டுப்படி ஏறுகையில் எல்லாவற்றையும் மறந்து போகிறாள். தேன்மொழி டீச்சர்தான் இவள் நினைவுகளில் வியாபித்து நிற்கிறாள்

இந்த வீடு அவள் வீடுதான். ஐந்து வருடங்களுக்கு முன். ஒன்றரை லட்சத்துக்கு இவர்கள் வாங்கினார்கள். பஞ்சமா பாதகங்களும் பண்ணக்கூடிய கணவன் மோசடி வழக்கில் மாட்டிக் கொண்டபோது. பணத்தைத் தண்ணீராகச் செலவுசெய்து. வீட்டையும் விற்று.



அவனைக் காப்பாற்றினாள். வேலை போனால் என்ன, அவனுக்கு? அவன் எல்லாத் தேவைகளுக்கும் பணம் கொடுக்கும் பதிவிரதா சிரோன்மணியாக இந்த யுகத்தில் தன்னை மெய்ப்பித்துக் கொண்டாள். பள்ளிக்கூடம், வீட்டுவேலை, குழந்தைகள், பொருளாதார நிர்வாகம் என்று சுமை சுமந்து முதுகு கூனினாலும், முகம் கோணியதில்லை.

கைப்பையை வைத்து விட்டு முகம் கழுவிக் கொண்டு வருகிறாள் சசி.

"மணி இரண்டாயிடிச்சு. நீங்க ஏன் இன்னும் சாப்பிடாம இருக்கிறீங்க?" என்று தட்டை நிமிர்த்துகிறாள்.

"உனக்கு இன்னிக்கு ஓர் ஆச்சரியம் சசி! என்னாலேயே நம்ப முடியல. நீ நிச்சயம் நம்ப மாட்டே"

"என்ன விஷயம்? ஏதானும் அதிசய தபால் சேதி வந்திருக்கா?"

"தபால் ஒண்ணுமில்ல.. மாணிக்கம் வந்திருந்தான். எப்படி மாறிட்டான்னு சொல்றே? தொப்பை வாடி, பும்முனு இருக்கிற கன்னம் உள்ளே போய், அடையாளமே தெரியல. 'நான் பண்ணினதுக்கெல்லாம் தண்டனை கிடைச்சிடிச்சு ஸார், அந்த மாணிக்கம் செத்து புது ஆளா என்னை மாத்திட்டா ஸார் அவ..'ன்னு கண்ணால தண்ணிவுட்டான்னா பாத்துக்க?"

"நீங்க என்ன சொல்றீங்க? யார் மாணிக்கம்?."

"புரியலையா? தேன்மொழி டீச்சர் ஹஸ்பன்ட் தான்."

தொண்டையில் இறங்கிய கவளம் சிக்கிக் கொள்கிறது.

"என்ன ஆச்சு? யார் நினைக்கிறாங்க, புரைக்கேறிக்குது..?" என்று அவள் தலையில் தட்டுகிறான் கணபதி.

"அவன் பேச்சே வேண்டாம் விடுங்க! சோறு சாப்பிடும் நேரத்தில் அவன் பேச்சு எதுக்கு? இங்கே எதுக்கு அவனை உள்ளே விட்டீங்க? எதையானும் லவட்டிக்கிட்டுப் போயிருக்கப் போறான்! நீங்க மாடில பையன்களுடன் இருந்திருப்பீங்க. ரம்யா வீட்டுக் கதவைத் திறந்து வச்சிட்டுக் காமிக்ஸ் படிச்சிட்டிருப்பா.."

"இல்லம்மா. நம்பு. நானே அந்தக் காலத்தில் சொல்லுவேன். 'இவளைப் போல் ஒரு படிச்ச முட்டாள் இருப்பாங் களா? இந்த உதவாத புருஷனை டைவர்ஸ் பண்ணிட்டு, நிம்மதியா இருக்கிறத விட்டு, கண்ணு முன்ன இப்படி அவனுக்காகச் சாவுறாளே! அடுக்கடுக்கா மஞ்சக் கயித்தைக் கட்டிக்கிட்டு அம்பது சுமங்கலிகளுக்கு முறம் தானம் பண்ணினாள்னு டீச்சர்லாம் சொன்னப்ப ஆத்திரமா வந்து, நானே அவங்ககிட்ட சண்டைபோட்டிருக்கேன். 'டீச்சர், நீங்க அறிவியல் படிச்சு என்ன புண்ணியம்? இந்த ஜன்மத்தில் இந்த நாட்டில் பெண்களுக்கு விமோசனம் இல்லைன்னேன்.' கணபதி ஸார், உங்களுக்குப் புரியாத விஷயம்







இதெல்லாம், ஸயன்ஸ் வேற, வாழ்க்கை வேற. அது பிழைக்க. சம்பளம், ட்யூட்டி இது அதர்ஸைட். நான் டைவர்ஸ் பண்ணிட்டு இந்த சமூகத்தில் கவுரவமா வாழ முடியும்னு நினைக்கிறீங்களா? இப்ப இருக்கும் மதிப்பு அப்ப கிடையாதுங்க! என்பாங்க சிரிச்சுக்கிட்டே. உங்களுக்கு இந்த வீட்ட விக்கிறதில எனக்கு மனசு நிறைவா இருக்குன்னாங்க. ஆனா இந்த அஞ்சு வருசத்தில் ஒருநாள் கூட அவங்க என்கிட்ட வந்து பேசல. ரிடையரான பிறகு அட்ரஸே தெரியல.

பாட்டு ட்யூஷன் எடுக்கும் அவள் வடிவம் நெஞ்சில் முட்டி, கண்ணீர் துளிர்க்கிறது. "அவன் பேரு மாணிக்கம்னு யாருக்குத் தெரியும்? குடிகாரன், படுபாவி, ஃப்ராடுன்னுதான் தெரியும். அந்தப் பிசாசுக்கு இன்னமும் அவள் தன்னைத்தேய்த்து இரைபோடுகிறாள்.."

"சே. அவன் ரொம்பத்திருந்திட்டான் சசி! கிண்டியில் ஏதோ வொர்க்ஷாப்பில் வேலை செய்கிறானாம். இங்கே எதுக்கு வந்தான்னு நீ கேட்டா ஆச்சரியப்படுவே!"

இப்பதா மாணிக்கம் வந்து சொன்னான். ஆள் கரைஞ்சு போயிட்டான் சசி!"

சசி பேசவில்லை ஒருவகையில் அது சரிதான் என்றாலும், இப்படியே பெண்கள் சமூகம் என்று கூனிக்குறுகி அடிபட்டுக்கொள்வதனால் என்றேனும் விடியுமா? ஓர் ஆண் ஒரு பெண் - இந்தபந்தம், குடும்ப பந்தமாகிறது. சில விட்டுக் கொடுத்தல்கள், சில ஆக்கிர மிப்புகள்.. கூட்டல் கழித்தல் என்று இருபக்கமும் இல்லாமல் சமமாக முடியாது... இவர் எப்படி? சமையல் வேலையில் பங்கு பற்றி சாப்பிடக் காத்திருப்பதுடன் சமமாகி விடுமா? நிறையக் கருத்து வேற்றுமைகள்.. "ஏங்க, பெட்டிக்கடை வரதன் பையன் பணம் கொண்டு வந்து கொடுத்தானா?"

அவன் விசுக்கென்று நிமிருகிறான். "ஏனிப்படிப் பணம் பணம்னு பறக்கிறே சசி? கல்வி தருமமாக இருக்கணும். தெரிஞ்சுக்க!

"உங்களை எல்லாரும் எக்ஸ்ப்ளாயிட்' பண்ண இடம் குடுக்கிறீங்க. அஞ்சு ட்யூஷனில் மூணு உருப்படியில்ல. அவனவன் அஞ்சாயிரம் பத்தாயிரம்னு உங்களைப்போல 'மாத்ஸ்' எடுக்கறவங்க சம்பாதிக்கிறாங்க. நமக்கு இரண்டு பொம்புளைப்புள்ள இருக்கு. படிப்புக்கு வேற லட்ச லட்சமா செலவு செய்ய வேண்டி இருக்கு!"

அவன் பொருட்படுத்தவில்லை.

தேன்மொழியின் உறுத்தல், இவள் மன உளைச்சலிலேயே கூர்மை இருக்கிறது.

சனிபிற்பகலில் மொறு மொறு வென்று ஏதேனும் தீனி செய்ய வேண்டும் என்ற எண்ணம் உண்டு. அது வழக்கமும் தான். ரம்யா சரியாக நினைவுபடுத்துவாள். வினி வருவதற்காகக் காத்திருப்பாள்.

சாப்பிட்டதும் வார இதழை எடுத்துக் கொண்டு கட்டிலில் தலை சாய்ப்பது அவளுக்கு சொர்க்க சுகம்.

"அம்மா, இன்னிக்கு பஜ்ஜி பண்ணித்தரேன்னியே?"

"சரிபோ, கிளாஸ்ட்ரேல அம்பது ரூபாய் நோட்டுப் போட்டேன் காலையிலே. எடுத்திட்டுப் போய் டயானா ஸ்டோரில கடலைமாவு அரை கிலோ வாங்கிவா"



"வினி, போம்மா, யுனிஃபார்ம் மாத்திட்டு வந்து சாப்பிடு. இந்தச் சனிக்கிழமை வந்தாலே உனக்குப் பட்டினி. கொஞ்சம் தயிர் சோறு கொண்டுபோகக் கூடாதா?" சமையலறைப்பக்கம் செல்கிறாள் சசி.

"அம்மா, ட்ரேயில பணம் எதும் இல்ல!"

"நல்லாப்பாரு! நாந்தான காலையிலே போட்டேன்!"

"அதை நான்தான் எடுத்தேன் சசி.."

சசி புருவங்களை உயர்த்திப் பார்க்கிறாள். இந்த ஐயாதான் தர்மப்பிரபு. கீரைக்காரியில் இருந்து இஸ்திரி போடுபவர் வரை இவரிடம் தான் வருவார்கள். கீரை வாங்கியோ, துணி கொடுத்தோ கடன் கழியும்..

"யாருக்குக் கொடுத்தீங்க?"

"..அதான் சொன்னேனே, சசி, மாணிக்கம் வந்தான்னு பாவமா இருந்திச்சு. வீட்டில அடுப்பெரிக்க கிரசின் இல்ல. இங்க ரேசன் கடையில் லிட்டர் ஆறு ரூபாய்னு கொடுக்கிறான். சோறு எதுவும் சமைக்கல. காலைல அஞ்சு ரூபாய்க்கு பத்து இட்டிலின்னு வாங்கிச் சாப்பிட்டது. உங்க கிட்ட சொல்றதுக் கென்ன ஸார்ன்னான்."

இவளுக்குக் கோபம் வெடிக்கிறது "என்னது? உங்களுக்கு சுயபுத்தி போயிடிச்சா, அவன் பசப்பலில்? நான் இப்ப பார்த்தேன், தேன்மொழி டீச்சர். கண்ணுல ரத்தம் வந்திச்சு! இந்த வெயிலிலே மூணு கிலோ மீட்டர் நடந்து வந்து, மியூசிக் ட்யூஷன் எடுக்கறாளாம்!" அவ சேலை, ரவிக்கை.. பேச்சு.. கண்ணராவியா இருந்திச்சு. இந்த ஆம்பிளைங்களுக்கே அந்தப்பக்கம் தான் நியாயம் இருக்கு!"

"சசி!" என்று அவன் அதட்டுகிறான்.

"என்ன நியாயத்தைக் கண்டுட்ட!.. தேன்மொழி, சரியாகவே இல்லையாம். அவளைத் தேடிட்டுத்தான் வந்தான். வீட்டில ஒண்ணும் செய்வதில்லையாம். திடீர்திடீர்னு இப்படி ஏதோ சொல்லிட்டுக் கிளம்பிடறாளாம். 'நான் காலையிலே ஒர்க்ஷாப்புக்குப் போயிடறேன். இவ வீட்டத்திறந்து வச்சிட்டுப் போயிட்டா. வீட்டில புகுந்து யாரோ துணி மணி சாமான் எல்லாம் துடைச்சிட்டுப் போயிட்டான்'னு அழுதான். பரிதாபமாக இருந்தது. கொடுத்தேன்.."

சசிக்குக் குரலே எழவில்லை இதெல்லாம் உண்மையா? தேன் மொழிக்குச் சித்தம் பேதலித்த நிலையா அது?

"சசி, இன்னொண்ணு சொல்லி வருத்தப்பட்டான். காமினியும் கூட கண்டிப்பில்லாம, படிப்பும் இல்லாம யார் கூடவோ சுத்துறாளாம். 'நான் பண்ணின பாவம் ஸார், இந்த ஜன்மத்திலயே எல்லாத் தண்டனையும் அனுபவிக்கிறேன்'னு கொட்டிட்டான்."

இது நிசமா, அது நிசமா?

நவீன பாணி ஓவியத்துக்குப் பொருள் கண்டு பிடிப்பது போல இருக்கிறது

இவன் குடி, சூதுகளுக்குத் தீனி போடும் பைத்தியமே அவளுக்கு முற்றி இருக்குமோ?

உண்மையிலேயே அவன் திருந்தி இருப்பானா?

"யம்மா, காசு குடும்மா, கடல மாவு வாங்கிட்டுவரேன், பஜ்ஜி பண்ணிக் குடும்மா!"

ரம்யா அவளை நடப்புலகுக்கு இழுக்கிறாள்.

"ரமி, ஜீவா நகர் எங்கே இருக்கு?"

"அதாம்மா ஏரிக்கரைப்பக்கம் குடிசைங்கல்லாம் இருக்கே? அதான் ஜீவா நகர்.."

..ஆங்..? அங்கே என்.ஆர்.ஐக்கள் கட்டிய வசதியான வீடுகளும் இருக்குமோ?

சசி கேட்கவில்லை. கேட்கத்துணிய வில்லை.

●●

# ஒரு டிக்கெட் ரத்து

அசோகமித்திரன்

ரயில் பயணச் சீட்டு முன்பதிவுக் கூடம் எதற்குப் போவதாக இருந்தாலும் பெரிய மாடிப்படி ஏறி இறங்க வேண்டியிருக்கிறது. மாம்பலம் அலுவலகம். மாடியில் இல்லை. ஆனால் அதற்குப் போக ரயில் பாதையைக் கடக்க வேண்டியிருக்கிறது. மேம்பாலம் ஏறி இறங்க வேண்டும். அல்லது மாட்லி சாலை சப்வே படிகள்.

பாலகிருஷ்ணனுக்குச் சில மாதங் களாகவே மாடிப்படிகள் தண்டிக்காமல் விட்டு விடுவதில்லை. ஐம்பது, ஐம்பத்தைந்து வயது வரை கூட இரண்டு படியாகவும் மூன்று படியாகவும் தாவியவனுக்கு இப்போது கைப்பிடிச் சுவரைப் பிடித்துக் கொண்டு ஒவ்வொரு படியாக எண்ண வேண்டியிருக்கிறது. "அப்பா! பங்கஜம் டிக்கெட்டைக் கொஞ்சம் நீங்க கான்சல் பண்ணிண்டு வந்துடறேளா? நான் போறதுன்னா சனிக்கிழமைதான் முடியும். அப்போ ஏகப்பட்ட பணம் போயிடும்." என்று அவர் மகன்தான் இன்று காலை அந்தப் பயணச் சீட்டை அவரிடம் கொடுத்தான்.

அவனுடைய மாமனார் மாமியார் அவர்கள் உறவினர் திருமணத்துக்காகச் சென்னை வருகிறார்கள். அவர்கள் ஊர் திரும்பிப் போக அவர்கள் ஊரிலேயே டிக்கெட் வாங்கியிருக்கலாம். ஆனால் மாப்பிள்ளையை வாங்கச் சொல்லிக் கடிதம் போட்டார்கள். "அப்பா அம்மாவுடன் நானும் நாலு நாள் ஊருக்குப் போய் வருகிறேனே." என்று மருமகள் சொல்லியிருக்கிறாள். ஆதலால் அவளுக்கும் சேர்த்து டிக்கெட் வாங்கியிருக்கிறான. ஆனால் அவளுடைய அலுவலகத்தில் அவளுக்குத் திடீரென்று ஒரு சம்பள உயர்வு கொடுத்து வீட்டுக்கு அருகிலேயே உள்ள கிளைக்கு மாற்றியிருக்கிறார்கள். இந்த நேரத்தில் அவள் லீவு போட முடியுமா? அதனால் தான் அவள் டிக்கெட்டைக் கான்சல் செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

பாலகிருஷ்ணனுக்கு மகன் மீது கோபம் வரவில்லை. மாமியார் மாமனார், தாய் தந்தைக்குச் சமானம்தான். கல்யாணமாகி இரு வருடங்களில் அவனை அவர்கள் ஒரு சிறு சங்கடத்துக்குக்கூட உட்படுத்தவில்லை. அவர் மகனும் பெண்டாட்டி பின்னாலேயே சுற்றிக் கொண்டிருக்கும் ரகமில்லை. உண்மையில் யாரையும் குற்றம், குறை சொல்லமுடியாது. தன் இயலாமைதான் தயங்கச் செய்கிறதே தவிர இந்த வேலையைப் பெரிய சுமையாக நினைப்பது சரியில்லை.

பாலகிருஷ்ணன் முன்பதிவு அலுவலகத்தில் நுழைந்தார். முதலில் பிரமிப்பாக இருந்தது. சில விநாடிகளில் அங்கு நின்ற நான்கு வரிசைகளில் மூன்றாவதில் நான்கே நபர்கள் நின்று கொண்டிருந்தது தெரிந்ததால். பாலகிருஷ்ணன் அந்த வரிசையில் நின்றார். தனக்கு முன்னால் நின்றிருந்தவரிடம், "இதோ ஒரு ஃபார்ம் எடுத்துண்டு வந்துடறேன்." என்றார்.

முன்பதிவு செய்வதற்குள்ள படிவம் தான் ரத்து செய்வதற்கும். பயணச் சீட்டில் நபர்கள். வயது மட்டும்தான் குறிக்கப்பட்டிருந்தது. ஆனால் படிவத்தில் பெயர் எழுதவேண்டும். பாலகிருஷ்ணன் படிவத்தில் பங்கஜம் என்று எழுதினார். வயது 26 என்று எழுதினார்.

அவர் அதிக நேரம் காத்திருக்கத் தேவை இல்லாமல் அவருக்கு முன்னால் இருந்த இருவர் அடுத்தடுத்து விலகிவிட்டார்கள். பாலகிருஷ்ணன் அவர் கொண்டு வந்திருந்த பயணச்சீட்டையும் அவர் எழுதி வைத்த படிவத்தையும் ஜன்னல் பின்னால் உட்கார்ந்திருந்தவரிடம் நீட்டினார்.



"டிரெய்ன் நம்பர் எழுதுங்க." என்ற அவர்இரண்டையும்பாலகிருஷ்ணனிடம் திருப்பிக் கொடுத்தார்.

நாலு இலக்க என் எழுதுவதற்குப் படிவத்தில் குறிக்கப்பட்ட இடம் மிகவும் சிறியதாக இருந்தது.

பயணச்சீட்டை வாங்கிக் கொண்டு அந்த மனிதன் கம்ப்யூட்டர் கீ போர்டில் பத்துப் பதினைந்து எழுத்துகளைத் தட்டினார். சிறிது நேரம் கம்ப்யூட்டர் திரையையே உற்றுப் பார்த்தார். மீண்டும் ஒரு விசையை இரண்டு முறை தட்டினார். பாலகிருஷ்ணன் எழுதித் தந்த படிவத்தைப் பார்த்தார். "பங்கஜம்னு பேர் ஒண்ணும் இல்லையே?" என்றார்.

"அவ பேர் பங்கஜம்தான். உங்களதிலே என்ன இருக்கு?"

"பங்கஜம்னு இல்லை. இந்த டிக்கெட் நீங்க வாங்கினதுதானே?"

"என் மகன் வணங்கினான். முதல் இரண்டு பேர் அவனுடைய மாமனார் மாமியார். மூன்றாவது அவனுடைய மனைவி. என் மருமகள்."

"உங்க பிள்ளை பேரு. என்ன?"

"விவேகாநந்தன்."

"அவர்தான் டிக்கெட் வாங்கினாரா?"

"ஆமாம். போன சனிக்கிழமை. 8ஆம் தேதி."

"அவர் மிஸஸ் விவேகாநந்தன்னு எழுதியிருக்கிறார்."

"கொஞ்சம் அப்படியேதிருத்திடுங்க."

"நீங்கதான் செய்யணும். இந்தாங்க."

பாலகிருஷ்ணன் இன்னொரு முறை பேனாவைத்திறந்து வைத்துக் கொண்டார்.

"அப்படியே வயசையும் 24ன்னு திருத்திடுங்க. டிக்கெட்டிலே அப்படித் தான் போட்டிருக்கு."

"எனக்குக் கண் சரியாத் தெரியலை. அதையும் மாத்திடறேன்."

அவர் மகன் ஏன் மனைவியின் வயதைக் குறைத்து எழுதினான் என்று அவருக்குச் சந்தேகமாகஇருந்தது அவள் வயது இருபத்தாறுதான். அவளுக்கும் அவர் மகனுக்கும் மூன்று வயது வித்தியாசம். பெண்களுக்குத்தான் வயதைக் குறைத்துச் சொல்லும் பழக்கம் என்பார்கள். ஆனால் இங்கே அவர் மகனே அவனுடைய மனைவியின் வயதை இரு ஆண்டுகள் குறைத்திருக்கிறான் என்றால்! எதனால் இருக்கும்? இன்னும் இரு ஆண்டுகள் அதிகமாக வேலைக்குப் போகலாம். அவர் வேலை செய்யும் கம்பெனியில் ஐம்பத்தெட்டு வயதானால் வெளியே தள்ளிவிட்டு விட்டார்கள். இப்படி வயதைக் குறைத்துச் சொல்லிக் கொண்டால் அறுபது வயது வரை வேலைக்குப் போகலாம். ஆனால் அறுபது வயது வரை அவளுக்கு உடல் நிலை ஆரோக்யமாக இருக்க வேண்டும். நான்கு படி ஏறினால் அவர் போல மூச்சிரைக்க நேர்ந்தால்எந்தக் கம்பெனிக் காரனும் ஆறுதல் கூறிக் கொண்டிருக்க மாட்டான். ஒழுங்காக வேலை செய்யக் கூடியவர்களுக்கு வழிவிடு என்று வீட்டுக்கு அனுப்பி விடுவான்.

"இதுலே ஒரு கையெழுத்துப் போடுங்க." என்று ஜன்னல் பின்னால் உட்கார்ந்திருந்தவர் ஒரு சீட்டை நீட்டினார். எல்லாருடைய பயணத்தையும் ரத்து செய்தால் அந்த மனிதர் புதிதாக ஒரு சீட்டு தயாரித்து அதில் ஒரு கையெழுத்து வாங்கிக் கொண்டு பணத்தைக் கொடுத்து விடுவார்கள். ஆனால் மூன்று பேரில் ஒருவர் பயணத்தை மட்டும் ரத்து செய்தால் அவ்வளவு எளிதில்லை. இப்போது புதுப்பயணச் சீட்டு இருவருக்கு மட்டும் தயாரிக்கவேண்டும். இந்தச்சீட்டில் பாவம். அவருடையசம்பந்திகளுக்கு ஒருவருக்கு மேல் பெர்த். இன்னொருவருக்கு நடு பெர்த்.

பாலகிருஷ்ணன் புதுப் பயணச் சீட்டையும் ரத்து செய்த டிக்கெட்டுக்கு உண்டான பணத்துடனும் மீண்டும் ரயில் மேம்பாலத்துக்கு வந்தார். காலையில் நேராக வீட்டிலிருந்து வந்திருந்ததால் மாடிப் படிகளை ஒரு மாதிரி சமாளிக்க முடிந்தது. இப்போது கால் மணி நேரம் காத்திருந்து நின்று சில தகவல்களுக்கு மனம் குழம்பிப் பிறகு மீண்டும் அந்த மேம்பாலத்தைக் கடக்கவே முடியாது போலிருந்தது. முதல் படியிலேயே சிறிது நேரம் உட்கார்ந்து விட்டார்.

அன்று மாலை வீட்டில் நிறையக் கலகலப்பு. பங்கஜத்தின் அலுவலகத்தி லிருந்து அவளுடன் பணி புரியும் இரு பெண்கள் இரவு விருந்துக்காக வந்திருந்தார்கள். இரண்டு பேரும் திருமணமானவர்கள். ஒருத்திக்கு மூன்று வயதில் ஒரு குழந்தை. விவேகாநந்தன் ஏழு மணிக்கு வந்து விட்டான். பாலகிருஷ்ணனும் அவர்களுடனேயே இருந்தாலும் அவர்கள் பேச்சு பாதிக்கு மேல் அவருக்குப் புரியவில்லை. எல்லாரும் தமிழில்தான் பேசினார்கள். ஒரு தலைமுறைக் காலத்தில் சாதாரணப் பொழுதுபோக்குப் பேச்சுக் கூட எவ்வளவு மாறிவிடுகிறது? பாலகிருஷ்ணனுக்குப் பல தருணங்களில் தூக்கம் வந்தது.

சாப்பாடு முடிந்து விருந்தினர் எல்லாரும் அவரவர் வீடு திரும்பி யாகிவிட்டது. பாலகிருஷ்ணனுக்கு டிக்கெட் விஷயம் மறந்து விட்டது. விவேகானந்தன் தான் கேட்டான். "இன்னிக்கு ரிசர்வேஷன் ஆபிஸ்க்குப் போக முடியலை. இல்லையா?"

"போனேம்ப்பா. பங்கஜம் டிக்கெட்டை கான்சல் செஞ்சுட்டேன்" அவர் மகன் உற்சாகப்பட்டதாகத் தெரியவில்லை.

பாலகிருஷ்ணன் புதுப்பயணச் சீட்டையும் ரத்து செய்த டிக்கெட்டுக்கான பணத்தையும் மகனிடம் கொடுத்தார்.

"அப்பா! நான்தான் மறுபடியும். போகணும்."

"ஏன்?"

"பங்கஜத்துக்கு லீவு கிடைச்சுடுத்து. இன்னிக்கு விருந்து அவ பிரமோஷ னுக்குன்னு ஏற்பாடு செய்திருந்தாலும் அவ கூட வேலை பண்ணறவங்களை நாலு நாளைக்கு அவ இல்லாம சமாளிக்க முடியுமான்னு கேக்கறதுக்குத்தான். முடியும்னுட்டாங்க. அதனாலே நானும் கூடப் போகலாமான்னு நினைச்சேன். ரயில்லே கிடைக்கலைன்னா பஸ்ஸிலேதான் போகணும்."

பாலகிருஷ்ணனுக்கு ரயில்வே மேம்பாலத்தை இன்னொரு முறை ஏறி இறங்க நேராது என்பது ஆறுதலாக இருந்தது. அதே நேரத்தில் அவருடைய மருமகள் அறுபது வயது வரை உத்தியோகத்துக்குப் போக வேண்டுமே என்று வருத்தமாகவும் இருந்தது.

☆☆



# கொலைகாரன்

கிருஷ்ணமூர்த்தியைப் புழுக்கம் தாக்கியது. வெளியே போய் எங்காவது கொஞ்ச நேரம் இருந்துவிட்டு வந்தால் நன்றாக இருக்கும். எழுந்து சட்டையை மாட்டிக்கொண்டான்.

"அப்பா.. அப்பா.. நானும் வரேன். நானும்.." என்று கமலி வந்து அவன் கால்களைப் பிடித்துக் கொண்டாள். அண்ணாந்து அவன் சம்மதத்திற்காகப் பார்த்த குழந்தையின் பெரிய கண்களில் இருந்த ஏக்கம் அவன் மனத்தை இளகவைத்துவிட்டது.

குழந்தைக்குத் தலைமுடி இன்னும் வேண்டிய அளவு நீளமாக வரவில்லை. ஆனால் அந்த முடியையே திரட்டி உச்சந்தலையில் ஒரு குடுமி மாதிரி சேர்த்து வைத்து முடிந்திருந்தாள் மாலதி. கிருஷ்ணன் கொண்டை போல் கமலிக்கு அதுவும் அழகாகத்தான் இருந்தது. அகன்ற கண்களில் தீட்டப்பட்ட மையும், குண்டுக் கன்னத்தில் இடப்பட்டிருந்த திருஷ்டிப்பொட்டும் கமலியை மோகினியாய், தெய்வக் குழந்தையாய்க் காட்டியது. குழந்தை என்பது இறைவன் வழங்கும் வரம்தான். அதனால்தான் எல்லாக் குழந்தைகளும் முளைவிடும் போது ரொம்பவுமே அழகாய் இருக்கின்றனர்.

கிருஷ்ணமூர்த்தி அவளை அழைத்துப் போவதற்குச் சம்மதமாய்த் தலையை அசைத்தான். கமலி மகிழ்ச்சி துலங்க எழுந்து கொண்டாள். வாசலருகே ஓடி அவளுடைய ரப்பர் செருப்புகளை அணிந்து கொண்டாள். கிருஷ்ண மூர்த்தியின் செருப்புகளை எடுத்து வைத்தாள்.

"அப்புறம் பாதில தூக்கிக்கச் சொன்னா, உன்னை நான் கோணிக்காரன் கிட்ட வித்துட்டு வந்துடுவேன்" என்றான் கிருஷ்ணமூர்த்தி.

"இல்லப்பா நான் நடந்தே வந்துடுவேன்."

கமலிக்கு ஐந்து வயது. கிருஷ்ணமூர்த்திக்கு கமலியின் மனத்தை உணர்ந்து பார்க்க வேண்டும் போல் இருந்தது. 'கோணிக்காரனிடம் விற்று விடுவதாக' தான் சொன்ன பொய்யை கமலி தெரிந்து கொண்டிருக்கிறாளா இல்லையா? பயப்படும் குழந்தையாய் இருந்தால் அழத் தொடங்குவாள். கமலி தெளிந்த குரலில், 'இல்லப்பா. நான் நடந்தே வந்து விடுவேன்' என்று சொல்வது பொய்யை உணர்ந்து, தன்னைச் சமாதானப் படுத்துகிற மாதிரி தானே இருக்கிறது என்று யோசித்தான்.

கமலியை அழைத்துக் கொண்டு தெருவில் இறங்கினான். நல்லவேளை. ரவி தூளியில் தூங்கிக் கொண்டிருந்தான். அவனுக்கு மூன்று வயது. விழித்துக் கொண்டிருந்தால் தகப்பனையும், அக்காவையும் வெளியே போக விட்டிருக்க மாட்டான். தானும் வருவேன் என்று பிடிவாதம் பிடித்திருப்பான்.

கமலி சாலையில் செல்லும் வாகனங்களை எல்லாம் ஏதோ அதிசயம் போலப் பார்த்துக் கொண்டு வந்தாள். கமலிக்கும் சரி, ரவிக்கும் சரி தங்களைச் சுற்றி நிகழும் எல்லா அன்றாட நிகழ்வுகளும் அதிசயம்தான். யாவற்றையும் அதிசயமாக உணர்வதால்தான் வாழ்க்கை அவர்களுக்கு மிகவும் சுவாரஸ்யமாக இருக்கிறது. கணத்திற்குக் கணம் சந்தோஷம் பொங்கும் தருணங்களாக இருக்கிறது.

கிருஷ்ணமூர்த்திக்கு வாழ்க்கை பல சமயங்களில் இயந்திர மயமாகத் தெரிகிறது. அதுவும் மாதக் கடைசிகளில் இன்னும் ஒரு வாரம் எப்படிப் போகும் என்ற நினைப்பு வந்து விட்டால் போதும் சந்தோஷமாவது. இன்னொன்றாவது. எதைப் பார்த்தாலும், எதை அனுபவித்தாலும் சந்தோஷம் வராது. நாளைக்குக் கல்யாணத்திற்குப் போக வேண்டுமே. எப்படி மொய்யெழுதுவது? நாளைக்குக் காப்பிப் பொடி வாங்க வேண்டுமே. எப்படி வாங்குவது?

எப்போது கடற்கரை வந்ததென்று தெரியவில்லை. கடற்கரை உற்சாகமாய் இருந்தது. இளைஞர்கள் தங்களுடைய கேர்ல் ஃப்ரண்ட்ஸ்களுடன் சிகரெட் பிடித்தார்கள். ஃபவுன்டன் பெப்ஸி அருந்தி நடந்தார்கள். மோட்டார் பைக்கிலும், காரிலும் ரேஸ் விட்டு, ப்ரேக் அடித்து எங்கெங்கோ உட்கார்ந்திருந்த ஏகப்பட்ட இதயங்களைத் துள்ளிக் குதிக்க வைத்தார்கள். கிருஷ்ணமூர்த்தி, கமலியின் கைவிரல்களை இறுக்கமாய்ப் பற்றிக் கொண்டு மணலில் கால்கள் புதையப் புதைய நடந்தான். குழந்தை தன்னிடமிருந்து பிய்த்துக் கொண்டு போய ஏதாவது ஒரு வண்டியின் முன்னால் விழுந்து அடிபட்டுக் கொண்டு விடுமோ, என்ற வீண் பயம் அவன் மனத்தில் புகுந்து கொண்டு பாடாய்ப் படுத்தியது. உலகின் இயக்கங்களை எல்லாம் தான் கட்டுப்படுத்துவதில்லை என்ற உண்மை எந்த மனிதனுக்கும் எப்போதும் புரிவதில்லை.

"அப்பா... அப்பா... மாங்கா பத்தைப்பா."

வாங்கிக் கொடுத்தான். சறுக்கு மரத்தில் ஏறி விளையாடி விட்டு வர அனுமதித்தான். ஒரு கேள்விக்குறி போல் வளைந்து உட்கார்ந்து 'இப்போது என்ன செய்யலாம்?' என்று யோசித்தான்.

காற்று பிய்த்துக் கொண்டு போனாலும், புழுக்கம் தீரவில்லை. கிருஷ்ண மூர்த்திக்கு அப்போதுதான் புரிந்தது. வெளிப்புழுக்கம் இல்லை அது. உட்புழுக்கம். மனத்தின் திகைப்பு. அதனால்தான் அது அவனுக்குப் புழுக்கமாய்த் தோன்றி இருக்கிறது.

கமலிக்கு ஐந்து வயது. ரவிக்கு மூன்று வயது.

இப்போது மாலதிக்கு நாள் தள்ளிப் போய்விட்டது. எவ்வளவோ எச்சரிக்கைகளை எல்லாம் எடுத்துக்கொண்டும், விளம்பரங்களில் வற்புறுத்துகிற மாதிரி

சுபா

எல்லாம் செயல்பட்டும் கூட மாலதி ஏமாந்து விட்டாள். இப்படி நிகழக்கூடும் என்று கொஞ்சமும் எதிர்பார்க்காததால் கிருஷ்ணமூர்த்திக்கு முதலில் அப்படி இருக்கும் என்று தோன்றவே இல்லை. இயற்கையின் கோளாறாய் இருக்கும் என்று தான் நினைத்தான்.

ஆனால் மருத்துவச்சி உறுதிப்படுத்தி விட்டாள். நாற்பத்தைந்து நாள் என்று கணக்கு சொல்லி விட்டாள். மாலதிக்கும், அவனுக்கும் கிளினிக்கிலிருந்து வெளியே வந்தபோது மகிழ்ச்சியாகவே இல்லை.

"என்ன பண்றதுங்க?" என்று கேட்டாள் மாலதி.

"என்ன பண்றது?" என்று அவனும் திருப்பிக் கேட்டான். உண்மையில் குருட்டுச்சந்தின் குட்டிச்சுவர் மேல் வந்து மோதிக் கொண்ட உணர்வில் இருந்தான் அவன்.

"அதான் கலைச்சிடலாம்னு அவங்க சொல்றாங்களே"

"என்ன பேச்சு பேசறே நீ? அது என்ன அவ்வளவு ஈஸியான விஷயமா? எங்கப்பா, அம்மா இரண்டு பேரும் முப்பத்தஞ்சு வருஷம் சேர்ந்துதான் இருந்தாங்க. நான், எனக்கு அப்புறம் ஒரு தங்கச்சி. எனக்குத் தெரிஞ்சு அவங்க எந்த குறுக்கு வழியிலயும் போகல. அம்மா ஆப்பரேஷனும் பண்ணிக்கலை, ஒன்னும் பண்ணிக்கல. அவங்க காலத்தில நிரோத் எல்லாம் வச்சுக்கறதே ரொம்ப வெட்கக்கேடான விஷயம். கடைக்குப் போய் அது வேணும்னு யாருமே கேட்டு வாங்க மாட்டாங்க. இப்பத்தான் தைரியமா வாங்கறாங்க. ஆனா அது ஏமாத்திடும்னு நான் நெனைச்சே பாக்கல மாலதி".

"இப்ப என்ன பண்ணலாம்னு சொல்லுங்களேன்"

"மூணாவதா ஒன்னு இருந்துட்டுப் போகட்டுமே மாலதி"

"என்னது?"

"ஏன்? பெத்துக்கக் கூடாதா?"

"தெரிஞ்சுதான் பேசறீங்களா? இரண்டை வச்சுக்கிட்டே நான் தள்ள முடியல நம்மால ஸ்கூல் ஃபீஸ்னு கேட்டா கையை ஒங்கறீங்க. பால் டின்னுன்னு சொன்னா பத்திக்கிட்டு வருது. இதுல மூணாவது வேறயா? நம்ப குடும்பம் தாங்காதுங்க. அப்பா ஆஸ்த்மாவுக்கு வைத்தியம் பண்ணனும். நான் வேற வயித்தைத் தள்ளிக்கிட்டு கடைசி மூணு மாசம் படாத பாடு படணும். வலிவரலன்னு கடைசி நேரத்துல சிஸேரியன்னு சொல்லுவாங்களா, அல்லது வலிவரதுக் குன்னு ட்ரிப்ஸ் ஏத்துவாங்களான்னு படபடப்போட காத்துக்கிட்டிருக்கணும். பெத்துக்கிட்டா எல்லாம் சரியாய்டுமா? அதுக்குப் பால் குடுக்க வேணாமா? ரவிக்கே குடுக்க முடியல. வந்தாத்தான? அவன் நோஞ்சானா இருக்கான். இப்ப புதுசா வந்து ஆன்னு வாயைத் தொறந்து அழுதா நான் எங்க போவேன்? உங்களுக்கென்ன? வாய் புளிச்சதோ, மாங்கா புளிச்சதோன்னு பெத்துக்கக் கூடாதான்னு கேட்டுட்டீங்க. அப்புறம் அவஸ்தைப்படப் போறது நீங்களும், நானும் மட்டுமில்லை. அந்தக் குழந்தையும் சேர்ந்துதான்."

கிருஷ்ணமூர்த்திக்கு அவள் சொன்னதில் இருந்த உண்மைகள் எல்லாம் தெரிந்துதான் இருந்தன. இருந்தாலும்.... இருந்தாலும்.... கலைப்பதா? வீட்டுக்குள் நுழையும் விருந்தாளியை ஊசியால் குத்தி, கத்தியால் கண்ட துண்டமாக வெட்டுவது போலாச்சே!

அப்பாவிற்கு இருந்த சாமர்த்தியம் எப்படி தனக்கு மட்டும் இல்லாமல் போய்விட்டது? மூன்று குழந்தை களுக்குத் தகப்பன் என்று சொல்லிக்கொள்வது அவனுக்கும் அவமானமாகத் தான் இருந்தது.

'ஒளிமயமான வாழ்க்கைக்கு ஒன்று போதுமே' என்ற அரசாங்க பிரசாரத்தை மீறி இரண்டாவதைப் பெற்றுக்கொண்ட போதே அவனுக்கு என்னவோ போல்தான் இருந்தது. ஆனாலும் ஆபீஸில் இருந்தவர்கள் எல்லாரும் அதை ஒன்றும் தவறான செயலாகக் கருதவில்லை. இரண்டு என்பது இன்றும் நடைமுறையில் ஒப்புக் கொள்ளப்படும் விஷயமாகவே இருந்ததால் அவன் மனத்தை நிறைய அல்லாட விடவில்லை. ரவியைக் கொஞ்சு கொஞ்சு என்று கொஞ்சினான்.

ஆசைக்கு ஒரு கமலி, ஆஸ்திக்கு ஒரு ரவி. ஆஸ்தி என்றால் ரவியின் ஆஸ்தியில் தான் அவனுடைய பிற்கால நாட்களைக் கடத்தியாக வேண்டும்.

இப்போது மூன்றாவது. நிச்சயம் கேலி செய்வார்கள். அரசாங்கத்திற்கெதிரான சதி ஒன்றைத் திட்டம் போட்டு நிறைவேற்றி விட்டதாகச் சொல்லுவார்கள். வெளியில் முகம் காட்டவே வெட்கமாக இருக்கும். கூடவே பொருளாதாரப் பிரச்னைகள். பால் பவுடர், மருந்து, தடுப்பு ஊசி, எந்த அவஸ்தையால் குழந்தை அழுகிறது என்பதைத் தெரிந்து கொள்ள முடியாததால் ஏற்படும் பதற்றம், புதுக்குழந்தைக்கும் துணிமணி, பள்ளிக்கூடம்....

தொடர்ச்சியாய் எவ்வளவு பிரச்னைகள்?

ச்சே. எப்படி இவ்வளவு அஜாக்கிரதையாக இருந்து விட்டோம்?

அதற்காக... அதற்காக? கருவைக் கலைப்பதா? அப்பாவிடம் சொன்னால் நிச்சயம் அவனைக் கண்டபடி ஏசுவார். குழந்தையைப் பெற்றுக் கொள்ளச் சொல்வார். அவரால் இயலாது என்றாலும், 'பேரனோ, பேத்தியோ இருக்கட்டும்டா. நான் வளத்துக்கறேன். நீ ஒரு துரும்பை எடுத்து இந்தப் பக்கம் அந்தப்பக்கம் வைக்க வேணாம்' என்பார்.

மாலதி நிச்சயம் சுமக்கச் சம்மதிக்க மாட்டாள். அது பிறந்த பின் உண்டாகப் போகும் தொல்லைகளை அவனாலும் தாங்க முடியாது. அளவுக்கதிகமானால் மயில் தோகையே பாரமாகி வண்டியின் அச்சு முறிந்து போகும் என்கிறபோது, தான் மாத்திரம் எம்மாத்திரம்?

"போலாமாப்பா?" என்று கமலி வந்து கேட்டபோது கிருஷ்ணமூர்த்தி ஒரு தீர்மானத்திற்கு வந்திருந்தான்.

டாக்டரம்மா விடியற்காலை யிலேயே வந்து க்ளினிக்கில் அட்மிட் ஆகிவிடும்படி சொல்லியிருந்தாள்.

கிருஷ்ணமூர்த்தி முதல் நாளிரவே குழந்தைகள் இருவரையும் மாமியார் வீட்டில் கொண்டு போய் விட்டான். பாட்டி வீடு என்றால் குழந்தைகளுக்குக் கொண்டாட்டம் தான்.

காலையில் அப்பாவிடம், மாமியார் வீட்டிற்கு மாலதியுடன் செல்வதாகச் சொல்லியிருந்தான். அப்பாவிற்கும் அன்றைக்கு ஆஸ்திக சமாஜத்தில் மீட்டிங். அப்படியே பிற்பகல் சாப்பாடு. ஒன்றும் கேள்விகள் கேட்காமல் தலையை அசைத்துத் தன் ஆமோதிப்பைத் தெரிவித்தார்.

க்ளினிக் போக்குவரத்து இல்லாத

சந்தில் ஒளித்து வைக்கப்பட்ட மாதிரி இருந்தது. உள்ளே நுழைந்தவுடன் மாலதியைத் தனியே கூட்டிப் போய் விட்டார்கள். அவளைக் காணாமல் பதைப்பாகத்தான் இருந்தது.

எட்டு மணிக்கு டாக்டரம்மா வந்தாள். மாலதி பற்றிக் கவலைப்படவேண்டாம் என்று சொன்னாள். அவளுக்கு அனஸ்தீஷியா கொடுத்திருப்பதாகத் தெரிவித்தாள்.

"போய்ட்டு டிஃபன் சாப்ட்டுட்டு ஒரு பத்து மணி போல வாங்க. அதுக்குள்ள இங்க எல்லாம் முடிஞ்சிடும். போகும் போது இந்த பேப்பர்ல கையெழுத்துப் போட்டுட்டுப் போங்க" என்று க்ளினிக்கின் நர்ஸ் ஒருத்தி அவனிடம் அச்சடித்த ஒரு பேப்பரை நீட்டினாள்.

மாலதியின் வயிற்றைச் சுரண்டுவதற்கு அவனது சம்மதத்தைப் பெற்றுக் கொள்ளும் கடிதம். கையெழுத்துப் போடும் போது கை லேசாக நடுங்கியது. விழிகளில் நீர் திரையிட்டது. சட்டென்று கையெழுத்து போட்டான்.

கிளினிக்கை விட்டு வெளியே வந்தான். டிபன் சாப்பிடும் மன நிலை இல்லை. துக்கம், சோகம் என ஏதோ ஒன்று அவன் நெஞ்சில் பாரமாய் உட்கார்ந்திருந்தது. பக்கத்தில் தான் கடற்கரை. அங்கே போனான். தார்ச்சாலையில் ஸ்கூட்டர் கற்றுக்கொள்ள வந்தவர்களும், கார் கற்றுக் கொள்ள வந்தவர்களும் பயத்தில் விரிந்த கண்களும், முகத்தில் பதற்றமுமாய் வெகு எச்சரிக்கையுடன் ஓட்டுவதற்கான பயிற்சியைப் பெற்றுக் கொண்டிருந் தார்கள்.

அவர்களுக்கு இருக்கும் இதே எச்சரிக்கை உணர்வுதான் தனக்கும் இருந்திருக்க வேண்டும். அப்போது இல்லாமல் போய் விட்டது. இப்போது எண்ணி, எண்ணி மாய்ந்து போவதில் என்ன அர்த்தம் இருக்கிறது?

கடற்கரை மணலில் நடந்து தண்ணீரில் போய் நின்றான். கால்களைத் தொட்டுத் தொட்டுச் சென்ற அலைகளைப் பார்த்துக் கொண்டிருந்தான். நீரலை பின்வாங்கும் போது, கால்களுக்குக் கீழே இருக்கும் மணலை அரித்து அவனுக்குள் ஜிவ்வென்ற ஓர் உணர்ச்சியை ஏற்படுத்தியது.

மாலதியின் வயிற்றில், கருப்பையின்



சுவரில் கத்தி இந்நேரம் படிந்து விட்டதா? அதனால்தான் காலில் இருந்து தலைவரை இந்த ஜிவ்வென்ற உணர்ச்சி ஏற்படுகின்றதா? அவள் வயிற்றில் வளர்ந்த அந்த நாற்பத்தைந்து நாள் குழந்தைக்கு வலிக்குமா? அது அழுமா? 'என்ன பாவம் செய்தேன் என்று என்னை இப்படி கொலைக்களத்திற்கு அனுப்பிவிட்டாயடா பாவி?' என்று அது இந்நேரம் தன்னைச் சபித்துக் கொண்டிருக்குமா?

கிருஷ்ணமூர்த்திக்கு தலையைச் சுற்றியது. எதிரில் இருக்கும் கடல் அப்படியே சுழன்று சுழன்று, அதில் அவனை இழுத்து அழுத்துகிற மாதிரி தோன்றியது. கால்கள் தொய்ந்து போயின. உடலெங்கும் வியர்வை ஊற்றெடுத்தது. வாந்தி வரும் போல் இருந்தது. அப்படியே தரையில் படுத்தால் நன்றாக இருக்கும் போல் தோன்றியது.

தண்ணீரை விட்டு விலகி வந்து அப்படியே மணலில் மல்லாக்கப் படுத்துக் கண்களை மூடிக் கொண்டான். இமைச்சுவர்களில் ஆரஞ்சு வெளிச்சம் நெருப்புக் கொழுந்துகளாய் எரிந்தது. தகித்தது.

எதற்கு இந்தக் குற்ற உணர்வு? இது ஒன்றும் செய்யக்கூடாத செயல் இல்லையே. எல்லாராலும் ஒப்புக் கொள்ளப்படுகிற விஷயம்தானே? இதற்குப் போய் ஏன் இவ்வளவு அல்லாட வேண்டும்?

கிருஷ்ணமூர்த்தி தன்னையே கேட்டுக்கொண்டான். பதில் இல்லை.

எவ்வளவு நேரம் படுத்திருந்தானோ? எழுந்தான். மணல்வெளியை விடுத்து மறுபடி நகரத்தில் நுழைந்தான். ஓட்டல் ஒன்றில் நுழைந்து காப்பி ஒன்று குடித்தான். ஒரு பாக்குப் பொட்டலத்தைப் பிரித்து வாயில் போட்டுக் கொண்டான். கிளினிக் நோக்கி நடந்தான்.

மாலதியைத் தனியறைக்குக் கொண்டு வந்து படுக்க வைத்திருந்தார்கள் அவளுக்கு இன்னும் மயக்கம் தெளியவில்லை. என்னவோ முனகிக்

கொண்டிருந்தாள். முகத்தருகே காதைக் கொண்டு போய்க் கேட்டான். கனவுப் பிதற்றல்கள்போல் வார்த்தைகள் சிதைந்து சிதைந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்தன. ஒரு வேளை அவளுடைய குற்ற உணர்வோ என்னவோ! ஒரு வார்த்தை கூடப் புரியவில்லை.

"மயக்கம் தெளிஞ்சவுடனே கூட்டிட்டுப்போயிடலாம் சார். முதல்ல கொஞ்சம் கூலா ஃபான்டா அல்லது கோல்ட்ஸ்பாட்னு கூல்ட்ரிங்க் வாங்கிக் கொடுங்க. சாயங்காலத்துக்கு அப்புறம் சூடா ஏதாவது சாப்பிடலாம். எல்லாம் ஓவர். முடிஞ்சு போச்சு எடுத்ததைப் பாக்கறீங்களா?"

"வேண்டாம். வேண்டாம்" என்று அவசரமாக மறுத்தான். அது வாழ்நாள் முழுமைக்குமான தண்டனையாய்த் தோன்றியது. கடைசியில் அது முடிந்தே விட்டதா?

மாலதி கண் விழித்தபோது ரொம்பவும் களைப்பாக உணர்ந்தாள். அவளுக்குக் குளிர் பானம் வாங்கித் தந்தான். ஓர் ஆட்டோவில் இருவருமாய் சேர்ந்து வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். அப்பா இல்லை. விளக்கு வைத்தபின்தான் வருவார். அது வரை ஆறுதல்.

பிற்பகல் முழுக்க மாலதி தூங்கினாள். அவனும் தூங்கிப்போனான். எழுந்திருக்கும் போது இருட்டிக் கொண்டிருந்தது.

பசி வயிற்றில் பிறாண்டிக் கொண்டிருந்தது.

கொள்ளு ரசம் என்றால் மாலதிக்குப் பிடிக்கும். கத்தரிக்காய் மொச்சைக் குழம்பு என்றாலும் அவளுக்குப் பிடிக்கும்.

அவசர அவசரமாக குக்கரை ஏற்றி சாதம் வைத்தான். கத்தரிக்காய் இருந்தது. மொச்சையும் இருந்தது. குழம்பு வைத்தான். கொள்ளு ரசம் வைத்தான்.

சுவாமிக்கு முன் விளக்கேற்றினான். போய்க் குளித்து விட்டு வந்தான்.

மாலதி எழுந்திருந்தாள். தெளிவாய் இருந்தாள். அவனைப் பார்த்துச் சிரித்தாள். அவனால் சிரிக்க முடியவில்லை. சுவாமிக்கு முன் அமர்ந்து கண்களை மூடிக் கொண்டான்.

கடவுளே. கடவுளே. கடவுளே. கடவுளே. கடவுளே!

கண் விழித்தபோது அப்பா வந்திருப்பது தெரிந்தது. வீடு முழுதும் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. சமையல் அறையில் இருந்து வந்த எண்ணெய் வாசனை அப்பளம் பொரிபடுவதைத் தெரிவித்தது.

"சாப்பிடலாம் வாங்க" என்றாள் மாலதி.

மவுனமாக எழுந்து கொண்டான். போய் சமையல் அறையிலேயே தட்டைப் போட்டுக் கொண்டு அமர்ந்தான்.

"குழம்பு. ரசம் எல்லாம் எப்ப வச்சீங்க?"

"ம்..ப்ச்...சாதம் போடு மாலதி"

பல்லவி



அனு பல்லவி



சரணம்



மாலதி அவனை மிரண்டு பார்த்தாள். தட்டில் சூடாய் சாதம் போட்டாள். ஆவி அலைந்தது. குழம்பு ஊற்றி ஒரு ஸ்பூன் நெய் சேர்த்தாள்.

அவன் சாதம் பிசைந்தான். சாப்பிட முடியவில்லை. அவனுடைய ஒற்றை விரல் எவர்சில்வர் தட்டில் ச்ரீய்ச். ச்ரீய்ச் என்று கோடிழுத்தது.

மாலதி பக்கத்தில் உட்கார்ந்தாள்.

அவன் தலைமுடியைக் கோதி விட்டாள்.

"என்னங்க" என்றாள்.

"ம்?"

"சந்தேகமா இருக்கா எம்மேல?"

"என்ன சந்தேகம்?"

"அவ்வளவு ஜாக்கிரதையா நீங்க இருந்தும் இப்படி ஆய்டிச்சுங்கறதால, நான் வேற மாதிரி போய்ட்டேனோன்னு.."

"ச்சீ..ச்சீ.. என்ன மாலதி இது? என்னை அவ்வளவு மட்டமானவனாவா நெனைச்சிட்டே?"

"பின்ன ஏன் உம்முன்னு இருக்கீங்க?"

"ஒண்ணும் இல்ல. இப்படிப் பண்ணும் படியா ஆய்டிச்சேன்னுதான். எனக்கு எம்மேலயே கோபமா இருக்கு"

"நான் பிசைந்து தரட்டுமா?"

"ம்"

நான்காம் நாள் இல்லை. ஐந்தாம் நாள். ஏதோ பேச்சின் போது மிகத் தற்செயலாக மாலதி சொன்னாள்.

"எங்க இரண்டாவது அக்கா இருக்காளே? மகேஸ்வரி. அவளுக்கு இனிமே குழந்தை பொறக்கும்னு நம்பிக்கை இல்லையாம். அதனால மூணாவதா ஒரு குழந்தை உண்டானா பெத்து அவகிட்ட கொடுத்துடச் சொன்னா! நீங்க என்ன சொல்லுவீங்களோ. ஏது சொல்லு வீங்களோன்னு நான் முடியாதுன்னுட்டேன்! அவளுக்கு கோவம். ஒரு மாசமா பேச்சுகூட இல்லை"

"அடிப்பாவி.. பாவி. அநாவசியமா என்னைக் கொலைகாரனாக்கிட்டியேடி..." என்று கிருஷ்ணமூர்த்தி முகத்தில் அறைந்து கொண்டு அரற்றத் தொடங்கினான்.

◆◆

# பரம சிவா, வரம் தர வா!

வாடாத மலரெடுத்து,
    வணங்காத முடிதாழ்த்தி,
மூடாத பூத்தொடுத்து,
    முடங்காத கரம்குவித்து,
ஆடாத சுடரெடுத்து,
    அலைபாயும் மனம் நிறுத்திப்
பாடாத நாளில்லை,
    பரமசிவா, வரம்தர வா!

மலராத மொட்டெடுத்து,
    மாறாடும் மனம்கசிந்து,
உலராத சாந்தெடுத்து,
    ஊசலாடும் உடலொடுக்கிப்
புலராத காலைபார்த்துப்
    புரியாத அறிவடக்கிப்
பலகாலம் பாடி நின்றேன்,
    பரமசிவா, வரம்தர வா!

காயாத கனிபடைத்துக்
    கண்மூடித் தியானித்துத்
தோயாத துகில்படைத்துத்
    தூங்காத மனமுருகி
ஓயாத பாட்டிசைத்து,
    உறவெல்லாம் துறந்துருகிப்
பாயிரத்தைப் பாடிநின்றேன்,
    பரமசிவா, வரம்தர வா!

ஆராத பொங்கலிட்டு,
    அசைபோடும் நினைவழித்து,
மாறாத நீறணிந்து
    மயக்கவரும் பசியடக்கித்
தீராத நெய்படைத்துத்
    திசைமாறும் புவனடக்கிப்
பாராத நிலையுற்றேன்
    பரமசிவா, வரம்தர வா!



சொ.பொ.சொக்கலிங்கம்

# குலூ பள்ளத்தாக்கும் மணாலி பனிச்சிகரங்களும்

**வண்ணப்படங்கள், கட்டுரை: 'யோகா'**



சிம்லா கடை வீதி

இப்போதெல்லாம் காஷ்மீரத்திற்குத் தான் போக முடியவில்லை. 'எத்தனையோ திரைப்படங்களில் பார்த்து வரும் சிம்லாவுக்காவது போய்வரலாம்' என்றார்கள் எங்கள் குழந்தைகள். சிம்லா என்றால் பனிக்கட்டிகள் இருக்கும். அங்கு சென்று அவற்றை அள்ளி அள்ளி விளையாடலாம் என ஆசைப்பட்டார்கள் அவர்கள். ஆனால் நாங்கள் புறப்பட்ட நேரம் சிம்லாவுக்கு ஏற்றதில்லை என்பது பிறகுதான் தெரிந்தது. இந்த மே மாதக் கோடை விடுமுறையில் சிம்லா எங்களைப் பல வகையிலும் சோகத்தில் ஆழ்த்தியது.

டெல்லி வரை ரயிலில் சென்றுவிட்டு அங்கு சதர்ன் டிராவல்ஸ் மூலம் ஒரு 'டாடா சுமோ' வண்டியை ஏற்பாடு செய்துகொண்டு புறப்பட்டோம். நான், என் மனைவி சாவித்திரி, பத்தாவது படிக்கும் மூத்த மகள் அனுரேகா, ஒன்பதாவது படிக்கும் இரட்டையரான அருண் மற்றும் அருணா, என் மனைவியின் சகோதரி லலிதா அவளது கணவர் பாலு அவர்களின் குழந்தை பவித்ரா என எட்டு பேரையும் 'டாடா சுமோ' தன்னுள்ளே சுலபமாக அடக்கிக் கொண்டது. காலை பத்து மணிக்குப் புறப்படுவதாக ஏற்பாடு. ஆனால் வண்டி கிளம்புகையில் மணி பன்னிரண்டரைக்கு மேல் ஆகிவிட்டது. மே மாதத்தின் முதல் வாரத்தில் சென்னையில்தான் வெப்பம் உடலைச் சுட்டுப் பொசுக்குகிறது. ஆனால் டெல்லியில் மிதமான வெயிலின் ஊடே இதமான தென்றல் காற்று வீசிக் கொண்டிருந்தது இனிமையாக இருந்தது. வெயில் இருந்தும் வியர்வையில்லாத பயணம்.

சண்டிகர் வரை தேசிய நெடுஞ்சாலை மிகவும் கவனமாகப் பராமரிக்கப்பட்டு வருவதால்பயணம் எளிதாக இருந்தது. தொடர்ந்து சாலைகளின் இருபுறமும் உயர்ந்து வளர்ந்த நீலகிரி மரங்கள் அழகாக இருப்பதோடல்லாமல் நிழல் தருவதாகவும் உள்ளன. வழியில் பானிபட் நகரத்தைக் கார் கடந்து சென்றபோது சரித்திரப்பாடத்தில் படித்த வரலாற்றுச் செய்திகளெல்லாம் நினைவுக்கு வந்துவிட்டன. பானிபட் நகரத்தைத் தாண்டியதிலிருந்து எங்கு பார்த்தாலும் சூரியகாந்திச் செடிகள் பல ஏக்கர் பரப்பில் வளர்க்கப்பட்டு



சிம்லா – மலை மாளிகை



சிம்லா – சுதந்தரமாய் கால்நடை

பார்ப்பதற்குக் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

'DRIVE SAFE, BE SAFE'

'CAREFUL DRIVING COST NOTHING'

போன்ற வாசகங்கள் வழி நெடுகிலும் வாகனம் ஓட்டுபவர்களை உஷார் படுத்திக் கொண்டே இருக்கின்றன. வழியில் சாலையோரக் கடை ஒன்றில் சுக்கா ரொட்டி, பாலக் பன்னீர், ஆலூ மட்டர், சன்னா மசாலா, ஆனியன் பக்கோடா என்று ஒரு பிடி பிடித்தோம். சண்டிகாரில் அறை எடுத்துத் தங்கி விடலாம் என்று டிரைவரிடம் சொன்னோம். ஆனால் 'இரவு எந்நேரமானாலும் சிம்லா போயிடலாம்' என்கின்ற மாதிரி சொல்லிவிட்டு சண்டிகரைத் தொடாமலே 'பை–பாஸ்' சாலையில் பயணத்தைத் தொடர்ந்துவிட்டார். சண்டிகரிலிருந்து சிம்லா செல்லும் வழியில் இயற்கை அழகு கொட்டிக் கிடக்கும் என்று கூறியிருக்கிறார்கள். அதை அனுபவித்து மகிழமுடியாமல் இரவிலேயே மலைப் பாதைகளில் வளைந்து வளைந்து பயணம் செய்து சிம்லா வந்தடையும் போது நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு மேலாகிவிட்டது.

சிம்லாவில் எங்கள் நண்பர் ஒருவர் இருக்கிறார். ஜார்ஜ் என்பது அவர் பெயர். தொலைபேசித் துறையில் பணிபுரியும் அவரை, சென்னையிலிருந்தும், டெல்லியிலிருந்தும் கூட தொலைபேசி மூலம் தொடர்புகொள்ள முடியவில்லை. அவருடன் தொடர்பு கொண்டிருந்தால் சிம்லாவில் தங்குமிடமாவது ஏற்பாடு செய்திருப்பார்.

நிராதரவாக எங்கள் வண்டி நள்ளிரவில் சிம்லாவை அடைந்தபோது எங்களை ஒரு கும்பல் சூழ்ந்து கொண்டது. ஐந்தாறுபேர். இளைஞர்கள். நன்றாகப் போர்வையில் உடம்பைச் சுற்றிக்கொண்டிருந்தார்கள். இந்தப் போர்வைப் படையைப் பார்த்துப் பெண்களும் குழந்தைகளும் மிரண்டு போனார்கள். ஓரளவு எங்களுக்கும் பயம்தான்.

அவர்கள் நம்பக்கம் இருக்கிற மாதிரி லாட்ஜ் பிடித்துத் தருகிற ஏஜெண்டுகள் தாம் என்பது தெரிந்ததும்தான் நிம்மதி பிறந்தது. வேண்டாம் என்று சொல்லியும் அவர்கள் சுற்றிச் சுற்றி வந்தார்கள். டெல்லியை விட்டுப் புறப்படுகிறபோதே டிராவல்ஸ் கம்பெனியில் சில ஹோட்டல்களின் முகவரிகளையும் தொலைபேசி எண்களையும் தந்திருந்தார்கள். அந்த நடு இரவில் உடனடியாகத் தொலைபேசி வசதியும் கிட்டவில்லை. ஒரு வழியாய்த் திறந்திருந்த கடை ஒன்றைப் பார்த்துத் தொலைபேசியில் தொடர்பு கொண்டோம். அந்த ஹோட்டல்கள் 'ஸாரி... இடமில்லை' என்று பதில் சொன்னபோது வெறுத்துப்போனது. நள்ளிரவைத் தாண்டி அந்தக் குளிர்காற்றில் வேறு வழி?

போர்வைக்காரன் ஒருவனை அழைத்தோம். தனியாக வரமாட்டானாம். இரண்டு பேராய் வந்தார்கள். 'ஹோட்டல் குல்மார்க்' என்று சொல்லி வண்டியை ஒட்ட வழி காட்டினான். பழைய பல்லவனில் தொற்றிக் கொண்டு வருகிறமாதிரி, எங்கள் வண்டியின் பின்புறம் ஒருவனும், டிரைவர் பக்கம் ஒருவனும் நின்று கொண்டே வந்தார்கள்.

முன்னூறு நானூறு ரூபாயில் ரூம் கிடைக்கும் என்று சொன்ன போர்வை வாலாக்கள் தலைக்கு ஐம்பது ரூபாய் கமிஷன் வாங்கிக்கொண்டு போய் விட்டார்கள். ரிசப்ஷனை நெருங்கிக் கேட்டபோது "ஆயிரத்து நூறு ரூபாய் அறைதான் இருக்கிறது" என்ற பதில் கிடைத்தது. வேறுவழியின்றி இரண்டு அறைகள் எடுத்துக்கொண்டோம். ரிசப்ஷனிலிருந்து 'லிப்ட்' உள்ளே சென்றதும் அறைகளை அடைய லிப்ட் கீழ்நோக்கித்தான் செல்கிறது. மலைப்



குலா – சிறார்கள்

பிரதேசமான ஊர் என்பதால் இந்த மாதிரி அமைப்பில் ஒட்டல் அமைந் திருக்கிறது. எப்படியோ அறைக்குச் சென்று 'சாண்ட்விச்' மட்டும் சாப்பிட்டு விட்டு, சற்றுக் கண்ணயர்ந்தோம்.

காலை ஏழுமணிக்கு நண்பர் ஜார்ஜ் போனில் கிடைத்தார். உடனே அவருடைய அண்ணனை ஒட்டலுக்கு அனுப்பி வைத்தார். இரவு பன்னிரண்டு மணிக்கு வந்து அறையை வாடகைக்கு எடுத்திருந்தாலும் பகல் பன்னிரண்டு மணியுடன் ஒருநாள் கணக்கு முடிகிறது என்று ஒட்டலில் கூறிவிட்டார்கள். "இந்த ஒட்டல் வேண்டாம். காலி செய்துவிடுவோம். சவுத் இண்டியன் ரெஸ்டாரண்டும் ஜார்ஜ் அலுவலகமும் இருக்கும் பகுதியில் ஓர் ஒட்டல் இருக்கிறது. வாடகையும் குறைவு. அங்கே போய் விடலாம்" என்று ஜார்ஜின் அண்ணன் கூறினார். மூட்டை முடிச்சுகளோடு அறையைக் காலி செய்துகொண்டு புறப்பட்டால் அங்கும் ஒரு சோதனை காத்திருந்தது. அந்த ஒட்டல் இருக்கும் இடம் சர்ச் வளாகமாம், எனவே அங்கே கார் எதுவும் போகக்கூடாது என்று சொல்லி விட்டார்கள். வழியிலேயே காரை நிறுத்திவிட்டுச் சுமைகளைக் கூலியாட் களின் தலையில் ஏற்றி அனுப்பிவிட்டு நடந்தோம். அந்த மலைப்பகுதியில் கூலியாட்களின் ஒட்டத்துக்கு ஈடு கொடுத்து நடக்கமுடியவில்லை. 'ஏன்தான் சிம்லாவுக்கு வந்தோமோ?' என்று வெறுத்துப் போயிற்று.



ஹிமாசலப் பிரதேசத்தின் தலைநகரம் சிம்லா. பிரிட்டிஷார் உருவாக்கிய நகரம் அது. இன்னும் பழைய தலைமுறையின் சின்னங்களாக வாழும் ஐரோப்பியர்களை இங்கு காணலாம். பழம்பெருமைகளை நினைவூட்டும் கட்டட வனப்பும் சர்ச்களும் இங்கு நிறைய உண்டு. ஆனால் கைகளில் அள்ளி எடுக்கப் பனிக்கட்டிகள் இல்லாமல் குழந்தைகள் மிகவும் ஏமாந்து போனார்கள். பன்னிரண்டு கி.மீ. தொலைவில் ஒரு தாவரவியல் பூங்காவைப் பார்த்தோம். நம்முடைய ஊட்டி, கொடைக்கானலைப் பார்த்த கண்களுக்கு இது அந்த அளவுக்குச் சோபிக்கவில்லை.

ஒரு பள்ளத்தாக்கு பகுதியைக் காட்டினார்கள். தூரத்தில் ஓர் இடத்தைக் காட்டி அதுதான் சீன எல்லை என்றார்கள். மற்றபடி குதிரைச்சவாரி, மலைவாசிகளின் ஆடைகள் அணிந்து கொண்டுபடங்கள் எடுத்துக் கொள்வது – இவைதாம் சிம்லா. மொத்தத்தில் குழந்தைகளுக்கும் எங்களுக்கும் சிம்லா என்பது கற்பனைக்கு அப்பாற்பட்ட ஓர் ஏமாற்றம்தான். இதற்காகவா இவ்வளவு தூரம் சிரமப்பட்டோம் என்றாகிவிட்டது. ''சிம்லாவுக்குக் குளிர்காலத்தில் வரவேண்டும். அப்போதுதான் பனிப் பொழிவுகள் எல்லாம் அழகாக இருக்கும்" என்றார், இரவு எங்களைச் சந்திக்க வந்த நண்பர் ஜார்ஜ். குழந்தைகள் ஐஸ் கட்டிகளைப் பார்க்க வேண்டு மானால் 'குலூ – மணாலி' ஆகிய இடங்களுக்குப் போவது உசிதமானது என்கின்ற யோசனையையும் கூறினார்.

குலூ – வயல்வெளியில்

மறுநாள் காலை பதினோரு மணிக்கு 'குலூ–மணாலி'யை நோக்கி வண்டி கிளம்பியது. வழியில் நிறைய உணவு விடுதிகள் உண்டு. பஞ்சாபி தாபா என்பார்கள். நல்ல ரொட்டி, சாதம், கட்டித் தயிர் எல்லாம் கிடைத்ததால் சாப்பாடு ஒரு பிரச்னையாகவே இருக்கவில்லை.



சிம்லாவிலிருந்து பலாஸ்பூர் வரியாகக் குலூ வரவேண்டும். மண்டி என்கின்ற இடத்தைக் கடக்கும்போதே நமக்குத் துணையாகச் சாலையோரமாக 'பியாஸ்' நதியும் கூடவே வருகிறது. அழகென்றால் கொள்ளை அழகு. மாலை மூன்று மணிக்கு எங்களுடன் சேர்ந்துகொண்ட இந்த நதித்தோழி இரவு ஏழுமணிக்கு குலூவை அடையும்


பியாஸ் நதி

வரை தொடர்ந்து வந்தாள். அங்கே ஒரு கெஸ்ட் அவுஸில் நுழைந்து விசாரித்தோம். அறை வாடகை ரூ 250 என்றார்கள். தரமான வசதிகள். விசாலமான பெரிய அறை. நல்ல உணவு. அங்கேயே இரவு தங்கிவிடலாம் என்று முடிவு செய்தோம்.

குலூ நகரம் கடல் மட்டத்திலிருந்து 1220 மீட்டர் உயரத்தில் உள்ளது. பண்டைக் காலத்தில் இதைக் 'குலாந்த பீடம்' என்ற பெயரில் வழங்கியிருக் கிறார்கள். மனிதர்கள் வாழும் நிலப்பரப்பின் எல்லை என்பது இதன் பொருள். மின்னி ஒளிவீசிப் பாயும் 'பியாஸ்' நதியின் இருகரைகளிலும் விரிந்து பரவி உள்ள குலூ பள்ளத் தாக்கை 'ஸில்வர் வாலி' (வெள்ளி பள்ளத்தாக்கு) என்றே குறிப்பிடு கிறார்கள்.

பாரதம் சுதந்தரம் அடைந்த பின்னர்தான், வண்டி வாகனங்கள் செல்லக்கூடிய அளவு சீரான சாலைப்பாதைகள் குலூவுக்குப் போடப்பட்டிருக்கின்றன. ஒதுங்கியே இருந்த இந்த நிலப்பகுதியில் பழைமைச் சிறப்புகள் அப்படியே போற்றிப் பாதுகாக்கப்படுகின்றன. ஒன்றை ஒன்று விஞ்சும் அழகில் ஏராளமான பசுமைப் பள்ளத்தாக்குகள் நம்மைக் கவர்ந் திழுக்கின்றன. இங்கே பிரபலமானது தசரா பண்டிகை.

பதினேழாம் நூற்றாண்டில் குலூவை ராஜா ஜெகத்சிங் என்பவன் ஆட்சி புரிந்திருக்கிறான். அவன் ஏதோ ஒரு மிகப்பெரிய தவறு செய்திருக்கிறான். அந்தப் பாவத்தைப் போக்கிக் கொள் வதற்காக அயோத்திக்குத் தன்னுடைய படைத் தளபதியை அனுப்பி ஸ்ரீ இராமச்சந்திர மூர்த்தியின் உருவச் சிலை ஒன்றைக் கொண்டு வந்திருக் கிறான். அவர் பெயர் 'ரகுநாத பிரபு' என்று வழங்கப்படுகிறது. இன்றளவும் பிரபலமாக விளங்கிவருகிற ரகுநாத பிரபுவின் ஆலயத்தை எழுப்பித்தவன் ராஜா ஜெகத்சிங்தான். குலூ நகரில் தால்பூர் மைதானம் என்று ஒன்று இருக்கிறது. சுற்றுவட்டார கிராமக் கோயில்களிலிருந்து இருநூறு சுவாமி களின் திருவுருவங்கள் இந்த மைதானத்தில் கூடுகின்றன. ஆட்ட பாட்டங்களோடு ஒரு வாரம் நடை பெறுகிற இந்த தசரா திருவிழா இங்கு மிகவும் புகழ்வாய்ந்தது. எல்லாக் கடவுள்களும் குலூவின் பிரதான தேவதையான 'ரகுநாத் பிரபு'வை வணங்கி மரியாதை செய்வதுதான் இந்த தசரா விழாவின் சிறப்பு. சுற்றுவட்டாரத்தில் ஏராளமான கோயில்கள் இருப்பதால் குலூ பள்ளத்தாக்கை 'Valley of Gods' என்று வழங்குகிறார்கள்.

மலையேறும் பயிற்சியாளர்களுக்கு குலூ பள்ளத்தாக்கு மிகவும் ஏற்ற இடம். ஆப்பிள், செர்ரி, பேரிக்காய், ப்ளம் பழங்கள், ஆப்ரிகாட் என்று ஏராளமான பழவகைகள் விளையும் தோட்டங்களுக்குக் குலூ பிரபலமானது.

பிரிய மனமில்லாமல் குலூவை விட்டுக் காலையில் மணாலிக்குப்


மணாலி – மலைப்பாதை

புறப்பட்டோம். நாற்பது கி.மீ. பயணம் செய்தால் மணாலி வந்துவிடும். ஆனால் ஆங்காங்கே சற்றே கரடுமுரடான பாதை. பாதி வழி போனதுமே காஷ்மீரை நினைவூட்டுகிற மாதிரி வண்ண அழகுகள். சுற்றிலும் தொப்பி தொப்பியாக பனியைச் சூடிக்கொண்ட மலைகளைக் கண்டதுமே குழந்தைகள் கைதட்டி ஆரவாரம் செய்தார்கள். இரண்டு மணி நேரத்திற்கு மேல் பயணம் செய்து மணாலியை அடைந்தோம்.


வெள்ளிப்பனி – மணாலி

மணாலியில் 'சுவாமிஜி ரெஸ்டாரண்ட்' என்று தமிழ்நாட்டு உணவு வகைகள் கிடைக்கும் இடம் இருப்பதாகச் சொல்லி இருந்தார்கள். மெயின்ரோடை ஒட்டிய ஒரு சந்தில் இருந்தது அது. இட்லி, பூரி, உப்புமா, ஊத்தப்பம், தயிர்சாதம் என்றெல்லாம் தமிழில் போர்டில் எழுதப்பட்டிருந்ததைப் பார்த்ததும் எங்களுக்கு மிகப் பெரிய வியப்பு!

ஆனந்தமாகச் சாப்பிட்டு விட்டு 'பில்' கொடுக்கும்போது "ஏன் சுவாமிஜி கேப்னு பெயர் வச்சிருக்கீங்க?" என்று அரைகுறை இந்தியில் கேட்டேன். வந்த பதிலில் மிகப்பெரிய அதிர்ச்சி.

"ஏன் சார்... ஒழுங்காத் தமிழிலேயே கேளுங்க. நான் தமிழன்தான். காஞ்சிபுரத்துக்காரன்தான்" என்று சொல்லிச் சிரித்தார் அவர். அவரைப் பார்த்தால் உடையும், தொப்பியும், யாரோ சர்தார்ஜி என்றேநினைத்து ஏமாந்தேன்.

"காஞ்சிபுரமா? எங்கே?" என்று கேட்டேன் நான்.

"பக்கத்திலே திம்மராஜம் பேட்டை தெரியுமா?"

"அய்யம்பேட்டை பக்கம்தானே?" என்றேன் நான்.

"உங்களுக்கு எப்படி தெரியும்?" என்று வியப்போடு அவர் கேட்டார். "பழனி என்கின்ற என்னுடைய கல்லூரித் தோழர் ஒருவர் அந்த ஊர்க்காரர்தான்" என்று பதில் சொன்னேன்.


மலையேற்றப் பயிற்சி மாணவர்கள்

"அய்யோ.... அவன் என்னோட ஒன்றுவிட்ட தம்பி சார்!" என்று அவர் துள்ளிக் குதித்த போது என்னால் எதையுமே நம்ப முடியவில்லை. இருபது வருடங்களுக்கு முன்னால் வீட்டில் சண்டை போட்டுக் கொண்டு வடக்கே ஓடிவந்தவர் அவர். ரிஷிகேசம், ஹரித்துவார் என்று எங்காவது சாமியாராகப் போய்விடலாம் என்று வந்து கொஞ்சகாலம் ஹோட்டலில் வேலை பார்த்தார். வடக்கே வருகிற தமிழ் யாத்திரிகர்களின் தேவையை எண்ணி, தானே சொந்தமாக ஓர் உணவு விடுதியைத் தொடங்கி சக்கைப் போடு போட்டுக் கொண்டிருக்கிறார் அவர். அவருடைய மாமியார் வீடு கும்பகோணம். நான்கு மாதங்கள் காஞ்சிபுரத்திலும், கும்பகோணத்திலும் ஆண்டுதோறும் செலவிடுகிறார். மீதி எட்டு மாதங்கள் 'சுவாமிஜி கேப்'



சுவாமிஜி

நிர்வாகம் என்று திட்டமிட்டு உழைக்கிறார் அவர்.

முக்கியமாக, திரையுலக நபர் களுக்கு இந்த சுவாமிஜி கேப்தான் கற்பகத்தரு, காமதேனு எல்லாம். 'மின்சாரக்கனவு' படமானபோது எல்லா ஆட்களுக்கும் சாப்பாடு, தங்குமிடம், போக்குவரத்து வசதிகள் என்று செய்து கொடுத்தவர் இவர்தான். அமைதி இழந்திருப்பதால் காஷ்மீரத்திற்கு முன்போல் நிறையத் தயாரிப்பாளர்கள் போக முடியாத சூழ்நிலையில் அந்த இடத்தை இப்போது மணாலி பிடித்துக் கொண்டு விட்டது.

மணாலிக்கு இன்னும் கொஞ்சம் மேலே அதாவது இருபது கி.மீ. தூரம் போனால் ரோல்லாஃபால், ரோத்தம்பார்க் என்று அழகான இடங்கள் உள்ளன. இங்கு கோடையிலும் குளிரிலும் பனி கொட்டிக் கிடக்கிறது. ஆகையால் பனித்தரை வேண்டும் என்கிற படத் தயாரிப்பாளர்கள் மணாலிக்கு வந்துவிடுகிறார்கள்.

தற்போது நாம் வந்திருக்கும் இடமான மணாலி மின்சாரக்கனவு எடுத்த இடம் என்று குழந்தைகளுக்குத் தெரிய வந்தவுடனேயே வானத்துக்கும், பூமிக்குமாய்க் குதித்துக் கும்மாள மிட்டார்கள். உடனே பனித்தரையில் விளையாடப் போகவேண்டும் என்று அடம் பிடித்தார்கள். மறுபடி மேலே இருபது கி.மீ. பயணம் செய்து 'ரோலா பால்' வந்தவுடன் அழகான பனித்தரை. பனிச்சறுக்கல், ஸ்கேட்டிங் என்று இரண்டு மணி நேரத்திற்கு மேல் குழந்தைகள் விளையாடோ விளையாடு என்று விளையாடித் தீர்த்தார்கள். பனியில் ஊன்றி ஏற, ஐந்து ரூபாய் பத்து ரூபாய் என்று வாங்கிக் கொண்டு பைன் மரக்குச்சி ஒன்றை விற்கிறார்கள். நாம் அதனைப் பனியில் ஏறிச் செல்ல உபயோகப்படுத்திவிட்டு அங்கேயே போட்டு விட்டு வந்து விடுகிறோம். பின்பு திரும்பவும் அதனை எடுத்துச் சென்று அடுத்து வருபவர்களிடம் ஐந்து ரூபாய் பத்து ரூபாய் என்று விற்று விடுகிறார்கள். 'ரோலா ஃபால்' பனிச்சறுக்கல் விளையாட்டில் பொழுது போன இரண்டரை மணிநேரம் மனத்தை விட்டு என்றும் அகலாத இனிமையான நேரம். அடுத்து ரோத்தம்பார்க் போக முடியவில்லை. நாங்கள் போன நேரம் பனிச் சரிவால் பாதையை மூடி யிருந்தார்கள். அங்கிருந்து மணாலி திரும்பி மறுபடியும் ஆனந்தமாக ஸ்வாமிஜி ரெஸ்டாரண்டில் தமிழ்ச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு டெல்லி திரும்பினோம்.

குலூ – மணாலி பயணம் மறக்கமுடியாத ஓர் இனிமையான பயணம்.



பனிச்சறுக்கு விளையாட்டு

# உறவுகள்

## மன்னார்குடி விசுவநாதன்



மூன்று மணி நேரமாக வானில் பறந்து மிதந்து வந்த விமானம் சென்னை விமான நிலையத்தில் மெல்லத் தரையிறங்கி ஓடுபாதையில் நிதானமாக ஓடி நிலை கொண்டு நின்றது.

ஒலிபெருக்கியில் குரல் மென்மையாக ஒலித்து ஓய்ந்தது.

விமானத்தில் ஏணிப் படிகள் பொருத்தப்பட்ட பிறகு பயணிகள் இறங்கிக் கொண்டிருந்தார்கள்.

ரவி தோளில் தொங்கிய தோல் பையுடன் படபடவென்று வேகமாகப் படிகளில் இறங்கினான்.

அவன் நெஞ்சுக்குள் இனம் புரியாத துடிப்பு தோன்றி அவனைப் படாத பாடு படுத்திக் கொண்டிருந்தது.

பஸ் வந்து நின்றது.

அதில் பரபரப்புடன் பாய்ந்து ஏறி இருக்கையில் அமர்ந்தான் ரவி.

விமானத்திலிருந்து வெளியேறி பஸ்ஸில் உட்கார்ந்து சுங்கச் சோதனை நடைபெறும் இடத்துக்கு வந்து சேருவதற்குள் உடம்பு வியர்வையில் தொப்பலாய் நனைந்து விட்டிருந்தது.

முகத்தையும் கழுத்துப் பிடரியையும் கைக்குட்டையால் துடைத்து விட்டுக் கொண்டான்.

இமிக்ரேஷன் சோதனைகளின் போதும் பரபரப்பாகவே காணப்பட்டான்.

'உன் சகோதரி அபாய நிலையில் இருக்கிறாள். உடன் புறப்பட்டு வரவும்.
- தாயார் சரஸ்வதி அம்மாள்"

என்ற வாசகத்தைத் தாங்கிய தந்திக் கடிதத்தை விமான நிலைய அதிகாரிகளிடம் காண்பித்துக் கெஞ்சினான். பலன் கிடைத்தது.

'க்ரீன் சானல்' வழியாக விரைந்து வெளியே வந்து, சுழலும் பலகையில் வந்து கொண்டிருந்த தன்னுடைய கனமான தோல் பெட்டியை அடையாளம் பார்த்து எடுத்துக்கொண்டு, வேகமாக செக்கிங் கவுண்ட்டரை அணுகி, பாஸ் போர்ட் கிளியரன்ஸ் வாங்கிய பிறகு, வெளியே வந்து டாக்ஸி ஒன்றைப் பிடித்து ஏறி உட்கார்ந்து, அறுபது கி.மீ. வேகத்தில் விரைந்து ஐந்து மணி நேர பயணத்துக்குப் பிறகு கும்பகோணத்தை அடைந்தான்.

சாரங்கபாணி கீழ வீதியில் வந்து கார் நின்றது.

டாக்சிக்குப் பணம் கொடுத்து அனுப்பி விட்டு, தோளில் தொங்கிய பையுடனும், கையில் கனத்த பெட்டியை மெல்லத் தரையில் உருட்டியவாறும் வீட்டின் திண்ணையைச் சென்றடைந்து குனிந்து பார்த்த போது -

திடுக்கிட்டான்.

வாசல் கதவில் பூட்டு தொங்கியது.

சிங்கப்பூரிலிருந்து புறப்பட்டு வந்த பயணக் களைப்பு அப்படியே அவனை அடித்துப் போட்டாற்போல அசத்தியது.

நீளமான திண்ணையில் பெட்டியை சுவரோரமாக அணையுமாறு வைத்தபின், தோளில் தொங்கிய தோல் பையைத் தரையில் வைத்து அதில் தலையைச் சாய்த்துத் தூங்கத் தொடங்கினான்.

வீட்டிலிருந்த அம்மா எங்கே போயிருப்பாள்? சகோதரிக்கு உடல் நலம் அபாய நிலையில் இருப்பதாக அவன் அம்மா கொடுத்திருந்த தந்தியின் பொருள்தான் என்ன..? இந்திரா அவனுடைய அக்கா. லெட்சுமி அவன் தங்கை. இவர்களில் யாருடைய நிலைமை அபாயகரமாக உள்ளது..?

'சுள்'ளென்ற வெயில் உடம்பில் உறைக்கத் தொடங்கவே, துணுக்குற்றவனாகக் கண் விழித்த ரவி, மெதுவாக எழுந்து உட்கார்ந்து சுற்று முற்றும் பார்த்துவிட்டு, 'ஓ.. நாம் இப்ப கும்பகோணம் வந்துவிட்டோமா..?" என்கிற பிரக்ஞையோடு, மெல்ல எழுந்து, மீண்டும் ஒரு முறை வாசல் கதவில் தொங்கிய பூட்டை இழுத்துப் பார்த்தான்.

"யாருப்பா அது..?" என்ற வயதான மனிதரின் குரல் கேட்கவே மெல்லத் திரும்பிப் பார்த்தான் ரவி.

அவனையும் அறியாமல் அவன் கண்கள் அகல விரிந்தன.

மளிகைக் கடை சோமு தாத்தா.. இவனுடைய அப்பா கார்மேகத்தின் நண்பர்.

"சோமுத் தாத்தா..! நல்லா இருக்கீங்களா?"

அவனை அடையாளம் கண்டு கொண்டார் சோமு தாத்தா.

கார்மேகம் இறந்த நேரத்தில் குடும்பமே செய்வதறியாது பதறித்துடித்து அழத் தொடங்கிய நேரத்தில், "நான் ஒருத்தன் இருக்கிறேன். உங்களை

யெல்லாம் காப்பாத்துவேன்.." என்று உரத்த குரலில் சொன்னான் ரவி.

அப்போது. பக்கத்தில் நின்றிருந்த சோமுத் தாத்தா அவன் முதுகில் தட்டிக் கொடுத்தார்.

அவன் அப்பா கார்மேகம் அப்படி ஒன்றும் பெரிதாகச் சம்பாதித்து விடவில்லை.

காவேரிக் கரை ஓரம். பாலக்கரை பாலத்தின் பக்கம் தினமும் விடியற்காலை மூன்று மணிக்கெல்லாம் சுருட்டைப் பற்ற வைத்துக் கொண்டு போய் உட்கார்ந்து விடுவார்.

லாரிகளில், மாட்டு வண்டிகளில் டிராக்டர்களில் மலை மலையாக வந்து இறங்கும் காய்கறி மூட்டைகள், வாழை இலைக் கட்டுகள் எல்லாம் இவர் கண்ணில்பட்டு மனசுக்கு ஒரு கணக்கை உருவாக்கும்.

ஆமாம். இவர் ஒரு வகையான புரோக்கர்.

கொள்முதலுக்காக வெளியூர்களி லிருந்து மடியில் பணத்துடன் வந்து நிற்கும் வியாபாரிகளை அணுகி அவர்களின் தேவைகளை அறிந்து கொள்வார். பிறகு அந்த சரக்கை வைத்துக் கொண்டு நிற்கும் ஆசாமிகளை அணுகுவார்.

பிறகு என்ன..?

வாங்குபவரிடமும் விற்பவரிடமும் மாறி மாறிப் பேசி இருவருக்கும் இணக்கமான விலைக்கு விற்பனையை முடித்துக் கொடுப்பார்.

லாகவமாகப் பேசிக் காரியத்தை முடிப்பதில் கெட்டிக்காரர்.

சிறிது காலத்துக்கு முன்னர் பொற்றாமரைக் குளக்கரையில் பெட்டிக் கடை வைத்து தேங்காய், பூ, பழம், சூடம். குங்குமம், சாம்பிராணி வகையறா சாமான்களை விற்பனை செய்து வந்தார்.

ஒரு கட்டத்தில் அந்த வியாபாரம் நசிந்து போகவே. கடையை இழுத்து மூடிப் பூட்டி. வேறொரு நபரிடம் எனச்சியமாகப் பேசி ரொக்கமாக ஒரு தொகையை 'குட்'வில்'லாகப் பெற்றுக் கொண்டு ஒதுங்கியவர். பிறகு காவேரிக் கரையில் உட்கார்ந்து காய்கறி புரோக்கர் வேலையைச் செய்யத் தொடங்கினார்.

ஆக. முழங்காலைக் கட்டிக் கொண்டு வீட்டில் சும்மா உட்கார்ந்திருப்பது அவருக்குப் பிடிக்காத ஒன்று.

இரண்டு பெண்கள். ஒரு பையன். மனைவி சரஸ்வதி.

தன்னையும் சேர்த்து ஐந்து ஜீவன்களையும் மானத்தோடு காப்பாற்றி வளர்ப்பதற்காக அவர் கடுமையாகவே உழைத்தார்.

பசுமாடு எத்தனை நாளைக்குத் தான் பால் கொடுத்துக் கொண்டே இருக்கும்?

மரத்துப் போய் விட்டது.

கிழட்டு மாடு ஆனாலும் வீரியம் குறைந்து விடவில்லை.

முன்பு நாள் ஒன்றுக்கு நூறு அல்லது நூற்றி ஐம்பது ரூபாய் என்று சம்பாதித்துக் கொண்டு வீடு திரும்பியவர். இப்பொழுது தினமும் இருபது. முப்பது ரூபாய் மட்டுமே கொண்டு வருகிறார்.

பையன் ரவி கல்லூரியில் படித்து முடித்து. டைப்ரைட்டிங். கம்ப்யூட்டர் கோர்ஸ் எல்லாம் முடித்து. வெற்றிகரமாக நண்பர்களுடன் உலா வந்து கொண்டிருந்தான்.

மூத்த பெண் இந்திராவை உறவுக் காரப் பையன் கண்ணனுக்குப் பேசி முடித்து வெகு சிக்கனமாக சுவாமி மலைக் கோயிலில் வைத்துத் திருமணத்தை முடித்து விட்டார் கார்மேகம். மாப்பிள்ளைக்கு மளிகைக் கடையில் கணக்கு எழுதும் வேலை.

பிறகு....

அதிக நாள் அவரால் தாக்குப் பிடிக்க முடியவில்லை.

காவேரிக்கரை படித்துறையில் குளிப்பதற்கு இறங்கியபோது கால்தடுமாறிக் கீழே விழுந்தவர். பலமாக அடிபட்டுப் படுத்த படுக்கையானார். வைத்தியம் பலன் அளிக்காமல் சில நாள்களில் இறந்து போனார்.

அப்போது ரவிக்கு வயது இருபத்தி நான்கு.

எல்லாருமே கார்மேகத்தின் உடம்பில் விழுந்து கதறி அழுதபோது தான் ரவிக்கு வாழ்க்கையைப் பற்றிய முழுமையான ஞானோதயமே பிறந்தது.

அடுத்த சில நாள்களில், ஹிந்து பத்திரிகையில் சிங்கப்பூர் கம்பெனி யொன்று கொடுத்திருந்த விளம்பரத்தைப் பார்த்துவிட்டு அதற்கு விண்ணப்பம் அனுப்பினான். ஏற்கெனவே பாஸ் போர்ட்டும் வாங்கி வைத்திருந்தான்.

இண்டர்வியூவில் தேர்வு பெற்று. மாதச் சம்பளம் ரூபாய் இருபத்தி ஐயாயிரம் என்று நிர்ணயிக்கப்பட்டு. விமானத்தில் ஏறியபோது மனத்துக்குள் திட்டமிட்டுக் கொண்டான்.. 'வீட்டில் கல்யாணத்துக் காகக் காத்திருக்கும் தங்கை லெட்சுமியின் திருமணத்தைச் சிறப்பாக நடத்தி முடித்து விட்டு, வீட்டின் பேரில் உள்ள கடன் முழுவதையும் கொடுத்து முடித்த பிறகுதான் ஊர் திரும்ப வேண்டும்.'

அவன் எண்ணியிருந்தவை யாவும் முடிந்தன.

லெட்சுமியை. கோயமுத்தூரில் எஞ்சினீயராக வேலை பார்க்கும் நல்ல பையன் ஒருவனுக்குத் திருமணம் செய்து கொடுத்தாயிற்று.

தொடர்ந்து ரவி அனுப்பிய பணத்தில் வட்டியும் அசலுமாகக் கொடுத்து வீட்டை முழுமையாக மீட்டு விட்டாள் சரஸ்வதி.

இப்போது ரவிக்கு வயது இருபத்தெட்டு.

அவனுக்கும் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆசை வந்து விட்டது.

இருந்தாலும் அம்மா முடிவு செய்து தன்னை அழைக்கட்டும் என்று சிங்கப்பூரிலேயே காத்திருந்தான்.

காத்திருந்த அவனுக்கு வயிற்றைக் கலக்கும் வகையில் தந்திச் செய்திதான் கிடைத்தது.

லீவு எடுத்துக் கொண்டு, விமானத்தில் ஏறிப் பறந்தோடி வந்தான் கும்பகோணத்துக்கு.

"என்னப்பா ரவி... பதில் கூடச் சொல்லாமே மௌனமா நிக்கிறே..? சிங்கப்பூர்லேயிருந்து எப்ப வந்தே..? சவுக்கியமா இருக்கியா..? நல்லா சம்பாதிக்கிறியா.. ஏன்இன்னும் கல்யாணம் பண்ணிக்காமே இருக்கிறே..? வயசுதான் ஆயிட்டுதேப்பா.." சோமுத் தாத்தா ரோட்டில் நின்றவாறு பேசிக் கொண்டே போனார்.

"அதெல்லாம் இருக்கட்டும். வீடு ஏன் பூட்டியிருக்கு.. என் அம்மா எங்கே..?" என்று கேட்டான் அவரிடம்.

"என்னப்பா இது.. இதைத் தெரிஞ்சுக்காமலா ப்ளேன்ல பறந்து இங்கே வந்தே? உன்னோட அக்கா இந்திராவுக்கு உடம்பு சரியில்லை.. ரொம்ப ஆபத்தான நிலைமை.. என்ன வியாதின்னு தெரியலைப்பா.. கவர் மெண்ட் ஆஸ்பத்திரியிலேதான் சேர்த்

திருக்காங்க. கோயமுத்தூரிலேயிருந்து உன் தங்கச்சி லெட்சுமி கூட தன் புருஷனோடு வந்து ஒரு தடவை பார்த்துட்டுப் போனா.. உனக்கு.. உன் அக்கா இந்திரா மேலே ரொம்பப் பிரியம்னு எனக்குத் தெரியும். மாசம் தவறாமே.. அவளுக்குப் பணம் கூட அனுப்புவியாமே.. ஒரு தடவை... இங்கேதான்.. வீட்டிலே சந்திச்சப்ப.. ரொம்பப் பெருமையா சொன்னா.. ஹூம்.. என்ன பண்றது..? இப்ப உன் அம்மா சரஸ்வதி மட்டும்தான் ஆஸ்பத்திரியிலே உட்கார்ந்திருக்கிறான்னு நெனைக்கிறேன்.. இரண்டு நாளைக்கு முன்னால போய்ப் பார்த்தேன்.. அது என்ன மர்மமோ.. இந்திராவுக்கு என்ன வியாதின்னு கண்டு புடிக்க முடியாமே.. டாக்டர்கள் திணறுறாங்க.. அதுதான் எனக்கு ஆச்சரியமா இருக்கு. நான் வர்றேம்ப்பா..”

சோமு தாத்தா போய் விட்டார்.

கொண்டு வந்திருந்த பெட்டிகளையெல்லாம் பக்கத்து வீட்டினுள் கொண்டு போய் வைத்துவிட்டு. ஆட்டோ ஒன்றைப் பிடித்து அவசரமாக மருத்துவ மனைக்குப் போய்ச் சேர்ந்தான் ரவி.

அங்கே -

உருக்குலைந்த நிலையில் இந்திரா கிழிந்த நாராகப் படுக்கையில் படுத்துக் .ந்தாள்.

அவள் எவ்வளவு அழகாகத் தளதளப்புடன் இருப்பாள்..? அவளா இப்படி உருக்குலைந்து....?

இவனைப் பார்த்ததும் லெட்சுமியும் அவள் அம்மா சரஸ்வதியும் அழுதார்கள்.

காலையில்தான் கோயமுத்தூரிலிருந்து லெட்சுமி வந்திருந்தாள். சரஸ்வதி அவளுக்குத் தந்தி கொடுத்திருந்தாள்.

இந்திராவால் அசைய முடியவில்லை.

படுத்திருந்த நிலையிலேயே கண்ணீர் வடித்தாள்.

சற்றுத் தள்ளி இந்திராவின் கணவன் கண்ணனும் தனது இரண்டு குழந்தைகளையும் இரண்டு கைகளில் பிடித்து அணைத்தவாறு சோகமே உருவாக நின்று கொண்டிருந்தான். அவனுக்குப் பக்கத்தில் கறுப்பு நிறத்தில், ஆனால் களையான முகத் தோற்றத்தில் ஒரு பெண் நின்றிருந்தாள். அவளை முன்னரே ரவி பார்த்திருக்கிறான். ஏனோ.. ‘சட்’டென்று நினைவுக்கு வரவில்லை.

என்ன நினைத்தானோ..?

விறு விறு வென்று நடந்து சென்று, மருத்துவ மனையின் சி.எம்.ஓ.வைப் பார்த்துப் பேசினான். அவர் உடனே இந்திராவுக்கு சிகிச்சை அளித்து வரும் டாக்டரைத் தன் அறைக்கு வரவழைத்துப் பேசினார்.

“சார்.. அந்தப் பொண்ணு இந்திராவுக்கு. வந்து.. வந்து..”

டாக்டரின் தயக்கத்தைப் பார்த்து மலைத்துத் திகைத்துப் போனான் ரவி.

“சார்.. தயவு செய்து உண்மையைச் சொல்லுங்க..” என்றவாறே உட்கார்ந்திருந்த நாற்காலியின் விளிம்புக்கு நகர்ந்து வந்தான்.

“ஐ ஆம் வெரி ஸாரி.. அந்தம்மாவுக்குப் புற்று நோய்.. கிட்டத்தட்ட ஒரு வருஷமாகவே இருந்திருக்கு. அதுவும் கர்ப்பப் பையிலே.. இப்ப ஆபரேஷன் மூலம் அதை வெட்டி அகற்றிட்டோம். அதன்பிறகு.. அதுதான் கொடுமை.. அங்கே மறுபடியும் கட்டி வளருது.. இன்னோர் ஆபரேஷன் பண்றது கஷ்டம். ரிஸ்க். வேறே சில பாதிப்புகளும் அவங்களுக்கு ஏற்பட்டுப்போச்சு. அவங்களைப் பிழைக்க வைக்கிறதுக்கு நானும் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்துட்டேன். வேறே.. சீனியர் டாக்டர்களையும் கூட தஞ்சாவூர்லேயிருந்து வரச்சொல்லிப் பார்க்கச் சொன்னேன்..”



டாக்டர் பேசிக்கொண்டே போனார்.

அவசரமாகக் குறுக்கிட்ட ரவி அவர் கைகளைப் பற்றிக் கொண்டு. "சார்.. வேறே எந்த ஊருக்கு வேணும்னாலும் கொண்டு போய் சிகிச்சை பண்ணுங்க. பணம் எவ்வளவு செலவானாலும் கவலை இல்லை. எப்படியாவது என் அக்காவைப் பிழைக்க வையுங்க.."

அவனுடைய துடிப்பு டாக்டரின் நெஞ்சிலும் சற்றே கழிவிரக்கத்தை ஏற்படுத்தியது.

அவர் சி.எம்.ஓ.வைப் பார்த்தார்.

பிறகு இருவரும் ஒரே குரலில் சொன்னார்கள். "மிஸ்டர் ரவி.. இட் ஈஸ் டு லேட்"

பிறகு....?

இன்றைக்கோ நாளைக்கோ என்ற நிலைக்கு இந்திராவின் உடல் நிலை வந்துவிட்டது.

தந்தி கொடுத்து கோயமுத்தூரிலிருந்து லெட்சுமியின் கணவரையும் வர வழைத்தாள் சரஸ்வதி.

"அக்கா.. அக்கா.. உனக்கு என்ன வேணும் சொல்லு. நீ என்ன சொன்னாலும் செய்யறேன். உனக்காக என் உயிரைப் பணயம் வைக்கவும் தயாரா இருக்கேன். சொல்லுக்கா.. சொல்லு.." - அவளைப் பிடித்து உலுக்கினான் ரவி.

மறுபடியும் இந்திராவின் கண்களில் கண்ணீர் பெருகி வழிந்து ஓடியது.

கண்ணீரைத் துடைத்து விட்டான். இந்திராவின் வாயிலிருந்து வரப்போகும் வார்த்தைகளையே பார்த்தவாறு மிக மிக அருகில் போய் நின்று குனிந்து அவளைப் பரிவுடனும் பாசத்துடனும் பார்த்தான் ரவி.

அவனையுமறியாமல் அவன் கண்கள் கண்ணீரைப் பொழிந்தன.

தயக்கத்தோடு அப்பாவிகளாய். சற்றுத் தள்ளி நின்று கொண்டிருந்த தன் கணவனையும். பயம் நெஞ்சில் புகையாய்க் கப்பிக் கொள்ள. திகைப்பு கொப்பளிக்கும் விழிகளை இமைக்கவும் மறந்து. அச்சத்தோடு நின்றிருந்த தன்னுடைய குழந்தைகள் இருவரையும் அருகில் வருமாறு அழைத்தாள் இந்திரா.

அந்தக் குழந்தைகளின் பிஞ்சுக் கைகளை மெல்ல வருடித் தன் நெஞ்சில் அழுத்திப் பதிய வைத்துத் தட்டிக் கொடுத்தாள்.

"அக்கா.. அக்கா. இந்தக் குழந்தைகளை என் கண்களைப் போலக் காத்து வளர்த்து. படிக்க வைச்சு. ஆளாக்கி.."

- ரவி முடிக்கவில்லை.

ஈனஸ்வரத்தில் இந்திரா பேசத் தொடங்கினாள்: "எல்லாம் நீ செய்வே.. எனக்கு நம்பிக்கை இருக்கு. ஆனா.. ஆனா.. நான் சொல்றபடி நீ கல்யாணம் பண்ணிக்கணும். அப்பத் தான் இந்தக் குழந்தைகளைக் கண்கலங்காமே உன்னால வளர்க்க முடியும்.."

சற்றுத் தயங்கியவன் பிறகு நிதானித்து பேசினான்: "எல்லாம் சரிக்கா.. எனக்கு வரப் போறவ எப்படி இருப்பாளோ.. நான்.. நான் கல்யாணமே பண்ணிக்காம இருந்துட்டா.."

அவன் அம்மா சரஸ்வதி தன் மகனைப் பரிதாபமாகப் பார்த்தாள்.

இந்திராவின் கணவன் அருகில் வந்தான் "இந்திரா.. இந்திரா.. நான்.. நான் எப்படியும் குழந்தைகளைப் பார்த்துக்குவேன். என் மேலே நம்பிக்கை இல்லைன்னாலும். என் தங்கச்சி மேலே உனக்குக் கட்டாயம் நம்பிக்கை இருக்கும்.."

இப்பொழுது இந்திராவின் கண்களில் அதீத ஒளி.

"ஆமாம்.. ஆமாம்.. உங்க தங்கச்சி மேலே நம்பிக்கை இருக்கு.. கட்டாயம் அவள் என் புள்ளைங்களைப் பார்த்துக்குவா. நான்.. இதுங்களைப் பெற்றேனே தவிர. தினமும் குளிப்பாட்டி. துணி துவைச்சு. மலம் அள்ளி.. உயிருக்கு உயிராக நேசிச்சு வளர்த்ததெல்லாம் அவ.... அவதான்.."

நிசப்தம். யாரும் பேசவில்லை.

தொடர்ந்து இந்திராவே பேசினாள்: "அவ உங்க தங்கச்சி ருக்மணி எங்கே..? அவ எங்கே?"

கறுத்த உருவம். அகன்ற களையான முகம். படிக்காதவள் என்பதைப் பறைசாற்றும் கண்கள். முன்றானையை இழுத்து விட்டுக் கொண்டு தயங்கித் தயங்கி நடந்து இந்திராவின் அருகில் வந்தாள் அவள்.. ருக்மணி.

குழந்தைகளின் கைகளைப் பிடித்து ருக்மணியின் கைகளோடு இணைத்தாள் இந்திரா.

மேல் மூச்சு கீழ் முச்சு வாங்கத் தொடங்கியது.

ஏற்கெனவே இணைப்பு கொடுக்கப் பட்டிருந்த ஆக்ஸிஜன் சிலிண்டர் கூடப் பயனற்றுப் போய்விடுமோ என்கிற கொடூரமான நிலைமை.

"அக்கா.. அக்கா. இந்த ருக்மணியை நான் கல்யாணம் பண்ணிக்கிறேன்.." என்று சொல்லிவிட்டுச் 'சட்'டென்று விரைந்து ருக்மணியின் கரங்களைப் பற்றினான் ரவி.

அதைப் பார்த்துத் தலையாட்டிய வாறே நிம்மதியாகக் கண்களை மூடினாள் இந்திரா

✤✤

---

**க. விசாலாட்சி**




என்னை ஏனிவ் வுலகத்தில்
இயற்கை அன்னை ஈன்றிட்டாள்?
தென்னங் கீற்றில் ஊசலிடும்
செல்லக்கிள்ளை போலொருகால்
வன்னக் கூத்து செய்யுமுளம் - பின்
வாடிச் சோர்ந்து மூலையிலே
முன்னை வினையை நினைத்தபடி
முனகிக்கலங்கல் ஏனென்றேன்.
என்ன சொல்வேன் எதைச் சொல்வேன்
இதயம் தீயாய் வேகுகையில்?
சின்னப் புழுவாய்ச் சீநாயாய்
சிந்தையில்லாப் பறவைகளாய்
வண்ணப் பூவாய் வளர்மரமாய்
வகையாய் நிலவும் செடிகொடியாய்
என்னைப் படைக்காதே னிந்த
ஈசன் அறிவோடனுப்பிவிட்டான்?

☆●☆

# அன்னையே ஓர் ஐயம்..!

குலோத்துங்கன்

இயற்கை அன்னையே!
தன்னையும் வருத்தி, தாழாது உழைத்து
உன்னையும் வருத்தினால் தானே உதவுகிறாய்
இதுஉன் குணமா அல்லது கொள்கையா?

பாய்போல் விரிந்தும், படர்ந்தும், இருக்கும்
தாய் நின்னுடைத் தங்க மேனியை
மேழி கொண்டு கீறினால் தானே
விளைநில மாகிறாய்?
நடுங்கும் வரையும் நனைத்தால் தானே
நன்செய் ஆகிறாய்?

ஊற்று நீரை ஒளித்துவைத் திருக்கிறாய்
தோற்றுதல் என்னவோ தோண்டினால் தானே?
ஆற்றல்சேர் நிலக்கரி: அணிசெய் தங்கம்
இவற்றை
எட்டுதற் கியலா இடத்தில் அல்லவா
இருப்பு வைத்து இருக்கிறாய்: உனை
வெட்டு பவர்க்கே வேண்டுவ தருகிறாய்

அணுவினால் உலகை ஆக்கினாய்: அஃதெம்
கையிலா கிடைக்கிறது? கண்ணுக்கா தெரிகிறது?
அளப்பதற்கிலா ஆற்றலை அணுவுள் வைத்தாய்
பிளப்பவர் தானே பெறலாம் என்கிறாய்
அன்னையே,
இதுஉன் குணமா அல்லது கொள்கையா?

இயற்கை அன்னையே!
தன்னையும் வருத்தித் தாழாது உழைத்து
உன்னையும் வருத்தினால் தானே உதவுகிறாய்
இதுஉன் குணமா அல்லது கொள்கையா?

# ஆசிய இலக்கிய மரபில் குடும்பம், தனிநபர், உலகம்

நீல பத்மநாபன்

விலங்குகளிலிருந்து மனித குலத்தை வேறுபடுத்தும் பண்பாடு, நாகரிகம் போன்றவற்றிற்கெல்லாம் காரணமாக அமைந்தவற்றில் குடும்பம் என்ற அமைப்பு முக்கியமானது. ஆதியில் முதல் ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழத்தொடங்கிய நாளிலிருந்தே குடும்பம் அமைந்துவிட்டது என்று சொல்லலாமென்றாலும் காட்டுமிராண்டிகளாய், நாடோடிகளாய் நிலையற்று அவர்கள் அலைந்து "கொண்டோடி" – நாடோடி வாழ்க்கை (Nomadic Life) நடத்திக் கொண்டிருக்கையில் இந்தக் குடும்ப வாழ்க்கை சாத்தியப்பட்டிருக்குமா என்ற ஐயம் எழலாம். ஆனால் துஷ்டவிலங்குகள், இயற்கையின் சீற்றங்கள் போன்றவற்றிலிருந்து தம்மைச் சுயம் பாதுகாத்துக்கொள்ள, சொந்த அனுபவங்களிலிருந்து கூடிவாழும் முறையை அவர்கள் தேர்ந்தெடுத்துக் கொண்டிருக்கவேண்டும். ஆக, குடும்பம் என்ற அமைப்பு, தம் வசதிக்காக, இருத்தலுக்காக (Existence) அவர்கள் சுயம்வரித்துக் கொண்ட ஒன்று. பரஸ்பர உதவி, வயிறு வளர்க்க (பசியாற்ற) வேலை செய்ய இயலாத குழந்தைகள், வயோதிகர்கள், நோயாளிகள் போன்றவர்களின் பராமரிப்பு, இத்யாதி எத்தனையோ விஷயங்களுக்கு, மனிதகுலத்தின் இத்தனை கோடி ஆண்டுகளின் வளர்ச்சியிலும் இக்குடும்ப வாழ்வு முறை அறுபடாமல் தொடர்ந்து நீடித்து வருகிறதென்றால், இதைவிட வசதியான இன்னொன்றை மனித இனத்தால் இன்றுவரை கண்டுபிடிக்க முடியவில்லை என்பதால் தான் என்று தோன்றுகிறது.

குடும்பம் என்றால் வீடு என்று மட்டுமே பொருள் கொள்ள முடியுமென்று தோன்றவில்லை. ஒரு வீடுதான் ஒரு குடும்பம் என்று முடிவு செய்ய முடியுமா? நம் நாட்டில் ஒரே கூரையின் கீழ் தங்கியிருந்தவர்கள் பொருளாதார வசதி, அபிப்பிராய வேறுபாடுகள், அவரவர் சரீர, மானசீக தனிப்பட்ட வசதிகள், கட்டாயங்கள் இப்படி பல்வேறு காரணங்களால் வெவ்வேறு தனிக்கூரைகளின் கீழ் அன்றாட அலுவல்களுக்காக (routine affairs) விலகி வாழ்வதை வைத்துக்கொண்டு கூட்டுக் குடும்பம் (Joint family) சிதிலமாகி, தனிக்குடும்பம் (Nuclear family) ஆகிவிட்டது என்ற முடிவுக்கு வருவது வீடு – குடும்பம் இவ்விரண்டையும் ஒன்றாய்க் காண்பதால் தான் என்று தோன்றுகிறது. ஒரே வீட்டில் வாழ்ந்தாலும் குளியல், கூடல் போன்ற சரீரத்தேவைகளுக்கு (Biological necessities) தனி அறைகளை நாடுவதைப் போன்றே, ஊண், உறக்கம், உறவு போன்ற பல்வேறு அடிப்படை அன்றாடத் தேவைகளின் பொருட்டு பல்வேறு கூரைகளின் கீழ்வாழ்ந்தாலும் குடும்பத்தின் முக்கிய நிகழ்வுகள், ஆலோசனைகள், தீர்மானங்கள், முடிவுகள் ஆகியவை எல்லாம் இவர்கள் பரஸ்பரம் தொடர்பு கொண்டு ஒன்று சேர்ந்தே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதால்தான் வெவ்வேறு வீடுகளில் வாழ்ந்தாலும் கூட்டுக் குடும்பமாகவே இவர்கள் இயங்கி வருகிறார்கள் என்று சொல்ல வேண்டி வருகிறது.

கணவன், மனைவி, குழந்தைகள் வாழும் இந்தியத் தனிக்குடும்பங்களில் கூட, இன்று கணவன் மட்டும் ஓரிடத்தில், மனைவிமட்டும் இன்னோர் இடத்தில், குழந்தைகள் மூன்றாவது ஓர் இடத்தில், (இந்த இடங்களில் ஒன்றோ இரண்டோ வெளிநாடாகவும் இருக்கலாம்) இப்படி வேலை, படிப்பு முதலியவை காரணமாக வாழ்ந்து கொண்டிருப்பதையும் இங்கே நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

தாயும் பிள்ளையுமானாலும் வாயும் வயிறும் வேறு என்ற தமிழ்ப் பழமொழியில், மனத்தையும் கூடச் சேர்த்துக் கொள்ளலாம் என்று தோன்றுகிறது. ஒரே குடும்பத்தில் உள்ள அங்கத்தினர்களாக இருந்தாலும் ஆளுக்கு ஆள் அபிப்பிராயங்கள் வேறுபடுகின்றன, விருப்பு வெறுப்புகள் வேறுபடுகின்றன. இதனால் மோதல்கள் (Clashes) ஏற்படுவதில் வியப்பில்லை. கணவன் – மனைவிக் கிடையில், பெற்றோர் – பிள்ளைகளின் இடையில், சகோதரர்களின் இடையில், சகோதரிகளின் இடையில், இப்படி. இப்படி எல்லா உறவு முறைகளின் இடையிலும் இந்த போட்டாபோட்டி அவரவர் நியாயம் அவரவர்களுக்கு, அவரவர் பிடிவாதம் அவரவர்களுக்கு. ஆளுக்குத் தகுந்தவாறு நியாயங்கள் மாறுபடும் காலமிது. உடன்பாடு (Consensus) என்பது எப்போதும் எல்லா விஷயங்களிலும் எல்லா நபர்களுக்கிடையிலும் சாத்தியமில்லை என்று வந்ததனால்தானே குடும்பக் கோர்ட்கள், ஆலோசனைகள் (Counselling) போன்றவற்றை அமைக்க வேண்டிய நிர்ப்பந்தம். ஆனால் சட்டத்தால் வழங்கப்படும் தீர்ப்புகளை எல்லா விஷயங்களிலும் மானசீகமாய் சுவீகரித்துக் கொள்ள இயலுவதில்லை. இங்கேதான் சமயத்தின் (Religion) துணை நாடவேண்டி வருகிறது. பதி – பத்தினி, தாய் – தந்தை பிள்ளைகள், சகோதர சகோதரிகள், இத்யாதியானவர்களின் பொதுவான தர்மங்கள், கடமைகள் கடவுளின் மானிட அவதாரக் காதைகளிலிருந்தும், கர்ணபரம்பரைப் புராதன கதைகள், நீதி நூல்களிலிருந்தும் கேட்டு வளரும் இந்நாட்டுப் பிரஜைகள் அபிப்பிராய மோதல்கள் வரும்போது, ஓரளவுக்

காவது சக குடும்ப அங்கத்தினர்கள் கூட பொருந்திப்போக – Compromise/ Harmonize செய்துகொள்ள – இந்த புராதன, சமயப் பாரம்பரியம் கணிசமாக உதவி புரிகிறது. யுக்திவாதம், பகுத்தறிவுவாதம், நாத்திகவாதம் தலையெடுக்கத் தலையெடுக்கத்தான் குடும்பங்களுக்குள் மோதல்கள் ஏறுமுகமாகிவிட்டதாய் வாதிடுகிறவர்கள், தம் வாதத்திற்கு வலுத்தேட மேலே குறிப்பிடப்பட்ட கருத்தைத்தான் ஆதார மாக்குகிறார்கள்.

சீனா, ஜப்பான் போன்ற நாடுகள் உட்பட்ட ஆசிய இலக்கியத்தின் பொதுவான சில கோட்பாடுகள், இந்தியாவிலேயே பல்வேறு மொழிகளில் படைக்கப்படும் இலக்கிய வகைகள் – வங்கமொழியில் தாகூர், பங்கிம் சந்திர சாட்டர்ஜி, சரத்சந்திரர், கன்னடமொழியில் எம்.எஸ். புட்டண்ணா, மராத்தியில் காண்டேகர், இந்தியில் பிரேம்சந்த், ஒரியமொழியில் காளிச்சந்திர பாணிக்கிரகி, மலையாளத்தில் தகழி, கேசவதேவ் ஆகியவர்களின் படைப்புகளையெல்லாம் மீறி, நானும் என்னளவில் இயங்கிக் கொண்டிருக்கும் இன்றைய தமிழ்மொழி இலக்கியம் சம்பந்தப்பட்டவரை, குறிப்பாக சில மாதிரிப் படைப்புகளின் அடிப்படையில் தனிநபர், குடும்பம், வெளியுலகம் ஆகியவற்றின் மரபுவழி சிந்தனை ஒருமைப்பாடு, வேறுபாடுகளைப் பார்ப்பது மட்டுமே இங்கே உத்தேசம்.

தமிழில் இன்று எழுதப்படும் இலக்கியப் படைப்புகளில், கவிதை தவிர்த்து, கதை இலக்கியத்தில் (Fiction) பெரு வாரியானவையும் குடும்பத்தை அச்சாணியாக்கிச் சுழல்கின்றவையே; குடும்பத்தினரின் உறவுச்சிக்கல்கள் சம்பந்தப்பட்டவையே. முதல் பாவலரின் தமிழ் மறை எனத் தமிழர்கள் கொண்டாடும் திருவள்ளுவரின் திருக்குறளில் (திருவள்ளுவர் வாழ்ந்தது கிறிஸ்துவுக்கு முன் 4ஆம் நூற்றாண்டு என்பதிலிருந்து கிறிஸ்துக்குப் பின் ஆறாவது நூற்றாண்டு என்பது வரையுள்ள மாறுபட்ட அபிப்பிராயங்கள் உண்டு.) இல்லறவியலுக்குத் தந்திருக்கும் முக்கியத்துவம் உதாசீனப்படுத்தக் கூடியதன்று. இல்வாழ்க்கையைப்பற்றி வள்ளுவர் கூறுகிறார்:

*இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்*
*நல்லாற்றின் நின்ற துணை*

இல்லறத்தான் அறவழியில் உள்ள ஏனைய மூவர்க்கும் –அதாவது பிரம்மசாரி, வானப்பிரஸ்தன், துறவி ஆகிய மூவருக்கும் உதவி செய்ய வேண்டும்.

கிரேக்கத் தத்துவமேதை பிளேட்டோ 'நாட்டை ஆளுகிறவர்களுக்குக் குடும்பமே கூடாது' என்று தன் 'ரிபப்ளிக்' (Republic) நூலில் சொன்னது, குடிமக்களை உத்தேசித்தல்லவே! மன்னன் எவ்வழி மக்கள் அவ்வழி என்பது மேற்கண்ட கூற்றுக்குப் பாதகமாகவும் தேவை யில்லைதான். அவ்வையார் (பத்தாவது நூற்றாண்டு) குடி உயரக் கோன் உயரும் என்றுதானே சொல்லியிருக்கிறார்?

தமிழில் முதல் மூன்று நாவல்கள் என்று அழைக்கப்படும் மாயூரம் வேதநாயகம் பிள்ளையின் பிரதாப முதலியார் சரித்திரம் (1879), ராஜம் ஐயரின் கமலாம்பாள் சரித்திரம் (1896), மாதவய்யாவின் பத்மாவதி சரித்திரம் (1898) ஆசியவற்றில் தொடங்கி இன்று வரை வெளி உலகின் மாற்றத்திற்குத் தகுந்த மாதிரி மாறிக்கொண்டிருக்கும் குடும்ப உறவுகள் தனி மனிதர்களிடம் ஏற்படுத்தும் பாதிப்புகளை பல்வேறு பாணிகளில் தமிழ் நாவல்களில் கலைவடிவம் கொடுக்க முயன்று கொண்டிருக்கின்றன. இவை அனைத்தையும் பட்டியலிட்டு, ஒரு பொது, பறவைப்பார்வை (Bird's eye view) பார்ப்பதைவிட, மாதிரிக்கு ஆறு நாவல்களை சற்று நெருங்கிப் பார்ப்பது அதிகப் பயனை அளிக்கக்கூடும்.

## நாகம்மாள் (1942)

1940 ஆம் ஆண்டு வாக்கில் வெளியான ஷண்முகசுந்தரத்தின் நாகம்மாள் நாவலின் மையப் பாத்திரம். நாகம்மாள் ஓர் இளம் விதவை. அரை நூற்றாண்டுக்கு முந்தைய கட்டுப்பாடான சமூகச்சூழல், அவள் வாழ்ந்து கொண்டிருந்த நாகரிகத்தின் நிழலே படிந்திராத சிவியார் பாளையம் குக்கிராமம், பழைமையில் ஊறித்திளைத்த கிராமத்து மனிதர்கள், வாணம் வெடித்து இறந்து போகும் முன் அவள் கணவன் அவளுக்கு அளித்த ஒரே பெண்குழந்தை முத்தாயாள். முத்தாயாளைத் தம் குழந்தையாகவே கருதி அன்பு காட்டும் சின்னப்பன் (நாகம்மாளின் கணவனின் ஒரே தம்பி) சின்னப்பனின் மனைவி ராமாய் குடும்பத்தின் கூட உள்ள வாழ்க்கை, பொருளாதாரத் தேவைகளைப் பூர்த்தி செய்ய, கணவன் விட்டுச் சென்ற விளைநிலம் இங்ஙனமெல்லாம் இருந்தும் நடத்தை கெட்ட முரடன் கெட்டியப்பன் மீது நாகம்மாளின் பரிவு, நெருக்கம், ஈடுபாடு. அவன் தீய குணங்களுக்குப் பலியான நாகம்மாள், குடும்பத்தின் சிதைவுக்கே காரணமாகி விடுகிறாள். சதாசார உணர்வு என்ற லட்சிய போதம் (idealism) இயல்புக்கு அதீதமான ஒன்றை, குடும்பப் பாரம்பரியத்தின் பெயரில் பாத்திரத்திடம் நாவலாசிரியர் வலுக்கட்டாயமாகத் திணிக்கவில்லை என்பதுதான், இந்நாவலை அக்கால கட்டத்தில் வெளியான ஏனைய நாவல்களிலிருந்து விலக்கி நிறுத்தும் தனித்தன்மை. குடும்பத்தின் நான்கு சுவருக்குள் வாழ்ந்திருந்தும் அத் தனிநபர் பழைமை ஆசாரத்தில் ஊறி வாழும் இளம் விதவையாக இருந்தும் வெளி உலகில் வீசும் மாற்றத்தின் காற்றிலிருந்து முழுக்க முழுக்க விடுவித்துக் கொள்ள இயலாமல் போய்விடுகிறது. இதன் காரண காரியங்கள், நியாய அநியாயங்களை இங்கே விசாரணை செய்வது (Value Judgement) இலக்கியத்திற்குப் புறம்பானது.

## பொய்த்தேவு (1946)

தமிழகத்தின் சிற்றூர் ஒன்றில் சாத்தனூரில் வாழ்ந்த மகளின் அன்றாட வாழ்க்கைப் பிரச்னைகள், ஆசார அனுஷ்டானங்கள், ஆசை நிராசைகள் என்று யதார்த்தமாய்

இதழ் விரிக்கும் க.நா. சுப்ரமணியத்தின் இந்நாவல் இன்னோர் ஆன்மிகப் பரிணாமத்திலும் சூசகமாய்த் தொனி செய்கிறது. வறுமையின் பிடியில் உழன்ற சோமுவின் இலட்சிய முனைப்பு, அறிவு, விடாமுயற்சியில் தீவிரமாகி சோமு முதலியார் என்ற செல்வனாகி, சிற்றின்ப வாழ்வில் திளைத்தும் பின் விரக்தியில் யாவற்றையும் துறந்து பண்டாரமாகி இயற்கை எய்தியதும் ஆதியோடந்தமான ஒரு முப்பரிமாணப் பார்வையுடன் இங்கே எடுத்தாளப் பட்டிருக்கிறது. வேண்டுமென்றே குடும்பவாழ்வை இவர் புறக்கணிக்கிறார். சாத்தனூர் சர்வமானிய அக்கிரகாரத்தில் வாழும் அந்தணரிலிருந்து, கீழவீதி பிள்ளைமார், நாட்டுக்கோட்டைச் செட்டியார், தெற்கு வீதி மேலவீதி நெசவாளர்கள், குடியானவர்கள், வடக்கு வீதிக் கடைகள், மேட்டுத்தெரு ஜந்துகள், சேணியர் தெரு முஸ்லிம்கள், திருவையாறு செல்லும் மண்ரஸ்தா பரியாரிகள், வண்ணார்கள், சுடுகாடு, குறச்சேரி, மாரியம்மன் கோயில், பாழடைந்த பெருமாள் கோயில், காவேரி ஆறு, நெல்வயல்கள் இப்படி வெளியுலகமும் நாவலின் வளர்ச்சியின் கூட க.நா.சுவின் முதிர்ச்சியான பார்வையில் நம்முன் விரிந்து வருகிறது

தெய்வத்திற்கென்று ஏற்பட்ட பீடத்தில் வியாபாரம் என்கிற ஆணையும் பணம் என்கிற பெண்ணையும் அர்த்த நாரீசுவரத் தெய்வமாக ஏற்றிவைத்து இவ்வளவு நாள்களாக பூஜித்து வந்தார் சோமசுந்தர முதலியார் பணத்தாலும் வியாபாரத்தாலும் ஏற்படக்கூடிய, கிடைக்கக்கூடிய பலாபலன்களைச் சில்லறைத் தெய்வமாகப் போற்றி வந்தார். சோமு முதலியார் மட்டுமின்றி, ஏனைய பாத்திரங்களும், மனிதன் தன் லட்சியங்களை யெல்லாம் தெய்வங்களாக்கி ஆராதனை செய்து – இந்தப் பொய்த் தெய்வ வழிபாட்டை மேற்கொண்டுஏமாற்றமடைவதை வாழ்ந்து காட்டுகின்றன. 'பணம் என்பது வாழ்க்கையில் முக்கியமான தெய்வங்களில் ஒன்று' என்று ரங்காச்சாரியார் ஒப்புக் கொள்கிறார். சமூகத்தில் வாழும் ஏனைய மனிதர்களின் கூட உள்ள நடுநாயகப் பாத்திரம் சோமசுந்தரத்தின் தொடர்பும் விலகலும் எல்லாம் அவரை முழு மனிதனாக எப்படி உருவாக்குகிறது என்பதையும் பார்க்கிறோம். குறிப்பாக ரங்கராவ், சாம்பமூர்த்தி, சாமா, கறுப்பமுதலி, வள்ளியம்மை, ரங்கராயர், பிச்சாண்டி, கோவிந்தப்பிள்ளை, பாப்பாத்தி, கோமளவல்லி. இத்யாதி பாத்திரங்கள்.

### மோகமுள் (1964)

தி. ஜானகிராமனின் 'மோகமுள்' நாவலில் தனிநபர் சமூகத்து சக மனிதர்களிடம் ஏற்படுத்திக் கொள்ளும் உறவுகளின் விசித்திரங்கள் கலைநயத்துடன் வெளிப் படுகின்றன. தாய் – தந்தை அடங்கிய குடும்பத்திலிருந்து வெளியில் வரும் இளைஞனின் பருவத்துடிப்பு மோகத்தின் முள்ளாக உறுத்துவதைப் பார்க்கிறோம். குடும்பப்பாசத்தை இந்த மோகத்தின் அழைப்பு மீறிச்செய்கிறது. 'இதுக்குத் தானே' என்று கடைசியில் பாபுவை விடப் பத்து வயசுக்கு முதிர்ந்த, வேற்று சாதியைச் சேர்ந்த அவன் திருமணம் செய்ய விரும்பும் காதலி யமுனா கேட்கும் கேள்வியும்,

'இதுக்குத்தான்' என்று அவளே சொல்லும் பதிலிலும் நாவலாசிரியரின் மரபை விட்டு விலகாத போக்கு வெளிப்படுகிறது.

## புத்தம்வீடு (1964)

ஹெப்ஸிபா ஜேசுதாசனின் 'புத்தம்வீடு' நாவல் ஒரே சாதியிலேயே, செய்யும் தொழிலை வைத்துக்கொண்டு 'பனையேறிகள்' என்று ஒதுக்கி வைக்கப்பட்ட குடும்பம் உழைப்பால் சம மதிப்புப் பெறும் சமூக மாற்றத்தைச் சொல்கிறது. பழம் பெருமை பேசி, வெற்றிலை, பிராந்தி என்ற பழக்கங்களில் மூழ்கி உழைப்பை மறந்த புத்தம் வீட்டுக்காரர்கள், சுகவாழ்வுக்கு நேரமில்லாமல், உழைப்பே வாழ்வாய்க் கொண்ட பனையேறிகள், கல்வியால் தம் நிலையை உயர்த்திக்கொண்டு, பழைய உறவுகளை அறியாத பாவனையில் இருக்கும் கோயில் – சர்ச் உபதேசியாரின் குடும்பத்தினர் மிஷன் வீட்டார், – இப்படி ஒரே சாதியினரின் இடையிலும் பொருளாதார வர்க்கபேதங்களால் ஒன்றுபடமுடியாமல் அவரவர் தனித்தனி உலகில் வாழ்ந்து கொண்டிருக்கும் நிலைமை. புத்தம்வீட்டுப் பெண் லிஸிக்கும் பனையேறி தங்கய்யனுக்கும் இடையில் பரஸ்பரம் அன்பிருந்தும் அவர்கள் ஒன்றுசேர, குடும்பப் பாரம்பரியம், வீண்கௌரவம் (False prestige) விளைவிக்கும் தடை.

குறிப்பிட்ட மேல்தட்டு சாதிசமயங்களைப் பற்றி மட்டும் எடுத்தாண்டு கொண்டிருந்த தமிழ் நாவல் போக்கிலிருந்து முற்றிலும் மாறுபடுவதால் புத்தம்வீடு முக்கியத்துவம் பெறுகிறது.

## வாக்குமூலம் (1992)

ராகுலனின் இந்நாவல் நாம் இன்று வகுத்துக் கொண்டிருக்கும் குடும்பம் என்ற அமைப்பை ஒட்டு மொத்தமாய்த் தவிர்த்துச் செல்வதாய்த் தோன்றினாலும், குடும்பங்களுக்குள் அகப்பட்டு விமுக்தி மார்க்கம் தெரியாமல் தத்தளித்துத் தடுமாறும், தடுமாறி இகலோக வாசத்தை முடித்துக் கொள்ள என்னடா வழியென்று அலையும், மனிதர்களை இந்நாவலில் பார்க்கிறோம். "அங்கமுத்து, ஏபின் தாம்ப்ஸன், ஜியார்ஜ்சார், சாமிராவ் சாமி – இவர்கள் ஒவ்வொருவரையும் பார்க்கும்பொழுது அவர்களில் ஓர் அம்சம் இல்லாவிட்டால் இன்னோர் அம்சமாக நான் ஆகிவிடுகிறேன். ஏன், சொல்லப்போனால் என்னில் நான் சாமிராவ் சாமியின் இரண்டாவது அண்ணனையும் காண்கிறேன்" என்ற மையப்பாத்திரம் ராஜசேகரன் கூற்று சாமிராவ் சாமியின் குடும்பவாழ்வு – வயதான தாயாரை யார் வைத்துக்கொள்வது என்ற சர்ச்சை, மிகப் பெரிய குடும்பத்தில் – 11 பையன்களில் 11ஆவது பையன் சாமிராவ் சாமி ஓசைப்படாமலேயே வாழ்ந்துவிட்டு ஓசைப்படாமலேயே போக விரும்பியவன், ஆஸ்பத்திரியில் அம்மாவின் உயிர் பிரிந்ததும் இந்த வயது வந்த மரபு வழி மகன்கள் நடந்து கொள்ளும் விதம் – விரலைச்சொடுக்குதல், டா–டா என்று சொல்லிவிட்டுப் போதல், சாவின் மீதுள்ள பயம் – இவையெல்லாம் யதார்த்தமான பண்பாட்டுக் கவலையுடன், ஆனால் விலகி நிற்கும் அங்கதச் சுவையுடன் சொல்லப்படுவதுதான் இந்நாவலின் விசேஷம். தேசமுன்னேற்றச் சட்டம் (286) ஆண்டு 2084 அச்சுப்பதிவுச் சட்டத்தில் வினா வரிசையில் 85ஆவது கேள்வியில் கேட்டிருக்கிறபடி, "எப்படியும் நீங்கள் சாகத்தான் போகிறீர்கள், அதை ஏன் நீங்கள் விரைவுபடுத்த விரும்புகிறீர்கள்?" ஒரு கட்டத்தில் இக்கேள்விக்கு ஆட்பட்டு அனுகூல மாகவோ பிரதிகூலமாகவோ இயங்க குடும்பமும் மரபுவழிச் சிந்தனைகளும் கூட இன்று தடைசெய்வதில்லை என்பதையும் இந்நாவல் சூசகமாய் உணர்த்துகிறது.

## கூண்டினுள் பட்சிகள் (1995)

'தான்' (Self) என்பது, குடும்பம், சமூகம், உலகம் ஆகியவற்றுக்கு அப்பாற்பட்டதன்று. தன்னை அறிவது – ஆன்மாவைப் புரிந்து கொள்வது என்பது உலகைப் புரிந்து கொள்வதுதான். ஆனால் இந்த ஆன்மிகத்தேட்டம் சமூகப்பிரக்ஞையுடன் செய்யப்படவேண்டும் என்ற என் எண்ணத்தின் விளைவுதான் இந்த என் நாவல். போகமும் யோகமும் ஒன்றாய்க் கலந்ததே நமது வாழ்வு. போகத்தை முற்றிலும் துறந்தால் மட்டுமே யோக நிலைமை சித்திக்கும் என்று இந்திய ஆன்மிகம் சொல்லவில்லை. வாழ்க்கைப் பயணத்தில் ஒவ்வொரு தசா சந்தியிலும் நின்று நிதானித்து வாழ்வைப் புரிந்து கொள்ள, சக மனிதர்களிடம் நம்பிக்கை கொள்ள, அன்பு வைக்க அவனது ஆன்மிக பலம் அவனுக்கு உதவ வேண்டும். மனிதர்கள் கூட ஒத்துப்போவது என்பது எளிதன்று. இதில் நெருங்கிய குடும்ப உறவுகள், கணவன் – மனைவி, பெற்றோர் – பிள்ளைகள் ஒன்றும் விலக்கில்லை. தனிப்பட்ட ஆசை, நிராசைகளை மீறி மானிடப் பண்பாட்டு வளர்ச்சியை இலட்சியமாகக் கொள்ளும்போது அன்றாட வாழ்வில் பலவற்றை இழக்கவேண்டி வருகிறது. முற்றுப் பெறாத இந்தத் தேடலின் அகப்போராட்டத்தின் விளைவுதான் இந்நாவல்.

வாழ்க்கையின் ஓட்டத்தில் ஏதாவதொரு கட்டத்தில் குடும்பமும் உலகமும் எல்லாம் கூண்டாகவும், அதனுள் அகப்பட்டுக்கொண்டு விமுக்தி மார்க்கத்திற்கு சிறகடித்துக் களைத்து விழும் பட்சியாகவும் ஒவ்வோர் ஆன்மா (Self)வுக்கும் அனுபவமாகக்கூடும் பிறவிப்பிணியைத் தீர்க்க ஜன்ம ஜன்மமாய் முயலும், உடம்பு எனும் கூண்டுக்குள் அகப்பட்டுக்கொண்ட ஆன்ம பட்சி என்ற இந்திய மரபின் தத்துவ மையக்கருத்தும் இதன்கூட இணைத்து, இந்நாவல் அலசுகிறது. பிரம்மசரியத்தில் தொடங்கி கிருஹஸ்தம் (இல்லறம்) வானப்பிரஸ்தம் என்று துறவறத்தைத் தேடும் போகி, யோகியாகி சச்சிதானந்த சுவாமிகளாக ஞான முக்தி அடைவது இந்நாவலின் மையக்கரு. இந்திய மரபு வழிச்சிந்தனை – லௌகிகமும் ஆன்மிகமும், குடும்பத்தின் உள்ளே, வெளியே என்று இணங்கியும் பிணங்கியும் இறுதியில் ஒரு தணிவு நிலைக்கு வருவதும் இங்கே நிகழ்கிறது. இராமகிருஷ்ணர் அருளிய, மனைவியாக இருந்தாலும் சக்தியாக வழிபடமுயன்ற போகி. அவள் பத்ரகாளிக்

கவிஞர் பெரி. சிவனடியான்

## கூற்று



நன்றி மறந்தார்க்கு
உய்வில்லை யென்பது
நம்மறை வள்ளுவன் கூற்று.
கொன்றன்ன செய்தாரும்
நல்லுள்ளம் கொண்டாற்பின்
கொள்வர் சுகத்தென்றல் காற்று.

காந்திஜி நேருஜி காவலன் நேத்தாஜி
கண்ட சுதந்தரம் போற்று
காந்தியை நேருவை யாரெனக் கேட்டிடும்
காலக் கொடுமையைத் தூற்று.

இளைய தலைமுறை "எமக்கென்ன" என்றிடும்
இழிவினை இன்றைக்கே மாற்று.
தலைமுறை காத்திடாத் தான்தோன்றி மக்கட்குத்
தகுமோ சுதந்தரக் காற்று?
வஞ்சமும் ஊழலும் லாவணி பாடிடும்
நாடகத்தைத் தூக்கில் ஏற்று
வஞ்ச மனத்துடன் மேலும் வளர்த்திடும்
மாந்தர்க்கு மக்களே கூற்று.



கோலம் கண்டு நிலைகுலைந்து போவது நவீன உலகின் பணவழிபாட்டின் அவஸ்தையாகவும் இருக்கலாம். வயோதிகத்தை மதிக்காவிட்டாலும் வெறுக்காதிருப்பது இந்தியக் குடும்பங்களில் இன்று பழங்கனவாக மாறிக் கொண்டிருக்கிறது. வானப்பிரஸ்தத்தை நாடினாலும் இல்லாவிடிலும் வயோதிகத்தை அடைந்து விட்டதால் மட்டும் சாவதுவரை ஆஸக்திகள் – இச்சைகள் அகன்று விடுவதில்லை என்பதை வயோதிகர்கள் ஆகப்போகும் இளைஞர்களால் புரிந்து கொள்ள முடிவதும் இல்லை. குடும்பம் – அது கூட்டுக்குடும்பமாயினும் தனிக்குடும்பமாயினும் – கூண்டாகி மூச்சடைக்க வைப்பதையும் பார்க்கிறோம். இந்திய மரபு வழி வானப்பிரஸ்தம் – விலகி நிற்பது ஓர் அளவுக்காவது ஆறுதல் அளிக்காதா என்ற தேடல் இங்கே நிகழ்கிறது என்று தோன்றுகிறது.

முடிவாக:

இந்திய இலக்கியப் பாரம்பரியத்தின் முதல் முக்கியப் படைப்புகளான இராமாயணம், மகாபாரதம் போன்ற புராண நூல்களிலும் குடும்பம், குடும்ப அங்கத்தினர்களின் பரஸ்பர போட்டாபோட்டி, மோதல்கள், முரண்பாடுகள் ஆகியன எல்லாம் கையாளப்பட்டிருக்கின்றன. எந்த உன்னதமான, சமய புராதன மரபுச்சிந்தனைகளாலும் அவற்றை நிகழாமல் தடுக்க முடிந்ததாகவும் தெரியவில்லை. இன்றையக் குடும்ப அங்கத்தினர்களிடையே மனவிரிசல்களுக்கு, குறிப்பாக ஆண்–பெண் மனவேற்றுமைகளுக்குக் காரணம் ஐரோப்பிய நாகரிகத்தின் ஆதிக்கம் என்றுகூறுகிறவர்கள், மகாபாரதத்தில் கைகேயி தசரதமகாராஜாவிடம் நடந்து கொண்டமுறை பற்றி என்ன சொல்லுகிறார்கள் என்று தெரியவில்லை.

கைகேயி தன் மகன் பரதனுக்காக அத்தனை கரிசனம் எடுத்து தன் பதி தசரதனிடம் வரம் கேட்கும் போது, பரதனின் சொந்தத் தந்தை தானே தசரதன்? அவருக்கும் தன்னைப்போலவே தன் சொந்த மகனின் நலத்தில் அக்கறையிருக்காதா என்று அவளுக்கு நினைக்கத் தோன்றியதா? கடைசியில் தன் பதி தசரதனின் இறப்பில் முடிந்த அந்தச் செய்கையின் போது சனாதன பத்தினிதர்மம் பற்றி சிந்திக்க விடாமல் கைகேயியைத் தடுத்த சக்தி யாது? தந்தையின் பாசத்தை எண்ணிப்பார்க்காது, தன்பதிக்கு மூத்த தாரத்தால் பிறந்த மூத்த புத்திரனுக்கு முறைப்படி செல்ல வேண்டிய முடியைக் குறுக்கு வழியில் தட்டிப்பறித்து தன் வயிற்றில் பிறந்த இளையவன் தலையில் எப்படியும் சூட்டிவிட வேண்டுமென்ற அதீதமான புத்திரவாஞ்சை தானா? அல்லது ஊழ்வினையா?

மகாபாரதத்தில் பீஷ்மரிடமும் சாலுவனிடமும் இடம் கிடைக்காது கொலை வெறியில் சிகண்டியாய், ஆடி நடக்கும் அம்பை, வம்ச விருத்தி அடைய படுவிகார வியாசனுக்குப் பள்ளியறையில் விழிகளைப் பொத்திக் கொண்டு உடம்பை அளித்துக் குருட்டுத்திருதராஷ்டிரனைப் பெறும் அம்பிகை, பயத்தால் வெளுத்து பாண்டுவைப் பிரசவிக்கும் அம்பாலிகை, இத்யாதி இத்யாதி – இவையெல்லாம் எதைக் காட்டுகின்றன?

இன்று நேற்றில்லை, தொன்று தொட்டே உலகில் புராதன சமயப் பாரம்பரியத்தின் கூடவே குடும்பம் சமூகமனிதர்களின் இடையில் தொடர்ந்து வரும் கருத்து முரண்பாடுகளின் கூட, சுய நல வேட்கை, அகந்தை, பொறாமை, தப்பெண்ணம் போன்ற பல்வேறு காரணங்களாலும் இனிமேலும் நீடித்துக் கொண்டே தான் இருக்கும் என்று தோன்றுகிறது.

*(சென்ற ஏப்ரல் 1997இல் The Washington Times Foundation வாஷிங்டனில் நடத்திய 'The Search for a New World Culture for the 21st Century' கருத்தரங்குக்காக The Persistence of Classical and Religious Tradition in Asian Literature - Family, Self and World in Asian Tradition என்ற தலைப்பில் தயாரிக்கப்பட்ட ஆங்கிலக் கட்டுரையின் தமிழாக்கம்)*

# மரங்கள், நதிகள், மனிதர்கள்!

## வானதி திருநாவுக்கரசு

சில ஆண்டுகளுக்கு முன்னால் உதகமண்டலம் சென்று வந்தோம். ஒரு கோடையின் பின் பகுதிக்காலம். அது ஆகஸ்டுக்குச் சற்று முந்தியது— இரண்டாம் ஸீஸன் என்பார்கள். எப்போதுமே பூத்துக் குலுங்குகிற மரங்கள் சில. மிதமான வெம்மையின் உற்சாகத்தில் பூத்துச் சிரிக்கும் மரங்கள் சில. அப்படி ஒருவகை மரம் அது. அதன் பெயர் நினைவில்லை. இரத்தச் சிவப்பாயும் எலுமிச்சை மஞ்சளிலும் அவை பூக்கும். காம்புகளை அப்படியே மரக்கிளைகளில் காய்க்க விட்டுவிட்டு இதழ்கள் மட்டும் தரையெல்லாம் கொட்டிக் கிடக்கும் அழகு.

ஆனால் அந்த அழகும் கொஞ்சம் வருத்தம் தரும். சாலையில் சீறிப்பாய்ந்தோடும் கார்ச்சக்கரங்களில் அவை அறைபடுகிறபோதும், நடக்கிறவர்களின் காலடிகளில் அந்த இதழ்கள் மிதிபடுகிறபோதும் மனம் வெகுவாய்க் காயப்படும்.

இவையெல்லாம் தவிர்க்க முடியாதவை. திருவண்ணாமலைக்குப் புகழ் சேர்த்த பகவான் ரமணர் சொன்னதாக ஒரு நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது. பூத்துச் சொரிந்து கொண்டிருந்த ஒரு மரத்தின் மலர்களை ஒன்று விடாமல் ஒரு மூதாட்டி பூஜைக்காக என்று கொய்த போது பகவான் ரமணர் கோபப்பட்டாராம். அப்படி 'மொட்டை'யடிக்கலாகாது என்கிற கருத்தை அவர் வலியுறுத்தினாராம்.

ஆண்டாள் – அவருடைய பெயரே சூடிக் கொடுத்த சுடர்க்கொடி தான். அவர் பாடல் ஒன்றின் வரிகள் தூங்குகிறபோதும் காட்சியாய்க் கண்முன் விரிந்து ஆனந்தம் தரும்.

ஓங்கு பெரும் செந்நெல்
ஊடு கயல் உகள
பூங்குவளைப் போதில்
பொறிவண்டு கண்படுப்ப





*உங்கள் புழைக்கடைத்*
*தோட்டத்து வாவியுள்*
*செங்கழு நீர் வாய் நெகிழ்ந்து*
*ஆம்பல் வாய் கூம்பின காண்.*

என்று காட்சிப்படுத்துகிற இந்தப் பாடலுக்கு உரை எதற்கு? இந்த மாதிரி அழகுகளை எல்லாம் இனிமேல் எத்தனை காலத்துக்குக் கண்டு ஆனந்திக்க முடியப்போகிறது என்றெண்ணுகிறபோது மனத்தில் வேதனைதான் மிஞ்சுகிறது.

நான் எங்களுடைய ஊரான தேவகோட்டையிலிருந்து நிரந்தரமாய்ச் சென்னைக்கு இடம் பெயர்ந்த பசுமையான காலங்களை நினைத்துப் பார்க்கிறேன். இந்தப் பாரததேசம் விடுதலையடைவதற்கு ஓராண்டுக்கு முன்னால்.

இப்போதைய வடக்கு உஸ்மான் சாலை, அபிபுல்லா சாலைப் பகுதியெல்லாம் மரங்கள், மரங்கள், மரங்கள் தாம். கோடம்பாக்கம் போக வேண்டுமானால், அப்போது ஒரு ரெயில் கேட் வழி மறிக்கும். அந்த ரெயில் கேட்டுக்கு முன்னால் எத்தனை பனை, தென்னை, மாமரங்கள் என்று காடாய் மண்டியிருக்கும்.

இப்போது நாங்கள் இருக்குப் அபிராமபுரம் பகுதி, மாம்பலம் எல்லாம் நெல் விளைந்த வயல்கள் தாம். ஏரிக்கரைத்தெரு, பலாத்தோப்பு, மாங்கொல்லை என்று எப்படியோ பெயர்கள் மட்டும் நிலைபெற்று என்னைப் போன்று வயதானவர்களுக்கு பழைய பசுமைக் கதைகளை நினைவூட்டிக் கொண்டிருக்கின்றன.

பாண்டிபஜார் பகுதியில் இருபுறமும் அடர்ந்து செறிந்த மரங்கள் உண்டு. ஒவ்வொன்றாய் அவை பல காரணங்களால் காணாமல் போய்விட்டன. இப்போதும் பெயரளவுக்கு நிற்கும் சில மரங்களின் அடியில் நடக்கிறபோது மேலே கீசு கீசு என்று சத்தமிட்டபடி பறவைகள் எச்சமிட்டுச் சட்டைமேல் விழுந்தால் கூட மனம் குதூகலிக்கிறது. குழந்தைகள் அழுக்குப் பண்ணுகிறபோது ரசனையுள்ள தகப்பனும் பாட்டனும் கோபிக்கவா முடியும்?

கோயம்புத்தூர் அருகில் ஆனைக்கட்டி என்கிற இடத்தில் அமைந்துள்ள அர்ஷா வித்யா குருகுல ஆசிரமத்துக்குக் குடும்பத்தோடு சென்று வர ஒரு வாய்ப்புக் கிடைத்தது. அர்ஷா வித்யாச்ரமம் என்கிற பெயரில் பசுமையான மலை வளப்பகுதியில் விளங்குகிறது அது. அங்கு ஒரு தட்சிணாமூர்த்தி கோயிலும் உண்டு.

அந்த இடத்தில் எத்தனையோ ஆன்மிகச் சிறப்புகள் இருக்கலாம். எல்லாவற்றையும் விட மிகவும் உயர்வாக விளங்குவது அங்கு நிலவுகிற தெய்விக அமைதிதான். இலை அசைவதால் ஏற்படுகிற ஓசை, வண்டுகளின் சிறகடிப்பால் ஏற்படுகிற ரீங்காரம் ஆகியவற்றில் மனம் திளைக்கிறபோது எந்தவிதமான உயர்வான சங்கீதமாக இருந்தாலும் அது இரண்டாம் பட்சமானதாகவே ஆகிவிடுகிறது. இயற்கையோடும் இறைவனோடும் மனம் ஒன்றித் தியானம் செய்ய அந்தச் சூழல் எவ்வளவு பொருத்தமானது!

பண்டைக் காலங்களில் நம்முடைய தவச் சான்றோர்கள் இமயமலைச் சாரலில் தவமியற்றியது பற்றியெல்லாம் படிக்கிறோம். பரமேசுவரனாகவே இமயத்தின் கயிலையங் கிரியை வழிபடுகிறோம். இமயத்தில் பிறந்து சிற்றாடை கட்டிய பெண்ணாய் ஒரு சிற்றோடை உருவாகி கங்கை என்கிற இளம் பெண்ணாய்த் தரை இறங்கிக் குதூகலிக்கிறாள். பின்னர் பிள்ளைகளை அரவணைத்து அழைத்துப் போகிற தாயாய்க் கிளை நதிகளைச் சேர்த்துக் கொண்டு இந்த தேசத்துக்கே வளம் சேர்த்தவாறு கடலில் சங்கமிக்கிறாள். 'கங்கா மாதா கி ஜேய்' என்று வட மாநிலப் பயணங்களின் போது கேட்கும் பக்திபூர்வமான கோஷங்களில் நான் மெய் சிலிர்த்துப் போயிருக்கிறேன். அந்த கங்கை இன்றைக்கு மாசுபட்டிருக்கிறது என்கிறார்கள். தொழிற்சாலைக் கழிவுகள், இரசாயனக் கலப்புகள் என்று கங்கைப் பகுதி மீன் இனமே வெகுவாய் அழிந்து வருகிறது என்கிறார்கள்.

இங்கேயும் காவிரி அப்படித்தான். நடந்தாய் வாழி காவேரி என்று தி.ஜானகிராமனும் சிட்டியும் இணைந்து ஓர் அருமையான இலக்கியம் படைத்தார்கள். கரையோர அழகுகளை வருடிக்கொண்டு காவிரிப்பெண் நடக்கிற அழகு அலாதியானதுதான். இப்படியே மற்ற நதிகளும்... இலக்கியங்கள் இந்த நதிகளைப் பற்றி எவ்வளவோ சொல்கின்றன.

இந்த நதிகள், இயற்கை அழகுகள் ஆகியன எல்லாம் இல்லாமல் இலக்கியம் என்கிற கம்பீரமான பார்வை யாருக்குமே கிடைக்காது. நதிக்கரைகளில் தான் உலகம் முழுவதுமே விதம் விதமான நாகரிகங்கள் பிறந்து செழித்தோங்கியிருக்கின்றன.

அமரர் கல்கி அவர்களின் பொன்னியின் செல்வன் மகாகாவியத்தின் தொடக்கமே காவிரிக்கரை அழகுகளை

மையப்படுத்திய ஆடித்திருநாள் அத்தியாயத்தோடு தானே ? அதில் வருகிற வருணனைகளில் மனம் பறிகொடுக்காத வர்கள் எத்தனை பேர் இருக்க முடியும் ?

ஆனால் இந்த நதிகள், சோலைகள், பூங்காற்று எல்லாமே இப்போது காணாமல் போய்க்கொண்டிருக்கின்றன. காரணம் வனவளம் குறைந்து சுற்றுச்சூழல் மாசுபடுவதால் என்கிறார்கள். ஓஸோன் படலத்தில் துளை, கதிர்வீச்சு என்றெல்லாம் சொல்கிறார்கள்.

மனிதனின் அறிவியல் வளர்ச்சியில் நன்மைகள் தொண்ணூறு சதவிகிதம் இருந்தாலும் சுற்றுச்சூழல் பாதிப்பு போன்ற பத்து சதவிகிதக் கேடுகளும் விளைவதைத் தடுக்க முடிவதில்லை.

தமிழக ஆளுநராகப் பிரபுதாஸ் பட்வாரி அவர்கள் இருந்தபோது ஆளுநர் மாளிகை வளாகத்துக்குள் சென்று வந்திருக்கிறேன். அந்தப் பகுதியை ரிஸர்வு பாரஸ்ட் என்று குறிப்பிடுவார்கள். இயற்கையாய் அமைந்த காட்டுப்பகுதியை அப்படியே கன்னி கழியாமல் பேணிப்பாதுகாப்பதென்பது பொருள். இதுபோல் பல இடங்களை அரசு பேணி வருகிறது. இந்த ரிஸர்வு பாரஸ்ட் பகுதியை ஒட்டி அடையாறு வருகிற பாதையில் பயணம் செய்கிறவர்கள் ஓர் அறிவிப்புப் பலகையைக் கவனித்திருக்கலாம். இங்கே மௌனமாக ஓர் ஆக்ஸிஜன்தொழிற்சாலை இயங்கிக் கொண்டிருக்கிறது என்று பொருள் தருகிற அறிவிப்பு அது. இதன் பொருள் எவ்வளவு பேருக்குப் புரியும், அல்லது எவ்வளவுபேர் இதைச் சிந்திப்பார்கள் என்பதை எண்ணிப்பார்க்கிறேன்.

உயிர் வாழ்வுக்குத் தேவையான பிராண வாயுவைச் செழித்து வளர்ந்துள்ள மரம் செடி கொடிகளே பகல் நேரங்களில் வெளியிடுகின்றன. இதை பாடப் புத்தகத்தி லேயே படித்து மறந்தும் போயிருப்போம். வன வளத்தின் பெருமையை விளக்கும் இந்த அறிவிப்பு வாசகத்தை ஒரு நல்ல கவிதையாக எண்ணி நான் மகிழ்வேன்.

சமீபத்தில் தாம்பரம் பகுதியிலிருந்த மான்களையெல்லாம், விமானப் படைப் பகுதிக்கு இடைஞ்சல் வரக்கூடாது என்பதற்காக, அப்படியே வளைத்துப் போய் வண்டலூர்ப் பகுதிக்கு விரட்டி விட்டதாக ஒரு செய்தி படித்தேன். இப்படி இயற்கையின் செல்வங்களை நாம் தொந்தரவு செய்து கொண்டிருக்கிறோம். எங்கள் பகுதியை ஒட்டி விராலிமலை என்று ஒரு முருகன் தலம் உண்டு. ஆயிரக்கணக்கில் வண்ண மயில்கள் தோகை விரித்தாடுகிற பூமியாக அது ஒரு காலத்தில் விளங்கியது. இப்போது அத்தனை மயில்களும் என்ன ஆயின என்பது வியப்பாக இருக்கிறது.

இப்படி இயற்கையையும் அதன் அழகுகளையும் எப்படியெல்லாமோ சிதைத்துக் கொண்டிருக்கிறோம். லட்சக்கணக்கில் பல்கிப் பெருகியிருந்த புலிகளின் எண்ணிக்கை இந்த ஒரு நூற்றாண்டில் சில ஆயிரங் களாகக் குறைந்து போய்விட்ட கொடுமையைப் படிக்கிறோம். ஸேவ் டைகர் என்று ஓர் இயக்கமே உருவாகியிருக்கிறது. அடுத்த நூறு ஆண்டுகளில் இயற்கை வளத்தின் கதி மேலும் சீர்கெடத்தான் செய்யும். சமீபகாலமாகப் பிரபலமாகியிருப்பவன் சந்தனக் கடத்தல்காரன் என்று சொல்லப்படுகிற வீரப்பன். அவன் எல்லாருக்கும் ‘தண்ணி காட்டி’ச் சுற்றி வருகிற காட்டுப்பகுதி ஆறாயிரம் சதுர கிலோ மீட்டர்கள் என்று சொல்கிறார்கள். இந்த அடர்த்தி குறைந்த வனப் பகுதியிலேயே அவனைப் பிடிக்க முடிய வில்லை. அரை நூற்றாண்டுக்கு முந்திய அடர்த்தியாக இருந்தால் நிலைமை எப்படியிருக்கும் என்று நினைத்துப் பார்க்கிறேன்.

நான் பர்மாவில் படித்த் சிறு பிராயம் நினைவில் நிழலாடுகிறது. அந்த அனுபவங்களை ‘வெற்றிப்படிகள்’ என்ற என் வரலாற்று நூலில் எழுதியிருக்கிறேன். போர் நெருக்கடியால் பர்மாவை விட்டு வெளியேறி நடந்தே வந்தது பற்றி எழுதியிருக்கிறேன். காட்டு வழி மலைப் பாதையில் பெரியவர்கள் துணையோடு சிறுவனாய் நடந்த அனுபவம் அது. அந்த அழகுகளை ரசிப்பதை விட அச்சமே மேலோங்கியிருந்த பருவம் அது.

இந்தியாவின் மிகப் பெரும் அணுவியல் விஞ்ஞானி யாகத் திகழ்ந்த ஹோமி ஜஹாங்கீர் பாபா அவர்களையும் நினைக்கத் தோன்றுகிறது. இப்போதைய மும்பை நகரை ஒட்டி டிராம்பேயில் அணு ஆராய்ச்சிக் கேந்திரம் உருவான போது, சாலை அமைப்புப் பணிகளில் பல மரங்களை வெட்டி விட நேர்ந்திருக்கும். அவற்றுள் பாபா மிகவும்



## சிறுவயல் செயமணி




அன்பு மகனே..
உன்னை நம்பித்தான்
கடன் வாங்கி
உன்னைப் படிக்க வைக்கிறேன்.

அன்பு மகனே
உன்னை நம்பித்தான்
கடன் வாங்கி
உன் தங்கைக்குத்
திருமணம் செய்கிறேன்

அன்பு மகனே
உன்னை நம்பித்தான்
என் வயோதிகத்திலும்
வாழலாம் என்றிருக்கிறேன்.

ஆனால் என்னைப் போல
வேறு சிலரும்

உன்னை நம்பித்தானாம்... ஆம்
போதைப் பொருள் உற்பத்தி
மதுபான உற்பத்தி
சிகரெட் உற்பத்தி
எல்லாமே உன்னை நம்பித்தானாம்.

ஏன் சிவப்பு விளக்கே
உன்னை நம்பித்தானாம்
ஐயோ மகனே!
நானும் எனது நம்பிக்கையும்....

நேசித்த பிரும்மாண்டமான மரம் ஒன்றும் இருந்தது. அதை வெட்டுகிறார்கள் என்கிற தகவல் கிடைத்தவுடன் போய்த் தடுத்துக் காப்பாற்றிய மனித மனம் அவருடையது. "மரம் அப்படியே இருக்கட்டும். சாலையை வேண்டுமானால் சுற்றி வருகிற மாதிரி போடுங்கள்" என்ற அவருடைய கட்டளை நிறைவேறியது என்கிறார்கள். மரங்களின் காதலன் என்றே அவர் தம்மைக் குறிப்பிட்டுக் கொள்வாராம்.

மருது பாண்டியர்கள் வரலாற்றில் கூட இப்படி ஒரு சம்பவம் உண்டு. கவிஞர் கண்ணதாசன் எழுதிய சிவகங்கைச் சீமை திரைப்படத்தில் இது பற்றி ஓர் உருக்கமான காட்சி வரும். மரங்களை மருதரசர்களாகவே எண்ணி வழிபட்ட விசுவாசமான குடிமகனைப் பற்றிய சம்பவம் அது. மரங்களை வெட்ட வந்த அரசாங்க ஆட்களின் கைகளைப் பற்றிக் கொண்டு "எங்கள் மருதரசர்களை வெட்டாதீர்கள்" என்று அந்தப் பாமரன் கெஞ்சுகிற காட்சி, கவிதை நயமுடைய ஒன்று. மரங்களையும் இயற்கையையும் நேசிக்கிற மனப்பக்குவம் எல்லாருக்குமே இருந்து விட்டால் தேசத்தின் வளம் எவ்வளவோ உயர்ந்துவிடும் என்று நம்புகிறேன் நான். வெறும் பள்ளிப் பாடங்களால் புகட்ட முடியாத பல அனுபவங்களை இந்த இயற்கைவளம் நாள்தோறும் நமக்குச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறது.

நம்முடைய தென்னாட்டுத் திருக்கோயில்கள் அனைத்திலும் உள்ள மிகப் பெரிய சிறப்புகளுள் ஒன்று தலவிருட்ச மகிமை. இந்தக் கோயிலுக்கு இதுதான் தல விருட்சம் என்று ஏற்பட்டிருக்கிறது. பல ஆலயங்களில் உள்ள தல விருட்சங்களின் வயதைக் கூடச் சரிவர மதிப்பிட முடியவில்லை. அந்த அளவுக்கு மரங்களையும் தெய்வமாக்கியிருக்கிற பெரியோர்களின் மனவளம் பிரமிப்பு ஊட்டக் கூடியது.

வேம்பும் அரசும் சேர்ந்து வளர்கிற சிறப்பு இங்கே மிகவும் உன்னதமானது. பல விநாயகர் திருமேனிகள் காற்றாட அமர்ந்து அருள் பாலிப்பது இந்த அரசு – வேம்பின் நிழலில் இருந்துதான்.

நான் வழக்கமாகக் காலார நடக்கும் மயிலை நாகேசுவரராவ் பூங்காவில் கூட இப்படி ஒரு வேப்ப மரமும் அரச மரமும் மிகவும் வளமாக நின்று கொண்டிருக்கின்றன. வழிபாட்டுத்தலமாக நான் இந்த மரங்களை எண்ணி தினமும் வணங்குகிறேன். இங்கே விநாயகர் சிலை ஏதும் இடம் பெற்றிருக்கவில்லைதான். ஆயினும் அப்படி ஒன்று இடம் பெற இந்தப் பூங்கா மரங்களின் நிழல் மேடையும் பொருத்தமானது தான்.

பல ஆண்டுகளுக்கு முன்பு ஒருமுறை திண்டிவனம் – விழுப்புரம் சாலையில் காரில் சென்றபோது ஓர் அனுபவம். ஒரு சாலையோரப் புளியமரத்தை வெட்டிக் கொண்டிருந்தார்கள். கிராம மக்கள் சூழ்ந்து கொண்டு வெட்டியவர்களைத் தடுத்துக் கெஞ்சினார்கள். அதற்கு அவர்கள் சொன்ன ஒரு காரணம், "இந்த மரங்களின் இலைகள், சிறு பிஞ்சுகளைப் பறித்துத் தான் நாங்கள் குழம்பு வைத்துச் சாப்பிடுகிறோம். அதைக் கெடுக்காதீர்கள்" என்பதுதான். இது வறுமையின் வெளிப்பாடு. கடைகளில் சென்று வாங்க முடியாத எத்தனை ஏழைகள் இப்படிச் சாலையோர மரங்களில் பயன் பெறுகிறார்களோ என்று எண்ணிக் கொண்டேன்.

இப்படி மரங்களும், நதிகளும், இயற்கை அழகுகளும் நம்மோடு பின்னிப் பிணைந்து உறவாடிக் கொண்டிருக்கின்றன. இவற்றை இந்தப் புனித நாளில் நினைத்துப் பார்ப்பது கூட இறைவனை வழிபடுவதற்கு ஒப்பானது தான். ✣✣

# திருவரங்கம் கோயிலில் ஒரு கலைக்கோயில்

'ஸ்ரீரங்கம் ஸ்ரீதரன்'

'பூலோக வைகுண்டம்' எனப் போற்றப்படும் திருவரங்கம் திருக்கோயில் தமிழகத்தில் சிறந்த வழிபாட்டுத் தலமாக விளங்குகிறது. இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்தும், வெளிநாட்டுச் சுற்றுலாப் பயணிகளும் இத்திருக்கோயிலைக் காண்பதற்கு நாள்தோறும் வந்து செல்கின்றனர்.

வைணவ சமயத்திற்கு இக்கோயில் ஒரு திசை விளக்காய்த் திகழ்கின்றது. 'கோயில்' என்றாலே வைணவர்கள் திருவரங்கத்தைத்தான் குறிப்பிடுவார்கள். ஆழ்வார்கள் அனைவரும் போற்றி மங்களாசாசனம் செய்த திருத்தலம் இது. நாதமுனிகள், உய்யக் கொண்டார், ஆளவந்தார், பெரிய நம்பிகள், எம்பெருமானார், கூரத்தாழ்வான், பெரிய வாச்சான் பிள்ளை, மணவாள மாமுனிகள் போன்ற பல வைணவ ஆசாரியார்கள் இங்கே வாழ்ந்து, திருவரங்கம் கோயிலுக்கும், வைணவ சமயத்திற்கும் பெருந் தொண்டு செய்த தலமாகவும் விளங்குகிறது.

திருவரங்கம் கோயிலில் பள்ளிகொண்ட அரங்கனின் சிறப்பை 'விரிதிரைக் காவிரி வியன்பெருந்துருத்தித் திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்' என்று சிலப்பதிகாரம் எடுத்துரைக்கிறது.



கருவறை முன் மண்டபத்து சுவரின் சிற்ப வேலைப்பாடு



வேணுகோபாலர் கோயிலின் தோற்றம்

திருவரங்கம் திருக்கோயிலின் வழிபாட்டு முறையே தனிச் சிறப்பு வாய்ந்தது. இக்கோயிலில் மாதந்தோறும் சிறப்பான திருவிழாக்கள் நடைபெற்று வருகின்றன.

சோழ மன்னர்கள், பாண்டிய – போசள மன்னர்கள், விஜயநகர – நாயக்க மன்னர்கள் அரங்கன் கோயிலில் சிறந்த வழிபாட்டுக்கும், கோயிலின் வளர்ச்சிக்கும் பெரிதும் தானமளித்துப் பெருமை சேர்த்தனர். இக்கோயிலில் காணப்படும் 700க்கும் மேற்பட்ட கல்வெட்டுகள் இக்கோயிலின் வரலாற்றுச் சிறப்பினை அறிந்து கொள்ள உதவுகின்றன என்றால் மிகையில்லை. இக்கோயிலிலுள்ள பல மண்டபங்களின் தூண்களில் இக்கோயிலுக்குத் தொண்டு செய்த மன்னர்கள் – தேவியரின் திரு உருவங்களைச் சிற்ப வடிவிலே கண்டு மகிழலாம்.

கட்டடக் கலைக்கும், ஓவியக் கலைக்கும் சிறந்த எடுத்துக் காட்டாகத் திகழ்கின்றது இக்கோயில். இராமாநுஜர் சந்நிதி, தாயார் சந்நிதி, பெருமாள் சந்நிதி, ரங்க விலாச மண்டபம் போன்ற இடங்களில் காணப்படும் நாயக்கர் கால ஓவியங்களில் ஆழ்வார்களின் வரலாறு, இராமாயணக்கதை, கோயிலின் புராணவரலாறு போன்றவை அழகிய வண்ணங்களில் தீட்டப்பட்டுள்ளன.

கம்பர் மண்டபம், கருடாழ்வார் மண்டபம், சேஷராயர் மண்டபம், வேணுகோபாலர் கோயில் போன்றவை சிற்பக்கலைக்கும், கட்டடக்கலைக்கும் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகிறது.



பூங்கொடியைப் பிடித்துக் கொண்டிருக்கும் ஓர் அழகிய பெண்

திருவரங்கம் கோயிலில் தெற்கு வாசல் வழியாகக் கோயிலுக்குள் நுழைகிறோம். முதலில் நாம் காண்பது ரங்க விலாச மண்டபம். ரங்க விலாச மண்டபத்திற்கு மேற்கே ஆண்டாள் சந்நிதி அருகில் காணப்படும் வேணுகோபாலர் சந்நிதி கல்லிலே வடித்த காவியமாக த் திகழ்கிறது.

கர்நாடகப் பகுதியில் ஆண்ட போசள மன்னர்கள் 13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஸ்ரீரங்கத்திற்கு அருகில் கண்ணனூர் என்ற இடத்தைக் கைப்பற்றி அங்கிருந்து ஆட்சிசெய்தனர். புகழுடன் ஆட்சி செய்த போசள மன்னன் வீர இராமநாதன் காலத்தில் (கி.பி 1270) திருவரங்கம் கோயிலில் வேணுகோபாலர் சந்நிதி கட்டப்பட்டது. இக்கோயிலை கல்வெட்டுகள் 'குழலூதும் பிள்ளைக்கோயில்' என அழகு தமிழில் அழைக்கிறது.

போசள மன்னர்களின் அரிய கலைப்படைப்பாக விளங்கும் பேலூர், ஹளபேடு கோயில்களைக் கண்டு நாம் வியக்கிறோம். மிகவும் நுண்ணிய வேலைப்பாடுகளுடன் கூடிய சிற்பங்களுடன் காட்சி தருகின்றன அக்கோயில்கள். அதே மரபைப் பின்பற்றி எழிலார்ந்த சிற்ப வேலைப்பாட்டுடன் இக்கோயில் அமைந்துள்ளது.

கோயிலின் அடித்தளப் பகுதியிலிருந்து கொடுங்கை வரை முழுவதும் அரிய சிற்ப வேலைப்பாடுகள். அடித்தளப்பகுதியில் திருமாலின் பத்து அவதாரங்கள் சிறிய அளவில் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளன. முன் மண்டபம் மற்றும் கருவறை தேவ கோட்டங்களில் தும்புரு, நாரதர், கஜேந்திர மோட்சம், குழலூதும் கண்ணன் வடிவங்கள் ஆகியவை அழகுற அமைக்கப் பட்டுள்ளன. தேவ கோட்டங்களுக்கு இடையே காணப்படும் கும்ப பஞ்சரத்தின் அழகு நம்மை வியக்க வைக்கிறது.

இதுமட்டுமல்லாமல் கருவறையின் வடக்குப் பக்கத்தில் ஆடை நெகிழ நாணம் மேலிடக் காட்சி தரும் பெண்ணின் சிற்பத்தைக் காணும் பொழுது –

*என்னையும் நோக்கிஎன் அல்குலும் நோக்கி*
*ஏந்துஇளங் கொங்கையும் நோக்கு கின்றார்*
*அன்னை என் நோக்கும் என்று அஞ்சுகின்றேன்*
*அச்சோ ஒருவர் அழகியவா!*

என்று அரங்கத்து அம்மான் மீது காதல் கொண்ட பெண்ணின் நிலையைப்பற்றி வர்ணிக்கும் திருமங்கையாழ்வாரின் பாசுரம் நமக்கு நினைவுக்கு வருகிறது.



கிளியைத் தூதுவிடும் பெண்



கண்ணாடி பார்த்துத் திலகமிடும் அழகு நங்கை

இச்சிற்பத்தில் பெண் ஒருத்தி கண்ணாடியைத் தன் இடக் கையில் தாங்கி வலக்கையைப் பின்புறமாகக் கொண்டு வந்து திலகமிடும் இச்சிற்பம் மிகவும் கலைநயத்துடன் காணப்படுகிறது. அழகுக்கு அழகு சேர்க்கும் பெண் ஒருத்தியைச் சிற்ப வடிவிலே கண்டு வியக்கிறோம்.

*காரை பூணும் கண்ணாடி காணும்*
*தன் கையில் வளை குலுக்கும்*
*கூரை உடுக்கும் தன்கொவ்வைச்*
*செவ்வாய் திருத்தும்*

என்ற பெரியாழ்வார் பாசுரம் நம் நினைவுக்கு வருகிறது, இச்சிற்பத்தைக் காணும்பொழுது. இதுமட்டுமல்லாமல் –

கருவறைச்சுவர் முழுவதும் கண்ணன் லீலைகள், நடனமாடும் பெண்கள், திருமாலின் பல வடிவங்கள் ஆகியவை செதுக்கப்பட்டு அரிய சிற்பக் களஞ்சியமாக விளங்குகிறது. ஆழ்வார்களின் பாசுரங்களின் அடிப்படையில் அமைக்கப்பட்ட சிற்பங்களைக் கொண்டு விளங்கும் இக்கலைக்கோயிலின் சிற்ப வேலைப்பாடுகள் கண்டு கண்டு மகிழத்தக்கன.

**

அடுத்து காணப்படும் சிற்பத்தில் பெண் ஒருத்தி கிளியை வைத்துக் கொண்டு கொஞ்சிக் கொண்டிருக்கிறாள்.

*மல்அடர்த்து மல்லரை அன்றுஅட்டாய் என்றும்*
*மாகீண்ட கைத்தலத்து என்மைந்தா என்றும்*
*சொல்எடுத்துத் தன்கிளியைச் சொல்லே என்று*
*துணை முலைமேல் துளிசோரச் சோர்கின்றாளே!*

என்ற பாசுர வரிகளுக்கேற்ப இச்சிற்பம் அமைந்துள்ளது. வீணை ஏந்தி வாசிக்கும் நிலையில் இரு சிற்பங்கள் காணப்படுகின்றன. அப்பெண்களின் கூந்தல் அலங்காரம் நம்மை வியக்க வைக்கிறது. இளநகையுடன் வீணையை மீட்டும் அழகிய நங்கையரின் சிற்பங்களை அவசியம் காணவேண்டும். இவற்றைக் காணும்பொழுது,

*சொல்உயர்ந்த நெடுவீணை முலைமேல் தாங்கி*
*தூமுறுவல் நகை இறையே தோன்றநக்கு*
*மெல்விரல்கள் சிவப்புஎய்தத் தடவி ஆங்கே*
*மென்கிளி போல் மிகமிழற்றும் என்பேதையே*

என்ற பாசுரவரிகள் நம் நினைவுக்கு வருகின்றன.

கருவறையின் வடக்குச்சுவரில் காணப்படும் மற்றொரு சிற்பம் சிறப்பானது.



கஜேந்திரன் எனும் யானைக்கு அருளும் காட்சி


புராதனக் கலைக்கூடம்


ராஜா தினகர் கங்காத் கேல்கர் (1896 – 1990) "ராஜா கேல்கர்" பிரசித்தமான பெயர்

# புனே நகரில் ஒரு புராதனக் கலைக்கூடம்

கங்கா ராமமூர்த்தி

உலகிலுள்ள பெரிய நகரங்களை நினைவு கூரும் போது, அந்நகரின் சிறப்புக்கு எடுத்துக்காட்டாக அமைந்த இடங்கள் அல்லது சின்னங்கள் மனத்தில் தோன்றும். பாரிஸ் நகரத்தைப் பற்றிய எண்ணம் தோன்றியதும் மனத்திரையில் கம்பீரமான ஈபில் கோபுரம் தோன்றும். நியூயார்க் என்றதும் வானுயர்ந்த சுதந்தரச் சிலை கண்முன் வரும். மும்பை என்றதும் 'கேட்வே ஆப் இந்தியா' – இந்தியாவின் நுழைவாயில் நினைவில் வரும். புனே நகரத்தை எண்ணும்போது – அந்நகரிலுள்ள ராஜா தினகர் கேல்கர் மியூசியம் நினைவில் எழும்.

மராட்டிய மாநிலத்தின் சரித்திர, அரசியல் பின்னணியும், பெரும் தலைவர்கள் அரசர்களோடு இணைந்த சிறப்பும் மிக்க நகரம் புனே. இந்நகரில் வாழ்ந்த, ராஜா தினகர் கேல்கர், மிகப் பெரும் கலை ரசிகர். தென்னாட்டு, வடநாட்டுக் கலையழகு ததும்பும் சிற்பங்கள், ஓவியங்கள், பொருள்கள், அணிகள், ஆடைகள் – ஆகியவற்றைச் சேகரிப்பதில் பெருவிருப்பம் கொண்டவர். அவருடைய 25ஆம் வயதிலிருந்தே அவர் சேகரித்த கலைப்பொருள்களை நண்பர்களுக்குக் காட்டுவது வழக்கம். ஒவ்வொரு பொருளின் சிறப்பையும் நயத்தையும் எடுத்துக் கூறுவதில் இணையற்ற இன்பம் கண்டவர்.

வாழ்நாள் முழுவதும் ராஜா தினகர் கேல்கர், தாம் சேர்த்த அரும் பெருங்கலைப் பொக்கிஷங்களைப் பாதுகாத்து வந்தார். இந்த அருங்காட்சியகம் சரித்திரத்தை விளக்கும் தோற்றத்தோடு, மராட்டிய மணம் கமழக் காட்சியளிக்கின்றது.

கேல்கரின் கலைப்பொக்கிஷங்களைப் பற்றிய செய்தி புனே நகரத்தில் மட்டுமின்றி நாடெங்கிலும் – ஏன் – வெளிநாடுகளிலும், பரவத் தொடங்கியது. அந்தக் கலைப் பொக்கிஷங்களைக் காணப் பல வெளிநாட்டினர் புனேக்கு வந்தனர். பின்பு மாநில அரசும் அதிகாரிகளும் கேல்கரின் முயற்சிக்கு உறுதுணை செய்தார்கள். அதன் காரணமாக இந்தியாவின் மேற்கு பிராந்திய அருங்காட்சியகமாக, கேல்கரின் மியூசியம் மாற்றப்பட்டது. அரசின் துணையோடு அற்புதமாக விளங்கிய அருங்காட்சியகத்தை ராஜா தினகர் கேல்கர், 1962ஆம்


← யானை மைக்கூடு



பைத்தான் ஓவியம்

ஆண்டிலே மஹாராஷ்டிர அரசின் தொல்பொருள் ஆராய்ச்சித் துறையிடம் ஒப்படைத்தார்.

1975ஆம் ஆண்டில் கல்வித்துறை இந்த அருங்காட்சியகத்தின் பொறுப்பை ஏற்று, மிகவும் சீரிய முறையிலே திறம்பட நடத்தி வருகின்றது.

1896ஆம் ஆண்டு புனேயில் பிறந்த ராஜா தினகர் கேல்கர், ஒரு கலைப்பிரியர். நாட்டின் எந்த திசைக்குச் சென்றாலும் அங்குள்ள கலையம்சம் நிறைந்த பொருள்களை வாங்கிக் கொண்டு வந்து, மிகவும் பாதுகாத்து வைப்பார். அவருடைய ரசனையைப் போற்றி அவரது மனைவி திருமதி கமலாபாய் உறுதுணையாக இருந்ததுடன் தமது பண்டைக்காலப் புராதன அணிகளை அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைக்கவும் கொடுத்து மகிழ்ந்தார்.



பூவராக மூர்த்தி

மூன்றடுக்கு மாடி மாளிகையில் கேல்கரின் அருங்காட்சியகம் அமைந்துள்ளது. 1377/78, சுக்ரவார் பேட், புனேயில் அமைந்த இக்காட்சி சாலையில் சுமார் 20,000 கலைப்பொருள்கள் உள்ளன. 40 வகையான பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு பண்டையபுராதன நாகரிகத்தைக் காவியமாகக் கூறுகின்றன. விதம்விதமான விளக்குகள், ஓவியங்கள், தாம்பூலப் பாத்திரங்கள், இசைக் கருவிகள், மரத்தினால் செய்யப்பட்ட கலைச் செல்வங்கள், தந்தச் சிற்பங்கள், உலோகத்தினால் ஆன பல்வேறு வடிவங்கள், சுவர் அலங்காரங்கள், தரை விரிப்புகள், கலைநயம் மிக்க துணிவகைகள் – அபூர்வமான வேலைப்பாடுகள் கொண்ட சந்தன பொம்மைகள் – என்று கூறிக்கொண்டே செல்லலாம்.

ஆர்வமும் ரசனையும் மனத்தில் நிறைந்திருக்க, கேல்கரின் அருங்காட்சியகத்திற்குள் சென்றோம்: நான்கு ரூபாய் கொடுத்து நுழைவுச்சீட்டைப் பெற்றுக் கொண்டோம்.

முன்புறவாயிலை நெருங்கியதும் கலையழகு கொஞ்சும் சிற்ப சித்திர வேலைப்பாடுகள் நிறைந்த வாயில்கள், கதவுகள், ஜன்னல்கள் – என்று பாங்குடன் அணியாக வைத்திருந்த விதம் நெஞ்சை அள்ளியது.

வாயில்களில் இருந்த சிற்பவேலைப்பாடுகளின் அழகை வர்ணிக்க வார்த்தைகளில்லை. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த மராட்டிய காலத்து வாயில் ஒன்றில் மஹாவிஷ்ணு சங்குசக்ரதாரியாக இன்முகம் காட்டுகிறார். பிரம்மாண்டமான கல்லினால் ஆன வாயில்களைக் காணும்போது நாம் அத்தகைய பழைமையான மாளிகைக்குள் புகுவது போன்ற உணர்ச்சி உண்டாகிறது. பாரதநாட்டின் பல்வேறு மாநிலங்களில் உள்ள கோயில்கள், மாளிகைகளின் வாயில்களை, அருங்காட்சியகத்தின் முதல் தளத்தில் காணமுடிகிறது. புராதனப் பெருமை பேசுகின்றன அவை.

தென்னிந்தியாவின் உலோகச்சிற்பங்கள் இங்கே பெருமளவில் உள்ளன. அவற்றுள் 19ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பூவராக மூர்த்தியின் சிலை மிக நுட்பமான அழகோடு விளங்குகிறது. வராக மூர்த்தியின் அங்க லட்சணங்களும் உக்ரமும் தெளிவாய்த் தெரிகின்றன.

இந்திய நாட்டின் ஓவியக்கலை உலகப்புகழ் பெற்றது. வண்ணம் மங்காத அஜந்தா, எல்லோரா குகை ஓவியங்கள் பற்றி அறியாதவர் யார்? கேல்கரின் ஓவியப் பொக்கிஷங்கள், பல்வேறு வகையான ஓவியங்களை உள்ளடக்கியதாக விளங்குகின்றது, 17,18,19 ஆம் நூற்றாண்டுகளில் காணப்பட்ட கலாசாரச் சான்றுகளாக இந்த ஓவியங்கள் காட்சி தருகின்றன.



யாழ்

மகாராஷ்டிரத்தின் பிரசித்திபெற்ற பைத்தான் ஓவியங்கள், கண்ணாடியில் வரைந்தவை; துணிகளில் வரையப்பட்ட ஓவியங்கள், காகிதத்திலும் தோலின் மீதும் வண்ணமாக உள்ள ஓவியங்கள் என, கண்களுக்கு ஒரு விருந்தாக அமைந்துள்ளன, ரபாரி துணிவகைகள் குஜராத் கட்ச் கத்தியவார் நாட்டுப்புறப் பாணியைச் சேர்ந்தவை.

முதல் தளத்தில் உள்ள இசைக்கருவிகள் பகுதியைக் காணச் சென்றோம். அந்தப்பகுதியே இசை தெய்வத்தின் சாந்நித்தியம் பெற்றதுபோல சுருதி ஒலிக்கக் காட்சிதந்தது. பல வடிவங்கள், பலவகையான தோற்றங்கள் கொண்ட முரசுகள், தோல்வாத்யங்கள் அபூர்வமான காட்சி தந்தன.

பற்பல நீளங்களைக் கொண்ட புல்லாங்குழல்கள் அங்கே இருந்தன. அவற்றில் பன்னாலால் கோஷ் – என்ற வடநாட்டுப் புல்லாங்குழல் மேதையின் புல்லாங்குழலும் இடம்பெற்றிருந்தது. தந்தி வாத்யங்களின் வரிசையிலே அநேக விதமான தம்பூராக்களும் வீணைகளும் யாழ்வகைகளும் இருக்கின்றன. சவாய் கந்தர்வாவின் தம்பூராவும் பாலகந்தர்வாவின் சிறிய தம்பூராவும் அங்கே இருந்ததைக் கண்டதும் அவர்களின் இசை மழையிலே நனைவதைப் போன்ற பிரமையை உண்டாக்கின. மதுகர் கோல்வால்கரின் ஷெனாய், ஆதிவாசிகள் பயன்படுத்தும் இசைக்கருவிகள், தென்னாட்டு அன்னமுகம் கொண்ட யாழ், ஊதல் வகைகள் – என்று ரசித்துப் பார்க்க பலப்பல கருவிகளுடன் இசைக்கருவிகள் பகுதி திகழ்கிறது.

காண்பவரைக் கவரும் மற்றுமொரு காலரி – சமையலறைப் பொருள்கள் நிறைந்த ஒன்றாகும். பழங்காலத்தில் திருமணவிழாக்கள், பொது விழாக்கள் – ஆகியவற்றின் போது விருந்து சமைக்கப் பயன்படுத்திய பெரிய பெரிய பித்தளை, வெண்கலப் பாத்திரங்களை இப்பகுதியில் பார்க்கிறோம். அவற்றின் பிரம்மாண்டம் நம்மை வியக்க வைக்கிறது, அவற்றில் சமைத்துப் பரிமாறியவர்களின் விருந்தோம்பலை உணரமுடிகிறது. 16ஆம் நூற்றாண்டை நினைவு படுத்துகிறது.

அன்றாடம் பயன்படும் பொருள்களும் மரத்தினால் உலோகத்தினால், கற்களால், காகிதக்கூழினால், சுருமண்ணால், பீங்கானால் செய்யப்பட்ட ஒவ்வொரு பொருளும் கலைநயத்தோடு மிளிர்கின்றன.

18ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த, டோக்ரா கலையின் சிறப்பை எடுத்துக் காட்டும் (ஒரிஸா மாநிலத்தின்) வெற்றிலை பாக்கு வைக்கும் பாத்திரத்தைப் பார்த்தால் அழகு மிளிர்கிறது. அழகான வடிவில் யானை; அதன் அம்பாரி போல பெட்டி, அதன் மூடியின் கைப்பிடியாக ஒரு நங்கை. நேர்த்தியான இந்தக் கைத்திறனைப் போல பல திறன்மிக்க பொருள்களைக் கண்டு வியப்பேற்படுகிறது.

'பாக்கு வெட்டி' என்ற ஒரு சாதாரண வீட்டு உபயோகத்தில் உள்ள கருவி, தென்னாட்டில் 18ஆம் நூற்றாண்டில் எத்துணை கலையழகுடன் மிளிர்ந்தது என்பதை அறிய முடிகிறது. பாக்குவெட்டியின் மேல் மயிலாசனத்தில் ஒயிலாக வீற்றிருக்கும் இளம்பெண்; கைப்பிடியில் அழகான வேலைப்பாடு. மசிக்கூடு இருக்கும் நேர்த்தி கொள்ளையழகு! யானை மேல் சவாரி செய்வதுபோன்ற சிலையை உருவாக்கி உள்ளே மசி – இங்க் நிரப்புவதற்கு இடம் தந்த ஜோத்பூர், (ராஜஸ்தான்) சிற்பியின் திறமையைப் பாராட்ட வேண்டும்.

பலவகையான விளக்குகள், குழந்தைகளின் விளையாட்டுச் சாமான்கள், மராட்டிய மாநிலத்தாரின் பழங்கால நாகரிக உடைகள், நேர்த்தியான கைவினைப் பொருள்கள் ஆகியவற்றை இரண்டாவது, மூன்றாவது தளங்களில் பார்த்து மகிழலாம்.

பெண்களுக்கென்றே உள்ள 'வனிதா கக்ஷ' பகுதியில் கலையழகு கொஞ்சும் பழங்காலப் பொருள்கள் பல உள்ளன. 17ஆம் நூற்றாண்டில் மத்தியப்பிரதேசத்தில் புழங்கிய அழகான தாம்பூலப் பெட்டிகள், அழகான கைப்பிடிகளைக் கொண்ட கண்ணாடிகள், ஜரிகை இழையால் நெய்யப்பட்ட ஆடைகள் வண்ணமும் வடிவமும் குலையாத மேல்சட்டைகள், பலவகையான சீப்புகள், குங்குமச்சிமிழ்கள் – வகை

வகையான விளக்குகள்... என்று அருங்காட்சியகத்தின் சிந்தை கவரும் விந்தைப் பொருள்கள் எண்ணிலடங்கா!

யோகாசன நிலையிலுள்ள பெண்ணின் கைப்பிடியிலுள்ள விளக்கின் அழகும் நேர்த்தியும் சொல்லில் அடங்காது.

'மஸ்தானிமஹால்' பாஜிராவ் பேஷ்வா காலத்தை நினைவு கூரும். இதன் அருகிலேயே நூலகமும், பரிசோதனைக் கூடமும் அமைந்துள்ளன.

புனே நகருக்குப் பெருமையும் பாரதநாட்டிற்குப் புகழும் தேடித்தருகின்ற ராஜா தினகர் கேல்கரின் அழகிய இந்த அருங்காட்சியகத்தைக் கண்டு களித்து வெளியில் வந்தோம். பழங்கால சரித்திர, சமூகச் சூழலில் உலவிவிட்டு வந்த மனநிறைவு தோன்றியது. தனியொரு மனிதராக இருந்து சுமார் 40 ஆண்டுகாலம் அரும்பாடுபட்டு, தாம் சேகரித்த கலைப்பொக்கிஷங்களைக் கண்டதும். ராஜா தினகர் கேல்கரின் செயல் – வெறும் செயலில்லை; அரும்பெரும் சாதனை என்பதைப்புரிந்து கொள்ள முடிந்தது.

நூற்றாண்டு காணும் கேல்கரின் நினைவைப் போற்றி, அருங்காட்சியக நிர்வாகிகள் பற்பல சிறப்பு நூல்களையும் வெளியிட இருப்பதாகக் கூறினார்கள். கேல்கர் மியூசியம் கண்டு களித்ததும், பாரதத்தின் புராதனக் கருவூலங் களை புனே நகரம் போற்றிப்பாதுகாத்து வருவதையறிந்து வியந்தோம்.



ஓரிஸ்ஸா டோக்ரா கலை – வெற்றிலைப் பெட்டி



யோகாசன நங்கை விளக்கு 18ஆம் நூற்றாண்டு



நூதன பாக்கு வெட்டி

# புதிதாய் நாளும் பிறக்கிறோம்

இறைவனே!
நான் இன்றும் இருக்கிறேன்
இன்னும் இறக்கவில்லை.
அடிக்கடி மீண்டும் பிறக்கிறேன்
அத்தனைப் பிறப்பிலும் சிறக்கிறேன்.

ஒவ்வொரு நாளும்
உதயம் நிகழ்ந்தாலும்
சூரியன் எப்போதும்
செத்ததே இல்லை.

அஸ்தமனம் அதற்கு
அடிக்கடி நிகழ்ந்தாலும்
உதயங்கள் அவற்றை
உடைத்தெறிகின்றன.

மனிதன் கூட இறக்கிறான்
மானுடம் மறைந்த சரிதமில்லை.

ஒவ்வொரு நாளும்
ஒவ்வொரு மனிதனும்
பிறக்கிறான்; இறக்கிறான்.

இதில்

ஒவ்வொரு நாளும்
இறப்பவன் கோழை.
பிறப்பவன் மட்டுமே
போரிட்டுப் பெறுகிறான்.

அடிக்கடி பிறப்பது அதிசயமில்லை.
அப்படிப் பிறப்பது பாவமுமில்லை.

ஒவ்வொரு பிரசவத்திலும்
ஒவ்வொரு தாயும்தான்
செத்துப் பிழைக்கிறாள்.
இதுவுமொரு பிறப்புதான்.

உறங்கி விழிப்பதுகூட
ஒருவகையில் பிறப்புதான்.

இப்படிப் பிறப்பது
ஒருபுறமிருக்க,
புதிதாய்ப் பிறப்பது வேறாகும் – இந்த
பிறப்பே பெரிய பேறாகும்.

இந்த மண்ணில்
எல்லாப் பிறப்புக்கும்
ஏதோவொரு தவமும் வரமும்
எப்போதும் உண்டு.

இங்கே
இழந்ததைப் பற்றி
நினைப்பவர் பலபேர்;
இருப்பதில் நிறைவைப்
பெறுபவர் சிலபேர்.

நாளைக்காக ஒரு நல்ல கனவை
நெஞ்சில் எழுத நினைப்பவர் குறைவு

இங்கே
பந்தயங்களில் வெல்வதைவிட
போராட்டங்களில் பெறுவதே பெருமை.

சில்லறைகளைச் சுமப்பதைவிட
சிலுவை அத்தனைச் சுமையில்லை.

பாபங்களைப் போல்
பெரிய பாரம் இல்லை.

நமக்கெல்லாம்
நம்பிக்கை மிகவும் முக்கியம்.

யாரை நம்புவது...?
முதலில் நம்மை நம்ப வேண்டும்.

நம்பிக்கை என்பதை
"பிறரை நம்பியிருத்தல்..."
என்று புரிந்து கொண்டிருந்தால்
ஏமாற்றம் மட்டுமே
எப்போதும் அனுபவம்!

நாளுமிங்கே...
நினைப்பதற்கும் நடப்பதற்குமான
முரண்பாடுகளால்
ஓர் அனுபவத்தைப் பெறுகிறோம்.
அல்லது அடுத்தவர்க்குத் தருகிறோம்.

இந்த அனுபவங்களைப் பலர்
சோதனை என்கிறார்கள் – சிலர்
சாதனை புரிகிறார்கள்.

சோதனையும் சாதனையும்
நிகழ்வதால் அல்ல
நினைப்பதால் நிகழ்பவை...

ஒவ்வொரு பாதிப்பின் பதிப்பும்
நம்மை
அன்றாடம் புதுப்பிக்கிறது.
நம்
உணர்வுகளைப் புதிதாக்குகிறது.

இப்படித்தான்
புதிதாய் நாளும் பிறக்கிறோம்.
இந்த
பிறப்பால் பிறவிகள் சிறக்கிறோம்.





ஏர்வாடி எஸ்.இராதாகிருஷ்ணன்

# திருவதிகை வீரட்டானர்



*நுழைவாயில்*

தென் ஆர்க்காடு மாவட்டம் பண்ணுருட்டியில் இருந்து, ஒன்றரை கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது, திருவதிகை. கோயில் சிறப்புகளையும் தொன்மையையும் உடைய ஊர், இது. தற்போது ஒரு சிற்றூராகக் காட்சி அளிக்கிறது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய சமண, பௌத்த சமயங்களின் ஆதிக்கமும், சைவ, வைணவ சமயங்களின் ஆதிக்கமும் இப்பகுதியில் நிலவின.

*தொன்மைச் சிறப்பு*

பண்ணுருட்டியை அடுத்து, தென்மேற்கில் உள்ள செம்மேடு என்ற ஊரைச் சார்ந்துள்ள இடங்களில் சங்க காலத்தாழிகளும், பண்டைக் காலக் கோட்டை மதிற் சுவரின் கடைக்கால்களும் உள்ளன.

ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் திருநாவுக்கரசர் சுவாமிகளும், அவர்தம் தமக்கையார் திலகவ்தியாரும் வாழ்ந்த திருவூர், திருவதிகை.

திருநாவுக்கரசர்வாழ்ந்த திருவதிகை மண்ணைத் தம் திருவடிகளால் மிதிக்கக் கூடாது என்ற பக்தி மேலீட்டால், சுந்தர மூர்த்தி சுவாமிகள் திருவதிகைக்குள் வராமல் சித்த மடவளாகத்தில் தங்கி இறைவன்மீது பதிகம் பாடிச் சென்றார் என்னும் பெரிய புராணக் கூற்றால், இம் மண்ணின் புனிதத்தன்மையை நாம் உணரலாம்.

மனவாசகங் கடந்தார் (கி.பி. 1255 – 1300), கண்ணுடைய வள்ளலார் ஆகிய மகான்கள் இவ்வூரில் பிறந்து வாழ்ந்தவர்கள்.

*திருவதிகையின் பண்டைப் பெயர்கள்*

கடைச் சங்க கால ஏழு வள்ளல் களுள் ஒருவனான அதியமான் நெடுமான் அஞ்சி என்பவன் தகடூரை (தருமபுரியை)த் தலைநகராகக் கொண்டு ஆண்டவன். இவன் மரபினர் அதியர், அதியரையர் எனப் பெற்றனர்.

திருவதிகை, திருமுனைப்பாடி நாட்டிலும் திருக்கோவலூர் நடுநாட்டிலு மாக அடுத்தடுத்து இருந்தன.

'சதியபுதோ அதியமான் நெடுமான் அஞ்சி ஈத்த பாழி' என்ற தொடர் உள்ள கல்வெட்டு ஒன்று திருக் கோவலூரை அடுத்துள்ள ஜம்பை எனும் இடத்தில் கண்டு பிடிக்கப்பட்டது. கி.பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றாண்டு எழுத்தமைதியில் உள்ள இக்கல்வெட்டின் பொருள், 'அதியமான் நெடுமான் அஞ்சி, சமண முனிவர்கள் தங்குவதற்கு ஒரு குகையை (பாழியை) அமைத்துக் கொடுத்தான்' என்பதாகும்.

தொண்டை நாட்டில், தென் ஆர்க்காடு மாவட்டம் திண்டிவனத்திற்கு வடக்கே பதினைந்து கிலோ மீட்டர் தொலைவில் உள்ள ஒலக்கூர் அகத்தீசுவரம் ஊடையார் கோயிலின் அருகில், பழங்கால நினைவுக்கல் ஒன்றில், 'பிரிதிவி விடங்கற்கு அதிஅரைசந் செய்வித்தது' என்ற தொடர் காணப்படுகிறது. இதன் காலம் ஆறாம் நூற்றாண்டாக இருக்கலாம்.

இந்த இரு செய்திகளால் தென்னார்க்காடு மாவட்டத்தில் நடுநாடு பகுதிகளிலும், தொண்டை நாட்டின் சில பகுதிகளிலும் அதியரைசர்களின் ஆளுமை இருந்ததை அறியலாம்.

'அதியமான்களோடு தொடர்பு இருந்ததால் இவ்வூருக்கு அதிகனூர் என்ற பெயர் வந்திருக்கலாம். அது குறுகி திரு எனும் அடைமொழி பெற்று 'திரு அதிகை' ஆயிற்று என்று பேரறிஞர் ரா.பி. சேதுப்பிள்ளை கருதுகிறார்.

திருநாவுக்கரசர் கி.பி. 615க்குச் சற்று பின்னர் திருவதிகை நகருக்கு வந்திருக்கக்கூடும்.

அவர், 'அறிதற்கு அரிய சீர் அம்மான் தன்னை, அதியரைய மங்கை அமர்ந் தான் தன்னை..' என்று இவ்வூரையும் இறைவனையும் இணைத்துப் பாடுகிறார். மன்னன் ஒருவனால் கொடையளிக்கப் பெற்ற ஊர்கள் 'மங்கலம்' 'சதுர்வேதி மங்கலம்' எனப் பெற்றன. 'மங்கலம் குறுகி 'மங்கை' என்று அழைக்கப்பெறும்.

தாமரைக்கண்ணன்



செய்து, இறைவனுக்கு வேண்டிய பூமாலைகளைக் கட்டிக் கொடுத்து இன்ன பிற திருத்தொண்டுகளையும் செய்து வீரட்டானனையே அல்லும் பகலும் தொழுது வந்தார்.

தம் தம்பி மருள் நீக்கியார், தம் துறவறத்தாலும் பெற்றோர் மறைவாலும் வாழ்க்கை நிலையாமையை நினைந்து, திருப்பாதிரிப்புலியூர் (தற்போதுள்ள கடலூர்ப் பகுதி) சென்று சமண சமயத்தைச் சார்ந்து 'தருமசேனர்' எனப் பெயர் பூண்டு வாழ்ந்ததை எண்ணி எண்ணி மனம் நைந்து வாடிய திலகவதியார், 'தம்பி மீண்டும் சைவ சமயத்தைத் தழுவ வேண்டும்' என்று வீரட்டானரை வணங்கி வேண்டி வந்தார்.

திருப்பாதிரிப்புலியூர் சமணப் பள்ளியில் இருந்த தருமசேனருக்கு சூலை நோய் (தீராத வயிற்று வலி) கண்டது. சமண முனிவர்கள் மந்திரங்களாலும் மருந்துகளாலும் தருமசேனரின் சூலை நோயைக் குணப்படுத்த முயன்றும் முடியவில்லை.

தருமசேனர், தம் தமக்கையை எண்ணி வருந்தித் திருவதிகைக்கு இரவோடு இரவாக வந்து விட்டார்.

தீராத சூலைநோயைப் பற்றித் தமக்கையாரிடம் முறையிட்டார். அவர் அறிவுரையின்படி கோயிலுக்குச் சென்று 'கூற்றாயினவாறு விலக்ககலீர்..' எனத் தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடினார். '..தோற்றாது என் வயிற்றின் அகம்படியே குடரோடு துடக்கி முடக்கியிட, ஆற்றேன் அடியேன், அதிகைக் கெடில வீரட்டானத்துறை அம்மானே!' என்று இறைவனிடம் முறையிட்டார்.

திருவீரட்டானர் திருவருளால் அவருடைய கொடிய சூலை நோய் குணமாயிற்று. 'நாவுக்கரச..' என்ற இறைவன் குரல் வானொலி வழி கேட்டது. இறைவன் ஆட்கொண்டமையால், அன்று முதல் தருமசேனர் 'திருநாவுக்கரசர்' எனும் திருப்பெயர் பூண்டு, சைவ நெறிக் காவலர் ஆனார்.

பின்நாளில் வந்த அரசர்கள் காலத்தில் திலகவதியார் மடமும், திருநாவுக்கரசர் திருமடமும் இவ்வூரில்

எனவே, திருநாவுக்கரசர் காலத்தில், அவர் 'அதியரைய மங்கை' என்றார். அதியமான் தன் பெயரால் இந்நகரைக் கொடையாக அளித்திருக்கலாம்.

முதலாம் பராந்தகர் ஆட்சியின்போது (கி.பி.930) 'ஆதிராஜமங்கல்யபுரம்' எனவும், இராட்டிரகூட மன்னன் கன்னரதேவன் ஆட்சியில் (955) அதே பெயரிலும் இருந்தது. முதலாம் குலோத்துங்கன் காலத்திலும் (1102), கோப்பெருஞ்சிங்கன் ஆட்சியிலும் (1246) 'ஆதிராச மங்கல்யபுரம்' என்றே வழங்கியது.

### *வீரட்டானங்கள்*

சிவபெருமான் செய்த எட்டு வீரச் செயல்களின் திருத்தலங்களை 'வீரட்டானங்கள்' என்பர். அட்டம் – எட்டு.

வீரட்டானங்களில், ஆறு சோழ நாட்டிலும், இரண்டு நடுநாட்டிலும் உள்ளன.

சிவனின் பேராற்றல் செயல்களையும் அவை நிகழ்ந்த தலங்களையும் காண்போம்:

பிரமனின் ஒரு தலையைக் கொய்த இடம் – திருக்கண்டியூர்.

அந்தகாசுரனை அழித்த இடம் – திருக்கோவலூர்.

முப்புரங்களை எரித்த தலம் – திருவதிகை.

தக்கன் தலை தடிந்த ஊர் – திருப்பறியலூர்.

சலந்தரனைச் சங்கரித்தது – திருவிற்குடி.

கயாசுரன் தோலை உரித்து அழித்த ஊர் – திருவழுவூர்,

மன்மதனை எரித்த தலம் – திருக்குறுக்கை .

காலனைக் காலால் உதைத்த இடம் – திருக்கடவூர்.

### *திருவதிகை வீரட்டானம்*

திருவதிகையின் அனைத்துச் சிறப்புகளுள்ளும் முதன்மை பெறுவது, இங்குள்ள வீரட்டானக் கோயிலே ஆகும்.

ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இக்கோயில் செங்கல்லால் கட்டப்பெற்ற சிறிய கோயிலாக இருந்தது. 1400 ஆண்டுகளுக்கு முன்னர், அருகேயுள்ள திருவாமூரில் பிறந்து, வளர்ந்து, தம் திருமணம் தடைபட்டதால் இளமையிலேயே துறவு வாழ்க்கையை மேற்கொண்ட திலகவதியார், இக் கோயிலுக்கு வந்து இங்கேயே தங்கி நாள்தோறும் கோயிலைச் சாணமிட்டு மெழுகிச் சுற்றுப்புறத்தைத் தூய்மை

தோன்றிசைவர்களுக்கு உணவளித்துத் தங்குவதற்கு இடமும் தந்தன.

தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி ஆகிய மூன்று அசுரர்களும் ஆண்ட முப்புரத்தை இறைவன் எரித்துத் தன் பேராற்றலை வெளிப்படுத்தினார் என்பது, தல வரலாறு.

அதனால், இத்தலம் வீரட்டம் ஆயிற்று.

### கோயில் அமைப்பு

இரண்டு திருக்கோபுரங்களையும் மூன்று திருச்சுற்றுகளையும் உடையது, இக் கோயில். முன் மண்டபம், வசந்த மண்டபம், அலங்கார மண்டபம், மகா மண்டபம் எனப் பல்வேறு மண்டபங்கள் நிறைந்துள.

முன் கோபுரத்தைக் கடந்ததும், அழகிய புத்தர் சிலை. சோழர் காலக் கற்றூண்கள் நிரம்பிய திருச்சுற்று மாளிகையில் திருநாவுக்கரசர், திலகவதியார், சேக்கிழார், அறுபத்து மூவர் முதலான திருவுருவங்களைக் காண்கிறோம். தென்மேற்கு மூலையில் சதுரமான ஆவுடையார் உடன் நான்கு முகலிங்கம்! விநாயகர் கோயிலும் வடக்குச் சுற்றில் நவக்கிரகங்களின் கோயிலும் காட்சியளிக்கின்றன.

### நானிலத்தை வியக்க வைக்கும் நான்கு முக லிங்கம்

திருவாரூர் தேரில் மூன்று, நான்கு, ஐந்து முகங்களைக் கொண்ட முகலிங்கங்களைக் காணலாம்.

திருப்பதியை அடுத்த திருக்காளத்தி, திண்டிவனம் வட்டம் திருவக்கரை போன்ற இடங்களில் கருவறையிலேயே அழகிய முகலிங்கங்கள் வழிபாட்டில் உள்ளன. இங்கு திருச்சுற்றில் உள்ள நான்கு முக லிங்கமும், ஞானமும் அழகும் கொழிக்கும் அரிய கலை வடிவம் கொண்டுள்ளது.

மற்ற ஊர்களில் உண்ணாழிகை (கருவறை)யிலேயே முகலிங்கங்கள் வழிபாட்டில்இருப்பதைப்பார்க்கும்போது, இதுவும் இங்கு வழிபாட்டில் இருந்து, பின்னர் எக்காரணத்தாலோ இங்கே கொணர்ந்து வைக்கப் பெற்றிருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

### உண்ணாழிகை (கருவறை)

உண்ணாழிகையின் வெளிப்புறத்தில் இருபத்தைந்து சிவமூர்த்தங்கள் சுதைச் சிற்பங்களாக அமைந்துள்ளன.

இராவணன் கயிலை மலையைப் பெயர்த்தல், அவன் இறைவனை மகிழ்விக்க சாமவேதம் ஓதுதல், தேரில் வருதல், சிவனும் அருச்சுனனும் பெற்றுள்ள வேடர் வடிவங்கள், கண்ணன் கல் மழையைக் காத்தல், ஏகபாத மூர்த்தி, நெருப்புத்தேவன், கொற்றவை முதலான சிற்பங்கள் ஒவ்வொன்றும் எழிலார்ந்தவை.

உண்ணாழிகையில் மூலவருக்குப் பின் உள்ள முருகனுடனான சிவன் உமையாள் சுதைச் சிற்பம் பல்லவர் காலத்தில் அமைக்கப் பெற்றது.

### இறைவன் திருப்பெயர்கள்

அதிகைக் கெடில வீரட்டானத்து உறை அம்மான், திரிபுராந்தகன், கெடிலப் புனலுடையார், அதியரைய மங்கை அமர்ந்தான், அதிகை வீரட்டன் என்பன இறைவனுடைய திருப்பெயர்கள்.

காமகோட்ட நாயகி, திரிபுரசுந்தரி, பெரியநாயகி என்பன இறைவியின் திருப்பெயர்கள்.

### உண்ணாழிகை விமானம்

தஞ்சைப் பெரிய கோயில் (கி.பி. 985 – 1014) முதலாம் இராசராசனால் கட்டப் பெற்றது. அதிகைக் கோயில் விமான அமைப்பை முன்மாதிரியாகக் கொண்டுதான், இராசராசன் பெரிய கோயில் விமானத்தைக் கட்டினான் என்று வரலாற்று அறிஞர் இரா. நாகசாமி கருதுகிறார். அதிகை வீரட்டான விமானம் ஏழாம் நூற்றாண்டில் கட்டப் பெற்று ஒன்பதாம் நூற்றாண்டில் திருப்பணி செய்யப் பெற்றது.

செங்கல்லால் கட்டப்பட்டிருந்த இக்கோயில் உண்ணாழிகையின் அடிப்படையை இரண்டாம் பரமேசுர வர்மன் (705 – 710) கருங்கல்லால் அமைத்தான். ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகளுக்குப் பிறகே தஞ்சைப் பெரிய கோயில் கட்டப் பெற்றது.

### கோயிலின் வளர்ச்சி

பல்லவ மன்னர்களால் கட்டப்பெற்ற அதிகைக்கோயில், பின்னர் வந்த சோழ, பாண்டிய விசய நகரப் பேரரசர்களாலும் குறுநில மன்னர்களாலும் படைத் தளபதிகளாலும் அரசியல் அதிகாரி களாலும், மண்டபங்கள், திருச்சுற்று மாளிகை கள், கோபுரங்கள் என்று பெருவளர்ச்சி பெற்றது.



### *திருமடங்கள்*

திலகவதி, திருநாவுக்கரசர், கந்தசுவாமி திருமடங்கள் இங்கு இருந்தன. அம் மடங்களில் தங்கி இருந்தோர்க்கும், மடங்களுக்கு வரும் துறவியர்க்கும் உணவு அளிக்க நிலக்கொடை அளிக்கப் பெற்றது.

### *கொடை கொடுத்த மகளிர்*

நிருபதுங்க வர்மனின் மனைவியான அரசி வீரமாதேவியார் (கி.பி. 891இல்) ஐம்பது கழஞ்சு பொன் கோயிலுக்குக் கொடையாகக் கொடுத்தாள்.

கி.பி. 1021இல் அனுக்கி சாத்தன் இராமதேவி என்பவள் சிறப்பு வழிபாடுகளுக்கு நூறு காசும், கி பி.1110இல் பனையூர் நாடு குன்றக்கிழான் மாராயன் கற்பகன் மனைவி நாராயண நங்கைத்திரு என்பவள் ஒரு விளக்கு எரிக்க இரண்டு காசு பொன்னும் கொடுத்துள்ளனர்.

முதலாம் குலோத்துங்கன் ஆட்சியிலேயே தலைக்கோலி எனும் உயர்ந்த பட்டத்தைப் பெற்ற நாட்டிய நங்கை ஒருத்தி, கோயிலில் நாள் முழுதும் எரியும் நொந்தாவிளக்குகள் இரண்டு எரிக்க 192 ஆடுகள் அளித்தாள்.

### *பிற கொடைகள்*

இரண்டாம் பரமேசுவரவர்மன் (கி.பி.731இல்) 1826 காடி நெல்லும் 19 கழஞ்சுப் பொன்னும்....

தெள்ளாறு எறிந்த மூன்றாம் நந்திவர்மன் (856 இல்) இரண்டு விளக்குகள் எரிக்க 110 பொன்னும்...

நிருபதுங்கவர்மனின் ஆட்சியில் (885இல்) முனையகோன் இளவரையார் என்பவனால் விளக்குகள் வைக்க எண்பது கழஞ்சு பொன்னும்.. மற்றும் வேறொருவனால் (887இல்) 570 கழஞ்சு பொன்னும் கொடுக்கப் பெற்றுள்ளன.

முதலாம் பராந்தகன், உத்தம சோழன், முதலாம் இராசேந்திரன், முதலாம் குலோத்துங்கன் ஆகிய சோழ அரசர்களின் ஆட்சியில்; நிலங்களும் பொற்காசுகளும் ஆடுகளும் கொடையாகக் கொடுத்தனர், பலர்.

சேந்தமங்கலத்து அரசன் கோப்பெருஞ்சிங்கன் காலத்தில் நிலக் கொடையும், பசுக்களும் காளைகளும் அளித்துள்ளனர்.

முதலாம் வீரபாண்டியன், முதலாம் சடையவர்மன், மூன்றாம் மாறவர்மன், இரண்டாம் சுந்தர பண்டியன், விசய நகர மன்னர்கள், நாயக்கர் மன்னர்கள் ஆட்சிக் காலங்களில் கொடுக்கப் பெற்ற பல்வேறு கொடைகளும், செய்யப்பெற்ற திருப்பணிகளும் பாராட்டத்தக்கவை.

### *நரலோகவீரன் திருப்பணிகள்*

தொண்டைநாட்டில் வாலாசா பேட்டை அருகில் பாலாற்றின் தெற்கே அரும்பாக்கம் எனும் ஊரில் பிறந்து வளர்ந்தவன், நரலோக வீரன்.

இவனுக்கு அரும்பாக்கிழான், மணவிற்கூத்தன், தொண்டைமான், காலிங்கர்கோன், அருளாளன், மாநாவுஹரன் முதலான பல விருதுப் பெயர்கள் உண்டு.



திருவதிகை வீரட்டானம் புத்தர் சிலை

முதலாம் குலோத்துங்கன், அவன் மகன் விக்கிரம சோழன் ஆட்சிகளில் அவர்களுக்குப் படைத்தலைவனாகவும் அரசியல் அதிகாரியாகவும் இவன் விளங்கினான்; பல கோயில்களின் திருப் பணிகளைச் செய்தவன், இவனுடைய திருவதிகைத் திருப்பணிகள் போற்றத் தக்கவை. அத்திருப்பணிகளை விளக்கும் இருபத்தைந்து வெண்பாப் பாடல்கள் இங்குள்ள மண்டபத்தின் இரண்டு வட்டத்தூண்களில் பொறிக்கப் பட்டுள்ளன.

நரலோகவீரன், திருவதிகைக் கோயிலின் பெரிய திருச்சுற்றினை மாற்றிக் கட்டினான்; யாக சாலை மண்டபம், மடைப்பள்ளி, கிணறு, நூற்றுக்கால் மண்டபம், இரண்டு திருக்குளங்கள், நந்தவனம், பெரிய ஏரி, இறைவன் ஆடும் அரங்கம், ஆகியவை அமைத்தான்.

நடராசருக்கும் அம்பாளுக்கும் கோயில் கண்டு முத்தணிகள் சாத்தினான்; பொன்னால் ஆன நைவேத்திய உணவு பரிமாறும் பரிகலன்கள் கொடுத்தான்.

வாகீசர் (திருநாவுக்கரசர்) எழுந்தருளக் கோயில் சமைத்தான்.

கோயில், நெய் செலவுக்காக பாற்பசுக்கள் ஐநூறு அளித்தான்.

இத்தகைய அறக்கொடைகளால் 'கண் அகன்ற ஞாலத்து அறம்செய் நரலோகவீரன்' எனவும் 'பொன்மழை யோடு ஒக்கத் தருங்கொடையோன்' எனவும் புகழப் பெற்றான்.

### *நிறையுரை*

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சிறப்புகளைக் கொண்டது, இந்த வட்டாரம்.

கெடில நதிக்கரையில் அமைந்த இந்த ஊரும் கோயிலும் காலத் தடைகளுக்கு அப்பாற்பட்டவை.

காலம் கடந்து, இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தனிப் புகழ் பெற்று விளங்கிச் செம்மாந்து நிற்பது, இக்கோயில்!

எத்தனைப் பெருநிலமன்னர்கள், குறுநில மன்னர்கள், பிற்காலத்தில் இவ்வூரைச் சேர்ந்த செட்டியார்கள், ஏனையோர், பொதுமக்கள் இந்தக் கோயிலை வணங்கி வழிபட் டிருப்பார்கள்!

நாமும் திருவதிகை வீரட்டானனை வணங்கி, கோயில் சிறப்புகளைக் கண்டு மகிழ்வோமாக!

# நடுகல்லும் நவகண்டமும்



மைசூர் அரண்மனை வளாகம் கர்நாடகத் தொல்பொருள் ஆய்வு அருவலகம் முன்புறம்

**1. நடுகல்**

*"வீளை அம்பின் விழுதொடை மழவர்*
*நாளா உய்த்த நாமவெஞ் சுரத்து*
*நடைமெலிந் தொழிந்த சேட்படர் கன்றின்*
*கடைமணி உகுநீர் துடைத்த ஆடவர்*
*பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்*
*பீலிசூட்டிய பிறங்குநிலை நடுகல்"*

– (அகநானூறு 131)

என்று மதுரை மருதனிள நாகனார் கூறியுள்ளார். இதன் மூலம், சங்ககாலத்தில் போரில் ஈடுபட்டு வீரமரணம் அடைந்தவர்களை மண்ணில் புதைப்பதுடன் அவர்நினைவாக நடுகல் நடுவது வழக்கம்; அவ்வாறு நடப்பட்ட நடுகல்லில் இறந்தவரின் பெயர், புகழ் ஆகியவற்றை எழுதிவைப்பதும் அதை நீராட்டி, பூச்சூட்டி வழிபடுவதும் அக்கால மக்களின் வழக்கமாக இருந்திருக்கிறது என்பதைச் சங்க நூல்களின் வாயிலாக நாம் அறிகின்றோம். மேலும் அண்மைக் காலமாகத் தொல்பொருள் ஆய்வுத் துறையினரும், ஆய்வாளர்களும், தாம் தமிழகத்தே ஆங்காங்கே கண்டவற்றை நாளேட்டின் மூலமாக நடுகல்கள் பற்றிய செய்திகளை அறிவித்து வருகின்றனர். மேலும் தாம்கண்ட நடுகற்களை எல்லாம் தொல்பொருள் துறையினர் ஓரிடத்தே கொண்டுவந்து வைத்து அவற்றைப் பாதுகாத்தும் வருகின்றனர்.

படம் 1இல் தாங்கள் காண்பது கருநாடக மாநிலத்தில் உள்ள மைசூரில் தொல்பொருள் ஆய்வுத் துறையினர் அரண்மனை வளாகத்தில் வைத்திருப்பவற்றில் ஒன்றாகும்.

இப்படத்தில் மூன்று கட்டமான சிற்பங்கள் உள்ளன. அடிப்பாகத்தில் உள்ள முதல் கட்டத்தில் குதிரை மேலுள்ள வீரன் ஒருவனைத் தரையிலிருக்கும் மற்றொரு போர்வீரன் தன் கையில் உள்ள வாளினால் எதிர்த்துப் போரிடுகின்ற காட்சியாகும்.

இரண்டாவது கட்டத்தில் உள்ள சிற்பம் தரைமீது நின்று போரிட்ட வீரன் மாண்டுபோக அவன் வீரசொர்க்கம் அடைகின்ற காட்சியைக் காட்டுவதாகும். விமானத்தின்மேல் வீரன் மண்டியிட்டு நிற்க அவன் இருகைகளையும் இருபக்கத்தில் இருபெண்கள் அவன் கைகளைப் பிடித்தபடி உள்ளனர். மற்றைய கைகளில் வெண்சாமரம் பிடித்துள்ளனர்.



(1) வீரன் கல் – பேரணி (நடுக்கல்) ஆலக்கிராமம் அருகில்

இக்காட்சி அவனை மேலுலகத்திற்கு அழைத்துச் செல்லும் தேவமாதராவர்.

மூன்றாவது கட்டத்தில் உள்ள காட்சி வீரன் சிவலோக பதவி அடைந்ததைச் சிவலிங்கத்தின் அருகில் அவன் கைகூப்பி அமர்ந்திருக்கும் காட்சியும் மறுபக்கம் நந்தி யருகில் பெண்ணொருத்தி வழிபாடு செய்வது போன்ற தோற்றமும் எடுத்துக்காட்டுகிறது.

**முத்து. எத்திராசன்**

போரில் இறந்துபட்ட வீரனைத் தேவமாதர் அணைத்துப் போக அவன் மேனிலை அடைவான் என்பதைப் புறப்பொருள் வெண்பாமாலை, நொச்சிப்படலத்தின் 7ஆம் தலைப்பில் உள்ள, 'எயில்தனை அழித்தல்' என்னும் செய்தி மூலம் அறிவிக்கிறது. அதன் கொளு பின்வருமாறு.

*"துணிவுடைய தொடுகழலான்*
*அணிபுரிசை அழிவுரைத்தன்று* – என்பது.

'அழகிய மதிலிடத்தே தெளிந்த ஓசையையுடைய வீரக் கழலையுடைய நொச்சிமறவன் இறந்தமையைக் கூறுவது' என்பது இதன் பொருள். இனி வரலாறு என்னும் தலைப்பில் உள்ள செய்தியைக் காண்போம்.

*"அகத்தன ஆர்கழல் நோன்றாள் அரணின்*
*புறத்தன பேரெழில் திண்தோள் - உறத்தழீஇத்*
*தோட்குரிமை பெற்ற துணைவியார் பாராட்ட*
*வாட்குரிசில் வானுலகி னான்"*

– என்பது வரலாறு கூறும் வெண்பா.

'வீரக் கழலையுடைய தனது வலிமையையுடைய கால்கள் அரணினுள்ளே வீழ்ந்தன. போர்த்தொழில் வல்ல அழகிய திண்ணிய தோள்கள் அரணின் புறம்பே வீழ்ந்தன. வாளினையுடைய தலைவனோ தனது தோளைத் தழுவும் உரிமையையுடைய வளையினை அணிந்த வானவர் மகளிர் இறுக அணைத்துப்பாராட்டும்படி மேனிலையுலகத்தின் கண் எய்தாநின்றான்' என்பது இதன் பொருள்.

படத்தில் காண்பதுவும் இலக்கியத்தில் கூறப்படுவதும் ஒன்றுபோல இருக்கிறதல்லவா! இதனால் போரில் இறந்தவர்களுக்கு இப்படியும் நடுகல் நட்டு வழிபட்டு வந்தனர் என்பது தெரிகிறது. ஏனெனில் பெரும்பாலும் நமக்குக் கிடைக்கும் நடுகற்கள் கத்தியும், கேடயமுமாகக் காணும் வீரன் சிற்பங்கள் மட்டுமே. சிலவற்றில் மட்டுமே அவன் மனைவியின் உருவம் இருக்கும்.



நவகண்டம்
திருவக்கரை திண்டிவனத்திலிருந்து புதுச்சேரி போகும் சாலையில்



மானாம்பதி — திருப்போரூரிலிருந்து திருக்கழுக்குன்றம் போகும் வழியில் உள்ள ஊர்
சாவான் சிலை

படம் 17ஐக் காணுங்கள். இப்படத்தில் காணப்படும் சிற்பம் தென்னார்க்காடு மாவட்டம், திண்டிவனத்தின் அருகில் உள்ள பேரணி என்னும் ஊரில் உள்ளதாகும். இச்சிற்பம் அவ்வூரில் உள்ள செல்லியம்மன் கோயில் வளாகத்தில் காணப்படுவது.

படத்தில் வீரன் ஒருவன் குதிரைமீது அமர்ந்து செல்ல. கீழே வலக்கையில் கேடயமும் இடக்கையில் கத்தியை ஓங்கியபடியும் வீரன் ஒருவன் போரிடுவது போன்றுள்ளது.

இந்நடுகல் அவ்வூரில் நடைபெற்ற போரைச் சுட்டிக் காட்டுவதாக உள்ளது. பேரணி என்று அவ்வூருக்குப் பெயர் என்று கேள்விப்படும் போது பெரிய அணியாக இருந்து மறவர்கள் அவ்வூரில் போரிட்டிருக்கின்றார்கள் என்பதை ஊகிக்க இடமளிக்கிறது. ஆகக்கூடி இந்நடுகல் போரில் இறந்த வீரன் ஒருவனின் நினைவுச்சின்னம் என்பது தெளிவாகிறது.

படம் 11ஐக் காணுவோம். இப்படத்தில் உள்ள சிற்பம் நடுகல்லைக் குறிப்பதாகும்.

இச்சிற்பத்தில் வீரன் ஒருவன் தன் வலக்கையில் வாளை ஓங்கியபடி நிற்க, இடக்கையில் துப்பாக்கி பிடித்தபடி உள்ளான். இவன் பக்கத்தில் பெண்ணொருத்தி, தன் வலக்கையில் சாமரை போன்ற ஏதோ ஒன்றைப் பிடித்துக்



சாவான் சிலை 13-4-96 பனையத்தம்மன் கோயில் பின்புறம்

கொண்டும் இடக்கையில் நீர் சொம்பு ஏந்தியபடியும் உள்ளாள். இவள் வலப்பக்கத்தில் வீரன் ஒருவன் வில், அம்பு ஏந்தியபடி உள்ளான். இவனுக்கு இடப்புறத்தில் சிறுமி ஒருத்தி காணப்படுகிறாள்.

துப்பாக்கி ஏந்திய வீரன் ஒருவன் பெரிய அளவில் காட்டப்பட்டுள்ளான். இதைக் கொண்டு அவன் தலைவன் எனச் சுட்டப்படுகின்றான். அவள் அருகில் உள்ளவள் அவன் மனைவியாக இருக்கவேண்டும். சிறிய அளவில் காட்டப்பட்டுள்ள வீரன், அவர்களுடைய காவலனாக (மெய்க்காப்பாளனாக)இருக்கவேண்டும். சிறுமியாகக் காணப்படுபவள் அவர்களுடைய புதல்வியாக இருக்கலாம்.

இறந்துபட்ட தலைவன் தன் குடும்பத்தோடு போரில் மாண்டவன் என்பதை இந்நடுகல் நமக்கு எடுத்துக்காட்டு கிறது எனக் கூறலாம். வீரனின் தலைக்கொண்டை, அணிந்திருக்கும் நகை, உடை முதலியவற்றைக் கொண்டும் பெண்ணின் கொண்டை, ஆடை அணிகலனைக் கொண்டும் இந்நடுகல் மிகவும் பிற்காலத்தனவாக இருக்க வேண்டும். கொண்டையின் தோற்றம் நாயக்கர் பாணியில் உள்ளது. கையில் உள்ள துப்பாக்கியைக் கொண்டு நம் நாட்டில் அந்நியர் வருகைக்குப்பின் ஏற்பட்ட துப்பாக்கிப் போரை நினைவுபடுத்துகிறது.

மொத்தத்தில் இந்நடுகல்லின் காலம் கும்பனியார் ஆட்சியை எதிர்த்துப் போரிட்டு மாண்ட குறுநில மன்னன் அல்லது படைத்தலைவன் நினைவுச் சின்னம் என்றே கருத வேண்டும். இதைக் கொண்டு நாம் அறிவது சங்ககாலத்திலிருந்த இந்நடுகல் முறை ஆங்கிலேயர் ஆட்சி நம் நாட்டில் ஏற்பட்ட காலம் வரை இருந்திருக்கிறது என்பது உறுதியாகிறது.

இந்நடுகல் திருவண்ணாமலை (வட ஆர்க்காடு) மாவட்டம், ஆரணி வட்டம், புத்தூர் என்னும் ஊரிலிருந்து எடுத்து வரப்பட்டு ஆவணக் காப்பகத்தாரால் வேலூர் அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளது.

## 2. நவகண்டம்

போரில் மாண்டவர்க்கு நினைவாக எடுக்கப்படும் கல், நடுகல் என்று பார்த்தோம். இனி தன் நாட்டு வேந்தன் போரில் வெற்றிபெற வேண்டும் என்று அவன்மீது அன்பு கொண்ட போர்வீரன் (மெய்க்காப்பாளன்) அரசன் வெற்றி பெற்றமையை அறிந்து சூளுரைத்தபடி கொற்றவை முன் தன் தலையை அரிந்து காணிக்கையாக்குவது அவிப்பலி (நவகண்டம்) என்று பெயர். மக்கள் இதைச் சாவான்சிலை என்று கூறுவர். ஆவிப்பலி என்பதன் குறுக்கமே அவிப்பலியாகும். ஆவியைப் பலியிடுதல் என்பது இதன் பொருள் என்பது நாம் சொல்லாமலே விளங்கும்.

*"ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச்*
*சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்த்துத்*
*தொல்லுயிர் வழங்கிய அவிப்பலி"*

- என்பது தொல்காப்பியம் புறத்திணையில் (17ஆம் பாடல்) காணப்படும் வாசகம்.

இதையேபுறப்பொருள் வெண்பாமாலை, வாகைப்படலத்தில்

*"வெள்வாள் அமருட்*
*செஞ்சோ றல்லது*
*உள்ளா மைந்தர்*
*உயிர்ப்பலி கொடுத்தன்று"* (22:30)

என்று கூறுகிறது.

'செஞ்சோற்றுக் கடன் அன்றிப் பிறிது நினையாத மறவர் தெளிந்த வாட்போரின் கண் தமது உயிரைப் பலியாகக் கொடுத்தது' என்பது பொருள்.

'தம் அரசனுக்கு உற்றுழிப் போர்க்களத்தின் கண் செஞ்சோற்றுக் கடனினைந்து மறவர்தம் உயிரை வழங்கியது அவிப்பலி என்னும் துறையாம்,' என்று விளக்குவர் உரையாசிரியர்.

*"சிறந்த திதுவென செஞ்சோறு வாய்ப்ப*
*மறந்தரு வாளமர் என்னும் - பிறங்கழலுள்*
*ஆருயிர் என்னும் அவிவேட்டார் ஆங்கஃதால்*
*வீரிய ரெய்தற்பால வீடு"*

– என வரலாறு', என்னும் பகுதி விளக்குகிறது.

'மறவர் ஒழுக்கங்களில் சிறப்புடையது இதுவே என்று கருதி செஞ்சோற்றுக் கடன் தப்பாதபடி சினத்தைத் தருகின்ற வாட்போர் என்கின்ற பெரிய நெருப்பினுள்ளே தமது பெறுதற்கரிய உயிர் என்னும் ஆவியைக் கொடுத்தார்கள் இம்மறவர்கள். மறத்தன்மையுடையோர் கிட்டுதற்கரிய பகுதியையுடைய துறக்கமும் அவ்விடத்தேயுள்ளதாகும்', என்பது வரலாற்றின் வாசகம்.

இதனைக் கலிங்கத்துப்பரணியாசிரியராகிய ஒட்டக்கூத்தர் கோயில் பாடியது. என்னுமிடத்தில் IIIஆவது பாடலாகப் பாடியுள்ளார்.

பாடல் வருமாறு:

*அடிக் கழுத்தின் நெடுஞ்சிரத்தை அரிவராலோ*
*அரிந்தசிரம் அணங்கின்கைக் கொடுப்பராலோ*
*கொடுத்தசிரம் கொற்றவையைப் பரவுமாலோ*
*குறையுடலம் கும்பிட்டு நிற்குமாலோ"*

என்னும் பாட்டில் அவிப்பலியைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது காண்க.

இவ்வழக்கம் தமிழ்நாட்டில் சில இடங்களில் காணப்படும் நவகண்டங்களைக் கொண்டு அறிய முடிகிறது. ●



வீரன் கல் (பேரணி) ஆலக்கிராமம் அருகில்

# ப்ரபஞ்சம்

("தூசியின் நர்த்தனம்", "பஞ்சபூதங்கள்", "அகண்ட அப்பால்" போன்ற காவியங்கள் இயற்றி உலகக் கவிஞர்களைப் பூரிக்க வைத்திருக்கிறார் கிருஷ்ணா எழுபது ஆண்டுகளாக)

ப்ரபஞ்சமே!
அகண்ட பரப்பில் மலர்ந்த உன்
ஜாதகத்தைக் கணிக்கத்
துணிந்து விட்டேன்.
மோகன மௌனத்தில் மூழ்கிய இறைவன்
துயிலை அகற்றித் துடித்தெழுந்தாய்,
பயங்கர ஒலியில் மிரண்ட நீ.

அன்று தொடங்கிய பயணம்
இன்றும் நடக்கிறது ஓய்ச்சலின்றி.

உன்னுடன் பிறந்த நவக்கிரகங்கள்
பகலவனின் பகடைக் காய்கள்.
ஆனால் உன் பிடிப்பில் சுழலும் மண்டலங்கள்
கோடி கோடி பல கோடி நூறாயிரம்.

ப்ரபஞ்சமே!
நீ ஏன் பிறந்தாய்?
எங்கே பிறந்தாய்?
எப்படிப் பிறந்தாய்?
சொல், ஒரு வார்த்தை சொல்!

எத்தனை விடிவுகள்; எத்தனை முடிவுகள்;
எத்தனை மலர்ச்சி; எத்தனை வீழ்ச்சி!

மௌனம் முடிந்து தொடரும் உன் கதை
-இல்லை,இல்லை, நீ ஒரு காவியம்,
காலம் தீட்டும் ஓவியம்.
மோனத்தில் மூழ்கும் முனிவர்கள்,
வானத்தில் திரியும் விண்ணவர்,
உண்மையை நாடும் ஞானிகள்
உன்னைக் கண்டு விண்டனரா?

இல்லையேல் ஏன் இந்த முடிவிலாச் சுழல்கள்,
மதியைத் தொடும் முயற்சிகள்,
கோள்காட்டும் கோடுகளை மிதித்து
அந்தரத்தில் உலவும் சிதறல்கள்!

ப்ரபஞ்சமே!
என் உள்ளத்தின் அடிவானத்தில்
உன் சாம்ராஜ்யக் கனவுகளைச் சந்திக்கிறேன்.
என்று தோன்றினாய், என்று மறைவாய்
என்ற குழப்பங்களில் மூழ்காமல்
நீ எங்கு இருக்கிறாய் என்பதை
பூரணமாக உணர்ந்து விட்டேன்.

வெறியில் தோன்றினேன்,
வெறியில் வாழ்ந்தேன்,
வெறியில் மடிகிறேன்.

ப்ரபஞ்சமே!
பஞ்சபூதத் தோற்றத்தில்
நீயும் புவியில்
நடமாடுகிறாய்!



உன் உழைப்பின் ஜ்வலிப்பை
ஓயா அலைகளில் காண்கிறேன்.
உன் பயங்கரச் சீற்றத்தை
அலறும் இடியில் பார்க்கிறேன்.
உன் கருணையின் வீச்சை
பசுமையின் விரிப்பில் மகிழ்கிறேன்.

## டாக்டர் கிருஷ்ண ஸ்ரீநிவாஸ்

கோடி கோடி யுகங்கள் முன்
மாறி மாறி உதித்துவரும் நீ
இப்போதே, இன்றே, இந்தக்கணமே
தோன்றித் தேயும் தோற்றம்!

ஒரே ஒரு நொடியில்
மூவாயிரம் உலகைக் காணலாம்
என்கிறான் புத்தன்!
எல்லாரும் போதிசத்வராக வேண்டும்,
சத்தியம், தர்மம், நெறிவழி நடந்து
எல்லாரும் புத்தர்களாக வேண்டுமென்று,
போதி மரத்தடியில் ஞானஒளி பெற்று
மானிடம் நிலைக்கப் புலம்புகிறான்.
ஆண்டவன் அடிமைகள் நாங்கள்,
உன் தீர்ப்பே எங்கள் வாழ்வு
என்று கதறுகிறான் இயேசு.

ஆண்டவன் ஒருவனே!
அவன் போதித்த திருக்குர்ஆனை
வாழ்வில் நடத்தி வாழுங்கள்
என்கிறான் நபி நாயகம்.



நீயே ஆண்டவன்! அவனே நீ!
இதை உணர்ந்து முக்தி அடைவாய்,
என்கிறான் சங்கரன்.

பனிக்கடலை விட்டு வந்து,
நம் மனக்கடலில் வாழும் மணவாள நம்பியை,
நின் சரண் அல்லால், வேறு சரண் இல்லை
என மனம் உருகி உருகி பரமபதம் பெறுவாய்,
என்கிறான் இராமானுஜன், ப்ரபத்தியை உணர்ந்து!
போர்க்களத்தில் கண்ணன் கூறிய கீதை
எனக்கு ஒன்றும் புரியவில்லை.
நல்லெண்ணம், நற்செய்கை, நல்வார்த்தை
இதுவே போதும் என்று உணர்ந்து,
ப்ரபஞ்சமே!
உன் மாயா லீலைகளை நினைத்து நினைத்து உருகி
உன்னையே அடைய,
உன் அகண்ட பரப்பில் கலக்க
நீ நீடிக்கும் வரை நானும் நீடிக்க
துடிக்கிறேன் தாயே!
என்னை ஏற்றுக்கொள்.
நீயே நானாக
நானே நீயாக, ஏற்றுக்கொள்.
என்னை மட்டும் அல்ல, அன்னையே!
என் போன்ற தெளிந்த ஜீவன்களை
உன் அகண்ட சுடரில் சேர்த்துக்கொள்!

என் யுகாந்தரப் பயணம்
இன்றோடு முடியட்டும்.

மானுடம் வாழ வந்தவளே!
என் மீதுதான் உனக்கு
எத்தனை கருணை! வாத்ஸல்யம்! ப்ரேமை!

அரங்கத்தின் முதல் வீட்டில் பிறந்து,
அலைமோதும் அல்லல்களில் மூழ்கி எழுந்து நின்று
நிலைத்த கவிதாஸனாக என்னை மாற்றினாய்!
உலகெங்கும் என் கவிதைகளை உலவவிட்டாய்!

ப்ரபஞ்சமே!
உன் அமர தாண்டவத்தை
தூசியின் நடனம் என்று கண்டேன்!
சொற்களில் விரித்தேன்!
உலகெங்கும் நடமாட விட்டேன்!
வெற்றியும் பெற்றேன்!



பிரபஞ்சமே!
பஞ்சபூதங்கள் என்ற போர்வையில்
மூன்று காலங்களாக நடிக்கும் நீ
எனக்கு எத்தனை தோற்றங்கள் காட்டினாய்
எனைப் பூரிக்க வைத்தாய்!

உலக நாடுகளில் என்னை நடக்கவிட்டாய்.
ஜெர்மனி, லண்டன், சைனா, பெய்ரூட்,
அமெரிக்காவின் குபேர நகரங்கள்,
கொரியா, ஜப்பான், தாய்லாந்து, ஹாங்காங், சிங்கப்பூர்,
ஸ்பெயின், பிரான்ஸ், பெல்ஜியம், பிலிப்பைன்ஸ், இலங்கை,
கிரீஸ், இத்தாலி, மொராக்கோ, தாஷ்கண்ட்,
ரஷ்யா, ஈரான், ஜோர்டான், துருக்கி...

போதும், அன்னையே போதும்
உன் தீராத விளையாட்டு,
ஓயாத லீலைகள்!
என்னைப் பகடைக்காயாக உருட்டாதே!
படமுடியாது இனித் துயரம்!
பட்டதெல்லாம் போதும்!

நீ எனக்கு இட்ட ஆக்ஞைகள்,
நீ என்னைத் தோற்றுவித்த காரணங்கள்,
நான் செய்ய வேண்டிய பணிகள்
எல்லாம் முடிந்து விட்டன.
வெற்றிகரமாக முடிந்து விட்டன.
குறை ஒன்றுமில்லாமல் வாழ்ந்து விட்டேன்.
இறுதிக் கட்டத்தை அடைந்து விட்டேன்.
வெகு தூரத்தில் இல்லை என் இறுதி.
எண்பத்து நான்கு ஆண்டுகள் கடந்து விட்டேன்.
என் சொற்சிலம்பத்துக்கு ஓய்வு கொடு!
ரொம்பவும் விளையாடி விட்டேன்,
வார்த்தை வீச்சில்!

நீ என் கவிதைகளில் பேசிய தத்துவங்கள்,
கற்பனை விளக்குகள்,
காவிய வெற்றிகள்,
தூய மொழி பெயர்ப்புகள்
எல்லா நாட்டுக் கவிஞர்களின் உள்ளங்களில்



சிம்மாசனம் ஏறி விட்டன.
அவர்கள் அன்பு என்றென்றும் நீடிக்கட்டும் என்று
அருள் புரிவாய், அன்னையே!




என்னை ஆளாக்கிய அன்னையே!
என் படைப்புகளுக்கு
அமரத்வம் அளித்து
என்னை வாழ வைத்த தாயே!
உன்னை நான்
எப்படிப் போற்றுவேன்?
எப்படி வாழ்த்துவேன்?

நான் மறைந்தாலும்,
எனக்குப்பின் பாரத தேசத்தில்
மகாகவிகளை உருவாக்கி
சர்வதேசக் கவிஞர்களுக்கு இணையாய்
அவர்கள் படைப்புகள் ஜ்வலிக்கட்டும்!
அவர்கள் வெற்றி அடையட்டும்,
அமரர்களாக ஆகட்டும்!
இதுவே என் பிரார்த்தனை!
என் ஆசை! என் கதறல்! என் அலறல்!



என் வாழ்வின் இறுதி நேரத்தில்
உன் நினைவு எனக்கு வராது எனினும்
அப்போதைக்கு இப்போதே சொல்லிவிட்டேன்.
என்னை நீயாக ஏற்றுக்கொள்!
ப்ரபஞ்சம் முழுவதும்
உன் முடிவிலா சாம்ராஜ்யம் எங்கும்,
உன் நிழலாக நான் நடமாடுவேன்!
உன் லீலைகளைக் கண்டு களிப்பேன்!
நானும் நீயாவேன்!
நீயும் நானாவாய்!
அன்று பிரிந்தோம்!
இன்று இணைந்தோம்!



ப்ரபஞ்சமே!
உன் லீலா விநோதம்
எனக்கு மட்டும் போதாது!
உலகில் தோன்றிய யாவரும், யாவையும்,
இந்த மாயா வட்டத்தில்
உருண்டு, புரண்டு ஒன்றாவோம்!







ஆற்றுகால் தேவி மணக்காடு – திருவனந்தபுரம்
வண்ண ஓவியம் – ரமணி ரங்கநாதன்
அமுதசுரபி – தீபாவளி மலர் 1997

# பெண்களின் சபரிமலை

ரமணி ரங்கநாதன்

திருவனந்தபுரத்தைச் சேர்ந்த மணக்காடு என்ற பகுதியில் ஆற்றங்காலை ஒட்டி அழகிய கோயில் ஒன்று உள்ளது. ஆற்றங்காலை ஒட்டி அமைந்திருப்பதால் அக்கோயில் பகவதி அம்மனை ஆற்றுகால்தேவி என்றே அவ்வூர் மக்கள் வழிபடுகிறார்கள். கண்ணகி கோவலன் கதைக்கும் அந்தக் கோயிலுக்கும் நிறைய சம்பந்தம் இருப்பதால் கோயிலின் வெளிப்பக்கம் முழுவதும் கண்ணகியின் கதையை சிமெண்ட்டினாலான பதுமைகளாகச் செய்து வைத்திருக்கிறார்கள். மதுரையை எரித்தபின் உக்கிரம் குறையாதவளாக நடந்துவந்த கண்ணகி அந்தக் கோயிலின் மண்டபத்தில் தங்கி ஒய்வு எடுத்தாள் என்று பலர் கூறுகிறார்கள். காலை ஐந்து மணியிலிருந்து எப்போதும் இங்கே பட்டாசுகளின் சப்தம் கேட்டுக்கொண்டே இருக்கும். அதற்கென்று தனிக் கடையும், வெடித்துப் போட இடமும் ஒதுக்கி இம்மாதிரி வெடி வழிபாடு செய்து தங்களது பிரார்த்தனைகளை நிறைவேற்றுவது அவ்வூர்ப் பெண்களின் வழக்கம்.

ஒரு குறிப்பிட்ட மாதத்தில் லட்சக்கணக்கான பெண்கள் ஒன்றுகூடி கோயிலின் உட்பக்கமிருந்து தொடங்கி ரோடுகளின் இரண்டு பக்கமும் செங்கல் வைத்து அடுப்பாக்கி பொங்கலிட்டு அம்மனுக்கு நைவேத்தியம் செய்வது அக்கோயிலின் சிறப்பான பண்டிகைகளில் ஒன்று. அதுசமயம் ஆண்களை அந்தப் பக்கம் அனுமதிப்பதில்லை. அதனால் அக்கோயிலை பெண்களின் சபரிமலை என்கிறார்கள். இதுபோன்ற பொங்கலை அவ்வூர் பெண்கள் மட்டுமன்றி, வெளிநாட்டுப் பெண்களும் சேர்ந்து கொண்டு கூடிச் செய்து மகிழ்கிறார்கள். இந்த 'பொங்கல்' வரும் சமயம் ஒரு வாரம் முன்பிருந்தே மிகவும் ஊர்சுத்தமாகவும் அழகாகவும் அலங்கரிக்கப்பட்டு விழாக்கோலம் பூண்டு விடுகிறது. கோயிலில் இருந்து கொண்டுவரப்படும் தீபச்சுடர், தொடர் ஓட்டமாக அடுப்புப் பற்ற வைக்க, ஒரே சமயம் பெண்கள் அதுவும் லட்சக்கணக்கான பெண்கள் ஒரே நேரத்தில் வெறும் தென்னை ஓலை, மட்டைகளைக் கொண்டு அடுப்பு ஏற்றி பொங்கல் வைப்பதைக் காண மிகவும் வியப்பாகவும், நேர்த்தியாகவும் இருக்கும்.

முழுப் பட்டினியாக விரதம் இருந்து சர்க்கரைப் பொங்கல், வெல்லக் கொழுக்கட்டை, வெல்ல மாவு உருண்டை, பாயசம் போன்றவற்றை ரோட்டின் ஓரத்திலேயே செய்து மாலை நாலு மணிக்கு மேல் கோயில் பூசாரி வந்து நைவேத்தியம் செய்த பின்பே பெண்கள் தங்கள் விரதத்தை முடித்துக் கொள்கிறார்கள். அது சமயம் கோயிலில் தாரை தப்பட்டைகள் சங்கு ஆகியன முழங்கும். வானத்திலிருந்து ஹெலிகாப்டர் மூலம் மக்களின் மேல் பூக்களும் தூவுவார்கள். பெண்களின் சபரிமலை என்று அழைக்கப்படும் அந்த மணக்காடு ஆற்றுகால் பகவதி தேவியின் படத்தைத்தான் முன் பக்கத்தில் காண்கிறீர்கள். ●



போட்டோ
ஹரி

## தனக்கென்று எதையும்...

வேடந்தாங்கல் சுகுணன்

பணத்தைச் சேமித்துச் சேமித்தே
வாழ்க்கை அஸ்தமித்துப் போனதால்
உன் அடிமனத்தில்
ஏன் உறுத்தல்?

வாரிசுகளை வளமாக்க வேண்டி
உரமாகிப் போன
நடுத்தர .வர்க்கத்து நாயகனே,
எழுந்து நில்!



உன் சிந்தனையைக் கூராக்கு
செயல்களை நேராக்கு...
சொந்த பந்தங்கள் மட்டுமே
சொர்க்கம் ஆகாது!
அன்புக்கு ஏங்கும்
ஆதரவற்றவர்களின் கண்ணீரைத்துடைக்க
உன் கைவிரலை நீட்டு!
அள்ள அள்ளக் கொடுக்கும்
அமுதசுரபி
தனக்கென்று எதையும்
தள்ளி வைத்துக் கொள்வதில்லை!

# திருஆலவாயில் ஒரு நாள்....

குன்றக்குடி பெரியபெருமாள்

அங்கயற்கண்ணி, திருஆலவாய் அன்னை மீனாட்சியை 'உயிரோவியம்' என உள்ளார்ந்து போற்றிப் பாடினார் அருளாளர் குமரகுருபரர். அதுவும் 'திருவுள்ளத்தில் அழகொழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிரோவியம்' என்றார். எவருடைய திருவுள்ளத்தில்? எழுதுபவர் யார்? பார்த்திருப்பவர் எவர்? ஆம். புவனங் கடந்து நிற்கும் சிவ பரம்பொருளான சொக்கேசர், எழுதிப் பார்த்துப் பார்த்துப் பரவசம் கொள்வாராம்! *"எறிதரங்கம் உடுக்கும், புவனம் கடந்து நின்ற ஒருவன் திருவுள்ளத்தில், அழகொழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிரோவியமே!"* என்பது குமரகுருபரர் அருளிய திருவாக்கு. இத் திருவாக்கைச் செவிமடுத்த அன்னை, சிறு குழந்தையாக ஓடி வந்து, முத்தாரம் ஒன்றை அருட்கவிஞர் குமரகுருபரரின் கழுத்தில் அணிவித்து முகம் மலர்ந்ததாக ஒரு செய்தி உண்டு.

பதினேழாம் நூற்றாண்டில், மதுரையைத் தலைப்பதியாகக் கொண்டு, ஆட்சி செய்த மாமன்னர் திருமலை நாயக்கர் திரு முன்னர், அங்கயற் கண்ணி ஆலயத்து ஆறு கால் மண்டபத்தில், அருளாளர் குமரகுருபரர், தாம் இயற்றிய 'மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்' சிற்றிலக்கியத்தை அரங்கேற்றுகிறபோது, நடந்த அருள்பாலிப்பு அற்புத நிகழ்ச்சி இது!

இத்தகைய அன்னையின் அருள்பாலிப்புத் திருவருள் நிகழ்ச்சிகள் ஆயிரம்! ஆயிரம்! அண்டங்கள் சராசரம் யாவையும் தானே ஆக்கிக் கொண்டருள் புரியும் அன்னை, மாமதுரையில் 'மீனாட்சி' என்னும் பெயர் விளக்கம் பெற்ற பெருமாட்டி. அன்னையின் திருவிழிகள் மீனைப் போல வடிவம் உடையவையாக இருப்பதால், மீனாட்சி என்னும் திருநாமம் வந்தது, என்பர். வடிவால் மீனை ஒத்திருந்ததோடு, பண்பாலும் அன்னையின் திருநயனங்கள் மீனை ஒத்திருப்பவை. எப்படி? மீன், முட்டைகளை இட்டு, அவற்றைத் தன் பார்வையினாலே பொரியும்படி செய்யும் அபூர்வத் தன்மை உடையது. அவ்வாறே, அங்கயற்கண்ணி, தமது



திருநயனங்களின் பார்வையால் ஆன்மாக்களைப் பரிபக்குவப்படுத்தி நலம் செய்பவள். இதனைத் திருவிளையாடற் புராணம் இயற்றிய பரஞ்சோதி முனிவர், *"ஒளியால் உலகீன்று, உயிரனைத்தும் மீன்போல் செவ்வி உற நோக்கி, அளியால் வளர்க்கும் அங்கயற்கண் அன்னே!"* என நெகிழ்ந்துருகி மகிழ்ந்து போற்றுவார்.

இரங்கி அருள் பாலிக்கும் நோக்கத்தில் இறங்கி வந்து, அவதரித்து, மானுடத் திருவுருக் கொண்டவள் அன்னை! மலயத்துவச பாண்டியனின் மகளாகத் தோன்றி, பாண்டியர் குலத்திற்கே மாபெரும் பேற்றினை அளித்தவள். மலயத்துவசன் துணைவி காஞ்சனமாலையின் கனிந்த பக்திக்கு இரங்கி, 'தடாதகை'யாக அவதரித்து, அவளுக்குத் தாய்மைப் பேற்றை வழங்கியவள்! கன்னியாக அவள் இருந்தபோதே, புண்ணியப் பாண்டிய நாட்டின் புகழார்ந்த அரசியாகி, 'கன்னி நாடு' என்றும் பாண்டிய தேசம் அழைக்கப்பெறக் காரணமாக நின்ற பெண்ணரசி. கரம் பிடித்து, மணம் முடித்த சொக்கேசப் பெருமான், சுந்தரப் பாண்டியனாய்ச் செங்கோல் பிடித்துச் சீரிய ஆட்சியை மேற்கொண்ட பின்னர், முருகப் பெருமானின் அவதாரமாக வந்த உக்கிரகுமார பாண்டியனிடம் ஆட்சிப் பொறுப்பை அளித்து, திரு ஆலவாயில் இறைவியாக எழுந்தருளிய – மறைகடந்த முதல்வி, மாணிக்கவல்லி, மனோன்மணி, அன்னை மீனாட்சி. அனைத்துத் திருக்கோயில்களிலும், இறைவனுக்கு இடப் புறமே அம்மை எழுந்தருளி, நலமளிக்கும் இயல்



தெற்கு ராஜகோபுரம்



புடையவள். திரு ஆலவாயில் மட்டும் அன்னை மீனாட்சி, பெருமான் சொக்கேசருக்கு வலப்புறம் எழுந்தருளி அருள் பாலித்து வருகிறாள்.'

**ம**துரை நகரை நெருங்கியதும், வானளாவ எழுந்து நிற்கும் திருக்கோயில் இராஜகோபுரங்கள் நான்கும், கண்களில் தெரிய, மதுரையைக் 'கோயில் நகரம்' என அழைக்கப்பெறும் சிறப்பு மனத்துள் நிறைந்துவிடும்.

அன்னையைத் தரிசித்த பின்னரே, மதுரையில் ஆலவாய் அப்பனை வழிபட வேண்டுமென்பது மரபு. எனினும் அன்னை மீனாட்சி சந்நிதிக்கு நேரே இராஜகோபுர அமைப்பு இடம் பெறாதது நினைக்கத் தக்கது. முக மண்டபமாகிய அஷ்டலட்சுமி மண்டபத்தைக் கடந்து, மீனாட்சி நாய்க்கர் மண்டப, திருவாட்சியுடைய மேற்குத் திருவாயிலின் மேலே, எழிலார்ந்த எழுநிலைக் கோபுர அமைப்பே அன்னையின் சந்நிதிக்கு நேரே உள்ளது. அண்மையில் நடந்த திருக்குட முழுக்குப் பெருஞ்சாந்தி விழாவின்போது, இராஜபாளையம் 'ராம்கோ' சேர்மன் குருபக்தமணி பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜா அவர்களால், ரூபாய் ஐந்து லட்சம் செலவில் எழுநிலைக் கோபுரத் திருப்பணி செய்யப் பெற்று, கவின்மிகு கலைச் செறிவுடன், அங்கயற்கண்ணி அன்னை மீனாட்சியின் நுழைவாயில் எழுநிலைக் கோபுரம் அழகொளிரத் திகழ்கிறது.

தன் நிலை மறைத்து, மன்னுயிர் காக்க, மண்ணகம் வந்து மானுடர்க்கு மகவாக அவதரித்தவள் அன்னை. மண்ணக ஆட்சியை மனமுவந்து ஏற்றவள். மக்களோடு உறவு கொண்டவள். அன்னையை மணக்க ஆலவாய் வந்தவர் சொக்கேசர். எனவே திரு ஆலவாயில் அன்னையை வழிபட்ட பின்னரே, ஆலவாய்ச் சொக்கேசரை வழிபடும் வழக்கம் இங்கே பேணப் பெறுகின்றது.

வழிபடுவோர் அனைவரையும் விழியால் வழிப்படுத்தி, கருணையால் நலமளித்துக் கழி பேருவகை கொள்ளச் செய்பவள் – திரு ஆலவாயில் எழுந்தருளியுள்ள பெருமாட்டி, பெண்ணரசி, அன்னை மீனாட்சி. எனவே அன்னையின் சந்நிதானத்திற்கு நேயர்கள் அனைவரையும் அழைத்துச் செல்கிறோம். அதிகாலை திருவனந்தல் வழிபாடு முதலாக, இரவு அர்த்த சாமப் பள்ளியறைப் பூசனை வரை அன்னை மீனாட்சியையும், ஆலவாய்ச் சொக்கேசரையும் தரிசிக்கிறோம்; தகவுடைய நலமனைத்தும் குறை வறப் பெறுகிறோம்.

## திரு ஆலவாய்ச் சிறப்பு

'திரு ஆலவாய்' என்பது தாய் மீனாட்சியும், தந்தை சொக்கேசரும் எழுந்தருளியுள்ள திருக்கோயிலைக் குறிக்கும். எனினும் தமிழரது இறை உணர்விற்கும், கலைச் செறிவிற்கும், பண்பாட்டுச் சிறப்பிற்கும் அடையாள அற்புதமாய்த் திகழும் திருக்கோயில், தமிழ் வளர்த்த மா மதுரையில் இடம் பெற்றதால், 'திரு ஆலவாய்' என்பது மதுரை மாநகரைக் குறிப்பதாகவும் அமையும். எனவேதான் மதுரையைக் 'கோயில் மாநகர்' (Temple City) எனக் குறிப்பிடும் வழக்கம் இருந்துவருகிறது.

சிவத்தலங்களுள் நான்கு சிறப்பிற்குரியவை. அவை: காசி, சிதம்பரம், திருக்காளத்தி, திருஆலவாய். காசியில் இறப்பவருக்கு வீடு பேறு; (முக்தி) சிதம்பரத்தில் தரிசிப்பவருக்கு வீடு பேறு; திருக்காளத்தியில் அன்புடன் வழிபடுவோர்க்கு வீடுபேறு; திரு ஆலவாயில் இருப்பவருக்கே வீடுபேறு! *"திரு ஆலவாயிடத்து வதிந்தவரே வீட்டுநெறி சேர்வர் அன்றே!"* என்றார் பரஞ்சோதி முனிவர்.

திரு ஆலவாய்த் திருத்தலம் சக்திக்குப் பிரதான தலமாகக் கருதப்

பெறுகின்றது. சக்தி பீடங்கள் அறுபத்து நான்கில் முதற் பீடமாகக் கொள்ளப் பெறும் முதன்மைச் சிறப்பு அன்னை மீனாட்சி பீடத்திற்கே உரியது.

சிவபரம்பொருள் ஆடல் வல்லானாக தமிழ் நாட்டின் ஐந்து திருச்சபைகளில் நடனமாடிய சிறப்பு சைவ சமய வழக்கில் ஏற்றிப் போற்றப் பெறுகின்றது. சிதம்பரம் பொன்னம்பலம் என்றும், மதுரை வெள்ளியம்பலம் என்றும் திருவாலங்காடு இரத்தின சபை என்றும், திருநெல்வேலி தாமிர சபை என்றும் திருக்குற்றாலம் சித்திர சபை என்றும் பேசிப் பேணப் பெறுகின்றன. சிதம்பரம் பொன்னம்பலத்தில் நெடுங்காலமாக வலக்காலை ஊன்றி நிற்கும் ஆண்டவனுக்குக் கால் வலிக்காதா என, கனிந்த பக்திகொண்ட பாண்டிய மன்னன் ஒருவன் கருதிப் பார்த்து மிக வருந்தினான். கண்ணீர் உகுத்து, கால் மாறி ஆட வேண்டுமென, மன்றாடும் பெருமானை, மன்றாடி வேண்டினான். பக்தி கொண்ட பாண்டிய னின் வேண்டுதலைக் கருணையோடு கருத்தில் கொண்ட ஆடல்வல்லான், மதுரை வெள்ளியம்பலத்தில் கால் மாறி ஆடி அருளியதாக, திருவிளையாடற் புராணம் கூறுகின்றது. இதனைச் 'சொக்க தாண்டவம்' என்றும் புராணம் சொல்கிறது.



பொற்றாமரைக்குளம்

## திருக்கோயில் அமைப்பு

இத்தகைய சிறப்புடைய திருஆலவாய் – கிழக்கு மேற்கில் 254 மீட்டர், தெற்கு வடக்கில் 238 மீட்டர் சுற்றளவு கொண்டு, திருமதிலுக்குள் கலையழகும் சிலையழகும் மிளிர, கண் கவரும் சித்திரங்களும், கருத்தைக் கவரும் பிரம்மாண்டமான கோபுரங்களும், பொன்னால் வேயப் பெற்ற புகழார்ந்த விமானங்களும், வரலாற்றுச் சிறப்புடைய பொற்றாமரைத் திருக்குளமும் அமைய, தாய் மீனாட்சிக்கும், தந்தை சொக்கேசருக்கும் தனித் தனி ஆலய அமைப்புடைய பழைமையான திருக் கோயில். மிகு பழைமையும், வெகு பெருமையும் கொண்ட இத் திருக் கோயில் முற்காலப் பாண்டியராலும், பிற்காலப்பாண்டியர்களாலும் திருப்பணி செய்யப் பெற்றது. திருக்கோயிலை மையப்படுத்தி, நகரமைப்பு செய்யப் பெற்றுள்ள அருமை – திருஆலவாய் பெற்றுள்ள தனிப்பெருமை.

பல நூறு ஆண்டுகளுக்கு முன்னர் பாண்டிய மன்னர்களால் செய்யப் பெற்ற கோயில் கட்டுமானத் திருப்பணிகள், தொடர்ந்து விஜய நகர அரசினர் காலத்திலும், நாயக்க மன்னர்கள் காலத்திலும், பக்தியும் ஈடுபாடும் கொண்ட பல்வேறு அறச் செல்வர் களாலும் மருது சகோதரர்களாலும், கோயில் திருப்பணியைத் தம் குல வழக்கமாகக் கொண்ட நாட்டுக் கோட்டை நகரத்தார்களாலும் செய்யப் பெற்று, திருஆலவாய் – வானை எட்டி நிற்கும் கோபுரங்களையும், வனப்பைக் காட்டி நிற்கும் மண்டபங்களையும் கொண்ட எழிலார்ந்த அமைப்பும், இணையற்ற சிறப்பும் பெற்ற இறை யுணர்வு மேம்பாட்டை, கலையுணர்வுப் பண்பாட்டை எடுத்தியம்பும் தெய்வப் படையலாகத் திகழ்ந்து வருகிறது.

அன்னை மீனாட்சியிடம் அள்ளூறும் பக்தி கொண்ட மன்னர் திருமலை நாயக்கர் ஆற்றியுள்ள திருப்பணிகள் நினைக்கத் தக்கவை; நெஞ்சார்ந்து போற்றத் தக்கவை!

மதுரை நகரின் மையப் பகுதியில், கிழக்கு நோக்கிய சந்நிதிகளுடன் விளங்கும் இத்திருக்கோயில், நான்கு திசைகளிலும் விண்ணளாவி நிற்கும் வித்தகக் கோபுர அமைப்புகளைக் கொண்டுள்ளதால், நகருக்கு வெகு தொலைவில் வருகிறபோதே, 'கோயில் நகர்' செல்கிறோம் என்பதைக் கோபுரங்கள் உணர்த்தி விடுகின்றன. தென் திசைக் கோபுரம் மிக உயரமுடையது. ஒன்பது நிலைகள் கொண்ட 48 மீட்டர் உயரமுடைய இக் கோபுரத்தைப் பதினாறாம் நூற்றாண்டில் சிராமலை செவ்வந்தி மூர்த்திச் செட்டியார் என்னும் அறச் செல்வர் உருவாக்கி மகிழ்ந்துள்ளார். மேலக்கோபுரம் 46.2 மீட்டர் உயரத்தில் பராக்கிரம பாண்டியனால் கட்டப்பெற்றது. வடக்கேயுள்ள கோபுரம் கிருஷ்ண வீரப்ப நாயக்கரால் 45.6 மீட்டர் உயரத்தில் உருவாக்கம் உடையது. கோபுர அமைப்புகளிலேயே மிகப் பழைமையானதாகக் கருதப் பெறும் கிழக்குக் கோபுரம் மாறவர்மன் சுந்தர பாண்டியனால் 45.9 மீட்டர் உயரம்

கொண்டதாக எழுப்பப் பெற்றுள்ளது. திருவாயில் கோபுரங்கள் தவிர, திருக்கோயிலுக்குள் எட்டுக் கோபுரங் களும், இரண்டு விமானங்களும் அமைக்கப் பெற்றுள்ளன.

திருக்கோயிலின் மண்டப அமைப்புகளும், மண்டபங்களுக்குள் உருவாக்கியுள்ள சிற்பச் சிறப்புகளும் நமது முன்னவர்களின் பக்தியை, பண்பாட்டுணர்வை, கலை உள்ளத்தைக் காலங்காலமாகக் காட்டி நிற்கும் புண்ணியச் செயலாக்கங்கள்; புனிதத் திருப்பணிகள்!

சிறிய அளவில் சாலைக் கோபுர அமைப்புடைய அன்னை மீனாட்சி திருக்கோயிலில் நுழைந்ததும் எட்டுத் தூண்களும், இலட்சுமிகள் எண்மரும் கொண்ட 'அஷ்ட லட்சுமி மண்டபம்' எதிர்ப்படுகிறது. அன்னை மீனாட்சியின் அவதாரம் முதலாக, சொக்கலிங்கப் பெருமானை மணம் புரியும் வரையிலான ஓவியங்கள் மண்டபத்தில் இடம் பெற்றுள்ளன. மன்னர் திருமலை நாயக்கரின் பட்டத்துத் தேவியர் ருத்திரபதியம்மையும், தோளியம்மையும் இந்த மண்டபத்தை உருவாக்கி மகிழ்ந்துள்ளனர். மீனாட்சி நாயக்கன் மண்டபம் அஷ்ட லட்சுமி மண்டபத்தை அடுத்துக் காணப்படுகிறது. மன்னர் திருமலை நாயக்கரின் அமைச்சர்களுள் ஒருவரான மீனாட்சி நாயக்கரால் கட்டப் பெற்ற பிரம்மாண்டமான மண்டபம் இது.



மீனாட்சி நாயக்கன் மண்டபத்தைக் கடந்து, சித்திரக் கோபுர வாயிலில் நுழைந்து, கடந்தை முதலியார் உருவாக்கிய முதலி மண்டபத்தை அடுத்துப் பொற்றாமரைக் குளம் அமைந்துள்ளது. 50 மீட்டர் நீளமும், 36 மீட்டர் அகலமும் கொண்டுள்ள பொற்றாமரைத் தடாக அமைப்பை, பதினாறாம் நூற்றாண்டில் அறச் செல்வர்கள் நால்வர் அழகிய படிக்கட்டுகளுடன் அமைத்துள்ளனர். சுற்றிலும் நடைவழி மண்டபங்கள் உள்ளன.சங்கப் பலகை இப் பொற்றா மரைக் குளத்தில் மிதந்ததாகவும், திருக்குறளின் பெருமையை நிலை நாட்டிய திருக்குளமாகவும், நக்கீரர் இறைவனை எதிர்த்து வாதிட்ட இடமாகவும் கூறப் பெறுகின்ற செய்தி களின் களம் பொற்றாமரைக் குளம்!

திருஆலவாய்ப்பட்டர்கள்



யாளி மண்டபம் என்றும், சங்கிலி மண்டபம் என்றும் அழைக்கப் பெறும் கிளிக்கட்டு மண்டபம் பொற்றாமரைக் குளத்தின் மேற்புறம் உள்ளது. தனிக்கட்டு மண்டபத்தில் அன்னை மீனாட்சி திருச் சந்நிதியின் பிரதான வாயில் அமைந்துள்ளது. இத் திருத்தலத்திற்குரிய சித்தி விநாயகர் சந்நிதி வலப்புறத்திலும், குமரர் சந்நிதி இடப் புறமும் பிரதான வாயிலில் அமைக்கப் பெற்றுள்ளன. மண்டபத்தின் வடபுறக் கோடியில் சொக்கர் கோயிலுக்குச் செல்லும் நடுக்கட்டுக் கோபுர வாயில் அமைக்கப் பெற்றுள்ளது.

அன்னை மீனாட்சி சந்நிதிப் பிரதான வாயிலை அடுத்து, இரண்டாவது திருச்சுற்றில் கம்பத்தடி மண்டபம் காணப் பெறுகின்றது. அதற்கு மேற்புறத்திலுள்ள ஆறுகால் மண்டபம் புகழார்ந்தது. இந்த மண்டபத்தில்தான் அருளாளர் குமரகுருபரர் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழை அரங்கேற்றி, அன்னை அளித்த முத்துமாலையைப் பெற்றுப் பெரிதுவந்தார். அடுத்து அமைந்த முதல் திருச்சுற்றின் வடக்கில், தெற்கு முகமாக, *'அருள் சூல் கொண்ட அங்கயற்கண் அமுதே தாலோ, தாலேலோ'* எனத் தாலாட்டுப் பாடும் பள்ளியறை உள்ளது.

மகா மண்டபம், அர்த்த மண்டபத் திற்கு மேற்கே கருவறையில் அன்னை மீனாட்சி நின்ற திருக்கோலத்தில், நிகரிலா அருளொளியோடு எழுந் தருளித் திருவருள் புரிகின்றாள்.

திருஆலவாயின் வலப்புறமுள்ள அம்மையின் கோயில் அமைப்பை ஒருவாறு கண்டோம். இனிச் சொக்கேசர் கோயில் அமைப்பைப் பார்ப்போம்.

வானளாவ கிழக்கே உருவாக்கம் கொண்டுள்ள சுந்தர பாண்டியன் கோபுரத்தை அடுத்து, பதினேழாம் நூற்றாண்டில் முத்து வீரப்ப நாயக்கரால் கட்டப் பெற்ற வீரவசந்தராய மண்டபத்தின் வடக்கே அரியநாத முதலியாரால் உருவாக்கப் பெற்ற ஆயிரக்கால் மண்டபம் சிற்பக் கலையின் சீரிய களஞ்சியமாகத் திகழ்கிறது. கோயில் கலை பற்றிய அருங்காட்சிக் கலைக்கூடமாக உள்ள பொருட்காட்சி.

அயல் நாட்டினரின் கவனத்தை வெகுவாகக் கவர்ந்துள்ளது.

விஜயரங்க சொக்கநாத நாயக்கரால் கட்டப்பெற்ற திருக்கல்யாண மண்டபம், வீரவசந்தராய மண்டபத்திற்குத் தெற்குப்புறம் உள்ளது. அண்மையில் நாட்டுக்கோட்டை நகரத்தார் பெரு மக்களால் இம் மண்டபம் புதுப்பிக்கப் பெற்றது. மண்டபத்தின் மேற்கே உள்ள மேடையின் இரு பக்கமும் வரையப் பெற்றுள்ள 'பூகோளம்' ககோளம்' (வானியல்) ஆகிய 16ஆம் நூற்றாண்டு சித்திரங்கள் மிகவும் அரியவை; அதிசயமானவை; அவசியம் காணத் தக்கவை.

சேர்வைகாரர் மண்டபம், முத்துராமய்யர் மண்டபத்தை அடுத்து, சுவாமி கோபுரத்தைக் கடந்து சென்றால் கவினுறு கலைச் செறிவுடைய கம்பத்தடி மண்டபத்தைக் காணலாம். 15 ஆம் நூற்றாண்டில் கிருஷ்ண வீரப்ப நாயக்கரால் உருவாக்கம் கொண்ட இம்மண்டபத்தைப் பிற்காலத்தில் நாட்டுக்கோட்டை நகரத்தார் புதுப்பித்துள்ளனர். நடுவில் நந்தியும், கொடி மரமும் உள்ள இந்த மண்டபத் தூண்களில் வெளிப்படுத்தப் பெற்றுள்ள சிற்ப அற்புதங்கள் எவரையும் பிரமித்து அதிசயிக்கச் செய்யும் கலைச் சிகரங்கள். தமிழகத்தைத் தலை நிமிர்ந்து பெருமிதம் கொள்ளச் செய்யும் தலை சிறந்த கலைப் படிமங்கள்! 'ஆ' என வாய் திறந்து, கல்லாய்ச் சமைந்து நிற்கும் அயல்நாட்டினரை இங்கு அடிக்கடி காணலாம்!

சொக்கேசர் கோயிலின், இரண்டாம் திருச்சுற்றின் தென் பிராகாரத்தில், நடுக்கட்டுக் கோபுரத்திற்கு எதிரில், ஏழடி உயரமுள்ள முக்குறுணிப் பிள்ளையார் எழுந்தருளி உள்ளார். திருமலை நாயக்கரால் பிரதிஷ்டை செய்யப் பெற்ற இப் பெருமான், மாரியம்மன் தெப்பக்குளத்தைத் தோண்டுகிறபோது கிடைத்தவரெனக் கூறப்படுகின்றது. இத் திருச்சுற்றின் வடமேற்கில் சங்கப் புலவர் மண்டபம் தெற்கு நோக்கி உள்ளது.

சொக்கலிங்கப் பெருமான் சந்நிதியின் பிரதானக் கோபுர வாயிலில் அதிகார நந்தி உள்ளார். முதல் திருச்சுற்றில் அமைந்துள்ள பரிவார மூர்த்தங்களைக் கண்டு, சந்நிதி முன் உள்ள அறுகால் பீட வாயில் கடந்தவுடன், உட்புறம் வெள்ளியம்பலத்தில் ஆடல்வல்லான் நடராசப் பெருமான் கால் மாறி ஆடித் திருக்காட்சி அளிக்கின்றார். மகா மண்டபம், அர்த்த மண்டப . அமைப்பிற்கு மேற்கே சொக்கலிங்கப் பெருமான் கருவறையில் சுயம்பு லிங்கமாக எழுந்தருளியுள்ளார்.



பூகோளம்

ககோளம்




## சில செய்திகள்

சீலமும், இறையுணர்வுச் சித்தமும், வேதாகம நெறியில் வித்தகமும் கொண்டோர், கடவுளரின் அருகிலிருந்து, பிறருக்காக அர்ச்சித்துப் போற்றி வழிபடும் 'பரார்த்த' முறை மிகப் பழங் காலத்திலிருந்தே இறை வழிபாட்டில் பின்பற்றப்பட்டு வந்துள்ளது. பரார்த்த முறையில் வழிபாடு செய்வோரை 'அருச்சகர்' என அழைப்பதும், உரிய தகுதி பெற்று அரிய சடங்குகளை ஆற்றிக் கொண்ட பின்னர் 'சிவாச்சாரியார்' எனச் சிறப்பித்துக் குறிப்பிடுவதும், வழிவழியாக மேற்கொள்ளப் பெற்ற சமய வழக்கு. திருஆலவாய் மீனாட்சி சொக்கேசர் ஆலயத்திலுள்ள சிவாச்சாரியார்கள் 'பட்டர்கள்' என அழைக்கப் பெறுகின்றனர். 26 குடும்பங்களைச் சேர்ந்த 96 பட்டர் பெருமக்கள் இந்த ஆலயத்தில் சிவாச்சாரியர்களாக உள்ளனர். இவர்களில் இரு குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் 'ஸ்தானீகம்' எனக் குறிப்பிடப் பெறுகின்றனர்.

திருவாதவூர், மானாமதுரை, நெட்டூர், திருப்பரங்குன்றம், கணக்கன்குடி ஆகிய ஐந்து ஊர்களிலிருந்து, திருஆலவாய்க்கு வருகை தந்த காரணத்தால், பட்டர்கள் 'பஞ்ச கூடஸ்தர்' என அழைக்கப் பெறுகின்றனர். திருக் கல்யாணம், தர்மிக்குப் பொற்கிழி வழங்கல், பிட்டுக்கு மண் சுமத்தல் போன்ற நிகழ்ச்சிகளை, பட்டர்களே வேடமிட்டு, நாடகம் போல் நடத்தி விழாக் கொண்டாடும் வழக்கம்,

இத் திருக்கோயிலில் பேணப் பெறுகின்றது. "இத்தகைய பழக்கம் தமிழ்நாட்டின் வேறு கோயில்களில் வழக்கமாக இல்லை" என்கிறார் உக்கிர பாண்டிப்பட்டர்.

**தி**ங்களைப் போல் திகழும் அங்கயற்கண்ணி அன்னையின் திருமுகத்தில் ஒளிரும் திருவருளைக் கண்டு கரம் கூப்புகிறோம். கற்பூர ஆரத்தியில் அன்னையின் திருமார்பில் ஜொலிக்கும் ஓர் ஆபரணம் நம் கண்ணையும் கருத்தையும் கவர்கிறது. பூஜகரான பட்டரை வினவியபோது, அவர் சொன்னார்; " ஸ்ரீ சிருங்கேரி மகாசந்நிதானம் ஸ்ரீ பாரதீ தீர்த்த மகாசுவாமிகள் அம்பாளுக்கென வடிவமைத்துக் கொடுத்த ஸ்ரீசக்கர வைரப் பதக்கம் பொருந்திய முத்துமாலை அது! அண்மையில், இராஜபாளையம் தொழிலதிபர் குருபக்தமணி பி.ஆர். ராமசுப்பிரமணிய ராஜாவால் பல லட்சம் ரூபாய் செலவில் உருவாக்கப் பெற்று அம்பாளுக்கு அர்ப்பணிக்கப் பெற்றது. 'ஓகோ' என மீண்டும் ஒருமுறை மகாசுவாமிகள் வடிவமைத்த ஸ்ரீசக்கர வைரப் பதக்கத்தை உற்றுப் பார்த்து உள்ளார்ந்து நெகிழ்கிறோம்.

'விழாமலி மூதூர்' என மதுரை மாநகரை இலக்கியங்கள் பாராட்டும். திரு ஆலவாயில் ஆண்டு முழுவதும் திருவிழாக்கள் நிகழ்கின்றன. ஆண்டின் 365 நாள்களில் 294 நாள்கள் விழாக்கள் நடைபெறுகின்றன. அவை: சித்திரைத் திருவிழா, தெப்பத் திருவிழா, ஆவணி மூலத் திருவிழா. 'நித்திய உத்சவம்' 'வார உத்சவம்' 'பட்ச உத்சவம்' 'மாத உத்சவம்' என விழாக்கள் பேணப் பெறுகின்றன.

அன்னை மீனாட்சிக்கெனப் பழங்காலந்தொட்டு பக்தர்கள் அளித்த ஆபரணங்கள் ஏராளமானவை! பன்னூறு கோடி ரூபாய் மதிப்புடையவை! 11 கிரீடங்கள், 10 பதக்கங்கள், பல்வேறு அணிகலன்கள் மன்னர்களாலும், பக்தர்களாலும் அளிக்கப் பெற்றவை. மாவட்டக் கலெக்டராக இருந்த ரோஸ்பீட்டர், கிழக்கு இந்தியக் கம்பெனியார், ரோமானியர் போன்றோர் வழங்கியுள்ள ஆபரணங்கள் – அன்னையின் அற்புத அருள்பாலிப்பை எடுத்தியம்பும் திருவருள் சின்னங்கள்!

## ஒரு நாள் வழிபாடுகள்

### அதிகாலை 5 மணி

திரு ஆலவாய்க் கிளிக்கட்டு மண்டபத்தில், அன்னை மீனாட்சி சந்நிதியின் பிரதான வாயில் அருகே, நூற்றுக்கணக்கான பக்தர்களின் இடையே நாமும் நிற்கிறோம். திருக்கதவம் திறக்கப்படுகின்றது. உள்ளே சென்று, பள்ளியறையை அடைகின்றோம். கிளிக்கட்டு மண்டபத்தில் எழுந்தருளியுள்ள சித்தி விநாயகருக்கு பால், அவல்பொரி நைவேத்தியத்துடன் கற்பூர ஆரத்தி காட்டப் பெற்றுத் 'திருவனந்தல்' வழிபாடு தொடங்குகின்றது. அதே மண்டபத்தின் இடப்புறம் உள்ள குமரர் சந்நிதியிலும் கற்பூர ஆரத்தி காட்டப் பெற்றவுடன், பள்ளியறை வழிபாடு அவல்பொரி, பால் நைவேத்தியத்துடன் நிறைவுற்றதும், அறையினுள் ஊஞ்சலில் வீற்றிருக்கும் சொக்கரை, எதிர் வாயிலின் இரண்டாம் திருச்சுற்றில் தயாராக உள்ள பல்லக்கில், பட்டர் தாங்கி வந்து எழுந்தருளச் செய்கிறார். பரிசாரக அந்தணர்கள் தோள் கொடுக்க, தவண்டை முழங்க, மங்கல வாத்தியங்கள் ஒலிக்க, தீவட்டிகள் முன் செல்ல, வெள்ளித் தடி வைத்திருக்கும் கட்டியக்காரர் 'சோமசுந்தர மகாராஜா... பராக்!' எனக் கட்டியம் கூற, பல்லக்குப் புறப்படுகிறது. பக்தர்கள் கரம் கூப்பிப் பின் செல்கின்றனர். நாமும்தான்!



உக்கிரப் பாண்டிப்பட்டர்

கிளிக்கட்டு மண்டபம், நடுக்கட்டு மண்டபம் வழியாக முக்குறுணிப் பிள்ளையார் திருமுன்னர் பல்லக்கு எடுத்துச் செல்லப் பெற்று, சொக்கேசர் சந்நிதியின் பிரதான வாயிலில் நிறுத்தப் பெற்று, அதிகார நந்திக்குக் கற்பூரம் காட்டிய பின்னர், சொக்கர் சுவாமி கோயிலின் உள் சென்று விடுகிறார்.

சொக்கர் தமது ஆலயத்தை அடைந்த பின்னர், அன்னை மீனாட்சிக்கு அதிகாலை 'திருவனந்தல்' வழிபாடு நிகழ இருப்பதை அறிந்து, அன்னையின் சந்நிதிக்கு விரைகின்றோம்.

கருவறை மூலத்தானத்தில் – திரு ஆலவாய் மூல நாயகி, பெருமானின் திருவுள்ளத்து ஓவியப் பாவை, அன்னை மீனாட்சி, கருணை ஒளிவீசும் திருநயனங்களுடன், இரு திருக்கரங் களுடைய திருவுருப் பொலிவுடன், நின்ற திருக்கோலத்தில் வெண் பட்டுடுத்தி விளங்கும் அருட்காட்சி, நம் மேனியைச் சிலிர்க்கச் செய்கிறது. கண் பெற்ற பயனை அடைந்தோமெனக் கரம் கூப்புகிறோம்.

'உயிரோவியம்' என்னும் குமரகுருபரரின் திருவாக்கு நினைவில் நிழலாடி, அத் திருவாக்கு இடம் பெற்ற *'தொடுக்குங் கடவுள் பழம் பாடல் தொடையின் பயனே!'* எனத் தொடங்கும் முழுப் பாடலையும் நெஞ்சுள் நீந்தச் செய்கிறது.

திரையிட்டு, அபிஷேக – அலங்காரம் நிறைவு பெற்றதும் வெண் பொங்கல் நைவேத்தியத்துடன் 'விலா பூஜை' என்னும் திருவனந்தல் வழிபாட்டுப் பூசனையில் மனம் ஒன்றி நிற்கின்றோம். கற்பூர ஆரத்தியில் கயற்கண் பெண்ணரசி அன்னை மீனாட்சியைக் கண் பனிக்க வணங்குகின்றோம்.

அங்கயற்கண்ணிக்கு திருவனந்தல் பூசனை நிறைவுற்றதும், சொக்கர் திருக்கோயிலுக்குப் பட்டர் செல்கிறார். உடன் நாமும் செல்கிறோம். பக்தர்களும் பின் தொடர்கின்றனர்.

கருவறையில் லிங்கத் திருவுருவாய்த் திகழ்ந்து திருவருள் பாலிக்கும் சொக்கலிங்கப் பெருமான் தாமே

தோன்றியவர். பிற திருத்தலங்களிலுள்ள லிங்கங்களெல்லாம் இதனில் இருந்தே கிளைத்துத் தழைத்தவையெனச் சொல்லப் பெறுகின்றது. எனவேதான் பெருமான் கொண்டுள்ள இந்த லிங்கத் திருவுருவை 'மூல லிங்கம்' என மொழிகின்றனர். *"முளைத்தானை, எல்லார்க்கும் முன்னே தோன்றி"* எனத் திருநாவுக்கரசு சுவாமிகள் இதனை எடுத்தியம்பிப் பெருமானிடம் இணையற்ற ஈடுபாடு கொண்டிருக்கிறார்.

சங்கப் புலவர்களுள் ஒருவராய் அமர்ந்து தமிழை வளர்த்த பெருமான், அன்னை மீனாட்சியைத் திருமணம் புரிந்து,மதுராபுரியின் மன்னராகவும் செங்கோல் பிடித்தவர். அருளாற்றல் பெருகிய சமஷ்டி லிங்கமாகத் திருவுருப் பெற்று, வணங்கிய அனைவருக்கும் நல் வாழ்வு அளிக்கும் அருள் வள்ளல்.

அபிஷேக அலங்காரங்கள் நிறைவுற்றதும், திரை நீக்கப் பெறுகின்றது. கற்பூர ஆரத்தியின் ஒளியூட்டத்தில் *"அங்கணா போற்றி! வாய்மை ஆரணா போற்றி! நாக கங்கணா போற்றி! மூல காரணா போற்றி! நெற்றிச் செங்கணா போற்றி!"* என வாய் மணக்கப் பெருமானைப் போற்றிப் பரவிக் கரம் கூப்பித் தொழுது நெகிழ்கிறோம்.

இரண்டாம் வழிபாடு 'காலை சந்தி' 7.30க்குத் தொடங்கி 9 மணிக்கு நிறைகின்றது. அபிஷேக அலங்காரங்கள் அன்னை மீனாட்சிக்கும், அழகர் சொக்கருக்கும் செய்வித்து, சுத்தான்னம், புளியோதரை நைவேத்தியத்துடன், பூசனையை நிறைவு செய்கின்றனர்.

மூன்றாம் வழிபாடு திரிகால சந்தி. முற்பகல் 10.30க்குத் தொடங்குகின்றது. அபிஷேக, அலங்கார, ஆராதனை சுத்தான்ன நைவேத்தியத்துடன் நிகழ்கிறது.

நான்காம் பூசனை உச்சிக்காலம். அபிஷேக அலங்கார ஆராதனை. சர்க்கரைப் பொங்கல், புளியோதரை, சுத்தான்னத்துடன், நண்பகல் 12 மணிக்கு நிறைவு பெறுகின்றது. பிறகு திருக்கோயில் 12 மணி முதல் மாலை 4 மணி வரை நடை சாத்தப்படுகிறது.

ஐந்தாம் காலப் பூசனையாக 'சாயரட்சை' என்னும் மாலை வழிபாடு சரியாக ஐந்து மணிக்குத் தொடங்கி, ஆறு மணிக்கு நிறைவடைகிறது. மாலை வழிபாடு, வழக்கமான அபிஷேக அலங்காரத்துடன் சுத்தான்னம் நைவேத்தியமாகப் படைக்கப் பெறுகின்றது. பக்தர்கள் மாலை வழிபாட்டில் திரளாகத் தினமும் கலந்து கொள்கின்றனர்.

ஆறாவது வழிபாடு அர்த்த சாமப் பூசனை. நைவேத்தியம் சம்பாவும் பாயசமும். அன்னை மீனாட்சிக்கு வெண் பட்டு உடுத்தி, அலங்காரம் விமரிசையாகச் செய்யப் பெறுகின்றது. சொக்கலிங்கப் பெருமான், அர்த்த சாமப் பூசை இரவு 9.30க்கு நிறைவானதும், ஓர் அரை மணி நேரத்தில், அன்னை மீனாட்சியின் பள்ளியறைக்கு வருகை தருவார்.

நைவேத்தியப் பள்ளியறைப் பால் அனைவருக்கும் கிடைக்கிறது. வாங்கி அருந்துகிறோம். வாய் மட்டும் இனிக்கவில்லை; மனமும் இனிக்கிறது!

'ஞானப்பால்' அல்லவா?

காமிக, காரண ஆகமப்படி நடைபெற்ற ஒரு நாளின் அனைத்துக் காலங்களின் வழிபாட்டிலும் அங்கயற்கண்ணியின் சந்நிதியிலும், ஆலவாய் அழகர் சொக்கர் திருமுன்னரும் நின்று, தொழுது போற்றும் விழுமிய பேறு பெற்றோம் நாம். இதோ... சொக்கலிங்கப் பெருமான் அன்னை மீனாட்சி வீற்றிருக்கும் பள்ளியறைக்குப் பல்லக்கில் புறப்பட்டு விட்டார். கட்டியம் கூறுபவர், 'சோமசுந்தர மகாராஜா... பராக்' என ஓங்கி உரைப்பதைச் செவிப்படுத்திய வாறே, பணிவோடு பல்லக்கின் பின் செல்கிறோம்.

பட்டர் சொக்கரைப் பயபக்தியுடன் பல்லக்கினின்றும் எடுத்துத் தாங்கி, பள்ளியறைக்குள் கொண்டு செல்கிறார். பெருமானும், பிராட்டியும் ஊஞ்சலில் உவகையுடன் வீற்றிருக்கும் உன்னதத் திருக்காட்சியைக் கண்டு, கழி பேருவகை கொண்டு, நம்மை மறக்கிறோம்! நாதன் திருவடியை, நாயகியின் மலரடியை, நெகிழ்ந்து, நினைந்து, மகிழ்ந்து போற்றி இமை மூடி, மனச் சுமை அகற்றி நிற்கும் வேளையில், 'கணீர்' என மணி ஓசை முழங்கத் தொடங்குகின்றது. கண்ணைத் திறக்கிறோம்... கற்பூர ஆரத்தி!



பல்லக்குப் புறப்படுகிறது

# மனிதஜாதி

வாசவன்

**கதைப் பிரவேசத்திற்கு முன்னால் ஓர் அக்னிப் பிரவேசம்**

நான் எல்லாவற்றிலும் ஜாதியைப் பார்ப்பவன். பூக்களில் எனக்கு ஜாதி மல்லி மிகவும் பிடிக்கும். காய்களில் ஜாதிக்காய் எனக்கு ரொம்ப ரொம்பப் பிடிக்கும். ரத்தத்தில் பல ஜாதிகள் இருப்பதைப் போல, இலக்கியத்திலும் இலக்கண வரம்பை மீறாத ஜாதி என்றும், நெறி வழி நிற்கின்ற ஜாதி என்றும், எல்லாவற்றையும் போட்டு உடைக்கின்ற நிர்மூல ஜாதி என்றும் பல ஜாதிகள் உண்டு. நான் மரபை மீறாத ஜாதிக் கட்டுப்பாட்டுக்குள் இருப்பவன். இதுவரை எத்தனையோ எழுதிய நான், ஜாதியைப் பற்றி மட்டும் எழுதியதில்லை. எனக்கு அதற்கான வயது நேற்றுவரை வரவில்லை. இப்பொழுது வந்து விட்டது! இந்த எழுபது வயதில்தான், 'ஜாதிகள் இல்லையடி பாப்பா!' என்ற மகாகவி பாரதியின் சொற்கள் எனக்குப் புரிகின்றன. புரியத் தெரிந்தவுடன், என்னைப் பிணித்திருந்த ஜாதிக் கட்டுப்பாட்டின் சங்கிலிகள் இற்று விழுகின்றன. அவை இற்று விழுந்த இடத்திலிருந்து, இந்தக் கதை அக்னிக் குஞ்சாய்ச் சிறகு விரிக்கிறது.

டாக்டர் வாசவன்

"தீட், தட், தட்..."

அறைக் கதவை யாரோ பலமாகத் தட்டுகிறார்கள்.

அறைக்குள்ளிருந்த அந்தப் பையனும், பெண்ணும் ஆடிப் போனார்கள்.

கண்டு பிடித்து விட்டார்களா?

பயம், நடுக்கம், வியர்வை..

யாரோ மீண்டும், மீண்டும் கதவைத் தட்டுகிறார்கள். மீண்டும் மீண்டும் அவர்களுக்கு உயிர் போய்ப் போய் வருகிறது.

துணிந்து கதவைத் திறக்கலாமா? வேண்டாம். கதவைத் திறந்து விபத்தை ஏன் வரவேற்க வேண்டும்? வருவது வரட்டும். எல்லாவற்றையும் எதிர்பார்த்துத்தானே அவர்கள் ஊரைவிட்டு ஓடி வந்து, இந்த லாட்ஜில் அறை எடுத்துத் தங்கி இருக்கிறார்கள்?

"வம்பு பண்ணாதீங்க. ஒழுங்காகக் கதவைத் திறங்க..." என்று சீறும் அந்தக் கர்ஜனைக் குரல் -

"அது எங்க அப்பா குரல் இல்லை..." ஆறுதலாய்ப் பெருமூச்சு விட்டாள் அந்தப் பெண்.

"அது எங்க அப்பா குரலும் இல்லை..." என்ற அந்தப் பையனும், முகத்தில் அரும்பிய மொட்டு வியர்வையைத் துடைத்துக் கொண்டான்.

"திருட்டுக் கழுதைங்களா! மரியாதையாக் கதவைத் திறக்கறீங்களா? இல்லைன்னா, கதவை உடைக்கச் சொல்லட்டுமா?.."

யாரோ எச்சரிக்கை விடுத்த வேகத்தில் கதவை உதைக்கிறார்கள்; உடைக்கிறார்கள்.

இனித் தாமதித்தால் ஆபத்துதான்!

அவர்கள் உதறலோடு கதவைத் திறந்து கொண்டு வெளியே எட்டிப் பார்த்தார்கள்.

இரண்டு காவலர்களுடன் நடுநாயகமாக நின்று கொண்டிருந்தார் ஓர் இன்ஸ்பெக்டர்.

அந்த இளசுகளை ஏற இறங்கப் பார்த்த இன்ஸ்பெக்டர், "போகலாமா?" என்று கேட்டார்.

"எங்கே சார்?" என்று எச்சில் உலர்ந்த குரலில் கேட்டான் அந்தப் பையன் -

"ஓ! சொன்னாத்தான் நீங்க வருவீங்களோ? அப்படின்னா, சொல்லிட வேண்டியதுதான்! சொல்லட்டுமா? நீங்க ஊரை விட்டு ஓடி வந்த காதல் ஜோடிங்க. உன் பெயர் சாத்தையா. அந்தப் பெண்ணின் பேரு மல்லிகா. உங்க வயசுக் கோளாறு நீங்க காதலிச்சீங்க. அதைப் பெரியவங்க பொறுப்பாங்களா? எதிர்த்தாங்க. அவங்க கண்ணிலே மண்ணைத் தூவிட்டு ஊரைவிட்டு ஓடி வந்து, இந்தப் பாடாவதி லாட்ஜிலே நீங்க பதுங்கி இருக்கீங்க. நான் இந்த ஏரியா இன்ஸ்பெக்டர். உங்களைப் பத்திப் புகார் வந்திருக்கு. நான் உங்க இரண்டு பேரையும் புடிச்சுக்கிட்டுப் போக வந்திருக்கேன். நான் போகலாமான்னு கேட்டது, போலீஸ் ஸ்டேஷனுக்கு. இப்போ புரியுதா?" என்று விளக்கம் அளித்து, விவகாரமாகப் பார்த்தார் இன்ஸ்பெக்டர்.

"நாங்க காதலிச்சது தவறா? அதுக்காகப் போலீஸ் ஸ்டேஷனுக்கு வரணுமா?" என்று எச்சிலை விழுங்கினான் அந்தப் பையன்.

"காதலிச்சது தவறில்லை. நீ மைனர்ப் பெண்ணைக் காதலிச்சதுதான் தவறு. அவளைக் கடத்திக்கிட்டு வந்தது அதை விடப் பெரிய தப்பு. அந்தப் பெண்ணின் பெற்றோர் முழ நீளத்துக்குப் புகார் கொடுத்திருக்காங்க..."

அந்தப் பெண் குறுக்கிட்டாள். "எப்படி சார் புகார் கொடுத்திருக்காங்க?"

"மேஜர் ஆகாத மைனர்ப் பெண்ணான உன்னை, இந்தப் பையன் கடத்திட்டு வந்துட்டதாகப் புகார் கொடுத்திருக்காங்க."

"அது பொய். நான் மைனர் இல்லை மேஜர். இப்ப எனக்கு வயசு பத்தொன்பது."

"நீ மேஜரோ, என்னவோ? எல்லாம் விசாரணையில் புரிஞ்சு போகும். இது ஒரு மாதிரியான லாட்ஜ். நேத்துக்கூட இங்கே 'ரெயிடு' நடத்தினோம். உங்களைக் கூட நான் 'பலான' கேஸிலே 'புக்' பண்ணிக் கொண்டு போகலாம். நீங்க அந்த ரூட்டிலே ஸ்டேஷனுக்கு வர்றீங்களா? அல்லது, என் ரூட்டிலே ஸ்டேஷனுக்கு வர்றீங்களா?"

அந்தப் பையன் பதறிக் கொண்டு "நாங்க உங்க ரூட்லேயே ஸ்டேஷனுக்கு வர்றோம் சார்!" என்றான்.

"நல்லா வாங்க. அதுதான் புத்திசாலித்தனம்" என்ற இன்ஸ்பெக்டர், வாசலை நோக்கி நடந்தார்.

அந்தப் பெண் அறைக்குள் ஓடி, ஒரு பையை எடுத்துக் கொண்டு வந்தாள். பிறகு அவனும், அவளும் இருண்ட உணர்வுகளோடு நடந்தார்கள். போலீஸ்காரர்கள் அவர்களை நிழல் போலத் தொடர்ந்தார்கள்.

சிறிது நேரத்தில் வாசலில் நின்று கொண்டிருந்த ஜீப், அவர்களை ஏற்றிக் கொண்டு விரைந்தது.

✪ ✪ ✪

காவல் நிலையத்திற்குள் காலெடுத்து வைத்த மல்லிகா, திடுக்கிட்டாள்.

அங்கே அவளுடைய பெற்றோர் நின்றிருந்தார்கள்.

தந்தை அவளைப் பார்த்துப் பல்லைக் கடித்தார். அவர் கண்களில் கோப நெருப்புப் பற்றி எரிந்தது. அவர் அருகே நின்று கொண்டிருந்த தாய், மகளைப் பார்த்ததும், பொங்கிப் பொங்கி அழுதாள்.

"அடி பாவிப் பெண்ணே! உனக்கு நாங்க என்ன குறை வச்சோம்? உடம்புத் திமிரு உன்னை ஓடி வரச் சொல்லிச்சா?..." என்று ஒப்பாரி வைத்து அழுத அம்மா, ஓங்கி ஓங்கித் தலையில் அடித்துக் கொண்டாள்.

"நிறுத்துங்கம்மா!" என்று சீறிய இன்ஸ்பெக்டர், "உங்க இஷ்டப்படி ஒப்பாரி வைக்கிறதுக்கு இது உங்க வீடு இல்லை... போலீஸ் ஸ்டேஷன்... நீங்க புகார் கொடுத்திட்டீங்க. இப்போ விஷயமும், உங்க மகளும் உங்களிடத்திலே இல்லை. எல்லாமே போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்தாச்சு. நீங்க அழுது கலாட்டா பண்ணினா, உங்களை வெளியே அனுப்ப வேண்டி ஆயிடும்" என்று அதட்டலாகக் கூறினார்.

அவர் போட்ட போட்டில் தாய் அடங்கிப் போனாள்.

இன்ஸ்பெக்டர், மல்லிகாவை நோக்கி, "இந்தாம்மா! நீ உண்மையைச் சொல்லணும். இந்தப் பையன் உன்னை மயக்கிக் கூட்டிக்கிட்டு வந்ததாகப் புகாரிலே சொல்லி இருக்காங்க. நீ என்ன சொல்றே?" என்றுகேட்டார்.

"சார்! நான் அதைப் பத்தி உங்களிடத்திலே ஏற்கெனவே சொல்லி இருக்கேன்" என்றாள் மல்லிகா.

"அதை மறுபடியும் சொல்லு."

"எனக்கு வயசு பத்தொன்பது. நான் மேஜரான பெண். என் விருப்பம் போல நடந்துக்கறதுக்கு, எனக்கு முழுச் சுதந்தரமும் இருக்கு. நானா விரும்பித்தான் சாத்தையாவோட புறப்பட்டு வந்தேன்..."

"ஆனா, இவங்க புகார் வேறே மாதிரியா இருக்கு. உனக்கு இன்னும் பதினெட்டு வயசு ஆகலைன்னு, இவங்க புகாரிலே கூறி இருக்காங்க!"

"அது பொய். எனக்கு வயசு பத்தொன்பது தான். இவங்க இப்படிச் சொல்லுவாங்கன்னு நினைச்சுத்தான் என் ஸ்கூல் சர்ட்டிபிகேட்டைக் கையோட கொண்டு வந்திருக்கேன். அதிலே நான் பிறந்த வருடம், மாதம், தேதி எல்லாம் இருக்கு. அதிலே என் அப்பாவோட கையெழுத்தும் இருக்கு. நீங்களே பாருங்க!" என்ற மல்லிகா, பையைத் திறந்து பள்ளி சர்ட்டிபிகேட்டை எடுத்து நீட்டினாள்.

அதை வாங்கிப் படித்துப் பார்த்து விட்டுத் தலை நிமிர்ந்த இன்ஸ்பெக்டர், "ஸ்கூல் சர்ட்டிபிகேட் இருக்கட்டும். ஆனா, உங்க வீட்டிலே உனக்கு நல்ல சர்டிபிகேட் இல்லையே!" என்றார்.

"எல்லாம் பருவக் கோளாறு சார்! ஏமாந்த பொண்ணு கிடைச்சா எவன் விடுவான்? அதுதான் இந்தப் பய, எம் பொண்ணைச் சுலபமா இழுத்துக்கிட்டு ஓடி வந்துட்டான். இந்த அவமானத்தைத் தாங்கிக்கிட்டு நாங்க உயிரோட இருக்கணுமா சார்?" என்ற தந்தையின் கண்களில் அருவி புரண்டு வந்தது.

"உங்க அழுகை, அணுகுமுறை எல்லாமே போலியா இருக்கு. என்னைத் திசை திருப்பறதுக்கு முயற்சி செய்யாமே நான் கேட்கிற கேள்விகளுக்கு மட்டும் நீங்க பதில் சொல்லுங்க. இந்தப் பையன் உங்க ஊரைச் சேர்ந்தவனா?" என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

"இல்லை. எங்க ஊரிலே வாத்தியார் வேலை பார்க்கிறதுக்காக அசலூரிலே இருந்து வந்த கீழ்ச் சாதிப் பையன்..."

"அப்படீன்னா, இவன் உங்க சாதி இல்லையா?"

"இல்லை..."

"நீங்க என்ன ஜாதி?"

பெண்ணின் அப்பா சொன்னார்.

"உங்க மனைவி என்ன ஜாதி?"

சொன்னார்.

"ஆக, நீங்க இரண்டு பேருமே வேறே வேறே ஜாதின்னு சொல்லுங்க!"

"ஆமா."

"உங்க கல்யாணம் எப்படி நடந்தது? அதை உங்க குடும்பப் பெரியவங்களே செஞ்சு வச்சாங்களா?"

"இல்லை."

"பின்னே எப்படி நடந்தது?" என்று அழுத்தமான குரலில் கேட்டார் இன்ஸ்பெக்டர்.

தந்தை தயங்கினார்.

"சும்மா சொல்லுங்க."

பிறகு சொன்னார்: "எங்க கல்யாணம் காதல் கல்யாணம்..."

"அதாவது ஜாதியை விட்டு ஜாதி கல்யாணம்... அப்படித்தானே?"

"ஆமா."

"அதுக்குப் பெரிய எதிர்ப்பு அந்தக் காலத்தில் இருந்திருக்குமே?"

"ஆமா. நிறைய எதிர்ப்பு இருந்துச்சு. எங்கப்பா தூக்கிலேயே தொங்கிட்டாரு."

"அப்பா தூக்கிலே தொங்கினாலும் பரவாயில்லைன்னு நினைச்சு, உறுதியா

நின்னு உங்க காதலியையே நீங்க கல்யாணம் பண்ணிட்டீங்க இல்லையா?"

"ஆமா."

"உங்க காதல் வெற்றி அடையறதுக்காக ஒரு மாவீரன் மாதிரி போராடி வெற்றி கண்ட நீங்க, உங்க பெண் காதலிச்சா மட்டும் வெறிக்கிறீங்க; வெறுக்கிறீங்க. உங்களுக்கு ஒரு நீதி. உங்க மகளுக்கு ஒரு நீதியா? சொல்லுங்க!"

இன்ஸ்பெக்டரின் இந்தக் கேள்விக்கு, தந்தையால் பதில் சொல்ல முடியவில்லை. "இன்ஸ்பெக்டர்! இது உங்களுக்குத் தேவை இல்லாத கேள்வி!" என்று சவடால் அடித்துத் தப்பிவிட முயன்றார்.

"அதுவும் உண்மைதான். ஆனா, அதே சமயத்திலே நீங்க இன்னோர் உண்மையையும் புரிஞ்சுக்கணும். உங்க புகாரை விசாரிக்க வேண்டியது உங்க ஏரியாப் போலீஸ் ஸ்டேஷன்தான். நான் உங்க புகாரை ஏத்துக்கிட்டதே என் லிமிட்டுக்கு அப்பாற்பட்ட விஷயம். தெரியுதா?"

இன்ஸ்பெக்டர் ஓங்கி ஒரு போடு போட்டதும், தந்தை நிலைகுலைந்து போனார். ஆனால் அழகாகச் சிரித்து அதைச் சமாளித்தார். பிறகு, "நன்றி சார்! நான் ஒண்ணைத் தெரிஞ்சுக்கலாமா?" என்று கேட்டார்.

"பேஷா!"

"உங்களுக்குச் சம்பந்தம் இல்லாத ஒரு புகாரை, நீங்க ஏன் விசாரணைக்கு எடுத்துக்கிட்டீங்க?"

இன்ஸ்பெக்டர் கொஞ்சம் யோசித்துவிட்டு, "எல்லாம் ஒருவித மனிதாபிமானம்தான். மனிதாபிமானத்துக்கு லிமிட் ஏது?" என்று கேட்டார்.

தந்தைக்கு ஆச்சரியமாக இருந்தது. போலீஸ் ஸ்டேஷனில் கூட, மனிதாபிமானம் என்பதற்கெல்லாம் இடம் உண்டா?

சிறிய இடைவெளிக்குப் பிறகு, இன்ஸ்பெக்டரின் குரல் ஒலித்தது: "மிஸ்டர்..."

"என் பேரு மலையாண்டி சார்!" என்றார் தந்தை.

"நன்றி மிஸ்டர் மலையாண்டி! நேரே விஷயத்துக்கு வருவோம். மகா மகா மேன்மை பொருந்திய காதலுக்காகப் பெற்ற தந்தையையே பறி கொடுக்கத் தயாரா இருந்த நீங்க, உங்க பெண்ணின் காதலுக்குப் பலத்த எதிர்ப்பைத் தெரிவிக்கிறீங்களே, அதுக்குக் குறிப்பா ஏதாவது காரணம் உண்டா?"

"உண்டு சார்! இந்தப் பையன் எங்க ஜாதி இல்லை..."

"அப்படீன்னா? புரியும்படியாச் சொல்லுங்க."

"இந்தப் பையன் என்னோட ஜாதியையோ, என் மனைவியோட ஜாதியையோ சேர்ந்தவன் இல்லை..."

"அதாவது இந்தப் பையன் மூணாவது ஜாதி. உங்க எதிர்ப்புக்கு அதுதான் காரணமா?"

"ஆமா! என் பொண்ணைக் கட்டிக்கிறவன், ஒண்ணு என் ஜாதியா இருக்கணும், இல்லைன்னா, என் மனைவியோட ஜாதியா இருக்கணும்..."

"இல்லைன்னா..."



"அவங்க எங்க மாதிரி கஷ்டப்படணும். நானும், என் மனைவியும் காதலிச்சுக் கல்யாணம் செய்துக்கிட்ட பிறகு, எங்க இரண்டு ஜாதிக்காரங் களோடும் ஒட்ட முடியாம, நாங்க இருபது வருஷமா போராடின போராட்டம், எங்களோட போகட்டும். அந்த வேதனையும், வேக்காடும் எங்க பொண்ணுக்குவேண்டாம்..." என்றதந்தை மேலே பேச முடியாமல் தழுதழுத்தார்.

மல்லிகாவின் தாய், அவர் விட்ட இடத்திலிருந்து தொடர்ந்தாள்: "ஆமா சார்! ஏதோ பெரிய குற்றம் செய்த மாதிரி அவர் வீட்டு ஜனங்களும், ஏதோ கொலை செய்த மாதிரி என் வீட்டு ஜனங்களும் 'குதி குதி' ன்னு குதிச்சாங்க. ஒரு நல்லது கெட்டது கிடையாது. எங்களைக் குப்பையா நினைச்சுக் கூட்டித் தள்ளிட்டாங்க. 'நாங்க குப்பை இல்லை, கோபுரம்'னு சவால் விடுற மாதிரி, நாங்க வாழ்க்கையிலே உசந்து காட்டினோம். இப்ப இரண்டு வருஷமாத்தான் எங்க இரண்டு தரப்பு ஜனங்களும் எங்க வீட்டுக்கு வரப் போக இருக்காங்க. எங்க அண்ணன் எங்க மகளைத் தன் மகனுக்குப் பெண் கேட்டு, ஆளுக்கு மேல் ஆளா அனுப்புறார். என் கணவருக்கு நெருங்கின சொந்தக்காரப் பையன் ஒருத்தன், கல்லூரிப் பேராசிரியரா இருக்கான். அவனுக்குப் பெண் கேட்டு எங்க வீட்டு வாசல்லே தவம் கிடக்கிறாங்க. இப்படி போட்டி போட்டுக்கிட்டு எங்க இரண்டு ஜாதிக்காரங்களும் காட்டுற ஆதரவு, இப்போ எங்களுக்குத் தேவைப்படுது. அதிலேதான் எங்க பெண்ணோட எதிர்காலமே இருக்கு. நாங்க சந்திச்ச உரசல்களையும், உதாசீனத்தையும் எங்க பெண் சந்திக்கக்கூடாது. நாங்க பட்ட நாய் பட்ட பாட்டை எங்க மகள் படக் கூடாதுன்னு நினைக்கிறது தவறா சார்?..."

"பேசி முடிச்சிட்டீங்களா? ரொம்ப உருக்கமாப் பேசினீங்க. ஆனா, அந்த உருக்கத்திலே உண்மை எதுவுமே இல்லைங்கிறதுதான் உண்மை. நீங்க கூட்டித் தள்ளின குப்பையாக் கிடக்காம, வாழ்க்கையிலே கோபுரமா உயர்ந்து நிக்கலைன்னா, உங்க ஜாதி ஜனம் உங்களைச் சீந்தியே இருக்காது. இப்போ உங்க கையிலே நிறையக் காசு பணம் இருக்கு. அதனாலேதான், ஒரு காலத்திலே உங்களைத் தூக்கி எறிஞ்சவங்க எல்லாம், இப்போ உங்களைத் தலையிலே தூக்கி வச்சுக்கிட்டு ஆடுறாங்க; உங்க பொண்ணைக் கொத்திக்கிட்டுப் போக, நான், நீயின்னு போட்டி போடுறாங்க. அவங்க வீசுற இந்தத் தந்திர வலையை அறுத்து எறிய முடியாத கோழைகளா நீங்க ஏன் மாறினீங்க? கொஞ்சம் யோசித்துப் பாருங்க. இருபது வருஷத்துக்கு முன்னாலேயே ஜாதியை எதிர்த்துத் தைரியமாகக் கல்யாணம் செய்துகிட்ட நீங்க, இப்போ அதே காரியத்தை உங்க பொண்ணு செய்ய முன் வரும்போது, ஏன் எதிர்ப்பைக் காட்டுறீங்க? அப்படின்னா, நீங்க இரண்டு பேரும் ஜாதிங்கிற வட்டத்தை விட்டு இன்னும் வெளியே வரலையா?"

இன்ஸ்பெக்டர் கூறிய ஒவ்வொரு வார்த்தையும், மல்லிகாவின் பெற்றோர் மனத்தில் ஆணியாக இறங்கியது.

அதை அவர்களின் முகத்தில் பரவிய உணர்ச்சிகளின் மூலம் அறிந்து கொண்ட இன்ஸ்பெக்டர், அடுத்த கணையை ஏவினார்: "இங்கே பாருங்க. நீங்க எப்போ உங்க ஜாதிகளை மறக்கலையோ, அப்போ உங்க காதலுக்கும், நீங்க வாழ்ந்த வாழ்வுக்கும் என்ன அர்த்தம்?"

"அது வந்து..."

"என்ன வந்து, போயி? காதலுக்காக உங்க ஜாதிகளையே தூக்கி எறிஞ்ச நீங்க, உங்க பொண்ணு அதே காரியத்தைச் செய்யத் துணிஞ்ச போது, இப்போ முட்டுக்கட்டை போடுறது ஏன்? ஜாதிகளே இல்லாத ஒரு சமுதாயம் ஏற்படறதுக்குப் போராளிகளா மாறிப் போர் செய்த நீங்க, இப்போ ஏன் கோழைகளாகிக் கூச்சல் போடுறீங்க? நீங்க உங்களுக்கு ஒரு சமூக அங்கீகாரம் கிடைக்கிறதுக்காக சளைக்காமல் போராடின மாதிரி, இவங்களும் ஏன் போராடக் கூடாது? பெரியவங்க உங்களாலே தொடங்கி வைக்கப்பட்ட ஜாதிகளுக்கு அப்பாற்பட்ட ஒரு சமூகம் உருவாகவும், எல்லா ஜாதிகளுமே 'மனித ஜாதி'ங்கிற ஒரே ஜாதிக்குள்ளே சங்கமமாகவும், உங்க மாதிரியே உங்க பொண்ணும் ஒரு வாழ்க்கைப் பாதையை அமைக்கப் பார்க்கிறா. நீங்க அதுக்கு 'ஓகே' சொல்லலைன்னா, அவ உங்களை ஓர் ஓரமா ஒதுக்கிட்டுப் போயிடுவா. உங்களுக்கு அப்படி ஓர் அவமானம் அவசியமா? யோசிங்க..."

மல்லிகாவின் பெற்றோர் அவர் சொன்ன கோணத்தில் அப்போதுதான் யோசித்தார்கள்.

"என்ன! யோசிச்சீங்களா?" என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

"யோசிச்சோம். நீங்க சொல்றது தான் நல்லதுன்னு தோணுது. எங்க பொண்ணு விரும்புற பையனுக்கே அவளைக் கல்யாணம் செய்து வைக்கத் தயாரா இருக்கோம்!" என்றார் அப்பா.

"நீங்க உங்க முடிவைச் சொல்லிட்டீங்க. ஆனா, உங்க வீட்டம்மா ஒண்ணும் சொல்லலையே! நீங்க என்ன சொல்றீங்க?" என்று அவள் பக்கமாய்ப் பார்த்தார் இன்ஸ்பெக்டர்.

"நான் சொல்றதுக்கு என்னங்க இருக்கு? எல்லாத்தையும் நீங்களே சரியாச் சொல்லிட்டீங்க. ஊருக்குப் போனா எங்க மனசு மாறினாலும் மாறும். இல்லைன்னா, மத்தவங்களாலே மாத்தப்பட்டுடும். அதுக்குள்ளே நீங்க அதைச் செஞ்சு வச்சிடுங்க!" என்றாள் அம்மா.



"நான் எதைச் செஞ்சு வைக்கணும்?" என்று விளங்கிக் கொண்டே விளங்காதவர் போலக் கேட்டார் இன்ஸ்பெக்டர்.

"இவங்க கல்யாணத்தை!" என்றாள் தாய்.

எரிமலைகளைப் பனிமலைகளாக மாற்றிய இன்ஸ்பெக்டருக்கு நன்றி கூறின நான்கு கண்கள். இன்னும் சரியாகச் சொன்னால் எட்டுக் கண்கள்!

புகார் பூம்புகாராக மாறியதில் இன்ஸ்பெக்டருக்கு ஏகப்பட்ட மகிழ்ச்சி. ஒரு காவலரைப் பார்த்து விழி அசைத்தார்.

அடுத்த கணம் அவர் மாலைகள் வாங்கி வருவதற்காகப் பூக்கடைக்குப் புறப்பட்டார்.

## என் தாய் நாடு

### கவிஞர் வள்ளியூர் ஸ்ரீநிவாசன்

*என் தாய் நாடே! உன் அன்பின் பொருட்டுத்*
*தவிட்டை உண்பேன்,*
*கந்தையை அணிவேன்,*
*இசை, இன்பம் எல்லாம் எறிந்து விடுவேன்!*

*என்றேனும் ஒரு நாள் என் ஆன்மா*
*இந்த அழியும் இல்லத்தைவிட்டு*
*ஏகவேண்டியதே.*
*ஆனால், உன்னைவிட்டு என்னைப் பிரிக்க*
*எமனுக்கும் ஆற்றல் உண்டோ?*
*இல்லை என்று நீ அறிவாய்.*

*உன்னிடம் பிறப்பது*
*எவ்வளவு அரிய பாக்கியம்!*
*அதை யார் என்னிடமிருந்து*
*பறித்துவிட இயலும்?*
*அவ்வளவு துணிவுள்ள திருடன் உளனோ?*

*என் தாய் நாடே! உன்பொருட்டு*
*என் உடலை ஈவேன்!*
*என் உயிரை அளிப்பேன்!*
*மெய்மறந்து நிற்கும் என் அன்பு கண்டு*
*சிலர் நகைப்பர், சிலர் வருந்துவர்.*
*ஆனால், நான் அவர்களை லட்சியம்*
*செய்யப்போவதில்லை.*

*எங்கள் செல்வம், எங்கள் புகழ்,*
*எங்கள் அன்பு - என்பவற்றை*
*நீ விரும்புகிறாயில்லை;*
*எங்களையே நீ உன் உயிர்க்குயிராய்*
*மதித்திருக்கின்றாய்.*

*ஊழியத்தில்நான் இன்னல் அடைவதை,*
*நான் உயிர்துறப்பதை நீ காண்பாய்.*
*உயிரை உனக்குப் பலியிடுவதால்*
*ஊழுழிகாலம் ஊழியம் செய்வேன்!*





## ஊருகரைச் சிலிர்ப்பு

### கவிஞர் பிரபாகர்பாபு

*காலையிளம் பரிதிவரும் அழகைக் கண்டேன்*
*கறுப்புதிர்ந்து மெலிதாகக் கரையக் கண்டேன்*
*வேளைசுப வேளையென வண்ணம் தீட்டும்*
*வித்தகமே கண்டிறைவன் வித்தை கண்டேன்*
*சோலையது பனியில்முகம் கழுவிக் கொண்டு*
*சுந்தரமாய்ச் செண்டுகளாய்ச் சிரிக்கக் கண்டேன்*
*நாளையொரு நன்மைதரும் என்றே நம்பி*
*நாட்டியமாய்ப் பூங்கொடிகள் நெளியக் கண்டேன்*

*தென்றலுடன் குலவுகிற தளிர்கள் கண்டேன்*
*தாவிமரப் பூகொறிக்கும் அணில்கள் கண்டேன்*
*அன்றலர்ந்த வாழையிலைக் கோட்டில் கிளிகள்*
*அவசரமாய்ச் செய்திகளைப் படிக்கக் கண்டேன்*
*ஒன்றிரண்டு மைனாக்கள் உரக்கக் கூவி*
*உயர்ந்துவரும் கதிர்களினை எண்ணக் கண்டேன்*
*வென்றுவிடக் கண்ணுருட்டி வெகுண்டாற்போல*
*வெப்பமுடன் கதிரவனும் வருதல் கண்டேன்.*

*சூழ்ந்திருந்த இருள்கூட்டம் சொல்லாமலே*
*சுடர்கண்டு தோற்றோடிச் சரியக் கண்டேன்*
*தாழ்ந்திருந்த புதுவெள்ளி வானின் கோலம்*
*தங்கமென மெருகேறித் திகழக் கண்டேன்*

*வீழ்ந்திருந்த உடற்கூட்டம் விழித்துக் கொண்டு*
*விடிவுகளில் நாட்டமுடன் விரையக் கண்டேன்*
*ஆழ்ந்திருந்த கருமையது அகன்றாற் போல*
*அறியாமை அகன்றாலே அகிலம் வாழும்.*

# வட்ட நிலா

கவிஞர் நெல்லை மணிபாரதி.

கவிஞர் நெல்லை மணிபாரதி — (byline)

நல்மேகம் தோற்கும் உன்கருங் கூந்தல்முன்!
பால்நிலா வெற்றி பகருமோ? - உன்நெற்றிப்
பொட்டழகில்! உன்கரங்கள் பட்டவுடன் மாறுதடி
வட்டநிலாச் சுட்ட வடு!

முல்லைச் சிரிப்பியும் கார்குழலே! கனியமுதே!
மெல்லநீ என்பக்கம் வாராயோ? - மெல்லிடையே!
கொட்டும் எழில்முகம் கூறிடுவேன்; அஃதேதான்
வட்டநிலாச் சுட்ட வடு!

என்னமுதே! எழிலரசி! அறிவரசி! உன்னிப்பார்!
உன்னைப் பிரிந்ததோ ஓரிரவு? - காதலினால்
தொட்டின்பம் துய்த்துத் திரும்பிய அன்பே.. பார்!
வட்டநிலாச் சுட்ட வடு!

மட்டுமலர்க் கட்டுடலில் முத்தமழை இட்டிடுவார்
பட்டுமேனி சிலிர்க்குதடி பூவிதழ்போல் - விட்டகலின்
கொட்டுதடி தேனினைப் போல் காட்டமுது மேனியெலாம்
வட்டநிலாச் சுட்ட வடு!

# உயர்வதென்று?

வீ. கோவிந்தராசன் எம்.ஏ.,எம்.எட்.,

அந்நியர்கள் சுதந்தரத்தை நமக்களித்து
ஐம்பதாண்டு நிறைவடைந்த பின்னும் - நாட்டை
முன்னேற்றும் தொழில்வளங்கள் பெருக வில்லை
முழுவயிறு நிரம்பிடவும் வழியுமில்லை!
அன்றாடம் இனச்சண்டை கொலை கொள்ளை
அதிரவைக்கும் வெடிகுண்டு தொடருதிங்கே!
விண்வெளியில் பிறநாட்டார் நடக்கும் நாளில்
வீதிகளில் நகைபறிப்பு நடக்கு திங்கே!

இந்நாட்டில் கனிவளங்கள் நிறைந்திருந்தும்
இணையற்ற அறிவியலார் பலரி ருந்தும்
எந்தவொரு கனிவளமும் பெற்றி ராத
எண்ணற்ற தீவுகளைக் கொண்ட ஜப்பான்
முன்னேற்ற நாடுகளில் முன்னே நின்று
மூக்கின்மேல் விரல்வைக்க செய் வதைப்போல்
பன்னாட்டார் வியக்கும்வகை பொருள்படைத்து
பாரிவெந்தன் தாய்நாடு உயர்வதென்று?

## தரணியை உயர்த்துவோம் தீபாவளியால்!

ஓவியக்கவிஞர் வண்ணப்பூங்கா வாசன்

சரவெடியும், தொடர்வெடியும் எழுப்பும் சத்தம்,
சக்கரமும், வான் முட்டும் பட்டாகம் நல்
கரங்களிலே ஏந்துகின்ற சாட்டை, கம்பி,
கண் கூசும் பொரிவாணம், ஆட்டம் பாமும்,
உரசினாலே ஒலி எழுப்பும் கேப்பும், மத்தாப்பும்,
உயர்ந்தரக வெடிகளெல்லாம் வெடிக்கும் நாள் நம்
விரதமெல்லாம் துலங்கட்டும்! பாடு பட்டோர்;
வாழ்வில் ஒளி மிளிரட்டும் இன்றும்...! என்றும்...!

பலகாரப் பட்சணங்கள் சுவை ரவா லட்டு,
பால்பேணி, சீடை, முறுக்கு, காரா பூந்தி,
பலர் விரும்பும் புலவும், பாதாம் பருப்பும்
பல்சுவையின் பாதுஷாவும், இட்லி , சட்னி,
கலகலப்பாய் விருந்துண்ண சாதம், சாம்பார்,
கறிமசாலா, கூட்டு, பொரியல், அவியல் எல்லாம்
அலங்கார வாழை இலை யில் நல் விருந்து!
அல்லலுற்றோர் இவ்விருந்தில் பங்கேற்கட்டும்.!

வண்ண வண்ணத் துணிகளாலே பல்வே(று) ஆடைகள்!
வகைவகையாய் அணிமணிகள் பளிங்குப் பட்டு;
கண் கொள்ளாக் காட்சியென ஆடை மிடுக்கு!
கவர்ச்சிமிகு புத்தாடையால் மகிழ்ச்சி வெள்ளம்!
எண்ணமெல்லாம் ஆனந்தத்தால் வசதி மிக்கோர்!
இன்பமொடு கூத்தாடும் நன்னாள் இன்று!
கண்களிலே ஒளியிழந்து வயிறு ஒட்டி
கவலையுடன் இருப்போரை நினைவில் கொள்வோம்.!

அரக்கன்தன் வேண்டுகோளால் தீபாவளியாம்;
அப்படித்தான் புகல்கின்றார் நம்மின் முன்னோர்!
இரந்து வாழும் இல்லாதோர் இல்லம் இன்று;
இன்பத்தால் திளைக்குதென்றால் நமக்கும் நன்னாள்!
வரவேண்டும் யுகப்புரட்சி! பாரதி பாட்டில்
வரைந்துள்ள மறுமலர்ச்சி - எங்கும் தங்க,
தரமான வல்லமையால் திட்டம் தீட்டி,
தரணியையே உயர்த்துமென்றால் இந்நாள் நன்னாள்!



# நாளைய நதிகள்

ஏர்கண்டிஷன் காற்றைச் சுவாசித்துக் கொண்டு பெண்டியம் கம்ப்யூட்டர்க்கு முன்பாய் உட்கார்ந்து அதன் செயல்பாடுகளை உன்னிப்பாய்க் கவனித்துக் கொண்டிருந்த சுபிட்சாவை இண்டர்காம் கனைத்துக் கலைத்தது.

தந்தம் போன்ற அழகாய் இருந்த வலக் கையை நீட்டி ரிஸீவரை எடுத்து காதோடு ஒட்ட வைத்தாள் சுபிட்சா.

"எஸ்..."

மறுமுனையில் இருந்த மானேஜிங் டைரக்டரின் பி.ஏ. ராகவாச்சாரி கேட்டார்.

"என்னம்மா சுபிட்சா..! பிஸியா இருக்கியா?"

"பிஸிதான்..! பெண்டியம் கம்ப்யூட்டர் லேசா குறும்பு பண்ணிட்டிருக்கு ஸார். அதைக் கொஞ்சம் ட்ரில் பண்ணிட்டிருக்கேன். என்ன விஷயம் ஸார்..?"

"ஒண்ணும் இல்லைம்மா. எம்.டி. உன்னைப் பார்க்கணும்ன்னு சொன்னார். கொஞ்சம் ஃப்ரீ பண்ணிட்டு வாயேன்..."

"ஒரு பத்து நிமிஷத்துல வந்துடறேன் ஸார்.."

"வாம்மா.."

சுபிட்சா ரிஸீவரை வைத்துவிட்டு கம்ப்யூட்டரை ஐந்து நிமிஷ நேரம் இயக்கிவிட்டு பின் அணைத்து ப்ளாஸ்டிக் உறையைப் போட்டு மூடிவிட்டு எழுந்தாள்.

'எம்.டி. எதற்காக கூப்பிட்டிருப்பார்?'

மனத்துக்குள் முளைவிட்ட கேள்வியோடு கம்ப்யூட்டர் செக்ஷனை விட்டு வெளியே வந்து வேகமாய் லிஃப்ட்டை நோக்கிப் போனாள்.

முப்பது விநாடி லிஃப்ட் பயணத்தில் நான்காவது மாடி வந்தது.

ரோஸ்வுட் கதவு பளபளக்கும் மானேஜிங் டைரக்டரின் அறைக்கு முன்பாய் வந்து நின்றாள் சுபிட்சா.

மெல்ல, காதை இம்சைப்படுத்தாத டெஸிபிலில் கதவைத் தட்டினாள்.

"டொக்.. டொக்.."

"ப்ளீஸ்.. கம்மின்.."

மானேஜிங் டைரக்டர் கீர்த்தி வாசனின் குரல் உள்ளேயிருந்து வெளிப்பட, கதவைத் தள்ளிக்கொண்டு உள்ளே போனாள் சுபிட்சா.

"குட்மார்னிங் ஸார்..!"

முடி கொட்டிவிட்ட மண்டையுடன் எக்ஸிக்யூடிவ் நாற்காலியில் சாய்ந்தபடி ஃபைல் பார்த்துக் கொண்டிருந்த மானேஜிங் டைரக்டர் கீர்த்திவாசன் ஒரு புன்னகையோடு நிமிர்ந்தார்.

"வாம்மா.."

"கூப்பிட்டீங்களா ஸார்..?"

"ஆமா..! உட்கார்ம்மா!" பார்த்துக் கொண்டிருந்த ஃபைலைத் தள்ளி வைத்துவிட்டு எதிரே இருந்த நாற்காலியைக் காட்டினார் கீர்த்திவாசன்.

சுபிட்சா உட்கார்ந்தாள்.

புன்னகையோடு அவர் கேட்டார்:

"இன்னிக்கு காலையிலே நீ யார் முகத்தில் விழிச்சேம்மா..?"

"எதுக்காக ஸார் கேட்கறீங்க..?"

"காரணம் இருக்கு சொல்லம்மா..?"

"வழக்கம் போல என் கணவரோட முகத்துலதான்.."

"இருக்காதும்மா.. நல்லா யோசிச்சுப் பாரு..! இன்னிக்கு நீ வேற யார் முகத்திலோதான் விழிச்சிருக்கணும்.."

சுபிட்சா திகைப்பாய் யோசித்துப் பார்த்துவிட்டு தலையாட்டினாள். "ஆமா.. ஸார்.. இன்னிக்குக் காலையில அஞ்சரை மணிக்கெல்லாம் எதிர்வீட்டு அம்மா என்னோட வீட்டுக்கு வந்தாங்க. அவங்க வெளியூர் போறதால வீட்டைப் பார்த்துக்கும்படியா சொன்னார்?"

"அந்தம்மா சுமங்கலியா?"

"ஆமா.."

"அதான் உனக்கு இப்படியோர் அதிர்ஷ்டம்"

"அதிர்ஷ்டமா..? என்ன ஸார் சொல்றீங்க?"

"உனக்கு ப்ரமோஷன் கிடைச்சிருக்கம்மா.. டைரக்டர்ஸ் போர்டு மீட்டிங்லே ஒரு மணி நேரத்துக்கு முன்னேதான் முடிவாச்சு. இனிமே கம்ப்யூட்டர் செக்ஷன்ல உனக்கு சீஃப் ப்ரோக்ராமர் போஸ்ட்.. சம்பளம் அப்படியே இரண்டு மடங்கா உயருது. இப்ப நீ எட்டாயிரம் வாங்கிட்டிருக்கே. இனி உனக்கு சம்பளம் பதினாறாயிரம்."

"ஸ..ஸார்..."

சுபிட்சா சுவாசிக்கத் திணறினாள். சந்தோஷத்தில் இதயம் ஓர் இனிய கனத்தோடு அடைத்துக் கொள்ள கண்களில் நீர் சீறியது.. "ஸ..ஸார்.. நான்.. இதை எதிர்பார்க்கவேயில்லை.."

"நான் எதிர்பார்த்தேன்.."

"ஸ...ஸார்.. என்னைவிட சீனியரெல்லாம் இருக்கும் போது சப் ஜூனியரான எனக்குப் போய் ப்ரமோஷனா..?"

கீர்த்திவாசன் சிரித்தார்.

"அம்மா.. சுபிட்சா..! இந்தக் கம்பெனியோட விதிமுறைகள் என்னவென்று உனக்கு சரியாத் தெரியல்லைன்னு நினைக்கிறேன். இங்கே சீனியாரிட்டிக்கு மதிப்பில்லை. சின்சியாரிட்டிக்குத்தான் மதிப்பு. நரைத்த ஆட்களுக்கு இங்கே ப்ரமோஷன் இல்லை. திறமையுள்ளவர்களுக்குத்தான் அது கிடைக்கும்.. உனக்கு என்ன காரணத்துக்காக ப்ரமோஷன் குடுத்திருக்காங்கன்னு நீயே படிச்சுப்பாரு.."

சொல்லிக் கொண்டே கையில்

ராஜேஷ்குமார்

வைத்திருந்த ஃபேக்ஸ் தாளை நீட்டினார் கீர்த்திவாசன்.

சுபிட்சா அதை வாங்கி, பார்வையை அதில் ஓட்டினாள். ஃபேக்ஸ் செய்தி இப்படி சொல்லியிருந்தது.

"நம் கம்பெனியின் கம்ப்யூட்டர் பிரிவில் பணிபுரிந்து வருகிற பி.ஈ கம்ப்யூட்டர் சயின்ஸ் பட்டதாரி திருமதி சுபிட்சா கம்ப்யூட்டர் வைரஸ் எராடிகேஷன் சம்பந்தமாய் எழுத்து பூர்வமாய் தெரிவித்த பல யோசனைகளை பரீட்சார்த்தமாய் செயல்படுத்திப் பார்த்தபோது கம்பெனிக்கு லாபம் தரும் வகையில் அதன் முடிவுகள் சிறப்பாய் அமைந்திருந்தன. இதைப் பாராட்டி கௌரவிக்கும் வகையில் திருமதி சுபிட்சாவுக்கு நாளை முதல் பதவி உயர்வு அளித்து அவரது சம்பளத்தையும் இரட்டிப்பாக்கியுள்ளது."

ஃபேக்ஸில் வந்த செய்தியைப் படித்துவிட்டுப் பரவசமாய் நிமிர்ந்தாள் சுபிட்சா.

"ஸார்.. என்னால நம்ப முடியலை.."

அவர் சிரித்தார்.

"வாழ்க்கைங்கிறது ஒரு பரமபத விளையாட்டு மாதிரி. பரமபதம் படத்தில் பாம்புகளும் இருக்கும்; ஏணிகளும் இருக்கும். சோம்பேறிகளைப் பாம்புகள் கடிக்கும். திறமைசாலிகளை ஏணிகள் ஏற்றிவிடும். உனக்கு இப்போ கிடைச்சிருக்கிறது ஏணி.. இன்னிக்கு ஆபீஸுக்கு அரைநாள் லீவு போட்டுவிட்டு வீட்டுக்குப் போய் உன்னோட கணவர் கிட்ட விஷயத்தைச் சொல்லி, சந்தோஷமாய்க் கொண்டாடு.."

சுபிட்சாவின் முகம் சட்டென்று வாடி அதுவரைக்கும் இருந்த பிரகாசத்தைத் தொலைத்தது.

"என்னம்மா..! என்னம்மா மவுனம் ஆயிட்டே..? நான் ஏதாவது தவறாச் சொல்லிட்டேனா..?"

"இல்ல ஸார்.. கடந்த இரண்டு மூணு மாசமாவே என்னோட கணவர்க்கு ஒரு காம்ப்ளக்ஸ்.."

"காம்ப்ளக்ஸா..?"

"ஆமா ஸார்.. இன்ஃபீரியாரிட்டி காம்ப்ளக்ஸ்."

"என்னம்மா அது..? நீயும் பி.ஈ. பட்டதாரி. அவரும் பி.ஈ. பட்டதாரி. அவரும் நல்ல வேலையில இருக்கார்.. இதுல காமப்ளக்ஸ் எப்படி வரும்..?"

"அது என்னமோ தெரியலை ஸார்..! கொஞ்ச நாளாவே அவர் பேச்சு சரியில்லை. சம்பாதிக்கிற திமிரான்னு கேட்டுட்டார். நான் எதிர்த்துப் பேசினா சண்டை வந்துடும்ன்னு கோபத்தை அடக்கிட்டேன்"

கீர்த்திவாசன் புன்னகை பூத்தார்.

"கணவன் மனைவி இரண்டு பேரும் சேர்ந்த மாதிரி வேலைக்குப் போனா குடும்பத்துக்குள்ளே இந்த மாதிரியான பேச்செல்லாம் வர்றது சகஜம் தான். அதையெல்லாம் பொருட்படுத்தாதே..! உன்னோட ஹஸ்பெண்டுக்கு ஆபீஸ்ல எவ்வளவோ டென்ஷன் இருக்கலாம். அந்த டென்ஷனை வேற யார்கிட்ட காட்ட முடியும் உன்னைத் தவிர? நீ வீட்டுக்குப் போய் இந்த ப்ரமோஷன் விஷயத்தை அவர்கிட்ட சொல்லு. சந்தோஷத்துல உன்னைக் கட்டிப் பிடிச்சுத் தூக்கறாரா இல்லையான்னு பாரு.."

"எனக்கு நம்பிக்கையில்லை ஸார்.."

"போய்ச் சொல்லிப் பாரம்மா.."

சுபிட்சா எழுந்து கொண்டாள். மனசுக்குள் இப்போது ப்ரமோஷன் உறுத்தியது.

"வர்றேன் ஸார்.."

"ஸ்வீட் வாங்கிட்டுப் போம்மா"

✣ ✣ ✣

சுபிட்சா ஒரு ஸ்வீட் பாக்கெட்டை வாங்கி கைப் பையில் திணித்துக் கொண்டு ஓர் ஆட்டோ பிடித்து இராஜா அண்ணாமலைபுரத்தில் இருந்த வீடு போய்ச் சேர்ந்தபோது பகல் இரண்டு மணி.

ஆட்டோவை விட்டு இறங்கும் போதே ஆச்சர்யப்பட்டாள்.

வீடு திறந்திருந்தது.

'அவரும் ஆபீஸிலிருந்து பர்மிஷன் போட்டுவிட்டு வந்து விட்டார் போலிருக்கிறதே..?'

பணத்தைக் கொடுத்து ஆட்டோவை அனுப்பி விட்டு வேகவேகமாய் உள்ளே விரைந்தாள் சுபிட்சா.

அவளுடைய கணவன் வேல்ராஜ் சோபாவுக்குச் சாய்ந்தபடி ஒரு சிகரெட்டைப் புகையாய் மாற்றிக் கொண்டிருந்தான். ஒரே திசையைப் பார்த்துக் கொண்டிருந்த அவனுடைய கண்கள் சுபிட்சாவின் வருகையால் சற்றே கலைந்தன.

சுபிட்சா பக்கத்தில் போய் உட்கார்ந்தபடி கேட்டாள்.

"என்னங்க..! இவ்வளவு சீக்கிரத்தில வந்துட்டீங்க?"

வேல்ராஜ் சிகரெட் புகை கசியும் வாயோடு 'உச்' கொட்டினான். "இதோ பார்..! இந்த நடிப்பெல்லாம் என்கிட்ட வேண்டாம். உனக்கு விஷயம் தெரிந்துதானே உன்னோட கம்பெனியில் பர்மிஷன் போட்டுட்டு வந்திருக்கே.."

"விஷயமா..! என்ன விஷயம்..?"

"இந்தப் பாவலாதானே என் கிட்டே வேண்டாம்ங்கிறது.."

"பாவ்வாலா..? நிஜமா எனக்கு எந்த விஷயமும் தெரியாதுங்க.."

"பின்னே. எதுக்காக.. நீ இவ்வளவு சீக்கிரத்துல இன்றைக்கு ஆபீஸிலிருந்து வந்திருக்கே..?"

சுபிட்சா யோசித்தாள்.

'ப்ரமோஷன் விஷயத்தைச் சொல்லலாமா வேண்டாமா..?'

'வேண்டாம்..! இப்போது இவர் சந்தோஷமான மூடில் இல்லை..

"சொல்லு.. எதுக்காக வந்தே..?"

"அது.. வந்து.. தலைவலி..! மாத்திரை சாப்பிட்டும்' சரியாகலை. அதான் ரெஸ்ட் எடுக்கலாம்ன்னு பர்மிஷன் போட்டுட்டு வந்துட்டேன்.."

வேல்ராஜ் தன் கையில் இருந்த கடைசி சென்டிமீட்டர் சிகரெட்டை ஜன்னல் கிரில் கம்பிகளுக்கு வழியே சுண்டியெறிந்துவிட்டு சுபிட்சாவைத் திரும்பிப் பார்த்தான்.

"அப்படின்னா நிஜமா உனக்கு விஷயம் தெரியாதா?"

"ஊஹூம்."

"தெரிஞ்சுக்கோ..! எனக்கு வேலை போயிடுச்சு.."

சுபிட்சா திகைத்தாள்.

"என்னது! வேலை போயிடுச்சா..?"

"ஆமா.."

"எப்படி..?"

"கம்பெனியை இழுத்து மூடிட்டாங்க.."

"ஏன்..?"

"நஷ்டம்ன்னு சொல்றாங்க.."

சுபிட்சா இடிந்து போய் உட்கார்ந்துவிட, வேல்ராஜ் இன்னொரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான். வார்த்தைகள் முட்களாய் வெளியே வந்தன.

"இனிமே இந்த வீட்ல உன் ராஜ்யம்தா-..! எனக்கு ஒரு வேலை கிடைக்கிற வரைக்கும் உன் கொடிதான் பறக்கும்..."

"ஏன் இப்படியெல்லாம் பேசறீங்க..? நம்ம இரண்டு பேர்ல யார் சம்பாதிச்சாலும் அது நம்ம பணம்தான்.."

"கேட்க நல்லாத்தான் இருக்கு.."

"இதோ.. பாருங்க.. என்னையும் உங்களையும் இப்படி பிரிச்சுப் பேசறது கொஞ்சம் கூட சரியில்லை. நான் உங்க மனைவிங்கிற நினைப்பை மனசுல வைச்சுகிட்டுப் பேசுங்க..."

"இன்னிக்கு இப்படித்தான் பேசுவே...! இன்னும் இரண்டு நாள் போகட்டும். வேலைக்குப் போகாத என்னைப் பார்த்தாலே உனக்கு கோபமும் எரிச்சலும் வரும். இன்னும் ஒரு மாசம் போயிட்டா என்னை சாக்கடையில் நெளியற ஒரு புழு மாதிரி பார்ப்பே.."

"உங்க கற்பனையைக் கொஞ்சம் நிறுத்தறீங்களா? படிச்சவரான நீங்களே இப்படியெல்லாம் பேசக்கூடாது. உங்களுக்கு இந்த வேலை போனா என்ன? வேறே வேலை கிடைக்காமலா போயிடும்..?"

"கிடைக்கணுமே..! நீ பி.ஈ. கம்ப்யூட்டர் சயின்ஸ். அதுவும் ஆப்போஸிட் ஜெண்டர். எந்தக் கம்பெனி படியேறினாலும் வேலை கிடைச்சுடும்.. என் நிலைமை அப்படியா..? நான் பி.ஈ. மெக்கானிகல். வேலை கிடைக்கணுமே..?"

"கண்டிப்பா கிடைக்கும். மனசைத் தளரவிடாமே தைரியமா இருங்க.."

வேல்ராஜ் விரக்தியாய்ச் சிரித்தான்.

"பார்க்கலாம்..! உன்னோட ஆசிர்வாதம் பலிக்குதா இல்லையான்னு."

✣ ✣ ✣

மறுநாள் காலை, பதினோரு மணி.

மானேஜிங் டைரக்டர் கீர்த்திவாசன் நெற்றியில் உற்பத்தியான அதிர்ச்சி வரிகளோடு தனக்கு முன்னால் நின்றிருந்த சுபிட்சாவை ஏறிட்டார்.

"நீ என்னம்மா.. சொல்றே..! உனக்கு கொடுத்த ப்ரமோஷன் வேண்டாமா?"

"வேண்டாம் ஸார்"

"ஏன்..?"

இரண்டு நிமிஷம் செலவிட்டு பிரச்னையைக் கூறி முடித்தாள் சுபிட்சா. "என் கணவர்க்கு வேலை போயிருக்கிற இந்த நேரத்துல எனக்கு ப்ரமோஷன் கிடைச்சிடுச்சுன்னு தெரிஞ்சா, எரியற நெருப்புல எண்ணெய் ஊத்தின மாதிரி ஆயிடும்.."

கீர்த்திவாசன் பேப்பர் வெயிட்டை உருட்டிக் கொண்டே சுபிட்சாவை நிமிர்ந்தார்.

"இந்தப் ப்ரமோஷனை நீ வேண்டாம்ன்னு சொன்னா, அது இந்த கம்பெனி டைரக்டர்ஸை அவமதிக்கிற மாதிரி ஆயிடும்.."

"ஸார்..! நான் இந்த ப்ரமோஷனை ஒத்துகிட்டா என் கணவரோட இன்ஃபீரியாரிட்டி காம்ப்ளக்ஸ் இன்னும்



அதிகமாகும். அதனால அவரோட பேச்சில் கேலியும் குத்தலும் இன்னும் அதிகமாகும். நான் வீட்ல நிம்மதியா இருக்க முடியாது."

"உன்னோட ப்ரமோஷன் விஷயத்தை உன் கணவர்கிட்ட சொல்லாமே ரகசியமா வச்சுக்க. அப்படி நீ ரகசியமா வெச்சுகிட்டா அது இன்னொரு வழியில உனக்கு உதவியா இருக்கும்."

"எப்படி ஸார்..?"

"நீ ப்ரமோஷனை ஏத்துக்கிட்டா உன்னோட சம்பளம் எட்டாயிரத்தி லிருந்து பதினாறாயிரமா உயர்ந்து விடும். அதுல பாதித் தொகையான எட்டா யிரத்தை தனியா எடுத்து அவர்க்கு சாலரியா கொடுத்துடலாம்."

"என்ன ஸார் சொல்றீங்க? அப்படியெல்லாம் அவர் பணத்தை வாங்கிக் கொள்ளக் கூடியவர் இல்லை.."

"அது எனக்குத் தெரியாதா என்ன..? அந்த எட்டாயிரம் ரூபாயை வேற வழியிலதான் சாலரியா கொடுக்கப் போறோம்"

"எப்படி ஸார்..?"

"எனக்கு வேண்டிய நண்பர் ஒருத்தர் வியாசர்பாடியில் ஒரு மெஷின் வொர்க்ஸ் கம்பெனியைப் பெரிய அளவில் நடத்திட்டு வந்தார். அங்கே இப்போ வேலை வாய்ப்பில்லை. இருந்தாலும் என் நண்பர்கிட்ட சொல்லி ஓர் அஸிஸ்டெண்ட் என்ஜினீயர் போஸ்ட்டைக் க்ரியேட் பண்ண வேண்டியது. உன்னோட கணவர் அங்கே பார்க்கிற வேலைக்கு மாசா மாசம் உன் சம்பளப் பணத்துல பாதியை எடுத்து குடுத்துடலாம். இதனால உன்னோட கணவர்க்கு வேலையும் கிடைச்ச மாதிரி இருக்கும். நீ இந்த ப்ரமோஷனை அக்செப்ட் செய்த மாதிரியும் இருக்கும்"

"ஸார்..!"

"என்னம்மா..?"

"உங்க நண்பர் அந்த ஏற்பாட்டுக்கு ஒத்துக்குவாரா?"

"ஒத்துக்காமே என்னம்மா..? வேலையை அவன் வாங்கிக்கப் போறான். சம்பளம் கொடுக்கப் போறது நாமதானே..?"

"ஸார்.. இந்த விஷயம் என் கணவர்க்குத் தெரிஞ்சா..?"

"தெரியாதபடி பார்த்துக்க வேண்டியது என்னோட கடமை. நாளைக்கே அந்தக் கம்பெனியிலிருந்து உன்னோட கணவர்க்கு அப்பாயின்ட்மெண்ட் ஆர்டர் வரும்.. அந்த அப்பாயிண்ட் மெண்ட் ஆர்டரைப் பார்த்துட்டு நீ சந்தோஷப்படறமாதிரிநடிச்சா போதும்.."

"நடிக்க வேண்டியதில்லை ஸார்.. நிஜமாவே எனக்கு சந்தோஷம் வரும்.."

✣ ✣ ✣

மறுநாள் மாலை.

ஆறு மணி.

கம்பெனியிலிருந்து வீடு திரும்பிய சுபிட்சாவுக்கு கணவனின் தோற்றத்தைப் பார்க்க பிரமிப்பாய் இருந்தது.

ஷேவ் செய்து குளித்து பிடித்தமான பேண்ட் சர்ட்டில் இருந்தான். காற்றில் செண்ட் வாசனை.

சுபிட்சாவை அலட்சியமாய் ஏறிட்டான்.

"என்ன அப்படி பார்க்கிறே..? அந்த அலமாரியில ஒரு கவர் இருக்கு எடுத்துப்பாரு. வியாசர்பாடியில் இருக்கிற ஒரு பெரிய மெஷின் வொர்க்ஸ் கம்பெனியிலிருந்து எனக்கு அப்பாய்ண்ட்மெண்ட் ஆர்டர் வந்திருக்கு. என்னோட ஜாப் டேலண்டை யூனியன் மூலமா தெரிஞ்சுகிட்டு ஆர்டர் அனுப்பியிருக்காங்களாம். அஸிஸ்டண்ட் என்ஜினீயர் போஸ்ட். மாசச் சம்பளம் எல்லா அலவன்ஸ்களும் சேர்த்து எவ்வளவு தர்றாங்க தெரியுமா எட்டாயிரம் ரூபாய்.."

"ரொம்ப சந்தோஷமாயிருக்குங்க.."

"உன்னோட சந்தோஷம் யார்க்கு வேணும்...? நான் வீட்ல இரண்டுநாள்தான் சும்மாயிருந்தேன். என்னைத் தேடி வேலை வந்தது பார்த்தியா...? இதுதான் அய்யாவோட ஜாதகம்"

"வேலையில எப்போ ஜாயின் பண்ணப் போறீங்க!"

"இப்ப என்ன அவசரம்..? ஆர்டர் இன்னிக்குத்தானே வந்தது. இரண்டுநாள் போகட்டும். விழுந்தடிச்சுகிட்டுபோய் வேலையில ஜாய்ன் பண்ணினா அது கேவலம்.."

உள்ளுக்குள் பொங்கிய சிரிப்பை அடக்கிக்கொண்டு முகத்தில் எந்தவிதமான உணர்ச்சியையும் காட்டாமல் கணவனையே பார்த்தாள் சுபிட்சா.

✻✻

## ஒற்றுமை

இமயபாரதி

ஒற்றுமை உயிரினும் மேலானது – இதை
உணர்ந்ததால் ஜெர்மனி ஒன்றானது!
அற்பரின் வேற்றுமை தீதானது! – பல
அழிவினை வழங்கிடும் தீ போன்றது!

எருதுகள் பகையால் வேறாயின! – மிக
எளிதினில் சிங்கத்தின் இரையாயின!
உரைத்திடும் இக்கதை நெறியானது! – உயர்
ஒற்றுமை ஓங்கிட வழியானது!

வேற்றுமை பிரிவினை வீணானது! – பல
வேதனை நல்கிடும் விஷம் போன்றது!
ஊற்றுநீர் ஒற்றுமை தேனானது! – இந்த
உலகினில் காத்திடும் தாய்போன்றது!



# சுதந்தரப் பொன் மலர்

கவிஞர் சக்திக்கனல்

தேச பக்தர் உடல் நெற்றி வியர்வையை
ஊற்றி வளர்த்த மலர் - இது
தெய்வங்கள் சேர்ந்து படைத்த நந்தவனம்
பூத்துக் களித்த மலர்!

நூற்றாண்டு காலங்கள் சத்திய சோதனை
ஏற்று மலர்ந்த மலர் - உண்ணா
நோன்பில் தியாகத்தில் வேர்விட்டு வீசிய
காற்றில் அசைந்த மலர்!

செங்குரு திப்புனல் கொட்டிச் சிவந்து
செழித்துச் சிவந்த மலர் - எங்கள்
தேசம் பிறந்த தியாகக் குமாரர்
உயிரில் தழைத்த மலர்!

மங்கையர் தங்க மழலையர் தியாக
மணத்தில் முகிழ்த்த மலர்! - எங்கள்
வ.உ.சி பாரதி சுப்ரமண்ய சிவா
வாழ்வில் உதித்த மலர்!

தாலாட்டுப் பாடிடு தங்கள் மணிக்கைகள்
தம்மில் வளர்ந்த மலர் - எங்கள்
தந்தையர்தாம் தினம் போற்றி நீர்வார்த்துத்
தளிர்த்திட வைத்த மலர்!

லாலா லஜபதி பாலகங் காதரர்
காந்தி விளைத்த மலர்! - தேச
வட்சியச் சிங்க மறவர்கள் வேள்வி
நெருப்பில் மணந்த மலர்!

இராட்டை சுழன்றிட நாட்டுக்கு வாழ்த்துரை
கூறி மகிழ்ந்த மலர்! - கலை
ஞானரதம் செய்து விண்ணவர் நாட்டை
உலாவந்த வெற்றி மலர்!

பாட்டுத்தே ரோட்டிய பாரதி வேய்ங்குழல்
நாதத்தில் பூத்த மலர் - தேச
பக்தர்கள் ஒத்துழை யாமைக் குரலுக்குத்
தாள மிசைத்த மலர்!..

ஆயிரமாண்டுக் கொருமுறை பூக்கும்
அனிச்சத்து மென்மை மலர் - எங்கள்
அன்னை எம் பாரத் தாய்முடி ஏறி
அழகு விளைத்த மலர்!

பாயிர வேள்விகள் நூறு செய்தே வரம்
பாக்கியம் பெற்ற மலர் - எங்கள்
பாரத மக்களின் மூச்சிழை யோடி
மணந்திடும் வாச மலர்!

கண்ணின் மணியெனக் காக்கும் மலரைப்
பிரிவினை மாய்ப்பதுவோ? - கோடி
காலம் தவமிருந் தெய்திய விடுதலை
கைவிட்டுப் போவதுவோ?

பண்ணிய தியாக மலரைப் பிரிவினைப்
பேய் வந்து தாக்குவதோ? - அட
பாரத மகள் நம் எண்பது கோடியும்
பார்த்திங்கு நிற்பதுவோ?

# சுதந்திரப் பொன் விழா

புதுவை சந்திரஹரி

பல்லவி

சுற்றிய ராட்டையில் கட்டிய கோட்டை
சுதந்தரம் ஆனதடா - நாம்
பற்றிய கொள்கையில் தொற்றிய ஆர்வம்
பாரதம் எழுந்ததடா - புதுப்
பாரதம் எழுந்ததடா!

கண்ணீர் ஊற்றியே வளர்த்த செடிதான்
பன்னீர் தூவுதடா - நம்
முன்னோர் கண்ட கனவுகள் இன்று
முழுமை பெற்றடா - நாடு
செழுமை உற்றதடா!

சரணம்

விண்ணைப் புரட்டும் வித்தைகளை நாம்
எண்ணிப் பார்த்தோமா? - இந்த
மண்ணைப் புரட்டும் பசுமைப் புரட்சி
என்றே கண்டோமா?

பாற்கடல் ஒன்று இருந்தது என்று
பாடமும் படித்தோமே - இன்று
ஆழ்கடல் மீன்கள் அசைகிற அழகை
அமர்ந்தே கண்டோமே! (சுற்றிய...)

பிள்ளைப் பேற்றினைத் தள்ளிப்போடும்
வசதிகள் பெருகினவே! - நாளை
பிறக்கும் பிள்ளை ஆணா, பெண்ணா
அறியவும் முடிகிறதே!

நினைத்த நாட்டில் நினைத்த பொழுது
பேசிட முடிகிறதே! - இன்று
பறித்த காய்கள் பழுக்கும் முன்னே
பல்தேசம் செல்கிறதே! (சுற்றிய...)

விண்ணில் உலவும் கோள்களில் கொஞ்சம்
எங்கள் கோள்களடா! - எங்கோ
உலகின் மூலையில் ஒருவன் அணிவது
நாங்கள் நெய்ததடா!

எல்லா நாட்டிலும் எல்லாத் தொழிலிலும்
இந்தியன் முதலிடமே! - அது
கலைகள் என்றாலும் கணினி என்றாலும்
கண்டான் தனியிடமே!

# நிலவு

வரத கோவிந்தராசன்

அலைதவழ் நுரை; வெண் நீல
அணியிழை களைந்த சிற்பக்
கலைதவழ் வைர வட்டில்,
கற்பூரப் பாறை; வீங்கு
மலைதவழ் மேகக் கூட்டம்
மயங்கிடும் பளிங்கு மேடை;
தலைதவழ் களிற்றின் பொன்னார்
தண்ணொளி முகப டாமே!

நீலத்துத் துகிலில் வைத்த
நித்திலக் குவியல்; வானில்
ஞாலப் பெண் இரவில் ஆடும்
நன்மலர்ப் பந்து; தொங்கும்
கோலஞ் செய் தெய்வ ஊ(ஞ்)சல்
கோபியர் திரட்டும் வெண்ணெய்;
கோளத்தை விட்டுக் கோளம்
குடிபுகும் பறக்கும் தட்டு!

அணிவளை குலுங்கும் மாதர்,
அரைத்தகத் தூரி மஞ்சள்;
அணியணி யாகக் கோத்த
ஆய்மணிச் சரவி ளக்கு;
பனிநிற முயலின் கூட்டம்
படுத்துள தீவுத் திட்டு!
கனிமொழி சிந்தும் தேவக்
கற்புடை மாதர் துண்டம்!

வானப்பெண் சூடிக் கொண்ட
வைடூர்ய நெற்றிச் சுட்டி;
ஞானப்பால் நிறைந்த கிண்ணம்,
ஞாயிற்றின் குளிர்ந்த மேனி!
தானத்தில் சிறந்த கன்னன்
தருமத்தின் திரட்சி; வெள்ளி
ஏனத்தில் குவித்து வைத்த
இந்திரர் அமிழ்த மஃதே!

தேனமர் சோலை பூத்த
தெய்விக வானப் பூவே!
மீனமர் கடலில் பாம்பின்
மீதமர் செல்வன் நேமி;
மீனவன் பட்டத் தானை
மீதுவெண் குடையே; நீல
வானமர்ந் தொளி பரப்பும்
வட்டவெண் ணிலவின் காட்சி

வேதா

# பள்ளு இலக்கியமும் பாரதியும்

பாரதிகாவலர் டாக்டர் கே. ராமமூர்த்தி

'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே, ஆனந்த சுதந்தரம் அடைந்து விட்டோமென்று ஆடுவோமே பள்ளு பாடுவோமே' என்ற மகாகவி பாரதியின் பாட்டு வரிகள், பாரத சுதந்தரப் பொன்விழாத் தருணத்தில், சிந்தையில் . ஆயிரம் எண்ணங்களை வரவழைக்கின்றன.

ஆடினாலும் பாடினாலுமே போதும். ஆனால் மகாகவி பாரதி 'பள்ளுப் பாடுவோமே' என்று 'பா'இயற்றி, 'பள்ளு' என்பதற்கு ஏற்றம் தந்திருக்கிற பாங்கும் பான்மையும் ஆனந்தத்துடனும் சுதந்தரத்துடனும் இணைந்திருக்கிற உள்ளீடுகளின் விஸ்தா ரங்களையும், நாம் கண்டு ஆய்ந்தால் பயன் தரும்.

'சுதந்தரப்பள்ளு' என்கிற இப்பாட்டு பள்ளர்களின் களியாட்டமாக அமைந்திருக்கிற அடித்தளத்து அர்த்தப் பொலிவுகள், மிக அழுத்தமானவை; ஆழமானவையும் கூட.

பள்ளர்கள் என்கிற உழவர்களின் களியாட்டத்திலே ஆனந்த சுதந்தரம்; அதன் விளைவாக எழுகிற ஆடலும் பாடலும், அவற்றின் அஸ்திவாரம், 'பள்ளு' என்கிற பண்டைக் காலந்தொட்டு/ வழங்கி வருகிற பாட்டுவகையாகும்.

'பள்ளு' என்பது ஓர் இலக்கிய வகை. சிற்றிலக்கியம் சார்ந்தது எனப் பகர்வார்கள். பள்ளு என்பது, பள்ளர், பள்ளியர், பறையர்கள் வாழ்வில், கூத்து வகையில் பாடி மகிழ்வது. பாமரமக்களின் உள்ள எழுச்சி, பண்மிகுந்த பாடல்களாக வெளிப்பட்டு, ஆடியும் பாடியும் அவர்கள் களிகொள்ளும் போது, பள்ளுப்பாட்டுபிறக்கிறது. அந்தப்பள்ளு இலக்கியம், தொன்மையும் வரலாற்றுச் சீரும் கொண்டது.

உலகமெங்கும் உழவுத்தொழில் உன்னதமாகக் கருதப்பட்டு வந்துள்ளது. உழவின்றி இந்த உலகில்லை. 'ஜார்ஜிக்ஸ்' என்கிற பெருங்காப்பியத்தை எழுதியவர் வர்ஜீல் (கி.மு. 70–19). ரோமப்பேரரசர் அகஸ்டஸின் சக மாணவரான வர்ஜிலின் 'ஜார்ஜிக்ஸ்' முழுக்க முழுக்க உழவுத் தொழில் பற்றியது. உழவே தலை என்பார்கள். கம்பர் எழுதிய 'ஏர்எழுபது' தனிச் சிறப்புடையது. ஏர் இலக்கியம் பற்றிய ஒப்பற்ற நூல் அது.

ஏரும் கலப்பையும் மானுடர் வாழ்வில் இணைந்ததாகும். சீரும் சிறப்பும் பெற நாட்டையும் வீட்டையும் மகிழவைப்பதே, ஏரும் கலப்பையும் கொண்டு காட்சி தரும் உழவும் உழவர்களும் நிலவுகிற நிலம் தான்.

தமிழர்கள், நிலத்தை நான்காகக் கொண்டனர். நானிலம் என்பது வழக்கு. நளன் என்பான் மேனிலத்தும் நானிலத்தும் மிக்கான் என்பதாக நளவெண்பா கூறும். மேலும் தொல்காப்பியனார்,

*"முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என*
*சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"*

என்று நானிலங்களின் பெயர்களை நவில்கிறார். பாலை என்று ஒன்று உண்டு என்பதையும்,

*"முல்லையும் குறிஞ்சியும் முறையிற்றிரிந்து*
*நல்லியல் பழிந்து நடுங்கு துயருருற்றும்*
*பாலை என்பதோர் படிவம் கொள்ளும்*

எனவும் தொல்காப்பியர் காட்டியுள்ளார்.

மலையும், மலை சார்ந்த நிலமும் குறிஞ்சி. காடும்



காடு சூழ்ந்த நிலமும் முல்லை. வயலும், வயல் சேர்ந்த நிலமும் மருதம். கடலும், கடற் பகுதி நிலமும் நெய்தல் என்பது வழக்கு.

வயல் நிறைந்த மருத நிலம் வாழ்வுக்கு இன்றியமையாதது. ஏர், கலப்பை பிடித்து உழுது பயிரிட்டு உணவளிக்கும் ஏராளர் வாழ்கிற நிலம் அது. உழுகிறதால் உழவர் என்றும் ஏர்பிடிப்பதால் ஏராளர் என்றும் கூறுவர். ஏரின் வாழ்நர், ஏரின் வாணர், ஏருழவர் எனவும் காராளர் எனவும் அழைப்பார்கள்.

சீவக சிந்தாமணியில், *'சியம் அன்னான் இளமையும் வனப்பும் ஏரும்'* என்ற வரிகளைக் காணலாம். தொல்காப்பியத்தில், *'ஏரும் எழிலும் என்றா...'* எனவும், திருக்கோவையாரில் *'ஏராளவில்லா வளவினா'* எனவும் சிலப்பதிகாரத்தில் *'ஏரோடு நின்றோர் ஏர்மங்கலம்'* எனவும் ஏர் பற்றிய சிறப்புகளை அறிந்துணரலாம்.

திருவள்ளுவர், 'ஏரின் உழா அர் உழவர்' என்றும், 'ஏரினும் நன்றாம் எருவிடுதல்' என்றும் சொல்கிறார். சங்க இலக்கியங்களில் ஏர் பற்றிய செய்திகள் உள்ளன. பாணர்கள், ஏர் பற்றிப் பாடி, பரிசில் பெற்றதும் உண்டு. ஏருடன் இணைந்த கலப்பை பற்றி சிறுபஞ்ச மூலத்தில், 'நுண்கலப்பை நூல் ஒதுவார்' என்பதாகச் சிறப்பித்துப் பேசப்படுகிறது.

ஏறிச் செல்வதால் ஏர் என்றும், மண்ணையும் உரத்தையும் கலப்பதால் கலப்பை என்றும் மொழிந்தனர் போலும்! ஏரும் கலப்பையும் ஏற்றமும் எடுப்பும் கொண்டு, வாழ்வுடன் பிணைந்திருக்கிறது. இத்தகைய மருத நிலத்தில் வாழும் தலைவனை ஊரன், மகிழ்நர் என்றழைப்பார்கள். 'தண்டுறை ஊரனை' என்று ஐங்குறுநாற்றுப் பாடல்களில் காணலாம்.

வயல்களில், எழில் நிறைந்த பசுமையில், மனம் திறந்து பாடும் பண்மையினர் பள்ளர்களும் பள்ளியரும். ஏர், கலப்பை செலுத்துகையில் பாட்டு, நாற்று நடுகையில் பாட்டு; நீர்பாய்ச்சுகையில் பாட்டு; களை பிடுங்கும் போது பாட்டு; கதிர் அறுவடையின் போது பாட்டு; நெல் குற்றும் போது பாட்டு. பாடுபடும் அந்த உள்ளங்களினின்று புறப்பட்டு வரும் ஜீவிதமே நாட்டுப்புறப் பள்ளுகளாக மிளிர்ந்தன.

ஏற்றப்பாட்டும், நாற்றுப்பாட்டும் பிறவும், இன்பம் தரும் இலக்கியச் செல்வங்களாகும். உழு தொழிலின் ஒண்மையறிந்த உழத்தி, தன் மன்னனை வாழ்த்திப்பாடுகிற உழத்திப்பாட்டும், இன்பம் தருவதாகும். பத்துப் பத்தாக இப்பாட்டு பரிணமிக்கும். இதனை 'ஆடும் பள்ளி' என்பார்களும் உண்டு.

உழவர்கள், உழத்தியர், பள்ளர்கள், பள்ளியரின் களிபேருவகை, பாடல்களாகி ஆடல்களாகி, மலரும்போது பள்ளுப்பாட்டு என்றாகிறது. எளிய சொற்களில், புரிந்து கொள்கிற வகையில், வயற்பரப்பு இயற்கை ஒலிகளுடன் கூடிய ஒலிச்சேர்க்கை கொண்ட இசையுடன் அமைந்து, கிராமிய நாட்டுப்புற உணர்வுகளின் வெளிப்பாடுகளாக வெளிப்பட்டதே பள்ளு இலக்கியமாக அமைந்தன.

இசையாகவும், வசனமாகவும், நாடக பாணியாகவும் கலந்து எழும் பள்ளு, முத்தமிழ்ப் பனுவல் எனப்படும். பெரும்பாலும் உணர்வுகளைத் தட்டி எழுப்புகிற இனம் சார்ந்தவை பள்ளுப் பாடல்கள். அதனாற்றான், இதனை "காப்பியர் கூறும் வனப்பு எட்டனுள் புலன் வகையில் அடங்கும்" என்று தொல்காப்பியச் சூத்திரம் செப்புகிறது. ஏழை, எளியவர்களின் இதய எழுச்சியாக வருவது. வழக்குச் சொற்களில், சேரி வழக்குகள் பெரிதும் விரவி அமைந்து பாடப் பெறும் பாங்கினை உடையவை, பள்ளு என்று அழைக்கப்படுகிறது.

"மருத நிலத்தின் நந்தா விளக்காம் பள்ளு" என்று பண்டைக்காலம் தொட்டே மொழிந்து வந்துள்ளனர். ஏர் மங்கலம், முகவைப் பாட்டு வழியும் பள்ளுப்பாட்டுச் சிறப்பை அறிந்து கொண்டு, உழவினை உவந்து ஏத்தியதையெல்லாம் புரிந்துகொள்ளலாம்.

பள்ளர் பள்ளியர் மணந்தபிறகு ஏற்படுகிற மூத்தாள், இளையாள் பிணக்கு பற்றியும் பாமர இலக்கியமாக, ஏசல், பூசல், குலம், நாடு, நகர், சமயம் எனப் பாடல்கள் அமையும். பள்ளு இலக்கியம் எண்ணற்ற வரலாற்றுச் செய்திகளை அள்ளித்தரும் பாங்கு கொள்ளை இன்பம் பயப்பதாகும்.

பள்ளர்களுடைய பெருமை, மழைக்குறி, ஆற்று வெள்ளம், பள்ளர் – பள்ளியர் பேச்சுகள், ஆகியவை பற்றி பள்ளு இலக்கியத்தில் நிறையச் செய்திகள் பரவிக் கிடக்கும். இவற்றுடன், நெல்வகை, மாட்டுவகை, ஏர்க்கால் வகை, உழுதுபயிரிடும் முழுமையான உழவுத்தொழிலின் பல்வகைச் செய்திகள், உழவரது வாழ்வுமுறை என, பள்ளு இலக்கியம் தன்னுள் அடக்கிய விஷயங்கள் ஏராளமுண்டு.

உழத்திப்பாட்டு என்பது மருத நிலத்து உழத்தியர் பாடுவது. பள்ளத்தில் வாழும் பள்ளர் பாடுகிறதால் பள்ளர் பாட்டு என்பதும் உண்டு. குறத்திப்பாட்டு என்று ஒன்றும் வழக்கில் உள்ளது. அது மலைநிலத்து வாழும் குறவரைப் பாடுவது. குறிசொல்லி, அதிர்ஷ்டம் பற்றி குறத்தி பாடுகிறதும் குறத்திப் பாட்டு என்று சொல்வார்கள். சங்க இலக்கியங்கள் சமய, சமூக இலக்கியமாக மலர்ச்சி பெற இவை யாவும் அடிப்படை எனலாம்.

இவ்வண்ணமாக அமைந்து உருவான இலக்கியங்களே பள்ளுப் பிரபந்தங்கள் ஆயின. காப்புச் செய்யுள், கடவுள் வாழ்த்து தொடங்கி, பள்ளியரின் ஏசல், சமாதானம், வாழ்த்து என, பல அங்கங்களைக் கொண்டதாக அமையும். சிந்து, விருத்தம் விரவி வரப் பாடுவது வழக்கம்.

பண்டைய காலந் தொட்டு, நிலவிவருகிற பள்ளு இலக்கியம் தமிழில் பலவகைகளாகக் கூறப்படும். பள்ளுப் பாட்டுகள் 45 வகை உள்ளன என்கிறார்கள். பறாளை விநாயகர் பள்ளு, திருநீலகண்டன் பள்ளு, திருவாரூர்ப் பள்ளு, திருமலைப் பள்ளு, சிவசைலப் பள்ளு, சீர்காழிப் பள்ளு, வடகரைப்பள்ளு, கதிரைமலைப்பள்ளு, கண்ணுடை

## உனக்கு நீயே நீதிபதி!

நீ உயர்வதும்
உன்னாலே - உன்
நிலைமை தாழ்வதும்
உன்னாலே!

முயன்றால் புகழ்வரும்
தன்னாலே - உன்
உழைப்பே பலன் தரும்
பின்னாலே!

மனமும் வெளிப்படும்
கண்ணிலே - எந்தப்
பாட்டும் எடுபடும்
பண்ணாலே!

படித்தால் மட்டும்
போதாது - பொன்
பொருள் அதனால் மட்டும்
வாராது!

உலகத்தைச் சரியாப்
புரிஞ்சுக்கணும் - அதில்
உன் பங்கை நல்லாத்
தெரிஞ்சுக்கணும்!





பட்டுக்கோட்டை ஏ.எல். இராசேந்திரன்.

யம்மைப் பள்ளு, ஞானப் பள்ளு எனப் பல்வேறு பள்ளுகள் உள்ளன.

இத்தகைய பள்ளுகளில் சீர்மிக்கது எனச் சான்றோர் போற்றுவது முக்கூடற்பள்ளு ஆகும். நெல்லைச் சீமையில் பொருநை, சித்ரா, கோதண்டராம நதிகள் ஆகிய மூன்றும் கூடுமிடத்தில் உள்ள அழகர் மீது பாடியதே முக் கூடற்பள்ளு. நகைச்சுவையாகவும் நயம் கூடியதாகவும் அமைந்த பள்ளு இது. 17ஆம் நூற்றாண்டில் பெரும் வளர்ச்சி பெற்ற பள்ளு இலக்கியம் பாரதியைக் கவர்ந்திருந்தது.

பாரதி அகக்கண்களில் தரிசனம் கண்ட பாட்டு, 'ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே' என்ற உயிர்ப்பாள பாட்டாகும். நாடு சுதந்தரம் பெறுவதற்கு நாற்பது ஆண்டுகளுக்கு முன்னரே, 'ஆனந்தசுதந்தரம் அடைந்து விட்டோம்' என்று தீர்க்கதரிசனமாகப் பாடிய பாட்டு இது.

பாரதியின் இந்தப் பாடலை, தீர்க்கதரிசனத்தின் சிறப்பிற்காகப் பாராட்டுகிறோம். அது சரிதான். ஆனால், அதனினும், ஆழமான சிந்தனை – நம்முள் படர்கிறது. சுதந்தரப் பாட்டைப் பாட, பாரதி, பள்ளு இலக்கியத்தைத் தேர்ந்தெடுத்து, பள்ளுப்பாடலாக – பள்ளர்களின் களியாட்டமாகப் பாடிய பாங்கின் சிறப்பினை நாம் என்னென்று பாராட்டுவது!

சமுதாய அமைப்பில் கீழ்மட்டத்தில் இருந்துகொண்டு, மனிதகுலத்திற்கு உணவளித்து வாழவைக்கும் – அந்த உழவர்கள் – ஏராளர்கள் – பள்ளர்களின் ஆனந்தமே பாரதிக்கு, மிக முக்கியமானதாக நெஞ்சில் நின்றது. பாட்டெழுத வந்த அந்த மகாகவியின் உள்ளம், உழவர்களை – உழவுலகின் களிப்பையே ஆனந்த சுதந்தரமாகக் கண்டான். "ஏழையென்றும் அடிமை என்றும் எவனுமில்லை ஜாதியில்; இழிவு கொண்ட மனிதரென்பது இந்தியாவில் இல்லையே" என்று இதயதாகமுடன் விடுதலைப் பாட்டுப்பாடிய பாரதி, ஆனந்த சுதந்தரத்தைப் பாட, பள்ளு இலக்கியத்தின் பாங்கையே தேர்ந்தெடுத்தது முற்றிலும் சரியே. சாலப் பொருந்தும் சீலமான வகை, பள்ளுதான் என்பதை பாரதி உள்ளம் உணர்ந்தே, சுதந்தரப் பள்ளு என்று முழங்கினான்.

பாரத விடுதலையை விரும்பிய பாரதி, விடுதலை விடுதலை விடுதலை என்று பாட்டு முரசு கொட்டினானே, யாருக்காக? பாரதி விடுதலை விடுதலை என்று பாடி,

*பறையருக்கும் இங்கு தீயர்*
*புலையருக்கும் விடுதலை*
*பரவரோடு குறவருக்கும்*
*மறவருக்கும் விடுதலை*

என்று தானே கவிமுரசம் கொட்டினான்? தீமையற்ற தொழில் புரிந்து யாவரும் தேர்ந்த கல்வி ஞானம் எய்தி வாழ்வம் இந்த நாட்டிலே என்பதே பள்ளுப்பாடிய பாரதியின் இதய வேட்கையாக இருந்தது. மனிதர் யாரும் சரி நிகர்சமானமாக வாழ்வம் என்றானே, அந்தச் சிந்தனையை நாம் முழுமையாக உலகுக்குக் காட்ட வேண்டாமா?

பள்ளு இலக்கியத்தை பாரத சுதந்தரத்திற்குப் பயன்படுத்திய பாரதியை விட, தலித் முன்னேற்றம் என்கிற இன்றையச் சிந்தனையை அன்றே வழிக் கொணர்ந்தவர் யாருளர், சொல்லுங்கள்! 'உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்' என்ற மகாகவி அவன். 'நாமிருக்கும் நாடு நமது' என்பதை உணர்த்தியவனே பாரதி தானே! 'ஈனப்பறையர்களேனும் அவர் எம்முடன் வாழ்ந்திங்கு இருப்பவர் அன்றோ?' என்று சமூக நீதிபேசிய பாரதி, பள்ளு இலக்கியத்தில் இப்பாடலைப் பாடியது மிகப் பொருத்தமாக பாரதி உணர்வைக் காட்டுகிறது.

*"நெல்லு வகையை எண்ணிலாலும் எண்ணலாம்;*
*பள்ளுவகையை எண்ணமுடியாது"*

என்பது மூதுரை.

அதேபோன்று, பள்ளு இலக்கியமும் பாரதியும் என எண்ணியெண்ணிச் சிந்தித்தாலும் எண்ணம் பெருகும்.

○○

# அன்னைக்கு அஞ்சலி

இரா. சம்பத்குமார்



விழித்தவுடன் செய்தியொன்று உலுக்கியது என்னை;
பழித்தேன்நான் விதியை-அது கவர்ந்ததுநம் அன்னை.
"இரக்கத்துக் குரியவர்கள் ஏழைப் பிணியாளர்;
சுரக்கட்டும் கனிவு-நாம் இறைவனின் பணியாளர்.
அன்புக்குக் கிடையாதே அடைக்கும்தாழ்" என்றாரே-
துன்பத்தி லேநம்மைத் தவிக்கவிட்டுச் சென்றாரே.
பிறப்பாலே அன்னையிவர் இம்மண்ணில் அன்னியர்;
விருப்பாலே வந்ததனால் நாமன்றோ புண்ணியர்.
நீலக்கரை வெள்ளாடை அன்னையிவர் சீருடை;
காலத்தையும் கடந்துநிற்கும் அவர்புகழே பாரிடை.
வங்கத்தை ஆள்பவர்கள் கொள்கையிலே நாத்திகர்-
தங்கத்தாய் அவர்தம்மின் தொழுகைக்கும் பாத்திரர்.
இரக்கத்தின் திருவுருவாய் உலவிவந்த தேவதை;
உருகிடுவார் காண்கையிலே பிறர்துயரில் நோவதை.
மனமுவந்தார் முகம்மலர்ந்தார் ஏழைகளின் சிரிப்பில்-
மனமுந்தான் மயங்கலையே மரகதப்பாய் விரிப்பில்.
வாழ்ந்திருந்த உலகைவிட்டுப் போனபோதும் மறைந்து-
வாழ்ந்திடுவார் உலகத்தோர் உள்ளத்திலே நிறைந்து.
தொழுநோயால் அழுதவர்க்கு அன்புசெய்தார் அன்னை;
தொழுவோம்நாம் அவர்நாமம் - மற்றதெல்லாம் பின்னை.

## என்னைப் பாடாய்ப் படுத்தும் குறும்பன்

கவிஞர் வேதம்

எனக்குள் ஒருகுறும்பன் என்றோ புகுந்துவிட்டான்!
எனக்கும் விளங்காத எழிற்சொல்லாய்க் குலுக்குகிறான்!

இனிய அவ்வை திகைக்க, ஓர் இளையவன் அசைத்ததுபோல்
கனவுமரத் திலிருந்து கரும்பழமாய் உதிர்க்கின்றான்!

வானில் உலவுகின்ற வனப்பெல்லாம் கண்டுவிட்டால்
தேனைக் குடித்ததுபோல் தெம்மாங்கு பாடுகிறான்!

நாணி ஒதுங்குகின்ற நயமில்லாச் சேதியையும்
வாணி நீ! தேகநீ! என்றே வணங்கவைத்து

கோணியில் வாருதல்போல் கொத்தாய் எடுத்துவந்து
பானகம் அதில்சேர்ந்து, 'பாடு'!என்று படுத்துகிறான்!

ரசமில்லா வரிகளில் ரகசியம் சில பதுக்கி
ரசிகர்களைச் சிரிக்கவைத்தான்! 'ரசம்'கண்டேன் அதன்பிறகே!!

நவரசக் குறும்பன் அவன்! நாலுவித நடிகன்அவன்!
கவலையையும் கரும்புஆக்கிக் கவிசொல்எனப் படுத்துகிறான்!!

# சுதந்தரப் பொன்விழா நாளில் சிலரது சுடர்விடும் நினைவுகள்

## புறம்போக்கை மறுக்கும் புரட்சி வீரர்

முழந்தாளிட்டுக் கொண்டு உயிரோடிருப்பதை விட நின்று கொண்டு இறப்பதே மேல் —

என்று எண்பத்து நான்கு வயதிலும் நீறணிந்த நெற்றிச் சுருக்கங்கள் புடைக்கப் பொலபொலவென்று விடுதலைப் போராட்டக்கால நிகழ்ச்சிகளை, கனத்த குரலில் உதிர்க்கிறார் வேலூரைச் சேர்ந்த தியாகி வி.எம்.முனிசாமி.

முதல் உலகப் போரில் அயல்நாடுகளுக்கெல்லாம் சென்று போரிட்ட வீரர் முருகேசனின் மகன் என்பதாலோ என்னவோ இன்றும்கூட கம்பீரம் குறையாமல் காணப்படுகிறார், இளம் வயதிலேயே சிலம்பக் கலையில் தேர்ந்து 'வாத்தியார்' என்று அழைக்கப்பட்ட இவர்.

பதினாறு வயதிலிருந்தே —

ஜெயப்பிரகாஷ் நாராயணன், டாக்டர் ராம் மனோகர் லோகியா, அருணா ஆசப் அலி, ஆசாத், ஆச்சார்யா நரேந்திர தேவ், டில்லி சத்யதேவி, முத்துராமலிங்கத்தேவர், ப.ஜீவானந்தம், பிராமமூர்த்தி, காமராஜ் போன்றோரோடு தொடர்பு கொண்டு தீவிர விடுதலை வீரராய்த் தன்னைச் செதுக்கிக் கொண்டவர், பள்ளி வாசலையே மிதிக்காது தானாகவே முயன்று படித்துப் பயனபட்ட இந்த அற்புதத் தியாகி.


வி.எம்.முனுசாமி

31.8.1927 அன்று வேலூர் வந்த மகாத்மா காந்தியை இவர் பார்க்கவில்லை. அதிதீவிரவாதி என்பதால் இவரை அவரிடம் யாரும் அழைத்துப் போகவில்லையாம்.

17.2.1934 அன்று இரண்டாம் முறை வேலூர் வந்த மகாத்மாவைத் தரிசித்த இவர், தேசப்பிதாவின் தேஜோமயமான கருணை முக விலாச ஈர்ப்பில் தன்னையே இழந்தார். தன் அதிதீவிரத்தைப் புதைத்தார். அகிம்சாவாதியாய்த் தன்னை மாற்றிக் கொண்டார்.

பலாத்காரப் புரட்சியாளராய் இவர் இருந்தபோது நடத்திய பல செயல்கள் அவ்வப்போது அவரில் நெருடுமாம்.

அடிமை இந்தியாவில் அப்போதிருந்த காவல்துறை அதிகாரிகள் விடுதலை விரும்பிகளைக் கண்மண் தெரியாமல் இம்சித்தனர். எழுத்தில் வடிக்க இயலாத கொடுமைச் செயல்கள் அவை. அவற்றைக் கண்டிக்கும் கதையம்சம் கொண்ட ஒரு நாடகத்தை சைதாப்பேட்டையில் நடத்தினார். அது காவல் துறைக்கு எட்ட, நள்ளிரவில் சுமார் இருநூறு போலீஸார் நாடகமேடையைச் சூழ்ந்தனர். பதினாறு வயதே நிரம்பிய வி.எம்.முனிசாமியை லத்தி சார்ஜ் கொடுத்துக் கைது செய்தனர். ஏழாண்டுக் கடுங்காவல் தண்டனை பெற்ற இவர், அப்பீல் செய்த தன் பேரில் மூன்றாண்டாய்க் குறைந்தது.

வேலூர் சப் ஜெயிலில் —

அவரைப் படாத பாடு படுத்தியது காவல் துறை.

நஞ்சுறை பூண்ட ஆங்கிலேயரின் வெஞ்சிறைக் கைதியாய் வேதனையுற்ற இவர், அலிபுரத்தில் ஆண்டுக் கணக்கில் அனுபவித்தவை கொஞ்சமல்ல. கல்லுடைத்தார், மண் சுமந்தார், மாவரைத்தார்.

வேலூர்க் கோட்டைக்கெதிரே "வந்தே மாதரம் என்போம்!" என்று பாரதமணிக் கொடியைப் பிடித்து முனிசாமி சங்கநாதமிட்டபோது, குதிரையின் மீது ஆரோகணித்து வந்த சதிகார வெள்ளைத்துரை ஒருவன் தன் கையிலிருந்த சாட்டையால் இவருடைய முதுகைத் தோலுரித்தான்.

அந்த முதுகுத் தழும்புகள் இன்றும் வீர விருதுகளாய் இவரைச் சிலிர்க்கச் செய்கின்றன.

நிலவன்

"ஒவ்வொரு காங்கிரஸ்காரரும் தனக்கோ தன் பிள்ளைகளுக்கோ ஓர். அரிசனப் பெண்ணைத் தேர்வு செய்து திருமணம் செய்து கொண்டால் இந்தியாவில் முதலில் மகிழ்ச்சி அடையக்கூடியவன் நானாக இருப்பேன்" என்று 'அரிசன்' இதழில் தொடர்ந்து மகாத்மா காந்தி எழுதியதால் அரிசனப் பெண்ணான அற்புதத்தை மணந்தேன்" என்கிறார் காந்தியத்தையே மாந்திய வி.எம்.முனிசாமி.

இவருடைய திருமணம் கதர்த் திருமணம். அதாவது கதராடையை மணமக்கள் உடுத்திக் கொள்வது, அப்போது கதர்த் திருமணம்கூட தண்டனைக்குரியதாம் தெரிந்தால் உடனே கைதாம்.

கதர்த் திருமணத்தில் காமராஜ் பங்கேற்றதை மிகப் பெருமையாய்க் குறிப்பிடுகிறார்.

"வாழ்நாள் முழுதும் சுழன்று சுழன்று விடுதலைக்காக உழைத்த என்னை என் மூன்று மருமகள்களில் ஒருத்தியான மல்லிகா இன்றும் கேட்டுக் கொண்டே இருக்கிறாள்..." என்று தன்னை ஆசுவாசப்படுத்திக் கொள்ளும் தியாகி வி.எம்.முனிசாமி தொடர்கிறார்:

"மாமா... உங்களுக்கு மூன்று பிள்ளைகள். மூன்று பெண்கள், பன்னிரண்டு பேரப் பிள்ளைகள். குடும்பம் பெருகிட்டுது. வாடகை கூடுதலா கேக்கிறதால அப்பப்போ வீடு மாத்தறதும் சிரமமா இருக்குது. அரசு கொடுத்த பத்து ஏக்கர் இருந்திருந்தா இப்போ உதவி இருக்கும். அதையும் வேணாம்னுட்டீங்க. இப்பவாவது அரசாங்கத்திடம் டவுன் லிமிட்லே அல்லது பேரூராட்சி லிமிட்லே புறம்போக்கு அஞ்சு சென்ட்டாவது கேட்டு வாங்கிக் கொடுங்க. நாங்க ஒரு சின்ன வீட்டைக் கட்டி கடைசி காலத்திலே சொந்த வீட்டிலே உங்களை வாழவைக்கிறோம். நாங்களும் வாழறோம். இந்தப் புண்ணிய காரியத்தைச் செய்யுங்க மாமா!"

அவருடைய ஒரக்கண்களை அவருடைய இடக் கை விரல்கள் தட்டிக் கொள்கின்றன.

அப்போதுதான் தெரிகிறது அவருடைய இடக்கை விரல்கள் தொய்ந்த நிலையில் இருப்பது.

அலிபுரத்துச் சித்திரவதையின் அழியாத அடையாளமாம் அது.

''கடமையைச் செய், பலனை எதிர்பாராதே என்ற கொள்கைப் பிடிப்புள்ளவன் உன் மாமனார். நாட்டு விடுதலைக்காக அலிபுரத்திலும், தொரப்பாடியிலும், கோட்டையிலும் அனுபவிக்காததையெல்லாம் அனுபவிச்சேன். ரத்தம் சிந்தினேன். நாட்டுக்கு என் கடமையைச் செய்தேன். அதற்கெல்லாம் விலை கோரச் சொல்லாதேம்மா. தியாகி பென்ஷனையே மறுத்து வந்தவன் நான். பலருடைய கட்டாயத்தின் பேரில் பேரறிஞர் அண்ணா காலத்திலேதான் ஒத்துக்கினேன். என்னைப் போல தியாகிகள் பலர் இன்னும் வாடகை வீடுகளில் குடியிருக்காங்க. கலைஞர் அரசு அவர்களுக்கு இடம் ஏற்பாடு செய்யட்டும். அப்போ உன் மாமனாராகிய நான் புறம்போக்கு இடத்தைப் பற்றி யோசிக்கிறேன்" என்று மருமகளிடம் கூறியதை நம்மிடம் தெரிவிக்கும்போதே நிமிர்ந்து, தன் தோள்கள் மீது புரளும் சால்வையைச் சரி செய்து கொண்டு தான் பெற்ற தாமிரப் பட்டயங்கள் மீது கண்களைப் பதிக்கிறார், தமிழ்நாடு சலவையாளர் மத்திய சங்கப் பொதுச் செயலாளராய்ச் சுறுசுறுப்பாய்ப் பணியாற்றும் தியாகி வி.எம்.முனிசாமி!

●

## கவியாகி வந்த தியாகி

வீரசுதந்தரம் வேண்டிப் பாடுபட்ட வீரர் எம்.கே. இராமசாமி தம் நினைவுகளைக் கூறுகிறார்:

"நாம் புகழுக்காகப் போர் புரியவில்லை. பொருளுக்காகப் போர் புரியவில்லை. சுதந்தரத்திற்காகப் போர் புரிகிறோம்... என்ற மாஜினியின் பொன்மொழியை இன்றும் கூட பூஜிக்கிறேன் நான்...

"வேலூர்ச் சிறையில், அலிபுரம் சிறையில் கல்லுடைத்த தியாகிகளில் நானும் ஒருவன். போளூர் வட்டத்திலுள்ள மண்டக்கொளத்தூரில் பிறந்தேன்...

"பத்தொன்பதாவது வயதிலேயே விடுதலை இயக்கத்தில் தீவிரமாய்ப் பங்கேற்றேன். ஆங்கில அரசை ஸ்தம்பிக்கச் செய்யத் துணிந்தேன். நானும் என்னோடு நூறு தொண்டர்களும் காங்கிரஸ் கொடியைப் பிடித்து வேலூர் லாங்கு பஜாரில் ஊர்வலம் போனோம். 'வெள்ளையனே வெளியேறு' என்று கோஷமிட்டோம்.



எம்.கே.இராமசாமி

மாயமாய் வந்த போலீஸ் லாரி, என்னை மட்டும் மடக்கிப் பிடித்து போலீஸ் ஸ்டேஷனுக்கு வாரிப்போனது. வி.கே.குப்புசாமி, மா.பா.சாரதி, முகைதீன் ஆகியோரைக் காட்டிக் கொடுக்குமாறு கொடுமைப்படுத்தியது. போலீஸ் லைனைக் கொளுத்தினார்கள் மூவர் என்பதும், நானும் அவர்களுடைய குழுவைச்சேர்ந்தவன் என்பதும் என்னை இம்சிக்கக் கூடுதல் காரணங்கள். என்னைத் தலைகீழாய்த் தொங்கப் போட்டனர். லாடம் கட்டினர். மலவாய்த் துன்பம் தந்தனர். உடம்பெங்கும் ஊசிகளால் குத்தினர். எதற்கும் அசையாத என்னை அடி அடி என்று அடித்துத் தங்கள் மிருக வெறியைக் காட்டினர். 'உன் அரசியல் குருவான ஜமதக்னி மீது ஆணையாகச் சொல்; எங்கே அந்த மூவர்?' என்று மேலும் இம்சித்தனர். மௌனித்தேன் நான்.

சப் ஜெயிலில் அடைத்தனர்...

"சென்னையிலிருந்து 1942 இல் நடைபெற்ற 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்திற்காக வெடி மருந்துகளையும், குண்டுகளையும் பேரறிஞர் வ.ரா. வேலூருக்கு அனுப்பிக் கொண்டிருந் தார். அவற்றைப் பயன்படுத்தித்தான் ஆர்க்காடு ரோடிலிருந்த பெட்ரோல் பங்கைக் கொளுத்தினோம்...

"பெங்களூரிலிருந்து சென்னைக்குச் சென்ற ஒரு லாரியில் வெள்ளையர்கள் பயணம் செய்கின்றனர் என்ற செய்தி எங்களுக்குத் தெரிந்தது. திப்பு சுல்தான் மசூதிக்கெதிரே தலைமறைவாயிருந்து அந்த லாரியை அக்னி பகவானுக்கு அர்ப்பணித்தோம்...

"கணியம்பாடி கணவாயில் ரயிலைக் கவிழ்க்கத் திட்டமிட்டோம். என்னோடு அரியூர் வேணு, படக்கடை லோகநாதன் வந்தனர். கடைசி நிமிடத்தில் கைதானோம்...

"கதர்க்குல்லாயுடன், கதர்க் கொடியுடன் நாங்கள் நடத்திய ஊர்வலங்கள் இன்றும்கூட எங்களுள் நிற்கின்றன. அப்போது நான் குளோத்திங் பாக்டரி ஒன்றில் தையற்காரனாய்ப் பணியாற்றிக் கொண்டிருந்தேன். பாக்டரி முதலாளியை போலீஸார் மிரட்டி என் வேலையைப் பறித்தனர். கவலைப்படவில்லை நான். கொலை பட்டினி கூட என் நாட்டு விடுதலை முன் எனக்குச் சாதாரணமாயிருந்தது. மது விலக்கு, தீண்டாமைப் பிரசாரம் செய்தேன். மகாத்மா காந்தியை இந்தி பிரச்சார சபாவில் பார்த்தேன். பரவசமானேன். வணங்கினேன். வாழ்த்தினார்...

"அலிபுரம் சிறையில் 1942 முதல் 1943 வரை துன்பப்பட்டேன். அங்கு ஜெயிலராக இருந்த 'ஹௌ' என்ற வெள்ளைத்துரை ஈவிரக்கமற்று என்னையும், கமலபதி பண்டாரம், பொள்ளாச்சி பழனிச்சாமி கவுண்டர், நாகை முருகேசன், சென்னை துணைமேயர் கே.ராமதாஸ், சா.கணேசன், வேலூர் ஸ்ரீராமன் ஆகியோரையும் கன்னாபின்னாவென்று அடித்து நொறுக்கினான்; மலம்கூட வெளியேறுமளவுக்கு...

"அலிபுரம் கொடுமை என்னைக் கவிஞனாக்கியது. அப்போது நான் சிறையில் பாடிய கவிதைகள்

உத்தமரே உலகினிலே
எத்தனையோ கடுஞ்சிறைகள்
ஆனாலும் அலிபுரம்
சிறையினைப் போல்
காணேன்!
சொல்லவும் மனம்
கோணேன்!
நிற்க நிழலில்லை
நீதியிலாக் கடுஞ்சிறையே
என்ன பரிதாபம்!
எங்கள்மீது என்ன கோபம்
வெள்ளையர்களுக்கு!...

இன்னொரு கவிதை:

திங்கட் கிழமையிலே
சூப்பிரண்டெண்ட் பார்வையிலே
வேகமாக வருவார்!
எங்கள் குறைகளைக்கூறினால்
'ஷட் அப்' என்பார்!

"1947 ஆகஸ்டு 15 அன்று – 'பெல்' என்ற வெள்ளைக் கலெக்டர் எதிரில் கோடையிடி குப்புசாமி, ஜனாப் உபயதுல்லா, வி.கே.குப்புசாமி ஆகியோருடன் நானும் சுதந்தரத் திருநாளைக் கொண்டாடினோம்...

"சொந்தத்தில் வீடில்லாத எனக்குச் சோறிடும் பென்ஷன்கள் கூட இல்லாமற் போயிருந்தால் சொல்லொணாத் துயரம்தான் மிஞ்சியிருக்கும். நாடு என்னைக் கவனிக்காவிட்டால் போகிறது. நான் நாட்டைக் கவனிப்பது கடமையாயிற்றே!...

"மக்கள் தொகையைக் கட்டுப்படுத்தும் அரசு, சாதி பேதங்களை ஒழிப்பதில் தீவிரம் காட்ட வேண்டும். பொன்விழா சுதந்தர ஆண்டில் சுதந்தரப் போராட்ட வீரர்களின் முழு வரலாற்றையும் மாவட்ட ரீதியாக பாரபட்சமின்றி அரசு வெளியிட வேண்டும்!"

## வீர சுதந்தரம் வேண்டி நின்றார்

"என்னுடைய தாய்நாடு எனக்கு எவ்வளவோ அருமையானது. ஆனால் தாய்நாட்டின் சுதந்தரம் எனக்குத் தாய்நாட்டைவிட அருமையானது–"

எனும் வாக்குக்கு எத்தகைய தாக்கம் இருக்கும் என்பதற்கு எடுத்துக்காட்டாய் இருந்தார் டி.எஸ்.ராஜு சர்மா.

பகவான் ரமண ரிஷிகளின் ஆசி பெற்ற, திருவண்ணாமலையைச் சேர்ந்த இவர், 1939ஆம் ஆண்டு வாக்கில் கோவை இந்தி பயிற்சிப் பள்ளியில் சேர்ந்தார்.


டி.எஸ்.ராஜுசர்மா

அப்போதுதான் முதன் முதலில் நாட்டுப் பற்றில் நனைந்தார்.

பயிற்சி முடிந்து ஊர் திரும்பினார்.

1942.

இந்திய நாடே விடுதலைப் போர்க்களமாக மாறி அன்னியரின் அளவுகடந்த அல்லல்களில் சிக்கி அலை பாய்ந்தது.

அப்போது –

சொரூபராணி இந்தி பிரசார சபாவில் சேர்ந்து இந்தியைப் பரப்பினார்.

விடுதலைப் போராட்டத்தில் முழுமூச்சாய் ஈடுபட்டார்.

சென்னைக் கடற்கரைக் கூட்டத்தில் தொண்டர் படைத் தலைவராய்ப் பணியாற்றிய சர்மா, போலீஸாருக்கு சிம்மசொப்பனமானார்.

இயக்க நடவடிக்கைகளில் தீவிரம் காட்டிய இவர், அலிபுரம் சிறையில் அடைக்கப்பட்டார்.

ஏழு மாதங்கள்.

ஒவ்வொரு நாளும் செத்துப் பிழைக்கும் ஜெயில் கொடுமையை அனுபவித்தார்.

இவருடைய கண்ணெதிரில் ஷெல்களில் இரவு படுத்துறங்கப் போனவர்களில் சிலர் மறுநாள் காலை காணாமல் போயினர்.

இது தொடர்ந்தது.

கேட்டதற்கு, விடுதலையாகி விட்டனர் என்றனர் சிறை அதிகாரிகள்.

உண்மை மெல்ல மெல்லத்தான் வெளியாகியது.

அடித்து நொறுக்கியே பத்து, இருபது, முப்பது என்று பிணங்களாக்கி, ஒரே புதைகுழியில் இரவோடு இரவாக விடுதலைக் கைதிகளைப் புதைத்தனர்; சிறைத் தடுப்பான மின்முள்வேலியில் தப்பிப் போகும்போது அதில் சிக்கிக் கொண்டனர் என்று 'பொய்'க் கரடி விட்டனர்.

தட்டிக் கேட்டார் சர்மா.

தடியடி, கசையடி பெற்றார்.

குமுறினார்; கொந்தளித்தார்; வெடித்தார்; வெந்தார்.

அலிபுரத்திலிருந்து –

வீடுவந்த சர்மா, 1943ஆம் ஆண்டில் தமிழகமெங்குமிருந்து 106 தொண்டர்களைத் திரட்டி, சென்னைக் கடற்கரையில் 'சென்னை மாநில காங்கிரஸ் அரசியல் மாநாடு' ஒன்றை ஆங்கிலேயர் அசந்து போகிற அளவுக்கு நடத்திக் காட்டினார்.

அவ்வப்போது சிறையில் அடைக்கப்பட்டார்.

மகாத்மா காந்தியை நேரில் சந்தித்து உரையாடி, அவரோடு சபர்மதி ஆசிரமத்தில் வாரக் கணக்கில் தங்கிச் சேவை புரிந்தார்.

நாடு முழுவதும் பயணம் செய்து, இந்தி மொழிக்கு உரமூட்டிய இவர், பல ஆண்டுகள் இந்திப் பண்டிதராய் விளங்கினார்.

குடியரசுத் தலைவர் இராஜேந்திர பிரசாத்தின் பாராட்டையும், பதக்கத்தையும் பெற்ற இவர், இப்போதும் இராட்டையும் கையுமாகவே காட்சி தருகிறார்.

சைக்கிளிலேயே சென்று –

அடிமைப் புத்தகத்தின் இருண்ட பக்கங்களைப் புரட்டிக் காட்டுகிறார்; பொது மக்களுக்கு, சுதந்தரத்தின் வெளிச்சத்தையும் விளக்குகிறார்.

"விடுதலைக்காக உழைத்த தியாகிகள் வீடுதோறும் சென்று இன்றைய இளைஞர்களுக்கு சுதந்தரம் எப்படிக் கிடைத்தது என்பதை விவரமாய் வெளிப்படுத்த வேண்டும். பாடுபட்டுக் கிடைத்த சுதந்தரத்தைப் பாதுகாக்கத் தவறக்கூடாதென்று பறைசாற்ற வேண்டும். அருமை தெரிந்தால் தான் அதன் பெருமை பேணப்படும்.." நறுக் நறுக்கென்று நவில்கிறார் சதா சர்வ பொழுதும் நேரு பாணியில், கதரையே உடுத்தும் தியாகி டி.எஸ்.ராஜு சர்மா!

## தீண்ட மறுத்தது தீண்டாமை

மேலோர்கள் வெஞ்சிறையில் வீழ்ந்து கிடப்பதுவும்

நூலோர்கள் செக்கடியில் நோவதுவும் காண்கிலையோ?–

என்ற தேசியக் கவியின் சுதந்தர வீச்சில் தன்னை அடிமை இந்தியாவிற்கு அர்ப்பணித்தார் டி.ஏ.மணி.

1919ஆம் ஆண்டில் கேரளத்திலுள்ள பாலக்காடு வட்டத்தில் கொடுவாயூரில் விவசாயக் குடும்பத்தில் பிறந்தார்.

நான்காம் வகுப்புவரை படித்தார்.

அதன் பின்னர் –

விவசாயத்தில் சரிவு ஏற்படவே மளிகைக்கடை வைத்தார்.

மாநிலத்தில் அங்கங்கே நடந்த சுதந்தரப் போராட்டக் கூட்டங்களுக்கு அவருடைய தந்தை அப்புத்தரகனின் அனுமதியின் பேரில் போனார்.

அடிமை இந்தியா என்றால் எப்படியிருக்கும் என்பது அப்போது அவருக்கு விளங்கிற்று.


டி.ஏ.மணி

விடுதலை வேண்டி வீராவேசம் புரிவோரின் கனல் தெறிப்புகள், கணங்கள்தோறும் இருபது வயது இளைஞரான மணியின் மனத்தில் ஒரு புத்துணர்ச்சியைப் பிறப்பித்தன.

1942இல் நடந்த தீவிர இயக்கத்தில் தன்னை இணைத்துக் கொண்டார்.

கோழிக்கோட்டில் கைதானார்.

கூடுதல் முதல் வகுப்பு நீதிபதி பரசுராம ஐயரின் முன் நிறுத்தப்பட்டார்.

நீதிபதி, மணியின் பக்கத்து ஊர்க்காரர்.

பாலகன் மணியையே பார்த்த அவர், இரக்கத்தை அடகு வைத்துவிட்டு இரண்டாண்டுகள் சிறைத்தண்டனை அளித்து அலிபுரத்துக்கு அனுப்பினார்.

அலிபுரம் சிறைச்சாலை என்றாலே

அக்காலத்தில் அனைவர் மத்தியிலும் ஓர் அலறல்.

அலிபுரத்தில் –

கொடுமுடி ராஜகோபால், நெல்லை ஜெபமணி, சா.கணேசன், என்.ராமரத்னம் போன்ற எழுத்துச் சிற்பிகளும், வீரமிகு பேச்சாளர்களும் இருந்தனர்.

அவர்களோடு நெருங்கிப் பழகியதால் 'என்று தணியும் இந்த சுதந்தரத் தாகம்?' என்ற ஏக்கம் மணியின் ரத்தத்தில் வேரூன்றியது.

சிறைவாசம் முடிந்து வெளியே வந்ததும், மீண்டும் விடுதலைப் போர்க் கொடியைத் தூக்கினார் அவர்.

தோள்பட்டை நொறுங்கி, உடம்பு முழுவதும் தடியடி, கசையடித் தழும்புகளைக் கண்ணுற்ற அவரது மனைவி விசாலாட்சி, கண்களைக் குளமாக்கிக் கவலையுறவில்லை.

தியாகிக்கு இதெல்லாம் சிறு துளி... என்று தானும் அவரோடு போராட விரும்புவதாய்க் கூறினார்.

கொடுவாயூரிலுள்ள விஸ்வநாதர் ஆலயம் பிரசித்தி பெற்றது.

நூற்றுக்கும் மேற்பட்ட அரிசன மக்களைக் குளிப்பாட்டி அந்த ஆலயத்துள் பிரவேசம் செய்வித்த தற்காக, ஊரார் அவருடைய மளிகைக் கடையைச் சூறையாடினர்.

தீண்டாமையை ஒழிக்கப் போன அவரைத் தீண்ட மறுத்தது அவர் பிறந்த பூமி.

ஊரை விட்டே துரத்தியது.

1948இல் இது நடந்தது.

தஞ்சை, திருச்சி, திருவையாறு, திருவண்ணாமலை... என்று குடும்பத்தோடு, மளிகைக் கடை, டீக்கடை, சிற்றுண்டிக் கடை வைத்து நட்டமாகிக் கடைசியில் வேலூர்க் கோட்டையில் டீக்கடை வைத்தார்.

1951இல் கேரள அரசு வயநாடு மாவட்டத்தில் பொல்புள்ளி எனும் ஊரில் ஒதுக்கிய பத்து ஏக்கர் நிலத்தை நிலமற்ற விவசாயிகளுக்குத் தரச் சொல்லி விட்டார் மணி.

இரண்டு ஆண்கள். இரண்டு பெண்கள். நான்கு பேரன் பேத்திகள்.

பென்ஷன்களில் –

நூற்றிருபத்தைந்து ரூபாய் வாடகையில் ஒரு புறாக்கூண்டில் நாள்களை நகர்த்தும் இவர், வேலூர் மாவட்ட தியாகிகள் சங்கச் செயலாளர்.

"சுதந்தரத்தை எவ்வாறு வாங்கினோமென்று தியாகிகளாகிய நாங்களே இக்கால இளைஞர்களுக்கு எடுத்துச் சொல்லும் வாய்ப்பை அரசாங்கம் ஏற்படுத்தித் தர வேண்டும். அப்போதுதான் எங்கள் தற்போதைய இழிநிலை இச்சமுதாயத்திற்குத் தெரியும். அந்த நாள்களில் விடுதலைப் போரில் அவரவரும் தன்னையே தியாகம் செய்தார்கள். இன்று பெரும்பாலோர் தன்னலத்திற்காகத் தன்னையே தியாகம் செய்கிறார்கள் என்பது தெரிவிக்க வேண்டிய ஒன்றாகும்..." என்கிறார் தியாகி டி.ஏ.மணி, தன் கதர் ஜிப்பாவின் கிழிந்த கழுத்துப் பகுதியை மேலுக்குத் தள்ளி மறைத்துக் கொண்டே!

## கனவுத் தொழிற்சாலையான கனவான்

"சுயராஜ்ஜியம் கோழைகளுக்கும், சோம்பேறிகளுக்கும் அன்று; சிரித்துக் கொண்டே தூக்குமேடை ஏறத் தயாராயிருப்பவர்களுக்குத்தான் –"

என்ற மகாத்மாவின் வழியில் தன்னைப் பதினைந்து வயதிலேயே பதித்துக் கொண்டு, இந்திய விடுதலை விரும்பிகளுடன் ஐக்கியமானவர் கே.எஸ்.கந்தசாமி.

கரூருக்குப் பக்கத்திலுள்ள முத்துக் கவுண்டன் பாளையம் இவரது ஊர்.

இப்போது வயது எழுபத்தைந்து.

பரம்பரை வியாபாரம், இவரை பெங்களூருக்குக் கொண்டு போய்ச் சேர்த்தது.

1937 முதல் 1942 வரை நடந்த பல விடுதலைப் போராட்டங்களிலும் பங்கேற்றுத் தடியடிக்குள்ளானார். சொல்லக் கூசும் துன்பங்களைக் கைதானபோதெல்லாம் அனுபவித்தார்.

பெங்களூர்க் கண்டோன்மென்ட் கமர்ஷியல் தெரு காவல் நிலையத்தில் பதினான்கு நாள்கள் லாக் அப்'பில் அடைக்கப்பட்டார்.

'லாக் அப்' வாழ்க்கை, வசதியான குடும்பத்தைச் சேர்ந்தவரான இவருக்குக் குளுமையின் அணைப்பி லிருந்து கொதிக்கும் வெயிலுக்குள் சிக்கிய அனுபவத்தைத் தந்தது.

தளரவில்லை கே.எஸ்.கந்தசாமி.

காந்தியின் கட்டளைகளை நிறைவேற்றப் போராடினார். தூக்கில் தொங்கவும் தயாரானார், கர்நாடக இளைஞர்களின் விடுதலைக் கனவுத் தொழிற்சாலையான இவர்.

நிஜலிங்கப்பா, ஹனுமந்தையா, கே.சி.ரெட்டி ஆகியோரோடு கைதாகி,


கே.எஸ்.கந்தசாமி

பெங்களூர் மத்திய சிறைச்சாலையில் 16.10.1942 முதல் 15.4.1943 வரை இம்சைகளுக்குள்ளானார்.

காவல்துறையின் பூட்சு கால்கள் இவருடைய கறும்பொன் மேனியில் காயங்களைத் தோற்றுவித்தன.

நையப் புடைக்கப்பட்டும் நைதல் அடையாத இவருடைய துணிவு, மகாத்மா காந்தியே மெச்சுமளவுக்கு மிகுந்திருந்தது.

'வெள்ளையனே வெளியேறு' –

என்று மூச்சுக்கு மூச்சு கூவி, எத்தனையோ இரவுகளைத் தூங்காமலேயே, சுதந்தரம்... சுதந்தரம்' என்ற கனவொன்றிலேயே கழித்தார் கந்தசாமி.

'செய் அல்லது செத்துமடி' ... என்ற தேசப்பிதாவின் வேத வாக்கியத்தின் எடுத்துக்காட்டாய் விளங்கினார்.

திருவண்ணாமலைக் கருகில் நாயுடு மங்கலத்தில் அரசு தனக்கு வழங்கிய பத்து ஏக்கர் நிலத்தை வினோபாஜியின் பூதான இயக்கத்திற்கு வழங்கினார்.

கர்நாடக அரசின் தியாகி பென்ஷன் எழுநூற்றைம்பதும், மத்திய அரசின் ஆயிரத்தைந்நூறும் பெறும் இவர் அவற்றிலிருந்து சல்லிக்காசு கூட எடுப்பதில்லை.

அவற்றோடு சொந்தப் பணத்தையும் சேர்த்து சிவானந்த ஆசிரமம், ஷிமோகா சாரதா தேவி ஆந்திர விகாஸ் கேந்திரா, உதவும் கரங்கள், முதியோர் இல்லம், குருடர் இல்லம் போன்றவற்றிற்குத் தானம் செய்து விடுகிறார். உயிரோடிருக்கும் தியாகிகளுக்கும் உதவுகிறார்.

சமீபத்தில் சி.எம்.சி. மருத்துவ மனைக்கு இருபத்தைந்தாயிரம் ரூபாய் வழங்கியிருக்கிறார்.

வேலூர் மாவட்டத் தியாகிகள் சங்கத் தலைவரான இவர், சர்க்கரை, கோதுமை, மைதா, ரவை, உணவு எண்ணெய்கள் ஆகியவற்றின் மொத்த வணிகர்.

"இந்தியா முன்னேறியிருக்கிறது. ஆனால் ஏழைமை ஒழியவில்லை. பொன்விழா ஆண்டிற்குப் பின்னராவது ஏழைமை ஒழிந்த நாடு இந்திய நாடு என்று என் காது குளிரக் கேட்க விரும்புகிறேன். வாக்குகள் பெற வேண்டும்; நாற்காலிகளில் உட்கார வேண்டும் என்பவை மட்டுமே குறிக்கோள்களாக இல்லாமலிருக்க வேண்டும். நாம் நலமாயிருந்தால் போதாது. நாடும் நலமாயிருக்க வேண்டும். உழைக்க வேண்டும். உண்மையாயிருக்க வேண்டும்... என்ற உணர்வு ஒவ்வோர் இந்தியனிடமும் தோன்றி உறுதியுற வேண்டும். இதுவே என் பிரார்த்தனை!" என்கிறார் அப்பழுக்கற்ற காந்திய வாதியாய் வாழ்ந்து காட்டிவரும் தியாகி கே.எஸ்.கந்தசாமி!

# நிமிர்ந்த செருக்கு

சுப்ர. பாலன்





*வையப் பெருமை விளையாட்டில்*
*வருவது எல்லாம் வரவேற்பேன்!*
*கையில் கிடைத்த சிறுதாம்பும்*
*கவனம் சிதறிக் கைநழுவப்*
*பையத் தவழும் அலை ஒன்று*
*பக்கம் நகர்த்தி நகை பூக்கும்*
*ஐயன் எனக்கே வழிகாட்டும்*
*அற்புதம் என்பது புரிகிறதே!*

*அலையும் கடலில் சிலகாலம்*
*ஆனேன் நானும் சிறுபடகாய்!*
*கலையும் கனவாய் விழியோரம்*
*காலம் ஒளிரும், வழிகாட்டும்!*
*மலையும் மடுவும் ஒன்றெனவே*
*மனதுள் சிரித்து நடைபயில்வேன்.*
*'நிலையே இல்லை துன்பங்கள்,*
*நிற்பாய் நிலைப்பாய்' என்றது யார்?*

*நிறைவாய் எல்லாம் அமையுமென*
*நிமிர்ந்த செருக்கில் திணறுகையில்,*
*தரையைக் காட்டிச் சிரிக்கின்றாய்.*
*தாயே உன்சிறு விளையாட்டாய்!*
*சரியோ தவறோ என் செயலில்*
*சத்தியம் மட்டும துணை நிறுத்திப்*
*புரியா மௌனப் பேரொவியில்*
*புதிதாய் எனக்குப் பொருள்தருவாய்!*

# சந்திர துர்கா

## ஜெயரதன்

*ரயில் சற்று மெதுவாகப் போவது போல் தோன்றிற்று, சகுந்தலாவிற்கு.*

படித்துக் கொண்டிருந்த புத்தகம் அலுப்புத்தட்டிற்று. புத்தகத்தை மூடிவிட்டு ஜன்னல் வழியாக வெளியே பார்த்தாள்.

தலைதெறிக்கிற வேகத்தில் விளக்குக் கம்பங்களும் மரங்களும் ஓடிமறைந்தன.

விளக்குக் கம்பங்களென்ன, மரங்களென்ன? எல்லாமே ஓட்டமாய்த்தான் ஓடுகின்றன. காலம் மட்டும் என்னவாம்? என்ன ஓட்டம் ஓடுகிறது? திரும்பிப் பார்ப்பதற்குள் எத்தனை வருஷங்கள் கழிந்துவிட்டன!

கள்ளந்தெரியாத சின்னஞ்சிறுமியாய் இருந்த நாள்கள் மறைந்து, பார்வையில் கள்ளம் பதிந்த நாள்கள் எவ்வளவு விரைவில் வந்தன! 'குனிஞ்சதலை நிமிராமெப் போயிட்டுவரணும். அங்கே இங்கே பாத்தியோ கொன்னுடுவேன்' என்று அம்மா கூறியதற்குப் பவ்யமாய்த் தலையசைத்துச் செயற்கையாய்த் தலைகுனிந்து, தெரு முத்திருப்பம் வரை நடந்துவிட்டு, தாயின் உருவம் மறைந்ததும் தாவணித் தலைப்பைத் தொங்க விட்டுக் கொண்டு 'யார் பார்த்தாலும் எனக்குக் கவலையில்லை' என்கிறது மாதிரி மிடுக்காய், சன்னமாய் ஆடைவிலக்கி நடந்த காலமும் தான் எப்படி மறைந்து போயிற்று! பள்ளி நாள்கள் கழிந்து கல்லூரி நாள்கள் தாம் என்ன ஓட்டம் ஓடின! மலையருவியாய்க் குதித்துத் துள்ளிச் சீறிப்பாய்ந்து சூழ்நிலையைத் துடிக்கவைத்த நாள்களல்லவா, அவை! கல்லூரி வகுப்பு நேரத்தில் மட்டுமன்றி, ஹாஸ்டலிலும் தான் இவளையும் இவள் தோழிகளையும் கண்டால், எத்தனை பயம், மரியாதை! கல்லூரி ஆசிரியைகளும் அல்லவா மரியாதை கொடுப்பார்கள்! அந்த நாள்கள் தாம் எப்படி ஓடி மறைந்தன! உற்சாகமாய்ப் பிறந்து, துள்ளலாய் வளர்ந்து, துடிப்பாய் உயர்ந்து, துரிதமாய்ச் சரிந்த வீர்யமான நாள்களல்லவா, அவை!

'திரிசூலம்' என்பார்கள்.

சகுந்தலா, துர்கா, சாவித்திரி மூன்று பேரும் இணைந்துதான் வருவார்கள். எங்கே போனாலும், என்ன செய்தாலும் மூன்று பேரும் ஒன்றாய்த்தான் காணப்படுவார்கள். இந்த மூவரின் கூட்டணிக்குத்தான் கல்லூரிப்பெயர் 'திரிசூலம்'.

துர்காதான் நடுவில். இரண்டு பக்கமும் சகுந்தலா, சாவித்திரி. மாட்டிக் கொண்டவர்களைக் குத்திக் குதறிப் போட்டு விடுவார்கள்.

அதிலும் துர்கா வருகிறாள் என்றால் எல்லாருக்கும் - ஏன் பிரின்ஸிக்கும்தான் - உள்ளூர உதறல்தான்.

பளீரென்று ஆளை வீழ்த்துகிற உருவம். பாதாம் பருப்பின் தோலுரித்தது மாதிரியான அழகு நிறம். நீள, அகல கன பரிமாணங்கள் அவளுக்கு அமைந்தது மாதிரி யாருக்கும் அமைந்ததில்லை. வசீகர முகம். பார்ப்போரை உருக்கும் சிரிப்பு. அருமையாய்ப் பாடுவாள். அற்புதமாய் ஆடுவாள். மேடைப் பேச்சிலே, அவள் கல்லூரியை விட்டுச் செல்லும் வரை முதல்பரிசு அவளுக்குத்தான். இரண்டாவது பரிசுக்குத்தான் போட்டி. இது எல்லாருக்கும் தெரியும்.

'அப்பா!.. துர்கா மாதிரி இன்னொருத்தி பொறந்து வந்தாத்தான் உண்டு..' என்று உடம்பைச் சிலிர்த்துக் கொண்டாள் சகுந்தலா.

ரயில் பயணம் மீண்டும் சுவாரஸ்யமாயிற்று. துர்காவின் நினைவுவந்ததுமே ஓர் உற்சாகம் வந்ததை உணர்ந்தாள். கல்லூரி நாள்களில் துர்கா என்றாலே எழுச்சி, உற்சாகம் என்றுதானே இருந்தது!

எத்தனை வருஷங்களாயிற்று அவளைப் பார்த்து? படித்து முடித்து அவரவர் தத்தமது வாழ்க்கையைத் தொடங்கியதும் அடிக்கடி கடிதப் போக்குவரத்தும் அவ்வப்போது சந்திப்பதுமாய் இருந்த இடைவெளி சிறிதுசிறிதாய் கண்ணுக்குத் தெரியாமல் இளமை தேய்ந்து போகிறது மாதிரி- அதிகமாகக் கடிதங்கள் குறைந்து முற்றிலுமாய் மறைந்தும் போயின. சந்திப்பதும் அறவே நின்று போயிற்று. ஒவ்வொருவரும் ஒவ்வொரு மூலைக்கு மணமாகிப் போனார்கள்.

முதலில் திருமணமானது சாவித்திரிக்கு. வேறு ஜாதிப் பையனைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்டாள். இருபுறமும் பெற்றோர், மற்றோரின் விரோதத்தின் நடுவில் தோழிகள் புடைசூழ திருமணம் நடந்தேறியது. அதற்கு துர்கா செய்த உதவிகள் கொஞ்சநஞ்சமில்லை.

அடுத்து சகுந்தலா. "கூடப்பிறந்த பெண்கள் இருக்கக்கூடாது. மாமனார் - மாமியார் தொந்தரவு இருக்கக்கூடாது" என்று கண்டிப்பாய்ப் பெற்றோரிடம் கூற, மிகுந்த பிரயாசையின் பேரில் அவளுக்கு வரன் பார்த்து முடித்தார்கள். முன்னின்று நடத்தி உற்சாகம் தந்தவள் துர்கா. வழக்கம்போல் துணை நின்றவள் சாவித்திரி.

துர்காவின் கல்யாணம்தான் தள்ளிப்போய்க் கொண்டே இருந்தது.

"என்ன ஆர்ப்பாட்டம் பண்ணுவா... பெண் சுதந்தரம், விடுதலை அது இதுன்னு ஆம்பளைகளை என்னதிட்டுதிட்டுவா.. அதான் கல்யாணமே ஆகலை.."

"மகாப் பொல்லாதவ... அதுதான் தனிமரமாயிட்டா.."

விதவிதமாய் அபிப்ராயங்கள் சுழல, நடுவே புயலின்கண்ணாய், அமைதியாய்ச் செயல்பட்டுக் கொண்டிருந்தாள் துர்கா.

பெரிய அலுவலகத்தில் இளநிலை அதிகாரியாய் வேலை. கைநிறையச் சம்பளம். கண் நிறைந்த தோற்றம். அவளைத் தவிர, அனைவரும் அவள்

திருமணத்திற்காகக் காத்திருந்தார்கள். அவளிடம் அகப்பட்டு விழிக்கும் ஆணை வேடிக்கை பார்க்கக் காத்திருந்தார்கள்.

"..அவளோட யாருய்யா இருக்கறது? ..அழகா இருந்தா, ஆச்சா? ...ஆண், பெண்ணுக்கு சமம்னாக் கூடப் பரவாயில்லை. ஆண்கள்னாலே சர்வ அலட்சியம் அவளுக்கு.. பேரு வச்சாம் பாரு துர்கான்னு.. காளின்னே வச்சிருக்கலாம்..."

பிரசவத்திற்கு வந்திருந்த போது, விடுமுறையில் வீட்டிற்கு வந்திருந்த துர்கா, உற்சாகமாய் ஓடிவந்தாள் சகுந்தலாவைப் பார்க்க.

உற்சாகமே கைகால் முளைத்து வந்தது மாதிரி ஓடிவந்து தழுவிக் கொண்டாள். கல்லூரிப் பெண்ணின் அவசரம் மறைந்து, அவளிடம் ஒரு நிதானம் அழகாய்க்குடி கொண்டிருந்தது.

"நீ ரொம்ப அழகா இருக்கேடி.. துர்கா..!"

ஆர்வத்துடன் அணைத்துக் கொண்டாள் சகுந்தலா.

"யெஸ்.. ஐ நோ தட்.."

கம்பீரமாய் ஏற்றுக்கொண்ட துர்காவை பிரமிப்புடன் பார்த்தாள்.

"நீ அப்படியே தான் இருக்கே துர்கா! கொஞ்சம் கூட மாறலை.. 'அழகாயிருந்து என்ன பிரயோஜனம்'னோ, 'உனக்குத் தெரியறது. எந்தப்புருஷனுக்கும் தெரியல்லையே'ன்னோ, அலுப்பா ஒரு கமெண்ட் வரும்னு எதிர்பார்த்தேன்.. எப்படி மனசு துவளாமே அப்படியே இருக்கே?.."

"எதுக்காக மனசு துவளணும்...? ஸ்டுப்பிட்!.. நான் அழகாயிருக்கறது உண்மை.. ஐ அம் அவேர்ஆஃப் இட்.. கல்யாணம்ங்கறது தேவைதான்... ஆனா அது கட்டாயமில்லை.. என்னோட எந்த மதிப்பையும் இழக்காமெ, என்னோட கௌரவத்தைப் பணயம் வைக்காமெக் கல்யாணம் பண்ணிக்க நான் தயார்.. கல்யாணம்ங்கறது, ஏதோ ஆண் கொடுக்கற தர்மமாகவும், பெண் அதை தானமா வாங்கி ஆபரணமாக அணிஞ்சுக்கறதாகவும் இருக்கறதை நான் அன்றைக்கும் சரி, இன்றைக்கும் சரி எதிர்க்கறேன்.. கல்யாணம்ங்கறது பெண்ணுக்கு ஆணின் பரிசு இல்லை.. இருவரின் கௌரவமான கம்பீர சங்கமம்.. பெண்ணின் உரிமையிலேயும் சுதந்தரத்திலேயும் தலையிடற ஆணை என்னால் ஏத்துக்க முடியாது.. ஐ ஹேட் மேல் டாமினேஷன் ஆஸ் வெல் ஆஸ் ஃபிமேல் சப்மிஷன்..."

கல்லூரி நாள்களில் ஆவேசமாய் முழங்கும் துர்காவை மீண்டும் கண்டாள் சகுந்தலா.

அதே தெளிவு! அதே கம்பீரம்! இவள் தலைவியாய் இருப்பதற்கென்றே பிறந்தவள்..

வியப்பும் பிரமிப்பும் மேலிட, மீண்டும் அவளைத் தழுவிக் கொண்டாள் சகுந்தலா.

நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு அகன்றாள் துர்கா. அவள் சென்று நெடுநேரம் ஆகியும் அவள் ஏற்படுத்திவிட்டுப் போயிருந்த பிரமிப்பு அதிர்வுகள் வெகுநேரம் சுழன்று கொண்டிருந்தன. அந்த அதிர்வுகளில் ஒரு துகளாய்ச் சுகமாய்ச் சுழன்று கொண்டிருந்தாள் சகுந்தலா.

"இந்த துஷ்டப் பொண்ணு எதுக்கு இங்கே வரது?" என்று கேட்ட அம்மாவை ஒரு முறை முறைத்ததும் "சித்த நாழி வந்துட்டுப் புத்தியைக் கெடுக்கறது" என்று அம்மா முணுமுணுத்துக் கொண்டே சென்றதும் நினைவுக்கு வந்தன.

ஏதோ உடம்பில் ஊர்கிறமாதிரி உணர்ந்த சகுந்தலா, எதிரில் இருக்கையில் அமர்ந்திருந்த ஒரு நடுவயதுக்காரர் தன்னையே உற்று நோக்கிக் கொண்டிருந்ததைக் கண்டாள். கோபத்துடன் 'திரிசூலப்'பார்வையைத் துர்கா மாதிரிச் செலுத்தியதும் அவர் அவசர அவசரமாய்ப் பார்வையைத் தாழ்த்திக் கொண்டதைக் காணச் சிரிப்பு வந்தது.

'துர்காங்கறவ ஒரு தனிப்பட்ட பெண் இல்லை... ஒவ்வொரு பெண்ணினுள்ளும் இருக்கும் ஓர் அம்சம் போலிருக்கிறது' என்று நினைத்துக் கொண்டே, ஜன்னல் வழியே பார்வையைச் செலுத்தினாள் சகுந்தலா.

அப்போது பார்த்ததுதான், மறுபடியும் அவளைப் பார்க்க இப்போதுதான் விரைந்து கொண்டிருக்கிறாள், பல வருடங்கள் கழித்து.

இடையில் துர்காவிற்குக் கல்யாணம் என்று பத்திரிகை வந்திருந்தது. வரமுடியவில்லை. அப்போதுதான் கௌஹாத்திக்கு வேலை மாற்றலாகி ஒப்புக் கொண்டிருந்தாள். புதுடில்லியில் கணவரும் குழந்தைகளும். குழந்தைகள் படித்துக் கொண்டிருந்ததால் குடும்பம் கணவரின் பாதுகாவலில் புதுடில்லியில் இருந்தது. அடிக்கடி டில்லி சென்று குடும்பத்தைப் பார்க்கவே விடுமுறைகள் தேவைப்பட்டதால் துர்காவின் திருமணத்திற்குச் செல்ல முடியவில்லை அதில் வருத்தம்தான் அவளுக்கு.

மூன்று மாதங்களுக்கு முன்னால் கல்கத்தாவில் அலுவலக ரீதியில் ஒரு பயிற்சி முகாமிற்குச் சென்றிருந்த போது சாவித்திரியைக் காண நேர்ந்தது.

அவளைப் பார்த்துத்தான் எத்தனை வருஷமாயிற்று! மும்பையில் வேலை பார்த்துக் கொண்டிருக்கிறாளாம். போரிவில்லியில் வீடு. அலுவலகம் சென்று வீடு திரும்பவே சரியாக இருக்கிறதாம்.

"சொந்தக்காரங்க இப்போ வரேன்னு சொன்னாங்க... நான்தான் வேணாம்னு வெட்டி விட்டுட்டேன்.. வசதியா இருக்கம்னு தெரிஞ்சதும் ஒட்டிக்கப் பாத்தாங்க.. நான் இடம் கொடுக்கலை.." என்று பெருமை பொங்கப் பேசிய சாவித்திரியை ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள் சகுந்தலா.

அதே வேகம்! அதே துடிப்பு! வார்த்தைக்கு வார்த்தை கத்திரி வெட்டாய்க் குறுக்கீடுகளுடன் சாவித்திரியுடன் பேசப்பேச இளமை திரும்பி வந்துவிட்டாற் போலிருந்தது. துர்காவைப் பற்றிப் பேச்சு வந்ததும் சாவித்திரி வருத்தத்துடன் கூறினாள்.

"துர்கா தாண்டி. எப்படியோ ஆயிட்டா?"

"ஏன்?"

"பழைய வீரம் பேசின துர்காவான்னு இருக்கு. திருவனந்தபுரத்துலே அவளைப் பாத்தேன்.. ஏண்டா பாத்தோம்னு ஆயிடுத்து..."

"ஏண்டி?... ஹஸ்பண்ட் டீஸ் பண்றாரா?.. அதுக்கெல்லாம் இடங்குடுக்க மாட்டாளே, அவ?..

"..வேலையை விட்டுட்டா.. இரண்டு குழந்தைகள்.. இன்வாஸ் இரண்டு

பேரும் படுத்த படுக்கை... அவங்களுக்குப் பணிவிடை செய்யறா.. வீட்டுவேலை சரியா இருக்கு அவளுக்கு.. ஜெயில் கைதி மாதிரி இருக்கா.. பாக்கப் பாவமா இருக்கு..."

கேட்கக்கேட்கத் துயரமாயிருந்தது சகுந்தலாவுக்கு. மலையருவியைக் கண்ணாடிக் குவளையில் தேக்கிவைத்தது மாதிரி. இது எப்படி சாத்தியம்? அவள் எப்படி அடங்கிப் போனாள்? கல்யாணம் ஆகத் தாமதமானதால் மனம் தளர்ந்து கிடைத்த இடத்தில் மாட்டிக் கொண்டுவிட்டாளோ? என்ன ஆயிற்று அவளுக்கு?

சாவித்திரி போய் வெகுநேரமாகியும் மனம் கனத்து உட்கார்ந்திருந்தாள் சகுந்தலா.

துர்காவைப் பார்த்தேயாக வேண்டும் என்ற வேகத்தைக் கட்டுப்படுத்த இயலாதவளாகித் திருவனந்தபுரத்திற்குக் கிளம்பினாள்.

இதோ ஆயிற்று. சில மணி நேரங்களில் துர்காவைச் சந்தித்துவிடலாம் என்ற வேகம். உள்ளூரப் பொங்கிற்று. திடீரென்று ரயில் மெதுவாய்ப் போவது போலத் தோன்றிற்று.

தவிப்புடன் திருவனந்தபுரத்தை ரயில் அடையும் நேரத்திற்காகக் காத்துக் கொண்டிருந்தாள்.

ரயில் நிலையத்தில் சகுந்தலாவை வரவேற்றவர் துர்காவின் கணவர்.

வாட்ட சாட்டமாய்ச் சினிமா வில்லன் மாதிரி இருந்தார். துர்காவை அதட்டி உருட்டி அடித்துத்துன்புறுத்துகிறாரோ? அவரைப் பார்க்கவே பிடிக்கவில்லை.

"ஏன் துர்கா வரலையா?.."

"எங்கம்மாக்கு ஒடம்பு சரியில்லை.. பக்கத்திலேயே இருந்து கவனிச்சுக்க வேண்டியிருக்கு.. அதான்..."

"ஏன் ஆஸ்பத்திரிலே சேக்கறது. அல்லது நர்ஸை வேலைக்கு வச்சுக்கறது?... ஆயா வேலைக்குத் துர்காதான் கெடைச்சாளா..?"

கோபம் பொங்கிற்று. எதுவும் பேசாமல் வீட்டுக்குப் போனாள் சகுந்தலா.

மாமியாருக்கு 'ஸ்பான்ஜ் பாத்' கொடுத்துக் கொண்டிருந்த துர்காவைக் கண்டதும் துயரம் மண்டிற்று.

"ஹாய்.. சக்கு!..." என்று ஓட்டமாய்



ஓடி வந்து அணைத்துக் கொண்டாள். டெட்டால் வாடை ஆளைத் தூக்கிற்று.

✪ ✪ ✪

"சாரிடீ சக்கு!... வேலையை முடிச்சிட்டு வர நேரமாயிடுத்து..."

ஈரக்கையைத் துடைத்துக் கொண்டே வந்த துர்காவைப் பார்த்ததும் கழிவிரக்கம் மண்டிற்று. சகுந்தலாவுக்கு.

"..என்னடி துர்கா. இப்படி மாட்டிண்டுட்டே? ஒரு ரூம்லே மாமனார் படுக்கையிலே.. இன்னொரு ரூம்லே மாமியார்.. ஹஸ்பண்ட் பாட்டுக்கு ஜாலியா ஆபீஸ் போயிட்டுவரார்.. நீ வீட்டுலே செக்குமாடு மாதிரி வேலை செஞ்சிண்டு!.. சாவித்திரி சொன்னது நூத்துக்கு நூறு கரெக்ட்.. ஐ ஆம் சாரி.."

குரல் நடுங்கக் கூறிய சகுந்தலாவை அதே பழைய மிடுக்குடன் பார்த்தாள் துர்கா.

"என்ன சொன்னாள்?.. ஜெயில் கைதின்னிருப்பா. அதானே..?"

"என்னமோ பத்மஸ்ரீ அவார்டு மாதிரிச் சொல்றியே? பெண் விடுதலை. பெண்ணுரிமை. ஆணாதிக்கம் அது இதுன்னு சூர்யனாப்பிரகாசிச்ச பழைய துர்காவா நீ?.. இப்படி ஒரு கல்யாணம் உனக்குத் தேவைதானா?.. எனக்குத் தாங்கல்லைடீ. துர்கா... கன்வென்ஷனல் இந்தியப் பெண்ணா கணவனே கண்கண்ட தெய்வம்னு ஆயிட்டே..."

கொட்டித்தீர்த்தாள் சகுந்தலா.

"நினைச்சேன்... இப்படி ஏதாவது விபரீதமா நினைச்சிண்டிருப்பேன்னு நினைச்சேன்.. நான் ரொம்ப சந்தோஷமா இருக்கேன் தெரியுமோ?.."

கால்மேல் கால்போட்டுக் கொண்டு பழைய துர்காவாய்க் கம்பீரமாய் அமர்ந்திருந்தாள். பார்வை படுதீவிரமா யிருந்தது.

"...ஜெயில் கைதின்னு சொன்னியே. அது கூடச் சரிதான்.. பிரபலமான தலைவர்கள் ஜெயில்லே கைதியா இருந்தப் போ சும்மா இருக்கலை... பெரிய இலக்கியங்களை ஜெயில்லேர்ந்து தான் எழுதியிருக்காங்க... கிடைச்ச வாய்ப்பை அவங்கவங்க எப்படிப் பயன்படுத்தி னாங்கங்கறதுலே தான் வெற்றியே இருக்கு.. யாருக்கும் அடங்கிப் போய் பயந்துண்டு இந்த வாழ்க்கையை நான் ஏத்துக்கலை. பூரண சம்மதத்தோடதான் செய்யறேன்... யெஸ்.. என் இன்லாஸ் படுத்தபடுக்கையா இருக்காங்க.. அவங்க தேவையை யார் கவனிக்கறது?... 'விஸ்ராந்தி நிலையத்திலே விடறது என்ன நியாயம்? நம்ம பொறுப்பைப் பிறர் கிட்டத்தள்ளி விடறது எஸ்கேபிஸம். என் பொறுப்பைப் பிறர் செய்யறது எனக்குக் கேவலம் இல்லையா? அவங்க எவ்வளவு நிம்மதியா இருக்கறாங்க தெரியுமா?... இரண்டு பேர் உடம்பு முடியாதவங் களுக்கு. மனநிம்மதியையும் சந்தோஷத் தையும் என்னாலே தர முடியறதுன்னா அது எவ்வளவு சந்தோஷத்தை எனக்குக் கொடுக்கிறது தெரியுமா? செய்யற வேலையைப் பரிபூரண ஈடுபாட்டோட செய்யணும்.. அதுலே அலுப்பே இருக்கறதில்லை. இருக்காது ஆபீஸ் வேலைன்னா உயர்வு, வீட்டு வேலைன்னா மட்டம்னு நினைக்கறமே. இது தான் தவறு! வீட்டுவேலையைப் புறக்கணிச்சு வெளியே ஆபீஸிலே அடிமை வேலை செய்யறது நிஜமான விடுதலையில்லை சக்கு! அது ஒரு காம்ப்ளெக்ஸ். நாம செய்யற வேலையை ரசிச்சுச் செய்யணும்.. கம்பீரத்தோட செய்யணும்.. கட்டுப்பட்டு பயந்து செய்யக்கூடாது.. அதுதான் முக்கியம்..

வாய்க்கும் வயிற்றுக்கும் இதமாச் சமைக்கறேன்.. அவரும் குழந்தைகளும் ரசிச்சுச் சாப்பிடறதைப் பார்க்க ஆனந்தமாயிருக்கு.. ஓய்வு நேரங்களிலே சங்கீதம் கத்துக்கறேன்.. குழந்தை களுக்குப் பாடம் சொல்லித்தரேன்... வீட்டுக்குள்ளே வரபோதே அம்மான்னு ஓடி வர்ற குழந்தைகள் முகத்திலே என்னைப் பார்த்ததும் என்ன சந்தோஷம் தெரியுமா? பிறர் சந்தோஷம் பெரிய சுகம் தெரியுமோ? அதுக்கு நாம காரணமா இருக்கிறது பெரிய கம்பீரம் தெரியுமா? நீ வேலை பாக்கறதுலே எனக்கு எந்தக் கஷ்டமுமில்லை.. அம்மா அப்பாவை ஏதாவது முதியோர் இல்லத்துலே சேத்துடலாம். குழந்தை களை க்ரெச்சுலே விட்டுடலாம்னு தான் என் ஹஸ்பண்ட் சொன்னார்.. நானேதான் விரும்பி இதைச் செய்யறேன்.. அவரும் வீட்டுக் கவலையில்லாமெ, ஆபீஸிலே நிம்மதியா வேலை செய்ய முடியறது... ஆகவே எனக்கு இதிலே குறையே எதுவுமில்லை. நம்ம பார்வையிலேதான் கோளாறு இருக்கு. சகுந்தலா...

..எந்த வேலையும் மட்டமில்லை..நான் பரிபூரண விடுதலை உணர்வோட இந்த வேலையைச் செய்யறேன்... ஐ ஆம் வெரி ஹேப்பி... ஆல்ஸோ"

துர்கா பேசி முடித்தாள்.

கல்லூரி நாள்களில் ஆர்ப்பாட்ட மாய்ப் பேசிச் சூர்ய ஒளியாய்த் தகித்த துர்கா. இன்று குளிர்ந்து இதமாய்ச் சந்திரப்பிரகாசமாய்ப் பேசுவதை, ஓர் ஈர்ப்புடன் கேட்டுக் கொண்டிருந்தாள் சகுந்தலா. அவள் பேச்சின் அதிர்வு அலைகள் அவளைச் சூழ்ந்து பிரமிப்பில் ஆழ்த்திக் கொண்டிருந்தன. ○○

# நான்

## அடியார்க்கு நல்லான்



தூறுகின்ற கற்பனைகள்
தோயவரும் சொற்புனைகள்
சேருகின்ற வீதி நிற்பவன் - நாளும்
சிந்துகளை கூவி விற்பவன்

பாசமென்ற புத்தகத்தை
பாதியோடு மூடிவைத்து
நேசங்களை தேடிப் போனவன் - வழி
நெருஞ்சியினால் வாடிப் போனவன்

இளவேனில் கோலமிடும்
விழிமாதர் கனவுகளை
வளமாரும் மொழியில் வைத்தவன் - இள
வஞ்சியரின் நெஞ்சு தைத்தவன்

சிந்தனையில் முற்றமதில்
சிந்துகின்ற தத்துவங்கள்
சொந்தமென ஆன வித்தகன் - வழி
காட்டுகின்ற தூய புத்தகன்

வானெழுதும் பாசுரங்கள்
மோனமொழி வாசகங்கள்
நானறியும் பேறு பெற்றவன் - எந்த
நாளும்விழி ஈர முற்றவன்

பாடுகின்ற பூங்குயிலின்
பல்லவியை உச்சரித்து
ஓடுகின்ற தென்ற லானவன் - இசை
தேடுமொரு அன்றி லானவன்

காயமுற்ற கனவெழுதும்
கண்ணீர்க் கவிதைகளை
நேயமோடு வாசிக் கின்றவன் - நிசி
தோறுமதை சுவாசிக் கின்றவன்

மோனமென்ற குடிசையதில்
மோகமதை சுட்டெரித்து
ஞானவிளக் கேற்று கின்றவன் - தவம்
நாளுமதில் போற்று கின்றவன்

நித்தமொரு சஞ்சலத்தில்
நீளவரும் சோதனையில்
தத்திவிளை யாடு கின்றவன் - நெறி
தப்பிவிளை யாடா தவன்

தேசமெலாம் ஞானமுறத்
திசைமாறி ஓர்விடியல்
வாசல்வர காத்தி ருப்பவன் - வருங்
காலம்வரை பூத்தி ருப்பவன்

இவதா..

# கருப்பை

கவிமாமணி பாளை-இளமாறன்

வாடகை யில்லா வீடு; இல்லறக்
கூடலில் தாய்மை கொடுக்கும் பட்டறை.
மலடுச் சொல்லை மாற்றி யமைத்து
உலகில் பெண்மையை உயர்த்தும் கூடு.
தொப்புள் கொடியின் சுகத்தின் உதவியால்
கருவை வளர்க்கும் கற்பக பூமி.
இக்கருப் பைக்கு எந்தக் குறையும்
வந்திடாது காத்து வாழும் பெண்ணாள்;
தன்னைக் காக்கத் தாய்மை அடைந்து
பெற்றாள் பிள்ளை பெருமையும் பெற்றாள்.
திருமணம் முடிந்து மருமகள் வந்தாள்
பேரப் பிள்ளையைப் பேணி வளர்த்தாள்.
சக்தி யிழந்தாள்; தள்ளா நோயால்
சுருண்டு கிடந்தாள்; செலவு வந்தது.
நோயில் துடிக்கும் தாயைக் காப்பதா?
நேசம் கொண்ட சேயைக் காப்பதா?
பெற்ற பிள்ளையே பெரிதென் றெண்ணி
பெற்றதாயை அநாதை யாக்கினான்.
மடிப்பால் கொடுத்த மார்பு துடிக்க
அடிவயிறெரிந்து அனலாய் ஆனதால்
கருவை வளர்த்த கருப்பையை அறுத்து
எறிந்து மகிழ்ந்தாள்; இழிவாய் எண்ணினாள்

..........................................

இன்று மகன்நிலை எப்படி இருக்கும்
எண்ணிப் பார்த்துக் கண்ணீ ரானாள்.



# என்று தெளியும்?

பூவை அமுதன்

அவள் சிரித்தால் குழிவிழுமே அந்தக் கன்ன
அழகுக்காய் அடிக்கடிநான் ஏங்கல் உண்டு.
தவறாமல் பள்ளிக்குச் செல்வேன்; அங்கே
தலைதெரியா தவளிருந்தால் வாடிப் போவேன்!
சுவரினிலே அவள் பெயரை வரையும் ஆசை
சுழன்றாலும் சுவடியில்தான் எழுதிப் பார்ப்பேன்!
எவரிடமோ அவள்பேச, எனக்குள் கோபம்
ஏன்நான் இப் படியானேன், அவள்மேல் தப்பா?

பல ஆண்டாய்ச் சேர்ந்தேதான் படித்த போதும்,
பார்வையன்றி வாய்மொழியில் பேசிக் கொள்ள
சில சமயம் எதிரெதிரே சந்தித் தாலும்
செயல்மறந்து நின்றதன்றிச் சிரிப்பும் இல்லை!
கலகலப்பாய்ப் பிறரோடு பழகும் பண்பு,
கண்டவுடன் தலைகளை ஏன் தாழ்த்தி வைக்கும்?
பலனெதுவும் பாராமல் பயிர்செய் வோமா?
பரிதவிப்பு தொடர்கிறதே, பயன் உண்டாமா?

பருவமிது பயில்வதற்கே தெரிந்த உண்மை
பயமுறுத்தும் பண்பாடு தடையை மீறப்
பெருமுயற்சி யெடுத்தாலும் இயல வில்லை!
பெரியவர்கள் நம்பிக்கை பொய்த்துப் போகும்
ஒரு நிலையை உருவாக்கும் துணிவும் இல்லை
உள்ளபடி காதலிதா? புரிய வில்லை!
வருமான மில்லாமல் செலவு செய்ய
வழிதேடு கின்றேனா? தெளிதல் என்று?

# அன்பால் உயரும் அகிலம்

"தமிழ்மாமணி" கோவூர் இசைதாசன்

கற்கால மனிதர்கள் காட்டினில் திரிந்தனர்
கனிகள் கிழங்குகள் புசித்திட அறிந்தனர்
மேலாடை யாயிலை தழைகளைக் கண்டனர்
மிருகங்கள் தோலினால் ஆடையைக் கொண்டனர்
கற்காலம் மாறியது கலைகள்வே றூன்றின
நற்காலம் அறிவென்னும் ஞானத்தால் தோன்றியது
தோலாடை கற்குகைகள் உணவுவகை மாறியது
நூலாடை மாளிகைகள் நாகரிகம் கூறியது
இவ்வாறு வளர்ச்சிபல கண்டுள்ள இவ்வையம்
இப்போது நல்லாக்கச் செயல்விட்டே அழிவென்னும்
தப்பான பாதையிலே தடம்புரண்டு செல்கிறது
பொற்கால மாமிதனைப் பூரணமாய் மாற்றுதற்கு
உற்றவழி, வன்முறைகள் ஒழிக்கும் மனமாற்றம்,
ஒற்றுமைசேர் நெஞ்சம், ஒருவர்பால் மற்றவர்கொள்
அன்பால்தான் வையம் உயரும்
மன்பதை யாவும் மகிழ்வுடன் வாழுமே!



# விவேக சூடாமணி

(ஸ்ரீ ஆதிசங்கரர் உருவாக்கிய – பாமரமக்களுக்கும் புரியும் வகையிலான முதல் ஆன்மிக நூல்)

ஆதி சங்கரர் விஷ்ணு சகஸ்ரநாம பாஷ்யம் முதல், பகவத்கீதை பிரம்மசூத்ரம் முதலியவற்றிற்கும் பாஷ்யங்கள் எழுதி இருக்கிறார். இவை நம்முடைய பழைமையான தர்மத்தை நிலைநாட்டும் தர்ம இலக்கியங்கள்.

இவற்றை சாதாரணப் பாமரன் படித்துப்புரிந்துகொள்வது என்பது ஒருபோதும் நடவாத ஒன்று. எனவே இப்படிப்பட்ட மக்களுக் கென, அவர்களை ஆன்மிக வழியில் கொண்டு செல்ல, அவர்களுக்கு கடவுள் தத்துவங்களைப் புரியவைக்க, அவர்களை ஆஸ்திகர்களாக்க, ஆதிசங்கரர் இயற்றிய முதல்நூல்தான் விவேக சூடாமணி என்ற அறிவுக்களஞ்சியம்.

சூடாமணி என்பது ரத்தினக்கற்களால் செய்யப்படும். ஓர் அணிகலன். அணிகலன்களிலேயே சிறந்தது இது. ஏனெனில் இது தலையில் அணியப்படுவது.

எனவே தான் சீதாப்பிராட்டி கூட, தான் உயிருடன் இருப்பதற்கு அடையாளமாக இந்த ஆபரணத்தை அனுமனிடம் கொடுத்தனுப்பினாள் என்பது இதிகாசம் சொல்லும் செய்தி. விவேகம் என்பது, காணும் உலகத்திலிருந்து, காணமுடியாத இறைவனைப் பற்றின உண்மைகளை அறிவது. எதுசரி, எது தவறு என்று பகுத்தறிவதும் விவேகம்தான். அந்த விதமான விவேக நூல்களில் மிகச் சிறந்தது 'விவேக சூடாமணி' எனவும் பொருள் கொள்ளலாம்.

இந்த விவேக சூடாமணி என்ற 580 சுலோகங்கள் அடங்கிய நூலுக்கு, சில விளக்கங்களே இதுவ்ரை எழுதப்பட்டுள்ளன. அதில் சிருங்கேரிபீடம் எழுதியிருப்பது மிகச்சிறந்ததாகக் கருதப்படுகிறது.



இந்நூல் முழுக்கமுழுக்க ஆத்மாவின் தத்துவங்களை எளிதாகச் சொல்ல முற்படுகிறது. பல எடுத்துக்காட்டுகளோடு உரைநடை உருவில் எழுதப்பட்டிருக்கிறது. அதனைச் சுருக்கமாக இங்கே கூறுவதென்பது, கடல்நீரை ஒரு சிறு குடுக்கையில் அடைப்பது போலாகும்.

பிறவிகளில் உயர்ந்த பிறவி மானிடப்பிறவி. இப்பிறவியில் ஒருவனுக்கு நல்வழி காட்டும் பெரியோர்களைச் சேருவதும், முக்தியில் எண்ணம் ஏற்படுவதும் கிடைக்கப் பெறாத லட்சியங்களாகும். எல்லாருக்கும் இந்த எண்ணம் ஏற்படுவதில்லை.

தெய்வத்தின் அருள் இருந்தால் மட்டும் இந்த எண்ணம் ஏற்பட வழிஉண்டு. ஆயினும் ஒரு நல்ல குரு இருந்தால் ஒருவனுள் இந்த எண்ணங்களை உருவாக்கமுடியும்.

நல்ல குரு என்பவர் யார்?

வேதங்களைக் கற்று உணர்ந்தவர். பாபச்செயல்களைச் செய்யாதவர். ஆசை என்ற தீப்பொறியை மனக்குகையில் ஏந்தி, அதனால் அங்குள்ள எல்லா நல்ல எண்ணங்களையும் அந்த நெருப்பிற்குப் பலியாக்காதவர். தீய எண்ணங்களை மட்டும் சுட்டெரித்தவர். (மஹாகவிபாரதியின் 'அக்கினிக் குஞ்சு ஒன்று கண்டேன்' என்ற பாடல் இதற்கு நல்ல உதாரணம்)

ஒருவனிடம் எந்தவிதமான காரணமும் இல்லாமல் கருணை காட்டும் குணமுடையவர். தன்னைத்தேடி வருபவர்களுக்கு நல்வழியை மட்டும் காண்பிக்கக்கூடியவர். எப்போதுமே சலனமடையாத மன அமைதி உள்ளவர். உலகிற்கு நன்மை தரும் – காலத்தில் பெய்யும் – அளவான, மழையைப் போன்றவர்.

உலகியல் பற்றைத் தாம் ஒதுக்கி, பிறருக்கும் அதனைப் புரியவைப்பவர்.

இப்படிப்பட்டவர்தான் நல்லகுரு. இவ்விதமான மகான்கள் முன்பு இருந்தார்கள் என்று சொல்வதைவிட, எப்போதும் இருப்பார்கள் என்பதுதான் சத்தியம். நமக்கு அவர்களை அறியவோ, கண்டுகொள்ளவோ இயலவில்லை. நம் அறிவு அதற்கு உதவவில்லை. வேகமான உலகியல் செயல்களால் அவர்கள் கண்டுகொள்ளப்படுவதில்லை.

அந்த குருவின் உதவியுடன் சாத்திரங்களை அறியவேண்டும். அவை எல்லையற்றவை.

தொகுப்பு:

வடுவூர் நாராயணன்



நம்முடைய வாழ்நாள் மிகக் குறைவு. அறியவேண்டியவை ஏராளம். அறிய விடாமல் செய்ய அநேகம் தடங்கல்கள். தடங்கல்களுக்கு வருந்தாமல் அதனை வெற்றி கொள்ளவேண்டும்.

விவேகம் என்பது எது? ஆசைகளுக்கு அடிமையாகி, பல செயல்களைச் செய்தபின் வேதனைப்படுவதை விட அதனைத் தொடக்கத்திலேயே இனம் கண்டு, ஆசைகளை, அகற்றுவதுதான் விவேகம். இந்தச்செயல் தானாக வராது. அதற்கு ஒரு நல்ல குரு உதவவேண்டும். வழிகாட்ட வேண்டும்.

'நான்' என்ற உணர்வு இயற்கையானது. இந்த உணர்வு உறக்கத்திலும்கூட தொடர்ந்துவரும். "நான் தூங்கிவிட்டேன்" என்று சொல்வதில் ''தூங்கியது யார்?'' என்று சிந்திக்கும்பொழுது தான் ஞானம் வெளிப்படும்.

'நான்' புத்தியின் சாட்சி. நல்ல புத்தி என்பது உணர்வுகளின் தெளிவு. தெளிவு தானாகப் பிறக்காது. அதற்குத்தான் ஒரு குரு வழி காட்டவேண்டும்.

இந்த "நான்" ஜாதி, இனம், மொழி, நாடு, கோத்திரம், ஆகியவற்றை நேசிக்காது. இவற்றுக்கு அப்பாற்பட்டது. இந்த "நான்" என்ற சொல்லிற்குப் பெயர் இல்லை, வடிவம் இல்லை, குணமில்லை, குறைகளும் இல்லை.

இந்த உடல், இந்த "நான்" என்பதை ஏற்றுக்கொண்ட ஒரு வேடம். நடிகன் வேடத்தை எப்போதும் ஏற்றுக் கொள்வதில்லை. மேடையை விட்டுக் கீழே வரும்பொழுது வேஷம் கலைகிறது. அதுபோல குருவின் உதவியால் ஆன்மாவின் உருவம் காட்டப்படும்பொழுது உலகியல் வேடம் மெல்லக் கலையும்.

'பொன்' நெருப்பில் இட்டால் தூய்மையாகும். மனம் ஒரு பொன் போன்றது. அதனை, குருவின் நல்வழி என்ற தீ, தூய்மையாக்கும்.

ஒரு பொருளைப்பற்றிக் கேட்பதைவிட, அதனைப்பற்றி அதிகம் சிந்திக்க வேண்டும். தியானத்தில் முதல்படி இது. மனத்தால், வாக்கைக் கட்டுப்படுத்தவேண்டும். மனத்தை புத்தியில் சேர்க்கவேண்டும். புத்தியை மகாகுரு காட்டிய பாதையில் செலுத்தினால் ஆன்ம அறிவு ஏற்படும். தெளிவு தெரியும்.

இருளில் ஒரு சாதாரண வைக்கோற்பிரி நம் அறியாமை காரணமாக பாம்பு என்று நம்மை நினைக்க வைக்கிறது. ஞானம் என்ற ஒளி (பகல்) வரும்பொழுது அது வைக்கோல் என்ற தெளிவு பிறக்கிறது. அங்கு பாம்பு இல்லை, எப்போதும் இல்லை, இருக்கப்போவதும் இல்லை. நம் நினைவு மாயையில் அகப்பட்டு பாம்பாக நினைக்கத் தூண்டியது. அந்த மாயை பகல் என்ற ஒளியில் வெற்றி கொள்ளப்படுகிறது. இருள் அறியாமையைத் தூண்டுகிறது. ஒளி ஞானத்தை உருவாக்கித் தருகிறது.

ஆழ்ந்து தூங்கும் ஒருவனிடம் "நீ உறங்கிய வேளையில் உன் பக்கத்தில் நான் இருந்தது தெரியுமா?" என்று கேட்டால், அவன் தெரியாது என்பான். இந்த உதாரணம் மிகச்சிறந்தது. இங்கு ஒரு தரையில்தான் அவன் உறங்கினான். ஆனால் உறக்கம் அவனை உலகிலிருந்து பிரித்து, வேறாகக் காட்டுகிறது. உறங்கும் பொழுது அவன் உலகுடன் இல்லை. பின் எங்கே? அதுதான் ஞானம்.

பற்றற்ற நிலை இதுதான். இந்த நிலையை அடைந்தவன் தரித்திரன் ஆனாலும், கோடீஸ்வரன். எப்போதுமே மகிழ்ச்சியாக இருப்பவன். வேதனை விஷம் இவனைத் தீண்டாது.



இவனுக்குத் துணை வேண்டாம். ஆனால் பலவான். எல்லாப் பொருள்களிலும் சமநோக்கு உடையவன். அவனைப் பொறுத்தவரையில் இன்பமும் ஒன்றுதான், துன்பமும் ஒன்றுதான். மழையும் ஒன்றுதான், வெயில், பனி எல்லாமே ஒன்றுதான்.

இந்த நிலையை உணர்த்த ஒரு சிறு உதாரணம் போதும். நீரில் விழுந்த பனிக்கட்டி அப்படியே காலங்காலமாக, கரையாமல் மிதப்பதில்லை. மெல்ல நீரில் கரைந்து தனித்தன்மையை இழந்து, நீரோடு நீராகிவிடுகிறது. ஒரு கையளவு கடல்நீரை எடுத்து, இதுதான் கரைந்த பனிக்கட்டியின் நீர் என்று சொல்ல இயலாது. ஆன்மா ஒரு பனிக்கட்டி. பிரம்மம் ஒரு கடல். பிரம்மக்கடலில் விழும் ஆன்மா என்கிற பனிக்கட்டி கரைந்து கலந்துவிடுகிறது. அல்லது பிரம்மமாகிவிடுகிறது. (அகம் பிரம்மாஸ்மா) அல்லது கடலோடு கடலாகிறது. இதுவே அத்வைதத்தின் மூலக்கூறு.

இந்த அறிவினைப் பெற்ற பிறகு எல்லையற்ற மகிழ்ச்சி ஏற்படுகிறது. அளவு கடந்த இன்பம் ஏற்படுகிறது.

இந்நிலை கோடியில் ஒருவருக்குத் தானாக வரும். மற்றவர்களுக்கு? நல்ல குருவின் வழிகாட்டுதலில் வரலாம்!

(வடமொழியில் உள்ள விவேக சூடாமணியின் சாரம்)

★★



 தஞ்சை பெரிய கோயில் போட்டோ: தேவமணி ரஃபேல்

# கண்டறியாதன காட்டும் கயிலாசநாதர்

## டாக்டர் இரா. கலைக்கோவன்

திருச்சிராப்பள்ளி – சென்னை நெடுஞ்சாலையில், திருச்சிராப்பள்ளியிலிருந்து இருபது கிலோ மீட்டர் தொலைவிலுள்ள சிறுகனூருக்குத் தென்கிழக்கில் அமைந்துள்ளது திருப்பட்டூர். வளமையற்ற இச்சிற்றூரை அடையச் சிறுகனூர் காவல் நிலையத்தை ஒட்டித் திரும்பும் மண் சாலையில் ஐந்து கிலோ மீட்டர் நடக்க வேண்டும். அரிதாகவே பேருந்துகள் செல்லும் தமிழ்நாட்டின் எண்ணற்ற சிற்றூர்களுள் திருப்பட்டூரும் ஒன்று. திருப்பிடவூர் என்று கல்வெட்டுகளில் குறிக்கப்படும் இச்சிற்றூரில் நான்கு பழங்கோயில்கள் உள்ளன. இவற்றுள் வழிபாட்டில் இருப்பது பிரும்மபுரீசுவரர் திருக்கோயில் ஒன்றுதான். இத்திருக்கோயில் வளாகத்தின் வடபுறத்தே பல்வேறு சிறுகோயில்களை அடுத்துத் தனிப்பெருங் கோயிலாய்க் கயிலாசநாதர் கோயில் காட்சி தருகிறது.

திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் முற்றிலும் பல்லவர் கலை முறையில் அமைந்திருக்கும் ஒரே கற்றளியாக இக்கயிலாசநாதர் கோயிலைத்தான் குறிப்பிட முடியும். இது விமானமும் முகமண்டபமும் கொண்ட பல்லவர் காலக் கோயிலாகும். நான்கு தளங்களைக் கொண்டுள்ள இதன் விமானம், தள அமைப்புகளில் நாகரமாகவும், கிரீவ, சிகர அமைப்புகளில் திராவிடமாகவும் உள்ளதால் இதைக் கலப்பு விமானமாகக் கொள்ளலாம். இதன் கீழ்த் தளம் கிழக்கு மேற்காக 5.19மீ. அளவும், தெற்கு வடக்காக 5.13மீ. அளவும் கொண்டமைந்துள்ளது.

93 செ.மீ உயரமுள்ள துணைத்தளத்தின் மீது 1.03மீ உயரமுள்ள தாங்குதளம் அமைந்துள்ளது. காஞ்சிபுரத்து முக்தேசுவரம், உத்தரமேரூர் சுந்தரவரதப் பெருமாள் கோயில் போன்ற பல்லவக் கோயில்களை விட கயிலாசநாதர் கோயிலின் துணைத்தளம் எண்ணிக்கையில் அதிக உறுப்புகளைக் கொண்டுள்ளது. இத் துணைத்தளத்தின் கண்டபாதங்கள் சிற்பங்களேதுமின்றி வெறுமையாக உள்ளன. ஜகதியின் முகப்பு பெருமுத்துகளை வரிசையாகப் பதித்தாற் போன்றதோர் அலங்கரிப்பைப் பெற்றுள்ளது. இது வேறெந்தப் பல்லவக் கோயிலின் துணைத் தளத்திலும் காண முடியாத சிறப்பாகும்.

உபானத்தின்மீது தொடங்கும் தாங்குதளம், பத்திப் பிரிப்புடன் பாதபந்தமாக அமைந்துள்ளது. இங்கும் கண்டபாதங்களில் சிற்பங்களேதும் இல்லை. அதற்கு மாறாக ஜகதியில் சிங்க முகங்கள் இடம் பெற்றுள்ளன. ஜகதியின் மேலும் கீழும் பெரு முத்துவரிகள் அமைய, இடைப்பட்ட பகுதி கண்டம் போலப் பாதங்களாகவும் இடைவெளிகளாகவும் பிரிக்கப்பட்டுள்ளது. பாதங்களில் காணப்படும் கருக்கணிகள் சுந்தரவரதப் பெருமாள் கோயிலின் துணைத்தளக் கருக்கணிகளை ஒத்தமைந்துள்ளன. இடைவெளிகளில், அமர்ந்த சிங்கங்கள் காணப்படுகின்றன. இதுபோல், அமர்ந்த சிங்கங்கள் கொண்ட ஜகதிப் படையை வேறெந்தப் பல்லவக் கட்டுமானத்திலும் காணமுடிவதில்லை.

மேற்குப் புறத் தோற்றம்



தாங்குதளத்தின் குமுதம் அனைத்து முகங்களிலும் செங்குத்தான முத்து வரிகளாலும் அவற்றுக்கிடைப்பட்ட சிறு சதுரங்களாலும் அழகுபடுத்தப்பட்டுள்ளது. தாங்குதளத்தின் மீது எழும் சுவர்ப்பகுதி ஐந்து பத்திகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஓரங்களில் கர்ணபத்திகளும், நடுவில் பெருஞ் சாலைப் பத்தியும் அமைய, இடைப்பட்ட பகுதிகளில் சாலைப் பத்திகள் உள்ளன. இந்த ஐந்து பத்திகளுக்கும் இடைப்பட்ட ஒடுக்கங்களில், மேற்கிலும் கிழக்கிலும் கர்ணபத்திகளை அடுத்தமைந்துள்ள ஒடுக்கங்கள் மட்டும் திறப்புகளாக விடப்பட்டுள்ளன. பத்திகள் ஒவ்வொன்றும், அவற்றின் பக்கங்களில் நான்முக அரைத் தூண்களால் அணைக்கப்பட்டுள்ளன. இவ்வரைத் தூண்கள் சதுரத் தளங்களில் அமர்ந்துள்ள சிங்கங்கள் மற்றும் யாளிகளின் மேல் எழுகின்றன. இச்சதுரத் தளங்களின் முப்புறத்தும் தாமரைப் பதக்கங்கள். வழக்கமான பல்லவப் பதக்கங் களிலிருந்து மாறுபட்டு அமைந்துள்ள இப்பதக்கங்களைப் பிற பல்லவக் கோயில் சிங்கத் தளங்களில் காண முடிவ தில்லை என்பது குறிப்பிடத்தக்கது. யாளித்தூண்கள் சுவர்த்திருப்பங்களில் மட்டுமே அமைந்துள்ளன.

கர்ணபத்திகளின் அணைவுத் தூண்களுக்கு இடைப்பட்ட சுவர்ப் பகுதிகளில் கைகளில் மலர்களுடன் கூடிய ஆடவர் சிற்பங்கள் காணப்படுகின்றன. தெற்கில், ஆலமர் அண்ணலின் வலப்புறமுள்ள கர்ணபத்தியில் மட்டும் நாகராசர் இடம் பெற்றுள்ளார். சாலை மற்றும் பெருஞ்சாலைப் பத்திகளின் அணைவுத் தூண்களுக்கு இடைப்பட்ட சுவர்ப்பகுதிகளில் ஆழமான கோட்டங்களும், கோட்ட அணைவுத் தூண்களும் அமைக்கப்பட்டுள்ளன. நான்முக அரைத்தூண்களாய், சதுரபாதத்தில் எழும் இவ்வணைவுத் தூண்கள் மேலுறுப்புகளை முறையாகப் பெற்று உத்திரத்தில் முடிகின்றன. இவற்றின்மேல் வலபியும் அதன்மேல் கோட்டம் முழுமைக்குமாய் மகரதோரணமும் காட்டப்பட்டுள்ளன.



ஊர்த்வஜாநு கரணக் கோலத்தில் சிவபெருமான்

இம் மகரதோரணங்கள் காஞ்சிபுரம் கயிலாசநாதர் கோயில் மகரதோரணங்களை ஒத்தமைந்துள்ளன. ஓரிணை மகரங்களும், அவற்றின் வாய்வழி வெளிப்படும் தோரண வளையமும், மகரங்களுக்கு இடைப்பட்ட நெற்றிப் பகுதிச் சிற்பமும் என அமைந்திருக்கும் இத்தோரணங்களின் சிற்பங்கள் பல்லவர் காலச் சிற்றுருவச் சிற்பத் திறம் காட்டுவனவாகும்.

பெருஞ்சாலைக் கோட்டங்களில் தென்புறம் ஆலமர் அண்ணலும், மேற்கில் லிங்கோத்பவரும் வடக்கில் ஊர்த்வஜாநு கரணக் கோலத்தில் சிவபெருமானும் இடம் பெற்றுள்ளனர். தமிழகத்தின் வேறெந்தப் பல்லவர் கோயிலிலும் ஊர்த்வஜாநு கரணத்தில் சிவபெருமானின் ஆடற்கோலம் காணப்படவில்லை என்பது இங்கு நினைவுகூரத் தக்கது. ஆலமர் அண்ணலின் இருபுறத்தும் உள்ள ஒடுக்கங்களில் மூன்று அடுக்குகளில் கந்தர்வர்களும் கின்னரர்களும் முனிவர்களும் காட்டப்பட்டுள்ளனர். இவர்களுடன் சிங்கங்களும் உள்ளன. முனிவர்களுள் வலப்புறம் உள்ள இருவரும் முழு நிலையில் காணப்படுவதால் பல்லவர் கலைத்திறம் அறிய இச்சிற்பங்கள் பேருதவியாகின்றன. இவர்தம் அமர்நிலை தஞ்சாவூர் ராஜராஜீசுவரத்து ஓவியங்களில் பின்பற்றப்பட்டிருப்பது இங்குக் கருதத்தக்கது. இவர்களுள் இளையவராயிருப்பவரின் தோற்றமும் மெய்ப்பாடுகளும் குறிப்பிடத்தக்கன. இங்குள்ள சிற்பங்களுள் மிகுந்த சிறப்புக்குரியதாய் இதைக் கொள்ளலாம்.

லிங்கோத்பவரை அடுத்த ஒடுக்கங்களில் வலப்புறம் நான்முகனும் இடப்புறம் விஷ்ணுவும் காட்டப்பட்டுள்ளனர். இவர்களுக்கு மேற்புறத்திலும் கந்தருவர் இடம் பெற்றுள்ளனர். சாலை மற்றும் கர்ணபத்திகளுக்கு இடைப்பட்ட தென்புற ஒடுக்கங்களில் பிச்சையுகக்கும் பெம்மானும், இராவணர்க்கு அருளும் அண்ணலும் இடம்பெற்றுள்ளனர். வடபுற ஒடுக்கங்களில் இயமனை அழித்தவர், கிராதார்ச்சுனர், தனித்த நிலைச் சிவபெருமான், சிவனும், விஷ்ணுவும் எனச் சிற்பங்கள் அமைந்துள்ளன.

ஆதிதளக் கூரையுறுப்புகளில் வலபி பூதவரியுடன் அமைந்துள்ளது. கபோதம் இணைக்கூடுகளுடனும், கூடுகளின் குழிவுகள் மனித முகங்களுடனும் உள்ளன.

ஆதிதளக் கூரை மீதமரும் மேலுறுப்புகளான கர்ணகூடம், சாலை, பெருஞ்சாலை ஆகிய அனைத்தும் வழக்கமான மூன்றங்கங்களுக்கு மாறாக ஆறங்கங்கள் பெற்று அமைந்துள்ளன. இம்மாற்றம் பனைமலைக் கோயிலிலேயே காணப்படுவதாகும். இது பின்னாளில் சோழர்களாலும் தொடரப்பட்டது. இச்சாலைகள், கர்ணகூடங்கள் ஆகியவற்றின் சுவர்க் கோட்டங்களிலும் இவற்றுக்கிடையிலுள்ள ஒடுக்கங்களிலும் மேலுள்ள நாசிகைகளிலும் பல்வேறு சிற்பங்கள் காணப்படுகின்றன. இவற்றுள் பெரும்பான்மையன சிதைந்துள்ளன.

இக்கூரையுறுப்புகளுக்குப் பின்னால் விமானத்தின் இரண்டாம் தளம் அகலம் குறைவான அமைப்புடன் எழுகிறது. இரண்டிற்கும் இடையே சுற்றி நடந்துவர வாய்ப்பாகத் திருச்சுற்று அமைந்துள்ளது. இவ்வமைப்பு சாந்தார விமானங்களில் மட்டுமே இயலுவதாகும். திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் காணக் கிடைக்கும் ஒரே சாந்தார விமானமாக இதைக் கூறலாம். இரண்டாம் தளத்தின் மேல் கர்ணகூடங்களும், சாலைகளும் மட்டுமே கூரையுறுப்புகளாய், வழக்கமான மூன்றங்கங்களுடன் அமைந்துள்ளன. பெருஞ்சாலை விடுபட்டுள்ளது. இதன் பின்னெழும் மூன்றாம் தளம், சுற்றுக்கு இடமின்றி அகலத்தில் மேலும் குறுகுவதால், மூன்றாம் தளக் கூரையுறுப்புகளாய்க் கர்ண கூடங்களும் அவற்றின் இடையில் ஒரு சாலையும் மட்டுமே காணப்படுகின்றன. இவற்றின் பின்னெழும் நான்காம் தளக் கூரையின் மீது நாற்புறமும் நந்திகள் அமர நடுவில் திராவிட கிரீவமும், மேலே திராவிட சிகரமும், அதன் மேல் வேசர தூபியும் அமைக்கப்பட்டுள்ளன. கிரீவத்தின் எட்டு நாசிகைகளிலும் சிதைந்த நிலையிலான சிற்பங்கள் உள்ளன.

விமானத்தின் ஆதிதளமான கருவறை சாந்தார முறைப்படி இரண்டு சுவர்களுடன் கட்டப்பட்டிருப்பதால் இவ்விரு சுவர்களுக்கும் இடைப்பட்ட பகுதி உள்திருச்சுற்றாய் அமைந்துள்ளது. இச்சுற்றின் மேற்பகுதி பலகைக் கற்களால் மூடப்பட்டுள்ளது. கருவறை கிழக்கு மேற்காக 2.91 மீ. நீளமும் தென் வடலாக 2.84 மீ. அகலமும், 2.43 மீ. உயரமும் கொண்டமைந்துள்ளது. இதன் மேற்பகுதி உள்ளீடின்றி கற்களைச் சிறிது சிறிதாக முன் நகர்த்தி, மேல் விட்டத்தைக் குறைத்துக் குறுக்கி உயர்த்திக் கொண்டு போகும் கட்டுமான முறையில் அமைக்கப்பட்டுள்ளது. ராஜராஜீசுவரம் போன்ற பெருங்கோயில்களிலும் இம்முறையே பின்பற்றப்பட்டுள்ளமை இங்குக் கருதத் தக்கது. இதைக் 'கதலிகா கரண முறை' என்று கூறுவர். கருவறையில் 1.43 மீ. உயரமுள்ள ஆவுடையாரற்ற தாராலிங்கம் காணப்படுகிறது.

கருவறையின் முன், கிழக்கு மேற்காக 2.90 மீ. நீளமும் தென் வடலாக 2.15 மீ. அகலமும் கொண்டுள்ள முகமண்டபம் அமைந்துள்ளது. இதன் வட, தென் சுவர்கள் உட்புறத்தே வெறுமையாக உள்ளன. நடுவில் திறப்பாக


கோயிலின் தெற்குத் தோற்றம்

உள்ள இதன் மேற்குச் சுவரில் திறப்பின் இருபுறத்தும் வாயிற்காவலர்கள். இத்திறப்பே திருச்சுற்றுக்கும் கருவறைக்கும் வழியாக உள்ளது. 2.20 மீ. உயரமும், 1.73 மீ. அகலமும் கொண்டமைந்துள்ள முகமண்டப முன் வாயிலையொட்டி ஐந்து படிகள் உள்ளன. பிடிச்சுவர்களின் பக்கங்களில் யாளிகள் காட்டப்பட்டுள்ள இப்படிகள் பல்லவர் அமைப்பல்ல. முக மண்டபத்தின் முன் வாயிலையொட்டி இருபுறத்தும் வாயிற்காவலர்கள் உள்ளனர். இவ்விருவரும் நான்கு கைகளுடன் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. முக மண்டபத்தின் தென் சுவரில் இரு கோட்டங்களும், வட சுவரில் இரு கோட்டங்களும் உள்ளன. இக்கோட்டங்களில் முறையே நந்திதேவர், பிள்ளையார், சிவபெருமான், நந்தியணுக்கர் ஆகிய இறைவடிவங்கள் காட்டப்பட்டுள்ளன. இவற்றுள் சிவபெருமானின் சிற்பம் குறிப்பிடத்தக்கது. முத்தலையீட்டி உள்ளது. வலப் பின்கை சிதைந்துள்ளது. இடக்கைகளில் முன்கை இடுப்பிலிருக்கப் பின்கையில் பாம்பு. சிவபெருமானின் இருபுறத்தும் கீழ்ப்பகுதியில் அடியவர்கள். மேலே வலப்புறத்தில் பாயும் குதிரையும் இடப்புறத்தே பாயும் சிங்கமும் காட்டப்பட்டுள்ளன. இது போன்றதொரு சிற்ப வடிவம் வேறெந்தப்பல்லவர் கோயிலிலும் இதுவரை கண்டறியப்படவில்லை என்பது இங்கு எண்ணத்தக்கது. இச்சிற்பத்தின் பின்புலம் அறிய ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

முகமண்டபத்தின் வாயிலுக்கு மேலே யானைத் திருமகள் தொகுதி சுதையுருவங்களாய்க் காட்டப்பட்டுள்ளது. அமைப்பு முறை, ஆடையணிகலன்கள், உடன் கூட்டத்தினர் கொண்டு இதைப் பிற்கால இணைப்பாக நிறுவலாம். முகமண்டபத்தின் முன்னே பெரு மண்டபம் ஒன்று பின்னாளில் கட்டப்

பட்டுள்ளது. இதன் தூண்களின் அமைப்பு கொண்டு இதைப் பதினாறாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டதாகக் கொள்ளலாம். இவ்வளாகத்திலுள்ள பிற திருமுன்களில் காணப்படும் துணுக்குக் கல்வெட்டுகளும் இதை நிறுவுகின்றன.

கயிலாசநாதர் கோயிலின் முன்னே பிற்கால மண்டபமொன்றில் பல்லவ நந்தி இடம் பெற்றுள்ளது.

இக்கோயிலைப்பற்றித் தம்முடைய நூலொன்றில் விரிவாக எழுதியுள்ள திரு.கூ.ரா. சீனிவாசன், இக்கோயில் கலப்புக் கலை முறையில் கட்டப்பட்டிருப்பதாகவும் இதைக் கட்டிய சிற்பாசிரியர் பல்லவ முறைகளுடன், உள்ளூர் மற்றும் எல்லையோரக் கட்டுமானச் சிந்தனைகளையும் கலந்து கட்டியிருப்பதாகவும், இங்கு அமைந்துள்ள சிற்பங்களுக்கு மாறுபட்ட ஆகமப் பள்ளி முறைகளை அவர்கள் பின்பற்றியிருக்கலாமென்றும் கூறுகிறார்.

இதற்குரிய சான்றுகளாக அவர் காட்டும் சிற்ப அமைவுகளுள் யானையை அழித்த மூர்த்தியும் ஒன்று. இச்சிற்பம் காஞ்சிபுரம் கயிலாசநாதர் கோயிலிலும், இறவாதான் ஈசுவரத்திலும் இடம் பெற்றுள்ளது. இரண்டாவ தாக அவர் சுட்டும் லிங்கோத்பவரும் காஞ்சிபுரம் கயிலாசநாதர் கோயிலில் இடம் பெற்றுள்ளது. கஜலட்சுமி தொகுதி பல்லவர் காலத்ததே அல்ல. ஊர்த்வஜாநு சிவ மூர்த்திக்குள்ள எட்டுக் கைகள் எல்லோராச் சிந்தனை என்னும் திரு.கூ.ரா. சீனிவாசனின் கருத்து சரியன்று. காஞ்சிபுரம் கயிலாசநாதர் கோயிலில் உள்ள குஞ்சிதக் கரண மூர்த்திக்கும், பனைமலையில் உள்ள குஞ்சிதக் கரணமூர்த்திக்கும் எட்டுக்கைகள் இருப்பதை இங்கு நினைவு கூர வேண்டும், சாளுக்கிய இராட்டிரகூடச் சிந்தனையாக அவர் குறிக்கும் இராவண அருள் மூர்த்தியும் காஞ்சிபுரம் கயிலாசநாதர் கோயிலில் இடம் பெற்றுள்ளவர்தான்.

இக்கோயிலின் சிற்பங்களுள் புதுமையாக உள்ளவை குதிரையும் சிங்கமும் கொண்ட சிவமூர்த்தியும், ஊர்த்வஜாநு கரணத்திலுள்ள சிவமூர்த்தியும் தான். இவை போன்ற புதுமையான சிற்பங்கள் பலகோயில்களில் காணப்படுகின்றன. இவை தவிர்த்த ஏனைய சிற்பங்கள் அனைத்தும், பிற பல்லவக் கோயில்களில் காணப்படுபவையே. கட்டட அமைப்பிலும் பனைமலைக் கோயில், காஞ்சிபுரம் கயிலாசநாதர் கோயில், உத்திரமேரூர் சுந்தரவரதப் பெருமாள் கோயில் ஆகியவற்றின் தொடர்ச்சியையும் பதிவுகளையுமே இங்குக் காணமுடிகிறது. அதனால் இக்கோயில் திரு.கூ.ரா. சீனிவாசன் கூறியிருப்பதுபோல் கலப்புக் கலை முறையில் அமைந்த கோயில் அன்று, முற்றிலும் பல்லவக் கலைமுறையில் அமைந்த கோயிலே என்றும், இதன் சிற்பாசிரியர்கள் தொண்டை நாட்டுக் கலைச் சிந்தனைகளையே பின்பற்றியுள்ளனர் என்றும், மாறுபட்ட ஆகமப்பள்ளி முறைகளை அவர்கள் இங்குப் பின்பற்றியிருப்பதற்கான சான்றுகள் ஏதும் இல்லை என்றும், ஒவ்வொரு சிற்பாசிரியருக்கும் இயல்பாக எழக்கூடிய சில புதிய சிந்தனைகளின் விளைவுகளையே இக்கோயிலின் தனித்துவ அமைப்புகள் காட்டுகின்றன என்றும் உறுதிபடக் கூறலாம்.

## காலைப்பெண்

புதுவயல் செல்லப்பன்



தேரிலே, வான மென்னும்
தெருவிலே, பவனி செல்லும்
சூரியன் மெல்ல மெல்லச்
சுடர்க்கதிர்க் கரத்தி னாலே
ஏரியில் பொற்பா ளத்தை
எறிந்துபின் நகைத்தி ருக்கக்
காரிருட் திரையை நீக்கிக்
காலைப்பெண் எட்டிப் பார்த்தாள்!

அவள்ஒளி முகத்தைக் கண்ட
அழகிய புள்ளி னங்கள்
உவகையில் அமுத கான
ஊற்றினால் நன்னி ராட்ட,
அவிழ்கிற இதழ்க ளாலே
அற்புத மணந்தெ ளித்துப்
புவனமே வியக்கு மாறு
பூமகள் வாழ்த்துச் சொன்னாள்!

காலையின் வரவைக் கண்ட
காசினி மாந்தர் இன்பச்
சோலையாய் வாழ்வை மாற்றத்
தொடங்கினர் உழைப்பி னாலே!
வேலையில் முனைப்புக் காட்டி
விரைவுடன் முடித்து வெற்றி
மாலைகள் கோடி சூடி
மகிழ்ந்தனர் பெருமை யாலே!

# திருவிளக்கின் அணிவகுப்பு

தீபம் என்றால் விளக்காகும்.
ஆவளி என்பது ஓர்வரிசை
தீபா வளியே, வரிசைகளாய்த்
திகழும் விளக்கின் அணிவகுப்பு!

சின்னச் சின்ன அகல் விளக்கு!
சிற்பம் போலச் சிலவிளக்கு!
அன்ன விளக்கு, கிளிவிளக்கு!
அழகாய்த் தொங்கும் சரவிளக்கு!

பாவை விளக்கு, குடவிளக்கு!
மாவில் விளக்கு, மணிவிளக்கு!
காடை விளக்கு, காமாட்சி
கடவுள் விளக்கு, அற்புதமாம்!

வெள்ளி விளக்கு, எவர்சில்வர்
விளக்கு, மெழுகு விளக்குகளாம்!
வெண்கல விளக்கு, வெறும் இரும்பு
விளக்கும் உண்டு! ஒளிதருமே!

பொன்னில் விளக்கு, பூவிளக்கு!
புதுப்புது வகையில் பலவிளக்கு!
இன்னும் நூறு வகையினிலே
இருக்கும் விளக்கு வியப்பாகும்!

விளக்கின் ஒளியில் பேரிருளும்
விலகி ஓடி ஒளிந்ததுவே!
கலக்கம் நீக்கும் ஒளிவெள்ளக்
காட்சிச் சிறப்பு என்சொல்வேன்?

தீபாவளியாம் திருநாளில்
தீமை இருளை விலக்கிடுவோம்.
சேவை முலம் ஏழைகளும்
சிரிக்கச் செய்வோம்! ஒளிதருவோம்!

வத்சலன்

# சேது கொடுத்த பரிசு

சேது ராமன் அந்தப் புங்க மரத்தடியில் ஒரு சோக ராமனாக உட்கார்ந்திருந்தான்.

"சே. இந்தத் தீபாவளி என் பிறந்த நாளில் வந்து என் பெருமையைக் குலைக்கிறதே!" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான், சேது.

அவனுடைய பிறந்தநாள் அக்டோபர் முப்பதாம் தேதி. இந்த ஆண்டு தீபாவளித் திருநாள் அக்டோபர் முப்பதில் வருகிறது. அது எப்படி சேதுவின் பெருமையைக் குலைக்க முடியும்?

சேது கோவை நகரில் உள்ள ஒரு தொழிலதிபரின் ஒரே ஒரு செல்லத் திருமகன். அவன் செல்வத் திருமகன் என்பது சொல்லாமலே தெரியும். அவன் சேரன் நகரில், மேட்டுப்பாளையம் சாலையில் உள்ள மேனிலைப் பள்ளியில் ஒன்பதாம் வகுப்புப் படிக்கிறான். அதே வகுப்பில் காளிராஜும் கனேசனும் படிக்கின்றனர். இருவரும் சேதுவைப் போலவே செல்வக் குடும்பத்தில் பிறந்த செல்லக் குழந்தைகள். அத்தோடு இருவரும் சேதுவைப் போலவே அக்டோபர் மாதத்தில் பிறந்தவர்கள். காளிராஜ் அக்டோபர் 16ஆம் தேதி பிறந்தவன். கனேசன் அக்டோபர் 20இல் பிறந்தவன். மூவரும் பிறந்த நாளில் வகுப்பு மாணவர்களுக்கு விதவிதமான இனிப்பைத் தந்து தம் செல்வச் சிறப்பை நிரூபிப்பது வழக்கம்.

இந்த ஆண்டு காளிராஜ் வகுப்பு மாணவர்களுக்கு ஒரு கிட்கேட் வேஃபர்சும் ஒரு பந்து முனைப் பேனாவும் வழங்கினான். கனேசன் ஒரு கிட்கேட்டுடன், ஒரு ஜெம்ஸ் பாக்கெட்டும், ஒரு பந்து முனைப் பேனாவுடன், ஒரு உயர்ரகப் பென்சிலும், வழங்கினான். மாணவர்கள் கனேசன்தான் கலியுகக் கர்ணன் என்று கொண்டாடினார்கள்.

சேது விட்டுவிடுவானா?

அவன் இரட்டை கிட்கேட்டும், இரண்டு ஜெம்ஸ் பாக்கெட்டும் தந்து, ஐந்து வண்ணத்தில் எழுதும் ஐந்து பந்துமுனைப் பேனா அடங்கிய பாக்கெட்டும் கொடுத்து, அந்த ஆண்டில் மிகச் சிறந்த பிறந்த நாள் பரிசு தந்த பெருமையைத் தட்டிச் செல்ல விரும்பினான். அதைத் தன் நண்பன் சேகரிடம் தெரிவித்தபோது அவன் "அது சரி சேது. உன் பிறந்த நாளான அக்டோபர் முப்பது விடுமுறை நாள். அன்று தீபாவளி" என்று நினைவுபடுத்தினான்.

சேது திடுக்கிட்டான். தனது பிறந்த நாளில் தீபாவளி வந்ததற்கு வருந்தினான். தீபாவளிக்கு முதல் நாள், அல்லது தீபாவளிக்கு மறுநாள் பிறந்தநாள் பரிசு வழங்கலாம் என்று நினைத்தான். ஆனால் அதுவும் முடியாது என்பது தெரிந்தது. அந்தப் பள்ளியில் விடுதி மாணவர்கள் நிறைய இருந்தனர். அவர்கள் வசதிக்காக, அக்டோபர் 29,30,31 ஆகிய மூன்று நாள்கள் விடுமுறை விடுகின்றனர். நவம்பர் 1, 2 சனி, ஞாயிறு வழக்கமான விடுமுறை. எனவே மொத்தம் ஐந்து நாள் விடுமுறை. சேது தன் பிறந்த நாளை விடுமுறைக்கு முன்போ, பின்போ நடத்துவது பொருத்தம் இல்லை என்று நினைத்தான். அதனால்தான், "சே.. இந்தத் தீபாவளி என் பிறந்த நாளில் வந்து என் பெருமையைக் குலைக்கிறதே!" என்று வருத்தப்பட்டுக் கொண்டான்.

பள்ளி முடிந்து அனைவரும் வெளியேறி வெகு நேரமாகிவிட்டது. சேது மரத்தடியை விட்டு எழுந்திருக்காமல் சோகச் சுமை அமுத்த அப்படியே கற்சிலை போல உட்கார்ந்திருந்தான். அப்போது "சேதுத்தம்பி" என்னும் தேன் குரல் ஒன்று கேட்டது. சேது திரும்பிப் பார்த்தான். அங்கே பள்ளியின் தோட்டக்காரனும் காவல்காரனுமான செங்கோடன் நின்றிருந்தான். செங்கோடனுக்கு வயது ஐம்பது. என்றாலும் அவன் செய்யும் வேலை ஒரு கடைநிலை ஊழியம் என்பதால் முதல் வகுப்பு மாணவனும் "செங்கோடா" என்று உரிமையோடு அழைப்பார்கள்.

"என்ன செங்கோடா?"

"என்ன சேதுத்தம்பி! இன்னும் புறப்படலையா? விளையாட்டு முடிஞ்சுட்டுது.. பசங்கெல்லாம் போயிட்டாங்க. உன்னோட கார் வந்து ரொம்ப நேரம் காத்துகிட்டிருக்குது. ஆனா நீ இன்னும் புறப்படலை. ஏன் தம்பி? என்ன விஷயம்? ஏதோ இழக்கக் கூடாத ஒன்றை இழந்தது போல இத்தனை வருத்தத்தோடே இருக்கிறியே!"

செங்கோடன் கேட்டான். சேது சில நொடி அமைதியாகச் செங்கோடனைப் பார்த்தான். பிறகு தன் சோகத்தை இவனிடம் சொன்னால் கொஞ்சம் ஆறுதல் பிறக்கும் என்று நினைத்தான். உடனே தன் பிறந்தநாள் சிறப்பு தீபாவளியால் பாழானதை விவரித்தான்.

சேது சொன்னதை முழுக்கக் கேட்ட செங்கோடன் "தம்பி! உன் பிறந்த நாளில் நீதரும் பரிசை வாங்கிக் கொண்டு பிரமிச்சு உன்னைப் பாராட்டணும். அவ்வளவு தானே?" என்று கேட்டான்.

'ஆமாம்' என்பதற்கு அடையாளமாக சேது தலையாட்டினான்.

"தம்பி! நான் சொல்றமாதிரி இந்த முறை செஞ்சு பாரு. உன்னை ரொம்பப் பேர் பிரமிச்சுப் பாராட்டுவாங்க. அதோட உன் வகுப்பு மாணவர்கள் என்ன, உன் பள்ளி மாணவர்கள் அத்தனை பேரும் பாராட்டுவாங்க. ஆசிரியர்கள் பாராட்டு வாங்க. பெற்றோர் பாராட்டுவாங்க. நீ செய்யறதைக் கேள்விப் படற அத்தனை பேரும் பாராட்டுவாங்க."

செங்கோடன் சொல்லச் சொல்ல, சேதுவின் முகம் செந்தாமரையாய் மலர்ந்தது.

"செங்கோடா, சொல், நான் என்ன செய்யணும்? என் பிறந்த நாளை எப்படிக் கொண்டாடணும்?"

செங்கோடன் நிதானமாக விளக்கினான். முதலில் செந்தாமரையாய் மலர்ந்த சேதுவின் முகம் அந்த மலர்ச்சியை இழந்தது. செங்கோடன் பள்ளியை ஒட்டிய முள் வேலிக்குப் பின்னே இருந்த இடத்தைச் சுட்டிக் காட்டி, தான் முதலில் கூறியதையே மீண்டும் விளக்கமாகக் கூறி வற்புறுத்தினான்.

சேது யோசித்தான். "செங்கோடன் சொன்னபடி செய்யலாமா?.. உம்...

டாக்டர் பூவண்ணன்

பள்ளியோ ஐந்துநாள் விடுமுறை! ஒரு மாறுதலுக்காக செங்கோடன் சொன்னபடி செஞ்சா என்ன? செஞ்சு பார்ப்போம்''

சேது ஒரு முடிவுக்கு வந்து விட்டான். அது சரி, செங்கோடன் என்ன சொன்னான்?

பள்ளியில் அடுத்த சில நாள்களில் மாணவர்கள் "சேது! உன் பிறந்த நாளில் தீபாவளி வருதே. நீ வகுப்புக்குக் கலர் டிரஸ் போட்டுகிட்டு வந்து பிறந்த நாள் பரிசை எங்களுக்கு எப்ப கொடுக்கப் போறே? தீபாவளிக்கு முன்னாடியா? பின்னாடியா?'' என்று கேட்ட போது, "இந்த ஆண்டு பள்ளியில் நான் பிறந்த நாளைக் கொண்டாடப் போவதும் இல்லை. பரிசு தரப் போவதும் இல்லை'' என்று கூறிவிட்டான். மாணவர்களில் சிலர் வியப்படைந்தார்கள்! பலர் ஏமாற்ற மடைந்தார்கள்.

காளிராஜும் கணேசனும் தாங்கள் தந்த பிறந்த நாள் பரிசை விடச் சிறந்த பரிசு தர முடியாமல், சேது இப்படி மாறிவிட்டதாகக் கூறிப் பெருமைப் பட்டார்கள்.



தீபாவளி நாள் வந்தது.

அதிகாலையில் சேதுராமன் புத்தாடை அணிந்து கொண்டு, தன் பெற்றோருடன் ஒரு காரில் புறப்பட்டான். கார் அவன் பள்ளியை நெருங்கியது.

தீபாவளி நாளில் பள்ளி மூடியிருக்குமே! சேதுவுக்கும் இது தெரியுமே!

தெரியும். பள்ளியை நெருங்கிய கார், பள்ளிக்குச் செல்லவில்லை. அதே மேட்டுப்பாளையம் சாலையில் பள்ளியை ஒட்டியிருந்த அநாதைக் குழந்தை விடுதிக்குள் நுழைந்தது. விடுதியையும் பள்ளியையும் ஒரு முள்வேலி பிரித்தது. விடுதியில் தாய் தந்தையற்ற, ஆதரிக்கும் உறவினரும் இல்லாத பரம ஏழைகளான சிறுவர் சிறுமியர் சுமார் நாற்பது பேர் இருந்தனர். அவர்கள் தீபாவளியை எப்போதும் மற்றவர்களைப் போல மகிழ்ச்சியோடு கொண்டாடியதில்லை. சுதந்தர நாளில் ஓர் அரிமா சங்கத்தார் வந்து கொடியேற்றி, சாக்லெட் கொடுத்து, காலை சிற்றுண்டி கொடுத்துச் செல்வது ஒன்றுதான் அவர்கள் பெற்ற பெரும்பேறு.

அந்தக் குழந்தைகள் மிகமகிழ்ச்சியுடன் விடுதியின் முன்னே கூடியிருந்தனர். சேதுவின் கார் உள்ளே நுழைந்து, நின்றதும், சேதுவும் பெற்றோரும் இறங்கியதும் கைதட்டி வரவேற்றனர்.

சேது வணக்கம் செய்தபடி சென்றான்.

சேது வீட்டு வேன்கள் இரண்டு முன்னரே அங்கே வந்திருந்தன. வேலையாட்கள் வந்திருந்தனர்.

விடுதியின் முன்னே ஒரு மேசையில் பெரிய கேக் இருந்தது. அதில் பதினைந்து சிறிய மெழுவத்திகள் எரிந்தன. சேது அவற்றை ஒரே மூச்சில் பாதி அணைக்க விடுதிச் சிறுமியர் 'ஹாப்பி பர்த்டே டு யூ...'' பாட, சேது கேக்கை வெட்டினான். விடுதிச் சிறுவர்க்கு வழங்கினான். பின் விடுதிக்குள் மாணவர்களுக்குப் பிறந்த நாள் விருந்து நடந்தது. சேதுவும் பெற்றோரும் அவர்களுடன் உட்கார்ந்து சாப்பிட்டார்கள். விருந்து முடிந்ததும், முன்பு பள்ளி மாணவர்க்கு வழங்க நினைத்த இரட்டை கிட்கேட்டும், இரண்டு ஜெம்ஸ் பாக்கெட்டும், ஐந்து வர்ணத்தில் எழுதும் ஐந்து பந்து முனைப் பேனாக்களும் அடங்கிய பிளாஸ்டிக் பையை ஒவ்வொருவர்க்கும் அவனே வழங்கினான். அதைப் பெற்ற மாணவர்களின் முக மலர்ச்சியும், "நன்றி அண்ணா'' என்று மனம் குளிரக் கூறிய சொற்களும் அவனை மகிழ்வித்தன.

சேது சுற்றுமுற்றும் பார்த்தான். விடுதியின் ஒரு மூலையில் செங்கோடன் நிற்பதைப் பார்த்தான். இத்தனை மகிழ்ச்சிக்கும் காரணம் அவன் தானே?

"தம்பி! இந்தப் பள்ளியிலே படிக்கிற அத்தனை பேரும் வசதியானவங்க. அவங்களுக்குப் பிறந்த நாள் பரிசு தார்றதிலே என்ன லாபம்? இந்த முறை இதோ இந்த வேலிக்கப்பால் இருக்கிற அநாதைக் குழந்தைகளுக்கு உன் பிறந்தநாள் பரிசைக் கொடு. அவர்கள் வாழ்க்கையில் இப்படிப்பட்ட பரிசை முதல் முதலா உங்கிட்டேருந்து தான் வாங்கறவங்களா இருப்பாங்க. அவங்க அத்தனை பேரும் நீ தர்ற பரிசைக் கண்டு பிரமிச்சு உன்னை உண்மையான உள்ளன்போடு பாராட்டுவாங்க. இருக்கிறவங்களுக்கே தர்ற நீ இல்லாதவங்களுக்குத் தந்து பாரு! அவங்க மகிழ்ச்சி உன்னையும் மகிழ்விக்கும்''

செங்கோடன் அன்று கூறியது இன்று உண்மையாகி விட்டது.

சேது பெற்றோரிடம் பிறந்த நாள் பரிசை, அநாதை விடுதிக் குழந்தைகளுக்கு, தனது பிறந்த நாளான தீபாவளி நாளில் தரலாம் என்று கூறியபோது, அவர்கள் மகிழ்ந்து போனார்கள். பணக்காரப் பையன்களுடன் போட்டி போட்டுப் பரிசுப் பொருள்தரும்




தம்மகன் எளியவர்க்குத்தர விரும்புவதை அறிந்து பெருமையடைந்தார்கள்.

"சேது! நீ பரிசு கொடு. நான் அத்தனைக் குழந்தைகளுக்கும் தீபாவளி விருந்து கொடுக்கறேன்" என்றாள், தாய்.

தந்தையோ. "உன் பிறந்தநாள் கேக்கையும் அந்த விடுதிக்கே கொண்டு வருகிறேன். அதையும் நீ அங்கேயே வெட்டி விழா கொண்டாடலாம்" என்றார் தந்தை.

இதோ அவன் பிறந்த நாள் சீரும் சிறப்புமாக நடக்கிறது.

சேதுவின் கண்கள் முதன்முறையாக. ஆனந்தத்தால் கலங்கின.

தீபாவளி விடுமுறை முடிந்த பிறகு. பள்ளிக்குச் சென்றான் சேது. போகும் போது. வரும்போது. விடுதி வேலிக்கு அருகே நின்ற விடுதி மாணவர்கள். 'சேது அண்ணா வணக்கம்! சேது அண்ணா குட்மார்னிங்!' என்று குரல் கொடுத்ததைக் கண்டு பிற மாணவர்கள் திகைத்தனர். அவர்களுக்குப் பெருமையோடு விளக்கமளித்தான். சேது.

கேட்ட மாணவர் திகைத்து நின்றனர்.

"சேது! அப்படின்னா இந்த முறை எங்களுக்கு உன் பிறந்த நாள் பரிசு இல்லையா?" - ஒருவன் கேட்டான்.

"இல்லை! இந்த முறை மட்டுமில்லை. இனி எப்போதுமே இல்லை! இனிமே ஒவ்வொரு வருடமும் என் பிறந்தநாள் விழா அநாதை மாணவர் விடுதியில் தான் நடக்கும்! பிறந்த நாள் பரிசும் அந்த மாணவர்களுக்குத்தான்" - பூரிப்போடு சொன்னான் சேது.

அதைச் சற்று தூரத்திலிருந்து கேட்ட செங்கோடனும் பூரித்தான்.

●●

## ஊருகள் இவை!
## ஆறுகள் எவை?

கீழே சில ஊர்கள் பெயர்கள் உள்ளன. இவற்றில் பாயும் ஆறுகளின் பெயர்கள் எவை?

1. ஸ்ரீநகர்
2. சூரத்
3. டெல்லி
4. திருச்சி
5. கோவை
6. வேலூர்

## விடைகள்

1. ஸ்ரீநகர் - ஜீலம்
2. சூரத் - தபதி
3. டெல்லி - யமுனை
4. திருச்சி - காவிரி
5. கோவை - நொய்யல்
6. வேலூர் - பாலாறு

## சொல்லைச் சொல்!

'சென்னைப் பட்டினம்' என்னும் பெயரில் உள்ள எழுத்துகளைக் கொண்டு ஆறு சொற்களை உண்டாக்க முடியுமா?

விடை:

முடியும்.
1. செடி
2. செட்டி
3. செப்பம்
4. படி
5. பனை
6. பட்டி




நல்லெண்ணெய் எல்லாம் க்ளோஸ்.
இந்த வாணலி எண்ணெய் எல்லாம்
கொட்டிக்குங்க.
வடை, முறுக்கு, சீடை எல்லாம்
சுட்டது. கம,கமன்னு இருக்கும்.

# நீலாம்பர பண்டிட்

நா. ராமச்சந்திரன்

நெஞ்சு திக்திக்கென்று அடித்துக் கொண்டது. இதயம் நின்று போகாத தோஷம் தான். கண்கள் ஒளியிழந்து பயத்தின் மிகுதியில் மிரள மிரள விழித்துக் கொண்டிருந்தன. சட்டென்று முடிவெடுத்து காரியத்தில் இறங்க வேண்டிய சமயமது. ஆனால் என்ன செய்வது? என்று தான் நீலாம்பர பண்டிட்டிற்குத் தெரியவில்லை.

நீலாம்பரர் குடும்பம் காஷ்மீர் பள்ளத்தாக்கில் ஸ்ரீநகர் பகுதியில் குடியேறியது குறைந்தது நான்கு தலைமுறைகளாவது இருக்கும்.' அவருடைய முப்பாட்டனாருக்குப் பாட்டனார் சம்பு சாஸ்திரிகள் தமிழ் நாட்டைச் சார்ந்தவர். பழைய தஞ்சாவூர் ஜில்லாவைச் சேர்ந்த ராதாமங்கலம் அவருடைய பூர்விகம். அவர் தாம் முதன் முதலில் காஷ்மீரத்திற்குச் சென்றவர். ஏதோ ஒரு யாகத்திற்குக் கோஷ்டியாக வந்தவர். மறுபடியும் தென்னாட்டிற்குத் திரும்பவே இல்லை. வேத சாஸ்திரங்களைக் கற்றுத் தேர்ந்தவரான அவர் காஷ்மீரத்திலேயே நிரந்தரமாகக் குடியேறிவிட்டார். அங்கேயே பண்டித குலத்தைச் சேர்ந்த ஒரு மாது சிரோன் மணியை மணம் செய்து கொண்டு காஷ்மீர வாசியாகி விட்டார்.

அவர் அவருக்குப் பின் வந்த சந்ததியாரில் கனகாம்பர பண்டிட்டின் குமாரர் தான் நீலாம்பர பண்டிட். இருவருமே சம்ஸ்கிருதத்தில் வலலவர்கள். தநதையை விட தனயன் நீலாம்பரர் வட மொழியில் நிபுணர். நாலு வேதங்கள், உபநிடதங்கள், பகவத் கீதை இதிகாசபுராணங்கள் ஆகியவற்றில் நல்ல பாண்டித்யமுடைய அவர், காஷ்மீர் பல்கலைக் கழகத்தில் வடமொழி இலக்கியத்திற்குப் பேராசிரியராக இருந்தார். இந்தியாவில் வடமொழி இலக்கியத்தைப் பற்றி எந்தக் கருத்தரங்கு நடந்தாலும், நீலாம்பரர் அங்கு நிச்சயமாக இருப்பார். கன்னியாகுமரியிலிருந்து காஷ்மீரம் வரை அவர் போகாத இடமில்லை. வாங்காத விருதுகள் இல்லை. இந்தியாவிலுள்ள பல்கலைக் கழகங்கள் அத்துணையும் அவரைக் கௌரவித்து டாக்டர் பட்டம் கொடுத்திருக்கின்றன. வடமொழிப் புலவர்களுக்கு அளிக்கும் மிக உயர்ந்த விருதினை இந்திய அரசு அவருக்கு அளித்திருந்தது.

நீலாம்பர பண்டிட்டின் பெருமையை முழுவதும் சொல்லிமாளாது. அவ்வளவு உயர்ந்த மனிதர் அவர். நாற்பது வயதை எட்டிப்பிடித்துக் கொண்டிருக்கும் புலவர் ஒருவர் இந்த வயதில் இப்படி ஒரு கீர்த்தி சம்பாதித்துக் கொண்டிருப்பது மிக அபூர்வமே.

இந்த கௌரவத்திற்கும் உயர்ந்த பண்பிற்கும் இலக்கணமாகத் திகழ்ந்த பண்டிட்டிற்கு வந்தது சோதனை. இனக் கலவரங்களுக்கும். தீவிர வாதிகளின் பயங்கரங்களுக்கும் காஷ்மீரம் இலக்கானது யாவரும் அறிந்ததே. காஷ்மீர் பள்ளத்தாக்கிலிருந்து பண்டிட்கள் ஜம்முவை நோக்கி ஓடிக்கொண்டிருந்த காலம். வழிவழியாகவும் காலம் காலமாகவும் வாழ்ந்து வந்த பண்டிட்கள் தங்கள் சொந்த மண்ணை விட்டு எப்படி ஓடிப் போவார்கள்? அதுவும் நிரந்தரமாகப் குடிபெயர்வதென்றால் சாத்தியமா?

நீலாம்பரரும் அவருடைய தந்தையும் மட்டுமே ஸ்ரீநகர் பகுதியில் டால் ஏரியின் அருகில் வசித்து வந்தார்கள். ஒரு சிறிய பங்களா. அதைச் சுற்றி ஒரு பெரிய தோட்டம். பங்களா வாசலிலிருந்து சாலையை அடையக் குறைந்தது ஐந்து நிமிடங்களாவது ஆகும். குடியிருக்கும் பகுதி சிறியது; சுற்றி வளைந்திருந்த நிலப்பரப்போ மிகப் பெரியது. அந்தத் தோட்டத்தில் இல்லாத தாவர வர்க்கங்களே இல்லை. எப்போதும் காஷ்மீரப் பூக்கள் பூத்துக் குலுங்கும். சாலைப் பக்கம் வந்தாலோ டால் ஏரி கண்களைக் கவரும் அந்த ஏரியை அலுக்காமல் சலிக்காமல் பார்த்துக் கொண்டிருக்கலாம். காஷ்மீரப் பள்ளத்தாக்கு அழகா அல்லது அதன் தலைநகர் ஸ்ரீநகரம் அழகா அல்லது. அதனுள் அமைந்திருக்கும் டால் ஏரி அழகா? எதைச் சொல்வது? பாமரனும், கவிஞனாகக் கூடிய இடமல்லவா அது? இம்மாதிரியான அற்புதச் சூழ்நிலையில் வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்த நீலாம்பரருக்கும் அவருடைய தந்தை கனகாம்பர பண்டிட்டிற்கும் வந்தது ஆபத்து!

இனக் கலவரம் முற்றி காஷ்மீரப் பண்டிட்கள் நாட்டை விட்டு ஓடிக்கொண்டிருந்த சமயம். பண்டிட் சமூகத்தினர் ஓட வேண்டாம் என்று அரசு எவ்வளவு சொல்லியும் அவர்கள் குடிபெயர்ந்து போவதை அரசு இயந்திரத்தால் தடுக்க முடியவில்லை. தினம் ஒரு கொலை, ஒரு கொள்ளை, கற்பழிப்பு என்று நடந்து கொண்டிருந்தால் சமூகம்தான் என்ன செய்யும்? அரசால் ஒன்றும் செய்ய முடியவில்லை. வாய்கிழிய அறிக்கை விடுவதோடு சரி.

ஸ்ரீநகரில் உள்ள பண்டிட்கள் எல்லாரும் ஓடிவிட்டனர். சொந்த பந்தங்கள் எல்லாம் சிதறிப் போயின. சிலர் ஜம்முவிற்கும், பலர் தில்லிக்கும் இன்னும் சிலர் எங்கேயோ என்று நாளிதழில் தினமும் செய்திகள் வந்த வண்ணமிருந்தன. ஓடிவந்தவர்களையெல்லாம் ஒன்று திரட்டி ஜம்முவில் ஓர் அகதி முகாம் அமைக்கவும்கூட ஏற்பாடாகிவிட்டது. இந்த நிலையில் நீலாம்பரர் என்ன செய்வது என்று தெரியாமல் தத்தளித்தார். தன் உயிர் இல்லாவிட்டாலும். தன் தந்தையின் உயிரையாவது காப்பாற்றியாக வேண்டும்! என்று அவர் சிந்திக்கலானார்.

கனகாம்பர பண்டிட் கண்டிப்பாகச் சொல்லி விட்டார். 'எக்காரணத்தைக் கொண்டும் ஸ்ரீ நகரை விட்டுப் போகக் கூடாது' என்று. 'இந்தப் புண்ய பூமியில் பிறந்து வளர்ந்து. பட்டம்பெற்று, நன்றாகச் சம்பாதித்து சத்புத்ரனான நீலாம்பரனைப் பெற்று வாழ்ந்து கொண்டிருக்கும் நான் இந்தக் காஷ்மீரத்தை விட்டு ஓடுவதா?'

அது ஒருகாலுமில்லை' என்று அடித்துச் சொல்லி விட்டார் அவர். அவரோ நித்யாக்னி ஹோத்ரி. ஒருநாள் கூட அக்னி வளர்த்து யாகம் செய்யாமல் உணவருந்த மாட்டார். ஆசார சீலர். எங்கு ஓடி ஒளிந்து கொண்டு தன் நித்ய கர்மாக்களைச் செய்ய முடியும்?

''நீலாம்பர! எனக்கோ வயதாகி விட்டது. என் உயிரின் மேல் எனக்கு ஆசையில்லை. நீ வேண்டுமானால் எல்லாருடன் ஜம்முவுக்குச் சென்று விடு. என்னால் இந்தப் பூமியை விட்டுவர முடியாது.'' என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டார் கனகாம்பர்.

தகப்பனாரைத் தனியே விட்டு விட்டு தான் மட்டும் உயிர் பிழைக்கப் போவதா? நீலாம்பரர் சொன்னார்: "அண்டை வீட்டுக்காரர்கள் எல்லாரும் போய் விட்டார்கள். நேற்று நடந்த கலவரத்தில் இருபது பேருக்கு மேல் இறந்து விட்டார்கள். நம் பக்கம் கலவரக்காரர்கள் எப்போது வருவார்களோ? அதற்காகத் தான் சொன்னேன். நான் உங்களை விட்டுப் போவதா? அது ஒருகாலும் இல்லை.''

நீலாம்பர பண்டிட் நினைத்ததைப் போலவே நடந்தது. மறுநாள் இரவு ஆயுதம் தாங்கிய பயங்கர வாதிகளோ, தீவிரவாதிகளோ; இனக்கலவரங்களைத் தூண்டி விடுபவர்களோ; யாராய் இருந்தால் என்ன? ஒரு கும்பல் நீலாம்பரரின் தோட்டத்தினுள் புகுந்தது. அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த கனகாம்பர பண்டிட்டை வீட்டினுள்ளிருந்து தரதரவென்று வெளியே இழுத்து வந்து. அவர் ஆசையாய் அருமையாய் வளர்த்திருந்த குல்மோஹர் செடிக்குக் கீழே அவரைத் தள்ளி அவர் 'ஹரே ராம் ஹரே ராம்' என்று சொல்லி முடிவதற்குள் அவரைச் சுட்டு வீழ்த்தி விட்டது. துப்பாக்கிக் குண்டுகளால் துளைக்கப்பட்ட தேகம் அடுத்த நிமிடம் ரத்தத்தில் மிதந்தது. சப்தம் கேட்டு வெளியே வந்த நீலாம்பரர் தன் தந்தை தரையில் சாய்ந்து கிடந்ததைக் கண்டார். கலவரக்காரர்கள் மாயமாய் மறைந்து போனார்கள்.

தந்தையை மெதுவாகத் தூக்கி வீட்டினுள் கொண்டுவந்தார் நீலாம்பரர். கனகாம்பரின் உயிர் பிரியும் சமயம் அது. அவர் ஏதோ முனகிக் கொண்டிருந்தார். நிச்சயமாக அது கடவுளின் செயல்தான். அந்த நிசப்தமான வேளையில் தந்தை முனகியது தனயனுக்கு நன்கு கேட்டது.

"நீலாம்பரா! இனி நான் பிழைக்கமாட்டேன். இந்த உடலை இந்து முறைப்படி சம்ஸ்காரம் செய்'' இதுதான் அவர் சொன்ன கடைசி வார்த்தைகள். நீலாம்பரர் தன் இருகைகளால் தலையில் அடித்துக் கொண்டார். தன் நெற்றியைத் தகப்பனாரின் நெற்றியோடு உரசிக் கொண்டு அழுதார். "நான் எவ்வளவோ சொன்னேனே கேட்டீர்களா? அந்தத் தீவிரவாதிகளுக்கு நம் வீடு ஒரு குறி என்று எனக்கு நன்றாகத் தெரியும். இப்போது நான் என்ன செய்வேன்?'' புலம்பினார் நீலாம்பரர்.

நள்ளிரவு கழிந்து ஒரு சாமம் ஆகிவிட்டது. இனி என்னசெய்வது என்று ஆலோசித்தார் பண்டிட். தகப்பனாரை அவர் எங்கு கொண்டு செல்வது? அவரது இறுதிக் கடன்களை எப்படிச் சாஸ்திரப்படி செய்வது? யோசிக்கலானார் அவர்.

வீட்டிலிருந்து வெளியே வந்தார் பொழுது விடிய இன்னும் சில மணி நேரம் மட்டுமே இருந்தது. சீக்கிரம் முடிவெடுத்தாகவேண்டும் அவர். கைகளைப் பிசைந்து கொண்டு நிற்கிற நேரமில்லை அது. நல்ல வேளையாகக் கலவரக்காரர்கள் அவருடைய காரை ஒன்றும் செய்யவில்லை. விருவிருவென்று தன் தந்தையாரின் உடலைச் சுமந்து கொண்டு காரின் பின் சீட்டில் கிடத்தினார். வீட்டைப் பூட்டிக் கொண்டு காரை 'ஸ்டார்ட்' செய்து சாலையில் இறங்கிவிட்டார்.

என்ன யோசனை செய்தாரோ? மறு நிமிடம் அவருடைய கார் ஜம்முவை நோக்கி விரைந்து கொண்டிருந்தது. இவ்வளவு அமைதியாக இருக்கும் ஸ்ரீ நகரில் தன் வீட்டைத் தேடிப்பிடித்து தன் தந்தையைக் கொலை செய்த கலவரக்காரர்களின் மீது அவருக்குப் பகையுணர்ச்சி ஏற்பட்டது. திட்டமிட்டு அவர்கள் செய்த இந்தக் கொலையோடு அவர்கள் ஒரு போதும் நிறுத்திக் கொள்ள மாட்டார்கள். தன்னையும் அவர்கள் குறி வைத்துக் கொண்டுதான் இருப்பார்கள். அதற்குள் தன் தந்தையின் பிரேத சம்ஸ்காரம் முடிவடைந்து விட வேண்டும். என்று தீர்மானித்துக் கொண்டார் அவர். தந்தையோ சாத்திரப்படி. வித்வத்தாகக் காரியங்கள் செய்யவேண்டுமென்று சொல்லியிருக்கிறார். இடமோ கலவர பூமி. யாரும் வெளியே வராமல் இருக்கிற காலம். இந்த நிலையில் நீலாம்பரர் தந்தையை எங்கே தகனம் செய்வார்? எந்த வேத விற்பன்னர்கள் இறுதிச் சடங்குக்கு வருவார்கள்?

கார் ஸ்ரீநகரப் பகுதியைத் தாண்டி வெளியே வந்து விட்டது. பக்கத்து கிராமம் எங்கேயாவது சென்று விசாரிக்கலாம் என்று நினைத்தார் நீலாம்பரர். அந்த யோசனையிலும் மண் விழுந்தது. ஏனெனில் அப்போதுதான் தெரிந்தது. தூரத்தில் ஒரு ஜீப் தன் காரைத் துரத்திக் கொண்டு வருவது. பண்டிட் தன் காரை வெகு வேகமாகச் செலுத்திக் கொண்டிருந்தார். ஜீப்பும் விடுவதாக இல்லை. அதுவும் மிகவேகமாக சாலையில் வந்து கொண்டிருந்தது. இப்படி பண்டிட்டுடைய காரும், ஜீப்பும் கனவேகமாக எவ்வளவு நேரம்தான் ஓட முடியும்? உண்மையில் நீலாம்பரர் களைத்துப்போனார். அவரைவிட அவர் ஓட்டிவந்த 'அம்பாசிடர்' காருக்கு களைப்பு வந்துவிட்டது போலும்! பெட்ரோல் தீர்ந்துவிட்டதோ அல்லது இன்ஜின் கோளாறோ அந்தக் கார் ஒரு மரத்தின் அருகே நின்று விட்டது.

அடுத்த சில வினாடிகளில் நீலாம்பரரைத் துரத்திவந்த கார் அவர் காரின் பக்கத்தில் வந்து நின்றது. ஒரு குலுக்கலோடு நின்ற அந்த ஜீப்பிலிருந்து தடதடவென்று நான்கு பேர் இறங்கினார்கள் நால்வரும் நல்ல 'மோட்டா' ஆட்கள். ஒவ்வொருவரின் கையிலும் ஓர் ஆயுதம். தலையில் பெரிய முண்டாசு. முகம் முழுதும் அப்படி ஒரு தாடி! வெள்ளையும் பழுப்புமாக பார்ப்பதற்கே பயங்கரமாக இருந்த அவர்களைக் கண்டு நீலாம்பரர் அஞ்சி நடுநடுங்கியதில் வியப்பில்லை.

"காரின் உள்ளே என்ன? எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்?'' என்று அதட்டினான் ஒருவன். அவன் கையில் ஏ.கே.47 துப்பாக்கியொன்று இருந்தது.

நீலாம்பரரின் நா வறண்டு விட்டது. அவருக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. எவ்வளவோ சாஸ்திரங்களைப் படித்தவர். இம்மாதிரியான இக்கட்டான நிலைகளில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று பலருக்கு எடுத்துச் சொல்லியவர். பத்திரிகைகளுக்குப் பக்கம் பக்கமாக எழுதியவர்.

இருந்தும் என்ன பிரயோசனம்? எல்லாம் ஏட்டுச் சுரைக்காய்தான்! நிலைமையை நேரில் சந்திக்கும் போது தானே எல்லாம் விளங்குகிறது? நீலாம்பரரின் கைகள் நடுங்கின. வாய் பேச மறுத்தது. அந்தக் கடுங் குளிரிலும் உடலில் வியர்வை வெள்ளமாகப் பெருகியது.

"என்ன? நான் கேட்கிறேன். நீ பதில் சொல்லாமல் இருக்கிறாய்" என்று அதட்டினான் அவன்.

நீலாம்பரர் எப்படியோ மெதுவாக தைரியத்தை வரவழைத்துக்கொண்டு "என் சகோதரர்களே! என்னை ஒன்றும் செய்து விடாதீர்கள். காரின் உள்ளே இருப்பது என் தந்தையின் சடலம். தீவிர வாதிகளால் அவர் நேற்று கொல்லப் பட்டார். அவருக்கு ஈமக்கடன்கள் செய்ய வேண்டும் என்று எடுத்துப் போகிறேன். என்னைப் போகவிடுங்கள்.." கண்ணீர் மல்க உருக்கமாகக் கதறி துப்பாக்கி வைத்திருந்தவனின் கைகள் இரண்டையும் பிடித்துக் கொண்டார் அவர்.



நால்வரும் வாய்விட்டுச் சிரித்தார்கள். அதில் பட்டாக் கத்தி வைத்திருந்தவன் சொன்னான்: "ரொம்ப வேடிக்கையாக இருக்கிறதே! அவனவன் உயிருக்குப் பயந்து ஓடிக்கொண்டு இருக்கிற சமயத்தில் ஈமக் கடன் செய்ய ஆசைப்படும் காஷ்மீரியை இப்போது தான் நான் பார்க்கிறேன்."

நீலாம்பரர் கைகள் இரண்டையும் தலைக்கு மேல் தூக்கிக் கொண்டு. "சகோதரர்களே! என்னை என்ன வேண்டுமானாலும் செய்து கொள் ளுங்கள். என் உயிரின்மேல் எனக்குக் கொஞ்சம் கூட ஆசையில்லை ஆனால் என் தந்தையின் இறுதிச் சடங்குகளை மட்டும் செய்வதற்கு எனக்கு அவகாசம் கொடுங்கள். அதுவும் இந்து சாத்திரப்படி தகனக்கிரியைகள் செய்ய வேண்டும் என்று என் தந்தையார் விரும்பி யிருக்கிறார். அதை நிறைவேற்றி விட்டால் அவர் ஆன்மா நிச்சயம் சாந்தி யடைந்துவிடும். பிறகு நீங்கள் என்னை என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம்" சொல்லிவிட்டு கண்கள் இரண்டையும் மூடிக்கொண்டார் பண்டிட்.

முண்டாசும் தாடியுமாய் இருந்த நால்வரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள். "அவனவன் போட்டது போட்டபடி ஓடிக் கொண்டிருக்கிற இந்தச் சமயத்தில் நீ உன் தந்தையின் சடலத்தை வைத்துக் கொண்டு சம்பிரதாயப்படி ஈமக்காரியங்கள் செய்யப்போகிறேன் என்று சொல்வது வேடிக்கைதான்" சொல்லிக் கொண்டே 'ஹோ ஹோ' என்று சிரித்தான். ஒரு குள்ள முண்டாசுக்காரன்.

"காஷ்மீரம் எங்களுக்குச் சொந்தம்.. பண்டிட்களுக்கு இல்லை. நீயோ ஒரு பண்டிட் மாதிரி தெரிகிறது. உன்னை நாங்கள் சும்மா விட மாட்டோம்" என்று கூறிக்கொண்டே வந்து நீலாம்பரரை உலுக்கினான் துப்பாக்கி ஏந்தியவன்.

நீலாம்பர பண்டிட்டின் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. தான் சாவது உறுதி என்று அவர் தீர்மானித்துக் கொண்டார். தந்தையின் இறுதிச் சடங்கு முடிந்து அதன் பிறகு இந்தக் கொலைகாரர்கள் தன்னை எது செய்தாலும் அவருக்கு அதில் திருப்தியே. இந்த நிர்மானுஷ்யமான இடத்தில் தன்னையும் இந்த நான்கு கொலைகாரர்களையும் தவிர வேறு யாரும் இல்லை. இப்படி அவர் சிந்தனை சென்று கொண்டிருந்தபோது பளீரென்று மின்னலடிப்பது போல் ஓர் எண்ணம் அவர் மனத்தில் தோன்றியது.

பல மாதங்களுக்கு முன் காசியில் ஒரு "செமினார்" நடந்தது. அதற்குப் பிரதிநிதியாக நீலாம்பர பண்டிட் போயிருந்தார். மற்ற மாநிலங்களிலிருந்து பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். தமிழ் நாட்டிலிருந்து வந்திருந்த வித்துவான் லட்சுமணனும் பத்திரிகையாளர். விக்கிரமனும் நீலாம்பரருக்கு சிநேகமானார்கள். அவர்களுடைய ஆடம்பரமற்ற நடத்தையும் ஆழ்ந்த படிப்பும் நீலாம்பரரை வெகுவாகக் கவர்ந்தன. அவர்கள் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டும் விவாதித்துக் கொண்டு மிருந்தார்கள். அப்போது அவர்கள் சொன்ன ஒருசெய்தி நீலாம்பரரை வெகுவாகக் கவர்ந்தது.

தமிழ்நாட்டில். திருவண்ணாமலையில் யோகிராம்சுரத்குமார் என்பவரைப் பற்றிய செய்தி அது. யோகியாரைப் பற்றியும் அவருடைய மகிமைகள் பற்றியும் வித்துவானும் விக்கிரமனும் கூறக் கூற

அந்த சித்த புருஷரை ஒரு முறையாவது பார்த்து தரிசிக்க வேண்டும் என்ற அவா நீலாம்பரருக்கு ஏற்பட்டது. யோகியார் செய்த அற்புதங்களையெல்லாம் வெகு நாள்கள் தன் மனத்தில் வைத்துக் கொண்டிருந்தார் பண்டிட்

இப்போது இந்த இக்கட்டான சூழ்நிலையில் நீலாம்பரரின் மனத்தில் யோகி ராம்சுரத்குமார் தோன்றினார் யோகியாரை பண்டிட் பார்த்ததில்லை. எனினும் அவருடைய வண்ணப்படத்தை மனத்தில் நிறுத்திக் கொண்டு மனத்திலேயே உருக்கமாக "ராம் சுரத்குமார்ஜி! இப்போது எனக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. என் உயிரைப்பற்றி எனக்குக் கவலையில்லை. என் தந்தையார் பெரிய சாஸ்திரக்ஞர். அவருடைய கடைசி ஆசை அவருடைய பிரேத சம்ஸ்காரம் சாஸ்திரப்படி நடக்கவேண்டும் என்பதே. இராம் சுரத்குமார்ஜி! உங்களை மனதார வேண்டிக் கொள்கிறேன். அதை எப்படியாவது நிறைவேற்றித் தாருங்கள்" மனத்தில் இப்படி பிரார்த்தனை செய்து கொண்டு கண்களில் கண்ணீர் மல்க எதிரில் ராம் சுரத்குமார்ஜி இருப்பதாகவே நினைத்து தடாலென்று கீழே விழுந்து விட்டார். நீலாம்பரர்

நீலாம்பர பண்டிட் கீழே விழுந்தவுடன் தான் அங்கு ஒரு பெரிய் அதிசயம் நடந்தது.

தாடியும் மீசையுமாக இருந்த நால்வரும் முண்டாசுகளை அவிழ்த்துத் தூர எறிந்தார்கள். மீசையைப் பிய்த்துப் போட்டார்கள். அசல் பண்டிதர்களாக மாறி வட மொழியில் பேசத் தொடங்கி விட்டார்கள்.

கண்விழித்த நீலாம்பரர். தன் கண்களை நம்பாமல் திகைத்துப் போனார். நால்வரில் ஒருவர் பேச்சைத் தொடங்கினார்: "பண்டிட்! அவர்களே! நீங்கள் நினைப்பது போல நாங்கள் பயங்கர வாதிகளோ கலவரக்காரர்களோ இல்லை. உயிருக்குப் பயந்து இந்த மாதிரி வேஷம் போட்டுக் கொண்டு ஓடி வந்தவர்கள். உண்மையில் நாங்களும் உங்களைப் போல பண்டிட்களே. நாலு வேதங்களையும் அத்தியயனம் செய்தவர்கள். உங்கள் தந்தையாரின் பிரேத சம்ஸ்காரங்களை விதிப்படி செய்து முடிக்க எங்களுக்கு எல்லாத் தகுதிகளும் உண்டு. முதலில் உங்களைப் பார்த்துப் பயந்து தான் பயங்கரவாதிகள் போல நடித்தோம். இன்று துவாதசி. தகனத்திற்கு உகந்தது. வாரும் பக்கத்து கிராமத்திற்குச் செல்லலாம்."

நீலாம்பர பண்டிட்டின் செவிகளில் தேன் பாய்வதுபோல இருந்தது. யோகி ராம்சுரத்குமார்ஜியை, மனத்தில் தியானித்துக் கொண்டே தன் காரின் பக்கம் சென்று தன் தந்தை கனகாம்பர பண்டிட்டின் முகத்தை அன்புததும்பப் பார்த்தார். ◻◻

## இன்றைய இந்தியா

எஸ். முத்துக்குமரன்



கூட்டுக் குடும்பம் பிரிந்து சிதைந்து
தனித்தனிக் குடும்ப மாகி
நகர வாழ்வும் நாளும் சிதைந்து
அன்பும் பாசமும் மனிதநேயமும்
எங்கே எங்கே எங்கே என்று
தேடும் அளவிற் கின்றை நிலை.
பெண்ணடிமை தனை எதிர்த்தே
அன்று பாடினன் பாரதி நன்றாய்
மக்களாட்சியின் மகத்துவம் பலகி
சொத்திலும் அனைத்துத் துறையிலும் மேன்மை
ஆயினும் இந்திய ஒற்றுமை குறைவே
நல்வழி சென்று காத்திட வாரீர்
அன்னிபெசன்ட்டும் தெரசா அன்னையும்
எங்கோ பிறந்து இங்கு வந்தது
ஆன்மீகச் சிறப்பும் பண்பாடுமன்றோ
மிகப்பெரும் காரணம் புரிந்து நடப்போம்
உழைப்பைத் தந்து நாடு முன்னேற
நேசத்தோடு உரிமை காப்போம்.

## உள்ளதைச் சரியாய்ப் பாரடா

கவிமாமணி இலந்தை சு. இராமசாமி

ஓடிய காலத்தைக் கட்டிப் பிடித்தே
 உட்கார வைத்தவன் யாரடா - அட
 ஓடிப் போனது போனதுதான் - நீ
 உள்ளதைச் சரியாய்ப் பாரடா
பாட எழுந்தவன் பண்ணை மறந்தால்
 பாடக னாக முடியாது - புதுப்
 பாதை நடப்போன் பயமடைந்தாலோ
 பயணம் வெற்றி அடையாது

(ஓடிய..)

மழையே சிறிது தாமத மாக
 வாவென்று அருவி மொழிவதில்லை - இந்த
 மனிதன் மட்டும் வருகிற வளத்தை
 வாரிக் கொள்ள எழுவதில்லை
விழித்திடும் போதே மீண்டும் படுக்கையில்
 வீழ நினைப்பவன் சோம்பேறி
 விடிகிற பொழுது வெற்றிப் பொழுதாய்
 வீறுகள் கொள்வான் அறிவாளி

(ஓடிய..)

கழைக்கூத் தாடி கவனம் குறைந்தால்
 கரணம் தப்பும் மரணமடா
 கவனம் சிதையாக் காரிய மாற்று
 கனிந்த திந்தத் தருணமடா

அழைக்கிற வாய்ப்பை நழுவ விடாதே
 அடிக்கடி அதுவும் வாராது - இந்த
 அகிலமே உன்றன் ஆடு களந்தான்
 ஆடிட வாநீ சோராது

(ஓடிய..)

## பெயர் தெரியாத தேசபக்தன்!

கவிமாமணி இளையவன்

அடையாளம் தெரியும்; ஆனால்
அவன் பெயர் விவரம் ஏதும்
கிடையாது என்னிடத்தில்!

கிளர்ச்சியில் காந்தி சொன்ன
தடைமீறும் போராட்டத்துத்
தழலுக்கும் தடிகளுக்கும்
இடையே கரைந்து போனான்
இவன் ஒருதேசபக்தன்!

அவன் தந்தை யாரோ - ஈன்ற
அன்னையும் யாரோ - மண்ணின்
தவம் என்று சொன்னால் கூடத்
தவறுண்டோ? இந்த நாட்டில்

'அவம் வேறோ? அடிமை வேறோ?
அகற்றுவோம்' என்று தன்னைச்
சவமாக்கிக் கொண்டான் அந்தச்
சரித்திரம் காணாச் செல்வன்!

யார் அந்த தேசபக்தன்?
யார் அந்த இளமை தன்னைப்
போராடு என்று சொல்லிப்
 போக்கினார்? புறநானூற்றில்

சீராடும் குடுமி நீவிச்
 சிறுவனை அனுப்பினாற்போல்
ஏராளத் தாயர் உண்டோ?
 ஏன் இல்லை! இருக்கலாமே!

## பொய்கையிலே சந்திரன்...

அவன்:
பொய்கையிலே சந்திரனை
 புதுநடனம் ஆடவைப்பேன்
வைகையிலே வான்மதியை
 வசமாக ஆடவைத்தேன்.
கைகளிலே வெண்ணிலவைக்
 காண்பதற்கே கொணர்ந்திடுவேன்
செய்கையிலே வீரனடீ
 செண்பகமே, மரகதமே.. (பொய்கை)



அவள்:
கண்களிலே கங்கையினைக்
 காவிரியைக் கொணர்ந்திடுவேன்
மண்குடிசை மாளிகைக்கே
 மன்மதனைக் கொணர்ந்திடுவேன்
கண்குளிரக் காதலனைக்
 கையணைப்பில் அடக்கிடுவேன்..
பெண்குலத்தின் தீபமையா..
 பேரெழிலின் ரூபமையா



இருவரும்:
பொய்கையிலே சந்திரனைப்
 புதுநடனம் ஆடவைப்போம்..
செய்கையிலே காதலினால்
 சிவசக்தி யாடிவோம்..
 சிவசக்தி யாகிடுவோம்... (பொய்கை)

கலாபாரதி

# தமிழன்னை தரிசனம்



கு. சண்முகசுந்தரம்

அன்றொருநாள் மாலையிலே ஆயிரமாய்ச் சிந்தனைகள்
அடுக்கடுக்காய்க் கொப்புளிக்க அலைபாயும் கடலோரம்
நின்றிருந்தேன். அப்போது நித்திரைப் பெண் அரவணைக்க
நீள் விழிகள் இமைமூடி நெடுமணலில் சாய்ந்தேன்.
கன்னித் தமிழணங்கென் கனவினிலே தோன்றி
"கவிதை ஆற்றலும் கற்பனை வளமும் பெற்றே
என்றும் உயர்வடைக" என்றென்னை வாழ்த்தி
என்னிதய வேட்கையை எடுத்துரைக்க ஆணையிட்டாள்.

"முத்துண்டு; பவழமுண்டு; முப்புறம் கடலுமுண்டு.
மூவேந்தர் சிறப்புடனே ஆண்டிருந்த பெருமையுண்டு.
எத்திக்கும் புகழ்பரப்பி இருந்தனர் தமிழரென்றே
எடுத்துரைக்கும் எண்ணற்ற இலக்கியங்கள் இங்குண்டு.
இத்துணை சிறப்புகளும் இருப்பினும் என் நெஞ்சில்
இவையெல்லாம் சிறிதேனும் இன்பத்தைத் தருவதில்லை.
தித்திக்கும் எழில்மிக்க தீந்தமிழ்ச் சொல்லெடுத்து
தமிழன்னை திருவடியில் படைத்தலே எனக்கின்பம்!

சுற்றத்தார் நிறையவுண்டு; சுகம் பெற வழியுமுண்டு.
சுவைமிக மொழி பேசிச் சுவைகூட்ட நண்பருண்டு.
குற்றமொன்று நானிழைத்தால் கூசாமல் திருத்திடவே
குடும்பமே பல்கலைக் கழகமாய் அமைந்ததுண்டு.
கற்றறிந்த பல்லோரின் கனிவான தொடர்புண்டு.
காசினியில் இவையெனக்குக் களிப்பைத் தருவதில்லை.
நற்றமிழை நாள்தோறும் நாவாரப் படிப்பதிலே
நானெய்தும் இன்பமே நல்லின்பம் என்பேன்.

மின்னுகின்ற மேனியிலே மேன்மைமிகு பேரழகும்
மென்மைமிகு காதலெனும் மெய்யுணர்வும் தேக்கியே
மென்மலர்போல் திகழ்கின்ற மெல்லியலார் நல்லுடலை
மெய்யான இன்பமாய் மதிக்கின்றார் மிகப்பலபேர்.
என்னதான் இவையெல்லாம் இன்பத்தைத் தந்திடினும்
இமைப்போதில் மறைகின்ற இயல்பினைப் பெற்றவையாம்.
என்னுயிராம் இன்றமிழில் எழில்மிகு கவிபாடி
இன்புறுதல் ஒன்றே ஏற்றமிகு இன்பமென்பேன்.

பல்லுலகும் புகழ்ந்து பாராட்டி மகிழ்வதுடன்
பாங்குறவே வளர்ந்துவரும் பைந்தமிழர் தாய்மொழியில்
இல்லாத சொல்லே ஏதுமில்லை; ஆயினுந்தான்
ஏனோ பிறமொழிச்சொல் இணைத்தெழுதி நெஞ்சைக்
கொல்லாமல் கொல்லும் கொடிய தமிழ்ப் பகைவர்
குணம் மாறித் திருந்தினாலே குன்றாத இன்பம்" எனச்
சொல்லி முடித்தேன். "நீ சொன்னவை நடக்கும்" என்று
சொல்லியே மறைந்திட்டாள் சுந்தரத் தமிழன்னை.

# என் விழிகளில் நீ வளர்ந்த போது...!

பின்னலூர்
விவேகானந்தன்



என்னை ஈன்றவள்
தன் இரு விழிகளில்
என்னை வளர்த்தாள்!
என்னில் தன்னை
விதைத்தாள்!
சின்ன விழிகளில்
பட்டதை யெல்லாம்
பார்த்தேன் பரவசம்
தொட்டதைச்
சேர்த்தேன் புதுச்சுகம்!

என்னிரு விழிகளில்
விழுந்தவை சில
கண்ணீர் தந்தன - சில
காட்சியாய் நின்றன!
சுரக்கும் கருணையால்
சோகம் தவிர்க்கும்
சுந்தரப் பெண்ணின் விழி!
அரக்கத்தனம் மிக்க
ஆணினத்தையே அன்பால்
உருக்கும் தாயின் விழி!
பரந்த உலகின்
பார்வை பட்டதனால்
பாதிப்புக்கு
உள்ளானேன் - பெண்
சாதிக்கு(ம்)
முள்ளானேன்.

வீழ்ந்த மழைத்துளி
அத்தனையுமே
விளை நிலம் போய்ச்
சேருமா? அம்மா,
விரும்பிய வளம்
சேர்க்குமா?
வானில் தப்பியே
விழுந்த ஒரு துளி
சிப்பியில் முத்தானது - அது
சேமித்த சொத்தானது.

சிப்பிக்கே இத்தனைச்
சித்து தெரியுமென்றால்
எனக்கா தெரியாது?
அன்பே!
உனக்கு நிகரேது!
மண்ணில் புதைத்தால்
மாசுபடும் என்பதனால்
கண்ணில் உனை
விதைத்தேன்!
கண்ணீர் விட்டே
வளர்த்தேன்!
ஊனில் உயிர்த்தேன்
உள்ளவரை
மானுடம் வளர்ப்பேன்
மண்ணில் என்றும்
நிலைப்பேன்!



# உள் மனுஷி

**- ராஜ்**

உள்ளத்தில் ஏற்பட்ட கொந்தளிப்பால் - அதனால் உடலில் தோன்றிய உஷ்ணத்தால் - ரத்தினத்திற்கு அந்த ஏ.ஸி. ரூமிலும் வியர்த்துக் கொட்டியது.

"இன்னொரு தடவெ, அவ பேச்செ எடுக்காதெ. அவ என் அம்மா இல்லை. அவ என்னெ விரும்பிப் பெத்துக்கலை. வேணாம், அவ பேச்சே எடுக்காதெ.. நம்ப நட்பு வீணாயிடும்."

எதிரே இருந்த வேதாசலத்தைப் பார்த்துக் கத்தினார்.

ஏ.ஸி. அறையில் அவர் கத்தியது வெளியே ஆபீஸிலிருந்த மற்றவருக்கும் கேட்டிருக்க வேண்டும். பலர் தங்கள் மானேஜிங் டைரக்டர் அறையைப் பார்த்துக் கொண்டிருந்தது கண்ணாடிக் கதவின் மூலமாகத் தெரிந்தது. வேதாசலத்திற்கு அவமானமாக இருந்தது. இருந்தாலும் அவர் விடுவதாக இல்லை.

"இல்லை ரத்தினம்! கொஞ்சம் பொறுமையா யோசிச்சுப் பாரு. சரி அவ உன் அம்மா இல்லை. வேறே யாரோ. யாரோ ஓர் அம்மா. சாகக்கிடக்கிறா. அதுக்கு முன்னாடி உன்னெப் பாக்கணும்னு ஆசைப்படறா.. அப்படி நினைச்சுக்கோயேன்.. அதனால ஒரு மனிதாபிமானத்தோட அந்த அம்மாவை வந்து பாரேன்..."

அவர் சொல்வதைக் கேட்டு ரத்தினத்தின் நெற்றி நரம்புகள் புடைத்தன. கோபம் பொங்கியது. இருந்தாலும் அடக்கிக் கொண்டார். பொறுமையாகப் பேசினார். "வேதா! போதும். இதுக்கு மேலே பேசாதெ.. தயவு செஞ்சு.. இப்போ என் ரூமை விட்டுப் போயிடு.."

வேதாசலத்தின் முகம் கறுத்துச் சிறுத்தது. தலையைக் கவிழ்த்த வண்ணம் வெளியேறினார்.

அவர் தன் அறையை விட்டுப் போனதும் ரத்தினம் தன் மேஜைமீது இருந்த கண்ணாடி டம்ளரிலிருந்த தண்ணீரைக் குடித்தார். உடல் உஷ்ணம் கொஞ்சம் குறைந்தது போலிருந்தது.

தான் உட்கார்ந்திருந்த குஷன் நாற்காலியில் பின்புறம் சாய்ந்து கொண்டார். பென்சில் ஒன்றை எடுத்து மேஜையின் மீது லேசாகத் தட்டினார்.

மேஜையின் மீதிருந்த - தான் பல வருடங்களாக வைத்துப் போற்றி வருபவரின் - படத்தைப் பார்த்தார். 'இந்த தெய்வம் மட்டும் எனக்கு உதவி, என்னைக் காத்து வளர்த்திரா விட்டால், நான் எவ்வளவு கேவலப் பட்டுப் போயிருப்பேன்?' எதிரே இருந்த பெரியவர் இராதாகிருஷ்ணனின் அருள் சுரக்கும் முகம் இன்றும் அவர் கண்களில் ஈரக்கசிவை ஏற்படுத்தியது.

அவர் சிந்தனை பின்னோக்கிச் சென்றது.

✤ ✤ ✤

அவர்கள் வீடு என்பது ஓர் இருட்டு அறை. அதில் ரத்தினமும் அவன் தாயும் தான்.

அம்மா அறையில் நீளவாட்டில் படுத்துக் கொண்டால், அவன் குறுக்கு வாட்டில் படுத்துக்கொள்வான். அவ்வளவு சிறிய அறை அவர்களுடையது.

முதலில் அவனுக்கு அந்தக் குறை தெரியவில்லை.

ஒரு நாள் பள்ளிக்கூடத்தில் ஒரு பையன் தன்னைக் கேட்ட கேள்வியைத் தன் தாயிடம் கேட்டான்.

"ஏம்மா, நம்ப அப்பா எங்கேம்மா?"

"உங்க அப்பா சிங்கப்பூரிலே இருக்காருடா. நெறையப் பணம் சேர்த்துண்டு வந்துடுவாருடா"

அதற்கு அடுத்த நாள் அவன் தாயிடம் கேட்டான். "அம்மா! நீ சொன்னதை பிரகாஷ்கிட்டெ சொன்னேம்மா. ஆனா அவன் சொல்றான். நம்ப அப்பா சிங்கப் பூர்லே இருக்கார்னு சொல்றதெல்லாம் பொய்யாம். சிங்கப்பூர்லெ உங்க அப்பா இருந்தா உங்கம்மா ஏன் பட்சணம் செஞ்சு கடையில விக்கறதுக்குக் குடுக்கறாங் கன்னு கேக்கறான். அது ஏம்மா?"

அவன் தாய் அவனைப் பாசத்துடன் இழுத்து அணைத்தபடி சொன்னாள் "உங்கப்பா ஒரு நாளைக்கு எல்லாப் பணத்தையும் சேர்த்துக் கொண்டு வருவாருடா. அப்புறம் பாரேன்"

அதை அவன் நம்பினான். தன் ஒரே நெருங்கிய நண்பனான வேதாசலத்திடமும் சொன்னான். ஆனால் சில வருடங்களுக்கே அவனிடம் அந்த நம்பிக்கை இருந்தது.

அப்புறம் அவனுக்கே ஏதோ சந்தேகம் வந்தது. கடைகளுக்கு பட்சணம் வாங்கிப் போகும் இந்த மணி ஐயர் யார்? அம்மாவிடம் ஏன் இவர் மணிக்கணக்காக உட்கார்ந்து பேசுகிறார்! அம்மா ஏன் எந்த உதவி வேண்டுமானாலும் அவரையே கேட்கிறாள்?

நாள்கள் வளர்ந்தபோது அவனுடைய சந்தேகமும் அவற்றுடன் வளர்ந்து ஓர் அருவருப்பான உண்மை போல் தோன்றியது. அக்கம்பக்கத்தினர் ஜாடை மாடையாக அம்மாவையும் மணி ஐயரையும் சேர்த்துப் பேச ஆரம்பித்து காலப்போக்கில் வெளிப்படையாகப் பேச ஆரம்பித்த போது அவன் மனமுடைந்து போனான்.

ஒரு நாள் அம்மாவுடன் ஏதோ தகராறு செய்து கொண்ட ஓர் ஆள், "ஏன், உன் மணி ஐயரைத்தான் கேட்டுப்பாரேன்" என்று வாசலில் கத்தியதைக் கேட்டு அவன் துடித்துப்போனான்.

அதற்கு மேல் அவனால் அந்த வீட்டில் இருக்க முடியவில்லை. "ஐயோ, இந்த அம்மா என்ன கேவலமான ஜன்மம்? சே. இந்த அம்மா இருக்கட்டும். அவள் வயிற்றில் பிறந்த நான் என்ன கேவலமான பிறவி?

அவனுக்குத் தன் ஜனனத்தில் தோன்றிய அழுக்கைப் போக்க ஒரே வழிதான் தெரிந்தது.

✤ ✤ ✤

சரியான பாழுங்கிணறு.

'இதிலெ தான் போன வருஷம் கணக்குப் பிள்ளையின் பொண்டாட்டி குதித்துச் செத்துப் போனாள்'.

குதிப்பதற்காக விளிம்பிற்கு வந்து விட்டான். 'அவ்வளவு தான் அவனைப்பற்றிய அவலம் அவனுடன் அழிந்து விடப்போகிறது'.

"தம்பி"

அவன் திடுக்கிட்டுத் திரும்பினான்.

ஊர்ப் பெரியவர் இராதாகிருஷ்ணன் நின்றிருந்தார். பெருத்த பணக்காரர்.

அவர் தோளில் முகம் புதைத்து அழுதான். மனத்தில் உள்ளதையெல்லாம் கொட்டித் தீர்த்தான்.

அவர் ஆறுதலாக அவனைத் தடவிக் கொடுத்தார்.

அதுதான் ஆரம்பம். அவர் அவனைத் தன்னுடைய வீட்டிலுள்ள அவுட் ஹவுஸிலே தங்க வைத்தார். சோறு போட்டார். துணி எடுத்துக் கொடுத்தார். படிக்க வைத்தார். அவனை நல்ல விதமாய் வளர்த்து ஆளாக்கினார். இன்று அவன் ஒரு செல்வனாக ஒரு தொழிலதிபராக ஆனதெல்லாம் அவரால்தான். ஆனால் அவர் தான் அவனுடைய முழு வளர்ச்சியைக் காண்பதற்குள் அமரராகி விட்டார்.

அன்று பாழுங்கிணற்றில் குதிக்கப் போனவன் அவரால் அழைத்துப் போன பிறகு தன் தாயின் வீட்டுப் பக்கமே திரும்பவில்லை.

தன் தாயைப்பற்றி நினைக்கும் போது அவனுக்கு மணி ஐயர் நினைவு வந்து குமட்டியது. சே! என்ன மோசமானவள் அம்மா என்ற அடுத்த சிந்தனை எழுந்து தன் தாயிடம் அவனுக்கு வெறுப்பை வளர்த்தது.

✤ ✤ ✤

வேதாசலத்துடன் அவர் பேசி ஒரு மாதம் ஆகியிருக்கும்.

அன்று தன் அறைக்குள் நுழைந்த வேதாசலத்தைப் பார்த்ததுமே அவருக்கு எரிச்சலாக இருந்தது.

"என்ன? மறுபடியும் தூதா?" ஆத்திரத்துடன் கேட்டார்.

"அதற்கெல்லாம் அவசியமில்லை. அந்த அம்மா போயிட்டாங்க"

"ஐயோ" ரத்தினத்தின் உள்மனம் அவரையும் மீறி வீறிட்டது. தான் ஆடாவிட்டாலும் தன் சதை ஆடும் என்பார்களே? அதுதான் இதுவா?

ஒரே நிமிடம். ஒரே நிமிடம். அவர் நெகிழ்ந்து போய் பலவீனப்பட்ட மனத்தைக் கட்டுப்படுத்திக் கல்லாக்கிக் கொண்டார்.

உணர்ச்சி எதையும் வெளிப்படுத் தாமல் "ஓ" என்றார்.

வேதாசலம் அவர் முகத்தைப் பார்க்க விரும்பாதவர் போல் அவர் பக்கம் திரும்பாமலேயே பேசினார்.

"நான் இப்போ எதுக்கு வந்திருக் கேன் தெரியுமா?"

ரத்தினத்திடம் பதில் ஏதும் எதிர்பார்க்காதது போல் அவரே தொடர்ந்தார்.

"அம்மா ஒரு கடுதாசி என் பேருக்கு எழுதி வெச்சிட்டுப் போயிருக்காங்க. தனக்குப் பிறகு தன் அறையிலிருக்கிற பெட்டியை நீ தான் வந்து எடுத்துட்டுப் போகணும்னு அதிலே எழுதி யிருக்காங்க."

ரத்தினம் தன் நாற்காலியிலிருந்து 'விருட்'டென எழுந்து கொண்டார். "எனக்கு நெறைய வேலெ இருக்கு வேதா. நாம்ப அப்புறமாப் பேசலாம்."

முதல் முறையாக வேதாசலம் கோபப்பட்டார். "இதோபாரு ரத்தினம். நீ நடந்துக்கிறது சரியில்லை. இப்போ செத்துப் போன அந்த அம்மாவோட ஆசையை இப்பக்கூட நீ நிறைவேத்தி வைக்கலைன்னா, நீ மனுஷனே இல்லை."

ரத்தினம் சிரித்தார். "பரவால்லை."

அவருடைய அலட்சியப் பேச்சு வேதாசலத்தை மேலும் கோபமடையச் செய்தது.

"டேய் ரத்தினம்!" அவர் தன் பள்ளிக்கூட நண்பனை. பல வருடங்களுக்குப் பிறகு இப்போது தான் அப்படி அழைத்தார். 'நம்ம ஊரிலே ரொம்பப் பேருக்கு அந்த அம்மாவோட காணாமல் போன புள்ளே நீ தான்னு தெரியாது. நீ மாத்திரம் என் கூட வந்து அவ கடைசி விருப்பப்படி நடக்க லைன்னா நான் ஊரில் எல்லார்கிட்டேயும் சொல்லிடுவேன். அதுவும் இந்த ஊர்லே இருக்கற பேப்பர்காரங்க கிட்டேயும் சொல்லிடுவேன். ஒரு சின்ன ஊர்லே பிரபலமாறது சுலபம். அதே மாதிரி பேர் கெடறதும் ரொம்ப சுலபம். அப்புறம் உன் இஷ்டம்."

வேதாசலம் கிளம்பினார் "வேதா! நில்" தாழ்ந்த குரலில் ரத்தினம் கூப்பிட்டார்.

✤ ✤ ✤

அதே வீடு. அதே அறை. அதே இருட்டு.

கோயில் கர்ப்பக்கிருகத்தில் நுழைவது போல் இருந்தது ரத்தினத்திற்கு.

அந்த வெறுமை அவர் மனத்தை என்னவோ செய்தது.

'இதே அறையில் அம்மாவும் நானும் குறுக்கும் நெடுக்குமாகப் படுத்துக் கொண்டிருக்கையில் அம்மா என் தலையை வருடியபடி ஏதேதோ கதை சொல்வாளே?'

'ஐயோ அம்மா. அந்த அறியாப் பருவ சுகம் அப்படியே இருந்திருக்கக் கூடாதா? பிறகு ஞானம். பிறந்து சிந்தனையில் விஷம் கலந்து உன்னை வெறுத்து விலகி விட்டேனே?'

"அம்மா" அவருக்குக் கதறி அழவேண்டும் போலிருந்தது.

அடக்கிக் கொண்டார்.

'கூடாது. கூடாது. இவள் ஒன்றும் நல்லவளில்லை. தாயாக மதிக்கப்படும் தகுதியை இழந்தவள்'

அவர் தன் மனத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள முயன்றார்.

அறையின் ஓரத்தில் வைக்கப் பட்டிருக்கும் கடாய் இல்லை. நோயில் படுக்குமுன் அம்மா அதை யாரிடமாவது கொடுத்திருக்க வேண்டும். அவர் அம்மாவை அந்தக் கடாய் பக்கத்தில் உட்கார்ந்து எண்ணெயில் ஏதாவது பலகாரம் சுட்டுக்கொண்டிருப்பதைத் தான் நாள் முழுவதும் தன் சிறுவயதில் பார்த்திருக்கிறார். இப்போது கூட, சுட்ட எண்ணெயின் வாடை அறைமுழுவதும் சூழ்ந்து அவர் மூச்சை முட்டுவது போலிருந்தது.

அவருக்கு அந்த அறையை விட்டு வெளியே போனால் நிம்மதியாக மூச்சு விடலாம் போலத் தோன்றியது.

பின்னால் நின்று கொண்டிருந்த வேதாசலம் அவர் நிலையைப் புரிந்து,

கொண்டது போல் "அந்தப் பெட்டி தான்" என்றார்.

அந்த நேரத்திலும் ரத்தினம் மனத்திற்குள் சிரித்துக்கொண்டார். "என் அம்மாவின் பெட்டியை நீ எனக்குக் காட்டுகிறாயா?"

"ஆமாம். பெரிய பெட்டி. பெரிய ஆஸ்தி" அலட்சியமாக நினைத்தபடி பெட்டியை நெருங்கினார்.

பெட்டி வைத்திருந்த சுவர்ப் பக்கம் முழுமையாக அடுப்புப் புகையினால் கரி ஏறியிருந்தது.

பெட்டியை எடுக்கக் குனிந்தவர் அப்போதுதான் சுவரின் அடிப்பாகத்தைப் பார்த்தார். அந்தக் கறுப்பாய்ப் போன சுவரிலே 'ரத்தினம். ரத்தினம்' என்று கீறல்களாய் வெள்ளை எழுத்துகள்.

அம்மா தன் கடைசிக் காலத்தில் தன் விரல் நகத்தினால் படுத்தபடியோ அல்லது உட்கார்ந்தபடியோ சுவரில் கீறி இருப்பாளோ?

நினைப்பே துக்கமாக மாறி பந்து போல் நெஞ்சை அடைத்தது. கண் பனித்தது.

'சே. இந்த இடத்தை விட்டு சீக்கிரம் போய் விட வேண்டும்.'

பெட்டியை அவசரமாகத் தூக்கினார். பெட்டிக்குப் பூட்டு இல்லை. திறந்து கொண்டு உள்ளே இருந்ததெல்லாம் வெளியே கொட்டியது. பழைய புடைவைகள். சில சாமி படங்கள். அவற்றின் நடுவே ஒரு கவர். மேலே 'என் அருமை மகன் ரத்தினத்திற்கு' என்று எழுதியிருந்தது.

ரத்தினம் குனிந்து அந்தக் கவரை எடுத்தார். உள்ளே ஒரு கடிதம்.

அவருக்கு அந்தக் கடிதத்தை அங்கேயே படித்துவிட வேண்டும் போல் தோன்றியது பிரித்தார்.

"மகனே ரத்தினம்!

இப்படி உன்னைக் கூப்பிடறது உனக்குப் பிடிக்காமெ இருக்கலாம். ஆனா நான் அப்படித்தான் கூப்பிடுவேன்.

நீ என்னைவிட்டு ஏன் போனேன்னு எனக்குத் தெரியும். ஆனா அப்படி போறதுக்கு முன்னால ஒரு வார்த்தை என்னைக் கேட்டுட்டுப் போயிருக்கலாமேன்னு தோணித்து. ஆனா அப்போ நீ கேட்டிருந்தாக்கூட நான் சொல்லி யிருப்பேனான்னு தெரியலை.

நீயும் இப்போ பெரியவன். எனக்கும் நீ என் கதையைக் கேட்ட பிறகு ஒன் முகத்தைப் பாக்கற சங்கடம் இருக்காது.

எனக்காக ஓர் அஞ்சு நிமிஷம் ஒதுக்கிட்டு கொஞ்சம் பொறுமையாப் படி

எனக்கு விவரம் தெரிஞ்ச நாளிலே இருந்து, உனக்கு எப்படியோ அதேபோல எனக்குத் துணை எங்கம்மா தான்.

எங்களுக்கு ரொம்ப கஷ்ட ஜீவனம். அம்மா தினமும் இட்லி சுடுவா. அதை வீடு வீடா எடுத்துண்டு போய்க் குடுப்பேன்.

ஒரு நாள் என் வாழ்க்கைலே ரொம்ப மோசமான நாள்னு எனக்குத் தெரியாமெ போயிடுத்து. எனக்கு அப்போ பதினாறு வயசு.

ஒரு பெரிய மனுஷர் வீட்டுக்கு இட்லி எடுத்துண்டு போனேன். அவர் வீட்லே, அவர் வீட்டுப் பெரிய பையனைத் தவிர எல்லாரும் எங்கேயோ கல்யாணத் திற்குப்



போயிருக்கான்னு எனக்குத் தெரியாமெ போயிடுத்து.

கதவு திறந்ததும் மாமின்னு கூப்பிட்டுண்டு உள்ளே போனேன். எனக்குப் பின்னாலே வாசல் கதவு தாழ்ப்பாள் போடறதுகூட எனக்குத் தெரியாமெ போயிடுத்து. அந்த மிருகம் என்னை வேட்டையாடிடுத்து.

வீட்டுக்கு நான் அலங்கோலமாத் திரும்பினதைப் பார்த்து. அம்மா தலையிலே அடிச்சண்டு அழுதா. இப்படி உன் தலைவிதி ஆயிடுத்தேடி. நான் யாருக்கிட்டேடி சொல்லி அழுவேன்?னு புலம்பினா. அந்த துக்கத்திலேயே மூணு மாசத்திலே செத்தும் போனா.

நீ என் வயத்திலே வளர்ந்தே. அந்த சமயத்திலே என்னைப் பாழ்படுத்தினவர் கிட்டே இருந்து ஒரு சேதி வந்தது. உனக்கு தனியா வீடு வெச்சுத் தரேன் வந்துடுன்னு அதிலே சொல்லியிருந்தார்.

எனக்கு மனசு ஒப்பலை. அந்த மனுஷன் முகத்தெயே பார்க்கப் பிடிக்கலை.

பிழைக்க வழி தெரியாமெ அம்மா மாதிரி பட்சணம் பண்ணி விற்க ஆரம்பிச்சேன்.

எனக்கு ஒத்தாசையா மணி ஐயர் வந்து சேர்ந்தார். மணி ஐயர் மதுரைலே ஓட்டல் வச்சு நடத்தினவர். அதிலே ஏகப்பட்ட நஷ்டம். ஊரெல்லாம் கடன். போறாததுக்கு அவரோட பொண்டாட்டி வேறே அவரை விட்டுஓடிப் போயிட்டா.

அவமானம் தாங்காமெ. கடன் காரங்க தொல்லை பொறுக்காமெ தலைமறவா இந்த ஊருக்கு வந்தவர் அவர். வாழ்க்கைலெ தோல்வி கண்ட அவர் வாழ்க்கையை இழந்துவிட்ட எனக்கு ஓர் உண்மையான சகோதரன் போல உணர்ச்சி பூர்வமா ஒரு பக்க பலமா இருந்தார்.

நீ என்னை விட்டுப் போனப்பறம் தான் உனக்கு என் மேலே சந்தேகம்னு புரிஞ்சது. அதுக்கு நான் என்ன பண்ண முடியும்? சின்னப் பையன். உங்கிட்டெ இதெல்லாம் சொல்லியிருக்க முடியுமா என்ன?

நீ வீட்டை விட்டுப் போயிட்டே 'நான்.' அழுதுண்டே எங்கெல்லாமோ உன்னைத் தேடினேன். பிறகுதான் தெரிஞ்சது. நீ அவருகிட்டேயே போய் சேர்ந்துட்டேன்னு. சரி நம்ப கிட்டே இருந்து

# நதியின் தாள கதியில்

ரா.பு. தங்கராஜன்

நதியின் தாள கதியில் உதிக்கும்
நாதம் இனிக்கிறது
நாதப் புனலின் கீத மயக்கில்
ராகம் ஜனிக்கிறது.
மதுரக் கனவின் மௌன ராகம்
மனத்தை அசைக்கிறது
மலரும் இதழில் புலரும் முறுவல்
கவிதை இசைக்கிறது.

கதிரின் வரவைக் கட்டியம் கூறும்
ககனம் சிவக்கிறது
கள்மலர் மீதொரு களிவண் டமர்ந்து
நறவம் சுவைக்கிறது.

உதயக் கதிரின் ஒளியை மாந்தி
உலகம் தழைக்கிறது
உலக அரங்கில் உண்மைப் பொருளை
உள்ளம் அழைக்கிறது



கஷ்டப்படறதை விட அவருகிட்டெ போயாவது சுகப்படட்டும். போய்ச் சேர வேண்டிய இடத்திலே தானே போய்ச் சேர்ந்துட்டான்னு விட்டுட்டேன்.

வாழ்க்கையிலே அவர் எனக்குத் துணையா இல்லைன்னாலும் அவரோட இந்தப் போட்டோவை என் துணையா வச்சு என் காலத்தை ஓட்டிட்டேன்.

எனக்கு இதுக்கு மேலே எழுதறதுக்கு ஒண்ணுமில்லை.

உனக்குன்னு குடுத்துட்டுப் போறதுக்கு எனக்கு ஒண்ணுமில்லை. என்னோடெ பழைய டிரங்க் பொட்டிதான் இருக்கு.

நீ சந்தோஷமா இரு. சௌக்கியமா இரு. ஒன் அப்பா மாதிரி வாழ்க்கை நடத்தாதே. என்னை மாதிரி அதிர்ஷ்டக் கட்டையா இருக்காதே.

சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டோம்னு இப்போ எனக்கொரு திருப்தி.

உன் ஆசை அம்மா"

வெளியே இடி இடித்து மழை கொட்டியது. அந்தப் பெட்டியிலிருந்த போட்டோவையே உற்றுப் பார்த்தார். அவர் தன் மேசையின் மேல் வைத்து, தினமும் நன்றியுடன் பார்த்துவரும் அதே படம்! அவர் நெஞ்சில் ஏதோ சாட்டையடி விழுந்தது போல உணர்ந்தார்.

ரத்தினம் கிளம்பினார்.

"என்ன? அந்தப் பொட்டியை எடுத்துக்கலையா?" வேதாசலம் கேட்டார்.

"இல்லை வேதா! இது இங்கேயே இருக்கட்டும். இந்த வீட்டையும் காலி பண்ணவும் வேண்டாம். நான் நிறைய அழ வேண்டியிருக்கு. எனக்குத் தோணும் போதெல்லாம். நான் இங்கே வந்து......"

அவரால் அதற்கு மேல் பேச முடியவில்லை.

"அம்மா" அடிவயிற்றிலிருந்து கிளம்பிய அந்தச் சத்தம், வானத்து இடிச்சத்தத்தையும் மீறி வெளியே கேட்டது.

●●

# நிஜமாகிவிட்ட நிழல்!

ரா. வேங்கடசாமி

முதலிலிருந்தே மல்லப்பாவின் ஒரே கோரிக்கை "என்னைச் சாக விடுங்கள்" என்பதுதான்!

அவன் செய்து விட்ட குற்றம் 'கொலை!'

அதிலிருந்து அவன் எந்த வழியிலும் தப்ப முடியாது - அவனும் தப்ப விரும்பவில்லை.

இவன் கேட்கிறான் என்பதற்காக உடனே அவனுக்கு மரண தண்டனை கொடுத்து விட முடியுமா?

கோர்ட் - விசாரணை - சிறை என்று எவ்வளவு விதிமுறைகள் இருக்கின்றன?

முதல் கட்டமாக இப்போது அவன் சிறையில் இருந்தான். அவனுக்கென்று வக்கீல்கள் இல்லை; வைத்துக் கொள்ள அவனே மறுத்து விட்டான் -

ஆனால் இப்படிப் பட்டவர்களுக்காக அரசாங்கமே வக்கீலை அமர்த்துவது வழக்கம் -

அப்படித்தான். இவனுக்காக நான் அமர்த்தப்பட்டேன். இதைப் போன்ற இரண்டொரு வழக்குகளில் குறைந்த தண்டனையும். விடுதலையும் வாங்கிக் கொடுத்த பெருமை எனக்குண்டு -

மல்லப்பாவைச் சந்தித்த பொழுதே அவன் தன் எதிர்ப்பைத் தெரிவித்தான்.

"சார்... உங்கள் உதவி எனக்குத் தேவையே இல்லை. தயவு செய்து என்னைச் சாக விடுங்கள்... நான் அவனைக் கொலை செய்தது உண்மை... அதை நானே ஒப்புக் கொள்ளுகிறேனே.. பிறகு எதற்கு கோர்ட், வழக்கு - வக்கீல் எல்லாம்?"

எடுத்த எடுப்பில் அவன் பேசிய வசனம் இது - விரக்தியில் பேசுகிறான் என்று தான் நான் நினைத்தேன் - சில நிமிடங்கள் மௌனம் - பிறகு நான் அவனுக்குப் பதில் சொன்னேன்...

"மல்லப்பா..! நீ கொலை செய்திருக்கிறாய்.. உண்மைதான். அதற்காக இறக்க விரும்புகிறாய்.. அது உன் விருப்பம். ஆனால் அரசாங்கம் முறைப்படி விசாரிக்காமல் தண்டனை கொடுக்க எந்தச் சட்டத்திலும் இடமில்லையே.. உன்னைப் பார்த்தால் படித்தவனைப் போல் தெரிகிறது... சட்டங்களை நீ அறிய மாட்டாயா? அதனால் தான் முறைப்படி ஒரு வக்கீலை நியமித்து வாதாடச் சொல்கிறார்கள்.. இம்மாதிரி 'கிரிஸ்டல் கிளியர்' வழக்குகள் எல்லாம் - மதில்மேல் பூனை... எப்படிப் போகும் என்றே சொல்ல முடியாது-"

அவன் மெதுவாகச் சொன்னான்...

"சார்! நான் வாழ விரும்பவில்லை."

சில நிமிடங்கள் நான் ஊமையாகிப் போனேன் - ஏதோ தகராறில் இவன் தன் நண்பனைக் கொன்று விட்டான் என்றுதான் வழக்கு இருந்ததே தவிர. உண்மையான காரணம் என்னவென்றே தெரியவில்லை. நான் கேட்டேன்...

"கொலைக்குக் காரணம் விரோதமா?"

"இல்லை"

"பணமா?"

"இல்லை"

"காதல் தோல்வியா?"

"இல்லை.." என்றபோது எனக்கே சந்தேகம் எழுந்தது. இவன் எதையோ என்னிடம் மறைக்கிறான்...இல்லை.. பொய் பேசுகிறான்..

"என்ன மல்லப்பா..! எந்த விதமான காரணமும் இல்லாமலா ஒருவனைக் கொலை செய்தாய்?"

அவன் மௌனம் சாதித்தான்..

நானும் அவனைப்பார்த்துக் கொண்டு பேசாமல் இருக்கவே. அவன் பேசத் தொடங்கினான்.

"சார்! என் எதிர்காலத்தைப்பற்றி எவ்வளவோ கனவுகள் கண்டு கொண்டிருந்தேன்.. ஆனால் அந்தக் கனவுகள் யாவும் கனவுகளாகவே மறைந்து விட்டன.."

நான் பேசாமல். அவன் தொடரட்டும் எனக் காத்திருந்தேன்.

"திருடனாக வாழ்க்கையை அமைத்துக் கொண்ட உனக்கு அப்படியென்ன கனவுகள் என்று நீங்கள் நினைக்கலாம்.. சார்! திருடியே வாழ்க்கை நடத்த வேண்டும் என்று முடிவு கட்டி விட்ட பரம்பரைத் திருடனல்லன் நான். எந்த வழியிலும் பிழைக்க வழியில்லாது ஏதாவதொரு சம்பவத்தை வைத்து, அதன் மூலம் வாழ்ந்து விடலாம் என்று கனவு கண்டு கொண்டிருந்தேன்.. அதற்குத் திருடும் தொழில்தானா கிடைத்தது என்று கேட்காதீர்கள்.. வேலை.. வேலை.. ஏதாவதொரு வேலை கிடைக்காதா என்று நான் அலையாத இடமில்லை.. நாளில்லை.., பல இடங்களில் கேலிப் பேச்சும்.. கிண்டலும்தான். எனக்குத் தொடர்ச்சியாகக் கிடைத்த அர்ச்சனைகளினால் வெறுப்பு.. மேக மூட்டம் போல் என் மனத்தில் லேசாகப் பரவிக் கொண்டிருந்த நேரத்தில்தான். சம்பத் எனக்கு நண்பனானான்!

தேவையில்லாத நட்பாக இருந்தாலும். அந்த நேரத்திற்கு அது எனக்குத் தேவையாயிருந்தது.

வேலைதான் கிடைக்கவில்லையே தவிர, எனக்கு அவ்வப்போது ஆறுதல் சொல்லித் தேற்ற. எனக்காகச் செலவு செய்ய. மிக அழகான அதே சமயத்தில் படித்த காதலி ஒருத்தி இருந்தாள். சூப்பர் மார்க்கெட்டில் மிகவும் அந்தஸ்தான உத்தியோகம்.

ஒரு முறை என்ன.. பல முறை அங்கே போய் சாமான்கள் வாங்கி வந்த போது ஏற்பட்ட சிறு அறிமுகம்.

எப்படியோ, அது பல விதத்தில் தொடர, நட்பு வளர்ந்தது. அவளுக்கு நான் சமயத்தில் வழித்துணையானேன்.. நெருங்கிய நட்பு, மெதுவாக காதலாக மலர்ந்தது..

என் நிலைக்கு இப்படி ஒருகாதலியா? மற்றவர்கள் மனத்திற்குள் வியப்பது

எனக்கு மிகவும் பிடித்திருந்தது.. என் மனத்தின் எண்ணங்களை அவன் பிரதிபலித்தான், பலநேரங்களில் அவன். நானாகவே மாறி நின்றான் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்.. அவன் வாக்கு எனக்கு வேதமாகி விட்டது...

✣ ✣ ✣

நான்கைந்து மாதங்களுக்குப் பிறகு.. நான் தொடர்ந்து வேலை தேடிக் கொண்டிருந்த நேரம்..

சம்பத் ஒரு நாள். என்னைத் தேடி வந்து, தான் புதிதாக உருவாக்கிய திட்டமொன்றைப் பற்றிச் சொன்னான்.. உழைத்து முன்னுக்கு வர நினைத்திருந்த என்னைக் குறுக்கு வழியில் பெரும் குபேரனாக்கும் திட்டம் அது! திட்டம் எளிதில் நிறைவேற வழிகளைச் சொன்னான். திருடுவது எனக்குப் பிடிக்காத விஷயம். "திருடித்தான் பிழைக்க வேண்டுமா? இதற்கு நான் ஒப்புக்கொள்ள முடியாது" என்று நான் சொல்லும் முன். அவன் சொன்ன ஆயிரம் காரணங்கள் என் வாயைக்கட்டி விட்டன,

"இதைத் தவிர வேறு வழியே இல்லை எதிர்காலமே இருட்டாக இருக்கிறது" என்றான். தொடர்ந்து இதைப் போல இன்னும் எவ்வளவோ காரணங்களையும் சொன்னான். என்னைப் பேசவே விடாமல் அவன் காட்டிய வாய் ஜாலம் என்னை மயக்கி விட்டது..

வேலையே கிடைக்காமல் இருந்த எனக்கு 'இதைத்தான் முயன்று பார்ப்போமே' என்கிற நப்பாசை தோன்றிற்று.

அதனால் அவன் சொன்ன திட்டந்தான் என் புதிய வாழ்க்கையின் திறவுகோல் என்று முடிவுசெய்தேன்..

சம்பத் கொண்டு வந்த திட்டம் சாதாரணத்திட்டமே இல்லை. ஒரு பாங்கைக் கொள்ளை அடிக்கும் திட்டம்."

மல்லப்பா சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்த நான் இடைமறித்தேன்

"நீங்கள் பாங்கைக் கொள்ளை யடித்ததுதான் தெரியுமே.." என்றேன்.

மல்லப்பா சிறிது நேரம் மௌனம் சாதித்தான்.. ஏன் குறுக்கே பேசினோம் என்று இருந்தது எனக்கு! நான் சில நிமிடங்கள் பேசாமல் இருந்தேன்.. அவன் மீண்டும் தொடர்ந்தான்.




ஒரு பக்கம் இருக்கட்டும்! எனக்கே தனிமையில் நினைத்துப்பார்க்கும் போது மலைப்பாக இருந்தது. என் வாழ்க்கைப் பாலை வனத்தில் ஒரு சிறு பசுஞ்சோலை!

எனக்காக அவளும் தீவிரமாக வேலை தேடினாள்.. தெரிந்தவர்களிடம் சொல்லி வைத்தாள்.. வேலை கிடைத்த பிறகுதான் திருமணம் என்று நாங்கள் இருவருமே முடிவு செய்து கொண்டோம். "உங்களுக்கு நிச்சயம் நல்ல - பெரிய - வேலை கிடைக்கும். அதனால் உங்கள் எதிர்காலமே மிகவும் பிரகாசமாக இருக்கும்" என்றெல்லாம் பொய் சொல்லி என் ஏமாற்றத்தைத் தவிர்த்தவள், என்னை உயிரோடு இருக்க வைத்தவள்,

சம்பத்தைப் பற்றி எனக்கு அதிகம் தெரியாது.. எனக்கு அவனை அறிமுகம் செய்து வைத்தவளே ரம்யாதான்! காதலியே சர்டிபிகேட் கொடுத்த பிறகு அவனை நம்பாமல் இருக்க முடியுமா?

கொஞ்சங் கொஞ்சமாக எனது அன்றாடத் தேவைகளை சம்பத் பூர்த்தி செய்து கொண்டு வந்தான். நடப்பவை.. நடக்கக் கூடியவை ஆகியவற்றைப் பற்றியே அவன் பேசினான்.. ஒவ்வொரு செயலிலும். அவனது அணுகுமுறை

"பாங்க் கொள்ளை நடந்து முடிந்தது என்பது உங்களுக்குத் தெரியும்.. ஆனால் அதற்கு முன்பு எங்களுக்குள் ஏற்பட்டிருந்த ஒப்பந்தம் உங்களுக்குத் தெரியாது.. அதில் நான் அடைந்த ஏமாற்றமும் உங்களுக்குத் தெரியாது.. அத்துடன் ரம்யா என்னை விட்டு விலகிவிட்டதும் உங்களுக்குத் தெரியாது.. ஆம்..! இவையெல்லாம் வெளியில் தெரியாத விஷயங்கள்..

"திட்டத்தை நாங்கள செயலாக்குவதற்கு முன்பு இருவரும் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டோம்.. கிடைக்கும் பணத்தில் ஆளுக்குப்பாதி.. இருவரும் இந்த ஊரிலிருந்து வெளியேறி விடுவது. பிறகு இரண்டு மூன்று வருடங்களுக்குத் தலைகாட்டக் கூடாது.. வேலை முடிந்தவுடன் இருவரும் பிரிந்து விடவேண்டும்.. இதைப் போல பல விஷயங்களை எங்களுக்குள் ஒப்பந்தமாகப் பேசிக் கொண்டோம்..

"என் கவனம் முழுவதும் பணம் - எதிர்காலம் என்பனவற்றைப் பற்றியே சுற்றிச் சுற்றி வந்ததால் நான் ரம்யாவைப்பற்றி நினைக்கவே இல்லை. காதலி எங்கே போய் விடப்போகிறாள் என்கிற ஆழமான நம்பிக்கை எனக்கு...

"பணம் கிடைத்தவுடன் அவளுடன் தானேவாழப் போகிறோம் என்கிற முடிவு..

"இதனால் நான் சற்றே அயர்ந்து விட்டேன்.. என் அருமை நண்பன் சம்பத் இந்த நேரத்தைத் தனக்கு மிகவும் சாதகமாகப் பயன் படுத்திக் கொண்டான்...

"இதைநான் கடைசியில்தான் தெரிந்து கொண்டேன். பாங்கைக் கொள்ளையடித்த விவரம் மிகவும் பழையது... வேலை முடிந்தவுடன் இருவரும் பிரிந்து விட்டோம்.. பணம் அவனிடந்தான் இருந்தது. அவன் கார் வைத்திருந்தான்.. கார் ஓட்டவும் அவனுக்குத் தெரியும்!

"நாங்கள் போலீசில் சிக்கவில்லை - ஏனெனில் எங்கள் மீது சந்தேகப்படவே நாங்கள் இடம் கொடுக்கவில்லையே!

"தப்பிவிட்டோம் என்னும் மகிழ்ச்சி.. முன்பே பேசி வைத்தபடி நானும் அவனும் குறிப்பிட்ட இடத்தில் சந்தித்தோம்.. என்னைக் கண்டவுடன் அவன் 'ஓ'வென அழுதான்..

❖ ❖ ❖

"முதலில் எனக்கு எதுவுமே புரியவில்லை.. மகிழ்ச்சியாக இருக்க வேண்டிய நேரத்தில் இப்படி அவன் அழுவானேன்?

அழுதுகொண்டே சொன்னான்:



"எல்லாமே போய்விட்டது.. ஐய்யோ.. எல்லாமே போய் விட்டதே!" என்று கூறிவிட்டு அவன் அழுகையைத் தொடர்ந்தான்..

எனக்குத் 'திகீர்' என்றது...

காத்திருந்த நான்.. என்னாவது?

அவன் இப்படிச் சொல்வதற்கு என்ன அர்த்தம்? கொள்ளை அடித்த பணம் முழுவதும் போய் விட்டது என்று தானே?"

அந்த நேரத்தில் எனக்கு வந்த கோபம் எப்படி இருக்கும் என்று நீங்களே யூகித்துக் கொள்ளுங்கள். இருந்தாலும் அதை அடக்கிக் கொண்டேன்.. அவன் அழுது கொண்டே சொன்ன விவரம் இதுதான்

'இந்த ஊருக்கு வடக்கே, ஒரு பெரிய கிராமம் இருக்கிறது.. அந்த கிராமத்தை ஒட்டினாற் போல் ஒரு பெரிய சுடுகாடு.. புதியதும் பழையதுமான பல சமாதிகள். -நகர்ப்புறத்தின் ஒரு பகுதிக்கும் அதுதான் சுடுகாடு.. அதை ஒட்டினாற் போல் ஒருசிறிய நந்தவனம். அதன் நடுவே ஒரு மேடை.. அந்த மேடைக்கு மிக அருகில் பெரிய குழிதோண்டி, பணத்தைப்புதைத்து வைத்தானாம்! மக்கள் நடமாட்டம் அதிகம் இல்லாத இடம்.. பணம் எத்தனை வருடமென்றாலும் பத்திரமாக இருக்கும் என நம்பி அவன் அங்கே வைத்தானாம். ஆனால் ஒரு வாரம் கழித்து அவன் அங்கே போய்ப் பார்த்தால், அந்த இடத்தில் சுடுகாடும் இல்லை... நந்தவனமும் இல்லை.. நிலத்தை யாரோ நன்றாக 'சமன்'செய்து ஒழுங்கு படுத்தியிருந்தார்களாம்.

எப்படி சுடுகாடு மாயமாய் மறைந்திருக்க முடியும்?

அவன் சொன்னதை நம்பாமல், நானும் அவனுடன் சென்று பார்த்தேன் -

நிலம் மிகவும் சுத்தமாக இருந்தது..

அவன் குறிப்பிட்ட சுடுகாடும் இல்லை. நந்தவனமும் இல்லை..

என்னால் நம்ப முடியவில்லை.. அவனோ நம்புவதைப் போல் சொல்லவில்லை..

பணத்தை முழுதுமாக அவனே எடுத்துக்கொண்டு இப்படிவேடம் போடுகிறான் என்கிற சந்தேகந்தான் என் மனத்தில் நிறைய இருந்தது...

எப்படி இருந்தாலும் பணத்தை அவன் எனக்குக் கொடுத்தால் தானே உண்டு?

பலவிதத்தில் நான் அவனை மிரட்டிப் பார்த்தேன்.. ஆனால் அவனிடமிருந்து வந்தது ஒரே பதில்தான்! அக்கம்பக்கத்தில் யாரிடமாவது விசாரிக்கலாம் என்றாலோ.. அங்கே ஜன நாட்டமே இல்லை.. எதிர்ப்பட்டவர்களைக் கேட்டபோது -

"தெரியாது" என்று ஒரே பதிலையே பல முறை சொன்னார்கள். கண்ணுக் கெட்டிய தூரம் வரையிலும் வயல்கள்... இந்த இடத்தில் எங்கே வந்தது சுடுகாடும். நந்தவனமும்?

"வேறு ஊராக இருக்குமோ?" கேட்டேன்

"இல்லை.. இதே ஊர்தான்!" என்றான்.. அவன் சொன்ன அடையாளங்களே இல்லாதபோது குறிப்பிட்ட இடத்தில் புதைத்து வைத்திருக்கிறான் என்றால் அதை எப்படி நம்புவது? என் மனம் அவனை நம்பவில்லை.. பணத்தின் மீது எனக்கும் ஆசைதான்.. ஆனால் அவனுக்கோ அதிக ஆசை!

நான் எங்கே தொடங்கினேனோ அங்கேயே மீண்டும் வந்து நின்றேன்..

பணம் வந்த வழியே போய்விட்டது!

ஊருக்கு வந்தவன், ரம்யாவைத் தேடிப் போனேன். என் கதையை அவளிடம் சொன்னால் சற்று ஆறுதலாக இருக்கும் என நினைத்தேன்

அவளோ பழைய இடத்தில் இல்லை.

"திருமணமாகிவிட்டது!" என்கிற செய்தியே எனக்கு அதிர்ச்சி தருவதாக இருந்தது. இரண்டாவது அதிர்ச்சி என்னை மிகவும் பலமாகத் தாக்கி விட்டது. காரணம்? புதிய இடத்தில் அவள் என் நண்பன் சம்பத்தின் மனைவியாக இருந்ததுதான்! இருவரும் சேர்ந்து தான் திட்டம் போட்டு என்னை ஏமாற்றி யிருக்கிறார்கள்..!"

❖ ❖ ❖

"தயவு செய்து நீங்கள் என்னை மன்னித்து விடுங்கள்.. நான் சூழ்நிலையின் கைதியாகி விட்டேன்" என்று என்னிடம் பசப்பினாள். ரம்யா.

என் மனம் எப்படி இருந்திருக்கும்? மேலும். ஏற்கெனவே திருமணம் செய்து கொண்டவளை நான் என்ன செய்ய முடியும்?

சம்பத்திடம் போனேன்... கேட்டேன்..

"என் வரைக்கும் பெண்களை வசியம் செய்வது மிகவும் சுலபம்.. முடிந்தால். உன்னுடன் வந்து விடுவதாக அவள் சொன்னால் நீயே அவளை அழைத்துப் போ.." என்றான் கேவலமாக. அத்துடன் நின்றிருந்தால் பரவாயில்லை..

"மல்லப்பா!' இன்னொரு பாங்க் இருக்கிறது.. அதை முயற்சிசெய்து பார்ப்போமா?" என்றான்.. முதல் கொள்ளையில் கிடைத்த பணம் முழுவதும் காணோம்.. அதைப்பற்றி இப்போது அவன் சிறிதும் கவலைப்பட்டதாகவும் தெரியவில்லை. சொல்லப்போனால் இவன் என் எதிர்காலத்தையேநாசமாக்கி விட்டானே! பணமுமில்லை..! காதலியுமில்லை! அந்த நிலையில், என் மனத்தில் தோன்றியது ஒரே முடிவுதான்! எதிர்காலத்தைப் பற்றியெல்லாம்.. நான் சிந்தித்துப் பார்க்கவே இல்லை. முடிவின் விளைவுதான் அதே இடத்தில் சம்பத் பிணமானான்... ரம்யா போலீசில் சொன்னதால் என்னைக் கைது செய்துவிட்டார்கள்.. இந்தக் கொலை நடக்கவில்லையென்றால் 'பாங்க்' கொள்ளையில் எங்கள் தொடர்பைப் பற்றி யாருமே அறிந்திருக்க மாட்டார்கள் போலீஸ்காரர்கள் இன்னும் தேடிக் கொண்டுதான் இருப்பார்கள்..

"பணம் இப்போது எங்களிடம் இல்லவே இல்லை.. மல்லப்பா! நான் சொல்வதை நம்பு.. வந்த விதத்திலேயே அது போய் விட்டது..", என்று ரம்யா கதறி அழுதபோதுதான்.. ஒரு வேளை இது உண்மையாக இருக்குமோ, என நான் நம்பினேன்... நான் அவசரப்பட்டு விட்டேனா?

ஏமாற்றம் என் கண்களை மறைத்து விட்டது.. அதன் விளைவாக இப்போது நான் சிறையில் இருக்கிறேன்.

பணம் போய் விட்டதாலோ -

அல்லது - என் காதலி வேறொருவனின் மனைவியாகி விட்டதாலோ-

நான் இறக்க விரும்பவில்லை..

அசட்டுத்தனமாக ஒரு பாங்க் கொள்ளையில் நான் சம்பந்தப்பட்டு விட்டேன்..

அதன் விளைவாக ஒரு கொலையும் செய்தாயிற்று! திருட்டு.. கொலை..

உங்கள் முயற்சி வீணாகாமல் நான் எப்படியோ விடுதலையாகி விட்டேன் என்று வைத்துக் கொள்ளுங்கள்.. என்னைப் போன்ற ஒருவனுக்கு இதற்குப்

பிறகு சமூகத்தில் என்ன எதிர்காலம் இருக்கப்போகிறது?

அப்படி அவமானத்தோடு உயிர் வாழ்வதைவிட இறப்பதே மேல் அல்லவா?

நான் சொன்னவற்றை எல்லாம் நன்றாக யோசித்துப் பாருங்கள் வக்கீல் சார்!"

- என்று என்னிடம் தன் கதையைக் கூறி முடித்தான் மல்லப்பா.

முக்கோணக் காதல் கதை.. கூடவே ஒரு திருட்டு!

இவனே குற்றத்தை ஒப்புக் கொள்ளுகிறான். தன் காதலியைப் பணத்துடன் தன் நண்பனே இழுத்துக் கொண்ட ஆத்திரத்தில் நடந்த கொலை என வாதாட இடமிருக்கிறது.. இதற்கு ரம்யாவும் நிச்சயம் ஒத்துழைப்பாள். ஆனால் கொள்ளை போன 'பாங்க்' பணம்? அது கிடைத்து விட்டால், தண்டனை குறைய் வாய்ப்பு உண்டு!

எங்கே போயிற்று அந்தப் பணம்? சம்பத்திடம் பணம் இல்லை என்று ரம்யா சொல்கிறாள் என்றால், அவன் பணத்தை மறைத்தது உண்மை என்றாகிறது.

சுடுகாடு.. நந்தவனம்..!இவை இரண்டும் எப்படிக் காணாமற் போகும்? சுடுகாடு என்பது நிலையான இடமல்லவா? அதை எப்படி மாற்ற முடியும்?

நந்தவனம் அழியலாம்.. உருவாகலாம்.. ஆனால் சுடுகாடு?

என் மனத்தில் மின்னலடித்தாற் போல் ஓர் எண்ணம்!

திடீரெனத் தோன்றி மறைவதென்பது எப்போது சாத்தியம்?

அதைப் பற்றியெல்லாம் இவர்கள் யோசிக்கவே இல்லை..

நானும் சில நிமிடங்கள்தான் யோசித்தேன்.. எனக்குத் தெரிந்து விட்டது.

திரைப்படம் எடுப்பது என்றால்தானே செட்போட்டுக் கலைப்பார்கள்?

சம்பத் அதை உண்மை என்று நம்பி விட்டான் பணத்தைக் கையில் வைத்திருந்த நிலையில் எது உண்மை.. எது பொய் என்றே அவனால் நிச்சயம் செய்ய முடியவில்லை.. அவசரம்! கண்ணால் கண்டதை உண்மை என்றே நம்பி விட்டான்..

சமீபத்தில் அந்த கிராமத்தில் ஷூட்டிங் நடத்திய கம்பெனி எது வென்று முதலில் தெரியவேண்டும்..

தெரிந்தால், அதனுடைய ஆர்ட் டைரக்டர் வைத்திருக்கும் வரைபடத்தைப் பார்த்தால் பணம் எங்கே இருக்கிறது என்பது தெரிந்து விடுமே!

இதெல்லாம் கடினமான காரியங்களே இல்லை.

இடம் தெரிந்து விட்டால் பணம் கிடைப்பதா கடினம்?

எனக்கு நானே சபாஷ் போட்டுக்கொண்டு சிரித்தேன்...

"என்ன சார்..? என்நிலை உங்களுக்குச் சிரிப்பாக இருக்கிறதா?" என்றான்..

"உனக்கு மரணமே இல்லை. நான் ரம்யாவைப் பார்த்துப் பேசிவிட்டு உன்னிடம் வருகிறேன்" என்று கூறி விடைபெற்றேன்.

## மின்விசிறித் தோழீ..!

வேலூர் ம. நாராயணன் எம்.ஏ

கோடைதரும் கதிரொளியின் கூர்ம முக்கும்
கேடயமாய்த் திகழும்மின் விசிறித் தோழீ....!
மேடையிலே வீசுகின்ற தென்றல் என்றன்
மேனிவந்து தழுவுதற்கு உதவும் நீதான்
முடுபனிப் பருவத்தும் ஓய்வே யின்றி
முழங்கிவரும் கொசுவினத்தை விரட்டு கின்றாய்!
நீடியநற் சிந்தனைகள் நெஞ்சில் பூக்க
நிச்சயமாய் உன்தயவே எவர்க்கும் வேண்டும்!

சிறுபொழுது விசிறியினால் வீசச் சொன்னால்
சம்சாரம் முகங்கோணிச் சலிக்கின் றாளே!
திருகுகின்றேன் உன்காதை தினமும்! நீயோ
சகிப்புடனே பொறுத்தினிதே கடமை செய்வாய்;
இருக்கட்டும்! இன்னாசெய் தாரும் நாண
எந்நாளும் நன்னயமே செய்யும் பண்பைத்
திருக்குறளில் கற்றனையோ? கசடறக் கற்கத்
தலைகீழாய் நின்றனையோ? தோழீ..! வாழி..!



## இளைஞர்களே...!

கவிமாமணி செ.சு. மலரடியான்.

இமயமுதல் குமரி வரை பரத மண்ணின்
ஏற்றமதை உருவாக்கும் ஆற்ற லாளர்!
கமழும் புகழ் இந்தியத்தின் உயர்வை யெல்லாம்
கைபிடித்து அழைத்துவரும் கந்தர் வர்கள்!
இமை உயர்த்திப் பார்க்கின்ற ஏற்றம் தன்னை.
இயற்றுகின்ற புத்துலக கர்த்தா வாகும்!
குமைந்து வரும் வேற்றுமையைக் களைந்தெடுக்கும்
கூர்வாள்கள் இளைஞரென கூடல் வேண்டும்!

மழை பொழியும் மேகங்கள் நஞ்சாய் மாறி
மண்ணுக்கு நஞ்சாகி விழுகு தின்று!
பிழைகளென மனந்தெளிந்த போதும் இங்கே
பெரும்பாவச் செயல்களினைப் புரிகின்றார்கள்!
தழைகின்ற தாவரத்தின் பகைமை போலே
தரணியினை வளமாக்க நினைக்க வில்லை!
இழையெடுத்து அரும்புகளைச் சரமாக்கல் போல்
இளைஞர்களே கூடுங்கள் வளங்கள் சேர்க்க!

## செவத்த புள்ளே!

கொ.மா.கோதண்டம்

பெண்: மாடு பத்திப் போற மச்சான்
மனசெக்கிள்ளிப் போறியே நீ
காடு வெளஞ்ச கையோட நம்ம
கல்யாண முன்னே என்ன ஆச்சு?

ஆண்: காடு வெளஞ்ச பணம்
கையிலேயே கூடல்வைடி
தோடு செய்யக் காணாதடி
துடுக்குத்தன சொல்லுக்காரி

பெண்: என்னநாம வெளய வச்சும்
எட்டாத வருமானமுன்னா
கண்ணாலம் என்ன ஆகும்?
கருப்பட்டி மனசு மச்சான்

ஆண்: மேகமூட்டம் போடுதடி
மேமழையே பேஞ்சிருண்டி
ஈழமின்னல் மின்னுதடி
ஏரிகுளம் நெறைஞ்சிருண்டி

பெண்: ஏருழுது வச்சிடுவோம்
எணஞ்சி நாம உழைச்சிடுவோம்
சேறுபட்ட கையாலே தான்
செஞ்சுதாலி கட்டு மச்சான்

ஆண்: உழைக்கும் சனம் வாழவேணும்
ஒன்னுகூடி உயர வேணும்
செழிச்சிடுண்டி நம்ம தேசம்
செவத்தபுள்ளே ஒன்னாட்டந்தான்.










அணிவகுக்கும் அசெம்பிளி யூனிட்.

அற்புதமான அழகான கைக்கு ஒரு பூஷணமாகத் திகழும் கடிகாரங்கள்.

தமிழ்நாட்டு அரசாங்கத்திற்குத் தனிப்பெருமை என்றுகூடக் கூறலாம். உலகமெங்கும் பரவி வரும் டைட்டன் வாட்ச்கள் தமிழக தொழில் முதலீட்டுக் கழகத்திலிருந்து 27 சதவீதப் பங்குகளுடன் வெற்றிகரமாகத் தொழிற்சாலை 1986 ஆம் ஆண்டு உருவாகிவிட்டது.

'டாட்டா இன்டஸ்ட்ரீஸ் தமிழ்நாடு' என்பதன் சுருக்கமே 'டைட்டன்'. (TITAN)

டாட்டா குரூப் கம்பெனிகளிடமிருந்து 26% 'டிட்கோ' விடமிருந்து 27% மற்றும் பொதுமக்களிடம் மற்ற சதவிகித நிதி முதலீட்டுடன் 1986 ஆம் ஆண்டு தொடங்கப்பட்டதே 'டைட்டன் இன்டஸ்ட்ரீஸ் லிமிடெட்'.

# தரமான 'டைட்டன்'

**'கை**க்கடிகாரம்– ரிஸ்ட்வாட்ச்' ஃபாரினிலிருந்து வாங்கி வந்தோ, கள்ளச் சந்தையில் ரகசியமாகப் பெற்றோ அணிந்து கொண்டால்தான் திருப்தி என்ற நிலை ஒரு காலத்தில் இருந்தது. எதிலும் 'ஃபாரின்' மோகம்! இங்கிருந்து தயாரிக்கப்பட்டு மேலை நாடு சென்று அங்குள்ள முத்திரையோடு திரும்பி வந்தால் அதை வாங்குவதில் ஆர்வம்! சிங்கப்பூர், மலேசியா, ஜப்பான் செல்பவர்கள் ரிஸ்ட் வாட்ச் வாங்காமல் வரமாட்டார்கள். ஆனால் இன்று –

அந்த நிலை மாறிவிட்டது. இப்போது மேல்நாட்டுத் தரத்துடன் நம் நாட்டிலேயே கைக்கடிகாரங்கள் தயாராகின்றன. ஆம்; தமிழ்நாட்டில் தயாராகின்றன,



திரு.ஜெர்ஜெக்ஸ் தேசாய்

தமிழ்நாடு – கர்நாடக மாநில எல்லைகள் சேருமிடமான ஒசூர், சிப்காட் இன்டஸ்ட்ரியல் காம்ப்ளக்ஸில் வருடத்திற்கு 4.5 மில்லியன் கைக் கடிகாரங்களைத் தயாரிக்கும் நிறுவனத்திற்குள் நுழைகிறோம். நிர்வாகப் பிரிவின் முதன்மை மேலாளர் திரு.கே.ஆர். பெல்லி அன்புடன் வரவேற்கிறார்.

14 ஏக்கர் பரப்பில் விரிந்துள்ள டைட்டன் தொழிலகத்தின் மாதிரி உருவ கட்டடத்தை (Miniature) விவரிக்கிறார். மனிதர், தொழிற்கூடத்தின் அத்தனை விவரங்களையும் மிகவும் எளிமையாக ஒன்றுவிடாமல் சுவையாக விவரித்த விதமே தொழிற்சாலை முழுவதையும் பார்த்த உணர்வை ஏற்படுத்தியது.

1986 ஆம் ஆண்டு முதல் இன்று வரை வளர்ந்துள்ள டைட்டன் நிறுவனத்தின் வளர்ச்சிப் பட்டியல் நம்மைப் பிரமிக்க வைக்கிறது. படிப்படியான முன்னேற்றம், திட்டமிட்டுச் செயல்படுத்தும் திறன், இன்று 'டைட்டன்' நிறுவனத்தை உயர்வானதொரு நிறுவனமாக்கியுள்ளது.

வெளிநாட்டுத் தொழில் நுட்பப் பயிற்சியினால் அதி நவீன உலகத் தரத்துக்கு உகந்த கைக் கடிகாரங்கள் இங்கே தயாரிக்கப்படுகின்றன. நம் நாட்டுத் தேவையுடன் 1991 ஆம் ஆண்டு முதல் உலக நாடுகளுக்கும் ஏற்றுமதியாகின்றன.

மூன்று ஷிப்ட் முறைகளில் மொத்தம் 2100 தொழிலாளர்கள். இவர்களில் மிக நுட்பமாகச் செய்யப்படும் பிரிவுகளில் 98% பெண்கள்.

அமைதியான சூழல். சுற்றுப்புறம் பச்சைப் பசுமையுடன் பொலிவூட்டு கிறது.

இதுவரை 1700 வகையான கைக் கடிகாரங்களை வெளியிட்டுள்ள 'டைட்டன் வாட்ச் அசெம்பிளி' யூனிட்டிற்குள் நுழைகிறோம்.

வெள்ளைச் சீருடையில் – ஒரே விதக் காலணிகளுடன் பெண்கள். மொத்தம் 312 பேர். இரண்டு பிரிவுகள். ஒரு பிரிவினர் கடிகாரத்தின் உள் பாகங்களை முறை தவறாமல் கோக்க, அடுத்த பிரிவினர் கோக்கப்பட்ட பாகங்களை – காற்று, நீர், நெருப்புகளில் பரிசோதிக்கின்றனர். அந்தப்











உணவு விடுதியில்

பட்டையில்லாத கடிகாரப் பகுதியை மூன்று நாள்கள் முழுமையாக மீண்டும் ஆய்வு செய்கின்றனர்.

இப்படி பல பிரிவுகளில் முழு கைக் கடிகாரமும் ரூபாய் 500 முதல் 1,50,000 ரூபாய் வரை வகை வகையாக உருவாக்கம் பெறுகின்றன.

இந்தத் தொழிலாளர்களைத் தேர்ந்தெடுத்த விதமே புதுமையானது; சிறப்பானது.

“பல மத்திய – மாநில விருதுகளைப் பெற்றுள்ள 'டைட்டன்' நிறுவனம் உடல் ஊனமுற்ற பலருக்கு வேலை அளித்துள்ளது மிகப் பெரிய சாதனை என்றே சொல்லலாம். அதோடு தமிழகம் முழுக்க ஓர் ஆய்வு செய்து திறமை மிகுந்த பள்ளி மாணவர்களைத் தேர்ந்தெடுத்து – அவர்களுக்குரிய வயதில் முறையான பயிற்சியளித்து – நவீனப் பயிற்சி முறைக்கு வெளிநாடுகளுக்கு அனுப்பி, தரமான தொழில் நுட்ப வல்லுநர்களை சந்தடியில்லாமல் உருவாக்கிக் கொண்டும் வருகிறது” என்கிறார் பொது மேலாளர் எஸ். ராமதாஸ்.

தொழிலாளர்களின் நலனுக்குத் தொழில் வளாகத்திற்குள்ளேயே மருத்துவமனை. உணவு விடுதி, ஓய்வில்லம்.

உணவு விடுதியில் சாப்பாட்டிற்கு ரூபாய் 2,–ம், சிற்றுண்டிக்கு ரூ 1–ம் கட்டணம். ஒரே நேரத்தில் 672 பேர் இந்த உணவு விடுதியில் உணவருந்தலாம்.

ஒசூரில் இருக்கும் 'டைட்டன்' நிறுவனத்துடன் உ.பி.யில் டேராடூனில் ஒரு பிரிவும், ஊட்டியில் கடிகாரப் பகுதிகளைக் கோக்கும் ஒரு பிரிவும், தில்லியில் அமெரிக்க நிறுவனத்துடன் இயங்கும் 'டைமேக்ஸ்' பிரிவும் 'டைட்டன்' நிறுவனத்தின் மற்ற அங்கங்கள்.

இப்படி கைக் கடிகார உற்பத்தியில் தனியிடத்தைத் தக்க வைத்துக் கொண்டுள்ள 'டைட்டன்' நிறுவனம் பொன் ஆபரண உற்பத்தியிலும்



தன்னிகரில்லாச் சாதனையை ஒசூரில் படைத்து வருகிறது.

ஆபரண உற்பத்திப் பிரிவு அதே ஒசூர் தொழிற்பேட்டையில் 8 ஏக்கர் பரப்பளவில் 1993 ஆம் ஆண்டு முதல் இயங்கி வருவதையும் நாம் அறிந்திருந்தோம். அந்தத் தொழிலகத்திற்குள் நம்மை அழைத்துச் சென்றவர் மக்கள் தொடர்பு அதிகாரி எஸ்.சுப்பராமன்.

நகைகள் பிரிவுக்குள் நமக்கு அறிமுகமானவர் ப்ரியா. 18 காரட் தங்க நகைகளைப் பரவலாக உற்பத்தி செய்திருந்த இக்கூடம் தற்போது 22 காரட் தங்க நகைகளை அதிக அளவில் உற்பத்தி செய்கிறதாம். அத்துடன் 9 காரட், 14 காரட், 18 காரட் நகை வகைகளையும், பல தரப்பட்ட கலர்களில் தயாராகும் தங்க நகைகளையும்; கற்களுடன் பதிக்கப்பட்ட நகை வகைகளையும் விளக்கினார்.

முழுவதும் குளிர் ஊட்டப்பட்ட 'டைட்டன்' நகைத் தயாரிப்புக் கூடத்தை வலம் வந்தோம்.

வெட்டியெடுக்கப்படும் தங்கத்தை உருக்க ஒரு பிரிவு. உருக்கப்பட்ட தங்கம், காரட் வகைகளுக்கு ஏற்ப நீண்ட பகுதிகளாக்க ஒரு பிரிவு.

மற்றொரு பிரிவில் செய்யப் போகும் வடிவத்தை முதலில் வெள்ளியால் வடிவமைக்கிறார்கள். வடிவமைத்த பாகத்தை மெழுகினால் ஒற்றி எடுத்து – அதை ஒரே பகுதியாகக் கொண்டு



தீவிர பரிசோதனை



வந்து – ஒரு சிலிண்டர் வடிவத்திற்குள் இணைக்கிறார்கள். சிலிண்டருக்குள் 'இன்வெஸ்ட்பெண்ட் பவுடர்' என்னும் ஒருவித வெள்ளைத் தூளை நிரப்பி கொதிகலன்களுக்குள் செலுத்தி தங்கத்தைச் சீராக ஊற்றுகிறார்கள்.

குறிப்பிட்ட நேரத்தில் மெழுகு அச்சு உருகி – அந்த இடங்களில் மெழுகு அச்சுக்குப் பதில் அங்கே தங்க அச்சு இடம்பிடித்து விடுகிறது. ஒரே பாகமாக வரும் இந்தத் தங்க அச்சுகளை நுணுக்கமாகப் பிரித்தெடுக்கிறார்கள்.

அதில் தேவையான இடங்களில் தரமான கற்களைப்பதித்து – மெருகூட்ட விதவிதமான 22 காரட் ஆபரணங்கள் தயார். மொத்தம் 14 பிரிவுகளில் முழுமையான தங்க நகைகள் தயாராகின்றன. உலகக் கிரிக்கெட் போட்டியின் 'டைட்டன்' தங்கக் கோப்பை தயாரானதும் இந்தத் தொழிற்கூடத்தில் தான். தூய்மை, அமைதி, சுறுசுறுப்பான இளம் தொழிலாளர்களுடன் டைட்டன் நிறுவனத்தின் இந்த 'டானிஷ்' (TANISHQ) பிரிவு சிறந்து விளங்குகிறது.

சிறந்த தரத்தை அடையும் முறைகளுக்கு 'டைட்டன் இன்டஸ்ட்ரீஸ் லிட்'டின் நிர்வாக இயக்குநர் திரு.ஜெர்ஜெக்ஸ் தேசாய் விளக்கினார்:

போட்டிகள் நிரம்பிய இன்றைய சூழ்நிலையில் – வியாபாரச் சந்தையையும், தரத்தில் மேம்பட்ட பொருள்களைச் செய்வதற்கு உகந்த நவீன தொழில் நுட்ப முறைகளையும் புரிந்து கொள்ளுதல் அவசியம்.

அதற்கு ஊழியர்களுக்குப் பயிற்சி அளித்தும், நல்வழி நடத்தியும் அவர்களிடத்திலே தொலைநோக்குப் பார்வையையும், பொறுப்புணர்வையும் மலரச் செய்ய வேண்டும்.

சரியான உற்பத்தி செயல்முறைகளில் முதலீடு செய்ய வேண்டும். மூலாதாரத் திறமைகளை வளர்க்க வேண்டும். விஞ்ஞான ரீதியாக முடிவெடுக்க வேண்டும். மாறுபடும் சூழ்நிலைகளுக்கேற்ப முன்னேற்ற முறைகளைத் தொடர வேண்டும். நடைமுறையில் உள்ள



விதிமுறைகளையும், அணுகுமுறை களையும் கடைப்பிடிக்க வேண்டும்.

பலவிதமான பொருள்களுக்கும், சேவைகளுக்கும் நுகர்வோர் அளிக்கும் பணத்திற்கு அவர்கள் திருப்திப்படும் வண்ணம் எப்பொழுதும் மிகச் சிறந்த மதிப்பளிக்க வேண்டும். உள்ளூர் மற்றும் மாநில, தேசிய, உலக சமுதாயங்களுக்கு நமக்குரிய குறிக்கோள்களை கவனம் வைத்திருக்க வேண்டும்."

—இவையே சிறந்த தரத்தை அடையும் முறைகள் என்பது 'டைட்டன் இன்டஸ்ட்ரீஸ் லிட்'டின் துணைத் தலைவர் – நிர்வாக இயக்குநர் திரு.ஜெர்ஜெக்ஸ் தேசாயின் ஆணித்தரமான கருத்து.



ஏறத்தாழ 5 மணி நேரம் கழிந்ததே தெரியவில்லை. தொழிற்சாலையைச் சுற்றிப் பார்க்க முழு நாளே வேண்டும் போலத் தோன்றுகிறது. தங்க ஆபரணங்கள் தொழிலகத்திலிருந்து பிரிய மனமில்லாமல் விடை பெற்றோம். 30 கி.மீ. தொலைவிலுள்ள பங்களூர் நிர்வாக அலுவலகத்திற்கு விரைந்தோம்.

நிர்வாக அலுவலகத்தில் மக்கள் தொடர்பு மேலாளர் திருமதி ஜெயந்தி பிரசாத், தொழிற்கூடம் தொடங்கப்பட்ட நிலையையும், அதற்கு உதவிய பத்திரிகையாளரும் வரலாற்று நிபுணரு மான திரு ஐராவதம் மகாதேவனின் உதவியையும் நினைவுகூர்ந்தார்.

டைட்டனின் தரம் என்பது –

மகத்தான பொருள் மற்றும் நுகர்வோருக்கு மகத்தான சேவை ஆகியவற்றை அளிப்பதில் மட்டுமின்றி, மகத்துவத்தைத் தேடும் சிந்தனை செயல்பாடு, நிறுவனத்தின் ஒவ்வொரு செயல்பாட்டிலும், நிறுவனத்தின் ஒவ்வோர் ஊழியரிடத்திலும் ஒன்றி யிருத்தல். மகத்துவத்தை ஈட்டுவதன் மூலம் சமுதாயத்தில் புகழ் மற்றும் மதிப்பை ஈட்டுதல்!

ஒசூர் தொழிற்கூடத்தின் அலுவலகத்தில் பார்வைக்காக வைக்கப்பட்டிருந்த திரு.ஜெர்ஜெக்ஸ் தேசாயின் வாசகங்கள் நம் நினைவிற்குள் வருகின்றன.

அந்த நினைவுகளுடன் – உலகின் உன்னதமான உற்பத்திக்குத் தன்னை ஆட்படுத்திக் கொண்டிருக்கும் 'டைட்டன்' நிறுவனத்தின் வளர்ச்சி யையும் எண்ணி விடைபெறுகிறோம். தமிழகம் – இந்தியா மட்டுமன்று; உலக முழுதும் தன்னைத் தரமான நிறுவனமாக டைட்டன்' நிலைப் படுத்திக் கொள்ளும் தூரம் அதிகமில்லை!



– **மாலதி நாகராஜ்**

**போட்டோ – யோகா**



மாடத்தில் உற்சவ வடக்கு நாதர்.

# கோலாகலமான கோயில் நகரம்

லக்ஷ்மி ரமணன்

"அம்புலியும் நல்லதும்பையும் சார்த்துன்ன
தம்பிரான் என்ற வடக்குநாதா.
மங்கல்யமில்லாத மங்கையர்க்கு
மங்கல்யம் நல்கும் வடக்குநாதா
இல்லவும் செல்லவும் நெல்லும் பணங்களும்
எல்லாம் வழங்கும் வடக்குநாதா
நின் திருப்பாதங்கள் சேவிப்பவர்க்குள்ள
தாபங்களை அகற்றும் வடக்குநாதா
என் துன்பமகற்றி அனுக்கிரகிப்பாய்
சங்கர ஸ்ரீகண்டா பன்னக பூஷணா
நின் திருப்பாதங்களை வந்திக்கிறேன்."

பழந்தமிழ் நாட்டில் கேரளம் சேர மன்னர்களுடைய ஆட்சிக்கு உட்பட்ட பிரதேசமாக இருந்தது. இன்றைய 'திருச்சூர்' நகரம் 'திருச்சிவபேரூராக' இருந்தது. திருச்சூருக்குப் புகழ்சேர்க்கும் வடக்கு நாதன் 'வடகுன்றுநாதன்' என்று அழைக்கப்பட்டாராம். கயிலாய மலை வடக்கில் உள்ளதைப் போல், சற்றே மேடிட்ட குன்றுப் பிரதேசத்தில் கோயில் அமைந்துள்ளதால் இந்தப் பெயர் ஏற்பட்டதாம்.

இந்தக் குன்றின் உயரம் 181 அடி. ஆனால், இதைக் குன்று என்று ஊகிக்க முடியாத அளவுக்கு மேடிட்ட பிரதேசம். தென்கயிலை என்றும் (தக்ஷிண கயிலாயம்) என்றும் இதைக் குறிப்பிடுவதுண்டு.

வடக்குநாதர் கோயில் மிகவும் பழைமையானது. ஆதிசங்கரர் தோன்றியதே வடக்குநாதரின் அருளால்தான் என்பதால் இதன் தொன்மை விளங்கும்.

ஆதி சங்கரரின் தாய் ஆர்யாம்பாள், சிவ பக்தை. அவள் கனவில் வடக்குநாதன் தோன்றி, "உனக்கு அதிபுத்திசாலியும், குறைவான ஆயுளும் கொண்ட மகன் வேண்டுமா? அல்லது பூர்ணாயுளுடன் கூடிய புத்தியற்ற பிள்ளை வேண்டுமா?" என்று கேட்க, தனக்கு புத்திசாலியான மகன்தான் வேண்டும் என்று ஆர்யாம்பாள் கேட்டுக் கொண்டாளாம். தாமே, அவள் மகனாக வந்து அவதரிக்கப் போவதாக இறைவன் அருளிச் செய்தாராம். இந்தக் கோயிலின் வழிபாடு முறைகளையும் ஆதி சங்கரரே ஏற்படுத்தி வைத்திருக்கலாம் என்று நம்பப்படுகிறது.

ஸ்தல புராணத்தை ஆராயும் பொழுது, இது ஒரு பரசுராம க்ஷேத்திரம் என்பது புரிகிறது. பரசுராமர் தான் கேரளத்தை உருவாக்கினார் என்பது ஓர் அபிப்பிராயம். பித்ரு வாக்ய பரிபாலனம் செய்யக் கணக்கிலடங்கா க்ஷத்ரியர்களைக் கொன்று, அந்தப் பாபத்திற்குப்

பாரமைக்காவு கோயில் வெளியில் பூரம் விழா தொடக்கம்





பாரமைக்காவு பகவதி



திருவம்பாடி கிருஷ்ணன்

பிராயச்சித்தம் செய்ய எண்ணி இங்கே கோயில்களை ஏற்படுத்த நினைத்தாராம். அதன்படி தன் மழுவை எறிந்து சமுத்திரராஜனை விண்ணப்பித்துக் கொள்ள, சமுத்திரராஜன் கன்யாகுமரி வரை பின் வாங்கிச் செல்ல, மத்தியிலுள்ள பிரதேசத்தில் அநேக கோயில்கள் ஏற்படுத்தப்பட்டன.

வடக்குநாதர் கோயிலை எழுப்ப பூமியை மேல் மட்டத்துக்கு எழுப்பி, அதில் எழுந்தருளும்படி பரமேஸ்வரனைக் கேட்டுக் கொண்டாராம். கோயிலை எழுப்புவதில் அந்தணர்கள் முனைந்திருக்க கயிலைநாதன் சக்தியுடன் வந்து உள்ளே செல்ல முடியாமல் வெளியிலிருந்த ஆல மரத்தில் இறங்கி விட்டாராம். தன் பரிவாரங்களில் ஒருவரான சிம்மோதரனை ஏவி, உள்ளே ஏற்பாடுகள் முடிந்து விட்டனவா என்று பார்த்து வரும்படி எம்பெருமான் அனுப்ப, அவன் கோயிலின் பிரதான இடத்தைத் தானே ஆக்கிரமித்து விட எண்ணி, திரும்பி வராமல் தங்கிவிட, எம்பிரான் அவனைக் காலால் உதைத்துத் தள்ளிய இடத்தில் அவனுக்கான கோயில் உள்ளது.

இறைவன் கோயிலுள் இருந்த ஸ்தம்பங்கள் ஒன்றில் ஜோதி மயமாய் உறைந்து போக, அதுவே இங்கு மூலஸ்தானமாயிற்று. நெய் அபிஷேகம் செய்து, ஈஸ்வரனை அலங்கரிக்கிறார்கள். எப்படிப்பட்ட வேனிற் காலத்திலும் நெய் உருகுவதில்லை. இந்த ஊரின் ஸ்தல விருட்சம் ஆலமரம் என்பது சொல்லாமலேயே விளங்கும்.

வடக்குநாதரின் கர்ப்பக்கிருகம் வட்ட வடிவமானது. அர்த்த மண்டபத்துடன் இணைந்தது. மேற்கு முகமாக வடக்குநாதர் சந்நிதியும் அதிலேயே கிழக்கு முகமாய் பார்வதி தேவியின் சந்நிதியும் அமைந்துள்ளன.

கர்ப்பக்கிருகத்தில் ஏற்றி வைக்கப்பட்டுள்ள எண்ணற்ற எண்ணெய் விளக்குகளின் வெளிச்சத்தில் வடக்குநாதரைத் தரிசிக்கிறோம். பிறைச் சந்திர வடிவ ஆரஷணங்களில் அலங்காரம். சிவன் கோயிலானாலும் பிரசாதம் சந்தனம் தான். இங்கு திருநீறு வழங்கப்படுவதில்லை. இதன் வெளிச்சுவர்களில் சிற்பங்கள் எதுவுமில்லை. துவாரபாலகர் சிலைகள் மட்டுமே உள்ளன. கர்ப்பக்கிருகத்தின் மேற்கூரை செம்புத் தகடுகளால் வேயப்பட்டது. இதற்கு முன்னே மகா மண்டபம் உள்ளது. கேரள பாணியில் இரண்டுக்கும் நடுவில் இடைவெளி உள்ளது.

கோயிலில் பிள்ளையார் சந்நிதி இருந்தாலும் கிரமப்படிதான் இங்கு த்ரிசனம் செய்ய வேண்டும். கேரளத்தில் சிவன் கோயிலை முழுப் பிரதட்சிணம் செய்யும் வழக்கம் இல்லை. மாறாக மூலவரைத் தரிசிக்கும்பொழுது நம் இடப் பக்கமாய்ப் பிரதட்சிணத்தைத் தொடங்கி, பின்புறம் வ்ரை போய் விட்டுத் திரும்பி விட வேண்டும். பிறகு பக்கவாட்டில் வலப்பக்கம் பாதி வரையில் சென்று திரும்பிவிட

வேண்டும். முழுவலம வந்தால் சிவனுக்கு அபிஷேகம் செய்வித்த தீர்த்தத்தைக் கடக்க நேரிடும் என்பதால் இப்படியாம்.

எனவே, முதலில் வடக்குநாதர் தரிசனம். பிறகு கணபதி, தொடர்ந்து பார்வதி அடுத்து சங்கர நாராயணன், பின் இராமர் என்று வரிசையில் தரிசித்து, பின்னர் வந்த வழியே சிரமப்படி தரிசனம் செய்து கொண்டு 'ரிவர்ஸி'ல் போய் வடக்குநாதரில் முடிக்க வேண்டும்.

சங்கர நாராயணர் கோயில் வட்ட வடிவமானது. இராமர் கோயில் சதுர வடிவம் கொண்டது. மேலே குறிப்பிட்ட கோயில்களைச் சுற்றிப் பிராகார மண்டபங்கள் உள்ளன. அங்கிருக்கும் ஆயிரக் கணக்கான விளக்குகளைப் பண்டிகை நாள்களில் எண்ணெய்த் திரியிட்டு ஏற்றும்போது பார்க்க ஜோதிமயமாய் இருக்கும். இராமர் மற்றும் சங்கர நாராயணர் கோயில் களின் கூரைகளிலும், பிராகாரங் களிலும் இராமாயண, பாகவதக் காட்சிகள் ஒவியமாகத் தீட்டப் பட்டிருப்பதைக் காணலாம்.



திருவம்பாடி கோயில் வெளிப்புறமும் கேரளபாணி கோபுரமும்

இங்கு வடக்குநாதருக்கு 'இடபக்குன்றின் நாதன்' என்கிற பெயரும் உண்டு. புராணம் ஐதீகம் எல்லாம் இந்த இடத்தை ரிஷபத்துடன் இணைத்தாலும், ஒரு காலத்தில் கேரளத்தில் ஜைன மதம் தழைத்தோங்கி இருந்ததாகவும், இன்று வடக்குநாதர் கோயில் இருக் கும் இடத்தில் ஜைன மதாச்சாரி யாராயிருந்த ரிஷபதேவரின் கோயில் இருந்திருக்கலாம் என்றும் அனுமானிக்கப்படுகிறது.

மேலும், வடக்குநாதரின் வெளிப்பிராகாரத்தில் ரிஷபருக்கு ஒரு கோயில் உள்ளது. காளை மாடு சிவனுடைய வாகனம் என்கிற முறையில் பூஜை, நிவேதனம் எல்லாம் உண்டு. கோயிலின் கதவு மூடியே இருக்கும். ஒரு துவாரத்தின் வழியே தான் தரிசனம் செய்ய வேண்டும். கை சொடுக்குப் போடும் போது, நம் ஆடையிலிருந்து ஒரு நூலை எடுத்து அங்கே போட வேண்டுமாம். ரிஷபர் எப்போதும் நித்திரையில் இருப்பதால் அவரை சொடுக்குப் போட்டு எழுப்பி தரிசனம் செய்வதாயும், ஆடையின்றி இருப்பதால் நூல் கொடுப்பதாயும் ஐதீகமாம். இது கொஞ்சம் விசித்திரமான பழக்கம்தான். இது தவிர, உள் பிராகாரத்தில் நுழையும் இடத்தில் ஒரு வெள்ளை நந்தியும் உள்ளது.

வைகுண்டநாதர் கோயில்



பிராகாரத்திலேயே பரசு ராமருக்கும் கோயில் இருக்கிறது. இத்துடன் சம்பந்தப்படுத்தப்பட்ட சுவாரசியமான கதை ஒன்றும் சொல்லப்படுகிறது. பாசுபதம் பெற்ற பிறகு அர்ச்சுனன் வட கயிலாயத்தில் சிவபெருமானைத் தரிசிக்கச் சென்று, அங்கே அவரைக் காணாமல், திருச்சூருக்கு வருகை தந்து வடக்குநாதரைத் தரிசித் தானாம். கோயில் பிராகாரத்தை வலம் வரும் பொழுது பரசுராமர் கோயிலைக் கண்டு, க்ஷத்திரிய வைரியான அவர் தன்னைப் பார்த்தால் ஆவேசம் கொள்வாரோ என்று பயந்து, தன் வில்லை ஊன்றிக்கொண்டு சுவரைத் தாண்டி வெளியே குதித்தானாம். அந்த வில்லின் முனைபட்ட இடத்தில்




குடைமாற்றம் - பூரம் திருவிழா

குழி ஏற்பட்டு, பின்னர் அதிலிருந்து சுனை உற்பத்தியாயிற்றாம். அந்தச் சிறு குளத்தில் கை, கால் முகம் கழுவி தரிசனம் செய்ய விழைவது அந்தக் காலப் பழக்கமாம்.

பிராகாரத்தில் கூத்தம்பலம் என்கிற பெரிய அரங்கம் உள்ளது. சதுர வடிவில் செப்புக் கோயிலைப் போல் கலசம் வைக்கப்பட்ட இந்தக் கூடத்தில் சுமார் ஆயிரம்பேர் ஒரே சமயத்தில் உட்கார்ந்து கலை நிகழ்ச்சிகளைப் பார்வையிடலாம். எங்கு நின்று பார்த்தாலும் அரங்க மேடையிலுள்ளவர்கள் பேசுவதும் பாடுவதும் நன்றாகத் தெரியும்.

பிரபல நடன விற்பன்னரான ருக்மிணி அருண்டேல், இந்தக் கூத்தம்பலத்தைக் கண்டு அதே பாணியில் அடையாறு கலா க்ஷேத்திரத்திலும் கட்டுவித்தாராம்.

தொடக்கத்தில் கூரைமீது ஓர் ஓலைக் கீற்று மட்டும் வேயப்பட்டிருந்ததாம். சென்ற நூற்றாண்டில் கொச்சி ராஜ்யத்தின் திவானாக இருந்த சங்குண்ணி மேனன் காலத்தில் செம்புத் தகடு வேயப்பட்டதாம்.

முன்னாள்களில் இங்கு சாக்கையர் கூத்தும் 'கூடியாட்டம்' என்கிற வடமொழி நாடகங்களும் அரங்கேற்றப்பட்டு வந்தனவாம்.

சிலப்பதிகாரத்தில் வஞ்சிக் காண்டத்தில் நடுகற்காதையில் "பார்த்தரு நால்வகை மறையோர் பறையூர்க் கூத்தச் சாக்கையன் ஆடலின் மகிழ்ந்து" என்ற ஓர் அடியில் இளங்கோ அடிகள் சாக்கையரைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

இதற்கு விளக்கம் கூறும் வகையில், தமிழ்த் தாத்தாவான உ.வே. சுவாமிநாதய்யர்அவர்கள், "சாக்கையர் என்னும் ஒருவகைச் சாதியார் இப்பொழுதும் கூத்தை நிகழ்த்தும் தொழிலை உடையவர்களாய் மலை நாட்டில் உள்ளார் என்று தெரிகிறது" எனக் குறிப்பிட்டுள்ளார்.

கூத்தைத் தொழிலாகக் கொண்ட சாக்கையர் இன்றும் கேரளத்தில் இருக்கிறார்கள். சாக்கையர் நடிக்கும் கூடியாட்டத்தில் தாளத்தோடு கூடிய அபிநயம் அதிகமாம். புராணக் கதைகளை ஒருவரே சொல்லி அபிநயிப்பதற்கு சாக்கையர் கூத்து என்று பெயராம்.

நாடகங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட நடிகர்கள் நடிப்பதால் அதற்குக் கூடியாட்டம் என்று பெயர். இந்த அபிநயத்திற்கு, தாளவாத்யம் முழவு ஆகும். இதை வாசிப்பவர்கள்

வடக்குநாதர் கோயில் உள்ளே பூரம் ஊர்வலம்



நம்பியார் என்றழைக்கப்படும் அம்பலவாசிகளாவர்.

அரங்கிற்கு முன்னால் ஒரு பெரிய குத்துவிளக்கு ஏற்றி வைக்கப்பட்டு, அதன் பிரகாசத்தில் நிகழ்ச்சி தொடங்கும். இதைக் காண மன்னர் மாறு வேடத்தில் வருவாராம். நிகழ்ச்சியின் நடுவில் மன்னரின் ஆட்சியைப் பற்றிய விமரிசனங்களும் வசனங்களாகச் சேர்க்கப்படுமாம். மக்களின் உண்மையான பல்வேறு அபிப்பிராயங்களையும், அரசைப் பற்றின கருத்துகளையும் அறிய, இத்தகைய கூடியாட்டங்கள் பயன்பட்டன என்று தெரிகிறது.

கோயிலின் தெற்குக் கோபுரமும் அத்துடன் இணைந்த சுவரும் கொடுங்கல்லூர் அரசு குடும்பத்தாரால் கட்டப்பட்டனவாம். கொடுங்கல்லூர் பகவதி அம்மன் கோயில், கேரளத்தில் மிகப் பிரசித்தம். தெற்குக் கோபுரத்தை நெருங்கும் பொழுது பக்தர்கள் கொடுங்கல்லூர் பகவதியை நினைத்துக் கும்பிடுகிறார்கள்.

ஆதிநாளில் தெற்கு வாசலுக்கு வெளியே அடர்ந்த காடுகள் வளர்ந்து, வன விலங்குகளின் உறைவிடமாக விளங்கியதாம். எனவே, கொடிய குற்றங்கள் செய்தவர்களைத் தண்டிக்க, இந்தக் கோபுர வாசல் வழியே குற்றவாளிகளை வனத்துக்குள் அனுப்பிவிடுவார்களாம்.

மேற்கு கோபுரத்துக்கு அருகில் நான்கு பக்கமும் மேடை கட்டி சதுரமான கருங்கல் ஒன்றைப் பாதுகாத்து வருகிறார்கள். கோயில் தரிசனத்தை முடித்துக் கொண்டு வருகிறவர்கள், இதன் மீது சிறிது பிரசாதத்தை எறிய வேண்டுமாம். இதைக் கலிக்கல் என்கிறார்கள். இது நாளுக்கு நாள் வளர்ந்து வருவதாக நம்பப்படுகிறது. கலி முற்றும் போது இந்தக் கல் கோபுர உயரத்திற்கு வளர்ந்து விடும் என்று மக்கள் நினைப்பதால், அதைத் தடுக்க இங்கே பிரசாதத்தை சிறிதளவாவது எறிந்து செல்கிறார்கள்.

பிராகாரத்தில் சங்கு சக்ர இடம் என்று உள்ளது. அங்கு ஆதி சங்கரரின் கோயில் உள்ளது. இந்த இடத்தில் தான் அவர் சமாதியானாராம். தன் அத்வைதப் பிரசாரத்தை ஆதி சங்கரர் வடக்குநாதர் கோயிலில் தான் தொடங்கினார் என்கிற முறையில் இது சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகிறது.



ஆஞ்சநேயர் சஞ்சீவினி மலையை எடுத்துக் கொண்டு, ஆகாய மார்க்கமாய்ச் செல்லும் பொழுது பல மூலிகைச் செடிகள் கோயிலின் வெளிப் பிராகாரத்தில் விழுந்து சிதறினவாம். இதை யொட்டி தரிசனம் செய்ய வரும் பக்தர்கள், இங்கிருந்து ஒரு புல்லையாவது உடன் எடுத்துச் செல்லுவது வழக்கம்.

ஐயப்ப சுவாமி கோயிலுக்குப் பக்கத்தில் தெற்கு கோபுரத்துக்கு அருகில் ஒரு மேடை மீது சில விக்கிரகங்களைக் காணலாம். இவற்றை 'பூதங்கள்' என்று குறிப்பிடுகிறார்கள்.

தென் கயிலாயம் என்கிற முறையில் இரவு பூஜைக்குத் தேவ கணங்கள் கோயிலுக்கு வருவதாக ஐதீகம். அதனால் இரவு பூஜைக்கு வருகிறவர்கள் அது முடிந்த பின்னரே வீடு திரும்ப அனுமதிக்கப் படுவார்கள்.

வடக்குநாதர் கோயிலுக்கு அடுத்தபடியாக பரமைக்காவு பகவதி அம்மன் கோயிலும், திருவம்பாடி பகவதி அம்மன் கோயிலும் இந்த ஊரில் பிரசித்திமிக்கவை. வைகுண்டநாதர் கோயிலையும் அதில் சேர்த்துக் கொள்ளலாம்.

திருவம்பாடியில் மூலஸ்தானம் கிருஷ்ணனுக்குத்தான். இருந்தாலும் ஊரகத்து அம்மன் இந்தப் பகவதி. பரமைக்காவு பகவதியைப் பேரகத்து அம்மன் என்கிறார்கள். இளம் பெண்ணாய், கருணை முகமும் அருள் சிந்தும் விழிகளுமாய், மல்லிகை, மந்தாரை, நந்தியாவட்டை போன்ற வெள்ளை நிறமலர்களால் அலங்கரிக்கப்பட்டு சாந்நித்யத்துடன் விளங்குகிறாள் தேவி. தினமும் மாலை ஆறு மணிக்கெல்லாம் பகவதி கோயில்கள் மூடப்பட்டு விடுகின்றன.

திருச்சூரில் பூரம் விழா உலகப் பிரசித்தி பெற்றது. இது ஆதி காலத்திலிருந்தே கொண்டாடப்பட்டு வருகிற விழா. சித்திரை மாதத்துப் பூரம் இங்கே சிறப்பான விசேஷமாகக் கொண்டாடப்படுகிறது. அப்போது வடக்குநாதரை (உற்சவரை) அலங்கரித்து யானை மீது ஊர்வலமாகக் கொண்டு வருகிறார்கள். அப்போது திருவம்பாடி, பரமைக்காவு பகவதி அம்மன்கள் உட்பட, கேரளத்திலுள்ள அத்தனை பகவதி அம்மன் கோயில்களிலிருந்தும் பிரதிநிதிகள் விழாவில் கலந்து கொள்ள வருவது முக்கிய அம்சம்.

முன்னாளில் பூரம் திருவிழா 'ஆறாட்டுப்புழா' என்கிற இடத்தில் நடத்தப்பட்டு வந்ததாம். ஒருமுறை பலத்த மழை பெய்து வழி எல்லாம் வெள்ளக்காடாக ஆகிவிட, திருச்சூரிலேயே அவ்வாண்டு முதல் பூரம் திருவிழா நடக்கத் தொடங்கியதாம். இதில் கணிமங்கலம், காரைமுக்கு; நைதிலக்காவு செம்பூக்காவு, சூரங்காட்டுக்கரை பகவதி போன்ற கோயில்களிலிருந்து பிரதிநிதிகள் வந்து கலந்து கொள்கிறார்கள் வடக்குநாதர் கோயில் அமைந்த மேட்டுப் பிரதேசத்தில், அலங்கரிக்கப்பட்ட யானைகள் மீதிருந்து இவர்கள் குடைமாற்றம் செய்து கொள்வதைக் காண லட்சக் கணக்கில் மக்கள் திரண்டு வருகிறார்கள்.

வெடி வழிபாடும், வாண வேடிக்கைகளும் இந்த வண்ண விழாவின் முக்கிய அம்சங்கள். இந்தக் கோலாகலங்கள் இரண்டு நாள்களுக்குத் தொடருகின்றன. அந்தந்தக் கோயில்களிலிருந்து யானைகளின் புறப்பாடும், ஊர்வலமும், தெருக்களில் மனிதப் பிரவாகமும் கண்கொள்ளாக் காட்சி.

பூரம் திருவிழாவில் முப்பது யானைகள் அலங்கரிக்கப்பட்டுப் பங்கேற்கின்றன.

திருச்சூரை ஒரு கலாச்சாரத் தலைநகரம் என்று சிறப்பாக வர்ணிப்பதுண்டு. லலித்கலா அகடமி, சங்கீத நாடக அகடமி, சாஹித்ய அகடமி எல்லாமே இங்குள்ளன. பூரம் திருவிழா இந்நகருக்கு அதிகமான முக்கியத்துவத்தைச் சேர்த்து அந்தக் கூற்றை மெய்ப்பிக்கிறது.

(இந்தக் கட்டுரையை எழுத தகவல்களைச் சேகரித்துத் தந்து உதவிய திரு. டி. பி. ஸ்ரீராமன் அவர்களுக்கு என் நன்றி)



# கறுப்பு ஆடு

## வித்யா சுப்ரமணியம்

காலையிலிருந்தே இருப்புக் கொள்ளாமல் பறக்கும் கணவனைப் பார்த்துச் சிரிப்பு வந்தது. அடக்கிக் கொண்டேன். நிமிடத்திற்கொரு முறை கடிகாரத்தைப் பார்ப்பதும் உள்ளுக்கும் வாசலுக்கும் நடப்பதுமாய் நேரத்தைக் கடத்திக் கொண்டிருந்தார். இடை யிடையே அடுக்களை வாசற்படியில் வந்து நின்று, "வேணி! சொன்னதெல்லாம் நினைவிருக்கா?" என்று கேட்டபோது சிரிப்போடு எரிச்சலுமேற்பட, "அடடா.. எல்லாம் நினைவிருக்கு. சித்த நாழி படுத்துக்கட்டும்! மணி பன்னண்டுதான் ஆறது. இன்னும் நிறைய நாழி இருக்கு" என்றபடி என் வேலையைப் பார்க்க முனைந்தேன். அப்படியும் திருப்திப் படாமல் உள்ளே வந்து அடுப்படி மேடையருகில் என் வசதிக்காகப் போட்டு வைத்திருந்த மர ஸ்டூலின் மீது உட்கார்ந்து கொண்டார்.

"மாமாவுக்கு எல்லாத்துலேயும் தேங்காய் போடணும் வேணி! சாம்பார்ல, கறியில, கூட்டுல எல்லாத்திலேயும் தேங்காய் போடணும். நாலஞ்சு காயா வாங்கியிருக்கேன் போறாதா?"

"போறாம என்ன? நாலஞ்சு காய்ல சீமந்த சமையலே பண்ணிடலாம்"

"எல்லாத்துலயும் இரண்டு சொட்டு தேங்காயெண்ணெய் விட்டுடு. வாசனை தூக்கலா இருக்கும் கறிவேப்பிலை போட மறந்துடாத!"

காலையிலிருந்தே இந்த மாதிரியான அறிவுரைகளைக் கேட்டுக் கேட்டு அலுத்து விட்டாலும் எரிச்சலை வெளிக்காட்டிக் கொள்ளாமல் சரி சரி என்று தலையாட்டி வைத்தேன்.

"சந்துருவுக்கு மிளகாய் பஜ்ஜின்னா உசிரு! நாளைக்குக்காலையிலே குண்டு மொளகா கிடைக்கறதான்னு பாக்கறேன். டிபனுக்கு அதைப் பண்ணிடு. சித்ராவுக்கு அவல் கேசரின்னா ரொம்பப் பிடிக்கும் அதையும் ஒரு நாள் பண்ணிடணும்'

"அவா நாய்க்குட்டி ஏதானும் கொண்டு வராளோ? இருந்தா அதுக்கும் என்னென்ன பிடிக்கும்னு இப்பவே சொல்லிடுங்கோ." இப்படி நான் சொன்னதும் அவர் என்னை ஒரு மாதிரியாகப் பார்த்து விட்டு, ஸ்டூலி லிருந்து கீழே இறங்கி ஒரு டம்ளர் தண்ணீரை அருந்திவிட்டு மீண்டும் கூடத்துக்குச் சென்று விட்டார். சொன்னபடியே எல்லாவற்றிலும் தேங்காயைப் போட்டுச் சமைத்து இறக்கி மூடி வைத்து விட்டு வெளியில் வந்த போது அவர் ஸ்டேஷனுக்குப் புறப்படத் தயாராக நின்றிருந்தார்.

"அப்போ நான் கிளம்பட்டா? டிகாக்ஷன் போட்டுட்டியா? வந்ததும் எல்லார்க்கும் டிகிரிக் காப்பி குடுத்துடு. என்ன?"

"ஆஹா" என்று நான் அலட்சியமாய் சிரித்ததும் அவர் அதற்கு மேல் எதுவும் பேசாமல் அவசரமாக வெளியில் இறங்கிச் சென்று விட்டார்.

என்ன கூத்துடாப்பா! என்ன கூத்து! மூன்று நாள்களாக இருப்புக் கொள்ளாமல் என்ன ஒரு பரபரப்பு! எதற்கு இத்தனை பரபரப்படைய வேண்டும்? ஊரிலிருந்து மாமா வருகிறார் என்றால் இப்படியா..? ஏதோ அக்கா பிள்ளை என்ற அன்பில் சின்ன வயதில் நாலு சினிமா டிராமாவுக்கு கூட்டிப் போனதையும், ஹோட்டலுக்கும் பீச்சுக்கும் கூட்டிப் போனதையும், பண்டிகைக்குத் துணிமணி எடுத்துக் கொடுத்ததையும் மறக்காமல், அந்த மாமா தன் வீட்டுக்கு வருகிறார் என்றதும் ஆகாசத்துக்கும் பூமிக்கும் குதியாய்க் குதிக்கிறாரே! அவ்விடமும் இந்தப் பாசமும் அன்பும் இருக்கிறதா என்பது அவர்கள் வந்த பின்புதான் தெரியும்.

ஏழு மணிக்கு அவர்கள் அனைவரும் வந்தார்கள். "வாங்கோ" என்று சிரித்தபடி வரவேற்றேன்.

"ஹலோ மன்னி! உங்க சமையல் தெரு முனை வரை மணக்கறது" என்றான் சந்துரு. மாமியும் அதை ஆமோதிப்பது போல் சிரிக்க எனக்குச் கூச்சம் ஏற்பட்டது.

"பாத்ரூம் எங்கே மூர்த்தி? ஒரே கசகசப்பாயிருக்கு குளிக்கணும்" என்றாள் சித்ரா. நவநாகரிகம் அவள் மேனியில் கடை விரித்திருந்தது. உண்மையில் மிக அழகாயிருந்தாள். ஹிந்தி நடிகை மாதிரி. இப்படி ஒரு பால் நிறம் கூட உண்டா என்று எனக்குள் வியப்பேற்பட்டது.

மாமா பெண்ணுக்கு பாத்ரூமைக் காட்டி விட்டு வந்தார் அவர் நான் அனைவருக்கும் காப்பி கலந்து கொண்டுவந்தேன்.

"எதுக்கு சாப்பிடற நேரத்துல காப்பி?" என்றார் மாமா, டம்ளரை வாங்கிக் கொண்டேதான்!

அவர்கள் அங்கிருந்த நான்கு நாள்களும் ஒரே கலகலப்பும் மகிழ்ச்சியும் அங்கே நிறைந்திருந்தன. கூச்சப் பேர்வழியான நானே கூட கொஞ்சம் கொஞ்சமாய் கலகலப்பாய் மாறினேன். அவர்களோடு நிறைய இடங்களுக்குப் போய் வந்தேன். ஷாப்பிங் என்ற பெயரில் என்னென்ன சாமான்களோ வாங்கிக் குவித்தார்கள் அவர்கள்.

நான்கு நாள்களும் விருந்து தடபுடல் பட்டது. சந்துருவும் சித்ராவும் சிரிக்கச் சிரிக்கப் பேசினார்கள்.

"நீங்களும் அவசியம் பெங்களூர்க்கு வரணும்" என்று நொடிக்கு நூறு முறை சொன்னார்கள். அவர்கள் அனைவரின் பேச்சிலும் ஒரு புத்திசாலித்தனமும் படிப்பறிவும் தெரிந்தன. நிறைய தர்ம நியாயங்களை. வார்த்தைக்கு வார்த்தை தத்துவங்கள் கலந்து அவர்கள் பேசிய போது வியப்பாயிருந்தது. அதிலும் மாமா நிறைய மேற்கோள்கள் காட்டிப் பேசுவதில் சமர்த்தராயிருந்தார். அரவிந்தர், விவேகானந்தர், பரமஹம்சர் என்று அத்தனை பேர் பொன்மொழிகளும் அவர்களுக்கு அத்துப்படியாய்த் தெரிந்திருந்தன.

ஐந்தாம் நாள் காலையில் அவர்கள் புறப்பட்டுப் போனதும் வீடு வெறிச்சென்று ஆகியது. வேலையே இல்லாதது போலிருந்தது. மூன்று மணிக்கே எழுந்து இட்லி வார்த்து மிளகாய்ப் பொடி தடவி. தயிர்சாதமும் கட்டி அவர்களுக்கு வழியில் சாப்பிடக் கொடுத்தனுப்பியது போக எங்களுக்கும் மீதியிருந்ததால் சமையல் வேலையில்லை. வீட்டைப் பெருக்கிச் சுத்தப்படுத்தி விட்டால் பிறகு இரவு வரை ரெஸ்ட்தான். கொடியில் கிடந்த துணிமணிகளை மடித்து வைக்கும் போதுதான் கவனித்தேன். இள ரோஜா நிறத்திலும் இளநீல நிறத்திலுமாக இரண்டு தேங்காய்ப் பூத் துவாலைகளும். தவிர இரண்டு உயர்ந்த ரகக் கைக்குட்டைகளும் பாத்ரூம் கொடியிலேயே கிடப்பதை. அது அவர்களுடையது. எடுத்து வைத்துக் கொள்ள மறந்திருக்கிறார்கள். என்ன செய்யலாம் என்று யோசித்தேன் என்ன செய்ய முடியும்? இந்நேரம் வண்டி புறப்பட்டிருக்கும். துவாலைகள் பத்திரமாய் இருப்பதாகவும் யாராவது இங்கிருந்து வந்தால் கொடுத்தனுப்புவ தாகவும் கடிதம் எழுதித் தெரிவித்து விடலாம். துவாலைகளையும் கைக் குட்டைகளையும் எடுத்து மடித்து பத்திரமாக பீரோவில் எடுத்து வைத்தேன்.

✤ ✤ ✤

"ஏன் வேணி.. டவல் ஏதாவது இங்க விட்டுட்டாங்களா என்ன?" வந்ததும் வராததுமாக அவர் கேட்டதும் "ஆமா எடுத்து வெச்சிருக்கேன்" என்றேன்.

"அவங்கதான் மறந்துட்டாங்கன்னா நீயாவது நினைவு படுத்தி எடுத்துக் கொடுத்திருக்கலாம். ஸ்டேஷனுக்குப் போய்த்தான் மாமிக்கு நினைவு வருது. புலம்பித் தீர்த்துட்டா. அதுக்கென்ன மாமி யாராவது வந்தாக். குடுத்தனுப்பறேன்னு சொல்லிட்டு வந்தேன்."

"சொல்லியாச்சில்லே? அத்தோட விடுங்க. இங்க யாரும் உங்க மாமியோட டவலைச் சாப்பிட்டுட மாட்டோம்." எரிச்சலோடு நான் பட்டென்று சொன்னதும் வாயை மூடிக்கொண்டு நகர்ந்து விட்டார்.

அதற்கு மறுமாதம் மாமாவிடமிருந்து கடிதம் வந்தது. சித்ராவுக்குத் திருமணம் நிச்சயமாகப் போகிறதாம். நிச்சயதார்த் தத்துக்கே கட்டாயம் வரும்படி எழுதியிருந்தார். அடியில் பிகு. என்று போட்டு 'நாங்கள் தவற விட்டு வந்த துவாலைகளையும், கைக்குட்டை களையும் மறக்காமல் எடுத்து வரவும்' என்றும் எழுதியிருந்தார்.எனக்குச்சிரிப்பு வந்தது. நாங்கள் கிளம்பும் போது சூட்கேஸில் முதலில் அவற்றைத்தான் எடுத்து வைத்தேன்.

முன்கூட்டியே மாமா வீட்டுக்கு கடிதம் எழுதியும் கூட ஸ்டேஷனுக்கு யாரும் வரவில்லை. சந்துரு கட்டாயம் வந்திருப் பான் என்று சொன்ன முகத்தில் ஈயாடவில்லை. என் நமட்டுச் சிரிப்பு கண்டு அசடு வழிந்தது அந்த முகத்தில். அரைகுறைக் கன்னடத்தில் ஆட்டோக் காரனோடு மன்றாடி ஒரு வழியாய் வீடு கண்டு பிடித்துப் போய்ச் சேர்ந்தோம்.

வீடு பெரிசாய் இருந்தது. "வாங்கோ" என்று அழைத்தார் மாமா. அக்கம்பக்கத்து பணக்கார சிநேகிதர்கள் அங்கே குழுமியிருந்தார்கள். சாண் அகலச் சரிகையோடிய பட்டுப்புடைவைகளும், வைர பேசரிகளும், நுனி நாக்கு ஆங்கிலங்களும், சூரிதார்களும் மிடிகளும் சித்ராவைச் சூழ்ந்து கொண்டிருந்தன.

"என்ன சித்ரா! உனக்கு என வாழ்த்துகள்" என்று அவளோடு மிக சிநேகமாகக் கை குலுக்கிச் சிரித்தேன். சித்ரா பதிலுக்கு லேசாய் சிரித்து விட்டு "எப்ப வந்தீங்க?" என்றாள். அதற்கு நான் பதில் சொல்வதற்குள் தன் தோழிகளோடு ஆங்கிலத்தில் உரையாடத் தொடங்கி விட்டாள். அங்கே யாரும் எனக்கு அறிமுகமில்லாத நிலையில் பொம்மை மாதிரி சற்று நேரம் உட்கார்ந்திருந்தேன். பிறகு கீழே சென்று மாமிக்காவது ஒத்தாசையாக இருப்போம் என்று கீழே வந்தால், மாமி தன் சிநேகிதிகளோடு அரட்டையில் ஆழ்ந்திருந்தாள். எல்லாவற்றிற்கும் வேலைக்காரர்கள்! மாமிக்கே எதுவும் வேலையில்லாத நிலையில் எனக்கென்ன வேலை?

"சித்ராவைப் பார்த்தாச்சா? நிச்சய தார்த்தத்துக்கு நான் எடுத்த புடைவை நன்னா இருக்கா?" என்றாள் மாமி.

'ம்..' என்று சிரித்தேன். அதற்குள் மாமி யாரையோ பார்த்து விட்டு எழுந்து போனாள். அத்தனை பெரிய கூட்டத்தில் ஏதோ வனாந்தரத்தில் மாட்டிக் கொண்டு விட்டது போல் உணர்ந்தேன்.

இரவு விருந்து முடிந்து கூட்டம் கலைந்ததும் சற்று சாவகாசமாக உட்கார்ந்த மாமியிடம் பெட்டியிலிருந்த துவாலை களையும் கைக்குட்டைகளையும் எடுத்துக் கொடுத்தேன்.

"ஓ! தேங்க்யூ. இது என் ராசியான டவல். அதான் கேட்டு எழுதிட்டேன். தவறா நினைச்சுக்காதே, என்ன?" என்றாள் மாமி.

அன்றிரவு அனைவரும் தங்கள் தங்கள் அறையில் போய்ப் படுத்துக்

கொண்டு விட்டனர். மாமி எங்களுக்கு ஹாலிலேயே இரண்டு நைலான் பாயும் தலையணையும் கொடுத்து "படுத்துக்கங்க" என்றாள். சோஃபாவுக்கு அருகில் சூட்கேஸை வைத்து விட்டு அதனருகில் பாயை விரித்தேன். படுத்துக் கொள்ளும் முன்பு தன் பாண்ட் பாக்கெட்டிலிருந்து பர்ஸை எடுத்து என்னிடம் கொடுத்தார் அவர். "பத்திரமா உள்ளே எடுத்து வை" என்றார். அதற்கு மேல், பெட்டியைத் திறக்க சோம்பேறித் தனமாக இருந்ததால் தலையணை உறைக்குள் பர்ஸை வைத்து விட்டுப் படுத்துக் கொண்டேன். காலையில் அதை எடுக்க மறந்து போனேன். மறுநாள் பிற்பகல் நாங்கள் ஊருக்குப் புறப்படும் வரை பர்ஸ் நினைவு எனக்கு சுத்தமாய் வரவில்லை.

ஆட்டோ பாதி வழி செல்லும் போதுதான் பர்ஸின் நினைவு வந்தது. 'கடவுளே' என்று தலையிலடித்துக் கொண்டேன். நல்ல காலம் ரயிலுக்கு இன்னும் நேரமிருந்தது. ஆட்டோவைத் திருப்பச் சொன்னோம்.

மாமி ஆச்சரியமாகப் பார்த்தாள். விஷயத்தைச் சொல்லி விட்டு வேகமாய் தலையணைகள் வைக்கப்பட்டிருந்த அறைக்குள் நுழைந்தேன். எல்லாம் ஒரே மாதிரியாக இருந்தன. ஒவ்வொன்றிலும்



கையை நுழைத்து பர்ஸைத் தேடினேன. ம்ஹூம் இல்லை. 'பக்'கென்றது.

"என்னாச்சு. இருக்கா?" என்றாள் மாமி.

"இதுல இல்லை. வேற ஏதாவது தலைகாணியோ?" என்று இழுத்தேன்.

"மற்ற தலகாணியெல்லாம் அவாவா ரூம்லதான் இருக்கு. அதுல எல்லாம் எப்படி போகும்? நீ எங்க வெச்சயோ? நன்னா யோசிச்சுப் பாரு.. ஊர்லேர்ந்து ஞாபகமாத்தானே பர்ஸ் கொண்டு வந்தீங்க?" மாமி இப்படி கேட்டதும் எரிச்சலை அடக்கிக் கொண்டேன்.

"பணமில்லாம எப்படி வருவோம் மாமி?" என்று சொல்லிக் கொண்டே மீண்டும் ஒரு முறை எல்லாத் தலையணையிலும் பர்ஸைத் தேடும் போதே மாமா, சித்ரா, சந்துரு எல்லாரும் வந்து விட, மீண்டும் ஏமாற்றம்தான்.

"நல்லா நினைவிருக்கு. உறைக்குள்ள தான் வெச்சேன்" என்றேன் மெல்லிய குரலில்.

"நல்லா இருக்குடியம்மா.. வெச்சா வெச்ச இடத்துலதானே இருக்கும்? காணலைன்னா என்ன அர்த்தம்? எங்க வீட்டுலதிருட்டுப் போச்சுங்கறயா?" மாமி லேசாய் உஷ்ணம் காட்டிப் பேசினாள்.

"அய்யோ நான் அப்படி சொல்லலை மாமி".

"பின்ன இதுக்கு என்ன அர்த்தம்? நீங்க தூங்கி எழுந்தப்பறம் இந்த ரூம்ல நீதானே கொண்டு வந்து வெச்ச தலைகாணி. பாயெல்லாம்? அதுக்கப்பறம் யார் வந்தா இங்கே, சொல்லு! அல்லது நீ வெச்சதுதான் யாருக்காவது தெரியுமா..? வீடு பெருக்கற வேலைக்காரி கூட இன்னிக்கு லீவு! இல்லாட்டா அவ மேல சந்தேகப்படலாம்."

"நீ என்னம்மா இப்படி சொல்ற? நம்ம வேலைக்காரி ஒரு தூசி எடுக்கறவ இல்லையே.. இல்லாட்டா பத்து பதினஞ்சு வருஷமா அவளை வேலைக்கு வெச்சிருப்போமா..?" என்றாள் சித்ரா.

பர்ஸையும் பறி கொடுத்து விட்டு அவர்கள் பேச்சும் தாங்காமல் தலைகுனிந்து நின்றிருந்தோம் நாங்கள்.

"உன் பாண்ட்லயே சரியாப் பாருடா" என்றார் மாமா.

"இல்ல மாமா இராத்திரி படுத்துக்கும் போது இவகிட்ட நான்தான் எடுத்துக் கொடுத்தேன்" என்றார் இவர்.




"டேய் சந்துரு போடா! போய் மத்த ரூம்ல இருக்கற தலைகாணிகளையும் எடுத்து வந்து போடு. நல்லா பார்த்துக்கட்டும். நம்ம கிட்ட இல்லாத பணமா காசா? இவ இப்படி காணோம்னு சொல்றதே அசிங்கமா இருக்கு. லெட்டர் போட வாண்டாம்னு தலப்பாடா அடிச்சுண்டா யார் கேக்கறா..?" மாமி வெளிப்படையாகவே சண்டைக்குப் புறப்பட்டாள். "சரி மாமி.. பணம் போனா போகட்டும் இப்போ எனக்கு கடனா ஒரு நூறு ரூபா கொடுங்கோ. ஊருக்குப் போய் அனுப்பி வெச்சுடறேன்" என்றார் இவர்.

மாமா தன் ஷர்ட் பாக்கெட்டிலிருந்து கற்றை நூறு ரூபாய்த் தாள்களை எடுத்து வேண்டுமென்றே விசிறி போல் விரித்து அதிலிருந்து ஒன்றை எடுத்து அலட்சியமாய் நீட்டினார்.

எனக்குத் திகைப்பாயிருந்தது. 'ஏதோ தவறு நடந்திருக்கிறது. நிச்சயமாய். இங்கே யாரோ ஒருவர் குற்றவாளி! சந்தேகமே யில்லை. இந்த நால்வரில் யாரோதான்!.. யாரந்தக் கறுப்பு ஆடு..? இதை வெளி யிலே சொன்னால்தான் யார் நம்பப் போகிறார்கள்? சம்பளம் வாங்கின கையோடு அத்தனை பணத்தையும் பர்ஸுக்குள் திணித்துக்கொண்டு இவர் புறப்பட்ட போதே "எதற்கு அத்தனை பணத்தையும் வாரி எடுத்துக்கணும்?" என்று நான் கேட்டேன். இருக்கட்டும் என்று சொல்லி என் பேச்சைக் கேட்கவில்லை. அது அவர் தவறு என்றால் அவர் கொடுத்த பர்ஸை ஒழுங்காகப் பெட்டியில் வைத்துப் பூட்டாமல் சோம்பேறித்தனமாய் யார் வீட்டுத் தலையணையிலோ வைத்தது என் தவறு மௌனமாய் வெளியில் வந்து ஆட்டோவில் ஏறிக் கொண்டோம்..

"மாமா வரார் என்று இனிமேல் குதிக்கட்டும் சொல்றேன்" என்றேன்.

எத்தனை உபசாரம்! எத்தனை வகையான உணவுகள்! எவ்வளவு செலவு! எப்படி சிரிக்க சிரிக்கப் பேசி சுவாதீனமாய் இருந்து விட்டுப் போனார்கள்? எனக்கேன் அப்படி சுவாதீனமாய் இருக்கத் தெரிய வில்லை? ஒரே ஒரு நாள் இருந்ததற்குச் சுளையாய் இரண்டாயிரம்! யார் கொடுப்பார்கள்? தெய்வமே! எடுத்த கை அழுகிப் போகட்டும்! யாராயிருந்தாலும் நாசமாய்ப் போகட்டும் என்று வாய் விட்டே சொன்னேன்.

"ச்சேச்சே இரண்டாயிரம் பெரிசுதான். அதுக்காக சபிக்காதே வேணி! திருடறவனை விட அவனுக்கு சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொடுக்கறவனுக்குத்தான் தண்டனை அதிகம் கொடுக்கணும். நீ ஒழுங்கா பெட்டியில் வெச்சிருந்தா பறிபோயிருக்குமா சொல்லு..?"

"அதுக்கில்லைங்க.. எடுத்ததையும் எடுத்துட்டு என்ன கேவலமா பேசறாங்க பார்த்தீங்களா? ஊரும் உறவும் அவா சொல்றதைத்தானே நம்பும்? இனி இவங்க வர்ற இடத்துக்கு நாம போக முடியுமா..? கிண்டல் பண்ணி சிரிக்கச் சிரிக்கப் பேசுவாங்களே.. எல்லார் கிட்டயும் சொல்லிச் சிரிப்பாங்களே.."

"சரி வேணாம் விடு.. இனிமே இவங்க முகத்துலயே விழிக்க வேணாம். தெய்வம்னு ஒண்ணு இருந்தா அது பார்த்துக்கட்டும். ஊருக்குப் போனதும் பறி போன பணம், உறவு எல்லாத்துக்கும் ஒரு முழுக்கு போட்டுட்டு மறந்துடுவோம்" என்று அவர் சொல்லி விட்டாலும், இந்தக் காயம் லேசில் ஆறும் என்று எனக்குத் தோன்றவில்லை. **

சியாமளா நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். வாயில் விரல் போட்டுக்கொண்டு அவள் தூங்குவதைப் பார்க்க, மகாலட்சுமியின் பெற்ற வயிறு பற்றி எரிந்தது.

எந்த ஜென்மத்தில் செய்த பாவமோ? பதினெட்டு வயதுப் பெண்கள் எப்படி இருக்கிறார்கள்? இருக்கிற வசதிக்கு இவள் இந்நேரம் எப்படி இருந்திருக்க வேண்டும்?

நல்லபடியாகப் பிறந்திருந்தால், கண்ணுக்கழகாகப் பாட்டுச் சொல்லிக் கொடுத்து, நாட்டியம் சொல்லிக் கொடுத்து..... கல்லூரிக்குக் காரில் அனுப்பி......

'ம்ம்! எதற்கும் கொடுத்து வைத்திருக்க வேண்டும்.' மகாலட்சுமி சியாமளா வாயில் இருந்த விரலை மெல்ல நீக்கினாள்.

நல்ல தூக்கத்திலும் சியாமளாவுக்கு அது தெரிந்தது. பிடிவாதமாகத் திரும்பவும் விரலை வாயில் போட்டுக் கொண்டாள்.

"அம்மா! அம்மா!"

விக்கிரம் எரிச்சலுடன் உள்ளே நுழைந்தான். "ஏம்மா! உங்களுக்கே இது நல்லா இருக்குதா? எந்த நேரமும் அந்தப் பைத்தியம் கிட்டேயாவா? வேற வேலையா கிடையாதா? ச்சே!"

"என்ன விக்கிரம்? அவளுக்குச் சீக்கிரமே நல்லாயிடும் பாரு.. கூடப் பொறந்த அண்ணன்! நீயே அவளைப் பைத்தியம்னு சொல்லலாமா?"

"இந்தச் சனியனாலே வீட்டுலே ஆயிரம் ஆயிரம் பிரச்சினை! உங்களுக்கு ஒரு நல்ல தூக்கம் இருக்குதா? எங்காவது ஹோட்டல், பார்ட்டின்னு எங்களோட வரீங்களா? அது சரி! பைத்தியத்தைப் பைத்தியம்னு சொல்லாமே, வேற எப்படிச் சொல்வாங்க? விஞ்ஞானி, மேதைன்னு சொல்வாங்களா?" வெறுப்பாக விக்கிரம் சிரித்தான்.

"என்னிக்கும்மா இதுக்கு நல்லாவப் போவுது? நீங்களும் பதினேழு பதினெட்டு வருஷமா, இப்படியே தான் சொல்லிக்கிட்டு வரீங்க.."

மகாலட்சுமிக்கு மகன் மீது ஆத்திரம் வந்தது, என்ன வெறுப்பாகப் பேசுகிறான் பார்? கொஞ்சமாவது ஈவு, இரக்கம் இருக்கிறதா? கூடப்பிறந்த பிறப்பாயிற்றே என்று கூட நினைக்க வேண்டாம்.. அட! ஏதோ அவஸ்தைப் படுகிற ஒரு மனுஷ ஜென்மம் என்கிற அளவிலாவது எண்ணிப் பார்க்கக் கூடாதா? துளிக்கூட மனத்தில் ஈரம் இல்லையே.

'குபுக்' என்று அவள் கண்களில் நீர் கோத்துக் கொண்டது.

"என்னம்மா? உங்களை என்ன சொல்லிட்டேன்? அதுக்குள்ளே ஓர் அழுகை.. ச்சே! இந்தத் தரித்திரம் செத்து ஒழியலாம்.. இந்தச்சனியனாலே எத்தனை அசிங்கம்? எத்தனை கெட்டபேரு? ஊர் முழுக்க நம்ம குடும்பத்தைக் கேவலமா நினைக்கிறாங்க.. உங்களுக்கு ஏதாவது புரியுதா?"

"என்ன விக்கிரம்? யார் அழுதா? என்னவோ நீ பாட்டுக்குப் பேசிக்கிட்டே போறே.."

அவசர அவசரமாகக் கண்களைத் துடைத்துக் கொண்டாள், மகாலட்சுமி இல்லையென்றால், திடீரென்று ஆத்திரம் தலைக்கேறி, அந்தக் குழந்தையைப் போட்டுத் துவைத்து எடுத்து விடுவான்! சியாமளா அவனைக் கிட்டத்தில் பார்த்து விட்டாலே, மிரண்டு போய் கிறீச்சிட்டு அழத்தொடங்கி விடுவாள்.

மிருகத்தின் ஊளையைப் போன்று வினோதமாகக் குரல் எழுப்புவாள்.. அந்தச் சத்தத்தைக் கேட்டாலே போதும், விக்கிரம் இன்னும் மூர்க்கமாகி விடுவான்.

# அம்மா...

அரசு மணிமேகலை

தங்கை என்கிற நினைப்பெல்லாம் இருக்காது. ஏதோ கொடிய மிருகத்தை அடிப்பவன் போல, ஈவிரக்கமின்றி, அடித்து மிதித்து, ரத்தகாயம், ரண காயமாக்கி......

கடவுளே! எதற்கு இந்த அவஸ்தை? "வா விக்கிரம்! நான் சாவி எடுக்கத்தாண்டா பெட்ரூமுக்கு வந்தேன்! வா கண்ணு! என்ன விஷயம்?"

மகனை மெல்ல, வெளியே நகர்த்திக் கொண்டு வந்தாள். "கண்ணு" என்கிற சொல்லும் அசாத்திய மாற்றத்தை ஏற்படுத்தியிருப்பது அவன் முகத்திலிருந்தே தெரிந்தது.

"அம்மா! என் பிரெண்ட்ஸ் இரண்டு பேர் இன்னிக்கு நைட் டின்னருக்கு வராங்க.. கோபால் கிட்டே சொல்லி வெஜிடபிள் பிரியாணி செய்யச் சொல்றீங்களா? சிப்ஸ், ஸ்வீட்ஸ் எல்லாம் வெளியே ஓட்டல்லே இருந்து வாங்கிட்டு வரச்சொல்லுங்க. வெஜிடபிள் குருமா, சிக்கன் குருமா இரண்டுமே பண்ணச் சொல்லுங்க. அப்புறம் வேற என்ன பண்ண முடியுமோ, அதைச் செய்யச் சொல்லுங்க.. முக்கியமா, அவங்க வந்து போற வரைக்கும் இந்தச் சனியனை உள்ளே ரூமிலே போட்டுப்பூட்டி வைங்க.. போன மாசம் பண்ணிச்சே, அந்த மாதிரிப் பண்ணிடப் போகுது"

விக்கிரம் வெளியே கிளம்பிவிட்டான். மகாலட்சுமியால், சில மாதத்துக்கு முன் நடந்த அந்தச் சம்பவத்தை இன்னும் மறக்க முடியவில்லை.

விக்கிரம் வார்த்தைகள் வேறு அவளைக் கிளறி விட்டு, பழைய ஞாபகங்களை அப்படியே அள்ளிக் கொண்டு வந்தன.

❀ ❀ ❀

விக்கிரமும், அவன் தந்தையும் யாரோ ஒரு பெரிய புள்ளிக்கு விருந்து கொடுக்க, பிரமாதமான ஏற்பாடெல்லாம் செய்திருந்தார்கள்.

டெல்லியில் உயர்ந்த பதவியில் இருந்த அந்தச் சுப்பிரமணியத்தால், விக்கிரம் தந்தை இராமசுந்தரத்துக்குப் பல வேலைகள் நடந்து முடிந்திருந்தன; இன்னும் பல நடக்க வேண்டி இருந்தன.

அத்துடன் சுப்பிரமணியத்துக்கு விக்கிரம் பேரில் ஓர் அபிப்ராயம் வேறு இருந்திருக்கும் போலிருக்கிறது. சுப்பிரமணியனின் மகள் டெல்லியில் ஒரு பிரபல வியாபார நிறுவனத்தைத் தனியொருத்தியாகச் சமாளித்து வருகிறாள் என்கிற விஷயமே, தந்தைக்கும், மகனுக்கும் நிறைந்த எதிர்பார்ப்பைக் கொடுத்தது.

பரஸ்பரம் ஓர் ஆவலுடன் குழுமி இருந்தார்கள். இராமசுந்தரமும், மகாலட்சுமியும் கவனமாகப் பார்த்துப் பார்த்து உபசரித்து முடித்தார்கள்.

மகாலட்சுமிக்கு அவர்கள் சாப்பிடச் சாப்பிட, அப்பாடா என்றிருந்தது.

ம்ம்.. இன்னும் பத்து நிமிஷம் தான், ஆயிற்று. புருட்சாலட் பரிமாறிவிட்டால் எல்லாம் முடிந்தது.

குறிப்பாகச் சமையற்காரனைப் பார்க்க, அவன் பிரிஜ் பக்கம் போனான்.

சாப்பிட்டு எழுந்த அவர்கள் மகாலட்சுமியை வெகுவாகப் புகழ்ந்தார்கள். மனைவியைப் புழுப் போலப் பார்க்கிற இராமசுந்தரம் கூட, ஒரு மதிப்புடன் அவளை ஏறிட்டார்.

பரவாயில்லை.. விருந்து பிரமாதமாகச் செய்து விட்டாள், பாவம்! காலையிலிருந்து பம்பரம் போல், பார்த்துப் பார்த்துச் செய்து கொண்டிருக்கிறாள் ஒவ்வொரு தயாரிப்பும் இந்த டெல்லிக்காரர்களுக்கு தேவாம்ருதமாக இனித்தது. கூச்சமில்லாமல், "இது கொஞ்சம் போடுங்கள்! அது கொஞ்சம் போடுங்கள்" என்று கேட்டு வாங்கிச் சாப்பிட்டார்கள், சுப்பிரமணியமும் அவர் குடும்பத்தாரும்.

ஏன்? சுப்பிரமணியத்தின் மகள் கூட விக்கிரமைக் காதலுடன் பார்த்தது போல, ஒரு நொடி கண்ணுக்குள் மின்னல் வெட்டியது.

ம்ம்... எல்லாம் திட்டப்படிதான் நடந்து நகர்ந்து கொண்டிருக்கிறது.. சுப்பிரமணியன் மட்டும் சம்பந்தி ஆகிவிட்டால், அடேயப்பா.. பணமும், பணமும் ஒன்றாய்ச் சேர்ந்து விட்டால், எதைத்தான் உலகில் சாதிக்க முடியாது?

இராமசுந்தரம் நிம்மதிப் புன்னகை பூத்தார். மகாலட்சுமியும் அவர் பார்வையைத் திருப்தியாக எதிர் கொண்டாள். அப்போதுதான் அது நேர்ந்தது.

அலங்கோலமாக, கிழிந்த நைட்டியில் கலைந்த தலையும், அழுக்கு முகமுமாக, கையெல்லாம் கரி அப்பிக்கொண்டு, திடும்மென்று கதவைத் தள்ளித் திறந்துகொண்டு, 'ஹே' என்கிற கூச்சலுடன் சியாமளா உள்ளே வந்தாள்.

'ம்மா.. ம்மா..' என்று கர்ணகடூரமாக உறுமிக் கொண்டு, அவள் வருவதைப் பார்த்ததுமே, சுப்பிரமணியத்தின் முகமும், மற்றவர்கள் முகமும் வெளிறத் தொடங்கின.

சியாமளாவை அவர்கள் பார்த்த பார்வையில் வெறுப்பு தெறித்தது. சுப்பிரமணியத்தின் முகத்திலிருந்த புன்னகையும், பரவசமும் படீர் என்று, காணாமல் போயின...

காலில் ஏதோ அசிங்கத்தை மிதித்து விட்டாற் போன்று, அருவருப்புடன் சியாமளாவைப் பார்த்தார்கள்.

"ச்சீ! இவ்வளவுதானா நீங்கள்?" என்பது போன்ற 'பாவம்' கண்களில் தெரிந்தது.

"நல்லகாலம்.. தப்பினோம்" என்பது போன்ற பாவனையில் சுப்பிரமணியமும், அவர் மனைவியும் பார்வையைப் பரிமாறிக் கொண்டார்கள்.

இராமசுந்தரமும், மகாலட்சுமியும் அவமானத்தால் குன்றிப் போனார்கள்.

இராமசுந்தரத்தால் சுப்பிரமணியத்தை ஏறிட்டுப் பார்க்க முடியவில்லை. கடலளவு சோகத்தை அவர் கண்களில் காணமுடிந்தது.

விக்கிரம் வெறி பிடித்த மிருகம் போல, மெல்ல மெல்ல உருமாறிக் கொண்டிருந்தான். இன்னும் சில கணங்களில், சியாமளாவை அடித்து நொறுக்கித் துவம்சம் செய்கிற அளவுக்கு அவன் ஆத்திரமும், ஆவேசமும் எல்லை மீறிக் கொண்டிருந்தன.

சுப்பிரமணியத்தின் வெளிறிப் போன முகமும், அவர் மகளின் ஏளனம் படிந்த முகமும் விக்கிரமின் உள்ளே உறங்கிக் கிடக்கிற மிருகத்தை உசுப்பி எழுப்பத் தொடங்கின. அவன் கொஞ்சம் கொஞ்சமாய் எரிமலையாய் மாறத் தொடங்கியிருந்தான்.

எப்படி அவர்கள் விடை பெற்றுப் போனார்கள், எப்படி வாசல் வரையிலும் போய் வழியனுப்பி வைத்தோம் என்று இராமசுந்தரத்தால் தீர்மானிக்கவே முடியவில்லை.

சற்றே சுயநினைவுக்கு வந்தபோது பாய்ந்து பாய்ந்து விக்கிரம் அடிப்பதும், மகாலட்சுமி ஓடி ஓடித் தடுக்க முயல்வதும், ஊளையிடும் குரலில் சியாமளா அலறுவதும் அவர் சிந்தனையைத் தடுத்தன.

உள்ளே விரைந்தார்.

"தரித்திரமே! செத்து ஒழியேன்.. நேரம் பாத்து வந்து நின்னு, எல்லாத்தையும் கெடுத்திட்டியேடி சனியனே! ஊர்லே யார் யாரோ சாவறாங்களே.. உனக்கு ஒரு சாவு வருதா பாரேன்.."

ஓங்கி முதுகில் மாற்றி மாற்றிக் குத்தினார். புருவம் சுளிக்கப் பக்கவாட்டில் திரும்பி சியாமளா அவரைப் பார்த்த பார்வையில் கெஞ்சல் இருந்தது; கேவல் இருந்தது; சித்திரவதையை அனுபவிக்கிற வலி தெரிந்தது.

அந்தப் பார்வையில் இம்மியளவும் இளகாத இராமசுந்தரம் மேலும் பாய்ந்து பாய்ந்துத் தாக்கினார். இந்தப் பக்கம் கிங்கரன் போல் நிற்கும் அண்ணன், அந்தப் பக்கம் எமனைப் போல் குரூரப் பார்வை பார்க்கிற அப்பன் - சியாமளா புயலில் சிக்கிய பூங்கொடியாய்த் தள்ளாடித் தடுமாறி, சுவரில் மோதி, ஓரமாய்ச் சாய்ந்தாள்.

மண்டையிலிருந்து ரத்தம் பீரிட்டு வெளிக் கிளம்பியது. மகாலட்சுமியின் தாய் உள்ளம்தான் தவித்துப் போனதே தவிர, அண்ணனும், அப்பனும் அலட்சியமாகவே, எதுவுமே நடக்காதது போலவே, வெளியேறினார்கள்.

மகாலட்சுமி கதறினாள்.

"அய்யோ! யாராவது வாங்களேன். கொஞ்சம் ஒரு கை பிடியுங்களேன்..."

பெரிய எஜமானும், சின்ன எஜமானும் அவரவர் அறைக்குப் போய்விட்டார்களா என்று முடிவு செய்து கொண்ட பிறகே, வேலைக்காரி அஞ்சலை உதவி செய்ய, மெல்ல, மெல்ல முன் வந்தாள்...



மம்.. அதைத்தான் விக்கிரம் இப்போது நினைவு படுத்துகிறான்.. அந்தச் சம்பவத்தில் சியாமளாவின் உடம்பு தேற நான்கு மாதமாயிற்று.. இப்போது திரும்பவும், ஏதாவது ஏடாகூடமாக நடந்துவிட்டால்?

இரண்டு தூக்க மாத்திரைகளைக் கரைத்துக் கொடுக்கும்போது, மகாலட்சுமிக்குக் கண்ணீர் பொங்கிப் பொங்கி வந்தது.

ஏனடி பெண்ணே! என் வயிற்றில் வந்து பிறந்தாய்? பிறந்தது பிறந்தாய். மூளை வளர்ச்சி உள்ள பெண்ணாய்ப் பிறந்திருக்கக் கூடாதா? இப்படி மாறி மாறி அடிவாங்கி, உருக் குலைந்து போகிறாயே! இரக்கமே இல்லாத பாவிகளின் வீட்டில் ஏன் கண்ணே வந்து பிறந்தாய்?

'ம்மா..' என்று சிரித்தாள் சியாமளா. அப்படிக் கூப்பிடும்போது, அவள் வாய் கோணியது. ஒரு கண் பெரிதாக, மறுகண் சுருங்கியது. தலை முடி அவிழ்ந்து, தொங்கியது. ஆங்காங்கு சடையாக முடி விரிந்து கிடந்தது.

மொத்தத்தில் அவள் தோற்றம் ஒரு பிச்சைக்காரியைப் போல இருந்தது.

எத்தனை முறை இழுத்துப் போய்க் குளிக்க வைப்பது? எத்தனை முறைதான் சுத்தமான ஆடைகளை வற்புறுத்தி அணிய வைப்பது?

எல்லாம் இன்னும் ஒரு மூன்று நிமிஷத்துக்குத்தான். பாட்டிலில் உள்ள எண்ணெயை உடம்பு முழுவதும் ஊற்றித் தேய்த்துக் கொள்வாள்; மிளகாய்த்தூள் அரைத்து வந்து வைத்திருந்தால், தண்ணீர் ஊற்றிக் கலக்குவாள். அப்படியே சமையல் கட்டில் படுத்துத் தூங்கத் தொடங்குவாள். அதற்கு முன் ஞாபகமாக, வாயில் விரல் போட்டுக் கொள்வாள்.

இவளை என்ன செய்வது? மாத்திரைகளைக் கரைத்துக் கொடுத்ததில், ஓரளவுக்குத் தூக்கம் வரத் தொடங்கியிருந்தது.

கன்னத்தில் கீறல்..... நெற்றியில் தழும்பு..... சியாமளாவுக்கு நேர்ந்திருந்த சித்திரவதையின் அடையாளச் சின்னங்கள் அவள் உடல் முழுக்கவே பதிந்திருந்தன.

மகாலட்சுமியின் பெற்ற வயிறு பற்றி எரிந்தது. பக்கவாட்டில் தலையணைகளை அரவணைத்து வைத்து விட்டு, அறையைப் பூட்டிக் கொண்டு, சமையலறைக்குக் கிளம்பினாள்.

அவள் கண்களில் கண்ணீர் நிறைந்திருந்தது.

❀ ❀ ❀

"அம்மா! எங்க முடிவிலே எந்த மாற்றமும் இல்லை. எப்படிப்பட்ட நல்ல இடத்துலே சம்பந்தம் வந்தது? அது கெட்டதும் இந்தச் சனியனாலே! என் பிரெண்ட்ஸ் எல்லாம் சேர்ந்து, பெரிய பிசினஸ் தொடங்க இருந்தோம். அவனுங்க முன்னாடியும் இந்தத் தரித்திரம் வந்து நின்னு கெடுத்துட்டுது. இனி அது இந்த வீட்டிலே இருக்கக் கூடாது, விடுதியிலே கொண்டுபோய் விட்டுட்டு வரத்தான் போறோம்.."

விக்கிரம் முன் செல்ல, இராம சுந்தரம் பின் தொடர்ந்தார்.

மகாலட்சுமி தவித்துப் போனாள்.

விடுதியிலா? வயசுப் பெண்ணை விடுதியில் விடுவதா? அய்யோ! அவளுக்கென்ன தெரியும்? எப்படி அவள் இருப்பாள்? அடம்பிடிப்பாளே! தலையில் அடித்துக் கொள்வாளே! ஊளையிட்டு அழுவாளே!

பாவிகள் என்ன இப்படிக் கல்லைத் தூக்கித் தலையில் போடுகிறார்கள்? படுபாவிகள்..

அய்யோ! சியாமளா.. எப்படிடி உன்னைப் பிரிந்து நான் இருப்பேன்?

மகாலட்சுமி அழுதபடி மகன் இருக்கும் அறைக்கு ஓடினாள்.

"விக்கிரம்! அது எங்கேடா இருக்குது?"



"எது?"

"அதாண்டா! அந்த விடுதி."

"அதெல்லாம் அந்த இடத்தை உனக்குச் சொல்ல முடியாது. இனியாவது, நாம நிம்மதியா வாழ்ந்தாகணும்."

"நாங்க வேணும்னா அவுட் ஹவுஸுக்குப் போயிடறோம்டா.. முன்னாலே வரவேமாட்டோம். அவளைப் பிரிச்சுடாதேப்பா.." அவள் கெஞ்சினாள்.

"என்னம்மா இது பைத்தியக்காரத் தனம்? எனக்கு ஒரு கல்யாணம் காட்சி நடக்க வேணாமா? பேரன் பேத்திகளை நீ பார்க்க வேணாமா? இந்தத் தரித்திரத்தோடயே மல்லாடிக்கிட்டு இருக்கப் போறியா? சொல்லு.."

"உங்கம்மாவுக்கு அந்தச் சனியன் மேலதாண்டா உசிரு. உன்னைப் பத்தியும், என்னைப் பத்தியும் அவளுக்குக் கவலையே இல்லை.." தந்தை நேரம் பார்த்துத் தூண்டிவிட்டார்.

தாயை உறுத்துப் பார்த்தான் விக்கிரம். அவன் கண்களில் கனல் தெறித்தது.

"இதோ பாரும்மா! இதுலே இருந்து இனியாவது, நமக்கு ஒரு விடுதலை கிடைக்கட்டும், நாலு பேரைப் போல, நாம வாழ வேண்டாமா? அங்க விடுதியிலே நல்லாப் பாத்துப்பாங்க. அவ்வளவுதான், என்னாலே சொல்ல முடியும்.."

முடித்து விட்டான் விக்கிரம்.

❀ ❀ ❀

"ஏன் விக்கிரம்? என்னடா அந்த விடுதியிலேதான் சேத்துக்க மாட்டோம்னு சொல்லிட்டாங்களே.."

"இல்லைப்பா.. அன்பு விடுதியிலே சேத்துக்கறேன்னு தானே சொல்லி யிருக்காங்க? பாக்கலாம்.. பணத்தை அம்பதாயிரம், அறுபதாயிரம் எடுத்து வீசினா, சேத்துக்கறாங்க.."

"அப்ப, கிளம்புவமா?"

"ம்ம்.. இந்த அம்மாவை வேற, சமாளிச்சாகணும்.."

முனகிக் கொண்டே நடந்தான் விக்கிரம், அவன் அறைக்குள்ளிருந்து வருவதைப் பார்த்ததுமே கதறத் தொடங்கினாள் மகாலட்சுமி.

"அய்யோ! என் பொண்ணு நிலைமை இப்படியா ஆகணும்? யப்பா! விக்கிரம்! வேணாம்டா! அது நிலைமை சரியில்லாத பொண்ணு. கொண்டு போயி விடுதியிலேயெல்லாம் சேத்துட வேண்டாம்யா."

"அம்மா! இனிமே, ஒரு வார்த்தை நீ பேசக்கூடாது, நான் சொன்னா, சொன்னதுதான்.."

விக்கிரம் சியாமளாவைப் பிடித்துக் கொண்டான். இராமசுந்தரம் இன்னொரு புறம் பிடித்துக் கொண்டார். இருவரையும் பார்த்த சியாமளா மிரண்டு போனாள்.

"ம்மா.." அடிக்குரலில் உறுமினாள். பயந்து அம்மா பின்னால் ஒடுங்கப் போனாள். எங்கே? விட்டால்தானே?

விக்கிரமும் இராமசுந்தரமும் முரட்டுப் பிடியாகப் பிடித்து, மாருதியில் ஏற்றி உட்கார வைத்தார்கள்.

சியாமளா "ம்மா.." என்று மீண்டும் உறுமினாள்.



"இதென்ன... தலைவர் வெடியா?"
"ஆமா... கட்சிக்குக் கட்சி தலைவர் தாவிப் போற மாதிரி இந்த வெடியும் பல இடங்களுக்குத் தாவித் தாவிப் போய் கடைசியில் வெடிக்காது. புஸ்வாணம் ஆயிடும்".

மகாலட்சுமி காரினுள் ஏற வந்தாள். "ம்கூம். வேண்டாம்மா! உன்னாலே தாங்கிக்க முடியாது. நாங்க கொண்டு போய் விட்டுட்டு வரோம். பத்து நாள் யாரும் போய்ப் பார்க்க வேண்டாம். அப்பத்தான் புது இடம் அவளுக்குப் பழகும்.."

வேண்டா வெறுப்பாக, மகாலட்சுமி கையைப் பிசைந்தபடி நின்றாள். அவள் வயிறு கலங்கியது. காது மடல்கள் குப்பென்று சிவந்து போயின. மூளைக்குள் ரத்தம் குபீரென்று மடை திறந்து வெள்ளமாய்ப் பாயத் தொடங்கியது.

தலை சுற்றியது. சுற்றுப்புறமே குறுக்கும் நெடுக்குமாக வலம் வரத் தொடங்கியது, சியாமளாவின் பரிதாபமான கண்கள் அவளையே தீனமாகப் பார்த்தன.

"ம்ம்மா" அடிக் குரலில் உறுமினாள். "சியாமளா.. யம்மாடி.." அவளைக் கட்டிப் பிடித்துக் கொண்டு அழத் தொடங்கினாள் மகாலட்சுமி..

ஒருவாறு அவளை விலக்கி இறக்கி விட்டான் விக்கிரமன்.

"ஏறுங்க டாடி.."

இராமசுந்தரம் ஏறி உட்கார்ந்தார். அழுகையும், ஆத்திரமுமாக, மகாலட்சுமி நின்றிருந்தாள். சியாமளா அவளைப் பார்த்துக் கையை நீட்டி, நீட்டி அழ...., விக்கிரம் வெடுக்கென்று பின்பக்கக் கண்ணாடியை ஏற்றினான்.

வண்டி கிளம்பியது..

"என்ன விக்கிரம்? அன்பு விடுதிக்கா போறோம்?"

பதில் பேசாமல் வண்டியை ஓட்டினான். சியாமளா வாயில் விரல் போட்டுக் கொண்டு, பின்னால் சாய்ந்து கொண்டாள். அவள் அழுகை குறைந்திருந்தது.

"என்ன விக்கிரம்?"

வண்டியை வேகமாகச் செலுத்திக் கொண்டிருந்தான் - பதிலே பேசாமல்.

ஒரு மணி நேரப் பயணத்துக்குப் பிறகு, சிற்றூரும் அல்லாத – நகரமும் அல்லாத - ஒரு புறநகர்ப் பகுதியை அடைந்திருந்தார்கள்.

"இங்கேயா இருக்குது அன்பு விடுதி?" இராமசுந்தரம் கேள்வி கேட்டார்..

ஓர் ஓரமாக நிறுத்தினான் விக்கிரம் "அப்பா! அன்பு விடுதியிலும் சராசரி பெண்களைத்தான் சேத்துக்குவாங்களாம்.. அதனாலே......."

"அதனாலே.......?"

விக்கிரம் கதவைத் திறந்து, சியாமளாவைக் கீழே இறக்கினான். பிளாட்பாரத்தில் நிற்க வைத்தான். காரில் ஏறிக்கொண்டான்.

சாலையில் அங்கொருவர், இங்கொருவர்தான் நடந்து போய்க் கொண்டிருந்தார்கள் யாரும் இவர்களைக் கவனிக்கவில்லை.

சரேலென்று காரைக் கிளப்பினான். சியாமளா பிளட்பாரத்தில் நின்று கொண்டிருந்தாள்.

"ம்ம்மா.." அடிக்குரலில் உறுமினாள். தவிப்பாக இருந்தது அவளுக்கு.. என்ன செய்வதென்று தெரியவில்லை. எதுவும் அவளுக்குப் புரியவும் இல்லை.

"ம்ம்மா.." அடிக்குரலில் உறுமினாள். இப்படிக் கத்தினால், அம்மா உடனே ஓடி வருவாளே.. ஏன் வரவில்லை?" அவளுக்குக் குழப்பமாக இருந்தது.

வண்டி வேகமெடுத்தது..

"என்ன விக்கிரம் இது?"

"இந்த விஷயத்தை இதோட விட்டுடுங்க.. அவ்வளவுதான் சொல்ல முடியும்."

அங்கே சியாமளா கத்திக் கொண்டிருந்தாள். அவளுக்குப் பயமாக இருந்தது.

"ம்ம்மா.." ம்கூம்.. அம்மா வரவில்லை.

பறவைகள் கூடு திரும்பிக் கொண்டிருந்தன.

இரண்டு ரவுடிகள் சாராயப் போதையில் வந்து கொண்டிருந்தார்கள்.

"ம்மா.." சியாமளா திரும்பவும் உறுமினாள்.

"யார்ரா அது? புச்சா கீது.." சாராயப் போதையுடன், வேறு போதையும் ஏறிக்கொள்ள, அவளை வெறியுடன் பார்த்தபடி கிட்டே வரத் தொடங்கினர்..

இருட்டு வேகமாக இறங்கத் தொடங்கியது....

✧✧

# கூடு

## விமலா ரமணி

குழந்தை திவ்யாவிற்கு சோறு ஊட்டிக் கொண்டிருந்தாள் தாய் கனகவல்லி.

"கதை சொல்லும்மா".

குழந்தை சிணுங்கினாள். என்னதான் விஞ்ஞான உலகமாக இருந்தாலும் கதை கேட்பது இயல்பு குழந்தைகளுக்கு.

கதை சொல்லும் நிலையில் இல்லை கனகவல்லி.

"நிலா நிலா ஓடிவா" - என்று நிலவைக் காட்ட இப்போதெல்லாம் முடிவதில்லை. ப்ளாட்டில் குடி இருப்பவர்களுக்கு நிலவாவது ஒன்றாவது? ஆனால் கனகவல்லி அப்படியில்லை.

கிராமத்துப் பண்ணை வீட்டில் இருப்பவள். வருடத்திற்கு ஓரிரு மாதம் இப்படி இவர்களுக்குச் சொந்தமான பண்ணைத் தோட்டத்தில் ஒருவிதக் கவலையும் இல்லாமல், டென்ஷன் இன்றி நிம்மதியாகத் தன் கணவனுடன், குழந்தை திவ்யாவுடன் இருப்பவள் தான் கனகா.

ஆனால் இந்த முறையோ, தோட்டத்திற்கு வந்ததிலிருந்து எதுவும் சரியில்லை... உண்மைதான்... பண்ணைத் தோட்டத்தின் வீட்டு வேலைகளுக்கு உதவியாக ஓர் அம்மாவை வேலைக்குச் சேர்த்தது இவள் தான். அந்த அம்மாள் ஒரு வாரம் வேலைக்கு வந்தாள். அதன்பின் உடல் நலம் சரியில்லை என்று தன் மகள் சாந்தியை அனுப்பி வைத்தாள்.

சாந்தி...?

அத்தனை அழகு... கொள்ளை அழகு... இளமையின் வரப்பிரஸாதங்களுடன், மதுக் குடத்தில் மகிழ்ச்சி ஏந்தி, உடல் முழுவதும் ஒளிக் கீற்றுகளாய் வாலிபத்தின் கதை சொல்ல... "அழகு அழகு" - என்று பாட மனத்துள் ஒரு குறுகுறுப்பு!

கனகாவின் கணவன் சோமு கூட முதல் நாள் அலட்சியமாக நிமிர்ந்தவன், ஆச்சர்யப்பட்டான்!

"என்ன இது? வேலைக்காரியா இவ? இத்தனை அழகா இருக்காளே?" - என்று வாய் விட்டே சொல்லிவிட்டான்!

கனகாவின் ஜாக்கிரதை நரம்புகள் துடித்தன!

வேலைக்காரியோட வேலைகளைப் பார்க்காம அவளோட அழகை ஏன் பார்க்கிறார் இவர்?

அதன்பின் சோமு அடிக்கடி கூப்பிடத் தொடங்கினான்.

"சாந்தி... இந்தக் குப்பையைப் பெருக்கு..."

"சாந்தி... என் துணியை நல்லாத் தோச்சுவை... நேத்து தோட்டத்துலே இளநீர் குடிச்சப்போ கறையாயிடிச்சு..."

கனகாவிற்கு எரிச்சல் வந்தது...

'முதலில் இவர் மனத்தைப் பெருக்கிச் சுத்தமாக்க வேண்டும். உள்ளக் கறையை 'சூப்பர் ரின்' சலவை செய்ய வேண்டும். சாந்தியை ஏதாவது காரணம் காட்டித் துரத்த வேண்டும்.'

சந்தர்ப்பத்திற்குக் காத்திருந்தாள்.

முடிந்தவரை சாந்தியை அதிக வேலை செய்ய ஏவுவதில்லை. முன்பெல்லாம் குழந்தை திவ்யாவிற்கு சாந்திதான் சோறு ஊட்டுவாள். ஏதேதோ கதை சொல்லி அத்தனை சாதத்தையும் சாப்பிட வைத்துவிடுவாள். அவள் சாப்பாடு ஊட்டும் 'அழகைப் பார்ப்பதற்காகவே சோமு வருவான்!

"என்ன சாந்தி, குழந்தை படுத்தறாளா? அட... பரவாயில்லையே.. நல்லா சாப்பிடறாளே!" இப்படி ஏதாவது அசட்டுத் தனமாக உளறியபடி அங்கு அசடு வழிய வந்து நிற்பான்.

இதைத் தவிர்ப்பதற்காகவே கனகா இப்போது, தானே சோறு ஊட்ட ஆரம்பித்து விட்டாள்... ஆயிற்று இன்னும் பத்தே நாள்கள்... அதன் பின் ஊர் திரும்பி விடலாம்... இனி அடுத்த வருடம் இங்கு வரக்கூடாது...

நிம்மதிக்கு என்று வந்த இடத்தில் இப்படி 'டென்ஷன்' பட முடியாது!

"என்னம்மா நீ? கதை சொல்லும்மா... சாந்தின்னா எத்தனை கதை சொல்லுவா? தெரியுமா?"

குழந்தை சிணுங்கினாள்.

அப்போது....

தோட்டத்திற்குக் கிணற்றின் கைப்பிடிச் சுவற்றில் குருவி ஒன்று வந்து உட்கார்ந்திருந்தது. அதன் வாயில் ஏதோ புழு... பூச்சி...

"அம்மா... அந்தக்குருவி பாரேன்... அதோட வாயிலே என்ன?"

கனகாவும் பார்த்தாள்... வாயில் இரையுடன் அசட்டுக் குருவி கிணற்றுக்குள் பறந்தது... கிணற்றுக்குள்ளே கூடு கட்டி இருக்கிறது? அடப்பாவமே!

"ஐயய்யோ... அம்மா... அந்தக்குருவி கிணத்துக்குள்ளே போயிடிச்சு!"

கனகா மெல்லக் கிணற்றுக்குள் எட்டிப் பார்த்தாள்.

திவ்யா அலறினாள்.

கிணற்றின் கற்கள் வைத்துக் கட்டப்பட்ட சுவரில் எங்கோ ஓர் இடுக்கு இருந்திருக்கிறது... அந்த இடுக்கில் தான் இந்த அசட்டுக் குருவி வைக்கோல் வைத்து கூடு கட்டி இருந்தது.

குருவி கிணற்றுக்குள் 'ஜிவ்'என்று பறந்து உள்ளே போனது...

அந்தக் கூட்டின் வாயிலில் அமர்ந்தது. உள்ளே இருந்து இரண்டு சின்னஞ்சிறு அலகுகள் ரோஸ் நிறமாகத் திறந்தன. - தாய்க் குருவி அவசரம் அவசரமாகத் தான் கொண்டு வந்த இரையைத் தன் குஞ்சுகளின் வாயில் மாற்றி மாற்றித் திணித்தது. பிறகு நாற்புறமும் பார்த்தபடி பறந்து வெளியே வந்தது. தாய்க் குருவி பறந்ததும் இரண்டு குஞ்சுகளும் 'சட்'டென்று கூட்டின் உள்ளே பதுங்கி விட்டன!

எத்தனை பாதுகாப்பு உணர்வு!

"அம்மா.. இந்தக் குஞ்சுக் குருவி கிணற்றுல விழுந்து செத்துடுமா?" திவ்யா கேள்வி கேட்டாள்.

"ஊஹூம்... சாகாது... இறக்கை முளைச்சதும் அம்மாக் குருவியோட பறந்து போயிடும்..."

"ஏம்மா அந்த அசட்டுக் குருவி இந்தக் கிணத்துக்குள்ளே வந்து கூடு கட்டி இருக்கு? அந்தக் குஞ்சுப் பாப்பா பாவம் இல்லையா?"

இவளுக்குக் கூடக் கொஞ்சம் பயம் தான். வெளியே இத்தனை இடங்கள் இருக்க... இப்படி அபாயகரமாக கிணற்றுக்குள் ஒரு பொந்தைத் தேடிப் பிடித்து இந்த அம்மாக் குருவி அசட்டுத் தனமாகக் குஞ்சு பொரித்திருக்கிறதே? இவை ஜாக்கிரதையாகப் பறந்து வெளியே வர வேண்டுமே!

தோட்டத்துக் கிணறு.. பெரிய கிணறு... நிறையத் தண்ணீர்...

காலையில் முதல் வேலையாக தோட்டத்து ஆள் சின்னானிடம் கனகா எச்சரித்து வைத்தாள்.

"சின்னா.. நீ தோட்டத்துக்குத் தண்ணீர் பாய்ச்சும் போது ஜாக்கிரதையா கமலைத் தண்ணீர் அந்தக் குருவிக் கூட்டுக்குள்ளே சிந்தாதபடி ஜாக்கிரதையா தண்ணீர் பாய்ச்சு..."

சின்னான் சிரித்தான்.

"அந்தக் குருவிக் கூட்டைத் தானே சொல்றீங்க? வருஷா வருஷம் இப்படித்தாங்க அந்தக் குருவி அங்கே கூடு கட்டுது.. ஆனா குஞ்சுங்க எல்லாம் ஜாக்கிரதையாப் பறந்து போயிடுதுங்க... காக்காய் அடிச்சுப் போட்டுடுமோன்னு பயந்துதான் அந்தக் குருவி அப்படி கிணத்துக்குள்ளே கூடு கட்டுது.. ஒண்ணும் பயமில்லை.. இதான் அம்மணி வாழ்க்கை.. அபாயத்துக்கு நடுவே பொறந்து, வளர்ந்து, இறக்கை முளைச்சு, பறந்து... போயிடணும்..."

சின்னான் உதிர்த்த தத்துவ மொழிகளை எண்ணிப் பார்த்தாள் கனகா. சலனங்களும், சில சுயநலங்களும் இல்லறத்தின் தவிர்க்க முடியாத ஆபத்துகள் தாம்! ஆனால் இவற்றோடு தாய்மையும், கருணையும் பிணைந்து கிடக்கின்றனவோ!

ஆயிற்று... இன்னும் ஒரே வாரம் தான்.. ஊர் திரும்ப வேண்டும்...

அன்று இரவு...

பெரிய மழை... இடி மின்னலுடன் ஏக மழை.. ஊர் கொள்ளாத மழை... வானமே பொத்துக் கொண்டது போல் மழை... இத்தனை நாளைய உஷ்ணத்துக்கு இந்த மண் வாசனையும், மழைத்துளி ஈரமும், இதமாக இருந்தன.

"அப்பாடா" - என்றது மனம்.

"ஏய்... இன்னிக்கு க்ளைமேட் நல்லா இருக்கு இல்லையா?"

- என்று கேட்டபடி கண் சிமிட்டினான் சோமு.

குழந்தை திவ்யா உறங்கிக் கொண்டிருந்தாள்.

திடீரென்று 'படபட'வென்று பெரிய இடி... காற்றின் வேகத்திற்குச் சார்த்தப்பட்ட ஜன்னல்கள் திறந்து அடித்துக் கொண்டன.

திடீரென்று குழந்தை திவ்யா விழித்துக் கொண்டாள். மின்சாரம் போய்விட்டது.

"அம்மா" - என்று அலறினாள் திவ்யா.

"இதோ... இதோ நான் இங்கே தாம்மா இருக்கேன்... பயப்படாதே..."

இருட்டில் உடையைச் சரி செய்தபடி மகளை அணைத்துக் கொண்டாள் கனகா.

சோமு விலகிப் படுத்தான்.

திடீரென்று அந்த இருட்டில் திவ்யா நடுங்கியபடி கேட்டாள்.

"அம்மா... அம்மா.. இந்த.... இந்த மழையிலே அந்தக் குருவிக் குஞ்சுங்க இரண்டும் பத்திரமா இருக்குமா? அல்லது...?"

'சட்'டென்று ஓர் உணர்வு!

தனக்குத் தோன்றாத ஓர் உணர்வு அந்தச் சின்னப் பெண்ணுக்கு எப்படித் தோன்றியது?

தன் தாய்மைக்குப் புரியாத ஒரு கருணை இந்தப் பிஞ்சு உள்ளத்தில் எப்படி முளைத்தது?

இந்த மழை இரவில், குளிரில், இதமான சூழ்நிலையில் ஏதேதோ காதல் உணர்வுகள் சூடேற்றிக் கொண்டிருந்த வேளை, இந்தக் குளிர் தாலாட்டு ஒரு கணம் அயரவைத்தது! இது குழந்தை பாடும் தாலாட்டா?

தாய் ஆனதால் மட்டுமே 'தாய்மை உணர்வு வந்து விடாதோ?

மகளை அணைத்தபடி மெல்ல விசும்பினாள் கனகா, குற்ற உணர்வுடன்!

குழந்தை தூங்கிப் போனாள்.

அப்போது......

அவசரமாக யாரோ கதவு தட்ட திடுக்கிட்டு அவர்கள் எழுந்தார்கள்.

வந்தது....?

சாந்தி! என்ன ஆயிற்று இவளுக்கு? தலையெல்லாம் கலைந்து... அழுதழுது கண்கள் சிவந்து....

"எங்கம்மா... எங்கம்மா... திடீரென்று மயங்கி விழுந்துட்டாங்க... மூச்சுப் பேச்சில்லாம கிடக்காங்க..."

கனகா பரபரப்பானாள். சமையல்காரியிடம் தூங்கிக் கொண்டிருக்கும் குழந்தையைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டு சோமுவும், கனகாவும் பரபரப்புடன் சாந்தியின் வீட்டிற்கு ஓடினார்கள். அந்த மழை இரவில் - தண்ணீரில் நனைந்து... சகதியில் நீந்தி சாந்தி வீட்டுக்கு ஓடி....

மயங்கிக் கிடந்த சாந்தியின் தாயாரை காரில் ஏற்றி... ஆஸ்பத்திரி ஓடி.... ட்யூட்டி டாக்டரை எழுப்பி ஐ.ஸி. வார்டில் அட்மிட் செய்து அதன் வாசலில் அழுது கொண்டு நின்றிருந்த சாந்திக்கு ஆறுதல் சொல்லி...

"எங்கம்மா... எங்கம்மா பொழைப்பாங்களா? அவங்க... அவங்களுக்கு ஒண்ணும் ஆகாதே..."

அரற்றியபடி சாந்தி கனகாவின் கைகளைப் பிடித்துக் கொண்டபோது...

கண்களில் நீர் வழிய சாந்திக்கு ஆறுதல் சொன்னாலும் ஏனோ அந்தக்



குருவிக் கூடும் தாய்க்குருவியும் தான் நினைவில் வந்தன.

இந்த மழை இரவில் அந்தக் குருவிக் குடும்பம் பிழைத்துக் கொள்ளுமா? கனகாவிற்கு அழுகை வந்தது.

மறுநாள் காலை விடிந்தது. தூங்கி எழுந்த திவ்யா முதல் காரியமாக தோட்டத்துப் பக்கம் ஓடினாள்.

மழை கொஞ்சம் விட்டிருந்தது... முதலில் ஓடிச் சென்ற குழந்தை கிணற்றைத் தான் எட்டிப் பார்த்தாள்.

ஊற்றெடுத்த கிணறு நிரம்பி வழிந்தது. மேலே இருந்தபடியே கிணற்று நீரைத் தொட்டு விடலாம் போல் அத்தனை அருகில் தண்ணீர்... ஒரு பெரிய தண்ணீர் தொட்டிப் போல் கிணறு நிரம்பிக் கிடந்தது.

அப்போது... அந்தக் குருவிகள்...?

குருவி கூடு கட்டி இருந்த சந்துகளில் எல்லாம் தண்ணீர் புகுந்திருந்தது...

"அம்மா..."

திவ்யா அலறினாள்...

"அம்மா... குருவிக் குஞ்சு செத்துப் போச்சா?"

"இல்லைம்மா... மழை வரதுக்கு முன்னாலேயே அந்தக் குருவிக் குஞ்சுங்க தன்னோட தாய்க் குருவியோட பறந்து போயிடிச்சு சின்னம்மா... நான் பாத்தேன்..."

சின்னான் சொன்னான்.

"ஹையா... நிஜமாவா?"

கைதட்டிச் சிரித்தாள் குழந்தை.

"மறுபடியும் அதுங்க இங்கே வராதா?"

"வரும்... இரண்டு குஞ்சும் பெரிசாகிப் பறந்து போயிடிச்சு இல்லையா? பிறகு அம்மாக் குருவி இன்னொரு கூடு கட்டும்... அப்ப இங்கே வரும்..."

"வேண்டாம் சின்னா... அந்தப் பொந்தை ஏதாவது கல் வைத்து அடைச்சுடு..."

கனகா கூறினாள்.

அன்று ....

காரில் சாமான்களை ஏற்றிக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் ஊருக்குத் திரும்பு கிறார்கள்...

தயங்கியபடி சாந்தியும் வந்து நின்றாள்.

"சாந்தி... உன் துணிமணிகளை எடுத்துட்டியா?"

கனகா தான் கேட்டாள்.

சாந்தி தலை அசைத்தாள்.

சோமு... தன் மனைவியை வியப்புடன் பார்த்தான்.

"நான்தான் சாந்தியை வரச் சொன்னேன்... நம்மோட ஊருக்கு வரட்டும்... எனக்கும் உதவியா இருக்கும்."

அன்று பெய்த மழையில் ஏற்கெனவே உடல் நலம் சரியில்லாத சாந்தியின் தாய் மயங்கி வீழ்ந்ததும் இவர்கள் போய் உதவிகள் செய்ததும் சோமுவுக்கு நினைவுக்கு வந்தன. மறுநாள் காலையில் சாந்தியின் தாய் இறந்து போனாள்.

ஆஸ்பத்திரியிலிருந்து எடுத்து வந்த அம்மாவின் உடலைப் பார்த்த சாந்தி கதறிய கதறல் இன்னமும் காதுகளில் ஒலிக்கிறது.

"அம்மா... அம்மா என்னை அநாதையாக்கிட்டுப் போயிட்டியேம்மா? எனக்கு யார் இருக்கா இனிமே?"

அன்றே கனகா மனத்துள் சொல்லிக் கொண்டாள்.

"நான் இருக்கேன்... அம்மாவா, ஆதரவா..."

மனத்துள் மண்டிக் கிடந்த குப்பை எண்ணங்கள் சத்தமாக மழை நீரில் கழுவப்பட்டு விட்டன.

இனி இந்தத் தாய்க்குருவி சந்தேகக் கண் கொண்டு தன் துணையைப் பார்க்காது. இந்தக் குருவிக்கூட்டிலும் இப்போது இரண்டு குஞ்சுகள்!

தன் மனைவியின் மன எண்ணங்களைப் புரிந்து கொள்ள முடியாத சோமு மனைவியை வியப்புடன் பார்க்கிறான்.

அதே சமயம்...

"ஹை... சாந்தியும் நம்மகூட வராளா? இனிமே சாந்திதான் எனக்குச் சோறு ஊட்டணும். கதை சொல்லணும்..."

திவ்யா சாந்தியின் கைகளைப் பிடித்தபடி குதிக்கிறாள்.

அவர்கள் காரில் ஏறுகிறார்கள்.

கனகா கண்களில் நீர் வழிய சின்னானைப் பார்க்கிறாள்.

சின்னாள் கை எடுத்துக் கும்பிடுகிறாள்.

"பயப்படாதே அம்மணி... அந்த இரண்டு குருவிக் குஞ்சும் மழைத் தண்ணியிலே அடிச்சுட்டு வந்து அதுக கூட்டோட கிணத்துலே பஞ்சும், வைக்கோலுமா செத்து மிதந்ததை நான் சின்னம்மா கிட்டே சொல்லமாட்டேன் தாயீ... பயப்படாம ஊர்போய்ச் சேருங்க..."

அவன் கண்கள் கூறின...

கார் கிளம்புகிறது... மழை விட்ட வானத்தில் எங்கோ ஒரு தாய்க் குருவி பஞ்சுகளையும், வைக்கோல்களையும் தன் சின்னஞ்சிறிய அலகில் சுமந்தபடி இடம் தேடிப் பறந்து கொண்டிருக்கிறது! மன ஊனங்களைப் பலவீனங்களாக்கிய ஒரு தாய்மையும் தன்னுள் ஒரு புதிய கூடு கட்டுகிறது.



## "தோழி.."

**கவிஞர் இதயசந்திரன்**



ஆளான நாளருகே
ஆசையுடன் வந்தவனை
ஆளனுப்பித் தேடிவிட்டேன் தோழி – அவன்
ஆர்ந்தயிடம் தெரியவிலை தோழி...!

அன்றிலொடு அன்றிலென
அன்றுதுணை வந்தவனை
இன்றுவரை எண்ணுகிறேன் தோழி – அவன்
இருக்குமிடம் எந்த இடம் தோழி...!

புன்னைமரச் சோலையிலே
புறமொதுக்கி முத்தமிட்டுக்
கண்திறந்து வைத்துவிட்டான் தோழி – அவன்
கைகழுவிப் போனதெங்கே தோழி..!

ஒட்டிஉற வாடிவிட்டு
ஒதுங்கியவன் சென்றுவிட்டால்
பட்டகடன் தீருமோடீ தோழி – அவன்
பாவைஎனை மறந்ததென்ன தோழி..?

பிஞ்செனநான் நின்றபோது
பெண்மனதில் நின்றவனை
வஞ்சிமனம் நாடுதடி தோழி – அவன்
வருகையினைத் தேடுதடி தோழி..!

# படப்பாடல்களில் தேசிய உணர்வு

சேயோன்

ஓவியம் ஸ்யாம்

*பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும்*
*நற்றவ வானினும் நனி சிறந்தனவே*

என்று பாடியுள்ளார் மகாகவி சுப்பிரமணிய பாரதியார். ஆம். தாயை எந்த அளவிற்குப் போற்றிப் பாதுகாப்பது நம் கடமையோ, அதுபோல் தாய்நாட்டின் வளத்திற்கும் நலத்திற்கும் பாடுபடவேண்டியது ஒவ்வொருவரின் கடமையும் உரிமையும் ஆகும். ஏனெனில்,

நம் கடமை நம்மை உயர்த்துவதோடு நின்று விடாமல், நாம் வாழும் குடும்பத்தை முன்னேற்றுவதற்கும், நாட்டை மேம்படுத்துவதற்கும் பயன்படுதல் வேண்டும். எனவே நாட்டுப்பற்றினைக் குழந்தைப் பருவம் முதல் வளர்த்தல் வேண்டும். பிறந்த குழந்தைக்குத் தாய்ப்பற்று, பாசம் எப்படிப் பிறந்த உடன் முகிழ்க்கிறதோ அதுபோல் குழந்தைப்பருவத்தில் நாட்டுப்பற்றினையும் ஊட்ட வேண்டியது நமது கடமையாகும்.

மக்களிடையே நாட்டுப்பற்றையும், தேசிய உணர்வையும் ஊட்டும் வண்ணம் படைப்பாளர்கள் கவிதை, கதை, நாடகம், கட்டுரை முதலான பல வடிவங்களில் இலக்கியங்களைப் படைத்துள்ளனர். அவற்றில் குறிப்பிடத்தக்கன திடைப்படப்பாடல்கள்.

தமிழ்த் திரைப்படங்கள் பல்லாயிரக்கணக்கில் வெளிவந்துள்ளன. அவற்றில் இடம்பெற்றுள்ள பாடல்களும் எண்ணிலடங்கா. திரைப்படப் பாடல்கள் காதல் உணர்வையும், சமுதாய உணர்வையும் ஊட்டுவதோடு, நாட்டுப்பற்றையும், தேசிய உணர்வையும் வளர்க்கும் வண்ணம் உள்ளன. அவை திரையிசை ஓவியங்களாகத் திகழ்கின்றன.

பாரத நாட்டின் பெருமைகளை அனைவரும் உணரும் வண்ணம் திரைப்பாடல் ஒன்றினைப் பாடியுள்ளார் கவிஞர் உடுமலை நாராயண கவி.

*எங்கள் தந்தை தாயின் நாடு–இந்தியா*
*எனும் இந்நாடே (எங்கள்)*
*சங்கம் தரும் தரளம் பவளம்*
*தங்கம் விளைநாடு*
*மங்காத நல்வாழ்வில் நாளும்*
*வாகை சூடும் நாடு (எங்கள்)*
*போர் வேந்தர்கள் போற்றும் புனித*
*ஏர் வேந்தர்கள் நாடு*
*கார் வேந்தன் ஐந்தருவும் போல*
*கருணையாளர் நாடு (எங்கள்)*
*ஆடும் புலி மானோடுமே*
*நீராடும் துறைநாடு*
*ஈடில் விழுச்செல்வம் கல்வி*
*ஏற்றம் வாய்த்த நாடு (எங்கள்)*

பாடலாசிரியர்: உடுமலை நாராயணகவி

படம்: எங்கள் தாய்நாடே.

பாரத நாட்டை 'எங்கள் தந்தை, தாயின் நாடு' என்று பாடும் கவிஞரின் பாட்டு நிலவளம், நீர்வளம், வனவளம் முதலானவனற்றை விளக்குகிறது. முத்து, பவளம், தங்கம் விளைகின்ற நாடு பாரதநாடு. போர் வேந்தர்கள் எனப் போற்றப்படும் வீரர்கள், ஏர் வேந்தர்கள் எனப் பாராட்டப்படும் உழவர்கள், அருளாளர்கள், கருணையாளர்களும் நிறைந்தது பாரதநாடு.

ஆடு, புலி, மான் முதலானவை ஒன்றையொன்று உண்ண முற்படாமல் ஒற்றுமையாக நீர் பருகிச் செல்லும் நீரோடைகளையும், அருவிகளையும், நதிகளையும் கொண்டது பாரதநாடு. அழியாச் செல்வமான கல்வியை அனைவருக்கும் கொடுக்கும் திறம் மிகுந்த நாடு – என்று பாரத நாட்டின் பெருமைகளை விரித்துரைத்து அனைவர் நெஞ்சிலும் நாட்டுப் பற்றினை ஊட்டியுள்ளார் உடுமலை நாராயணகவி. உழவர்களை ஏர்வேந்தர்கள் என அழைக்கும் கவிஞரை எப்படிப் பாராட்டினாலும் தகும்.

பாரதநாடு பரந்து விரிந்தது. பன்மொழி பேசும் மக்கள் பல்வேறு மாநிலங்களில் உள்ளனர். அந்தந்த மாநிலங்கள் அமைந்துள்ள இடங்களுக்கேற்ப அவற்றின் தட்பவெப்ப நிலைகளும், இயற்கைச் சூழல்களும் அமைந்துள்ளன. அங்கு வசிக்கும் மக்களின் வாழ்நிலை, பழக்க வழக்கங்கள், பண்பாடுகள் ஆகியன அதற்கேற்ப அமைந்துள்ளன. மொழியாலும், மதத்தாலும், பண்பாட்டுப் பழக்க வழக்கங்களாலும் அவர்கள் வேறுபட்டாலும் 'எல்லாரும் இந்தியர்' எனும் ஒருமைச் சிந்தனையில் ஒன்றுபடுவர். வேற்றுமையில் ஒற்றுமை காண்பதே இந்தியர்களின் இணையற்ற பண்பு. இதைத்தான் மகாகவி சுப்பிரமணிய பாரதி –

*முப்பது கோடி முகமுடையாள் – உயிர்*
*மொய்ம்புறம் ஒன்றுடையாள் – இவள்*
*செப்பும் மொழி பதினெட்டுடையாள் – எனிற்*
*சிந்தனை ஒன்றுடையாள்*

எனப் பாடுவார். 'மாரத வீரர் மலிந்த நன்னாடாம்' பாரதத் திருநாட்டின் வீரதீரத்தை விளக்கும் வகையில் வீரர்கள் அனைவரும் சேர்ந்து பாடுகிறார்கள். அவர்களைப் பாடவைக்கிறார் பாட்டுக் கோட்டையின் வேந்தர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்.

*ஒற்றுமையில் ஓங்கி நின்ற சக்தியாலே –மக்கள்*
*உள்ளமெலாம் பொங்குதடா வெள்ளம் போலே*
*வெற்றியெனும் மேடையிலே அன்புக் காளை*
*வீரநடை போடுதடா இந்த வேளை...*
*அன்பிருக்குது அறிவிருக்குது*
*பண்பிருக்குது பாரிலே... அதை*
*அழிக்க எண்ணித் திருட்டு நரிகள்*
*குழி பறிக்குது வேரிலே...*

*ஒருவர்: மாமறவர் வழியில் பிறந்து சிறந்து மகாவீரன் என விளங்குவேன்.*

*மற்றவர்: வாளும் திடமுடைய தோளும் துணையிருக்க யார்க்கும் உலகில் அஞ்சிடேன்.*

*இருவர்: எண் திசைகளும் கண்டு நடுங்க*
*வென்று வாகை சூடுவோம்*
*அறிவிலே கலைஞராய் திறனிலே தீரராய்*
*நாடும் ஏடும் எமைப்பாட*
*தொல்லுலகம் உள்ளவரை வளர்புகழ் அடைவோம்.*

*கூட்டம்: இது வீரர் பிறந்த மண்ணு!– இதில்*
*நாமெல்லாரும் ஒண்ணு!*

*சக்தி: அட ஆத்தே நீங்க பெரும் வீரர்கள்தான் உங்களைப் பார்த்தே எதிரி ஓடிப் போயிடுவான்*

*கூட்டம்: (அன்பிருக்குது)*

*ஒருவர்: வெட்டும் கூர் வாளினைக் காட்டினேன் நாட்டில் வேதனை செய்வோரை வாட்டிடுவேன்*

*மற்றவர்: எந்த நாடும் இதற்கீடில்லை என்றே – என்*
*சொந்த நாட்டைச் சொர்க்கமாக்கிடுவேன்.*

*இருவர்: கற்றவர் நெஞ்சக் கருத்தினிலே ஒன்றி*
*ஒற்றுமை கொண்டுல காண்டிடுவோம்*
*வெட்டும் கூர் வாளினைக் காட்டிடுவோம். நாட்டில்*
*வேதனை செய்வோரை வாட்டிடுவோம்.*

*கூட்டம்: இது வீரர் பிறந்த மண்ணு! – அதில் நாமெல்லாரும் ஒண்ணு!*

*சக்தி: அட ஆத்தே நீங்க பெரும் வீரர்கள்தான் உங்களைப் பார்த்தே எதிரி ஓடிப் போயிடுவான்*

*கூட்டம்: (அன்பிருக்குது)*

இந்திய நாட்டின் மக்கள் எப்படிப்பட்டவர்கள் தெரியுமா? வீரமும், காதலும் தம்மிரு கண்களாகப் போற்றுபவர்கள் இந்தியர். 'குடும்பப் பெண்களின் முகத்தை வானம் பார்த்ததில்லை. அதே போல் எங்கள் வஞ்சக எண்ணம் எங்கள் மனத்தைப் பார்த்ததில்லை. இந்திய வீரர்களின் விழிகள் தாழ்ந்து நிலத்தைப் பார்த்ததில்லை. அதனால் வெற்றித் திருமகள் வீரநடைபோடும் எல்லைகளைக் கொண்டிருப்பது இந்தியா,

பசியுடன் உள்ளவர்க்கு உணவளித்து விருந்தோம்பலைச் சிறப்புடன் செய்பவர்கள் நாங்கள். பகைவர்களை விரட்டுவதற்குப் புலியாகச் சீறுவோம். எங்கள் நிலத்தை உயிரெனப் போற்றி உரிமை கொண்டாடுகிறோம். அதனை எதிர்க்க எண்ணுவோரை வென்று அந்த நிலத்திற்கு உரமாகப் போட்டு விடுவோம்.

இப்படிப் பாடல்வழி இந்தியரை வீரமுழக்கம் செய்யச் சொல்கின்றார் பண்ணரசர் கண்ணதாசன். நாடு என்ற சொல்லை மிகவும் நயமாகச் சிலேடைச் சுவையுடன் கையாண்டுள்ளார். நாடு என்பது நாட்டையும், விரும்புதலையும் குறிக்கிறது. நாட்டை விரும்புதல் நாட்டினர் கடமையல்லவா?

*நாடு அதை நாடு – அதை*
*நாடாவிட்டால் ஏது வீடு? (நாடு)*

*பாடும்பொழுதெல்லாம் அதையே பாடு*
*மானம் பெரிதென்று வாழும் பண்பாடு (நாடு)*

*பாலைவனம் என்ற போதும் நம்நாடு*
*பாறை மலைகூட நம் எல்லைக்கோடு*
*ஆறுநிலம் பாய்ந்து விளையாடும் தோட்டம்*
*வீரர் சமுதாயமே எங்கள் கூட்டம் (நாடு)*

*வானம் குலமாதர் முகம் பார்த்ததில்லை*
*வஞ்ச நினைவுஎங்கள் மனம் பார்த்ததில்லை*
*வீரர் விழிதாழ்ந்து நிலம் பார்த்ததில்லை*
*வெற்றித் திருமாது நடைபோடும் எல்லை (நாடு)*

*பசிஎன்று வருவோர்க்கு விருந்தாக மாறும்*
*பகைவர் முகம்பார்த்துப் புலியாகச் சீறும்*
*நிலத்தில் உயிர் வைத்து உரிமை கொண்டாடும்*
*எதிர்த்து வருவோரை உரமாகப் போடும் (நாடு)*

பாடலாசிரியர்: கண்ணதாசன்    படம்: நாடோடி

*பூப்போன்ற நெஞ்சினிலும்*
*முள்ளிருக்கும் பூமியடா!*
*பொல்லாத கண்களடா*
*புன்னகையும் வேஷமடா! –*

இன்னொரு பாடலில் பாடும் பண்ணரசர் இந்தப்பாடலில் நெஞ்சத்தில் கிஞ்சித்தும் வஞ்சனை இருத்தல் கூடாது என்பதை வலியுறுத்துவதற்காகப் புதிய உவமையைக் கையாளுகிறார். 'வானம் குலமாதர் முகம் பார்த்ததில்லை. வஞ்ச நினைவுகள் எங்கள் மனம் பார்த்ததில்லை' என்கிறார். குழந்தை முதல் பெரியவர் ஈறாக நாட்டுப்பற்றை ஊட்டுவதற்கு இதனைவிட எளிய, இனிய பாடல் உண்டோ?

*கிளிபோல பேசு – இளம் குயில்போலப் பாடு*
*மலர்போலச் சிரித்து நீ குறள்போல வாழு!*
*மனத்தோடு கோபம்நீ வளர்த்தாலும் பாவம்*
*மெய்யான அன்பே தெய்வீகமாகும்*

என்று சிறுவர்களுக்கு அறிவுரை வழங்கும் கவிஞர் வாலி அவர்கள் நமது நாட்டின் நிலையை அவர்களுக்கு உணர்த்தும் வண்ணம் பாடும் பாடல்.

*சின்னத்தம்பி உன்னை நம்பி*
*இந்தநாடு காத்திருக்கு!*
*நாலெழுத்து நீ படித்து*
*மண்ணின் மானம் காப்பதற்கு*
*நீங்கள்தானே நாடாளும் ராஜாக்கள்!*
*எந்தநாளும் வாடாத ரோஜாக்கள்!*
*நாம் யாவரும் ஓரினம் ஓர்குலம்*
*ஜாதியும் பேதமும் இல்லையே! (சின்னத்தம்பி)*

*பொங்கிப் பொங்கி எங்கும்ஓடும் ஓடை*
*பூமி என்ற பெண்ணுடுத்தும் ஆடை*
*வண்ண வண்ணப் பூக்கள் கொஞ்சும் சோலை*
*தென்றல்வந்து தேர் நடத்தும் சாலை*
*எல்லாருக்கும் எல்லாமே சொந்தம் எனக் கூறுங்கள்!*
*இல்லாதவன் ஆனாலும் தென்றல் தொடும் பாருங்கள்!*
*யாவும் இங்குதான் தேவன் தந்தது*
*பாவம் அல்லவா பங்கு வைப்பது*
*ஊருக்கு இந்த சேதி சொல்லடா (சின்னத்தம்பி)*

*மானத்தோடு வாழும் இந்த மான்கள்!*
*மானைப்போல வாழ வேணும் நீங்கள்!*
*சிங்கம்போல உங்களுக்கும் நாளை*
*சிறிப்பாயும் வீரநெஞ்சம் தேவை!*
*யானைபலம் எந்நாளும் தும்பிக்கைதான் என்றாகும்*
*ஏழைபலம் நாள்தோறும் நம்பிக்கையில் உண்டாகும்*
*காலம் என்பது நாளை மாறலாம்!*
*கண்ணில் பட்டது கையில் சேரலாம்!*
*தொட்ட திங்கு தங்கம் ஆகலாம்! (சின்னத்தம்பி)*

பாடலாசிரியர்: கவிஞர் வாலி
படம்: இது எங்கள் நீதி

இப்படிச் சிறுவர்கள் மனம் ஏற்கும் வகையிலும், அவர்கள் திரும்பத் திரும்ப இந்தப்பாடலைப் பாடி மகிழும் வண்ணமும் கருத்துச் சிறப்போடும், கற்பனை நயத்தோடும் பாடியுள்ள கவிஞர் வாலி அவர்களை வாயாரப் பாராட்டி மகிழலாமல்லவா?

"எறும்பின் சுறுசுறுப்பும், எருதின் முழுதுழைப்பும், கழுதையின் பொறுமையும், காகத்தின் கூட்டுறவும், நரியின் தந்திரமும், நாயின் நன்றியும், மானின் மானமும், மனிதனுக்கு வேண்டும்" என்பார் முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம் அவர்கள். இதுபோன்ற நீதிக் கருத்துகளையும், தேசிய உணர்வையும், ஒருமைப்பாட்டுச் சிந்தனைகளையும் திரையிசைக் கவிஞர்கள் மிக அருமையாகத் தத்தமது பாடல்களில் எடுத்தாண்டிருப்பதை உணர்ந்து போற்றுவது நம் கடமைதானே?

உலகில் எத்தனையோ தொழில்கள் உள்ளன. அந்தத் தொழில்கள் வளர்ந்தால் அந்நாட்டின் பொருளாதார நிலை உயரும். அதனால் அகிலமெங்கும் பாராட்டும் நாடாகவும் திகழவும் முடியும். அவ்வாறாயின் அந்தத் தொழில்கள். வளர்வதற்கு வித்தாகவும் வேராகவும் விளங்குபவர்கள் தொழிலாளர்கள்தாமே! தொழில்களிலெல்லாம் மணிமுடியாய் மிளிர்வது உழவுத் தொழில்!

அனைத்துத் தொழில்களையும் செய்யும் தொழிலாளர்களுக்கு மட்டுமா? உலகில் பிறந்த மனிதர்கள் அனைவருக்கும் ஆற்றலைக் கொடுப்பது உணவு. அந்த உணவுக்கு இன்றியமையா அடிப்படை உணவுப் பொருள்களை உற்பத்தி செய்யும் உழவுத் தொழில் அனைத்துத் தொழில்களும் தொழும் தொழில் அல்லவா? அதனால்தான் செந்நாப்போதார் திருவள்ளுவர்

*சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் அதனால்*
*உழன்றும் உழவே தலை –*

என்றும், *உழுவார் உலகத்தார்க்கு ஆணி* – என்றும் கூறியுள்ளார்.

உழவுத் தொழிலைச் செய்யும் விவசாயி கடவுள் எனும் முதலாளி கண்டெடுத்த தொழிலாளியாம்! இப்படிச் சொல்லுகிறார் திரையிசைக் கவிஞர் மருதகாசி!

*விவசாயி... விவசாயி!*
*கடவுளெனும் முதலாளி*
*கண்டெடுத்த தொழிலாளி – விவசாயி!*

*முன்னேற்றப் பாதையிலே மனசை வச்சு*
*முழுமூச்சாய் அதற்காகத் தினம் உழைத்து*
*மண்ணிலே முத்தெடுத்துப் பிறர் வாழ*
*வழங்கும் குணமுடையோன் விவசாயி! (விவ)*

*என்ன வளம் இல்லை இந்தத் திருநாட்டில்?*
*ஏன் கையை ஏந்தவேணும் வெளிநாட்டில்?*
*ஒழுங்காய்ப் பாடுபடு வயல்காட்டில்!*
*உயரும் உன்மதிப்பு அயல்நாட்டில்! (விவசாயி)*

*கறுப்பென்றும் சிவப்பென்றும் வேற்றுமையாய்*
*கருதாமல் எல்லாரும் ஒற்றுமையாய்*
*பொறுப்புள்ள பெரியோர்கள் சொன்னபடி*
*உழைத்தால் பெருகாதோ சாகுபடி! (விவசாயி)*

*இருந்திடலாம் நாட்டில் பல வண்ணக்கொடி*
*எத்தனையோ கட்சிகளின் எண்ணப்படி*
*பறக்கவேணும் எங்கும் ஒரே சின்னக்கொடி – அது*
*பஞ்சம் இல்லையெனும் அன்னக்கொடி! (விவசாயி)*

பாடலாசிரியர்: மருதகாசி

படம்: விவசாயி

சுதந்தரப் பொன்விழாக் கொண்டாடும் வேளை இது. அரசியலில் சுதந்தரம் கிடைத்துவிட்டது. வெள்ளையனை வெளியேற்றி விடுதலை பெற்றுவிட்டோம். ஆனால் சுதந்தர இந்தியாவில் சமூக, பொருளாதாரத்தில் இன்னும் வேறுபாடுகள் மிகுந்து கொண்டே போகின்றன. சாதி சமயப் பூசல்கள் மிகுந்துள்ளன. பொருளாதார ஏற்றத்தாழ்வு நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே வருகிறது. உணவில் தன்னிறைவு பெற்று விட்டோம் என அரசாங்கம் ஒருபக்கம் கூறுகிறது. மறுபக்கமோ ஒருநேர உணவு கூடக் கிடைக்காமல் எத்தனையோ பேர் அவதிப்படுகின்றனரே. அனைவருக்கும் வீட்டுவசதி செய்து கொடுக்கப்படும் என்று அரசு கூறியிருந்தாலும், இன்னும் பலர் தெருவோரங்களிலும், பாலங்களின் அடியிலும், தண்ணீர்க் குழாய் அருகிலும் வசிக்கின்றனர். அனைவருக்கும் மருத்துவ வசதி வழங்கப்படும் என்று பறைசாற்றினாலும் அவை இன்னும் பலருக்கு முழுமையாகக் கிடைக்கவில்லை. பெண் சிசுக் கொலையும், வரதட்சிணைக் கொடுமையும் என்று முற்றிலும் ஒழிக்கப்படும்? ஒரு காந்தி இல்லை நூறு காந்தி பிறந்தாலும் இதனை மாற்ற இயலாதா? சுதந்தர நாட்டின் அடிமைகளாக ஐம்பதாண்டுகளுக்குப் பின்னரும் வாழவேண்டுமா?

– இப்படிக் கேட்கிறார் அழுகுரலுடன் ஒரு பெண். இல்லை கேட்க வைக்கிறார் கவிஞர் புலமைப்பித்தன்.

*என் அன்னை தேசமே!*
*நான் உன்னைக் கேட்கிறேன்*
*ஒரு தர்மம் வாழவே நான் நீதி கேட்கிறேன்*
*எங்கள் கரங்களில் ஏனோ விலங்குகள்*
*நாங்கள் சுதந்தர நாட்டின் அடிமைகள் (என் அன்னை)*
*வெயிலும் இல்லாமல் மழையுமில்லாமல்*
*கொதிக்கும் நெஞ்சோடு உழைக்கும் வர்க்கங்களே!*
*விடிவுமில்லாமல் முடிவுமில்லாமல்*
*பலபேரின் வாழ்க்கை தெருவில் நிற்கின்றதே!*
*ஒருகங்கை வந்தே வயல்களில் பாய்ந்தாலென்ன?*
*வயல் எங்கும் கதிர்மணி சாய்ந்தாலென்ன?*
*வறுமை கொடுமை இதுவா உரிமை?*
*நதி எங்கே? எங்கே? யார் சொன்னது?*
*(என் அன்னை)*
*ஒரு காந்தி அல்ல ஒருநூறு காந்தி*
*பிறந்தாலும் எங்கள் அடிமை மாறாததா?*
*கலங்கும் கண்ணோடு புலம்பும் நெஞ்சோடு*
*துடிக்கின்ற ஏழை துயரம் தீராததா?*
*ஒருவீடும் இல்லை குருவிக்கூடும் இல்லை*
*பசி ஒன்றே கண்டோம் சுதந்தரம் எங்கே கண்டோம்?*
*கொடியோ உயிரின் நிலையோ துயரம்*
*விழி எல்லாம் கண்ணீர்க் கோலங்கள்*
*(என் அன்னை)*

பாடலாசிரியர்: கவிஞர் புலமைப்பித்தன்

படம்: சுதந்தர நாட்டின் அடிமைகள்

அந்தந்த மாநிலங்களின் மக்கள் தத்தமது தாய்மொழியைப் போற்றுவது சாலச்சிறந்தது. அதேபோல் தாய்நாட்டையும் போற்றவேண்டும். அதன் வளத்திற்கும் நலத்திற்கும் பாடுபட வேண்டும். குறிப்பாக இன்றைய இளைய சமுதாயம் நாளை இந்தியா நமது என உணர்ந்து செயல்பட வேண்டும். இதனை வலியுறுத்திப் பாடியுள்ளார் கவிஞர் வைரமுத்து அவர்கள்.

*தமிழா, தமிழா நாளை நம் நாளே!*
*தமிழா தமிழா நாடும் நம் நாடே!!*
*என் வீடு தாய் தமிழ்நாடு என்றே சொல்லடா*
*என் நாமம் இந்தியன் என்றே என்றும் நில்லடா*
*(தமிழா)*
*இடம் மாறலாம் குணம் ஒன்றுதான்*
*இனம் மாறலாம் நிறம் ஒன்றுதான்*
*மொழி மாறலாம் பொருள் ஒன்றுதான்*
*நதி மாறலாம் குடி ஒன்றுதான்*

*திசை மாறலாம் நிலம் ஒன்றுதான்*
*இசை மாறலாம் மொழி ஒன்றுதான்*
*நம் இந்தியா அது ஒன்றுதான்*
*(தமிழா)*
*தமிழா தமிழா கண்கள் கலங்காதே!*
*விடியும் விடியும் உள்ளம் மயங்காதே!!*
*உனக்குள்ளே இந்திய இரத்தம் உண்டா? இல்லையா?*
*(தமிழா)*

படம்: ரோஜா

பாடலாசிரியர்: கவிஞர் வைரமுத்து

இந்தப் பாடலில் கவிஞர் மீண்டும் மீண்டும் ஒன்றே! ஒன்றே! என வலியுறுத்துவதன் நோக்கமே மொழிவாரி மாநில மக்களிடையே உள்ள மனப்போக்கினை மாற்றுவதற்குத்தான். தமிழர், தெலுங்கர், கன்னடர், மராட்டர் எனத் தத்தமது தாய்மொழியைப்பேணுவோர் அனைவரின் மாநிலங்களையும் தன்னகத்தே கொண்டு விளங்குவது இந்தியத் திருநாடு. ஒவ்வொருவரின் உடம்பிலும் ஒடும் ரத்தம் இந்திய ரத்தமாக இருத்தல் வேண்டும். ஏனெனில் பொறியியல், அறிவியல், மருத்துவம் போன்ற பட்டப்படிப்பில் நல்ல விற்பன்னராகத் திகழும் பல இளைஞர்கள் இன்றைக்குத் தத்தமது மாநிலத்தையும், இந்திய நாட்டையும் மறந்து வெளிநாடுகளில் குடியுரிமை பெற்று வாழவே தொடங்கிவிட்டனர். அவர்கள் அனைவரின் மனத்தைத் தொடும் வண்ணம் இந்திய ரத்தம் உண்டா? இல்லையா?' எனக் கவிஞர் கேட்டுள்ளார். இதிலிருந்து இளைஞர்களிடையே தேசிய உணர்வையும், நாட்டுப் பற்றையும் ஊட்டுவதில் கவிஞர் வைரமுத்து அவர்களுக்கு எத்தகைய ஈடுபாடு உள்ளது என்பதை நன்கறியலாம்.

தூங்க வைப்பதற்கும், துயில் எழுப்புவதற்கும் தேம்பி அழுவதற்கும், ஆடிப்பாடிக் களிப்பதற்கும், அயர்வைப் போக்குவதற்கும் நாட்டுப்புற மக்களால் பாடப்படும் பாடல்களே நாட்டுப்புறப் பாடல்களாகும். ஆடிப்பாடி வேலை செய்தால் அலுப்பிருக்காது என்பர். அது போல கணவனும், மனைவியும் சேர்ந்து வயலில் விதை விதைக்கச் செல்லுகின்றனர்.

மண்ணில் விதையை நன்கு ஊன்றுவதற்கு கை விரல்களில் வலுவிருக்கவேண்டும். விதை விதைப்பதற்கு முன் வயலை உழுவதற்கு உடலில் வலுவிருக்க வேண்டும். நெற்கதிர் முற்றிலும் விளைவதற்காகத் தொடர்ந்து பாடுபடுவதற்கு உடல் வலிமை தேவை. மண்ணை நம்பி விதை விதைப்போம். அது பின்னர் கொடுக்கும் பலன் நிறைந்ததாக இருக்கும். வாழ்க்கையை நடத்துவதற்கு மட்டுமன்றி தங்கம் போன்ற அணிகலன்களை வாங்கி அணிவதற்கும் பயன்படும்.

இங்குப் பாயும் நதிகள் நல்லவர்களின் மனசுபோல களங்கமற்றுப் பாய்கின்றன. அத்தகைய நதிநீர் நஞ்சையில் பாய்ச்சும் வாய்ப்புக் கிடைக்கும். அந்த நீர் வளத்தினால் நெற்கதிர் விரைவில் வளர்ந்து கதிர்முற்றி நிலத்தில் நாணத்துடன் சாய்ந்துவிடும். அப்போது நாம் கதிரறுத்துப் பசியைப் போக்குவதோடு நமது வீட்டிற்கு வேண்டிய பொருள்களையெல்லாம் வாங்கிக்கொள்ளலாம். பஞ்சம் பறந்தோடி விடும். பசி நீங்கிவிடும்.. வஞ்சனை செய்யக் கூடிய துயரம் கொஞ்சமும் இருக்காது. அந்தக்காலம் வரும். விரைவில் வந்து விடும். ஆகையினால் சோகத்தை அகற்றுவோம். சுகத்தைப் பெறுவோம்.

மண்ணின் – இந்திய மண்ணின் – மனசில் வேறுபாடில்லை. ஏனெனில் இந்திய பூமி அல்லவா? அதனால் வம்பு வழக்கு வாதமில்லை. இந்த பூமி பாசம் கொண்ட பூமி. எப்படி? இந்தியத் திருநாட்டின் இரு கண்களெனத் திகழும் இதிகாசங்களான மகாபாரதம், இராமாயணத்தின் வாயிலாக மக்களுக்குப் பாரத நாட்டின் பண்பாடுகளையும், தாய்ப்பாசத்தையும், சகோதரப் பற்றையும், நாட்டுப் பற்றையும் ஊட்டிய பூமி. இது நம் எல்லாரையும் காக்கும் சாமி. எதிர்காலம் நம் கையில் என்ற உயர்ந்த நம்பிக்கையில் நடவு செய்து, நாம் வளர்ந்து நாட்டையும் காப்போம் எனப் பாடுகின்றனர்.

*ஆண்: கைகளிலே வலுவிருக்கு கம்மாகரை நிலமிருக்கு*
*மண்ண நம்பி விதை விதைப்போம் கண்ணம்மா!*
*அது கொடுக்கப்போற பலன் நமக்குப் பொன்னம்மா!*
*பெண்: கைகளிலே வலுவிருக்கு கம்மாகரை நிலமிருக்கு*
*மண்ண நம்பி விதை விதைப்போம் கண்ணய்யா!*
*அது கொடுக்கப் போற பலன் நமக்குப் பொன்னய்யா!*
*பெண்: நல்லவங்க மனசுபோல நதிகள் இங்கே பாயும்*
*நஞ்சையிலே கதிர் விளைஞ்சு நாணத்தோடு சாயும்*
*பஞ்சமில்லையே பசியில்லையே*
*வஞ்சனை செயும் துயரில்லையே*
*ஆண்: அந்தக்காலம் வரும் நேரம் நெஞ்சில் வேணாம் இனி சோகம்!*
*அடிமானே நீ வா... வா... (கைகளிலே)*
*ஆண் பெண்: வெட்டித்தனப் பேச்சுகளால் வீணாப்போச்சு நாடு*
*வெட்கங் கெட்ட மனுசனுக்கு விளைஞ்சு தருது காடு*
*ஆண்: மண்ணு மனசில் பேதமில்லையே*
*வம்பு வழக்கு வாதமில்லையே*
*பெண்: இது பாசம் கொண்ட பூமி*
*நமைக் காக்கும் இது சாமி*
*எதிர்காலம் கை மேலே! (கைகளிலே)*

பாடலாசிரியர்: ஜீவபாரதி படம்: இனி ஒரு சுதந்தரம்

## பேசாப்பெருமை

அமுதபாரதி

பேசாப் பெருமை என்னென அறியப்
பேசா திருந்து பார்த்துக் கொண்டிருந்தேன்...

பேசிப் பேசிக் காற்றையும் கெடுக்கும்
பேச்சு மனிதர்மேல் காய்ச்சல் வந்தது.

பேசிக் கொண்டிருக்கும் பேர்கள் அனைவரும்
பேச்சே செயல்எனப் பேதுற்றிருந்தார்
பேச்சால் எதிலும் வாதுற் றிருந்தார்
பேச்சால் உலகில் மோதுண்(டு) இறந்தார்...

பேசா திருந்த மரம்செடி கொடிகளோ
பெருமை மிகுந்த செயல்களே செய்தன;
கொடிகள் அனைத்திலும் கோடிப் பூக்கள்
செடிகள் யாவிலும் சிற்றிலை, காய்கள்
மரங்கள் தம்மிலோ காய், கனி, பெருநிழல்...
அடடா!

செயல்வழிப்பேசும்அவ் வோரறி(வு) உயிரினம்
இயல்பினால் என்னுளே இன்னொளி ஏற்றின!
பேசாப் பெருமை என்பது
இனிய செயல்களே என்றுணர்ந்தேனே!

## நல்லவை அருள்க!



மனக்கவலை இருந்தாலும்
மனம்சற்று தளர்ந்தாலும்
எனக்கென்ன குறையென்று
எப்படித்தான் வாழ்ந்தாலும்
தனக்கென்று ஒரு வழியில்
தான் இங்கு சென்றாலும்
கணக்கொன்று புரியாமல்
கடவுளைத்தான் நாடுகிறோம்!

பழி சுமத்தும் எத்தனையோ
பாதையிலே வந்தாலும்
வழி நடத்தும் ஆனை முகத்தோனை
வகை தேடிப் பணிகின்றோம்
குறைகள் மனத்தை யிங்கு
கூடிக் கலைத்தாலும்
நிறைவைப் பெறுகின்ற
நெஞ்சில் நிலைத்திருப்பாய்!



அல்லவை அகற்றி
அகத்தினைத் திருத்தி
நல்வழிப்படுத்தும்
ஞானம் அமைக!
எல்லார் வாழ்விலும்
இன்பமும் சேர்ந்திட
பிள்ளையார் பட்டிப்
பெருமகன் அருள்க!

சீனி வீரப்பன்

இந்தப்பாட்டில் கவிஞர் தம் கருத்தினை கிராமப்புறத் தம்பதியின் வாயிலாக எடுத்துரைத்துள்ளார். கிராமப்புற மக்களுக்கு நாட்டினுடைய தற்போதைய நிலைமை களையும், நாட்டுணர்வையும், நம்பிக்கை ஒளியை ஏற்படுத்தும் வகையில் நாட்டுப்புறப் பாடல் பாங்கில் பாடியுள்ள கவிஞரைப் பாராட்ட வேண்டும்.

இந்திய சுதந்தரப் பொன் விழா ஆண்டில் திரைப் படங்களில் இடம்பெற்றுள்ள தேசிய உணர்வூட்டும் பாடல்களை எண்ணிப் பார்ப்பது சாலப் பொருத்தமே! இன்னும் பல பாடல்கள் உள்ளன. சான்றுக்கு 'தங்கங்களே நாளைத் தலைவர்களே' 'சித்திரச் சோலைகளே' போன்ற பாடல்களும் இன்னும் 'பாரத விலாஸ்' 'கப்பலோட்டிய தமிழன்' 'நாம் இருவர்' போன்ற படங்களிலுள்ள பாடல்களும் தேசிய உணர்வை ஊட்டும் வண்ணமும், நாட்டுப்பற்றை வளர்க்கும் வகையிலும் அமைந்துள்ளன.

திரைப்படப் பாடல்கள் அந்தந்தத் திரைக்கதைகளின் கருவிற்கும், கதைக்கும், காட்சிக்கும், சூழலுக்கும் ஏற்பப் பாடப்பட்டாலும் அவற்றில் நாட்டு நடப்பு, ஒற்றுமையின் இன்றியமையாமை, சமத்துவம், சமுதாய விழிப்புணர்வு முதலான கருத்துகளை நேரடியாகவும், இலைமறை காயாகவும் புகுத்தியிருக்கும் திரையிசைக் கவிஞர்களைப் பாராட்டுதல் நம் கடமையாகும்.

திரைப்படப்பாடல்கள் எனும் கடலிலிருந்து ஈண்டு விளக்கியுரைக்கப்பட்டவை சில முத்துகளே. இன்னும் எத்தனையோ முத்துகள் உள்ளன. அவற்றைத் தேர்ந்தெடுத்து முத்துமாலையாகக் கோத்து தமிழ்ச் சமுதாயத்திற்கு வழங்கினால் பெரும் பயன் கிட்டும்.

எதிரே ஸ்யாம் சித்திரங்கள்



• ஞானக்கூத்தன் பாடல் வரிகளுக்கு – பிரகா பெஸ்ஸெல் 'தலைக்கனமோ அதனால் என்றார். அவள் விதிர்த்தனள்.'

• ஞானக்கூத்தன் பாடல் வரிகளுக்கு – வைஜயந்தி மாலா 'இன்றைக்கெப்படி ஆகப்போகுதோ'

## பாரதத் தாய்க்கு... கவிதாஞ்சலி கீதாஞ்சலி பரதாஞ்சலி

ஸுஜாதா விஜயராகவன்

அரசியல் லஞ்ச ஊழலை பரதநாட்டியத்தில் காட்ட இயலுமா? ஆணாதிக்க மனப்பான்மையை நையாண்டி செய்வது அபிநயத்தில் சாத்தியமா? எய்ட்ஸ் நோய் பற்றி பரதநாட்டியம் பேசுமா? அணு ஆயுத பயங்கரத்தை அடவுக் கோவைகளால் சித்திரிக்க முடியுமா?

• வைரமுத்து பாடல் வரிகளுக்கு – நளினி ப்ரகாஷ் 'அம்மா ஆண்டாள்! முப்பந்தைந்து வயது முதிர் கன்னியர்க்கெல்லாம் — நீ மாப்பிள்ளை அடைந்த மகத்துவம் சொன்னால்'

• வைரமுத்து பாடல் வரிகளுக்கு – சி.வி. சந்திரசேகர், ஜெயா சந்திரசேகர். 'உச்சிப்பாறை அழைக்கிறது – ஓர் ஓவியம் நடக்கவிருக்கிறது'





கவியரசு கண்ணதாசன்

முடியும் என்று அழுத்தந்திருத்தமாக நிரூபித்தது. செப்டம்பர் 1ஆம் தேதி முதல் 8ஆம் தேதி வரை சென்னை நாரத கான சபாவின் நாட்டிய அரங்கம் வழங்கிய கவிதை–இசை–நாட்டியவிழா. இந்திய விடுதலையின் பொன்விழாவைக் கொண்டாடும் வகையில் வந்தேமாதரம் என்ற பெயரில் நடைபெற்ற இக்கலைவிழா பரதநாட்டியத்தில் ஒரு திருப்பு முனையாக அமையும் என்று கூறப்படுகிறது.

இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழ் இன்று வெவ்வேறாகப் பிரிந்து ஒன்றுக்கொன்று தொடர்பின்றி நிற்கிறது. (நாட்டியம், நாடகம் என்னும் பிரிவில் அடங்கும்.) மூன்று துறையினரையும் முதன்முறையாக ஒன்றிணைத்துத் தாய்நாட்டுக்கு அஞ்சலியாக நிகழ்ச்சிகளை வழங்க முன் வந்தது ஒரு துணிச்சலான பரிசோதனை.

வைஜயந்திமாலா, ஜெயா– சி.வி. சந்திரசேகர், சாந்தா– தனஞ்செயன், மீனாட்சி சித்தரஞ்சன், கிருஷ்ணவேணி லட்சுமணன், ராதா, லீலா ஸாம்ஸன், மாளவிகா சருக்கை, பிரகா பெஸ்ஸெல், நளினி ப்ரகாஷ், லக்ஷ்மணன், ஸ்ரீலதா விநோத்குமார், சூரியநாராயணமூர்த்தி, பவித்ரா பிரசாத், பிரியதர்ஷினி கோவிந்த், ஜயந்தி சுப்ரமண்யம் என்று பரதநாட்டிய முன்னணிக் கலைஞர்கள், இளம் நட்சத்திரங்கள் நாளுக்கு இருவராக நடன நிகழ்ச்சிகள் வழங்க,

ஞானக் கூத்தன், வைரமுத்து, எஸ். வைதீஸ்வரன், மு. மேத்தா, சௌந்தரா கைலாசம், நிர்மலா சுரேஷ், அப்துல் ரகுமான் போன்ற சமகாலக் கவிஞர்கள் நாளுக்கொருவராய் மேடையில் தோன்றித் தத்தம் கவிதைகளை வாசித்து வழங்கியதும் அவை நாட்டியமாக நடைபெற்றன. கண்ணதாசனின் கவிதையை அவர் மகன் காந்தி கண்ணதாசன் வழங்கினார்.

இக்கவிதைகளின் மூலம் சமகாலச் சிந்தனைகள், பிரச்னைகள் பரதநாட்டியம் என்னும் பழம்பெரும் கலைக்குள் பிரவேசித்தன.

கண்டோர் வியக்கும் வண்ணம் இத்தனையும் நாட்டியத்தில் சித்திரித்துக் காட்டப்பட்டன. சம்பிரதாயமான பரத நாட்டியத்தின் இலக்கண வரம்பு மீறாமல் புதிய கருத்துகளையும் புகுத்தும் வண்ணம் நடனக் கலைஞர்கள் தம் எல்லைகளை விரிவுபடுத்தினர். பதமாகவும், பதவர்ணமாகவும், நாட்டிய நாடக உத்தியாலும் பாடல்கள் அபிநயிக்கப்பட்டன.

இதற்கு உதவ இசைக்கலைஞர்கள் உற்சாகமாக ஒத்துழைப்புத் தந்தனர்.

எதுகை, மோனை, சந்தம் என்ற கட்டுகளை மீறிய புதுக்கவிதை கர்னாடக இசைக்கு வசப்படுமா என்ற சவாலை ஏற்றனர். கவிதைக்கும், நாட்டியத்துக்கும் இசைப்பாலம் அமைக்க ஓர் இசைக்கலைஞர்கள் படையே களம் புகுந்தது. நாட்டியக் கலைஞர்களுடன் வழக்கமாக இணைந்து இயங்கும் இசைக்கலைஞர்கள் தவிர இளம் வித்வான் விஜய் சிவா மேற்பார்வையில் டி.எம். கிருஷ்ணா, ஆர்.கே. ஸ்ரீராம்குமார், கஸ்தூரிரங்கன், பத்மினி ஸ்ரீநிவாசன் என்று அணி திரண்டது. சுத்தமான கர்னாடக பாணியிலும், தேவைக்கேற்ப காவடிச் சிந்து போன்ற நாட்டுப் பாடல் அமைப்பிலும் இராகங்களை அமைத்தனர். குற்றாலம் நாகராஜன் என்னும் இசைக்கலைஞர் எஸ். வைதீஸ்வரனின் புதுக்கவிதையைப் பதவர்ணமாகவே அமைத்துச் சாதனை புரிந்தார்.

மூன்று துறைகளைச் சார்ந்த கலைஞர்கள் இணைந்து பணியாற்றியது இதுவே முதல் முறை என்பது இந்த விழாவின் மகத்தான சிறப்பு. ஒவ்வொரு கலைஞருக்கும் இது முற்றிலும் புதிய, இனிய அனுபவமாகத் திகழ்ந்தது. தத்தம் கலைகளுக்குரிய சிறப்புகளை மேம்படுத்திக் காட்டவும் இது ஓர் அரிய வாய்ப்பாக அமையக் கண்டனர். கவிஞர்கள் சிலர் இந்த விழாவுக்கெனவே புதிய பாடல்களை இயற்றியும் வழங்கினர்.

விழாவைத் தொடங்கி வைத்தவர் சுதந்தரப் போராட்ட வீரர்களில் ஒருவரும், முன்னாள் அமைச்சரும், ஆளுநருமான சி. சுப்ரமண்யம். வந்தேமாதரம் என்ற மந்திரச் சொல்லை முதன் முதலாக வழங்கிய பங்கிம் சந்திரரின் 'வந்தேமாதரம்' பாடலை பத்மாசேஷாத்ரி பாலபவன் பள்ளி மாணவ மாணவியர் தேச வணக்கமாகச் சேர்ந்திசைத்தனர்.

நிறைவு விழாவின் தலைவர் தொழிலதிபர், கலைப்புரவலர் பொள்ளாச்சி என். மகாலிங்கம். சுப்ரமணிய பாரதியாரின் வந்தேமாதரம் பாடலைப் பாடி நிறைவு விழாவைத் தொடங்கியவர் அந்த மகாகவியின் கொள்ளுப் பேரன் ராஜ்குமார் பாரதி.

விழாவின் ஒவ்வோர் அம்சத்திலும் கலையுணர்வும், தேசிய உணர்வும் இணைந்து துலங்கும் வண்ணம் செவ்வையாகத் திட்டமிட்டு வழங்கியது நாரதகான சபாவின் நாட்டிய அரங்கம். சுதந்தரப் பொன்விழா ஆண்டில் ரசிகர்கள் இதயத்தில் தேசப்பற்று என்னும் ஊற்றுக்கண் திறந்தது. கலைஞர்களுக்கிடையே இருந்த தடுப்புச் சுவர்களின் சாளரங்கள் திறந்தன. ○

போட்டோ – யோகா

கவியரசு வைரமுத்து



கவிஞர் எஸ். வைதீஸ்வரன்





கவிஞர் ஞானக்கூத்தன்



கவிஞர் நிர்மலா சுரேஷ்





கவிஞர் மு. மேத்தா

திருமதி சௌந்தரா கைலாசம்



கவிஞர் அப்துல் ரஹ்மான்



• எஸ். வைதீஸ்வரன் பாடல் வரிகளுக்கு — லக்ஷ்மணன். 'எங்கெங்கும் பச்சை வெள்ளம் பச்சை மழை'

• எஸ். வைதீஸ்வரன் பாடல் வரிகளுக்கு சாந்தா—தனஞ்செயன்—ப்ரீதி ஆத்ரேயா.

'சுதந்தரம் வற்றாத சக்தி வெள்ளம் உள்ளன்போடு உண்மைக்குரலில் கூவிடுவோம்.'

• மு. மேத்தா பாடல் வரிகளுக்கு — ஸ்ரீலதா வினோத் 'இந்தியனே இணைந்து வா'

• மு. மேத்தா பாடல் வரிகளுக்கு — மீனாக்ஷி சித்தரஞ்சன். தீண்டாமைக் கொள்கைகளை உலகெங்கும் திருத்துவோம்'

• கொத்த மங்கலம் சுப்பு இயற்றிய 'காந்தி மகான் கதை' பாடல் வரிகளுக்கு – சூரிய நாராயண மூர்த்தி

'உப்புக்குமே வரி விதிச்சான்'

• சௌந்தரா கைலாசம் பாடல் வரிகளுக்கு – கிருஷ்ணவேணி லக்ஷ்மணன்.

'தளருமெனக் கொடிக் கொருதேர் தந்தவனின் பரப்பளவில் வந்தவர்கள் தானா நாம்?'



• சௌந்தரா கைலாசம் – கவிதை வரிகளுக்கு – பவித்ரா ப்ரசாத்

'குணங்கள் மிகுந்ததென்று ஆடுராட்டே!'

• கண்ணதாசன் பாடல் வரிகளுக்கு – ராதா

'விண்ணவர் மலர்கள் தூவ வியத்தகும் ஒருமை பெற்றோம்'



• நிர்மலா சுரேஷ் பாடல் வரிகளுக்கு – பிரியதர்சினி கோவிந்த்

'நாமும் கூட இன்று புதிதாய்ப் பிறக்கலாம்.'

• நிர்மலா சுரேஷ் பாடல் வரிகளுக்கு – லீலா ஸாம்ஸன்

'அகநானூறு புறநானூறு போல
அடையாறு நானூறு நீதானோ'

• அப்துல் ரகுமான் பாடல் வரிகளுக்கு – ஜயந்தி சுப்ரமணியம் 'இதயத்தை இறைவன் ஆலயம் என்பாய்'

• அப்துல் ரகுமான் பாடல் வரிகளுக்கு – மாளவிகா சருக்கை

'நதிகளைப்போல் நம் கோடுகளில்...'



# மூன்று தலைமுறையும் முப்பரிமாணங்களும்



### கலைமாமணி இந்திராராஜன்

மயிலை சாரதாபுரம், இந்திராலயம் நாட்டியப் பள்ளியில் கலைமாமணி இந்திரா ராஜன் அவர்களை அமுதசுரபி தீபாவளி மலருக்காகக் கண்டபோது அவர் எனக்களித்த இனிமையான நினைவுகள்.

கலைமாமணி இந்திரா ராஜன் காரைக்காலிலுள்ள பாரம்பரியம் மிக்க கலைக் குடும்பத்தில் பிறந்தவர். அந்தக் காலத்தில் நாட்டிய உலகில் புகழ் பெற்று விளங்கிய, காரைக்கால் சுந்தராம்பாளின் பெயர்த்தி சுந்தராம்பாள் நன்றாகப் பாடுபவர்.

ஆறாவது வயதில் குற்றாலம் கலைக் கொண்டல் கணேச பிள்ளை யிடம் நடனம் பயின்றார். நான்காண்டுகள் கடுமையான பயிற்சிக்குப் பிறகு இவருடைய அரங்கேற்றம் திரு எம்.கே. தியாகராஜ பாகவதர் தலைமையில் நடைபெற்றது.

மலேசியா, ஹாங்காங், சிங்கப்பூர், பிரான்ஸ், இங்கிலாந்து, அமெரிக்கா என உலகெங்கும் இவருடைய நாட்டிய நிகழ்ச்சி நடைபெற்றிருக்கிறது. மலேசியாவில் மட்டும் ஆயிரத்துக்கும் மேற்பட்ட நிகழ்ச்சிகள் நடந்துள்ளன.

1991ஆம் ஆண்டு தமிழ்நாடு, இயல், இசை நாடக மன்றம் கலைமாமணி பட்டம் கொடுத்தார்கள்.

முருகா சரணம், அம்பாபாலி, சக்தி தரிசனம் குற்றாலக் குறவஞ்சி. இவை – இவரால் இயக்கப்பட்ட நாட்டிய நாடகங்கள்.

இப்போது குழந்தைகள் நாட்டியம் படிக்க விரும்புவதுடன் நட்டுவாங்கமும் படிக்க ஆசைப்படுகிறார்கள். "நமக்குப் பிறகு நமது பாணி தொடர நமது பிள்ளைகள் இருக்கிறார்கள் என்ற மகிழ்ச்சி எனக்கு எப்பவுமே உண்டு" என்று மன நிறைவுடன் பேசும் கலைமாமணி இந்திரா ராஜனின் மாணவி கலைமாமணி கிருஷ்ணகுமாரி நரேந்திரன்.

### திருமதி கிருஷ்ண குமாரி நரேந்திரன்

ஐந்து வயதுக் குழந்தையாக இருக்கும் போதே நாட்டியம் பயிலத் தொடங்கி, தொடர்ந்து ஐந்து வருடங்கள் திரு. சந்திரசேகர் அவர்களிடம் அடவுகள் பயின்றார். பிறகு குரு நடராசன் அவர்களிடம் அரங்கேற்றம் செய்து கொண்டார். பிறகு குரு கலைமாமணி இந்திரா ராஜனிடம் சேர்ந்து, பந்த நல்லூர் பாணியில் தேர்ச்சி பெற வேண்டும் என்பதற்காக ஆரம்பம் முதல் அவரது பள்ளியில் நடனம் பயின்று நட்டுவாங்கம் பயின்று, அவர் வழியிலேயே, அவர் பாணியிலேயே நட்டுவாங்கம் செய்து வருகிறார்.

சௌந்தர்யலஹரி, கருணைக்கடல் கந்தவேள், பன்னிருமாத பஜனை விழா, நவக்கிரக தெய்வங்கள், திராவிடசக்தி, மீனாட்சி கல்யாணம், புரட்சிக்கவி, இராமேஸ்வர மஹாத்மியம் போன்ற நாட்டிய நாடகங்களை (பாலே) நாட்டிய



உலகுக்கு அளித்த பெருமை எங்கள் நாட்டியப் பள்ளிக்கே உரியதாகும்.

1993இல் தமிழக அரசு இவருக்கு ''கலைமாமணி'' விருதையளித்துக் கௌரவித்தது.

### திருமதிபார்வதி ரவிகண்டசாலா

அபிநய நாட்டியாலயாவின் மூத்த மாணவியான திருமதி பார்வதி ரவி கண்டசாலா நாட்டியாச்சார்யா திருமதி கிருஷ்ணகுமாரி நரேந்திரனின் மாணவியாக அவரது வழித்தோன்றலில், சீடரில், மாணவிகளில் முதன்மையாக இடம் பெறுகிறார்.



பத்து வயதுச் சிறுமியாக இருக்கும் பொழுதே நடனம் பயிலத் தொடங்கி, 1978இல் திருமதி கிருஷ்ணகுமாரியிடம் அரங்கேற்றம் செய்யப் பட்டு இதுவரை சுமார் ஆயிரத்திற்கும் மேற்பட்ட நடன நிகழ்ச்சிகளைத் தந்து தன்னடக்கத்துடன் காட்சிதரும்பார்வதி, தன் குரு திருமதி கிருஷ்ண குமாரியைப் பற்றிப் பேசும் பொழுது 'என்னுடைய குரு, எனக்கு தாயாக, குருவாக, நண்பனாக இருக்கின்றார் என்றால் அது மிகையில்லை' என்று விவரிக்கிறார்.

அன்னமாச்சார்யா கிருதிகளை அன்னம்மய்யா என்ற தலைப்புடன் நாட்டிய நாடகமாக திரு.எல். வைத்தியநாதனும் திரு பசுபதியும் இசையமைக்க அளித்துள்ளார்.

பல சிறந்த நாட்டிய நாடகங்களை, நாட்டிய உலகுக்கு அளிக்க வேண்டும் என்ற கருத்தினை, ஊக்குவித்தவர் நீதியரசர் திரு கே. பக்தவத்சலமும் அவரது துணைவியார் திருமதி நிர்மலா பக்தவத்சலமும் ஆவார்கள். இந்த எண்ண வெளிப்பாட்டினை, செயல் வடிவில் நாட்டிய வடிவம் அமைத்தவர் எனது மதிப்புக்குரிய குரு கலைமாமணி கிருஷ்ணகுமாரி நரேந்திரன் அவர்கள்.

நாட்டிய உலகில் தனக்கென ஒரிடத்தை இருபது வருடங்களாக நிலைத்து நிற்க வைத்துக் கொண்டிருக்கும் பார்வதி, மறைந்த தெலுங்குத் திரைப்பட இசையமைப்பாளர் திரு வெங்கடேஸ்வர (கண்டசாலா) அவர்களின் மருமகள் ஆவார். தன்னுடைய இத்தனை வெற்றிக்கும் தனது கணவர் திரு ரவி அவர்களின் ஒத்துழைப்பும், மாமியார் திருமதி கண்டசாலா அவர்களின் ஊக்கமும் ஒத்துழைப்பும் என்றால் மிகையில்லை என்று கூறுகிறார்.

நட்டுவாங்கத்தில் தன் குருவுக்குத் துணையாக இருப்பதுடன் தன் குருவின் பாணியிலேயே தனது மாணவிகளைத் தயார் செய்ய வேண்டும் என்றும் கலை மீது கொண்ட தீராத ஆர்வத்தினாலும் நடனப் பள்ளி அமைத்து நாட்டியம் கற்பித்து வருகிறார் திருமதி பார்வதி ரவிகண்டசாலா.

தங்கம்

## ஹைக்கூ

தாமல் கண்ணன்

1. வைராக்யம் இட்டுச் செல்லும்
ஆன்மிகம் என்னும் அதிசய உலகுக்கு
பேரின்பம் ஒருவழிப் பாதை

2. அதிகமானால் அமுதமும் நஞ்சு
முளையிலேயே கிள்ளப் பாருங்கள்
அல்லவெனின் இதய சோகம் பொல்லாதது

3. வாழ்க்கையை இயக்கும்
சக்கரம் மண்ணிலும் விண்ணிலும் கூட
காதல் மட்டுமே தான்.

4. சொல்லற்க பயனில்லாச் சொல்லை
சிதறிய வார்த்தைகளை அள்ள முடியாது
முத்துகள் அழகானவை.



## ஜோதிர் கணபதி ஆலயம் குடமுழுக்கு விழா

'உஜாலா' – இந்தப் பெயர் பாரதநாடு முழுவதும் பிரபலமான பெயர். குறிப்பாக தமிழ் நாட்டில் – வெள்ளை நிறத்தை மிக விரும்புபவர், அனைவரும் உஜாலாவை நாள்தோறும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

உஜாலா தயாரிக்கும் ஜோதி லாபரட்டரீஸ் தொழிற்சாலை புதுச்சேரி தேத்தம் பாக்கம் கிராமத்தில் சிறப்பாக இயங்கிவருகிறது. கிராமச் சுற்றுப்புற மக்களுக்குப் பெரும் வேலை வாய்ப்புத் தரும். அந்தத் தொழிற்சாலை வளாகத்தில் புதிய விநாயகர் ஆலயம் கட்டப்பட்டது. ஜோதிர் கணபதி என்று பெயரிடப்பட்ட அந்தக் கோயிலில் விநாயகர் சிலை நிறுவி, குடமுழுக்கு விழா 7–7–97 அன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது.

ஆரவாரமில்லாமல் மிக அமைதியாக, காலைச் சூரியனின் பொற் கிரணங்கள் கும்பத்தைத் தழுவிய வேளையில் உலகத்தின் முதல் குருவான தத்தாத்ரேயரின் வழிபாடு ஸ்ரீதத்த மஹாபிரபுவின் அருளையும் ஆசியையும் வழங்கிய மஹாயோகி ககங்கிரி மஹராஜ் முன்னிலையில் குடமுழுக்கு அதிர்வேட்டுடன் நடைபெற்றது.

கேரளத்திலிருந்து புரோகிதர்கள் வந்திருந்தனர். கேரள மங்கல வாத்யங்கள் முழங்கியன. உஜாலாவிற்குப் பெருமை தேடித்தரும் அதன் நிர்வாக இயக்குநர் திரு.எம்.பி. ராமசந்திரன் அவர்களும் அவர் சகோதரர்கள் எம்.பி. திவாகரன், திரு எம்.பி. சித்தார்த் அவர்களும் மிக அடக்கமாக நிகழ்ச்சி முடியும்வரை



நின்றிருந்து, விழாவை வெற்றிகரமாக நடைபெறச் செய்தனர்.





ஸ்ரீ ராமர் பட்டாபிஷேகம்
தஞ்சைபாணி ஓவியம் - குமாரி கீதா



# பூனை

ஆர்வி

வழக்கம்போல அன்றும் லஞ்ச் இடைவேளையின்போது தியாகராஜன் வந்து நிற்பான் என்று எதிர்பார்த்தேன். அவனுடைய நீண்ட முகம் என் மனக்கண்ணில் தெரிந்தது. ஒரு தெற்றுப் பல்; சோகமும் இளக்காரமும் கலந்த பார்வை; ஏளனச் சிரிப்பு.

அவன் வரவில்லை. இனிமேல் என்னைத் தேடி வரவே மாட்டானோ?

அப்படி ஒன்றும் அவன் பெரிய ரோசக்காரன் இல்லை. ரோசமெல்லாம் வைத்துக் கொண்டால் அவனுக்குக் கட்டுப்படி ஆகாது. அவனுக்கு ரோசத்தை வரவழைக்க யாராயிருந்தாலும் ஒரு தனித்திறமை வேண்டும். எனக்கு அவ்வளவு திறமை போதாது. ஒப்புக்கொள்ள வேண்டியதுதான். எனக்கு மட்டும் என்ன? என் கல்லூரி வகுப்பு முழுவதற்குமே அந்தச் சாமர்த்தியம் இல்லை. அப்படி அவன் முகத்தில் ஓர் அலட்சியமான சிரிப்பு. அந்தச் சிரிப்பு அவனுக்குப் பிரம்மாஸ்திரம் மாதிரி. எதிர்ப்போ, இகழ்ச்சியோ எவ்வளவு வந்தாலும் ஒரே கட்டில் வீழ்த்திவிடும் வல்லமை கொண்டது.

இருந்தாலும் நான் நேற்று நடந்து கொண்ட விதத்தை எண்ணி என் மனசு உறுத்திக் கொண்டிருந்தது. அதற்குப் பிராயச்சித்தமாகக் கையிலே புத்தம் புதிய நோட்டு ஒன்றை வைத்துக் கொண்டு அவனுக்காகக் காத்திருந்தேன். இவ்வளவு நாளும் நான் பழகி வந்த முறையை நினைத்தாவது அவன் வருவான் என்று எதிர்பார்த்தேன்; வரவில்லை.

இன்னும் கால்மணி நேரத்துக்குள் அவன் வந்தால்தான் உண்டு. அதற்கு மேல் என்னால் காத்திருக்க முடியாது. டிபனை முடித்துக் கொண்டு வகுப்புக்குப் போக வேண்டுமே!

நான் கல்லூரி வகுப்பில் சேர்ந்த அதே சமயத்தில்தான் தியாகராஜனும் வந்து சேர்ந்தான். அதனால் எனக்கு அவன்தான் முதலில் பழக்கம். அவனுக்கும் அப்படித் தான். அப்போதெல்லாம் பாவம், படிப்பதற்கு ஒரு வசதியும் இல்லாமல் அவன் ஒவ்வொன்றுக்கும் ரொம்பக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தான். கஷ்டம் என்றால் அதை வர்ணித்துச் சொல்லவே முடியாது. கல்லூரி ஸ்காலர்ஷிப் கிடைக்க என்ன என்ன வித்தையெல்லாமோ செய்து பார்த்தான். கடைசி வரையில் எந்த வகையிலும் அவனுக்கு அது கிடைக்கவில்லை.

படிக்கப் புத்தகங்கள் இருக்காது. எழுதிக் கொள்ளக் காகிதமோ, பேனாவோ இருக்காது; சட்டை, பாண்ட் இரண்டும் கல்லூரியில் சேர வந்தபோது வாங்கியவைதாம். இருந்தாலும் அவனிடம் பஞ்சம் இல்லாமலிருந்தது ஒன்றே ஒன்றுதான். பிடிவாதமான மனோ தைரியம். சாப்பிடுவானோ மாட்டானோ சோர்வு என்பதே தெரியாது அவன் முகத்தில். எந்தச் சங்கடமான நிலையிலும் சிரித்த முகம் மாறாது.

அவனுடைய தந்தை இருந்த வரையில் கல்யாண வேலைகளுக்குப் போய் எப்படியோ அவனைப் படிக்க வைத்துவிட்டார். அவனோடு மொத்தம் ஆறு பேர் என்று அவன் ஒரு முறை சொல்லியிருந்தான். பையன் அவன் ஒருவன்தான். மற்ற ஐந்து பேரும் பெண்கள். ஒருத்திக்கோ, இரண்டு பேருக்கோ கல்யாணமாகி விட்டது என்று அவன் சொன்ன ஞாபகம். தந்தையின் மறைவிற்குப் பிறகு அவன் தாய்தான் மற்றப் பெண்களையெல்லாம் மானமாக வளர்க்க வேண்டியதாகிவிட்டது. தியாகு மாமா வீட்டுக்குப் புறப்பட்டு வந்துவிட்டான்.

மாமா நல்லவர்தான். மனைவிக்குப் பயந்தவர் என்று சொல்ல முடியாது; ஆனால் ரொம்பவும் கட்டுப்பட்டவர்.

"குடும்பம் பராரியா நிக்கறப்ப, கிடைச்சது போதும்னு எங்கேனா ஒரு வேலையைத் தேடிக்கிறப் படாதா? மூணு வருஷம் ஊரை விட்டு ஊரு வந்து, இன்னோர் இடத்துலே குந்திக்கிட்டுப் படிக்கிறதுன்னா முடியுமா? அதென்ன பிடிவாதம் ஒரு புள்ளைக்கு? அவங்க அப்பாரு எந்தக் காலேஜிலே சேர்ந்து படிச்சாரு?" என்று அப்போதே, அவனையும் வைத்துக் கொண்டே அவள், மாமாவிடம் முறையிட்டாளாம்!

மாமாவுக்கு மாமியின் பேச்சு நியாயம்தான் என்று படாமல் போகுமா?

இருந்தாலும் சகோதரி மகனாச்சே என்று பரிதாபம்.

"ஏண்டா தியாகு, ஏதானும் ஒரு வேலையிலே இருந்துகிட்டே ஈவினிங் காலேஜில படிக்கப்படாதோ?" என்று கேட்டார்.

"படிக்கலாம் மாமா. ஆனா வேலை எங்கே கிடைக்குது? கிடைச்சாலும் ஈவினிங் கிளாசுக்குப் போறாப்பலே இருக்கணுமே!"

"சரி, அதுவரையிலே போய்ச் சேர்ந்து படி. வசதியா ஒரு வேலை கிடைச்சா மாத்திக்கலாம்" என்று மாமா ஒப்புக் கொண்டார். அவரும் சுமாரான வருவாய் உள்ளவர்தான். கணவன், மனைவி, மூன்று குழந்தைகள். தியாகராஜன் ஆறாவது நபர். இந்த லட்சணத்தில் மாமிக்குக் கொஞ்சம் சினிமா சபலம் உண்டு. ஆனால் கண்ட படங்களுக்கெல்லாம் போக மாட்டாள். சபரிமலை ஐயப்பன், வேங்கடேச மகாத்மியம், திருவிளையாடல் என்று புராணப்படமாக வந்தால் போவாள். தனியாக ஒரு முறை, குழந்தைகளோடு ஒரு முறை, பக்கத்து வீட்டு அம்மாளுடன் சேர்ந்து ஒரு முறை. புராணப்படமே வராவிட்டால் 'தத்துப் பித்து' என்று இல்லாத குடும்பப் படமாகப் பார்த்துப் போவாளாம். போகாமல் என்னவோ இருக்கமாட்டாள். கேட்டால், "வீட்டில் டி.வி.யா இருக்குது? இருந்தா அங்கே ஏன் போகப் போறாங்க?" என்பாளாம். தியாகராஜன் சொல்லியிருக்கிறான்.

மூன்றாம் குரூப்பில் தியாகு என் ஒருவனிடம்தான் அதிகமாகப் பேசிப் பழகினான். என்னிடம் மட்டும்தான் வீட்டு நிலையைச் சிறிது கோடி காட்டுவான். பல நாள் காலையில் சாப்பிட்ட பழையதோடு வந்துவிடுவான். இடைவேளையில் வெறும் பச்சைத் தண்ணீரோடு சரி, பிறகு சாயங்காலம் போய்ச் சாப்பிடுவானோ, இரவில்தான் சாப்பிடுவானோ? தெரியாது. நானும் கேட்டதில்லை; அவனும் சொன்ன தில்லை.

இதற்காகவே நான் டிபன் கொண்டு வரும்பொழுது அவனுக்கும் காணும் படியாக எடுத்து வருவேன். அம்மா நாலு தோசைக்கு ஆறு தோசையாய் வைத்துக் கட்டிக் கொடுத்தால் நான் இன்னும் இரண்டு சேர்த்து வைக்கும்படி சொல்லுவேன்.

"உன்னாலே அவ்வளவு சாப்பிட முடியாது. எறிஞ்சுடுவே!"

"இல்லைம்மா, நம் வீட்டு டிபனுக்கு ஏக டிமாண்டு. பிச்சுக்க, பிடுங்கிக்கன்னு பிரெண்ட்ஸ் வந்துடுவாங்க".

அம்மாவுக்கு இது பெருமையாக இருக்கும். ஒருநாள் இட்லி, ஒரு நாள் பூரிக்கிழங்கு, பொங்கல், வடை, தோசை, கிச்சடி என்று விதம்விதமாகச் செய்து தருவாள். நாள் தவறாமல் தியாகு வந்துவிடுவான். முதலில் எல்லாம் நான்தான் அவனைக் கூப்பிட்டுப் பங்கு கொடுத்து வந்தேன். அவனுக்கும் சேர்த்து எடுத்து வருவது வழக்கமாகி விட்டதால் நாளடைவில் நான் வந்து பொட்டலத் தைப் பிரிக்கும் வரையில் அவன் காத்திருப்பதில்லை. அவனே வெகு சுவாதீனமாக எடுத்து வைத்துக் கொண்டு என் பங்கைத் தனியே வைத்துவிடுவான். என் பங்கு என்றால் என்ன, அவன் ஒதுக்கி வைப்பதுதான் என் பங்கு. பார்க்கிறவர் களுக்கு நான் அவன் டிபனில் பங்குக்கு வந்திருப்பது போலத் தோன்றும். பிறருக்கு அப்படிப் படவேண்டும் என்று தியாகுவும் நினைத்திருக்கலாம். ஆனால் நான் ஒருநாளும் அதைப் பற்றித் துளியும் கவலைப்படவில்லை. ஒருவிதத்தில் எனக்குப் பெருமையாகக்கூட இருக்கும்.

இருந்தாலும் எனக்கு ஒரே ஒரு சின்னக் குறை.... வெளியில் சொன்னால் வெட்கக் கேடு. இவ்வளவு சொந்தமாக எடுத்துச் சாப்பிடுகிறானே, அதைப்பற்றி ஒரு நாளாவது ஒரு நல்ல வார்த்தை! அவன் வாயிலிருந்து வர வேண்டுமே! ஊகும்; அசந்து மறந்துகூட, டிபன் நன்றாய் இருந்தது என்று வாயைத் திறந்து சொல்லமாட்டான்.

அம்மா ஒரு நாளைப்போல் பாடுபட்டுக் கட்டிக்கொடுப்பதும், நான் பொதி போல் அதைச் சுமந்து வருவதும் என்ன தலையெழுத்து! வேறு எவனாக இருந்தாலும் ஒரு நாள் கூடவா பாராட்டாமல் போய்விடுவான்! தியாகராஜனிடம் அந்தப் பேச்சே கிடையாது. வாயைத் திறந்து பாராட்டிவிட்டால் குடியே முழுகிப் போய்விடும் என்று நினைப்பதுபோல் பேசாமல் இருந்து விடுவான். டிபன் கொண்டு வருவது என் கடமை; அதை எனக்கு முன்னால் தீர்த்துக் கட்டுவது தன் உரிமை என்பதுபோல அவன் நடந்து கொண்டது கொஞ்சம் உறுத்தலாக இருந்தது.

அவன் டிபனை அவசர அவசரமாகச் சாப்பிடுவதைப் பார்த்தால் அத்தனை அவசரமாக அதை மறக்க விரும்புவது போல இருக்கும்.

பூனை, வயிறு நிரம்பியதுமே வாயை நக்கிக் கொண்டு அந்த இடத்திலேயே நிற்காமல் போய்விடும். தியாகராஜனுக்கு அப்படி ஒரு சுபாவம். நான் சாப்பிட்டு முடிக்கிற வரையில் கூடக் காத்திருக்க மாட்டான். வெளியில் எங்கேயாவது போய் நிற்பான். அதாவது என்னோடு சேர்ந்து டிபனைப் பங்கிட்டுக் கொண்டது மாதிரி இருக்கக் கூடாதாம். அவன் என்ன நினைக்கிறான் என்பது அவன் பேச்சிலேயே விளங்கியது. யாராவது கேட்டால் சம்பந்தப்படாதது மாதிரி பதில் வரும்.

அப்படி இருந்தும் ஆறு மாதங் களுக்குள்ளேயே அவனைப் பற்றி எல்லா மாணவர்களுக்கும் தெரிந்து விட்டது. என்ன காரணத்தாலோ அவன் சக மாணவர்களுடைய அன்பையும், அனுதாபத்தையும் பெறத் தவறி விட்டான். அத்தனை பேரும் அவனைக் கண்டாலே கிண்டல் செய்தார்கள்.

எனக்கு மட்டும் என்னவோ பரிதாபமாகவே இருந்தது. அவனிடமிருந்த குறையைப் பெரிதாக நினைக்காமல் முடிந்த வரையில் அவன் வயிற்றுப் பிரச்னைக்கு உதவுவது என்று பிடிவாதமாக இருந்தேன். தியாகராஜன் ராஜா மாதிரிதான் வகுப்புக்குக் கையை வீசிக்கொண்டு வருவான். நானோ அவன் வைத்த வேலையாள் போல டிபன் சுமந்து வந்து கொண்டிருந்தேன்.

"ஏண்டா உனக்குத் தலையெழுத்து? நீயும் ஜாலியா கையை வீசிக்கிட்டு வருவியா.... அதை விட்டுட்டு....." என்று சில நண்பர்கள் என்னைக் கலைத்துவிடப் பார்த்தார்கள்.

ரமண் என்ற நண்பன் கடுமையாகவே என்னைக் கடிந்து கொண்டான்.

"என்னமோ போறாண்டா. அவனைப் பார்த்தா பரிதாபமா இருக்கு..." என்றேன் நான்.

சீறினான் அவன்: "அந்தப் பூனையைப் பார்த்தா பரிதாபப்படறே? அது வீட்டிலே இருக்கிற கிளியை விழுங்குறதுக்குப் பார்க்கிறதுடா!"

"யாரு, அவன் மாமா பெண்ணைச் சொல்றியா?"

"அதைத்தான் சொல்றேன். பார்த்தா கிளியாட்டமா இருக்கா. பதினைஞ்சு, பதினாறு வயசு இருக்குமோ என்னமோ தெரியலை. பிழியப் பிழிய அழுதிருப்பா போல இருக்கு. மூஞ்சியெல்லாம் கன்றிச் சிவந்து, என்னைக் கண்டதும் கதவுக்குப் பின்னாலே மறைஞ்சிண்டுட்டா. தலை கலைஞ்சு, தரையெல்லாம் பூ உதிர்ந்து கிடக்கு...."

"நீ எங்கே போனே அங்கே? அட்ரஸ் கொடுத்தானா?"

"நோட்ஸ் வாங்கிண்டு போனான். அதைத் திருப்பிக் கொடுக்கலை. அட்ரஸைக் கண்டு பிடிச்சுக் கேக்க வாம்னு போனேன். போனா இவன்தான் மெதுவா வந்து கதவைத் திறந்தான். அப்பத்தான் உள்ளே அந்தப் பெண்ணைப் பார்த்தேன். வீட்டிலே வேறே யாருமே இல்லை. மாமி சீனிவாஸ கல்யாணம் பார்க்கப் போயிட்டாளாம்".

"உம்ம்."

"உம் என்ன உம்! என்னைக் கண்டதும் நோட்ஸை எடுத்துக் கொடுத்துட்டு வாசலுக்கு வந்துட்டான். ஒரு தாங்க்ஸ் கூடச் சொல்லாமல் உள்ளே போயிட்டான்."

"அந்தப் பெண்ணை இவனுக்குத்தான் கட்டிக் கொடுக்கப் போறாங்களாம். அப்படி ஒரு பிளான் இருக்கு."

"இவனும் பண்ணிக்கிறாப்பலே ஆசையைக் காட்டி அங்கே காலத்தை ஓட்டிண்டு இருக்கான் போலிருக்கு! காரியம் ஆகணுமே. படிப்பு முடியற வரைக்கும் இருந்துட்டு, பேசாம போகமாட்டான்னு என்ன நிச்சயம்?"

தியாகராஜன் ஒரொரு சமயம் பேசுவதையும், நடந்து கொள்வதையும் பார்த்தால் எனக்கும் எரிச்சலாகத்தான் இருந்தது. இருந்தாலும் சாப்பாட்டு விஷயத்தில் தியாகராஜனைத் தட்டிக் கழிக்க என் மனம் இடம் கொடுக்கவில்லை.

'வாய் வாழ்த்தா விட்டாலும் வயிறு வாழ்த்தும்' என்று என் பாட்டி அடிக்கடி சொல்வாள். தியாகராஜனைப் பார்க்கும்போது அதை நினைத்துக் கொள்வேன். வாய் வார்த்தையைக் கொண்டே அவன் அத்தனை பேருடைய பிரியத்தையும் சம்பாதித்துக் கொண்டு விடலாம். ஆனால் அவன் தலைச்சுழி. அவன் வாயே அவனுக்குச் சத்துருவாக இருந்தது.

இரண்டாவது 'டெர்ம்' வந்தபோது நானே காண்டீனில் போய்ச் சாப்பிட வேண்டியதாகி விட்டது. அம்மாவினால் ஒரு வேலையும் செய்ய முடியவில்லை. அதனால் லஞ்சுக்குப் போகும்போது தியாகுவையும் அழைத்துப் போகலாம் என்று முடிவு செய்து கொண்டேன்.

"இதோ பார் தியாகு! இனிமே இந்த டெர்முக்குக் காண்டீன்தான். வீட்டிலிருந்து டிபன் கொண்டு வர வசதிப்படலை".

"ஏன்?"

"அம்மாவாலே சமையலும் பண்ணி, டிபனும் செய்து கொடுக்க முடியலை. அவளுக்கு உடம்பு சரியில்லை!"

"அப்ப கான்ட்டீனுக்குத்தான் போகப்போறியா?"

"ஏன், நீயும் வாயேன்".

கூடவே வந்தான். கடைசி வரையில் அம்மாவுக்கு என்ன உடம்பு, ஏது என்று ஒரு வார்த்தை! ஊஹும்.... இவ்வளவு நாள் செய்து கொடுத்தாளே. அதற்காகவாவது உபசாரமான ஒரு வார்த்தை! கிடையாது.

அவனுடைய கவலையெல்லாம் கான்ட்டீனுக்கு நான் அவனைக் கூப்பிடு கிறேனா இல்லையா என்பதில் தான் இருந்தது. கூப்பிட்டதும் வந்துவிட்டான். ரமண் சொன்னது போல எனக்குப் பூனையின் நினைவுதான் வந்தது.

பூனைக்கு, வளர்த்த மனிதர்களைப் பற்றி அக்கறையில்லை. பழகின வீடு அல்லது இடம்தான் முக்கியம். அதாவது நாய்க்கு நேர் எதிரிடை. தியாகராஜனுக்கு மனிதர்களைப் பற்றிக் கவலையில்லை; வழக்கமாகக் கிடைக்கிற டிபன்தான் முக்கியம். யார் செய்து கொடுத்தால் என்ன? யார் கொண்டு வந்தால் என்ன?

அந்த ஆத்திரத்தில் அடுத்த இரண்டு நாள்கள் நான் அவனோடு சேர்ந்து கான்ட்டீனுக்குப் போகவில்லை.

"இந்தா, நீ போய்ச் சாப்பிடு! நான் வரலை!" என்று கையில் துட்டைக் கொடுத்து அவனை அனுப்பினேன்.

அப்பொழுதும் அவன் என்னைப் பற்றிக் கவலையே படவில்லை. தன் வேலை ஆனால் சரி என்று துட்டை நீட்டியதுமே வாங்கிக் கொண்டு போனான். இது என்னைச் சிறிது இடித்துக் காட்டியது.

"அவனுக்கு 'நீ சாப்பிட்டியா இல்லையா' என்று ஒரு கவலையும் இல்லை. நீ மட்டும் அவனைப் பற்றி ஏன் கவலைப்படவேண்டும்?"

மூன்றாம் நாள் பையில் போதும் போதாமலும் இருந்த சில்லறையைக் கொடுத்தேன். வாங்கிக் கொண்டான்.

"தோசை மட்டும் வாங்கிக்கிறேன்."

"வேறே என்ன செய்யலாம்? கையிலே இருக்கிற சில்லறை அவ்வளவுதான்!"

ஆனால் அவன் அன்று தோசையோடு நிற்கவில்லை. வேறு யாரோ ஒருவன் மூலம் காபியும் கிடைத்திருக்கிறது. இவனாகத்தான் போய்க் கேட்டானோ, அவனாகவேதான் வாங்கிக் கொடுத்தானோ அது தெரியவில்லை. அவ்வளவு விளக்கமாகத் தியாகராஜன் சொல்லிவிடுவானா?

"சரி மாமா இருக்காரே உனக்கு. அவர் என்ன சொல்றார், உன் கல்யாண விஷயமாய்?" என்று கேட்டு வைத்தேன், ஒருநாள்.

"என்ன புதிசா சொல்லப் போறார்? அவரோட மூத்த பெண்ணைக் காசு, பணம், செலவு இல்லாமே என் தலையிலே கட்டிவிடலாம்னு இரண்டு பேரும் பார்க்கறாங்க. அதுக்கு இப்பப் புடிச்சு என்ன, படிப்பு முடியட்டும்னு நானும் தலையை ஆட்டிக்கிட்டு இருக்கேன்."

"அப்ப உனக்கு அதிலே சம்மதம் இல்லையா?"

"இப்பக் கொஞ்சங்கூட இல்லை. இப்பல்லாம் அதைக் கண்டாலே எனக்குப் பிடிக்கலை. அழுமூஞ்சி. அகம்பாவம் பிடிச்சது. அதைப் போய் மாமாகிட்டே இப்பச் சொல்ல முடியுமா?"

மறுநாள்.

அவன் முகத்தைக் கண்டதுமே எனக்குப் பொச பொசவென்று ஆத்திரமாக வந்தது. ஆனால் அதை அடக்கிக் கொண்டு, அன்றைக்கும் முதல் நாள் கொடுத்தது போலவே சில்லறையை எண்ணிக் கொடுத்தேன். அவன் அதை வாங்கிக் கொண்டு தயங்கியபடியே நின்றான்.

"என்ன?"

“நேத்து சான்ஸா காபி கிடைச்சுட்டுது. அதனாலே சமாளிச்சேன்...” என்று அவன் இழுத்தான்.

“இன்னிக்கும் சான்ஸா கிடைக்கும். சமாளிக்கலாம், போ!”

போய்விட்டான்.

அடுத்த நாள் எரிச்சல். சிறிது கூடவே கொடுத்தேன். சற்றும் தயங் காமல் வாங்கிக் கொண்டு போய்ச் சேர்ந்தான்.

மறுநாள் வந்தான்.

“பணமே இல்லை. வேறே எங்கேயாவது பார்த்துக் கொள்!”

நான் ஏதோ கிண்டல் செய்வதாக நினைத்துக் கொண்டு வெட்கம் கெட்ட சிரிப்புச் சிரித்தான்.

“என்ன சிரிக்கிறே? இதோ பார்த்துக்க என் பையை!” என்று சட்டைப் பையை இழுத்துக் கவிழ்த்துக் காட்டினேன்.

சில்லறை இல்லாமல் எங்கே போவது? நின்றான்.

“உனக்குத் தெரியுமா, இந்த அஞ்சு நாளா நான் கொண்டு வந்த சில்லறை யையெல்லாம் உன்னிடம் கொடுத்திட்டு, நான் சும்மா இருந்துட்டேன். உனக்குத் தெரியாது. அதைபபத்தி உனக்குக் கவலையும் இல்லை. ‘எல்லாச் சில்லறையையும் கொடுத்துட்டானே, அவன் சாப்பிட என்ன செய்வான்?’னு உனக்குத் தோணவும் இல்லை; கேக்கவும் இல்லை. இன்னிக்காவது இரண்டு பேரும் சேர்ந்தே பட்டினி கிடப்போம்!” என்று நானும் சிரித்தேன்.

நின்று கொண்டே இருந்தவன் யாரைப் பார்த்தானோ, என்னவோ. தெரியாது. “சரி, நீ இரு.... நான் போயிட்டு வரேன்!” என்று அவசரமாக நடந்து போனான்.

இன்று ஏழாம் நாள். அவன் வழக்கமாக வருகிற நேரம். ஆனால் அவன் வரவேயில்லை. இனி வரவே மாட்டானோ?

நாளைக்கு அந்தக் கிளிக்கும் இதே பாடம்தானோ?

⁂

ந.ரவிச்சந்திர பாரதி



# தீபாவளிக்கு முன்னிரவில் பாரதி பத்தினி செல்லம்மாளின் தவிப்பு

பட்டாடைக்குப் பஞ்சமில்லை
செட்டியாரின் அன்பளிப்பு!
பட்டாசு வகைகளெல்லாம்
சீடர்களின் பரிசளிப்பு!
தூங்காமல் இவ்விரவில்
கால்கடுக்க உலவுகிறார்
வேதனை என்ன இவர்க்கு?
செல்லம்மாள் பரிதவிப்பு!

ஆனால் பாரதிக்கு..
சிந்தையெல்லாம் அந்நாளில்
காணவரும் எளியோருக்கு
அள்ளித்தரக் காசுகள்
கைவசம் ஏதுமில்லை!
கடன்கொடுப்பார் யாருமில்லை!
இந்நிலையில் என் செய்வேன்? மாதா!
நீ யன்றி யார் துணை?
...என்ற மனவேதனை!

உத்திராவதி கனவிலே!...
தொண்டர் கனவில் தோன்றினார் சிவசக்தி!
வேண்டிய காசுகள் விடியு முன்னரே
பக்தன் காலடியில் பணச்சுருளாய் படைத்திடு
பணித்து மறைந்தாள் மாதா பராசக்தி!

உடன் எழுந்தான் தொண்டன்!
நண்பனைத் துணைக்கழைத்தான்
மடியில் முடிந்த பணத்தை
சில்லறையாய் மாற்றிக் கொண்டான்!
நடுநிசியில் பாரதியை
கதவைத்தட்டித் திறக்கச் செய்தான்!
கையில் கொணர்ந்த காசுகளை
காலடியில் பணிந்து வைத்தான்!

பாரதியின் வினா:
பணம் கேட்டு எவரிடமும்
இதுவரை நான் செல்லவில்லை!
எவ்வண்ணம் என் கருத்தை
நீர் உணர்ந்து இங்கு வந்தீர்?

நடந்த கதை..
கண்ட கனவினைத் தொண்டர் சொல்ல
பாரதி மனத்தில் உவகை பொங்கியது!
சக்தி தொழிலே அனைத்துமெனில்,
சார்ந்த நமக்குச் சஞ்சலமேன்?

என் தாயார் திருமதி சகுந்தலா பாரதி எழுதிய என் தந்தை நூலிலிருந்து தொகுப்பு.

# பெயர்த் தியாகிகள்

## பகவானந்த தாசன்

"பாட்டி! பதது ரூபா பணம் கேட்டாங்க பள்ளிக்கூடத்திலே." பள்ளி முடிந்து வந்ததும் ஞாபகமாகக் கேட்டான் சுபாஷ்.

பாட்டிக்கு அவன்தான் துணை. அவனுக்கும் பாட்டிதான் ஆதரவு. மூன்று வயதில் ஒரே நேரத்தில் தந்தையையும் தாயையும் இழந்தவன் அவன். "அரசாங்கப் பள்ளிக்கூடத்திலே பணமெல்லாம் கேக்கமாட்டாங்களே! உன் செலவுக்காகப் பள்ளிக்கூடத்து மேலே பழி போடுறியாடா போக்கிரி?" பேரனைச் செல்லம் கொஞ்ச அவள் 'போக்கிரி' என்ற சொல்லைத்தான் பயன்படுத்துவாள். 'என் ராசா, என் தங்கம், என் கண்ணு' என்றெல்லாம் இந்தப் 'போக்கிரி'க்குப் பொருள், அவள் மன அகராதியில். ஒரே மகன் விட்டுச் சென்ற ஒரே பேரன் ஆயிற்றே!

"பொய்யில்லை, பாட்டி! சுதந்தரப் பொன்விழாவுக்குத் தேசியக் கொடி கொடுக்கப் போறாங்க. ஒவ்வொரு வீட்டிலேயும் அன்னிக்குக் கொடி பறக்க விடணுமாம். கொடி வாங்கிட்டுவந்து ஒரு கம்பிலே கட்டி நம்ம வீட்டுக் கூரையிலே பறக்க விடணும். ஆகஸ்ட் பதினஞ்சாம் தேதி." சுபாஷ் ஆர்வத்தோடு கூறினான்.

பேரன் பொய் சொல்ல மாட்டான். மற்ற மாணவர்கள் கொடி வாங்கப் போகிறார்களோ இல்லையோ, அவன் கண்டிப்பாகக் கொடி வாங்கி வருவான். பணம் கொடுத்தால், அவன் தலைமுறை அப்படி. எனவே பணம் கொடுத்தாள் இடுப்பிலிருந்த சுருக்குப் பையை அவிழ்த்து.

புத்தகப் பையிலிருந்து 'காம்ப்பஸ்' பெட்டியை எடுத்து மூடி திறந்து அதில் பத்து ரூபாயைப் பத்திரப் படுத்தி வைத்து விட்டுக் கிரிக்கெட் விளையாட அவசரமாகக் கிளம்பினான்.

அந்தக் குக்கிராமத்தில் இரண்டே தெருக்கள். இரண்டு தெருச் சிறுவர்களுக்கிடையே 'மாட்ச்' நடைபெற இருக்கிறது மாலை. அவன் தெருவுக்கு அவன்தான் 'கேப்டன்'. அதோடு அவன் டீமில் சுபாஷ் ஒருவன் தான் 'ஆல்ரவுண்டர்.' 'சிக்ஸ்'ரும் அடிப்பான். அதிக 'விக்கெட்'களையும் வீழ்த்துவான்.

"நில்லுடா! பணம் வாங்கிட்டதும் எங்கே கிளம்பிட்டே?"

"கிரிக்கெட் விளையாட."

"அது என்ன ஆட்டமோ, இப்படிப் பைத்தியம் பிடிச்சு அலையறீங்களேடா? உன் பாட்டனும், அப்பனும் பாத்தது மில்லை, கேட்டதுமில்லை இந்த ஆட்டத்தை? நான் கேக்கறதுக்குப் பதில் சொல்லிட்டுப்போ!"

"என்ன பாட்டி கேக்கப்போறே?"

"சுதந்தரம்னா என்ன? பொன் விழான்னா என்ன?"

'ஒழுங்காப் படிக்கிறியா? பள்ளிக் கூடத்திலே பசங்ககிட்டே சண்டை போடாமே இருக்கிறியா? ருக்குமணி வீட்டிலே 'ராட்டி' பணம் ஏன் போய் இன்னும் வாங்கிட்டு வரலை?' இப்படி ஏதாவது ஒரு கேள்வியைத்தான் பாட்டியிடமிருந்து எதிர்பார்த்திருந்ததால், சுபாஷ் முதலில் திகைத்துவிட்டான்.

'சுதந்தரமென்றால் என்ன?'

'கிரிக்கெட் விளையாடச் சுதந்தரம் கொடுக்க மாட்டேன் என்கிறாள் பாட்டி. சாணி பொறுக்கி 'ராட்டி' தட்டிக் காய வைத்து விற்று ஓரளவு சேமித்து வைத்திருக்கிறாள் பாட்டி. சுதந்தரமாக அதை எடுத்து மற்ற பிள்ளைகள் போல் ஆசைப்பட்டதை வாங்கிச் சாப்பிட முடிகிறதா? சுதந்தரமாம் சுதந்தரம்! சிரித்துக் கொண்டான்.

விளையாடச் செல்லும் அவசரம் சுபாஷுக்கு.

"நம்ம நாடு வெள்ளைக்காரன் கிட்டே நீண்ட காலம் அடிமைப்பட்டிருந்தது. காந்தி, திலகர், நேரு, வ.உ.சி. போன்ற தியாகிகள் சேர்ந்து போராடி வெள்ளையனை வெளியேற்றினாங்க. 1947 ஆகஸ்ட் 15ஆம் தேதி இந்தியா சுதந்தரமடைந்தது. சுதந்தரமடைந்து 50 ஆண்டு ஆனதாலே பொன்விழா கொண்டாடுறாங்க." என்று சொல்லிவிட்டு, பாட்டி மறு கேள்வி கேட்பதற்கு முன் வெளியே ஓடியே போய்விட்டான்.

சுபாஷுக்கு வயது பதினைந்து.

* * *

சுப்புலெட்சுமிக்கு வயது பதினைந்து.

பத்து வயதில் திருமணமாகி, பன்னிரண்டு வயதில் பூப்படைந்து, பதிமூன்று வயதில் கர்ப்பம் தாங்கி, அப்போது அவள் கையில் ஒரு வயதில் ஆண்குழந்தை சத்தியமூர்த்தி பால் குடித்துக் கொண்டிருந்தான். பருவமடைவதற்கு முன்பே பெண்குழந்தைகளுக்குத் திருமணம் செய்து வைக்கும் கொடுமை நிறைந்த காலம் அது. அமரர் டாக்டர் முத்துலெட்சுமி ரெட்டி அம்மையார் போன்றவர்கள் இதை எதிர்த்துக் குரல் கொடுக்காமல் இருந்திருந்தால் 'பால்யவிவாகம்' என்னும் கொடுமை நீங்கியிருக்காது.

சுப்புலெட்சுமியின் கணவன் ரங்கமணி ஒருநாள் வீட்டை விட்டுப் புறப்பட்டான். உற்றார், பெற்றோர் எவர் சொல்லியும் கேட்கவில்லை. விவரம் புரியாமல் கண்ணீர் சிந்தியபடி கைக்குழந்தையுடன் நிற்கும் சுப்புலெட்சுமியின் முகம் கூட அவனைத் தடுத்து நிறுத்தமுடியவில்லை.

"நம்ம நாட்டுக்குச் சுதந்தரம் கிடைச்சால்தான் இந்த மண்ணை மிதிப்பேன். வந்தே மாதரம்!" என்றான்.

என்ன முயற்சி செய்து பார்த்தும்

சுப்புலெட்சுமிக்கு 'வந்தே மாதரம்' என்பதற்குப் பொருள் புரியவில்லை.

கடைசி முறையாகக் கணவனிடம் பழம்பாயில் படுத்திருக்கும் போது கேட்டாள். குழந்தை பெற்று விட்டாளே தவிர. இன்னும் அவளே குழந்தை தான். "சுதந்தரம். சுதந்தரம்னு சொல்றீங்களே. அப்படீன்னா என்னங்க?" கணவன் அவசரத்தில் இருந்தான்.

நேதாஜி சுபாஷ் சந்திர போஸ். இந்திய தேசிய இராணுவத்தில் சேர அழைத்திருந்த குரல் அவன் காதுகளில் எதிரொலித்துக் கொண்டிருந்தது எந்நேரமும். அதில் போய்ச் சேர வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தான். மனைவி சுகம். பெண் சுகம் என்பது அவனுக்கு அன்றோடு கடைசி.

"சுண்டைக்காய் இல்லைடீ சுதந்தரம்! அது ஒரு பெரிய போராட்டம். உனக்கு விளக்கிச் சொல்ல எனக்கு நேரமில்லை. பேசாமே படுடி!"

பேசாமல் படுத்தாள்.

அன்று போன ரங்கமணி பிறகு திரும்பி வரவேயில்லை. பெயரே மறைந்துவிட்டது. இருக்கிறானா? இறந்து விட்டானா? எங்கே இறந்தான்? எப்படி இறந்தான்? எதுவுமே இன்று வரை யாருக்கும் தெரியாது.

அது மட்டும் சோகமென்பதில்லை சுப்புலெட்சுமிக்கு கணவன் போய்ப் பத்தாவது மாதம் அவளுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது.

ஊரிலுள்ளவர்கள் அவள் கற்பைச் சந்தேகித்தனர். வீட்டிலுள்ள மற்ற பெரியவர்களும் சேர்ந்து அவளைத் திட்டினார்கள். 'வீட்டை விட்டுப் போ!' என்று துரத்தி அடித்தார்கள்.

இரண்டு சிசுக்களோடு இருவிழி களிலும் நீர் வழியப் பிறந்தவீட்டு வாசலில் போய் நின்று தஞ்சம் கேட்டாள்.

'பழி தாங்கி வந்த மகளைப் பாசத்தின் காரணமாகக் கூட ஏற்று அடைக்கலம் தர முன்வரவில்லை அவள் பெற்றோரும் உடன் பிறந்த ஆண்களும். "எங்காவது ஆற்றில் குளத்தில் விழுந்து பழியைப் போக்கிக் கொள்!" என்று 'வழி' காட்டினார்கள். அக்காலச் சமூகச் சூழ்நிலை அப்படி

ஆதரவற்றுத் தெருவில் அலைந்தாள்.

பழியோடு வந்த பெண்குழந்தை சீக்கிரமே விழிமூடிவிட்டது.

பல வீடுகளில் வேலை செய்து. ஒரு குடிசைகட்டிச் சத்தியமூர்த்தியை வளர்க்க அவள் பட்ட கஷ்டங்கள் கொஞ்சநஞ்சமில்லை.

சுப்புலெட்சுமி அநாதையானதி லிருந்தே பொட்டுவைத்துக் கொள்வதை யும் பூச்சூடிக் கொள்வதையும் விட்டுவிட்டுத் தன்னளவில் விதவையாக வாழத் தொடங்கினாள்.

தகப்பனைப் போலவே பிள்ளை சத்தியமூர்த்திக்கும் அரசியலில் தீவிர ஈடுபாடு. சத்தியமூர்த்திக்கு ஏழைப்பெண் ஒருத்தியைத் தேர்ந்தெடுத்து அருகில் உள்ள முருகன் கோயிலில் திருமணம் செய்து வைத்தாள்.

அவன் மனைவி சுபாஷைப் பெற்றெடுத்தாள்.

நூற்றுக்கும் குறைவான மக்களுள்ள அந்தக் குக்கிராமத்தில் ஒரு நாள் சத்தியமூர்த்தி உடலில் மண்ணெண்ணெய் ஊற்றித் தீக்குளித்து மாண்டான்.

தேர்தலுக்குச் சில நாள்களுக்கு முன் நடைபெற்ற ஒரு கொலையால். திடீரென. அவன் சார்ந்த கட்சி படுதோல்வி யடைந்ததால், மனமுடைந்து அந்தத் தீவிரத் தொண்டன் உயிர்நீத்தான். அவன் பெயர் வெளியுலகக் கவனத்துக்கே தெரியாமல் போயிற்று. 'வறுமை தற்கொலை' என்ற பெயர் பெ

அவன் தீக்குளித்து ஜோதியாய் எரிந்ததைக் கண்ணால் பார்த்தது திரும்பத் திரும்ப நினைவில் துரத்தியதால் பயந்து போய். அவன் மனைவி சில நாள்களிலேயே குளத்தில் விழுந்து இறந்து. அந்த வெப்பத்தைத் தணித்துக் கொண்டாள்.

மகனை ஒரு துர்ப்பாக்கிய சூழ்நிலையில் வளர்க்க நேர்ந்தது போலவே. பேரனையும் வளர்க்க வேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது சுப்புலட்சுமிப் பாட்டிக்கு.

* * *

பள்ளியில் நடைபெறும் சுதந்தரப் பொன்விழாவைக் காணப் பாட்டியையும் அழைத்துச் சென்றிருந்தான் சுபாஷ்.

விழாவில் கட்டுரைப் போட்டியில் அவன் முதல் பரிசு பெற்றான். கலை நிகழ்ச்சியில் இப்போது 'வந்தே மாதரம்' பாட்டுப்பாடி சுபாஷ் ஆடப்போகிறான் என்று அறிவித்ததைக் கேட்டு. பாட்டி ஆவலோடு பேரனைப் பார்த்துப் பெருமைப்படக் காத்திருந்தாள்.

பாட்டி மகிழ்ச்சியின் உச்சத்திற்குச் சென்று கொண்டிருந்தாள். கட்டுரைப் போட்டிக்காக அவன் பெயர் அழைக்கப்பட்ட போது பாட்டியிட கண்களில் ஆனந்தக் கண்ணீர்!

'வந்தே மாதரம்' பாடலுக்குச் சுபாஷ் மேடையில் ஆடினான்.

'இவ்வளவு திறமைசாலியா நம் பேரன்?'

'வந்தே மாதரம்' அவளது பதினைந்தாவது வயதில் அவள் காதில் விழுந்த சொற்கள். அதைச் சொல்லிவிட்டுத்தான் அவள் கணவன் இந்திய தேசிய இராணுவத்தில் சேரப்போனான். அவன் அந்தப்படையில் பணியாற்றியதற்கு அவளிடம் எந்த ஆதாரமும் இல்லாததால் வீரத் தியாகிகள் ஓய்வூதியம் பெறவும் வாய்ப்பில்லை.

பேரன் இப்போது 'வந்தே மாதரம்' பாடுகிறான்.

பாட்டிக்கு அர்த்தம் அன்றும் தெரியாது. இன்றும் தெரியவில்லை. அசோகச் சக்கரம் அதில் இருக்கும் என்று மகன் சொல்லியிருக்கிறான். பேரனும் சொல்லியிருக்கிறான். அன்று காலையில் வீட்டு வாசலில் அக்கொடியை உயர்த்திக் கட்டி வைத்திருக்கிறான் சுபாஷ்.

பொன் விழா ஆண்டுக்காகப் புதிதாக உருவாக்கிய கொடியைப் போகிற வழியில் பேரன் காட்டினான். இதுவும் அழகாகத்தானிருக்கிறது.

தர்மச் சக்கரம் கொடியிலிருந்து வெளியே வந்து மேலே இருக்கிறது.

நடுவில் 50.

இருபக்கமிருந்தும் மேலிருந்து கீழாகச் சங்கிலி வளைவாய் மூவர்ணக் கொடியின் அலைகள்.

விழா இறுதியில் சிறப்புரையாற்றினார் சிறப்பு விருந்தினர்.

தேச விடுதலைக்காகப் பல்வேறு தியாகங்களைச் செய்த மகாத்மா காந்தி. கோகலே. திலகர். நேரு. பட்டேல்.




இராஜாஜி, வ.உ.சி. பாரதி, வாஞ்சிநாதன், காமராஜ், திருப்பூர்க் குமரன் என்று அவர் நினைவிலிருந்த தியாகிகளின் பெயர் சொல்லிப் புகழ் மாலை சூட்டினார்.

பாட்டி அப்பாவி!

பதினைந்து வயதில் மனைவி குழந்தைகளை விட்டுவிட்டு, 'சுதந்தரம் பெற்றால் தான் வருவேன். இது சத்தியம். 'வந்தே மாதரம்!' என்று சொல்லிவிட்டுப் போன கணவன் பெயர் தியாகிகளின் வரிசையில் அவர் வாயிலிருந்து வருமா என்று ஏங்கினாள் பெயர் தெரிந்தால் அவர் சொல்லியிருக்கமாட்டாரா?

சுதந்தரத்திற்காகப் பெயர் தெரிந்த தியாகிகள் பலர் பாடுபட்டிருக்கிறார்கள். அவர்கள் தங்கள் உடல், பொருள், ஆவி அனைத்தையும் இழந்து 'பெயர்' விளங்கி இன்றும் வரலாற்றில் வாழ்கிறார்கள்.

ரங்கமணி போன்ற பலர் உடல் பொருள் ஆவி ஆகியவற்றோடு தங்கள் 'பெயர்'களையும் தியாகம் செய்து தான் சுதந்தரத்தை ஈட்டினார்கள்.

தன் கணவன் பெயரோ, கட்சிக்காகத் தீக்குளித்த மகனின் பெயரோ ஒருவராலும் சொல்லப்படாததை நினைத்ததும் பாட்டிக்குத் துயரம் பொங்கியது. விழாவைப் பார்த்துக் கொண்டிருக்கும் அக்கம்பக்கத்தவர் கவனம் திரும்பும் அளவில் அவள் அழுதது வெளிப்பட்டது.

மேடையில் பேசியவருக்கும் அவள் அழுதது தெரிந்தது.

'சுதந்தரத்துக்காகத் தலைவர்கள் எத்தகைய தியாகங்களையெல்லாம் செய்திருக்கிறார்கள் என்பதை நான் விவரித்ததைக் கேட்டு ஒரு மூதாட்டியார் துக்கம் தாளாமல் அழுகிறார், பாருங்கள்!' என்றார்.

ஆனால் பாட்டி அழுதது, அவள் சொந்தக் கணவன், மகன் போன்ற பெயர்த்தியாகிகளை எண்ணியே என்பது அங்கு யாருக்கும் தெரியவில்லை.

எத்தனை பாட்டிகள் எங்கெங்கு இப்படி அழுது கொண்டிருக்கிறார்களோ?

இன்னும் பெயர் தெரியாத் தியாகி களுக்கு அஞ்சலி செலுத்துவோம்.

●●



# அமுதசுரபிக்கும் எனக்கும் இது பொன் தீபாவளி

## விக்கிரமன்

தீபாவளி என்றவுடன் பொதுவாக புதுத்துணிகள், புதிய தின்பண்டங்கள், பட்டாசுகள் – கடைசியாக எண்ணெய்க் குளியல் – இவற்றிற்கெல்லாம் காரணமாயிருக்கும், நரகாசுரன் – கிருஷ்ணபரமாத்மா நினைவுக்கு வருவார்கள்.

எனக்கு நினைவுக்கு வருவதெல்லாம் தீபாவளிமலர்தான். தீபாவளிக்குச் சில மாதங்கள் இருக்கும் போதே குழந்தைகள் பட்டாசை நினைத்துக் கனவு காண்பார்கள். புதுமணத் தம்பதியருக்குத் தலை தீபாவளியை அனுபவிக்கப் போகும் இனிய கனவுகள் – பாரம் சுமக்கும் குடும்பத் தலைவிகளுக்குக் குடும்பத்திலுள்ளவர்களுக்கு வாங்க வேண்டிய புத்தாடைகள் குறிப்பாகப் புடைவைகள் பற்றிய பொருளாதாரத் திட்டங்கள். எண்பதை நெருங்கும் வயதானவர்கள் – இன்னும் குடும்பத்தில் செல்வாக்குக் குறையாதவர்கள்-ஒவ்வொருவராக அழைத்து அந்த வருட தீபாவளித் திட்டங்கள் பற்றிய விசாரணைகளில் பொழுதைக் கழிப்பார்கள். பிறர் தயவுக்காகக் காத்திருப்பவர்கள் நிலை பரிதாபமே. கடந்து போன ஆண்டுகளைப் பற்றிய மலரும் நினைவுகளை – நல்ல நினைவோ, சோக நினைவோ – தங்களுக்குள்ளேயே திரைப்படம் போல நினைத்துப் பார்த்துப் பெருமூச்சு விடுவார்கள். தனக்கு வேண்டிய–தன் நிலையிலுள்ள நண்பர்கள் யாராவது அகப்பட்டால் 'அந்தக் காலத்திலே' என்று தொடங்கி நீட்டி முழக்கி மலரும் நினைவுகளைப்பகிர்ந்து கொள்வார்கள்.

என்னைப் பொறுத்தவரை, தீபாவளி மலர் நினைவு என்று சொன்னேனே – அதைப்பற்றிய பழைய சம்பவங்களை நினைத்தால் என் வாழ்க்கை வரலாற்றில் ஒரு பகுதியாகி விடும். அரை நூற்றாண்டு வரலாறு! வாழ்க்கை வரலாற்றில் வருபவர்கள் எழுத்தாளர்கள்; அறிஞர்கள்; இனிய வாசகர்கள். பிறகுதான் குடும்பம்.

1948இல் எனக்குத் திருமணம், மே மாதம். அக்டோபரில் தீபாவளி. 'ஆ! உனக்கு'தலைதீபாவளி'என்று நினைவு படுத்தினார்கள். அப்போது தமிழ்ப் பண்ணையில் பணியாற்றிக் கொண்டிருந்தேன். 'வெள்ளி மணி' வாரப் பதிப்பு அகால மரணமடைந்த அதிர்ச்சியிலிருந்து மீளாமல் நான் தவித்தபோது திரு. சின்ன அண்ணாமலை தன் அன்புக் கரம் நீட்டினார்.

'தமிழ்ப் பண்ணை' – "வெளியீடுகளில் சற்றுக் கவனம் செலுத்துவோம். மறுபதிப்பு வெளியிட வேண்டிய பல புத்தகங்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றாக அச்சிட்டு வெளியே கொண்டு வாருங்கள். எழுத்துலகச் சேவை என்பது, பத்திரிகையில் தொண்டாற்றுவது மட்டுமில்லை. நல்ல புத்தகங்களைப் பதிப்பிப்பதிலும் இருக்கிறது" என்றார். தமிழ்ப் பண்ணைப் புத்தகங்கள் அச்சிலும் அமைப்பிலும் மேலை நாட்டு வெளியீடுகளுக்கு நிகராக இருந்தன.

திரு. சின்ன அண்ணாமலையை மறக்கவே முடியாது. அவர் சிரித்தால் அழகாக இருக்கும். பேசினாலும் நம்மைக் குலுங்கக்குலுங்கச் சிரிக்க வைப்பார்.

நாமக்கல் கவிஞருக்குப் பொற்கிழி வழங்கிய கூட்டத்தின் முடிவில் அவரைச் சந்தித்தேன். அப்போதைய இலக்கியக் கூட்டங்களுக்கு, (இன்றைய இராஜேச்வரிமண்டபம்போல) சென்னை அரண்மனைக்காரன் வீதியிலுள்ள கோகலே மண்டபம் தான் கை கொடுத்துதவியது.

கூட்டத் தொடக்கத்தில் சின்ன அண்ணாமலை பாடினார். அவருக்கு முப்பது வயதிருக்கலாம். 1942 புரட்சியின் போது திருவாடானை–தேவகோட்டைக் கோர்ட் கட்டடம், ஸப்ஜெயிலுக்குத் தீ வைத்ததாகக் குற்றம் சாற்றப்படும் அளவுக்கு, அரசியலில் அதிதீவிரக் கொள்கை உடையவர். அவரும் திரு. எஸ்.ஏ. ரஹீமும் இரட்டையர். இருவரும் சேர்ந்து மாத இதழ் ஒன்றைக் கொண்டு வந்தார்கள். தியாகியோ–கதம்பமோ நினைவில்லை. அச்சு வசதியற்ற காலம். வண்ணப்படங்களோடு ஓர் இலக்கிய இதழ். அதில்தான் நான் 'என்று இன்பநாள்' கவிதையை எழுதினேன்.

நாமக்கல் கவிஞரின் பாராட்டுக் கூட்டத் தொடக்கத்தில் அவர் இரண்டு

பாடல்களைக் கம்பீரமாகப் பாடினார். அதில் ஒன்று:

*"கேட்குது!*

*சங்கநாதம் கேட்குது!'*

*சத்தியத்தின் சங்கநாதம் கேட்குது!"*

ஆகா: இன்றும் என் செவிகளில் அந்தப் பாடலின் கம்பீரம், அழுத்தம், கவிதையிலுள்ள வேகம் – உட்பொருள் ஆகியன நீங்காமல் ஒலித்துக் கொண்டிருக்கின்றன.

அது நாமக்கல் கவிஞரின் பாடல். நாமக்கல் கவிஞரின் 125 ஆவது பிறந்த நாள் 19.10.97. யார் நினைக்கிறார்கள், அந்தத் தேசியக் கவியை? தேசியவாதிகளே மறந்து விட்டபிறகு மக்களுக்கு நினைவூட்ட யார் இருக்கிறார்கள்?

சென்னை, சைதாப்பேட்டையி லிருந்து வரலாற்றுச் சிறப்பு மிக்க அந்தக் கூட்டத்தில் கலந்து கொள்ளச் சென்றோம். (கலந்து கொள்ள என்றால் பார்த்துக் கேட்டு ரசிக்க) நான்கைந்து நண்பர்கள் என்னுடன் வந்திருந்தார்கள். அந்த நண்பர்கள் கூட்டத்துக்குத் தலைவன் நான். கூட்டம் முடிய மணி ஒன்பதாகி விட்டது. 'வீட்டிற்குப் போகலாம்' என்று அவர்கள் வற்புறுத்தினார்கள்.

"சிறிது இருங்கள். கடைசி மின்வண்டி 11.30–க்குத்தான். சின்ன அண்ணாமலையைப் பார்த்துப் பாராட்டிவிட்டு வருவோம்" என்றேன்.

நாமக்கல் கவிருக்குப் பொற்கிழி அளிப்பதில் முனைந்துநின்றவர் சின்ன அண்ணாமலை. கூட்டத்தையும் சிறப்பாக ஏற்பாடு செய்திருந்தார். (அந்தக் கூட்டத்தில்தான் அவருக்குச் சின்ன அண்ணாமலை என்று நாமகரணம் செய்தார் இராஜாஜி. அதைப்பற்றி விவரிக்க இப்போது இடமில்லை)

கூட்டச் சிறப்பையும், அவர் பாடிய நாமக்கல் கவிஞரின் பாடலின் கம்பீரத்தையும் நான் வெகுவாகப் புகழ்ந்தேன். (இதயபூர்வமாக) பாராட்டுதலுக்கும், புகழுரைக்கும் மயங்காதவர் யார்?

"வேம்பு ஸார் சற்று ஓய்வாக வாங்களேன், பேசுவோம்" என்றார். நியாயம்தான். கூட்டம் முடிவடைந்த பிறகு, கூட்டத்தின் அமைப்பாளர் மண்டப மேடையை விட்டு இறங்கவே அரைமணி நேரமாகும். பிறகு கட்டணத் தொகைகள், மற்றவை யாவும் கொடுக்கப்பட வேண்டியவர்களுக்குக் கணக்கிட்டுக் கொடுத்து வெளியே வர மேலும் அரைமணி. (கூட்டம் முடிந்தவுடனேயே சொல்லிக் கொள்ளாமல் பறந்து விடுபவர்களும் இருக்கிறார்கள். மறைந்த திருக்குறள் முனிசாமி சொல்லுவார்: 'வெளியூரில் கூட்டங்களுக்குச் சென்றால் நான் கூட்டம் முடியுமுன்பு கூட்டத்திற்கு அழைத்தவரை அருகே அழைத்து அவர் கரத்தைப் பிடித்துக் கொள்வேன். அன்பினால் அன்று; அவரை விட்டுவிட்டால் அவ்வளவுதான். திரும்பிப் போக, சாப்பாடு செலவுகளுக்கு ஊரிலே கை ஏந்த வேண்டியதுதான். யாருமிருக்கமாட்டார்கள் எல்லாம் 'பறந்து' விடுவார்கள். அதற்காகத்தான் கையைக் கெட்டியாக விடாமல் பிடித்துக் கொண்டு அன்பைக் காட்டுவேன்.")

சின்ன அண்ணாமலையுடன் அப்போது ஏற்பட்ட தொடர்புதான் நான் பத்திரிகை உலகில் காலூன்ற வழிவகுத்தது.

அவரைச் சந்தித்தது, அவரைப் பல இலக்கியக் கூட்டங்களுக்கு அழைத்தது, சைதாப் பேட்டையில் பாரதி ராட்டைக் கழகம் தொடங்கியது; அவருடைய பேச்சால் ஏற்பட்ட ரகளையைச் சமாளித்தது, (ரகளை செய்தவர்கள் எதிரிக்கட்சிக்காரர்களல்லர்; ஒரே கட்சிக்காரர்கள்தாம்!) எல்லாமே சுவையான வெவ்வேறு அத்தியாயங்கள்!

தமிழ்ப் பண்ணையில் தொடர்ந்து பணியாற்றத் தொடங்கியதால், மீண்டும் அழகிய தமிழ்ப் பண்ணை நூல்கள் வெளிவர உற்சாகமாக உழைத்தேன்... பல பிரபலஸ்தர்களின் தொடர்பும் அப்போதுதான் ஏற்பட்டது. நாமக்கல் கவிஞர் தொடர்பு அப்போதுதான் ஏற்பட்டது. நானா ராவ் தெரு என்று இப்போது அழைக்கப்படும் இராம கிருஷ்ணா உயர்நிலைப் பள்ளி அருகே உள்ள தெருவில் அவர் வந்து தங்குவார்.

'கப்பலோட்டிய தமிழன்' – என்ற நூலை முதலில் அச்சிடத் தொடங்கினோம். சிலம்புச் செல்வர் ம.பொ.சி. எழுதிய 'கப்பலோட்டிய தமிழன்' நூலுக்கு நாமக்கல் கவிஞர் அளித்திருந்த முன்னுரையே ஒரு தனிப் புத்தகம் அளவிற்கு இருந்தது. கப்பலோட்டிய தமிழன் என்ற பெயரிலேயே வெளியிட்டோம். 'மலைக் கள்ளன்', 'என் கதை', 'அவனும் அவளும்', 'இதய ஒலி', 'முத்தொள்ளாயிரம்' போன்ற நூல்களின் மறுபதிப்பு மிக வேகமாக அச்சாயின. அப்போது சிறுவர்களுக்குச் சிறிய சிறிய வெளியீடுகள் தயாரித்து வெளியிடும் காலம். நாமக்கல் கவிஞரின் 'ஆடு சிரித்தது' என்ற சிறிய – கையடக்க – நூல் ஒன்றை அச்சுக்குக் கொடுத்து, புரூப் பார்த்து, ஓவியர் ரெஸாக்கிடம் மேலட்டைப் படம் வாங்கி – எட்டணா விலையில் ஒரு புத்தகம் உருவாகி வெளிவந்த போது முதல் பிரதியைப் பார்த்து நாமக்கல் கவிஞர் மகிழ்ந்து, என்னை ஒருமுறை தலைமுதல் கால்வரையில் பார்த்து, கதராடையே அணிந்து நின்றிருந்த என்னைக் காட்டி "இந்த இளைஞன் யார்?" என்று கேட்டு வாழ்த்தியதை என்னால் மறக்க முடியவில்லை.

தீபாவளியைப் பற்றியல்லவா எழுதத் தொடங்கினேன்? தலை தீபாவளி அவ்வளவு உற்சாகமில்லை. அதற்கு முன் வருடம் 1947 தீபாவளி மலர் தயாரிக்கும் பணியில் தீபாவளி நாள் காலையை அச்சகத்தில் கழித்தேன். எனக்காக இரவு முழுவதும் காத்திருந்த என் அம்மா, என்னைக் காணாமல் துடிதுடித்துப் போனார். தீபாவளியன்று பகல் வீட்டை அடைந்த என்னைப் பார்த்துக் கலங்கினார். "என்னடா இது பத்திரிகை ஆபிஸ் வேலை விட்டொழியடா" என்றார். அம்மா சொன்னதை நான் அப்போதே கேட்டிருக்கலாம்! அன்றிலிருந்து முடிவு:

'தீபாவளிக்கு எண்ணெய்க் குளியல் இல்லை.' 1948 தலைதீபாவளி திருமணமாகி நான்கைந்து மாதங்களிலேயே வந்துவிட்டது. தீபாவளி நாளன்று என் மனைவி டாடா நகரிலிருந்தாள். ஒரே ஒரு ரயில் – கல்கத்தா மெயில். இரண்டு நாள்கள் பயணம்!

'ஒரு புடைவை வாங்க வேண்டாமா? என் தாயாருக்கு ஏதாவது செலவுக்குத் தரவேண்டாமா? 'தமிழ்ப்பண்ணை' நிலை அவ்வளவு 'உற்சாகமாக' இல்லை. பத்து இருபது கிடைப்பது கூட பிரம்மப் பிரயத்தனம். ஸ்பென்சர் கம்பெனியில் மாதம் இருபத்தைந்து ரூபாய் சம்பளம் வாங்கி, போதாதற்கு மாணவர்களுக்கு 'ட்யூஷன்' சொல்லிக் கொடுத்து, கதை எழுதி வருமானத்தைத் தேடிய 1945–1946 ஆண்டுகளே நல்ல நாள்கள் எனத் தோன்றியது. தாமதமான முடிவு!

என் மாமியை மறக்க முடியாது. உதவினார். தன் கை வளையலைக் கழற்றித் தந்து அடைமானம் வைக்கச் சொல்லிப் பணம் பெற்றுக் கொள்ளச் சொன்னார். திருவல்லிக்கேணி புடைவைக் கடையில் கடனுக்குப் பட்டுப் புடைவை ஒன்று வாங்கித் தந்தார். சுமார் ரகம்தான். கதர் வேட்டி, சொக்காய் வாங்கிக் கொண்டேன். மேலே துண்டு போடுவேன். சின்ன அண்ணாமலை யிடமிருந்து கற்றுக் கொண்ட நல்ல செயல்களுள் அதுவும் ஒன்று!

தலைதீபாவளியைக் கொண்டாடியது வேறு கதை. இரண்டு இரவு, ஒரு பகல் பயணம். உட்கார மட்டுமே பதிவு. பயணிகள் அவரவர்கள் சாமர்த்தியப்படி இடம் பிடித்துக் கொண்டு தூங்கலாம்!

மகாகவி பாரதியின் பாடல்கள் முழுமையும் ரசித்துப் படித்தேன். பாரதி பாடல்கள் நூலை நாலணா, எட்டணா என்று பாரதி பிரசுராலயத்திலிருந்து வாங்கிச் சேர்த்து அதை 'பைண்ட்' செய்து ஒரே தொகுதியாக வைத்திருந்தேன். அந்தத் தொகுதிதான் இப்போதும் எனக்குக் 'கீதை' 'திவ்வியப் பிரபந்தம்', 'தேவாரம்' எல்லாமே!

1948 தீபாவளியை மறக்க முடியாது. ஒவ்வோராண்டுமே, தீபாவளி என்பது எனக்கு இலக்கியப் பாடத் தேர்வு நாள்தான்.

எவ்வளவு மேதைகளின் நூல்களைப் படிக்க வாய்ப்பு ஏற்படுகிறது! எத்தனை விதமான சிறப்புப்பகுதிகளைச் சிந்திக்க முடிகிறது. வண்ண ஓவியங்கள் வரைய, குறிப்புக் கொடுக்க பல இரவுகள் படிக்கும் வாய்ப்பு. கலைப்பயணம் சென்று கட்டுரை எழுதி வர வாய்ப்பு.



ஒவ்வோராண்டும் 'தீபாவளிமலர்' முழுமையாக உருவானவுடன், ஒருமுறை முதற்பக்கத்திலிருந்து கடைசி வரை புரட்டிப் பார்த்துவிட்டு ஒரு பிரதியை வெளியீட்டாளரிடம் கொடுத்த பிறகு அமைதியாக ஒவ்வொரு பக்கமாகப் பார்க்கும்போது பல்கலைக்கழகப் பட்டப்படிப்புச் சான்றிதழைப் பார்ப்பதுபோல் ஒரு பெருமிதம். உம்..... இப்படிச் சொல்லலாமா குழந்தை பிறந்தவுடன் அதன் முதற் குரல் கேட்டு திரும்பிப் பார்த்து மகிழும் தாயைப் போல். இல்லை – இல்லை; கையில் எடுத்து முத்தம் தரலாமா, வேண்டாமா என்று பூரிப்புடன் இருக்கும் தந்தையின் மகிழ்ச்சி மனநிலை –



இந்த ஆண்டும் தீபாவளி மலருக்கும் எவ்வளவோ திட்டங்கள். தலைக் காவிரி செல்ல வேண்டும், திருவனந்தபுரம் செல்ல வேண்டும், சீக்கியர்களின் பொற்கோயில் செல்ல வேண்டும், பொன் வேய்ந்த விமானங்களைப் படம் பிடித்து வெளியிட வேண்டும், கஜுரஹோ செல்லவேண்டும், தமிழ் இசையைப் பற்றிய ஒரு சிறப்புக் கட்டுரை எழுதி வெளியிட வேண்டும் என்ற குறிப்புகளைச் சென்ற ஆண்டிலிருந்தே சேகரித்தேன். எல்லாம் கனவாகவே திட்டமிட்ட அளவிலேயே நின்றுவிட்டன.

எனக்கு 1997 – தலை தீபாவளி கொண்டாடி 50 ஆண்டுகள் முடிந்த பொன்விழா! அமுதசுரபிக்கு 50 ஆண்டுகள். அமுதசுரபி தயாரித்தளிக்கும் 50 ஆவது மலர் இது. தொடக்க ஆண்டுகளில் தனியே தீபாவளி மலர் வெளியிடுவதில்லை. அக்டோபர் அல்லது நவம்பர் இதழ் கூடுதல் பக்கங்களோடு வெளிவரும். 1970ஆம் ஆண்டிலிருந்து பெரிய அளவில் தீபாவளிமலர் தயாரிக்கத் தொடங்கினோம்.

தீபாவளிப் பல்கலைக் கழகத்தில் நான் பயிற்சி ஏற்று மாணவனாகப் பயின்றுவரும் 48ஆவது தீபாவளி மலர். ஒவ்வோர் ஆண்டுத் தீபாவளி மலருக்கும் வாசகப் பெருமக்கள் 'மார்க்' போடுவார்கள். இந்த ஆண்டில் பாஸ்மார்க் தான். இல்லையா?

"காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு" என்பார்களே, அதைப் போல, பொன்விழாக் காணும் 'அமுதசுரபி' இதழின் இந்த மலரைக் காணும்போது, இதனைத் தயாரிக்க அடைந்த சிரமங்களெல்லாம் மறந்து போய் வாசகர்களின் மலர்ந்த முகங்களைக் காணும் நான் சொல்லிக் கொள்வதெல்லாம் அமுதசுரபிக்கும் எனக்கும் இது 'பொன் தீபாவளி' என்பது தான்!